வசீலி
சுகம்லீன்ஸ்கி



# இதயம் தருவோம் குழந்தைகளுக்கு

வசீலி
சுகம்லீன்ஸ்கி

# இதயம் தருவோம் குழந்தைகளுக்கு



முன்னேற்றப் பதிப்பகம், 1980
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை

# பொருளடக்கம்

## இளமைப் பருவம்

**பதிப்பகத்தார் குறிப்பு**

*"இதயம் தருவோம் குழந்தைகளுக்கு" எனும் இந்நூலின் ஆசிரியரான வசீலி அலெக்சாந்திரவிச் சுகம்லீன்ஸ்கி (1918—1970) தமது குறுகிய வாழ்வில் முப்பத்தைந்து ஆண்டுகளைக் குழந்தைகளுக்குப் போதிப்பதற்கும் அவர்களைப் பயிற்றுவிப்பதற்கும் அர்ப்பணித்தார். பெரிய நகரங்களிலிருந்து வெகு தொலைவிலுள்ள உக்ரேனியக் குடியரசின் பாவ்லிஷ் கிராமப் பள்ளிக் கூடத்தினது தலைவராக இறுதி இருபத்தொன்பது ஆண்டுகள் இருந்தார்.*

*பள்ளியில் ஆற்றிய பணிகளுக்காக அவருக்குக் கௌரவப் பட்டங்கள் கொடுக்கப்பட்டன: சோஷலிச உழைப்பு வீரர் விருது, உக்ரேனியக் குடியரசின் மதிப்புக்குகந்த ஆசிரியர் ஆகிய பட்டங்கள் வழங்கப் பட்டன. சோவியத் யூனியன் போதனை முறை விஞ்ஞான பேரவையின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.*

*வ. அ. சுகம்லீன்ஸ்கியினது போதனை முறைகளின் சாரம் எதில் அடங்கியுள்ளது?*

*குழந்தைகளுக்கு வழங்கும் போதனையும் பயிற்சியும் ஒரே நிகழ்ச்சிப்போக்கில் ஒன்று கலக்கும்படி செய்யும் வண்ணம் போதனை விஞ்ஞானத்தை அமைக்க வேண்டும் என்பதற்காக உலகத்தின் முற்போக்குப் போதகர்கள் பலர் வெகுகாலமாக முயன்று வந்தனர்.*

[illegible] முறையிலும் தத்துவத்திலும் இந்தக் கனவை நனவாக்கினார் வ. அ. சுகம்லீன்ஸ்கி. குழந்தைகளைத் திறமை வாய்ந்தவர்கள் திறமையற்றவர்கள் என்றெல்லாம் பிரிக்காமல் ஆரோக்கியமான எந்தவொரு குழந்தைக்கும் பொதுப் பள்ளிக்கூடத்திலேயே நவீன மத்தியதரக் கல்வி கொடுக்க முடியும் என்று அவர் காட்டினார். இதில் எத்தகைய புதிய கண்டுபிடிப்புக்களையும் அவர் செய்யவில்லை. அரசுப் பாடத்திட்டக் கோரிக்கைகளின்படி குழந்தையை அறிவை நோக்கி அழைத்துச் செல்வதற்கு வகை செய்யும் அந்தப் பகுத்தறிவு பூர்வமான அளவை அவர் கண்டுபிடித்தார். கற்றுக் கொள்வதற்கு விருப்பம், சுயபோதனைக்கும் சுய கல்விக்கும் குழந்தையின் முயற்சிகளை வளர்ப்பது ஆகியவையே சுகம்லீன்ஸ்கிக்குப் பிரதானமானவை.

ஆசிரியர்களுடனும் பெற்றோர்களுடனும் ஆலோசனை கலந்தபடி, கடந்த காலத்தின் மாபெரும் போதகர்களின் கண்ணோட்டங்களுடனும் மக்கள் ஞானத்துடனும் தம் சிந்தனைகளை ஒப்பிட்டுப் பார்த்தபடி தமது மாணவர்களை விடாமுயற்சியுடனும் அறிவுத் தாகத்துடனும் ஆராய்ந்தார் வ. அ. சுகம்லீன்ஸ்கி.

குழந்தைகட்குக் கற்றுத் தர வேண்டுமானால் அவர்களை நேசிக்க வேண்டும். அப்போதுதான் உழைப்பு தரும் மகிழ்ச்சி, நட்புணர்ச்சி, மனித நேயம் ஆகியவற்றைக் குழந்தைகளுக்கு ஆசிரியர் போதிக்க முடியும். ஆசிரியர் ஒவ்வொரு குழந்தையின் இதயத்துக்கும் வழி கண்டுபிடிக்க வேண்டும். அப்போதுதான் தமது குடும்பத்தை, பள்ளியை, உழைப்பை, அறிவை, தமது தாய் நாட்டை நேசிப்பதற்குக் குழந்தைகட்கு அவர் கற்றுத் தர முடியும். இந்த முறைதான்—குழந்தைகளின் இதயத்துக்கு வழி. வ. அ. சுகம்லீன்ஸ்கியின் போதனா நடவடிக்கைகள் அனைத்துக்கும் இதுவே அடிப்படை ஆயிற்று.

மனிதனுக்கு இயற்கை அளித்துள்ள சிறந்தவை அனைத்தையும் தமது மாணவர்களிடம் கண்டுபிடிப்பது, அவனது ஒழுக்கப் பண்புகளை உணர்வது, கம்யூனிஸ்டுக்

குறிக்கோள்களுக்கு விசுவாசமான, நேர்மையான மனிதனை வளர்ப்பது ஆகியவையே தமது பணியின் நோக்கம் என்று சோவியத் ஆசிரியர் கண்டார்.

அன்பு, உண்மை, உணர்ச்சிகளின், சிந்தனையின் கலாசாரம் ஆகியவற்றைப் போதிப்பதே வ. அ. சுகம்லீன்ஸ்கியின் போதனை விஞ்ஞானம். மனிதனையும் குடிமகனையும் உருவாக்குவதே இப்போதனை விஞ்ஞானம்.

வாழ்வின் இறுதி இருபது ஆண்டு காலம் தமது கவனிப்புகளையும் சிந்தனைகளையும் தொடர்ந்து குறிப்பெடுத்து வந்தார் வ. அ. சுகம்லீன்ஸ்கி. பலப்பல புத்தகங்களும் கட்டுரைகளும் தயாரிப்பதற்கு இவை வாய்ப்பு அளித்தன.இவற்றில் மிகவும் பிரபலமான புத்தகங்கள் பின்கண்டவை: ''இதயம் தருவோம் குழந்தைகளுக்கு'', ''குடிமகனின் பிறப்பு'', ''பாவ்லிஷ் மத்தியதரப் பள்ளி''. இந்த நூல்கள் எல்லாம் புகழ் வாய்ந்த போதகரின் வளம் நிறைந்த அனுபவத்தின் சேர்க்கையாகத் திகழ்கின்றன. வ. அ. சுகம்லீன்ஸ்கி தமது நூல்களை ''மக்காரென்கோவின் கைக்குழந்தை'' என்று அழைத்தார். சோவியத் போதகர் அந்தோன் செம்யோனவிச் மக்காரென்கோவின் (1888—1939) உயிர்ப்புள்ள போதனை அனுபவத்தை இவர் மிக உயர்வாக மதித்தார்.

அ. செ. மக்காரென்கோவின் போதனை முறைக்கு அடித்தளமாக விளங்கியது மனிதன் மீதுள்ள பிரம்மாண்டமான மதிப்பும் நம்பிக்கையுமே. ஏராளமான குழந்தைகள் பெற்றோர்களோ, குடும்பமோ, வீடோ இன்றி அவதிப்பட்ட சோவியத் நாட்டின் கஷ்டகாலமான இருபதாம் ஆண்டுகளில்,குழந்தைகளின் உழைப்புக் காலனிக்கு அவர் தலைமை தாங்கினார். தனிமையில் விடப்பட்ட சிறிய மனிதனின் குழந்தைத் துன்பத்தை அகற்ற வேண்டுமானால் கதகதப்பும் கவனிப்பும் அவனைச் சூழ்ந்திருக்க வேண்டும், அவனுக்கு புதிய குடும்பம் ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும். தோழர் அ. செ. மக்காரென்கோவின் குழு குழந்தைகளுக்கு இத்தகைய குடும்பமாக விளங்கியது. இக்குழந்தைகளுக்கு மறு

போதனை வழங்குவதற்கும், வேரூன்றி விட்ட கடந்த காலப் பழக்கங்களை அகற்றுவதற்கும் அ. செ. மக்காரென்கோவால் மிகச் சிறப்பாக வகுத்தளிக்கப்பட்ட போதனு முறைகள் அப்போது தேவையாக இருந்தன. வ. அ. சுகம்லீன்ஸ்கியின் வார்த்தைகளில் அ. செ. மக்காரென்கோவின் முறையில் பிரதானமானது என்னவென்ருல் ''குறையாது, தொடர்ந்து மனித நேயம் ஒலிப்பது'', ''சிறந்த மனித ஆவல்களின் கவர்ச்சிகரமான அழகு'' ஆகும்.

தத்துவத்திலும் நடைமுறையிலும் அ. செ. மக்காரென்கோ நிலைநாட்டிய—ஆசிரியர்கட்கும் குழந்தைகட்கும் இடையில் ஆன்மீகத் தொடர்பு, பரிவும் நம்பிக்கையும் ததும்பும் சூழ்நிலை ஆகியவை வ. அ. சுகம்லீன்ஸ்கி தலைமை தாங்கிய பாவ்லிஷ் பள்ளியிலும் அதே போன்ற நடைமுறை உண்மையாக ஆயிற்று. உலகைப் பார்க்கும் குடிமகன் பார்வையைப் போதிப்பதுடன் மனித அழகையும் அவனது தாய்நாட்டுச் சேவையையும் இரு போதகர்களும் கண்டிப்பாக இணைத்தனர். இளைஞர்களுக்கு வாழக் கற்றுத் தருவது என்பது நன்மையையும் தீமையையும் புரிந்து கொள்ளக் கற்றுத் தருவது மட்டுமல்ல, சமுதாயத் தீமையையும் அநியாயத்தையும் சற்றும் சகியாமல் இருக்கக் கற்றுத் தருவதே பிரதானமானது என்று அவர்கள் கருதினர்.

வ. அ. சுகம்லீன்ஸ்கியின் போதனு மரபுகளில் பின் கண்டவை கவனிக்கத் தக்கவை: தமது போதனைப் பணிகளில் அவர் அ. செ. மக்காரென்கோவின் கோட்பாட்டினுல் வழிநடத்தப் பட்டார். மற்ற வழிகளுடன் தொடர்பின்றிப் பயன்படுத்தப்படும் ஒவ்வொரு வழியும் நல்லதையோ கெட்டதையோ தர முடியும் என்பதே இதன் சாரம்; இசைவாக ஒழுங்கமைக்கப்பட்ட எல்லா வழிகளின் அமைப்பும் போதனையில் முக்கியமானது.

முதற்கண் அ. செ. மக்காரென்கோவின் பெயருடன் சம்பந்தப்பட்ட குழுப் போதனைத் தத்துவம் வ. அ. சுகம்லீன்ஸ்கியின் நடைமுறைப் பணியிலும் போதனு

நூல்களிலும் உறுதி செய்யப் படுகின்றது. குழுவிற்கு வெளியே குழந்தைகளுக்குக் கற்பிப்பதோ போதிப்பதோ நமது காலத்தில் இயலாது. ஏனென்றால், பரஸ்பரத் தொடர்பு தரும் மகிழ்ச்சியையும் தனது திறனை வெளியிடும் வாய்ப்பையும் இத்தகைய போதனையே குழந்தைக்கு வழங்கும்.

போதனு விஞ்ஞானத்தின் நவீன வளர்ச்சி, பள்ளிக் கல்வியைச் செம்மைப் படுத்தல் ஆகியவை, முற்போக்குப் போதகர்கள் அனைவரின் கண்டுபிடிப்புகளையும் சாதனைகளையும் அவர்களது படைப்பு மரபுகளையும் முடிந்த அளவுக்கு அதிகக் கவனத்துடன் அணுக வேண்டுமென்று கண்டிப்பாகக் கோருகின்றன. வ. அ. சுகம்லீன்ஸ்கி நிறைவேற்றிய பணிகளின் புகழ் வாய்ந்த பயன்கள் இதனை உறுதிப் படுத்துகின்றன: அவர் படைத்த அனைத்தும் தமது அடிப்படையில் ஒன்றே. உயர் ஒழுக்கம், குடிமைப் பண்பு ஆகிய தன்மைகள் கொண்டு வளரும் தலைமுறையினருக்குப் போதிக்க இது வகை செய்கின்றது.

* * *

வசீலி அலெக்சாந்திரவிச் சுகம்லீன்ஸ்கி சீக்கிரமே காலமாகி விட்டார். 52வது வயதில் அவர் அடைந்த மரணம் போரின் எதிரொலியே.

பாசிச ஜெர்மனிக்கும் சோவியத் யூனியனுக்கும் நடந்த மாபெரும் தேசபக்தப் போரின் (1941-1945) முதலாண்டுகளிலேயே, அப்போதுதான் பல்தாவா போதனைக் கல்லூரியை முடித்திருந்த ஆரம்ப வகுப்புகளின் ஆசிரியரான இருபத்து மூன்று வயதான சுகம்லீன்ஸ்கி போர்முனைக்குச் சென்றார். ஆக்கிரமிப்புக்கு உள்ளான பிரதேசத்தில் பாவ்லிஷ் பள்ளியில் அவரது மனைவி வேரா இருந்தார். கொரில்லா வீரர்களுக்கு அவர் உதவினார். எடுத்துக் கொண்ட பணியை நிறைவேற்றுகையில் அவரை கெஸ்டாபோக்காரர்கள் பிடித்துக் கொண்டனர். பாசிசச் சிறையில் அவருக்கு ஒரு மகன் பிறந்தான். கொரில்லாப் படைப் பிரிவின் தலைவர்களைக் காட்டிக்

கொடுக்குமாறு கோரி நீண்ட காலம் அவரைச் சித்திர வதை செய்தனர். அவர் மௌனம் சாதித்தார். தாயின் கண்களுக்கு முன்னுல் பிறந்து சில தினங்களே ஆன குழந்தையைக் கொன்ருர்கள். வேராவைத் தூக்கி லிட்டனர்... இந்த நேரத்தில், மாஸ்கோவிற்கு அருகில் ஆக்கிரமிப்பாளர்களுடன் சமரிட்டார் வ. அ. சுகம் லீன்ஸ்கி. கடுமையாகக் காயம் பட்டதால் சமரிட்ட அணிகளிலிருந்து அவர் விலக நேர்ந்தது. ஆனுல் அவரது நெஞ்சில் மரணம் விளைவிக்கும் தோட்டாத் துண்டுகள் என்றென்றைக்குமாகத் தங்கி விட்டன, இதயத்திலோ அழிந்து போன குடும்பத்தின் சொந்தத் துயரம் பதிந் தது.

ஜெர்மன் பாசிஸ்டுகள் முறியடிக்கப் பட்ட பின்பு, தமது வாழ்வின் கடைசி தினம் வரை—1970 செப்டம்பர் 2—வசீலி அலெக்சாந்திரவிச் சுகம்லீன்ஸ்கி குழந்தை களுக்காகவே வாழ்ந்தார்.

ஆண்டுகள் சென்றன. போர்க் காயங்களை ஆற்றி வந்தது நாடு. புதிய தலைமுறைகள் தோன்றின. வர லாற்றுப் பாடப் புத்தகங்களிலிருந்து போர் பற்றி இவர்கள் அறிந்தனர். இருபது வருடங்களாக, கடந்த போரின் புதிய சுவடுகள் எரிகிற நெஞ்சைக் கொண்ட மனிதர் தமக்குக் கற்றுத் தருகிருர், வயலுக்கும் காட் டிற்கும் கூட்டிச் செல்கிருர் என்று பாவ்லிஷ் பள்ளிக் குழந்தைகளுக்கு அன்று தெரியாது.

இந்தப் புகழ் வாய்ந்த மனிதருக்கு உதவி நல்க மருத்துவத்தால் முடியவில்லை. பள்ளியாண்டின் வெகு தொடக்கத்திலேயே குழந்தைகளின் புதிய தலை முறைக்கு தமது பள்ளியின் கதவுகளைக் கடைசியாகத் திறந்து விட்டபடி, பணியாற்றும் போது அவர் உயிர் துறந்தார்.

பாவ்லிஷ் மத்திய தரப் பள்ளியில் சுகம்லீன்ஸ்கியின் மரபுகள் அனைத்தும் அன்புடன் பாதுகாக்கப் படுகின் றன. புதிய பள்ளித் தலைவர்—நிக்கலாய் இவானவிச் கோடக் — வந்தார். இவர் வ. அ. சுகம்லீன்ஸ்கியின்

கண்ணோட்டங்களையும் கருத்துக்களையும் முழுமையாக ஏற்றுக் கொள்கிறவர்.

காலம் செல்கிறது. வ. அ. சுகம்லீன்ஸ்கியின் போதனை மரபுகள், அவரது போதனை அனுபவம் ஆகியவை சோவியத் யூனியனில் மட்டுமின்றி, உலகம் முழுவதிலும் உள்ள ஆசிரியர்களின், பெற்றோர்களின் கவனத்தை ஆண்டுதோறும் மேலும் மேலும் கவருகிறது.

## முன்னுரை

மதிப்பிற்குரிய வாசகர்களே, தோழர்களே — ஆசிரியர்களே, போதகர்களே, பள்ளித் தலைவர்களே!

பள்ளியில் ஆற்றிய பல்லாண்டுப் பணியின் விளைவாக — சிந்தனைகள், பொறுப்புகள், கவலைகள், அகக்கிளர்ச்சிகள் ஆகியவற்றின் விளைவாகத் தோன்றியுள்ளது இந்த நூல்.

ஒரு கிராமத்துப் பள்ளியில் இடம் மாறாமல் முப்பத்து மூன்று ஆண்டுகள் நான் ஆற்றிய பணி எனக்கு பெரிய, ஒப்பற்கரிய ஒரு இன்பமாய் இருந்தது. குழந்தைகளுக்காகவே என் வாழ்வை அர்ப்பணித்து விட்டேன். எனவே நீண்ட சிந்தனைகளுக்குப் பிறகு இந்த நூலை ''இதயம் தருவோம் குழந்தைகளுக்கு'' என்று அழைக்கிறேன். இதற்கு எனக்கு உரிமை உண்டு என்றெண்ணுகிறேன். இப்போது பள்ளியில் போதகர்களுக்கு, பணியாற்றுவோருக்கு, எங்களுக்குப் பின்னால் பள்ளிக்கு வரவிரும்புவர்கட்கு, பத்தாண்டுகளுக்கு ஈடான எனது வாழ்வின் ஒரு பெரும் காலத்தைப் பற்றிச் சொல்ல வேண்டும் என்று ஆவல் மேலிடுகிறது. சிந்தனையற்றவன் என்று ஆசிரியர்களான நாங்கள் அடிக்கடி அழைக்கிற சிறு குழந்தை பள்ளிக்கு வந்து சேருகிற நாளிலிருந்து, நடுத்தரப் பள்ளிப் படிப்பு நிறைவுச் சான்றிதழை இளைஞனோ, இளம்

பெண்ணோ பள்ளித் தலைவரின் கைகளிலிருந்து பெறு கின்ற மகிழ்ச்சி நிமிடம் வரை அவர்கள் சுயேச்சை யாக உழைக்கிற வாழ்க்கையில் அடியெடுத்து வைப் பதற்குப் பழகிக் கொள்கிறார்கள். இந்தப் பத்தாண்டு காலம் ஒருவன் மனிதனாக உருமாறுகிற காலம். ஆசிரி யருக்கோ இந்தக் காலம் அவரது வாழ்வின் ஒரு பிரம் மாண்டமான பகுதி. எனது வாழ்வில் மிகவும் பிரதான மாக இருந்தது எது? **குழந்தைகள் மீது அன்பு** செலுத்து வதே என்று இதற்குப் பதிலளிக்கிறேன்.

மதிப்பிற்குரிய வாசகரே, எனது நூலில் ஏதாவது சில விஷயங்களை நீங்கள் ஒருவேளை ஒத்துக் கொள்ளா மலிருக்கலாம், இவற்றில் சில விசித்திரமானதாகவோ, ஆச்சரியப்படத் தக்கதாகவோ உங்களுக்குத் தோன்ற லாம். குழந்தைகளை, சிறுவர்களை, இளைஞர்கள், இளம் பெண்களைப் பயிற்றுவிப்பதில் எங்கெங்கும் பொருந்தக் கூடிய ஒரு புத்தகமாக இதனைப் பார்க்க வேண்டாம் என்று முதலிலேயே உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். போதனாமுறைச் சிறப்புச் சொல்லைப் பயன்படுத்துவது என்று சொன்னால் பள்ளிக்கு வெளியிலான வளர்ப்புப் பணிக்கு (அல்லது இந்தக் கருத்தின் குறுகிய பொருளில் —வளர்ப்புப் பணிக்கு) இந்நூல் அர்ப்பணிக்கப் படு கிறது. பாடத்தை, விஞ்ஞானங்களது அடித்தளங்களைப் பயில்கிற நிகழ்ச்சிப் போக்கின் போதனை செய்கிற விவரங்கள் அனைத்தையும் தருகின்ற குறிக்கோளை நான் முன்வைத்துக் கொள்ளவில்லை. மனித உறவுகளின் பாஷை யில் சொல்வதென்றால் போதகரின் இதயத்துக்காக இந்த நூல் அர்ப்பணிக்கப் படுகிறது. சுற்றியுள்ள எதார்த்தத்தை அறிந்து கொள்கிற உலகத்துக்குச் சிறு மனிதனை எங்ஙனம் கொண்டு செல்வது என்பதைப் பற்றியும் கற்பதற்குச் சிறுவனுக்கு எவ்வாறு உதவுவது என்பதைப்பற்றியும் மூளை உழைப்பை எவ்வாறு எளி தாக்குவது என்பதைப் பற்றியும் உயர் பண்புகள் பற்றிய உணர்வையும், அனுபவ உணர்ச்சிகளையும் அவனது மனத் தில் எப்படி உசுப்பி விடுவது, உறுதிப் படுத்துவது என்

பதைப் பற்றியும் மனிதப் பெருமையை எவ்வாறு வளர்ப்பது என்பதைப் பற்றியும் நல்ல மனிதனின் தொடக்கத்தில் இருக்க வேண்டிய நம்பிக்கையை, தாம் பிறந்த சோவியத் மண் மீது எல்லையற்ற காதலை அவனிடம் எந்த வகையில் வளர்ப்பது என்பதைப் பற்றியும் கூரிய அறிவையும் நுண்ணிய இதயத்தையும் மிகவுயர்ந்த கம்யூனிச லட்சியங்களின் முதல் வித்துக்களை குழந்தையிடம் எப்படித் தோற்றுவிப்பது என்பதைப்பற்றியும் சொல்ல விரும்பினேன் நான்.

இப்போது உங்கள் கையிலுள்ள புத்தகம் தொடக்க வகுப்புகளில் போதனைப் பணிக்காக அர்ப்பணிக்கப் படுகிறது. வேறு மாதிரிச் சொல்வதென்றால் குழந்தைப் பருவத்துக்கு இது அர்ப்பணிக்கப் படுகிறது. குழந்தைப் பருவம், குழந்தை உலகம் ஒரு விசேஷ உலகமாகும். நன்மை, தீமையைப் பற்றி, நேர்மை, நேர்மையின்மையைப் பற்றி, மனிதப் பெருமைகளைப் பற்றி தமக்கேயுரிய கருத்துக்களைக் கொண்டிருக்கிறார்கள் குழந்தைகள். அழகைப் பற்றிய அளவுகோல்கள் அவர்களிடம் தனியானவை. கால அளவும் அவர்களிடம் தனியாக இருக்கிறது. குழந்தைப் பருவத்தில், ஒரு நாள் ஒரு வருடமாகவும், ஒரு ஆண்டு ஒரு யுகமாகவும் தோன்றும். குழந்தைப் பருவம் எனும் கற்பனை மாளிகைக்கு வழி தெரிந்த நான், கண்டிப்பாக ஒரு வகையில் குழந்தையாகி விட வேண்டும் என்று எப்போதும் கருதி வந்திருக்கிறேன். அவ்வாறு நுழைந்து விட்டால் உங்களை அவர்களது கற்பனை உலகத்தின் கதவுகளுக்குள் தற்செயலாக நுழைந்து விட்டவர் என்றோ, இந்த உலகத்திற்குள்ளே என்ன நடக்கிறது என்பது பற்றிக் கவலைப் படாமல் இவ்வுலகத்தைக் காவல் காக்கிறவர் என்றோ கருத மாட்டார்கள்.

இப்புத்தகத்தின் உள்ளடக்கத்தைப் பற்றியும், நடத்தப்பட்டுள்ள சோதனையின் தன்மை பற்றியும் இன்னொரு விஷயத்தையும் சொல்லி விட வேண்டும். தொடக்கப் பள்ளி என்பது, முதன்மையாக ஒற்றை

ஆசிரியரின் படைப்புப் பணியாகும். எனவே, போதகர் களின் குழுவையோ, பெற்ருேர்களையோ காட்டாமல் அவர்களை உணர்வு பூர்வமாகத் தவிர்த்திருக்கிறேன். அனைத்தையுமே புத்தகத்துக்குள் அடக்குவது என்ருல் புத்தகம் மிகப் பெரிய அளவுக்கு வளர்ந்திருக்கும்.

குழந்தைப் பருவம் பற்றிய இந்தப் புத்தகத்தில், குழந்தைகள் எந்தக் குடும்பங்களிலிருந்து வந்தனரோ அந்தக் குடும்பங்களைப் பற்றியும், அந்தப் பெற்ருேர் களைப் பற்றியும் சொல்லாமல் இருக்க முடியாது. குடும்பச் சூழலின் முழுமையான, உண்மை விவரத்தை நான் எடுத்துக் கூருமலிருந்தால் போதனு முறையின் நோக்கமே புரியாமல் போயிருக்கும். ந. க. குருப்ஸ்கயா வும் அ. ஸெ. மக்காரென்கோவும் புகழ் பெற்ற மற்ற போதகர்களும் நம்பிய, போதனையின் வல்லமை மிக்க ஆற்றலில் நான் அழுத்தமாக நம்பிக்கை கொண்டிருக் கிறேன்.

## “மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடம்”

### பள்ளித் தலைவர்

போதனைப் பணியில் பத்து ஆண்டுகள் அனுபவம் பெற்ற பின் பாவ்லிஷ் என்ற ஊரில் நடுத்தரப் பள்ளியின் தலைவராக நான் நியமிக்கப் பட்டேன். நான் ஆற்றிய போதனைப் பணியின் முதல் பத்தாண்டுகளில் என்னிடம் தோன்றியிருந்த போதனுமுறைக் கருத்துக்கள் இங்கு முழுமை பெற்றன. உயிரோட்டமுள்ள படைப்புத் தொழிலில் எனது கருத்துக்கள் இங்கு செயல்படுவதை நான் காண விரும்பினேன்.

பள்ளி முழுவதற்குமுரிய சித்தாந்த அமைப்புப் பணிகளை, வேலையில் காட்டுகின்ற சொந்த உதாரணத்துடன் பொருத்தமாக இணைப்பதே பாடம் நடத்துகின்ற, கல்வி—போதனைப் பணியை நிர்வகிப்பது என்பதற்குப் பொருள் என்று, எந்த அளவுக்கு எனது கருத்துக்களை நடைமுறைப் படுத்த முயன்றேனே அந்த அளவுக்கு நான் தெளிவாக அறியலானேன். உயர்வான போதனு முறைக் கலாசாரத்திலும், குழந்தைகளுக்கு நேரடியான போதகர் என்ற முறையிலும் உதாரணமாகத் திகழ்கிறுர் ஆசிரியர் என்று கருதப்படுமேயானுல், போதகாசிரியர்களின் குழுவை ஒழுங்கமைக்கிறவர் என்ற வகையில் பள்ளித் தலைவரின் பாத்திரம் மிக மிக உயர்வடைகிறது.

போதனை—முதன்மையாக இது ஆசிரியருக்கும் குழந்தைக்கும்

இடையிலிருக்கிற இடையறாத ஆன்மீகத் தொடர்பே. மாபெரும் ருஷ்யப் போதகர் க. தி. உஷீன்ஸ்கி (1824-1870)[1] பள்ளித் தலைவரைத் தலைமைப் போதகர் என்று அழைத்தார். தலைமைப் போதகர் என்ற பணி எந்த நிலைமைகளில் நிறைவேற்றப் படுகிறது?

ஆசிரியர்களின் மூலமாக குழந்தைகளுக்குப் போதிப்பது, ஆசிரியர்களுக்கு ஆசிரியராக இருப்பது, போதனு விஞ்ஞானத்தையும் போதனுக் கலையையும் பயிற்றுவிப்பது ஆகியவை மிகவும் முக்கியமானவை. ஆனல், பள்ளி நிர்வாகம் என்ற பலப்பல அம்சங்கள் கொண்ட நிகழ்ச்சிப் போக்கின் ஓர் அம்சமே இது. எப்படிப் போதிப்பது என்று மட்டும் கற்றுக் கொடுத்தபடி, குழந்தைகளுடன் நேரடித் தொடர்பு கொள்ளாத தலைமைப் போதகர் போதகராய் இருப்பதுடன் நின்று விடுகிருர்.

பள்ளித் தலைவராக நான் பொறுப்பேற்றுக் கொண்ட முதல் வாரங்களிலேயே குழந்தைகளின் அக்கறைகளிலும் உற்சாகங்களிலும், ஆர்வங்களிலும் நானும் ஈடுபாடு கொள்ளவில்லையென்ருல் குழந்தையின் இதயத்துக்கு இட்டுச் செல்கிற வழி எனக்கு எப்போதும் அடைபட்டே இருக்கும் என்று உண்மைகள் உணர்த்தின. குழந்தைகளின் மீது நேரடியான, சகஜமான போதனுமுறைச் செல்வாக்குச் செலுத்தவில்லையென்ருல், பள்ளித் தலைவர் என்ற வகையில், போதகர்-ஆசிரியருக்கு இருக்க வேண்டிய மிக முக்கிய பண்பான, குழந்தைகளின் ஆன்மீக உலகை உணர்ந்து கொள்கிற திறனை இழந்து விடுவேன். வகுப்பாசிரியர்களின் மீது நான் பொருமைப் பட்டேன். அவர்கள் எப்போதும் குழந்தைகளுடன் ஒன்றியிருக்கிருர்கள். வகுப்பாசிரியர் குழந்தைகளுடன் திறந்த பேச்சு பேசுகிருர், அவர்களுடன் காட்டுக்குப் போகிருர். ஆற்றங் கரைக்குச் செல்கிருர், வயலில் வேலை செய்

[1] க. தி. உஷீன்ஸ்கியின் தேர்வு நூல்களை ஆங்கில மொழியில் ''முன்னேற்றப் பதிப்பகம்'' வெளியிடயிருக்கிறது.

கிருர். உல்லாசப் பிரயாணம் போய், அங்கு கஞ்சி காய்ச்சி, மீன் பிடித்து, வெட்டவெளியில் படுத்து, மின்னுகின்ற நட்சத்திரங்களைக் கூர்ந்து கவனிக்கிற நாட்களை ஆவலுடன் எதிர்ப்பார்க்கிருர்கள் குழந்தைகள். பள்ளித் தலைவரோ ஓரத்தில் நிற்கிருர். ஒழுங்குபடுத்துவது, ஆலோசனை வழங்குவது, குறைகளை எடுத்துக் காட்டி திருத்தி விடுவது, தேவையான வற்றுக்கு ஊக்கம் கொடுத்து விரும்பத் தகாதவற்றுக்குத் தடை விதிப்பது போன்ற வேலைகளை மட்டுமே மேற்கொள்ளுமாறு அவர் நிர்ப்பந்திக்கப் படுகிருர். இந்த வேலைகளைச் செய்யாமல் இருக்க முடியாது என்பது என்னவோ உண்மைதான். ஆயினும் எனது வேலையில் நான் அதிருப்தியை உணர்ந்தேன்.

போதனு வேலையில் தீவிரப் பங்கெடுத்துக் கொள்கிற பலப்பல பள்ளித் தலைவர்களை எனக்குத் தெரியும். இவர்கள் போதனு முறையில் மிகச் சிறந்த வல்லுனர்கள். இவர்கள் நடத்தும் பாடங்கள் ஆசிரியர்களுக்கு உதாரணமாய் விளங்குகின்றன. முன்னணி இளைஞர் அமைப்பு, கம்யூனிஸ்ட் இளைஞர் சங்கத்தின் அமைப்பு ஆகியவற்றின் வாழ்விலும் செயலிலும் தீவிரப் பங்கெடுத்துக் கொள்கிருர்கள் இவர்கள். உபாத்தியாயர், வகுப்பாசிரியர், பயனீர் முன்னணி இளைஞர்களது தலைவர் ஆகியோர் இவர்களிடம் நிறையக் கற்றுக் கொள்ளலாம். தொடக்க வகுப்பு மாணவர் குழு ஒன்றின் வாழ்க்கையில் நேரடியாகவும் மிக நீண்ட காலத்திற்கும் பள்ளித் தலைவர் பங்கெடுத்துக் கொள்ளுவதுதான் போதனைத் திறனில் உயர் மட்டத்தை எட்டுவதாகும் என்று எனக்குத் தோன்றியது. இந்தக் கருத்து இப்போது இன்னும் உறுதியடைந்திருக்கிறது. குழந்தைகள் நடுவே இருக்க வேண்டுமென்றும், அவர்களது மகிழ்ச்சிகளையும் வருத்தங்களையும் அனுபவிக்க வேண்டுமென்றும் ஓர் ஆசிரியருக்குப் படைப்புப் பணியில் மிகவுயர்ந்த ஆனந்தமாய் விளங்குகிற குழந்தையின் நெருக்கத்தை உணர வேண்டுமென்றும் நான் விரும்புகிறேன். குழந்தைகள்

குழு ஒன்றின் வாழ்க்கைக்குள் சேர்ந்து விடுவதற்கு அவ்வப்போது நான் முயன்றிருக்கிறேன். அதாவது, அவர்களுடன் சேர்ந்து கொண்டு வேலை செய்யப் போயிருக்கிறேன், அவர்களது சொந்தப் பிரதேசத்தைச் சுற்றி வந்திருக்கிறேன், உல்லாசப் பயணத்தில் உடன் சென்றிருக்கிறேன், முழுமையான போதனை என்ற ஒன்று எவை இல்லாமல் கற்பனை செய்தும் பார்க்க முடியாதோ அந்தத் திரும்பி வராத மகிழ்ச்சிகளைத் தோற்றுவிப்பதற்காக உதவியிருக்கிறேன்.

ஆயினும், நானும் சரி, குழந்தைகளும் சரி, இந்த உறவுகளில் ஒரு விதமான செயற்கைத்தனத்தைக் கண்டோம். போதனு நிலை என் அமைதியைக் கெடுத்து வந்தது. ஒரு சிறிது நேரமே அவர்களுடன் நான் இருப்பேன் என்பதைக் குழந்தைகள் மறந்து விடுவதில்லை. பொதுக் காரியத்தில் நீண்ட காலத்துக்குக் குழந்தையின் ஒரு நண்பனுக, தோழனுக, ஒத்த சிந்தனையாளனுக ஆசிரியரும் மாறுகிறபோதுதான் உண்மையான ஆன்மீக ஒற்றுமை தோன்றுகிறது. படைப்புப் பணியில் விளைகின்ற இன்பத்துக்காக மட்டுமின்றி, எனது தோழர்களுக்கு போதனைக் கலையையும், போதனு விஞ்ஞானத்தையும் கற்றுத் தருவதற்காகவும் இத்தகைய ஒற்றுமை எனக்கு அவசியம் என்று நான் உணர்ந்தேன். குழந்தைகளுடன் கொள்கிற உயிரோட்டமுள்ள, நேரடியான, அன்றாடத் தொடர்புதான் சிந்தனைகளின், போதனு முறைக் கண்டுபிடிப்புகளின், இன்பங்களின், சோகங்களின், ஏமாற்றங்களின் ஊற்றுக்கண்ணுகும். இவை இல்லாமல் நமது பணியில் படைப்புப் பண்பு நினைத்தும் பார்க்க முடியாத ஒன்றுகும். தலைமைப் போதகர் என்பவர் குழந்தைகளின் சிறு குழு ஒன்றிற்குப் போதகராயும், சிறுவர்களின் நண்பராயும் தோழராயும் விளங்க வேண்டும் என்ற முடிவுக்கு நான் வந்தேன். பாவ்லிஷ் பள்ளிக் கூடத்திற்குப் பணியாற்ற வருவதற்கு முன்பே நான் கொண்டிருந்த போதனு முறையின் திட நம்பிக்கைகளில் இந்தக் கருத்து ஏற்பட்டிருந்தது.

போதனைப் பணியின் முதல் ஆண்டுகளிலேயே, அறிவையும், திறமையையும் குழந்தைகள் பெறுகிற ஓர் இடம் மட்டுமல்ல உண்மையான பள்ளிக்கூடம் என்று எனக்குத் தெளிவாயிற்று. படிப்பு என்பது மிக முக்கிய மானதேயாயினும், இது ஒன்று மட்டுமே குழந்தை யின் ஆன்மீக வட்டாரத்துக்குள் அடங்கி விடுவதில்லை. கல்வி—போதனை நிகழ்ச்சிப் போக்கு என்று நாங்கள் வழக்கமாய் அழைப்பதை, எவ்வளவுக்கு எவ்வளவு கூர்ந்து நோக்கினேனே போதகரும் மாணவனும் பலப் பல அக்கறைகளாலும் ஈடுபாடுகளாலும் ஒன்றிணைக்கப் பட்டதாய் விளங்கும் பல்வேறு பகுதிகளைக் கொண்ட குழந்தைக் குழுவின் ஆன்மீக வாழ்வே உண்மையான பள்ளிக்கூடம் என்று அவ்வளவுக்கு அவ்வளவு, நான் திட உறுதி கொண்டேன். ஆசிரியருடைய மேசையின் ஒரு புறம் மாணவர்களும், மறு புறம் ஆசிரியருமாக, பாடத்தின் போது மட்டும் சிறுவர்களைச் சந்திக்கிற மனி தருக்குக் குழந்தை உள்ளம் தெரியாது. குழந்தையைத் தெரிந்து கொள்ளாதவர் ஆசிரியராக விளங்க முடியாது. இத்தகைய மனிதருக்குக் குழந்தைகளின் சிந்தனைகள், உணர்ச்சிகள், ஆர்வங்கள் ஆகியவை புரியாப் புதி ராகவே இருக்கும். தனது "எதிரியின்"—மாணவனின் மீது "தாக்குதல்" தொடுக்கையில் இடையே நிற்கும் கற்சுவராய் ஆசிரியரின் மேசை சிலசமயம் மாறிவிடும். இந்த மேசை முற்றுகையிடப்பட்ட கோட்டையாக, "எதிரி" கைப்பற்றும் நலிவடைந்த கோட்டையாக முன்னைவிட அடிக்கடி மாறிவிடும். கோட்டைக்குள்ளிருக் கும் "போர்த் தளபதியோ" கையும் காலும் கட்டப் பட்டவனைப் போல உணருவான்.

போதகரையும் மாணவர்களையும் எத்தகைய ஆன் மீக நூலிழையும் பிணைக்காததாலும், குழந்தையின் உள்ளம் எல்லாப் பொத்தான்களையும் மாட்டிய ஒரு சட்டையைப் போல விளங்குவதாலும், தனது பாடத்தை நன்கு தெரிந்திருக்கிற ஆசிரியர்களிடம் கூட போதனை ஒரு கடுமையான போராக மாறி விடுவதைக் காணுகை

யில் வேதனையாக இருக்கிறது. சில பள்ளிகளில் போதக ருக்கும் மாணவனுக்கும் இடையில் காணப் படுகிற அசிங்கமான, அனுமதிக்கத் தகாத உறவுகளுக்குப் பிர தான காரணம் பரஸ்பர நம்பிக்கையின்மையும் சந்தேக முமே ஆகும். அதாவது, சில சமயங்களில் குழந்தை யுள்ளத்தின் அந்தரங்க அசைவுகளை ஆசிரியர் உணருவ தில்லை, குழந்தைகளின் குதூகலத்தையும், வருத்தத்தை யும் அனுபவிப்பதில்லை, சிந்தனை பூர்வமாகக் குழந்தை யின் இடத்தில் தன்னை வைத்துப் பார்க்க முயல்வதில்லை.

போலந்துக்காரரான தலைசிறந்த போதகர் யானுஷ் கர்ச்சாக் (1878—1942), குழந்தையின் ஆன்மிக உலகத் துக்கு உயர்ந்து நிற்க வேண்டுமே தவிர தாழ்ந்து இறங்கக் கூடாது என்று தமது கடிதங்களில் ஒன்றில் நினைப் பூட்டுகிறார். இது ஒரு நுண்ணிய சிந்தனை, இதன் சாரத் திற்குள், போதகர்களாகிய நாம் ஆழ முழுக வேண்டும். ஆதர்சமாக குழந்தையை மிகவுயர்வாய் மதிக்காமல், அவனுக்கு அற்புதத் தன்மைகள் இருப்பதாகப் பேசா மல் அதே நேரத்தில், உலகத்தைக் குழந்தை புரிந்து கொள்வது, சுற்றியுள்ள எதார்த்தத்திற்கு உணர்ச்சி பூர்வமாகவும் ஒழுக்க பூர்வமாகவும் அவன் எதிர்வினை புரிவது ஆகியவை தமக்கே உரிய தெளிவும் நுண்மையும் நேரடித் தன்மையும் கொண்டு விளங்குகின்றன என் பதை உண்மையான போதகர் கணக்கில் எடுத்துக் கொள் ளாமல் இருக்க முடியாது. குழந்தையின் ஆன்மிக உலகத் துக்கு உயர்ந்து நிற்குமாறு யானுஷ் கர்ச்சாக் விடுத்த அழைப்பு, குழந்தையின் உலகை அறிவதை—அறிவாலும் இதயத்தாலும் அவன் உலகை அறிவதை மிக மிக நுண்மையாகப் புரிந்து கொள்ள வேண்டும், உணர்ந்து கொள்ள வேண்டும் என்றே கொள்ளத் தக்கதாகும்.

சில ஆன்மிகப் பண்புகள் இல்லாமல் ஒருவர் உண் மையான போதகராக விளங்க முடியாது என்று நான் திட உறுதி கொண்டிருக்கிறேன். இந்தப் பண்புகளில் முதன்மையானதாக குழந்தையின் ஆன்மிக உள்ளத்துக் குள் நுழைந்து பார்க்கின்ற திறமையைக் குறிப்பிட வேண்

டும். தானும் ஒரு குழந்தையாக இருந்திருக்கிறோம் என்பதை என்றைக்கும் மறவாத ஒருவரால்தான் உண்மையான ஆசிரியராகத் திகழ முடியும். முதன்மையாக அறிவு, படைப்பு, பரஸ்பர மனித உறவுகள் ஆகியவற்றைக் கொண்ட உலகத்துக்குள் அடியெடுத்து வைக்கிற ஓர் உயிருள்ள மனிதனே மாணவன் என்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள் என்பதுதான் பலப்பல ஆசிரியர்களின் துரதிருஷ்டமாகும். இவர்களை வரண்ட ரொட்டிகள் என்று குழந்தைகளும், சிறுவர்களும் அழைக்கிறார்கள்.

போதனையில் தன்னந் தனியான முறையில் மனிதன் மீது செயல்படுகிற பூர்த்தியற்ற பொருள்கள் இல்லை. மாணவர்கள் உலகை அறிகின்ற நிகழ்ச்சிப் போக்கில் மிகவும் ஒழுங்காய் அமைந்த வடிவம்தான் பாடம் ஆகும். குழந்தைகள் உலகை எப்படி அறிந்து கொள்கிறார்கள், எந்தவித கருத்துக்கள் அவர்களிடம் உருவாகின்றன என்பதைப் பொறுத்தே அவர்களது ஆன்மிக வாழ்வின் அமைப்பு முழுதும் பொறுத்திருக்கிறது. உலகை அறிவது என்பதோ வெறும் கல்வியறிவு பெறுவது மட்டும் அல்ல. குழந்தையின் ஆன்மிக உலகை மதிப்பெண்களால் மட்டுமே அளந்து, தமது பாடங்களைப் படிக்கிறார்களா இல்லையா என்பதைப் பொறுத்து எல்லா மாணவர்களையும் இரண்டு பிரிவினராகப் பிரித்து விடுகிறார்கள் அவர்கள் என்பதுதான் பலப்பல ஆசிரியர்களின் துரதிருஷ்டமாகும்.

பலதுறை ஆன்மிக வாழ்வை ஒருதலைப் பட்சமாக புரிந்து கொள்கிற ஆசிரியர் கவர்ச்சியற்ற சூழ்நிலையில் இருக்கிறார் என்றால், ஆசிரியர்களின் வேலையைக் கட்டுப்படுத்துவது, எதை அனுமதிக்கலாம் எதற்குத் தடை விதிக்கலாம் என்பது பற்றியெல்லாம் சமயத்திற்கேற்ற ''பொதுவான கட்டளைகளைப்'' பிறப்பிப்பதுமே தமது பணி என்று கருதுகிற பள்ளித் தலைவரைப் பற்றிச் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? இவரது போக்கு இதைவிட மேம்போக்கானதாகும். எனக்கு இப்படிப்

பட்ட ஆசிரியரின் பாத்திரம் சுமையாய் இருந்தது. நான் மாணவர்களிடம் போவது வழக்கம். அவர்கள் போதக ருடன் சேர்ந்து ஏதோ ஒன்றில் ஈடுபட்டிருப்பதைக் கண்டு வருந்தி இருக்கிறேன். நான் அவர்களை நோக்கிப் பேசும் போது அவர்கள் என்னைக் கவனிப்பதே இல்லை. குழந்தைகள் தமது போதகருடன் சேர்ந்து வளமான தொரு ஆன்மீக வாழ்வு நடத்துகிறார்கள். அவர்களிட மும் ரகசியங்கள் இருக்கின்றன. இம்மாதிரியான தலைவர் பள்ளிக்குத் தேவையா? இல்லை, தேவையில்லை. 1917ல் நடந்த மகத்தான அக்டோபர் சோஷலிஸ்டுப் புரட்சிக்கு முந்தைய ருஷ்யப் பள்ளிகளில் இருந்த, பாடத் திட்டத்தை போதகர் சரியாக சொல்லித் தருகிறாரா, தேவைக்கு மேலோ தவறாகவோ ஏதாவது சொல்லி விடுகிறாரா என்று ஆசிரியரைக் கண்காணிக்கிற ஒரு பரிசோதகராக, சிற்றதிகாரியாக, நிர்வாகியாக நடை முறையில் பள்ளித் தலைவர் இருந்த காலத்தில் பள்ளி களில் உருவான, தலைமையின் வடிவங்களும் முறைகளும் இன்று காலாவதியாகி விட்டன.

மிகவும் கடினமான போதனைப் பணியில், முற்போக் கான போதனைக் கருத்துக்களை உருவகப்படுத்துகிற சிறந்த அனுபவம் ஆசிரியர்களின் கண்களுக்கு முன் னால் உருவாகி, முதிர்ச்சியுற்று, உறுதியடைவதுதான் இன்றைய பள்ளித் தலைமையின் சாரமாகும். இந்த அனு பவத்தைப் படைப்பவர்தான், மற்ற ஆசிரியர்களுக்கு ஒரு மாதிரியாய்த் திகழ்கிற உழைப்பை நல்குகிறவர்தான் பள்ளித் தலைவராய் இருக்க வேண்டும். இத்தகைய பள்ளித் தலைவர் அதாவது, சிறந்த போதகர்—இல்லா மல் நமது காலத்துப் பள்ளிக்கூடத்தை நினைத்துப் பார்க்க முடியாது. போதனை என்பது முதற்கண் மனித நிர்வாகமே ஆகும். குழந்தையின் அறிவு—அவனது மன வளர்ச்சி, சிந்தனைத் திறமை, அக்கறைகள், ஈடுபாடு கள், ஆற்றல்கள், மனப் போக்குகள், இயற்கை விருப்பங் கள் ஆகியவற்றைப் பற்றிய அறிவு இல்லாமல் போதனை என்பது இல்லை. மருத்துவசாலையின் தலைமை மருத்து

வர் தமது நோயாளிகளின்றி எப்படி உண்மையான மருத்துவராக விளங்க முடியாதோ, அதே போல பள்ளித் தலைவரும் தமது மாணவர்களின்றி போதகர்களை வழிநடத்த முடியாது. தமது குழந்தை பள்ளிக்கு வந்த ஆரம்ப நாட்களிலிருந்து அவன் பள்ளிப் படிப்பு நிறைவுச் சான்றிதழ் பெறுகின்ற வரை பள்ளித் தலைவர் அவனுடனேயே ஒவ்வொரு படியாக ஏறி அவனது மனம், ஒழுக்கநெறி, அழகுணர்ச்சி, மன வெழுச்சி, உடல், ஆகியவை வளர்ச்சியுறுமாறு நேரடியாகப் பேணி, அவனுடன் ஆன்மீக விஷயங்களில் பொதுமை கண்டு, தனது ஆன்மீக செல்வங்களை அவனுக்கு பள்ளித் தலைவர் வழங்கி வர வேண்டும்.

பள்ளியில் மைய உருவாய் விளங்குபவர் யார்? போதனை நிகழ்ச்சிப் போக்கின் எந்தத் துறையில், மற்ற போதகர்கள் ஈடு கொடுக்க வேண்டிய அளவுக்கு பள்ளித் தலைவர் மாதிரியாகத் திகழ வேண்டும்? பள்ளியின் மைய உருவாய் ஆரம்ப நிலைக் குழந்தைக் குழுவின்— வகுப்புக் குழுவின் போதகரே ஆவார். அவர் படிப்ப வைகளுக்கு அறிவைத் தருகிற ஆசிரியர், குழந்தைகளின் நண்பர், பல அம்சங்கள் கொண்ட அவர்களின் ஆன்மீக வாழ்வை வழிநடத்துகிற தலைவர். போதனை என்ற கருத்தின் பரவலான அர்த்தத்தில் அழைக்கப் படுகிற ஒரு மலரின், இதழ்தான் கல்வி. மலருக்கு அழகு ஊட்டுகிற இதழ்களில் பிரதானமான இதழ் என்ற ஒன்று எப்படி இல்லையோ, அதே போல போதனையிலும் பிரதானமானது என்றோ இரண்டாம் பட்சமானது என்றோ எதுவும் இல்லை. பாடம், பாடத்திற்கு வெளியே குழந்தைகள் கலந்து கொள்கிற பல்வேறு அக்கறைகளில் வளர்ச்சி, குழந்தைகள் குழுவிலுள்ளோரிடையே பரஸ்பர உறவு ஆகிய அனைத்துமே போதனையில் பிரதானமாகும்.

ஆறு வருடங்கள் பள்ளித் தலைவராக நான் வேலை செய்த பின், வகுப்புக் குழுவின் போதகர் ஆனேன். பள்ளித் தலைவருக்கும் மாணவர்களுக்கும் இடையில் நேரடியாக ஆன்மீகத் தொடர்பு தோன்றுவதற்கு இது

ஒன்றே வழி அல்ல என்று சொல்லிவிட விரும்புகிறேன். ஆனால் திட்டவட்டமான சூழ்நிலைகளில் எனக்கு மிகச் சிறந்த வழியாக இது இருந்தது. குழந்தைக் குழுவிற்கு நேரடியாக போதகராய் இருந்து நான் ஆற்றிய பணியை இயற்கைச் சூழல்களில் நடக்கிற மிக நீண்ட ஒரு பரி சோதனையாக நான் கருதுகிறேன்.

பல வருட காலத்தில் என்ன நடந்தது, எப்படி நடந்தது என்பதைச் சொல்லத் தொடங்குவதற்கு முன், நடைமுறைப் பணியின் உள்ளடக்கத்தையும் குறிக்கோளை யும் கணிசமான அளவுக்கு நிர்ணயிக்கிற இன்னொரு முக்கியமான விஷயத்தின் தன்மையைப் பற்றிக் குறிப் பிட வேண்டும். ஒரு நபர் உருவாவதில் மிக முக்கியமான பங்கு வகிப்பது குழந்தைப் பருவமும் பள்ளிக்கு முந்திய, ஆரம்பப் பள்ளி ஆண்டுகளும் ஆகும். ஐந்து வயதிலிருந்து வாழ்க்கை முடிவு வரை ஒருவன், தனது பகுத்தறிவு, உணர்ச்சிகள், மனவுறுதி, சுபாவம் ஆகியவை உருவா வதற்கு சுற்றுச் சூழலிலிருந்து ஏற்றுக் கொள்கிற விஷயங் களை விட, பிறந்ததிலிருந்து ஐந்து வயதுக்குள் குழந்தை பன்மடங்கு அதிகமான விஷயங்களை ஏற்றுக் கொள் கிறது என்று மாபெரும் ருஷ்ய எழுத்தாளரும், போதகரு மான லேவ் தல்ஸ்தோய் (1828—1910) கூறுவது முற்றிலும் சரியே. ஐந்து வயதுக்குள் ஒருவன் எப்படி உருவாளுனோ அப்படித்தான் ஒரு மனிதன் இருப்பான் என்று கூறிய அ. மக்காரென்கோவும் இதே கருத்தைத் தான் மீண்டும் வெளியிட்டார்.

ஒழுக்க உணர்வில் சிறப்பு மிக்கவராய்த் திகழ்ந்த யானுஷ் கர்ச்சாக் ''நான் மீண்டும் சிறுவனாகும் போது'' என்னும் புத்தகத்தில், தடுக்க முடியாத ஒரு சக்தி (சூரியகாந்திச் செடியின் தலையைத் திருப்புகிற சூரிய சக்தி போல) சன்னல் வழியே வெளியே பார்க்குமாறு ஒரு மாணவனை நிர்பந்திக்கிற போது அவன் அறிகிற விஷயங்களை விட கரும்பலகையைப் பார்க்கும் போது அவன் அதிகம் அறிந்து கொள்கிறான் என்பது ஒருவருக் கும் தெரியாது என்று எழுதினார். அதிகம் பயனுள்ளதும்

அதி முக்கியமானதும் எது? கரும்பலகையில் அடைக்கப் பட்டிருக்கிற உலகமா அல்லது சன்னல் கண்ணுடிக்கு வெளியே மிதந்து செல்லும் உலகமா? மனித ஆன் மாவைப் பலவந்தப் படுத்தாதீர்கள். ஒவ்வொரு குழந்தை யும் பெறுகிற இயற்கையான வளர்ச்சியை, அவனது சிறப்பியல்புகளை, ஆர்வங்களை, தேவைகளைக் கூர்ந்து நோக்குங்கள்.

போலந்து மொழியில் எழுதப்பட்ட, சாம்பல் நிற அட்டை கொண்ட இந்தச் சிறு புத்தகத்தில் காணப்பட்ட இவ்வார்த்தைகள் ஆயுள் முழுதுக்கும் என் நினைவில் பதிந்து விட்டது. போர் முடிந்த சில நாட்களில் யானுஷ் கர்ச்சாக்கின் வீரச் செயலைக் கேள்விப்பட்ட நான் அவரது வார்த்தைகளை வாழ்க்கை முழுதுக்கும் ஓர் ஆணையாக ஏற்றுக் கொண்டேன். வார்ஸா நகரின் யூதர் பகுதியில் (ghetto) இருந்த அனாதை விடுதியில் ஆசிரியராகப் பணி யாற்றினார் யானுஷ் கர்ச்சாக். ஹிட்லர்வாதிகள் கதியற்ற குழந்தைகளை திரெப்லீன்கா நகரில் நெருப்பிலிட்டுப் பொசுக்க உத்தரவிட்டனர். குழந்தைகளை விட்டுவிட்டுத் தப்பித்துச் செல்லவோ அல்லது குழந்தைகளுடன் சேர்ந்து மடிந்து போகவோ ஏதாவது ஒன்றைத் தேர்ந் தெடுத்துக் கொள்ளுமாறு யானுஷ் கர்ச்சாக்குக்கு ஆலோ சனை கூறிய போது ஊசலாட்டமோ, சந்தேகமோ ஏது மின்றி அவர் சாவைத் தழுவினார். ''உங்களை ஒரு நல்ல மருத்துவர் என்று நாங்கள் அறிவோம். திரெப்லீன்கா விற்கு நீங்கள் செல்ல வேண்டும் என்று அவசியமில்லை'' என்று கெஸ்டபோ (Gestapo) அதிகாரி அவரிடம் சொன் னன். ''நான் மனச்சாட்சியை விற்றுப் பிழைக்கமாட் டேன்'' என்று பதிலிறுத்தார் யானுஷ் கர்ச்சாக். குழந்தைகளுடன் சேர்ந்து சாவை நோக்கிப் போனுர் அந்த வீரர். அவர்களை சாந்தப் படுத்தினர், மரண பயம் சிறுவர்களின் இதயத்தைத் துளைக்காமல் பார்த்துக் கொண்டார். யானுஷ் கர்ச்சாக்கின் வாழ்க்கை, வியக்கத் தக்க அவரது ஒழுக்க நெறி ஆற்றல் பரிசுத்தம் நிறைந்த வீரச் செயல் ஆகியவை எனக்கு ஊக்கம்

தந்தன. குழந்தைகளுக்கு உண்மையான போதகராக விளங்க வேண்டுமானால் அவர்களுக்கு நமது இதயத் தைக் கொடுத்து விட வேண்டும் என்று நான் புரிந்து கொண்டேன்.

எந்த மனிதருடன் தொடர்ந்து வாழ்கிறோமோ அந்த மனிதர் மீது நாம் மிகவும் அன்பு செலுத்தலாம், ஆனால் ஏதாவது ஒரு விபத்து முழுமையாக எடுத்துக் காட்டுகிற வரை நாம் இந்த அன்பின் ஆழத்தை உணராமலே இருக்க லாம் என்று க. உஷீன்ஸ்கி எழுதினார். ஒரு முழுமையான வாழ்க்கையை வாழுகிற மனிதன் தனது தாய்நாட்டை எப்படி நேசிக்கிறான் என்பதை அறியாமல் இருக்கலாம். நீண்ட காலம் தாய்நாட்டுக்கு வெளியே தங்கி இருப் பது போன்ற ஒரு சம்பவம் தாய் நாட்டின் மீது அவன் கொண்டிருக்கும் நேசத்தை முழுமையாக வெளிப்படுத் தும். நீண்ட காலத்துக்குக் குழந்தைகளைப் பார்க்காமல், அவர்களது மகிழ்ச்சிகளையும் வருத்தங்களையும் உணர்ந்து கொள்ளாமல் இருக்கின்ற ஒவ்வொரு சமயத்திலும் இந்த வார்த்தைகளை நான் நினைத்துப் பார்க்கிறேன். போதனைக் கலாசாரத்தின் ஒரு நிர்ணயமான அம்சம் குழந்தைகளின் மீது கொண்டிருக்கும் பற்றுணர்ச்சி ஆகும் என்று எனக்கு ஒவ்வொரு ஆண்டும் மேலும் மேலும் உறுதி ஏற்படுத்துகிறது. உணர்ச்சிக்கு ''ஆணையிடு வது கூடாது'' என்று சோவியத் கலாமன்ற வல்லுனரான க. சி. ஸ்தனிஸ்லாவ்ஸ்கி (1863-1938) சொன்னார். அப் படியானால் ஆசிரியருக்கு, போதகருக்கு உணர்ச்சிகளைக் கற்றுக் கொடுப்பது தான் உயர்தரமான போதனைக் கலாசாரத்தின் சாரமாக விளங்குகிறது.

ஆசிரியர் குழந்தை ஆகியோருக்கு இடையில் நிரந் தரமான ஆன்மீகத் தொடர்பு இன்றி, சிந்தனைகள், உணர்ச்சிகள், அனுபவ உணர்ச்சிகள் ஆகியவற்றின் உலகுக்குள் பரஸ்பரம் புகுந்து பார்க்காமல் போதனைக் கலாசாரத்தின் சரீரமும் இரத்தமுமாய் இருக்கிற மன வெழுச்சியுள்ள கலாசாரத்தை நினைத்தும் பார்க்க முடி யாது. முழுமையான, நட்பு மிக்க ஒரு குழுவில் குழந்தை

களுடன் பல அம்சங்கள் கொண்ட மனவெழுச்சியுள்ள உறவுகள் கொள்வது, இதில் போதகராக மட்டுமின்றி நண்பராயும் தோழராயும் ஆசிரியர் விளங்குவது ஆகிய உணர்ச்சிகளைப் போதகரிடம் வளர்ப்பதுதான் போதனைக் கலையின் ஊற்றுக்கண்ணாகும். வகுப்பில் மட்டும் மாணவர்களை ஆசிரியர் சந்திப்பதானால், வகுப்பில் மட்டும் குழந்தைகள் போதகரின் செல்வாக்குக்கு உட்படுவதாய் உணர்ந்தால் மனவெழுச்சியுள்ள உறவுகள் என்பது நினைத்தும் பார்க்க முடியாத ஒன்றாகி விடும்.

''வகுப்பறைக் கரும்பலகையில் அடைக்கப் பட்டிருக்கிற உலகத்தை'' ''சன்னல் கண்ணாடிக்கு வெளியே மிதந்து செல்லும் உலகத்திற்கு'' நிச்சயமாய் எதிராக நிறுத்தக் கூடாது. கட்டாயப் பயிற்சி என்பது மனித ஆன்மாவை பலவந்தப் படுத்துவது, வகுப்பறைக் கரும்பலகை என்பது குழந்தையின் சுதந்திரத்தை அடக்கி ஒடுக்குவது, சன்னலுக்கு வெளியே இருக்கும் உலகமே உண்மையான சுதந்திரம் என்றெல்லாம் ஒருவர் சிந்திக்கவும் கூடாது.

பாவ்லிஷ் பள்ளிக்கு நான் பணியாற்ற வருவதற்கு முன்பு, குழந்தையின் வாழ்க்கை மீது ஆரம்ப வகுப்புகளின் ஆசிரியர் எத்தகைய பிரம்மாண்டமாக பங்கு வகிக்கிறார் என்பது குறித்து எனக்குப் பல முறை மன வுறுதி ஏற்பட்டிருந்தது. குழந்தைக்கு, அவனைப் பெற்ற அம்மாவைப் போலவே அன்புக்குரியவராக, பெற்றவராக ஆசிரியர் விளங்க வேண்டும். ஆசிரியர் மீது பள்ளிச் சிறுவன் கொள்கிற விசுவாசம், போதகருக்கும் மாணவனுக்கும் இடையில் நிலவும் பரஸ்பர நம்பிக்கை, தனது ஆசிரியரிடம் குழந்தை காணுகிற மனிதத் தன்மையின் ஆதர்சம் இவையெல்லாம் போதனைக் கலையில் எளிதான விதிகள். அத்தோடு கூடவே இவை மிகவும் சிக்கலான, மிகவும் விவேகம் நிறைந்த போதனை விதிகளும் ஆகும். இவ்விதிகளையெல்லாம் அறிந்து கொண்ட ஆசிரியர் உண்மையான ஆன்மிக போதகர் ஆவார். தாய் தந்தையரின் இதய பூர்வப் பிரியம், விவேகம்

நிறைந்த கண்டிப்பு, கடுமை ஆகியவை ஒன்று கலந்த ஆழமான அன்பு, மனிதத் தன்மை ஆகியவை ஆசிரியரின் முக்கியமான பண்புகளில் ஒன்ருகும்.

குழந்தைப் பருவம் மனித வாழ்வின் மிக முக்கிய மான காலமாகும், இது எதிர்கால வாழ்க்கைக்கான தயாரிப்பு அல்ல, உண்மையான, பிரகாசமான, சுயமான, திரும்பி வராத ஒரு வாழ்க்கை ஆகும். குழந்தைப் பருவம் எப்படிக் கழிந்தது, குழந்தை ஆண்டுகளில் பிள்ளையைக் கைபிடித்து அழைத்துச்சென்றது யார், சுற்றியுள்ள உலகத்திலிருந்து அவன் அறிவிலும் நெஞ்சி லும் சென்று சேர்ந்தது என்ன என்பவற்றைப் பெருமள வுக்குப் பொறுத்திருக்கிறது, இன்றைய சிறுவன் எத் தகைய மனிதனுய் வளருவான் என்பது. பள்ளிக்கு முந்திய வயதிலும், ஆரம்பப் பள்ளி ஆண்டுகளிலும் மனிதப் பண்பு, சிந்தனைத் திறமை, பேச்சு ஆகியவை வருவாகின்றன. குழந்தை பிறந்ததிலிருந்து, படிப்பதற் காக அவனுகப் புத்தகத்தைத் திறக்க முடிகிற வரை, அவன் தனது கஷ்டமான முதல் எட்டுக்களை எந்த உலகத் தில் வைக்கிருனே அந்த உலகம் தான், அதாவது புத் தகத்துக்கு அருகே இருக்கிற சுற்றியுள்ள உலகம் தான் புத்தகத்திலிருந்து, பாடப் புத்தகத்திலிருந்து, வகுப் பிலிருந்து குழந்தையின் அறிவிற்கும் இதயத்துக்கும் விஷயங்கள் வந்து சேருவதற்கு ஒருவேளை காரணமாகும்.

தாய் நாட்டின் மீது அளவற்ற காதல், அதன் மங் கலத்துக்காக, மகத்துவத்துக்காக, வல்லமைக்காக, சொந்த நாட்டின் எதிரிகளுக்கு விட்டுக் கொடுக்காம லிருப்பதற்காக எதையும் தியாகம் செய்யச் சித்தமாய் இருப்பது எனும் கம்யூனிச ஒழுங்கின் அடித்தளமாக விளங்குகிற ஒழுக்கப் பண்புகளை மனதாலும் அறிவாலும் அறிகிற, அறிவின் நெடிய நிகழ்ச்சிப் போக்கு குழந்தைப் பருவத்தில் தொடங்குகிறது.

இளம் வயது, நடுத்தர வயது, முற்றிய வயதுக் குழந்தைகளும் வயது வந்த மனிதர்களும் பெற்றிருக் கிற சொற்களஞ்சியத்தை கடந்த 33 ஆண்டு கால

மாக நான் ஆய்வு செய்து வந்திருக்கிறேன். வியத்தற் குரிய ஒரு சித்திரம் என் முன்னே விரிந்து வருகிறது. சாதாரணக் கூட்டுப் பண்ணை விவசாயக் குடும்பத்தின் (தாய் தந்தை நடுத்தரக் கல்வி பெற்றவர்கள், குடும்ப நூலகத்தில் 300-400 புத்தகங்கள்) ஏழு வயதுக் குழந்தை பள்ளி செல்லத் தொடங்கு முன் 3000-3500 வார்த்தைகளை அவற்றின் உணர்ச்சி வித்தியாசங்களுடன் புரிந்து கொள்கிறது, உணர்கிறது. இவற்றில் ஆயிரத்து ஐநூறு வார்த்தைகளை மிகச் சாதாரணமாகப் பயன் படுத்துகிறது. நடுத்தரக் கல்வி பெற்றுள்ள 45-50 வயதான தொழிலாளி, கூட்டுப் பண்ணை விவசாயி தாய்மொழியில் 5000-5500 வார்த்தைகளை உணர்ச்சி வித்தியாசங்களுடன் புரிந்து கொள்கிறார், உணர்கிறார். இவற்றில் அவர் சாதாரணமாகப் பயன்படுத்துகிறவை 2000-2500 வார்த்தைகளே. மனித வாழ்வில் குழந்தை ஆண்டுகள் எவ்வளவு முக்கியமானவை என்பதை இந்த உண்மை கண்கூடாகக் காட்டுகிறது.

பள்ளிக்கு முந்திய பருவமும் இளம் பள்ளி வயதுமே பெருமளவுக்கு எதிர்கால மனிதன் எப்படிப்பட்டவன் என்பதை நிர்ணயம் செய்கின்றன என்ற திட்டவட்டமான மனவுறுதி, இதைவிட முதிர்ந்த வயதில் ஒருவனுக்குத் திருந்தக் கற்பித்தலின் வாய்ப்புகளை எந்த அளவிலும் மறுக்கவில்லை. சோவியத் போதகரான அ. மக்காரென்கோ தமது அனுபவத்தின் மூலம் திருந்தக் கற்பித்தலின் சக்தியை சிறப்பாக நிரூபித்துள்ளார். ஆயினும், இளமைப் பருவத்துக்கே அவர் அதிமுக்கியத்துவம் கொடுத்தார். போதனையின் சரியான வழி, குழந்தையின் இளமைப் பருவத்தில் புரியப்பட்ட தவறுகளைத் திருத்துவதல்ல, மாறாக இத்தகைய தவறுகள் செய்யாமல் ஒருவேளை திருந்தக் கற்பித்தல் தேவையாகா வண்ணம் தடுப்பதே ஆகும்.

குழந்தையின், தலையில் எவ்வளவு அறிவைத் திணிக்க முடியுமோ அவ்வளவையும் திணித்து விடுவது என்பதே போதனை என்று நினைக்கிற ஆசிரியர், குழந்தைகளின்

இயல்பான வாழ்வை எவ்வளவு திரித்து விடுகிறுர் என்று நான் பள்ளித் தலைவராய்ப் பணியாற்றும் போது வேதனையுடன் கவனித்து வந்தேன்.

பாடங்களின் போது மட்டுமன்றி, அதிக நேரக் குழுக்களிலும்[1] குழந்தையின் இயல்பான வாழ்வு எவ்வாறு அசிங்கப் படுத்தப் படுகிறது என்பதை இதய வலியின்றிக் காண முடியாது. 5-6 மணி நேரப் பாடங்களுக்குப் பின்பு விளையாடி, ஓய்வெடுத்து, இயற்கையின் நடுவே குழந்தைகள் வாழ்வதற்குப் பதிலாக இன்னும் 4-5 மணி நேரம் புத்தகமும் கையுமாகக் குழந்தைகள் மீண்டும் உட்கார்ந்திருக்கிற சில பள்ளிக்கூடங்களும் துரதிருஷ்டவசமாக இருக்கவே செய்கின்றன. குழந்தைகள் பள்ளியில் இருக்கின்ற நேரம், முடிவற்ற களைப் பூட்டும் பாட நேரமாக மாறிவிடுகிறது. இப்படி இருக்கவே கூடாது! அதிக நேரக் குழுக்களும், பள்ளிகளும் என்ற கருத்து மதிப்பு மிக்க ஒரு போதனை வடிவமாகும், உயர்ந்த உளநெகிழ்ச்சிக் கலாச்சாரம் ஆசிரியருக்கும் குழந்தைகளுக்கும் இடையில், எந்த நிலையான ஆன்மீகத் தொடர்பு இல்லாமல் நினைத்தும் பார்க்க முடியாதோ, அந்தத் தொடர்பை ஏற்படுத்துவதற்கு அனுகூலமான சூழல்கள் இங்குதான் உருவாக்கப் படுகின்றன. கவர்ச்சி மிக்க இந்தக் கருத்து கொச்சைப் படுத்தப்படுவதுதான் வேதனை தருவதாகும்: அதிக நேரக் குழுவில் தங்கி இருப்பது, ஒவ்வொரு முறை மணி அடிக்கும் போதும் குழந்தைக்கு அயர்வுண்டாக்கும் வகையில் அதே போன்ற பாடமாகவும் அதே போல் சாய்வு மேசைக்கருகே உட்கார்ந்திருப்பதாகவும் அடிக்கடி மாறி விடுகிறது.

இப்படி ஏன் ஆகிறது?

ஏனெனில், குழந்தைகளைப் புல்வெளிக்குக் கூட்டிச் செல்வதும், காட்டிலும் பூங்காவிலும் அவர்களுடன்

---

[1] அதிக நேரக் குழு—பாட நேரம் மற்ற நேரத்தில், ஆரம்ப வகுப்பு மாணவர்களுக்கு நடத்தப்படுகிற பாட சம்பந்தமான, வளர்ப்பு சம்பந்தமான பணி.

உலாவுவதும் பாடம் நடத்துவதை விட கணிசமான அளவு கஷ்டமான காரியமாகும்.

போதனை சம்பந்தமான இலக்கியத்தில் நன்கு பொதுமைப் படுத்தப்பட்டுள்ள சிறப்பான அதிக நேரப் பள்ளிகளின் நன்மை பயக்கும் அனுபவம் பலப்பல பள்ளிகளில் மிகக் குறைவாகவே உபயோகப் படுகிறது என்பது மிக வருத்தத் தக்கதாகும். இதற்குப் பிரதான காரணம் போதனைப் பணியின் (இந்தக் கருத்தின் குறுகிய பொருளில்) பொதுவான பலவீனமாகும்.

உழைப்பு, மனித உறவுகளில் ஆரம்ப நிலைக் கலாசாரம், குடி மகனின் கடமைகள் நிறைவேறுவது ஆகிய எதுவும் விஞ்ஞான அறிவியல்களைக் கிரகித்துக் கொள்ளாமல் சாத்தியமல்ல என்கிற ஒரு காலத்தில் நாம் வாழ்கிறோம். மகிழ்ச்சிகளும் இன்பங்களும் மட்டும் தருகிற ஓர் எளிய, இனிய விளையாட்டாக படிப்பு இருக்க முடியாது. வளர்ந்து வரும் குடிமகனின் வாழ்க்கை வழி மெழுமெழுப்பான பாதையில் எளிய உலாவலாக இருக்காது. நமது தந்தையரும், தாத்தாக்களும், கொள்ளுத் தாத்தாக்களும் கடந்து வந்த கஷ்டங்களை விட எந்தவிதத்திலும் குறையாத கஷ்டங்களைச் சமாளிக்கத் தக்க, உயர்ந்த கல்வியும், உழைப்பின் மீது பற்றும், விடாமுயற்சியும் கொண்ட மனிதர்களை நாம் வளர்த்து விட வேண்டும். 70-90ஆம் ஆண்டுகளில் வாழும் ஓர் இளைஞனது அறிவின் அளவு அவனுக்கு முந்திய பத்தாண்டுகளில் வாழ்ந்த இளைஞர்களது அறிவின் அளவை விட மிகவும் உயர்ந்திருக்கும். எவ்வளவுக்கெவ்வளவு பரந்த அறிவியல்களைக் கிரகித்துக் கொள்ள வேண்டியதாகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு தனி நபர் உருவாகிற, வளர்கிற, கொந்தளிப்பாக வளருகிற இளமைப்பருவத்தில், மனித உடலமைப்பு இயற்கையைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். மனிதன் இயற்கையின் மைந்தனாக இருந்தான், எப்போதும் இருந்து வருவான். அவனை இயற்கையுடன் சம்பந்தப்படுத்துகின்ற ஒவ்வொன்றையும் ஆன்மிகக் கலாசாரத்தை வளமைப் படுத்தும்

இணைப்பாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். குழந்தையைச் சுற்றியுள்ள உலகம் என்பது, முதன்மையாக அளவற்ற தோற்றங்களின் வளமையும் முடிவற்ற அழகும் கொண்ட இயற்கையின் உலகமாகும். குழந்தை அறிவின் நிரந்தர ஊற்றுக்கண் இங்கே இயற்கையில் இருக்கிறது. இத்தோடு, மனிதர்களின் சமுதாய உறவுகளுடன், உழைப்புடன் சம்பந்தம் கொண்ட அம்சங்களான சுற்றுச் சூழலின் அம்சங்கள் வகிக்கும் பாத்திரமும் ஆண்டுதோறும் வளர்ந்து வருகிறது.

சுற்றியுள்ள எதார்த்தத்தை அறிந்து கொள்கிற நிகழ்ச்சிப் போக்கு எந்த ஒன்றினாலும் மாற்ற முடியாத சிந்தனையின் மனவெழுச்சித் தூண்டுதல் ஆகும். பள்ளிக்கு முந்திய வயதிலும், பள்ளி இளம் வயதிலும் இந்தத் தூண்டுதல் குழந்தையின் வாழ்வில் மிகமுக்கியமான பாத்திரம் வகிக்கிறது. சுற்றியுள்ள உலகில் இருந்து வரும் பொருள்களையும் தோற்றங்களையும் பொதுமைப் படுத்துகிற உண்மையானது, உணர்ச்சிகளின் மீது செல்வாக்குச் செலுத்துகிற பிரகாசமான உருவங்களால் உணர்ச்சியூட்டப்படுமானால் சொந்தக் கருத்தாக மாறுகிறது. முதல் விஞ்ஞான உண்மைகளை குழந்தை சுற்றியுள்ள உலகிலிருந்து அறிந்து கொள்வதும், சிந்தனையின் ஊற்றுக்கண்ணாக இயற்கை நிகழ்ச்சிகளின் அழகும் அவற்றின் குன்றாத சிக்கலுமே விளங்குவதும் சமுதாய உறவுகளின், உழைப்பின் உலகுக்குக் குழந்தையை மெல்ல மெல்ல அழைத்துச் செல்வதும் அவ்வளவு முக்கியமான அம்சங்களாகும்.

பாவ்லிஷ் பள்ளியில் நான் பணியாற்றத் தொடங்கியதிலிருந்தே இளம் வயதுக் குழந்தைகள் மீது, குறிப்பாக முதல் வகுப்புக் குழந்தைகள் மீது அக்கறைகொண்டிருந்தேன். தமது கல்வி தொடங்குகிற முதல் நாட்களில் எத்தகைய படபடப்புடன் குழந்தைகள் பள்ளிக்கூட வாசலைத் தாண்டுகிறார்கள்! எத்தகைய நம்பிக்கையுடன் ஆசிரியரின் கண்களை நோக்குகிறார்கள்! அடிக்கடி நடக்கிறபடி சில மாதங்களில், சில வாரங்களிலேயே

கூட அவர்களது கண்களில் இருந்த பிரகாசம் ஏன் மங்கி விடுகிறது? சில குழந்தைகளுக்குக் கல்வி என்பது ஏன் சித்திரவதையாக மாறி விடுகிறது? குழந்தைகளின் சகஜமான அனுபவத்தையும், மகிழ்ச்சி மிக்க புலனறிவையும், உலகைக் கண்டு கொள்வதையும் அப்படியே பாதுகாத்து வர வேண்டுமென்றும், கல்வி கற்றல் என்பது குழந்தைகளுக்கு உத்வேகமூட்டுகிற, கவர்ச்சி மிக்க உழைப்பாக இருக்க வேண்டுமென்றும் ஆசிரியர்கள் அனைவரும் உண்மையிலேயே விரும்புகிறார்கள் அல்லவா?

பள்ளிக்கு வரத் தொடங்கு முன்னே ஒவ்வொரு குழந்தையிடமும் இருந்த ஆன்மீக உலகை ஆசிரியர் ஒரு சிறிதே அறிவார் என்பதே இப்படி ஆவதற்கு முதன்மையான காரணம் ஆகும். பள்ளிச் சுவர்களுக்குள் நடக்கிற வாழ்க்கையோ சிறுவர்களை முறைப்படுத்துகிற வகையில் பாடத் தொடக்க மணியால் ஒழுங்குபடுத்தப் படுகிற வெறும் கல்விப் பயிற்சியாக நின்று விடுகிறது. இது ஒரே அளவுக்குள் குழந்தைகளை விரட்டுகிறது, ஒவ்வொரு குழந்தையிடமும் இருக்கிற சொந்த உலகம் விரிந்து செழிக்க வகை செய்வதில்லை. குழந்தைகளிடம் அக்கறைகளை வளர்ப்பது எப்படி, அவர்களின் ஆன்மீக வாழ்வை வேற்றுமைப் படுத்துவது எப்படி என்றெல்லாம் ஆரம்பப் பள்ளி ஆசிரியர்களுக்கு நான் ஆலோசனைகள் சொன்னேன், சிபாரிசுகள் செய்தேன் என்பது சொல்லாமலே விளங்கும். ஆனால், வெறும் ஆலோசனைகள் மட்டும் போதாது. ஒரு முக்கியமான போதனை எண்ணத்தின் சாராம்சம் குழந்தைகளுக்கும் ஆசிரியருக்கும் இடையில் இருக்கும் பரஸ்பர உறவுகளில் திறந்து விரிகிறது. குழுவின் கண்களின் முன்னே பள்ளியிலேயே எழுப்பப் படுகிற ஒரு வடிவான மாளிகையாக போதனை எண்ணம் தோன்றும் போதுதான் இது தெளிவுறும். இதனால்தான் பத்து ஆண்டுகளுக்கு என்று உத்தேசிக்கப் பட்ட வகுப்புக் குழுவில் எனது போதனைப் பணியைத் துவக்கினேன்.

கீழே பேசப் படுகிற வகுப்புக் குழுவின் வாழ்க்கை,

பள்ளிக் குழுவின் வாழ்விலிருந்து துண்டுபட்டதல்ல; போதனைப் பணியின் வடிவங்களையும் முறைகளையும் பள்ளி முழுமைக்குமாகவே நான் பலப்பல நேரங்களில் பிரஸ்தாபிக்கிறேன். வகுப்புக் குழுவைத் தெளிவுறக் காட்டுவதற்காகத்தான் இவ்வாறு செய்கிறேன். ஏனெனில், வகுப்பில் மேற்கொள்ளப்படுகிற போதனைப் பணியின் உள்ளடக்கமே பள்ளி முழுதுக்கும் மேற் கொள்ளப் படுகிற போதனைப் பணி வெற்றி பெறுவதற்கு மிக முக்கியமான நிபந்தனையாகும்.

## முதல் ஆண்டு—குழந்தைகள் பயில்கிற ஆண்டு

1951ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தில் பாடங்கள் தொடங்குவதற்கு 3 வாரங்கள் முன்பாகவே, முதல் வகுப்புக்குக் குழந்தைகளைச் சேர்க்கும் போதே, இன்னும் ஓராண்டு கழித்து படிக்க இருக்கிற ஆறு வயதான சிறுவர்களையும் சிறுமிகளையும் பதிவு செய்து கொண்டது பள்ளிக்கூடம். இந்தக் குழந்தைகளுடன்தான் இனி நான் பத்தாண்டுகள் பணியாற்ற வேண்டும்.

குழந்தைகளுடன் இருந்த பெற்றோர்களைக் கூட்டி, அதிகார பூர்வமாக குழந்தைகள் கல்வி கற்கத் தொடங்குவதற்கு ஒரு வருடம் முன்னதாகவே குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்புமாறு நான் ஆலோசனை சொன்னபோது இரு விதமான கருத்துக்கள் தோன்றின, வருடம் முழுதும் நடக்கிற குழந்தைப் பள்ளி இல்லாமலிருக்கையில் (அப்போது கோடைகாலத்தில் மட்டும் நடக்கிற குழந்தைப் பள்ளிதான் கிராமத்தில் இருந்தது), குழந்தைகள் பள்ளிக்குச் செல்வது குடும்பத்துக்கு நல்ல உதவியாக இருக்கும் என்று கருதிய பெற்றோர்களில் ஒரு சாரார் எனது ஆலோசனையை அங்கீகரித்தனர். மற்றவர்களோ காலம் கனியாமல் கல்வி போதிக்கத் தொடங்குவது குழந்தைகளின் ஆரோக்கியத்திற்குக் கேடு பயக்கும் என்று அஞ்சினர். ''பள்ளியில் உட்கார்ந்திருக்க அவனுக்கு இன்னும் நேரம் கிடைக்கும். குழந்தைப்

பருவமோ பள்ளிக்கு முந்தித்தான்'' என்றாள் ஹூராவின் தாய். பள்ளியில் குழந்தை வாழ்வின் முழு அமைப்பும் திடீரென்று முறிந்து விடுவது எவ்வளவு தீமை பயப்பது என்றும், குழந்தையின் இயல்பான பலம் வளருவதற்கு இடம் தர வேண்டியது எவ்வளவு முக்கியமானது என்றும் சிந்திக்கும்படி இந்த வார்த்தைகள் மீண்டும் ஒரு முறை என்னை நிர்ப்பந்தித்தன. பாடங்கள் தொடங்குவதற்கு முன்னே ஒரு வருடம் பள்ளிக்கு வந்து போவது என்பது வகுப்பில் வெறுமே அமர்ந்திருப்பது அல்ல என்று நான் சொன்னேன்.

ஒவ்வொரு குழந்தையையும் நன்றாகத் தெரிந்து கொள்ளவும், அக்குழந்தையினுடைய புலனறிவின், சிந்தனையின், மூளை, வேலையின் தனிச் சிறப்புக்களை ஆழமாகப் பயிலவும் பள்ளி மேசைக்கருகே கல்விப் பயிற்சி தொடங்குவதற்கு முந்திய ஒரு வருடம், எனக்கு அவசியமாக இருந்தது. அறிவு வழங்குவதற்கு முன்பு சிந்திக்கவும், கற்றுக் கொள்ளவும், கவனமாய்ப் பார்க்கவும் கற்றுத் தர வேண்டும். ஒவ்வொரு குழந்தையும் பெற்றுள்ள ஆரோக்கியத்தின் சிறப்பியல்புகளும் அவ்வாறே நன்கு தெரிந்திருக்க வேண்டும், சரியான படிப்புக்கு இதில்லாமல் முடியாது.

அறிவுப் பயிற்சி என்பதும் ஞானம் பெறுவது என்பதும் ஒன்றல்ல. சூரியக் கதிர் இல்லாமல் எப்படி பச்சை இலை இருக்க முடியாதோ அதே போல கல்வி இல்லாமல் அறிவுப் பயிற்சி நடைபெற முடியாது. ஆயினும் சூரியனும் பச்சை இலையும் எப்படி ஒன்றாகி விட முடியாதோ, அதே போல அறிவுப் பயிற்சியைக் கல்வியாகக் கொண்டு விட முடியாது.

சிந்தனை செய்கிற பொருளுடன் சம்பந்தம் கொண்டிருக்கிறார் போதகர். புலனறிவு பெறுகின்ற, உலகை அறிகின்ற குழந்தைப் பருவத்துத் திறமை பெருமளவுக்குக் குழந்தையின் ஆரோக்கியத்தைச் சார்ந்ததாய் இருக்கிறது. இந்தச் சார்பு நிலை மிகவும் நுண்மையானது, சுலபமாய்க் கண்டுபிடிக்க முடியாதது. குழந்தை

களின் உள்ளிருக்கும் ஆன்மிக உலகைப் பயில்வது, குறிப்பாக அவர்களது சிந்தனைத் திறமையைப் பயில்வது ஆசிரியரின் ஒரு மிக முக்கியமான பணியாகும்.

## எனது மாணவர்களின் பெற்றோர்கள்

குழந்தைகளை நன்கு தெரிந்து கொள்ள வேண்டுமானால் குடும்பத்தை—அவர்களது தாய், தந்தை, சகோதரர்கள், சகோதரிகள், தாத்தாக்கள், பாட்டிகள் ஆகியோரை நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். எங்கள் பள்ளி இருந்த சிறு பகுதியில் ஆறு வயதுக் குழந்தைகள் 31 பேர்—16 சிறுவர்கள், 15 சிறுமிகள் இருந்தனர். பள்ளிக்கு முந்திய மாணவர் குழுவை சில காலத்திற்குப் பின்பு தந்தையரும் தாய்மார்களும் ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடம்'' என்று அழைத்தனர். இந்தப் பள்ளிக்குக் குழந்தைகளை அனுப்புவதற்கு பெற்றோர்கள் அனைவரும் சம்மதித்தனர். 31 குழந்தைகளில் 11 பேருக்குத் தந்தையர் இல்லை, இருவருக்கு தந்தையும் இல்லை, தாயும் இல்லை. வீத்யா, சாஷா என்ற இரு சிறுவர்களின் தலைவிதி மிகவும் துன்பகரமானது. வீத்யாவின் தந்தை மாபெரும் தேசபக்தப் போரின் போது (1941-1945) கொரில்லா வீரராக இருந்தார், பாசிஸ்டுகள் இவரது மனைவியின் கண்களுக்கு முன்னால் இவரைக் கொடுமையான சித்திரவதைகள் செய்து கொன்றனர். வீத்யாவின் தாயாருக்கு இந்தக் கொடுமை தாளாமல் புத்தி பேதலித்து விட்டது. இத்துன்பகரமான சம்பவத்திற்கு பின்னே ஆறு மாதம் கழித்து பையன் பிறந்தான். பிரவசத்திற்குப் பின் தாய் இறந்து போனாள். பையன் கஷ்டப்பட்டு வெளிவந்தான். சாஷாவின் தந்தை போர் முனையில் மடிந்தார். கிராமத்தை பாசிஸ்டு ஆக்கிரமிப்பாளர்களிடமிருந்து விடுவிப்பதற்காக நடந்த சண்டைகளின் போது இவனது தாய் கொல்லப்பட்டாள்.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடம்'' திறப்பதற்கு சில வாரங்களுக்கு முன்பு ஒவ்வொரு குடும்பத்துடனும்

நான் அறிமுகம் செய்து கொண்டேன். சில குடும்பங்களில் பெற்றோருக்கும் குழந்தைகளுக்கும் இடையில், தந்தைக்கும் தாய்க்கும் இடையில் நட்புச் சூழ்நிலை நிலவவில்லை, பரஸ்பர மரியாதை இல்லை. இதில்லாமல் குழந்தையின் வாழ்க்கை மகிழ்ச்சிகரமாக இருக்க முடியாது.

கரு நிறக் கண்கள் கொண்ட, பழுப்பு நிறமான, தூக்கு மூக்குடைய கோல்யா இதோ நிற்கிறான். அவனது பார்வை எச்சரிக்கை மிகுந்தது. நான் பையனைப் பார்த்துப் புன்னகை செய்கிறேன், அவனோ இன்னும் அதிகமாக முகம் சுழிக்கிறான். இந்தக் குடும்பத்தில் நிலவுகிற அசாதாரணமான சூழ்நிலையை இந்த விநாடிகளில் நினைத்துப் பார்க்கிறேன். ஹிட்லர் பாசிஸ்டுகளுடன் போர் தொடங்குவதற்கு முன்பு கோல்யாவின் தந்தை சிறையில் இருந்தார். குடும்பம் தன்பாசில் வசித்தது. பாசிஸ்டு ஆக்கிரமிப்பின் போது அவர் சிறையிலிருந்து வெளியே வந்தார். குடும்பம் எங்கள் கிராமத்துக்கு வந்தது. தாயும் தந்தையும் மக்களின் துன்பங்களைத் தமக்கு ஆதாயமாக்கிக் கொண்டனர். பித்தலாட்ட வேலைகளில் ஈடுபட்டனர். இவர்கள் பாசிஸ்டுச் சேவகர்களான போலீசார் கொள்ளையடித்த பொருள்களை கொள்ளை லாபத்துக்கு விற்றனர், பதுக்கி வைத்தனர். துன்பம் மிகுந்த அந்த ஆண்டுகளில், கூட்டுப் பண்ணையின் பறவைப் பகுதியிலிருந்து கோழி திருடினாள் கோல்யாவின் தாய், கோல்யாவிற்கும் அவனது அண்ணனுக்கும் காக்காய்களைப் பிடிக்கக் கற்றுக் கொடுத்தாள். குழந்தைகள் காக்காய்களைப் பிடித்துக் கொல்லுவார்கள். தாய் அவற்றை வறுத்து கோழிக் கறி என்று கூறி சந்தையில் விற்று வருவாள்... நான் பையனைப் பார்ப்பேன், அவன் புன்னகை செய்ய வேண்டுமென்று விரும்புவேன். ஆனால் தனிமையும் பயமுமே அவன் கண்களில் தென்படும். கோல்யா, அன்பான, மனித உணர்ச்சிகளை உனது இதயத்தில் உசுப்பி விடுவது எப்படி? கொடுமையின் அவலட்சணச் சூழ்நிலைக்கும், நீ வளரும் போது உன்னைச் சுற்றி

யிருந்த மனிதர்கள் மீது நீ உமிழ்ந்த வெறுப்புக்கும் எதிராக எதனை நிறுத்துவது? தாயின் அலட்சியமான, ஏதோ பார்வை இழந்தது போன்ற கண்களை நான் பார்க்கிறேன். இந்த அலட்சியத்தைக் கண்டால் எனக்கு என்னவோ செய்கிறது.

இந்த விவரங்களை எல்லாம் புத்தகத்தில் எழுத வேண்டுமா என்பது பற்றி நீண்ட காலம் யோசித்தேன். பல தடவை அடித்து விட்டு மீண்டும் மீண்டும் எழுதினேன். இந்தப் பண்புகளைப் பொதுமைப் படுத்தித் தந்திருக்கலாம்: பரிசுத்தமான ஒழுக்கத்தில் தந்தையும் தாயும் குழந்தைக்கு உதாரணமாக இருக்கவில்லை... இப்படிச் சொன்னால், விஷயத்தை தீமை பயக்கிற விதத்தில் மென்மைப் படுத்திச் சொல்லுவதாகும். நம்மைச் சுற்றித் தீமையும் கயமைத்தனமும் இன்னமும் இருக்கின்றன என்பதைக் காணத் தவறக் கூடாது. எத்தகைய கற்சுவரும் பள்ளியைச் சுற்றி வேலியாக நின்று இவற்றைத் தடுக்க முடியாது. இந்தத் தீமைக்கு எதிராகப் போராடி வெல்ல வேண்டுமானால், பழைய உலகத்தின் வாரிசாக வந்த அழுக்கை, இளைய உள்ளங்களிலிருந்து துடைத்தெறிய வேண்டுமானால் உண்மையை நேருக்கு நேர் பார்க்க வேண்டும்.

தோல்யா வெண்ணிற முடி கொண்டவன், ஒல்லியானவன், வசந்த காலத்து வானத்தைப் போன்ற நீலக் கண்கள் பெற்றவன். அவன் தாயாருக்கு அருகில், அவளது கையைப் பிடித்துக் கொண்டு ஏனோ தரையையே பார்த்துக் கொண்டிருக்கிறான், எப்போதாவதுதான் நிமிர்ந்து பார்க்கிறான். கர்பாத்திய மலைகளில் அவன் தந்தை வீர மரணம் அடைந்தார். தாயாருக்கு சில விருதுகள் அனுப்பினர். தந்தையைப்பற்றி பெருமைப் படுகிறான் தோல்யா. தாயாருக்கு கிராமத்தில் மோசமான பெயர். ஒழுக்கங் கெட்ட வாழ்க்கை நடத்தி பையனை ஒரேயடியாகப் புறக்கணித்து விட்டாள்... இந்தப் பெரும் துன்பம் ஆறு வயதுச் சிறுவனின் இதயத்தை முடமாக்கி விடாமல் இருக்க என்ன செய்வது? தாயாருக்கு புத்தி

வரவும், அவளது இதயத்தில் மகனைப் பேணுகின்ற உணர்வு தோன்றவும் என்ன பண்ணலாம்?

பாசிஸ்டுகளுக்கு எதிராக சோவியத் மக்கள் நடத்திய போர் (1941-1945) இன்னும் ஆருத காயங்களை, ஆழ மான வடுக்களை விட்டுச் சென்றிருக்கிறது. 1945ல் பிறந்த குழந்தைகளும், 1944ல் பிறந்த சில குழந்தை களும் என் முன்னே இதோ இங்கு இருக்கிருர்கள். இவர் களில் பலர் தாயாரின் வயிற்றில் இருக்கையிலேயே அனுதையாகியிருந்தனர். இதோ யூரா. போர் முடி வதற்கு முதல் நாள் இவனது தந்தை செக் மண்ணில் கொல்லப்பட்டார். நினைவிழந்த தாயார் மகன் மீது அன்பு செலுத்துகிருள், சிறு சிறு விஷயங்களுக்கும் அவன் முரண்டு பிடிக்கையில் அவனைத் திருப்திப் படுத்த முயற்சி செய்கிருள். குடும்பத்தில் ஒரு தாத்தா இருக்கிருர். யூரா கவலையின்றி இருப்பதற்காக தம்மாலான அனைத்தை யும் செய்ய அவரும் தயாராய் இருக்கிருர். இந்தக் குடும்பம் பற்றி நான் அறிந்து கொண்டவற்றிலிருந்து ஒரு விஷயம் தெளிவாயிற்று. ஆறு வயதுக் குழந்தை ஒரு குட்டி ராட்சசனுக மாறி விடக் கூடும். தாயாரின் குருட்டுத்தனமான அன்பும், அலட்சியத்தைப் போலவே ஆபத்தானதாகும்.

தாயாரும் தாத்தாவும் பெத்ரிக்கைக் கூட்டி வந் தனர். சிறுவனது தாயாரின் கஷ்டமான வாழ்க்கை யைப் பற்றி நான் நிறையக் கேள்விப் பட்டிருந்தேன். அவளது முதல் கணவன் போர் தொடங்கு முன்னே அவளை விலக்கி விட்டான். இரண்டாவது முறை அவள் திரு மணம் செய்து கொண்டாள். ஆனுல் இத்திருமணமும் இன்பகரமாய் இல்லை. விஷயம் என்னவென்ருல் பெத்ரிக் கின் தந்தைக்கு எங்கேயோ சைபீரியாவில் ஒரு குடும்பம் இருக்கிறது. போருக்குப் பின் அவர் அங்கே போய் விட்டார். பெருமிதம் கொண்ட தாய், சிறுவனின் தந்தை போர் முனையில் மரணமுற்று விட்டார் என்று அவனை நம்பச் செய்வது என முடிவு செய்தாள். தனது தந்தை யின் கற்பனையான வீரச் செயல்கள் பற்றி குழந்தை

களிடம் கூறினன் பெத்ரிக். சமவயதுள்ளவர்கள் அவனை நம்பவில்லை. அவன் தந்தை ஓர் ஏமாற்றுக்காரன் என்று அவர்கள் சொன்னார்கள். பெத்ரிக்குக்கு அழுகை வந்து விட்டது. கண்ணீரும் கம்பலையுமாக அன்னையிடம் வந் தான். நம்பிக்கையின்மை, கொடுமை ஆகிய விஷ வித்து களை குழந்தையின் மனதில் கெட்ட மனிதர்கள் தூவி விட்டார்கள் என்று தெரிந்தது. குழந்தை நல்லதை நம்ப வேண்டுமானால் என்ன செய்வது?

கோஸ்த்யாவிற்கு ஏழு வயதாகி விட்டது. ஆனால் இன்னும் அவன் முதல் வகுப்புக்குப் போகவில்லை. தந்தை, மாற்றுந்தாய், தாத்தா ஆகியோர் அவனைப் பள்ளிக்குக் கொணர்ந்தனர். போரின் மரணக் காற்று இந்தக் குழந்தையையும் பொசுக்கியது. கிராமத்தை பாசிஸ்டு ஆக்கிரமிப்பாளர்களிடமிருந்து விடுவித்த சில வாரங்களுக்குப் பின்பு பிள்ளைத் தாய்ச்சியாய் இருந்த கோஸ்த்யாவின் தாய் (எந்த நாளும் அவள் பிரசவத்தை எதிர்நோக்கி இருந்தாள்) சில உலோகப் பொருள்களை எங்கேயோ கண்டு,ஏழு வயதான தனது முதல் பையனுக்கு விளையாடக் கொடுத்தாள். அந்தப் பொருள்களிடையே ஒரு கண்ணி வெடி இருந்திருக்கிறது. திடீரென்று அது வெடித்து விடவே பையன் கொல்லப்பட்டான். இது கண்டு தாயார் தூக்குப் போட்டுக் கொண்டாள். ஜனங்கள் ஓடி வந்து அவளைத் தூக்குக் கயிற்றிலிருந்து வெளியே இழுத்தனர். மரண வேதனையில் அவள் கோஸ்த்யாவை பிரசவித்தாள். பையன் பிழைத்தது ஓர் அற்புதமே. இந்த நேரத்தில் அண்டை வீட்டுக்கார அம் மாள் தனது குழந்தைக்கும் கோஸ்த்யாவுக்கும் முலைப் பால் ஊட்டியதால் அவன் காப்பாற்றப் பட்டான். போர் முனையிலிருந்து திரும்பி வந்தார் தந்தை. மகனை மிகவும் நேசித்தார். அவனைச் சீராட்டிக் காப்பாற்றி வளர்த் தார். மிக நல்ல பெண்மணியான மாற்றுந்தாயும் தாத்தா வும் சிறுவனை நேசித்தனர். கோஸ்த்யாவுக்கு 5 வயது முடிவதற்குள் புதியதொரு துயரம் நேர்ந்தது. பிரகாச மான ஓர் உலோகப் பொருளை தோட்டத்தில் கண்டான்

பையன். ஓர் உலோகத்தின் மீது அந்த இரும்புப் பொருளைத் தட்டித் தட்டி விளையாடினான் அவன். திடீரென அது வெடித்தது. இரத்தம் சிந்தச் சிந்த அவனை மருத்துவசாலைக்கு எடுத்துச் சென்றனர். கோஸ்த்யா ஆயுள் முழுதுக்கும் அங்கஹீனனாகிப் போனான். இடது கையும் இடது கண்ணும் போய் விட்டன. வெடி மருந்தின் ஊதா நிறத் துளிகள் என்றென்றைக்குமாக அவன் முகத்தில் படிந்து விட்டன...

கோஸ்த்யா, நீ மகிழ்ச்சிகரமான மனிதனாக வேண்டுமானால் இதய பூர்வ அன்பையும் பிரியத்தையும் எந்த அளவுக்கு உன்னிடம் காட்ட வேண்டும்? உனது தந்தையிடமும், அன்புமிக்க மாற்றாந்தாயிடமும், தாத்தாவிடமும் அவர்களது அன்பு அறிவு பூர்வமானதாயும் கண்டிப்பு மிகுந்ததாயும் இருக்க வேண்டும் என்று எப்படி எடுத்துச் சொல்வது? எவ்வாறு நீ கல்வி கற்கப் போகிறாய்? உனக்கு அடிக்கடி தலைவலி வருகிறது என்று உறவினர்கள் சொல்கிறார்கள். உனது கல்வியை எளிதாக்குவது எப்படி? உடல் நலத்தை உறுதிப் படுத்தி, உனது சோர்வு மனப்பான்மையைப் போக்குவது எவ்வாறு? நீ அடிக்கடி தனிமையில் புலம்புகிறாய் என்றும், உன்னையொத்த சிறுவர்களின் விளையாட்டுகளில் உனக்கு ஈடுபாடு இல்லை என்றும் உனது அப்பா சொன்னார்...

சாம்பல் நிறக் கண்கள் கொண்ட, யோசனையில் ஆழ்ந்த சிறுவனான ஸ்லாவா இதோ தாயாருக்கு அருகில் நிற்கிறான். தன்னந் தனியாய் இருந்த தாயாரின் வாழ்க்கை கடியதாய் இருக்கிறது, அவள் ஐம்பது வயதை நெருங்குகிறாள். இளமையில் அவள் அழகற்றவளாய் இருந்தாள். இன்பம் பற்றி இளம் பெண் கனவு கண்டாள். ஆனால் ஒருவரும் அவளுக்குக் கணவனாக விரும்பவில்லை. இளமை கழிந்து கொண்டிருந்தது. சொந்த மகிழ்ச்சி கிட்டவில்லை. அவளைப் போலவே ஒரு தன்னந் தனி மனிதன் உடலெல்லாம் வடுக்களாய் போரிலிருந்து திரும்பி வந்தான். இவன் இந்தப் பெண்ணைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டான். இந்த மகிழ்ச்சி

அதிக நாள் நீடிக்கவில்லை. கணவன் விரைவிலேயே காலமானன். கணவன் மீதிருந்த காதல் அனைத்தையும் மகனின் மீது சொரிந்தாள் தாய். ஆனால் பையனை அவள் பயிற்றி வளர்த்ததுதான் சரியில்லை. மனிதர்களைக் கண்டால் ஸ்லாவாவுக்குப் பிடிக்கவில்லை என்றும், நாட்கணக்கில் வீட்டிலேயே உட்கார்ந்திருப்பான் என்றும், அவனிடம் ஏதாவது கேட்க வேண்டியதுதான் உடனே அவனது கண்களில் ஒரு கடுமை பளிச்சிடும் என்றும் சொன்னார்கள். இதோ, சிறுவனின் கண்களுக்குள் பார்த்தேன், அவை உடனே உறுத்தி நின்று உஷார் ஆயின.

எதிர்கால மாணவர்களுடன் எவ்வளவுக்கு எவ்வளவு நெருங்கிப் பழகினேனே, அவ்வளவுக்கு அவ்வளவு, குடும்பத்தில் குழந்தைப் பருவத்தை இழந்து விட்டவர்களுக்கு அதனைத் திருப்பித் தருவதுதான் என் முன்னுள்ள முக்கியமான பணிகளில் ஒன்று என்று எனக்கு மனவுறுதி ஏற்பட்டது.

பள்ளியில் மூன்றாண்டுகள் பணியாற்றிய போது இத்தகைய டஜன் கணக்கான குழந்தைகளை நான் தெரிந்து கொண்டேன். நன்மையிலும், நியாயத்திலும் இருக்க வேண்டிய நம்பிக்கையை சிறு குழந்தைக்குத் திரும்பத் தரமுடியவில்லை என்றால் ஒருபோதும் தன்னுள்ளேயே ஒரு மனிதனை அவனால் காண முடியாது என்றும், தன் மதிப்பை ஒருபோதும் உணர முடியாது என்றும் கொண்ட மனவுறுதியை வாழ்க்கை கெட்டிப்படுத்தியது. வளருகின்ற இத்தகைய சிறுவன் கசப்படைந்தவனாக மாறி விடுகிறான். வாழ்க்கையில் உயர்வானவை என்றோ புனிதமானவை என்றோ அவனுக்கு ஏதுமில்லை. ஆசிரியரின் சொல் அவனது இதயத்தின் ஆழத்திற்குச் செல்லவே செல்லாது.

இத்தகைய மனிதனின் மனத்தை நேர் படுத்துவதுதான் ஆசிரியரின் மிகக் கடினமான பணிகளில் ஒன்றாகும். இந்த மிக நுண்ணிய, மிகச் சங்கடமான உழைப்பில் தான் மனித வளர்ப்பின் பிரதான சோதனை உண்மையில் நடைபெறுகிறது. நன்மையையும் தீமையையும் குழந்தை

எப்படி அறிந்து கொள்கிறது என்று காண்பதும் உணர்வதும் மட்டும் மனித வளர்ப்பாளராய் இருப்பது என்பதற்குப் பொருள் அல்ல. மிருதுவான குழந்தையின் இதயத்தைத் தீமையிலிருந்து காப்பதும் ஆகும் இது.

கரிய, நீல நிற, ஊதா நிறக் குழந்தைக் கண்களை நான் உற்றுப் பார்க்கையில், போதுமான அவர்களின் இதயங்களுக்கு வெப்பமூட்டுகிற அளவுக்கு அன்பும் ஆதரவும் என்னிடம் இருக்கிறதா என்று நான் நினைத்துப் பார்த்தேன். ந. கா. குரூப்ஸ்கயாவின் வார்த்தைகள் எனது நினைவுக்கு வந்தன: ''குழந்தையைப் பொறுத்த வரை, நபரும் கருத்தும் பிரிக்க முடியாதவை. குழந்தைகளால் வெறுக்கப்படுகிற, அவர்களுக்கு அன்னியரான ஒருவர் சொல்லுகின்றவற்றை புரிந்து கொள்வதிலிருந்து முற்றிலும் வேறுபட்டவிதத்தில் அன்புக்குரிய ஆசிரியர் சொல்லுகின்ற ஒன்றைக் குழந்தைகள் புரிந்து கொள்கிறார்கள்.''[1] சொல்லாலும் சொந்த உதாரணத்தாலும் நான் குழந்தைகளை பயிற்றி வளர்ப்பேன். எனது வார்த்தைகளிலும், நடவடிக்கைகளிலும் நன்மையையும், உண்மையையும், அழகையும் அவர்கள் காண வேண்டும். என்னுடைய ஒவ்வொரு வார்த்தைக்கும் பின்னால் அன்பும், பரிவும், ஆதரவும் நிற்க வேண்டும்.

கால்யாவை அப்பா கூட்டி வந்தார். அவளுக்கும் அவளது தங்கைக்கும் பெரும் துயரம் நேர்ந்தது. தாயார் இறந்து போனாள். தாயார் இறந்து போன ஒரு வருடம் கழித்து குடும்பத்திற்கு ஓர் அன்னியப் பெண்மணி வந்தாள். அவள் அன்பானவள், நேர்மையானவள், நுண்ணுணர்வு கொண்டவள். குழந்தைகளின் உள்ளங்களில் என்ன நடக்கிறது என்று அவள் புரிந்து கொண்டாள். தனது உணர்ச்சிகளை வெளியிடுவதில் எச்சரிக்கையாய் இருந்தாள். சிறுமிகளைத் தம்பால் இழுத்துக் கொள்ள

---

[1] ந. க. குரூப்ஸ்கயா. **ஆசிரியரைப் பற்றி.** RSFSR போதனை விஞ்ஞானங்கள் பேரவையின் பதிப்பகம், பக்கங்கள் 143-144.

லாம் என நம்பினுள். வாரங்களும் மாதங்களும் சென் றன. ஆனுல் கால்யாவும் அவள் தங்கையான வால்யா வும் மாற்ருந்தாயுடன் பேசக் கூட விரும்பவில்லே. அவள் இருப்பதை அவர்கள் கவனிக்காதது போல நடந்து கொண்டனர். பெண்மணி அழுதாள். கணவனிடமும் உற்ருரிடமும் என்ன செய்வது என்று ஆலோசனே கேட் டாள். குடும்பத்தை விட்டுப் போய் விடலாம் என்று கூட எண்ணினுள். இதற்கிடையில் அவளுக்கு ஒரு பையன் பிறந்தான். ஒரு குழந்தை பிறந்திருப்பது சிறுமிகளின் உள்ளங்களில் மகிழ்ச்சியூட்டும் என்று நம்பினுள். ஆனுல் நம்பிக்கைகள் பலிக்கவில்லே. குழந்தைகள் (குறிப்பாக, கால்யா) சின்னத் தம்பியை அசட்டை செய்தார்கள். இந்தப் பெருமிதமிக்க இதயத்தை எப்படித் தொடுவது? மாற்றந்தாயிடமும் தந்தையிடமும் என்ன சொல்வது? அவர்களுக்கு எப்படி ஆலோசனே சொல்வது? தந்தை ஏற்கெனவே பள்ளிக்கு வந்து தனது இதயத்தைத் திறந்து கொட்டிவிட்டார். கால்யாவை நன்ருகத் தெரிந்து கொண்ட பின்புதான் ஏதாவது ஆலோசனே சொல்ல முடியும் என்று நான் சொன்னேன்.

குண்டான, சாம்பல் நிறக் கண்கள் கொண்ட, புன் முறுவல் நிறைந்த லரீசா அம்மாவுக்கருகே உட்கார்ந் திருக்கிருள். அவள் கையில் மலர்க் கொத்து இருக் கிறது. தாயாரின் இதயத்தில் பாருங்கல்லாக வேதனே பதிந்திருக்கிறது என்று எனக்குத் தெரிகிறது. கணவன் அவளே விட்டுப் போய்விட்டார். சிறுமிக்குத் தந்தையின் முகமே நினேவில்லே. ''தந்தை வருவார்'' என்று தாயார் மகளுக்குச் சொல்கிருள். ஒரு நல்ல மனிதனுன இயந் திர — டிராக்டர் நிலேயத்துத் தொழிலாளியை அவள் பின்னர் மணந்து கொண்டாள். இந்த மனிதனே அவளது தந்தை என்று சிறுமியை நம்ப வைத்து விட்டாள். லரீசா வுக்குத் தந்தையைப் பிடித்துப் போய் விட்டது. தாயா ருக்கோ மனம் வேதனேப் படுகிறது. யாரோ ஒருவர் எச்சரிக்கையின்றிச் சொல்லிவிடுகிற வார்த்தை அவளது ஏமாற்றுத்தனத்தைக் காட்டிக் கொடுத்து விடுமே. சிறுமி

மகிழ்ச்சியாய் இருக்கிறாள். முரட்டுத்தனமான வார்த்தை எதனாலும் தீண்டப் படாமல் அவளது இதயத்தை வெகு கவனமாகக் காத்துவர வேண்டும். நல்லவர்களான பெற்றோருடன் சேர்ந்து நாம் இவ்வாறு செய்ய முடியுமா? பெற்ற தந்தை அல்ல... ஒவ்வொரு குழந்தைக்கும் இவரைப் போல பெற்ற தந்தை இருந்தால் போதும். குழந்தையைப் போற்றி வளர்ப்பவரே உண்மையான தந்தை என்று இந்த மனிதரை எவ்வளவுக்கு எவ்வளவு அறிந்து கொண்டேனோ, அவ்வளவுக்கு அவ்வளவு எனக்கு மனவுறுதி ஏற்பட்டது. இந்தக் குடும்பத்திற்கு அடிக்கடி சென்று வருவேன். அங்கு ஒரு சுவாரஸ்யமான விஷயத்தைக் கண்டு வியப்படைவேன். சொந்தமற்ற அந்தத் தந்தையின் கண்களில் தெரிகிற அன்பு, கனிவு, நுண்ணுணர்வு ஆகியவையே சிறுமியின் கண்களிலும் தெரிந்தது. அழகைக் காணுகையில் ஒன்றுவிட்ட தந்தையின் கண்களில் ஒளிர்கிற வியப்பும் ஆச்சரியமும் குழந்தையின் கண்களிலும் ஒளிர்ந்தன. ஆச்சரியம், எச்சரிக்கை, கடுமை ஆகிய உணர்ச்சிகளை வெளியிடுவது, இயக்கங்கள், முக பாவனை முதலியவற்றையும் லரீசா தந்தையிடமிருந்தே பெற்றிருந்தாள்.

ஃபேத்யா... அவனுக்கும் தந்தை இல்லை. அவனது தாயார் தகாத வாழ்க்கை நடத்துகிறார் என்று இழிவு படுத்துகிறதும் புண்படுத்துகிறதுமான வார்த்தைகளைச் சிலர் ஜாடையாகப் பேசுவதை அவன் பலமுறை கேட்டிருக்கிறான். உள்ளம் குழம்பி வேதனைப்பட்டது குழந்தை. அவனது தந்தை போர் முனையில் மரணமுற்றார் என்றல்லவா அம்மா சொல்லியிருந்தாள்? ஃபேத்யாவின் தாயாரை போர்க் காலத்துக்கு முன்பே எனக்குத் தெரியும். போரின் போது அவளது வாழ்க்கை மகிழ்ச்சியற்றதாயிருந்தது. சித்திரவதை செய்யும் கேள்விகள் குழந்தையை அலைக்கழிக்காமல் இருக்குமாறு, பரஸ்பர, மனித உறவுகள் எனும் சிக்கலான உலகுக்கு சிறுவனை எப்படி இட்டுச் செல்வது?

மனிதனை அறிவதிலிருந்துதான் உலகை அறிவது சிறு

குழந்தைகளுக்குத் தொடங்குகிறது என்பதை ஆசிரியர்களாகிய நாம் அடிக்கடி மறந்துவிடுகிறோம். தாயுடன் தந்தை எந்தக் குரலில் பேசுகிறார், அவரது பார்வைகளும் இயக்கங்களும் எத்தகைய உணர்ச்சிகளை வெளியிடுகின்றன என்பதிலிருந்தே நன்மையையும் தீமையையும் குழந்தை புரிந்து கொள்ளத் தொடங்குகிறது. கடுகடுப்பான முகத்துடன் பேச்சேதுமின்றி வேலையிலிருந்து திரும்பி வருகிற தந்தையையும், ஒவ்வொரு வார்த்தையாலும் அவரைச் சமாதானப் படுத்த முயல்கிற தாயாரையும் கண்டு தோட்டத்தின் ஓர் அத்துவானமான மூலைக்குச் சென்று அமைதியாக அழுது வந்த ஒரு சிறுமியை நான் அறிந்தேன். தந்தையின் மீது அநியாயமும் தாயாரின் மீது அனுதாப உணர்ச்சியும் கொள்கிற குழந்தையின் இதயம் வேதனைப்பட்டது...

குழந்தை அறிந்து கொள்கிற மனித உறவுகளின் முதலாவதான மேம்போக்கான அம்சங்களே இவை. தற்செயலாகச் சொல்லப்பட்ட ஒரு வார்த்தையிலிருந்தோ, தந்தைக்கும் தாயாருக்கும் இடையில் நடக்கும் சச்சரவிலிருந்தோ, தந்தையும் தாயும் ஒருவரை ஒருவர் நேசிப்பதில்லை என்றும், குழந்தை அவர்களைப் பிணைத்து நிற்கவில்லை என்றால் அவர்கள் பிரிந்து போய் விடக்கூடும் என்றும் அந்தச் சிறு குழந்தை அறிந்து கொண்டால் அவனது இதயம் என்ன பாடு படும்?

நீனுவும் சாஷாவும் சகோதரிகள்—இரட்டைக் குழந்தைகள். அவர்களைப் பள்ளிக்குக் கூட்டி வந்தார் தந்தை. பல குழந்தைகளைக் கொண்ட இந்தக் குடும்பத்திற்கும் (நீனுவையும் சாஷாவையும் தவிர இன்னும் நான்கு குழந்தைகள்) ஒரு துயரம் இருந்தது. கடுமையான நோயால் பாதிக்கப்பட்டு பல வருடங்களாக படுத்த படுக்கையாகக் கிடக்கிறாள் தாயார். தந்தைக்குக் கஷ்டமாயிருப்பதால் மூத்த சகோதரிகள் குடும்பத்தைப் பார்த்துக் கொள்கிறார்கள். உழைப்பு என்பது என்னவென்று நீனுவுக்கும் சாஷாவுக்கும் தெரியும். குடும்பத்தில் மகிழ்ச்சி என்பதே அவர்களுக்கு கொஞ்சம்தான். ஒரு சிறுவனிடம்

பச்சை ரப்பர் பந்து ஒன்று இருப்பது கண்டு சிறுமி களின் கண்களில் மகிழ்ச்சிச் சுடர் ஒளிர்ந்தது. பின் உடனே அச்சுடர் அணைந்து போயிற்று. அந்த ஆழமான வேதனை கண்டு எனக்கு தொண்டை அடைத்தது. இந்தக் குழந்தைகளுக்கு ஒளிமிகுந்த கலவரமற்ற இன் பத்தை எவ்வாறு தருவது? என்னுல் இது முடியுமா? பள்ளிக்கூடத்தில் சிறுமிகள் ஒரு மணி நேரத்துக்கு மேல் இருக்க மாட்டார்கள், அவர்கள் தனக்கு உதவி செய்ய வேண்டும் என்று என்னிடம் தந்தை நினைவூட்டுகிறுர்.

உயர்ந்து வளர்ந்த, கிளைகளடர்ந்த பேரி மரத்தின் கீழ் புல்தரையில் நாங்கள் உட்கார்ந்திருக்கிறேம். குழந்தை கள் போதனை எப்படி இருக்க வேண்டுமென்று நான் நினைக்கிறேன். குழந்தைகள் முன்னுல் என்ன பேசலாம் என்பது பற்றியெல்லாம் பெற்றேர்களுடன் நான் பேசிக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு குடும்பத்தையும் பீடித் துள்ள துயரமும் கவலையும் என் வாயிலிருந்து வரவில்லை. ஒவ்வொருவருக்கும் அவரவர் துன்பம். அதனை வெளி யில் எடுத்துச் சொல்வதும் மற்றவர்கள் இருக்கும் போது ஆலோசனைகள் வழங்குவதும், அடுத்தவர் மனத்தை வெளியில் இழுத்துப் போடுவதாயும், ஆழமான அந் தரங்க விஷயங்களைப் பகிரங்கப் படுத்துவதாயும் பொருள் படும். இதையெல்லாம் நான் தெரிந்து கொள்ள மட்டும் வேண்டும், பெற்றேர்கள் அனைவருக்கும் இது பற்றிச் சொல்லக் கூடாது. பெற்றேர்களது இதயத்தின் மிக அந்தரங்கமான பகுதியைப் பற்றிச் சொல்லியே ஆக வேண்டுமென்றுல், ஒவ்வொரு வார்த்தையையும் ஆயிரம் தடவை நினைத்துப் பார்த்து, நிறுத்துப் பார்த்து சொந்த உரையாடலில் மட்டும் சொல்ல வேண்டும். நான் சொல்லிக் கொண்டிருந்த தந்தையரின் தாயார்களின் இதயப் புண்கள், இன்னல்கள், வருத்தங்கள், கஷ்டங்கள், கவலை கள், துன்பங்கள் (எனது மாணவர்களின் பெற்றேர்களில் மிகப் பெரும்பான்மையோர் மிக நல்ல மனிதர்கள்) ரொம்பவும் தனிப் பட்டவையானதால் இவை பற்றிப் பொதுவான பேச்சு இருக்க முடியாது. என்னருகேயுள்ள

மனிதர்களிடமிருக்கும் நல்லதும் கெட்டதும் என் முன்னே சிக்கலான வலைப்பின்னலாய் மாறி மாறி விரிகையில், தமது குழந்தைகளுக்கு வேண்டுமென்றே தீய உதாரணம் தரக் கூடிய பெற்றோர்கள் இல்லை என்று நான் அறிந்து கொண்டேன்.

ஒரேயொரு குழந்தைக் குழு பற்றிப் பேசுகையில் இவ்வளவு துன்பமும் துயரமும் எங்கிருந்து வருகிறது என்று வாசகர் ஒருவேளை நினைக்கலாம். இவையெல்லாம் போர் விடுத்துச் சென்ற புண்களே என்பதை மறந்து விடக் கூடாது. போருக்குப் பிந்தைய முதலாண்டுகள் வெகு தொலைவுக்குச் சென்று விட்டன. அந்த நாட்களின் கொடிய இதயப் புண்கள் ஆறிக்கொண்டு வருகின்றன. 1944-1945 ஆண்டுகளின் வெற்றிக் கதிர்களின் கீழே தமது முதல் பாடத்தைத் துவக்கியவர்கள் இன்று வளர்ந்து தந்தையராயும், தாய்களாயும் விளங்குகிறார்கள். போருக்குப் பிந்திய நமது முதல் மாணவர்களின் குழந்தைகள் ரொம்ப காலமாகப் பள்ளியில் பயின்று வருகிறார்கள். அவர்களில் சிலர் வாலிபர்களாகியும் விட்டனர். இன்றைய இளம் குடும்பங்கள் எல்லாம் மகிழ்ச்சி நிரம்பியதாய் இருக்க வேண்டும் என்று தோன்றலாம். ஆனால் வாழ்க்கையில் அப்படியொன்றும் இல்லை. இன்னும்கூட துன்பங்கள், துயரங்கள், விபத்துக்கள் இருக்கத் தான் செய்கின்றன... அந்த ஆண்டுகளைப் பற்றிச் சொல்லுவதற்கு என்ன இருக்கிறது? பெற்றோர்களில் பெரும்பாலோர் அன்போடு, இணக்கமாக நல்ல குடும்ப வாழ்க்கை வாழ்ந்தனர், குழந்தைகளை நன்கு பயிற்றி வளர்த்தனர் என்பது எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது.

இதோ திடகாத்திரமான ஏழு வயது வான்யாவின் தந்தை, இவர் நல்ல உழைப்பாளி, விவசாய நிபுணர். நிலத்தை, மனிதர்களுக்கான உழைப்பை, மிகவும் நேசிப்பவர். தமது வீட்டுத் தோட்டத்தில் ஆண்டு தோறும் டஜன் கணக்கான ஆப்பிள், திராட்சை நாற்றுக்களைப் பயிராக்கி மக்களுக்கு அவற்றை வினியோகிக்கிறார். இவர் மனைவி பட்டுத் தயாரிப்புப் பகுதியில் மூத்த பணி

யாளராய் வேலை செய்கிறார். நல்ல பணியாளர், அன்பு நிறைந்தவர், இரக்க குணம் படைத்தவர், கனிவான இதயம் கொண்டவர், குடும்பத்தை நன்கு பேணுபவர். **1933-1934** ஆண்டுகளின் கஷ்டம் நிறைந்த நாட்களில் நான்கு அனாதைகளை இவர் தமது குடும்பத்தில் சேர்த்துக் கொண்டார். பட்டினிச் சாவிலிருந்து அவர்களைக் காப்பாற்றினார். சொந்தக் குழந்தைகளைப் போல் அவர்களை பயிற்றி வளர்த்தார். தமது தாய் என்றே இக்குழந்தைகள் இவரை அழைக்கின்றனர்.

அருமையாக அடர்ந்த, கருமையான சடை கொண்ட லூஸ்யாவின் தந்தை வெகு நேர்மையானவர், உண்மையானவர். அழகான மனம் படைத்தவர்கள் என்று சொல்லப்படுகிற மனிதர்கள் இருக்கிறார்கள். இவர்களில் பெரும்பாலோர் வீரச்செயல்கள் புரிவதில்லை. இவர்களது மன அழகு மனிதர்களுடன் பரஸ்பர உறவு கொண்டிருக்கிறது. நுண்ணுணர்வும் இரக்க குணமும் கொண்டிருக்க வேண்டும் என்று ஒருபோதும் லூஸ்யாவுக்கு அவள் தந்தை சொல்லியிருக்க மாட்டார். தனது நடத்தையாலும், மனைவியிடம் கொண்டிருக்கிற உறவாலும் நுண்ணுணர்வையும் மனிதத் தன்மையையும் குழந்தைகளுக்குக் கற்றுத் தருகிறார் இவர். லூஸ்யாவின் தாயாருக்கு இதய நோய். கூட்டுப் பண்ணையின் சர்க்கரைபீட் பயிர்ப் பிரிவில் அவர் பணியாற்றுகிறார். வீட்டு வேலையனைத்தையும் தந்தையே பார்த்துக் கொள்கிறார்.

காத்யாவின் தந்தையும் தாயும் தமது பழத்தோட்டத்தை குழந்தைகளின் ஒருவிதக் களிப்பாகவே மாற்றி விட்டனர். பக்கத்து வீடுகளிலிருந்து வருகிற குழந்தைகள், அவர்களது நான்கு குழந்தைகளுடன் வசந்த காலத் தொடக்கத்திலிருந்து இலையுதிர்கால முடிவு வரை இங்கு ஓய்வெடுத்துக் கொள்கிறார்கள், விளையாடுகிறார்கள், குழாய்களுக்கடியில் குளிக்கிறார்கள். சிறுவர்களுக்காக இங்கே ஒரு சிறு சதுக்கத்தில் விளையாட்டுப் பொருள்களை காத்யாவின் தந்தை நிறைத்து வைத்திருக்கிறார்.

தோட்டத்தில் விளைகின்ற பழங்களெல்லாம் குழந்தைகளின் கொண்டாட்டத்திற்கே.

எப்போதும் சிந்தனை வயப்பட்ட நீல நிறக் கண்களைக் கொண்ட சிறுமி சான்யாவின் பெற்றோர்கள் அன்பானவர்கள், அனுதாபம் மிக்கவர்கள். நகரத்திலிருந்து சிற்றப்பாவின் மூன்று பெண்களும் கோடைகாலம் முழுதும் இங்கு விருந்தினராக வந்திருப்பார்கள். உறவினர்கள் வருகைக்காக ஆவலோடு காத்திருப்பாள் சான்யா. அவள் அப்பா குழந்தைகள் குளிப்பதற்குக் குளத்தருகே வசதி செய்து தந்திருக்கிறார். இவர்களுக்கு இன்னொரு மகிழ்ச்சி தருவதற்காக இயந்திரப் படகு ஒன்று தயார் செய்து வருகிறார்.

லீதா ஒரு சிறந்த குடும்பத்திலிந்து நம்மிடம் வந்திருக்கிறாள். அவளது தந்தை ரயில்பெட்டித் தொழிற்சாலையில் ஒரு தொழிலாளி, இசைவாணர், பாடகர். பாடுவதற்கும், பிடில் வாசிப்பதற்கும் குழந்தைகளுக்குக் கற்றுத் தருகிறார் அவர். திடீர்க் கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்கிறார், சுமார் இருபது குழந்தைகளை அங்கு கூட்டுகிறார், அவர்கள் சங்கீதம் கேட்கிறார்கள், நாட்டுப் பாடல்கள் கற்றுக் கொள்கிறார்கள்.

பாவெலின் குடும்பம் நேசம் நிறைந்தது. பையனின் தாய் நான்கு ஆண்டுகளுக்கு மேலாகப் படுத்த படுக்கையாய் இருக்கிறாள். அவளது வீட்டு வேலைகளை தந்தையே செய்கிறார். பொருளுற்பத்திப் பணியில் ஈடுபடுவது மட்டுமின்றி, வீட்டு வேலைகள் அனைத்தையும் வேறு செய்கிறார்.

பழுப்பு நிறக் கண்கள் கொண்ட சிறுவனான செர்யோஷாவின் குடும்பத்தில் தந்தை, தாய், இரண்டு குழந்தைகள். ஒருவர் மீது ஒருவர் எல்லோரும் பிரியம் கொண்டவர்கள். விடுமுறை நாள் ஒன்று கிடைக்க வேண்டியது தான் குடும்பம் முழுதுமாகக் காட்டுக்குப் போய்விடுகிறது. காட்டில் ஓர் இடத்தில் நான்கு சிறு லைம் மரங்கள் நட்டார்கள். வீட்டருகே தாயாருக்கு, தந்தைக்கு, தாத்தாவுக்கு, பாட்டிக்கு என்று ஆளுக்கொரு ஆப்பிள்

மரம் நட்டார்கள். தந்தையையும், தாயையும், தாத்தாவையும், பாட்டியையும், இந்தக் குடும்பத்தில் ஏன் இப்படி குழந்தைகள் நேசிக்கிறார்கள் என்று நான் அடிக்கடி சிந்தித்ததுண்டு. குழந்தை இதயத்தில் விதைக்கப்பட்ட அன்பு தாயார் மீதும் தந்தையின் மீதும் நூறு மடங்கு வலிமையுடன் சுத்தமான அன்பாக வெளிப்படுகிறது போலும்.

தாய், தந்தை, பாட்டி, அக்கா, தம்பி ஆகியோர் லூபாவைப் பள்ளிக்குக் கூட்டி வந்தனர். சகோதர, சகோதரிகள் ஐவரும் இரு பாட்டிகளும் ஒரு தாத்தாவும் சிறுமிக்கு இருக்கிறார்கள். பரஸ்பர நம்பிக்கை, மரியாதை எனும் அடிப்படையில் கேள்விக்கிடமின்றி மூத்தோருக்குக் கீழ்ப்படிகின்ற மனப்பான்மை இக்குடும்பத்தில் நிலவுகிறது. குழந்தைகளுக்கு மரியாதை கொடுத்து, அவர்களது உணர்ச்சிகளுக்கு மதிப்பளிப்பதற்கு இக்குடும்பத்திலுள்ள மூத்தவர்களுக்கு எப்படி முடிகிறது என்பது பற்றி நான் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன்.

மக்களது நல்ல மரபுகள் மிகவும் சிறிய பையனை தன்கோவின் குடும்பத்தில் நிலவுகின்றன. தந்தையும் தாயும் வேலைக்குப் போயிருக்கும் போது 6, 8, 9 வயதான மூன்று குழந்தைகள் வீட்டைப் பார்த்துக் கொள்கின்றனர், மதிய உணவும் இரவு உணவும் குழந்தைகள் தயாரிக்கின்றனர், பசுவிடம் பால் கறக்கின்றனர், வீட்டுத் தோட்டத்திலுள்ள செடிகளைக் கவனித்துக் கொள்கின்றனர். கோடைகாலத்து மாலை வேளையில் தாயும் தந்தையும் வேலையிலிருந்து வீடு திரும்புகையில் குளிக்கத் தண்ணீரும், சுத்தமான உடைகளும், சூடான இரவு உணவும் அவர்களுக்குத் தயாராய் வைத்திருப்பார்கள். காட்டுப் பூக்கள் மேசையை அலங்கரிக்கும்.

குடும்பத்தில் உழைப்புக்கு ஒரு மதிப்பு தரப்படுகிறது. உழைப்பு வணங்கப்படுகிறது என்று சொல்லலாம். ஆனால் எந்தவிதமான ஆத்திர அவசரமும் அங்கு இருப்பதில்லை.

வால்யாவின் தந்தை இயந்திரம் கட்டும் தொழிற் சாலையில் கிரெமென்சூக் என்னும் நகரத்தில் வேலை செய் கிறார். தாய் கூட்டுப்பண்ணையில் பணி புரிகிறார். இந்த நட்புக் குடும்பத்தில் பெற்றோர்களும் சரி, மூன்று குழந்தை களும் சரி எல்லோருமே கல்வி கற்று வருகிறார்கள். அறிவுக்கும், பள்ளிக்கும், ஆசிரியருக்கும் மரியாதை தரும் மனப்பான்மை இந்த வீட்டில் நிலவுவது ஆசிரியர் களான எங்களுக்கு அக்கறையையும் மகிழ்ச்சியையும் தருகிறது. ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்திற்கு'' வால்யா வந்து சேர்ந்த போது இந்தக் குடும்பத்தின் வியப்புக்குரிய ஓர் அம்சம் வெளிப்பட்டது. வால்யாவின் சொந்தப் பாட்டி என்று எல்லோராலும் கருதப்பட்ட பெண்மணி ஓர் ''அன்னியப் பெண்'' என்று தெரிந் தது. உறவினர்கள் அவருக்கு யாருமில்லை. அவரது இரண்டு குமாரர்கள் போர்முனையில் கொல்லப்பட்டனர். வால்யாவின் குடும்பம் அவருக்குத் தஞ்சம் தந்தது. குழந்தைகளுக்கு அவர் சொந்தக்காரராகி விட்டார். வால்யாவுக்கு இந்த ''அன்னியப் பெண்மணி'' யார் என்று கூடத் தெரியாது.

சாம்பல் நிறத்து கண்கள் படைத்த சிறு லூதாவின் தாயும் தந்தையும் கூட்டுப் பண்ணையில் வேலை செய் கிறார்கள். நிலத்தில் செய்யப்படுகிற சாதாரணமான உழைப்புக்குப் பெரிய மரியாதை கொடுக்குமாறு குழந்தைகட்குப் பெற்றோர்கள் கற்றுக் கொடுத்திருக் கின்றனர். குடும்ப கௌரவம் இங்கு கோலோச்சுகிறது. ''மக்களுக்காக நாம் செய்கிற அனைத்தும் அழகு மிக்க தாய் இருக்க வேண்டும்'' என்று குழந்தைகளுக்குத் தந்தை சொல்லித் தருகிறார். கோடைகாலத்தில் மூத்த பையன்கள் தந்தையுடன் சேர்ந்து வயல்வெளி முகாமில் வேலை செய்கிறார்கள். லூதாவும் தாயுடன் மாதத்தில் சில முறை இவர்களைப் பார்த்து வரச் செல்வாள். இந்தப் பயணங்கள் சிறுமிக்கு ஓர் உண்மையான கொண் டாட்டமாய் இருக்கும்.

தான்யாவின் தாயும் தந்தையும் கூட்டுப் பண்ணையின்

கால்நடைப் பிரிவில் பணியாற்றுகிறார்கள். மகள்மார் இருவரும் பெற்றோர்கள் உழைக்கிற இடத்தில் கோடை காலத்தில் தங்குவார்கள். தந்தையும் தாயும் உழைப்பை நேசிக்குமாறு குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுத்திருக் கிறார்கள். இத்தகைய காட்சியைப் பல ஆசிரியர்கள் கண்டு ஆனந்தித்திருக்கிறார்கள். கால்நடைப் பிரிவில் அப்பா ஒரு சிறிய வேலி கட்டுவார். அதற்குள் ஆட்டுக் குட்டியை அல்லது கன்றுக் குட்டியை ஓட்டுவார். தான் யாவும் அவள் அக்காவும் பிராணிகளை அன்புடன் பேணு வார்கள். இது குழந்தைகள் விரும்பும் விளையாட்டு. இந்த விளையாட்டில் அம்மாவும் அப்பாவும் கூட ஈடுபட்டிருப்பதால் அவர்களுக்கு இன்னும் கவர்ச்சி நிறைந்ததாகிறது.

கனிவு நிறைந்த, ஆவல் ததும்பும் கரிய நிறக் கண் களைக் கொண்ட ஷ்ரோவின் தந்தை ரயில்வேயில் வேலை செய்கிறார். வாரத்திற்கு ஒரு நாள் வீட்டிற்கு வருவார். அப்பாவின் வருகை குழந்தை உள்ளத்தில் ஆழமான சுவடு பதித்துச் செல்கிற ஒரு நிகழ்ச்சியாக ஷ்ரோவுக் கும் அவனது தம்பி தங்கைகளுக்கும் மாறிற்று. அப்பா வின் வருகைக்காகப் பொறுமையிழந்து காத்திருப்பார் கள் குழந்தைகள். ஒவ்வொரு முறையும் அவர்களுக்கு ஏதாவது தருவார் அப்பா. அவரது பரிசுகள் தனித் தன்மை வாய்ந்ததால் இருக்கும். பிராணிகள், மனிதர் கள், கற்பனை மிருகங்கள் ஆகியவற்றின் உருவங்களை மரத்தில் செதுக்குவார் அவர். ஒவ்வொரு குழந்தைக்கும் இத்தகைய ஒரு மர பொம்மை கொண்டு வந்து தரு வார். அப்பா சொல்கிற கதைகளும் குழந்தைகளுக்குப் பெரு மகிழ்ச்சியைத் தரும். நல்ல மனிதர்களைக் கண்டுபிடிக்கிற பெருந் திறமை அவரிடமிருக்கும். நல்ல மனிதர்களைப் பற்றிய கதைகள், குழந்தைகட்கு உலகத் தை நோக்கி சாளரம் திறந்து விடுவது போல இருக்கும்.

வலோத்யாவின் தந்தை பாலம் கட்டுகிறவர். தாய் கூட்டுப்பண்ணையில் வேலை செய்கிறார். இளம் பெற்றோர் கள் தமது முதல் பையனை மிகவும் நேசிக்கிறார்கள்.

ஆனால் இந்த நேசம் அவ்வளவு அறிவு பூர்வமானதாய் இல்லை. வெட்டித்தனமான பொருள்களை நிறையப் பரிச ளிக்கிறார்கள் சிறுவனுக்கு. இவ்வாறு முரண்டு பிடிக் கும் சிறுவனைத் திருப்திப்படுத்த முயல்கிறார்கள். இதோ தாயினருகில் உட்கார்ந்திருக்கும் வலோத்யா இரண்டு ரப்பர் பந்துகளைக் கையில் பிடித்திருக்கிறான். அவன் அம்மாவிடம் ஏதோ சொல்ல விரும்புகிறான். அவளோ அவனைக் கவனிக்கவில்லை. பையன் உதட்டைப் பிதுக்கிக் கொண்டு அழத் தொடங்கி விட்டான்.

பழுப்பு நிறமாய், ஒல்லியாய், மெல்லிய தண்டு போன்றவள் வார்யா. கரிய நிறக் கண்களும் சுருள் முடியும் கொண்டவள். தாயார் எண்ணெய் ஆலையில் தரை பெருக்குபவளாகப் பணியாற்றுகிறார். போர் முனையில் காயம்பட்டு கடுமையாக நோய்வாய்ப் பட்டிருக்கிறார் தந்தை. உறவினர்கள் அனைவரும் அவருக்குப் பணிவிடை செய்கிறார்கள். ஆயினும் அவரது உடல்நிலை இன்னும் சீராகவில்லை. கடுமையான வேலைப்பளு தாயாரின் தோள்களிலே வீழ்ந்திருக்கிறது என்று உணர்கிற மூன்று குழந்தைகளும், தமது சக்தியனைத்தையும் பிர யோகித்து அவளது வாழ்க்கையை எளிதாக்க முயல் கின்றனர். தாயார் பெறுகிற சம்பளமோ குறைவானது. மாலைநேரங்களில் சட்டைகளிலும் துண்டுகளிலும் பூ வேலை செய்வதன் மூலம் கணவனது மருத்துவத்துக்கு வேண்டிய அதிகப் படியான பணம் சம்பாதிக்கிறார். வார்யாவின் அக்கா பூ வேலை செய்யக் கற்றுக் கொண் டாள். தாயாருக்கு உதவுகிறாள். வார்யாவும் பூ வேலை செய்யக் கற்று வருகிறாள்.

பெற்றோர்களது ஒழுக்க வாழ்வின் கண்ணாடியே குழந்தை. ஒவ்வொரு குடும்பத்திலும் உள்ள நல்லது கெட்டது பற்றி நான் சிந்தித்தேன். விசேஷமான முயற்சி கள் இல்லாமல் குழந்தைகளுக்குத் தரப்படுகிற, நல்ல பெற்றோர்களின் மதிப்பு வாய்ந்த ஒழுக்க அம்சம் என்ன வென்றால், தாய் தந்தையரின் மனம் நிறைந்த அன்பும், மனிதர்களுக்கு நல்லது செய்ய முடிவதுமே ஆகும்.

தமது மனத்தின் ஒரு துகளை மற்றவர்களுக்குக் கொடுக்கிற, மனிதர்களின் இன்ப துன்பங்களைத் தம்முடையவையாக ஏற்றுக் கொள்கிற பெற்றோர்கள் உள்ள குடும்பத்தில் குழந்தைகள் அன்பு நிறைந்தவர்களாயும், மென்மையானவர்களாயும், கனிவு மிக்கவர்களாயும் வளர்கிறார்கள். சில பெற்றோர்களிடம் காணப்படும் தன்னலமும், தன்னிச்சைப் போக்குமே மிகப் பெரும் தீமையாகும். இந்தத் தீமை, வலோத்யாவின் பெற்றோர்களிடம் காணப்படுவது போல குருட்டுத்தனமான, இயல்பூக்க அன்பாக தமது குழந்தையின் மீது அவ்வப்போது வெளிப்படும். தமது இதயத்தின் சக்திகள் அனைத்தையும் பெற்றோர்கள் குழந்தைகளுக்குத் தந்து விடுவதானால், குழந்தைகளுக்கு அப்பால் வேறு மனிதர்களையே அவர்கள் காணவில்லை என்றால், மட்டு மீறிய இந்த அன்பு இறுதியில் துன்பத்தைக் கொண்டு வரும்.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தை'' நான் எப்படிக் காண்கிறேன் என்பது பற்றிப் பெற்றோர்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்த நான் இது குறித்துச் சிந்தித்தேன். இது மிகவும் கஷ்டமானதொரு உரையாடலாய் இருந்தது. பெற்றோர்களை நோக்கிச் சொல்கிற ஒவ்வொரு வார்த்தையும், குடும்பங்களில் இருக்கிற நல்லது, கெட்டது யாவற்றையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' கோலோச்சப் போகிற நேர்மை, உண்மை, பரஸ்பர நம்பிக்கை ஆகியவை பற்றி நான் சொல்லிக் கொண்டிருக்கையில் கோல்யாவின் குடும்பத்தைப் பற்றிய சிந்தனை என்னை அலக்கழித்தது. இந்தக் குடும்பத்தில் நிலவுகிற தீமையையும், நேர்மையின்மையையும் எல்லாப் பெற்றோர்களுக்கும் சொல்லக் கூடாது. அவ்வாறு சொன்னால் அது பள்ளியிலிருந்து தாயாரை உந்தித் தள்ளி விடக் கூடும். மீண்டும் அவள் பள்ளிக்கு வருவது அபூர்வமே. இங்கு தேவையானது வேறு ஏதோ ஒன்று. அது என்ன என்பது பற்றி நான் நீண்ட காலம் யோசித்தேன். ஆனால் இந்தச் சிக்கலான கேள்விக்கு என்னால் விடை காண முடியவில்லை.

குழந்தைப் போதனையின் எதிர்காலம் பற்றி பெற்ருேர்களுக்கு எடுத்துச் சொன்னேன். இன்று பள்ளிக்கு ஆறு வயதுப் பாலகர்களாக வந்துள்ள சிறுவர்கள் 12 ஆண்டுகள் கழித்து வளர்ச்சியடைந்த மனிதர்களாக, எதிர்காலத் தாய் தந்தையராக விளங்குவர். தேச பக்தர்களாக, பிறந்த மண்ணையும் உழைக்கும் மக்களையும் மிகவும் நேசிப்பவர்களாக, நேர்மையானவர்களாக, உண்மையானவர்களாக, உழைப்பை நாடுபவர்களாக, அன்பு நிறைந்தவர்களாக, கனிவுள்ளவர்களாக, இரக்க குணம் படைத்தவர்களாக, பொய்யையும் தீமையையும் வெறுப்பவர்களாக, கஷ்டங்களைக் கடப்பதில் வீரம் மிகுந்தவர்களாக, விடாப் பிடியானவர்களாக, அடக்கமானவர்களாக, அழகு மிக்க ஒழுக்கத்தவராக, ஆரோக்கியமானவர்களாக, உடலுறுதி வாய்ந்தவர்களாக குழந்தைகள் விளங்குவதற்காக பள்ளிக் குழு தம்மாலான அனைத்தையும் செய்யும். தெளிவான பகுத்தறிவும் பெருந்தன்மை கொண்ட இதயமும், தங்கக் கைகளும், உயர்வான உணர்ச்சிகளும் கொண்டவர்களாய் குழந்தைகள் மாற வேண்டும். குழந்தை ஒரு குடும்பத்தின் கண்ணுடி. சொட்டுத் தண்ணீரில் சூரியன் பிரதிபலிப்பது போல, குழந்தைகளிடம் தாய், தந்தையரின் ஒழுக்கச் சுத்தம் பிரதிபலிக்கிறது. ஒவ்வொரு குழந்தைக்கும் இன்பத்தை வழங்குவதுதான் பள்ளியின், பெற்ருேர்களின் கடமையாகும். இன்பம் பலவகைப்படும். தனது திறமைகளை மனிதன் வெளிப்படுத்துவதும், உழைப்பை நேசித்து உழைப்பில் படைப்பாளியாகத் திகழ்வதும், சுற்றியுள்ள உலகின் அழகில் மயங்குவதும் மற்றவர்களுக்காக அழகைப் படைப்பதும், அடுத்த மனிதனை நேசிப்பதும் தான் நேசிக்கப்படுவதும், குழந்தைகளை உண்மையான மனிதர்களாக வளர்ப்பதும் ஆகிய அனைத்துமே இன்பமாகும். பெற்ருேர்களுடன் சேர்ந்து, கூட்டு முயற்சிகள் மேற்கொள்வதால் மட்டுமே ஆசிரியர்கள் குழந்தைகளுக்கு நிறைய மனித இன்பத்தை வழங்க முடியும். குழந்தைகளும் பெற்ருேர்களும் வீட்டுக்குப் போகிருர்

கள். நான் அவர்களுக்கு நினைவுபடுத்துகிறேன்: ''நாளை ஆகஸ்டு முப்பத்தி ஒன்று. நமது 'மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடம்' வாழ்க்கை தொடங்குகிறது.''[1]

இந்த நாள் எனக்கு என்ன தரும்? இன்று குழந்தைகள் தமது தாயின் கை பிடித்து நிற்கிறார்கள். நாளை அவர்கள் தனியாக வருவார்கள். ஒவ்வொருவருக்கும் அவரவர் மகிழ்ச்சிகள். பிரகாசமான காலை நேரம். ஒவ்வொருவர் முன்னும் முடிவற்ற வாழ்க்கை. இதற்கு முதல் நாள் குழந்தைகளின் மகிழ்ச்சிகளை பள்ளிக்கூடம் கெடுத்து விடக் கூடாதே என்று நான் கவலைப்பட்டேன். குழந்தைகளின் முன்னே புதிய புதிய மகிழ்ச்சிகள் வெளிப்படுமாறு, உலகை அறிவது சலிப்பான கல்வியாக மாறிவிடாதிருக்குமாறு பள்ளியுலகுக்குள் குழந்தைகளை அழைத்துச் செல்ல வேண்டும். இதோடு கூடவே முடிவற்ற, வெளிக் கவர்ச்சி கொண்ட, வெறும் விளையாட்டாக பள்ளிக்கூடம் மாறிவிடாதிருக்கவும் வேண்டும். குழந்தைகளின் பகுத்தறிவும், உணர்ச்சிகளும், சித்தமும் ஒவ்வொரு நாளும் வளமைப்பட வேண்டும்.

## நீல வானத்துக்குக் கீழே ஒரு பள்ளிக்கூடம்

ஓர் உள்ளக்கிளர்ச்சியுடன் சிறுவர்களுக்காக நான் காத்திருந்தேன். காலை எட்டு மணிக்கு 29 மாணவர்கள் வந்தனர். சாஷா வரவில்லை (ஒருவேளை தாயாருக்கு உடல் நலமில்லையோ என்னவோ). வலோத்யாவைக் காணோம். தூங்குகிறான் போலும். பையனை எழுப்ப அம்மாவுக்கு விருப்பமில்லையோ?

அனேகமாக குழந்தைகள் அனைவரும் பண்டிகை உடை தரித்து புதுப் பூட்சுகள் அணிந்திருந்தனர். இது எனக்குக் கவலை தந்தது. கிராமத்துக் குழந்தைகள் வெப்ப நாட்களில் வெறுங் காலுடன் நடக்கப் பழகி

[1] சோவியத் யூனியனில் கல்வி ஆண்டு செப்டம்பர் முதல் தேதி தொடங்குகிறது.

யிருந்தனர். உடலுக்கு உறுதி ஏற்ற இது ஒரு நல்ல முறை, சளிப் பிடிக்காமல் இருப்பதற்கு மிகச் சிறந்த வழி. நிலத்திலிருந்தும், காலைப் பனியிலிருந்தும், சூரியனுல் சூடேற்றப்பட்ட பூமியிலிருந்தும் குழந்தையின் கால்களைக் காப்பாற்றுவதற்குப் பெற்ருேர்கள் விரும்புவது ஏன்? அன்புத் தூண்டல்களால்தான் இவ்வாறெல்லாம் செய்கிருர்கள். விளைவோ கெடுதியாய் இருக்கிறது. பனிக் காலத்தில் காய்ச்சலாலும், தொண்டை அழற்சியாலும், கக்குவானுலும் கிராமக் குழந்தைகள் பீடிக்கப் படுவது ஆண்டுக்கு ஆண்டு அதிகரித்து வருகிறது. வெய்யிலுக்கும் குளிருக்கும் அச்சப்படாத வகையில் குழந்தைகளை வளர்க்க வேண்டும்.

''குழந்தைகளே, பள்ளிக்குப் போவோம் வாருங்கள்'' என்று சிறுவர்களிடம் சொல்லிவிட்டு தோட்டத்தை நோக்கி நடந்தேன் நான். குழந்தைகள் ஒரு திகைப்புடன் என்னைப் பார்த்தார்கள்.

''ஆமாம் குழந்தைகளே, நாம் பள்ளிக்குப் போகிருேம். நீல வானத்துக்கு அடியில், பசும் புல்லில், கிளைகளடர்ந்த பேரி மரத்தடியில், திராட்சைத் தோட்டத்தில், பசும் புல்வெளியில் நமது பள்ளிக்கூடம் நடக்கும். இங்கு பூட்சுகளைக் கழட்டி விட்டு, உங்களுக்குப் பழக்கமானபடி வெறுங்காலுடன் நடப்போம்''. குழந்தைகள் மகிழ்ச்சியால் ஆரவாரித்தார்கள். வெய்யில் காலத்தில் பூட்சுகளுடன் நடப்பது அவர்களுக்கு திடீர்ப் பழக்கமாகவும் வசதிக் குறைவாயும் இருந்தது. ''நாளை வெறுங் காலுடன் வாருங்கள். நமது பள்ளிக்கூடத்துக்கு இது மிகவும் ஏற்றது.

திராட்சைக் கொடிகளடர்ந்த சாலை வழியே நாங்கள் போனேும். மரங்களால் போர்த்தப்பட்ட அமைதியான ஒரு மூலையில் திராட்சைக் கொடிகள் வளர்ந்திருந்தன. கம்பிகளால் இடப்பட்ட பந்தலில் படர்ந்திருந்த திராட்சைக் கொடிகள் பசிய குடிசை ஒன்றையே உருவாக்கியிருந்தன. இந்தக் குடிசைக்குள் மென்மையான புற்களால் மூடப்படிருந்தது பூமி. இங்கு அமைதி

கோலோச்சியது. இந்தப் பசிய நிழலிலிருந்து பார்க்கையில் உலகமே பசுமையாய்த் தெரிந்தது. புல்லின் மீது நாங்கள் உட்கார்ந்தோம்.

''இங்குதான் நமது பள்ளிக்கூடம் தொடங்குகிறது. நீல வானத்தையும், தோட்டத்தையும், கிராமத்தையும், சூரியனையும் இங்கிருந்து பார்ப்போம்.''

இயற்கை அழகில் மயங்கிப் போய் அமைதியாய் இருந்தனர் குழந்தைகள். இலைகளுக்கிடையில் பழுத்த திராட்சைக் கொத்துக்கள் மஞ்சளாய்க் கொத்துக் கொத்தாய்த் தொங்கின. சுவை மிகுந்த சிறு பழங்களைச் சுவைத்துப் பார்க்க விரும்பினர் குழந்தைகள். அப்படியும் செய்வோம். ஆனல், முதலில் இயற்கை அழகைக் கண்டு களிப்போம். குழந்தைகள் சுற்றிச் சுற்றிப் பார்க்கின்றனர். தேவதைக் கதைகளில் வருகிற தண்ணீருக்கடியிலுள்ள உலகம் போல, பசிய மூட்டத்தால் போர்த்தப் பட்ட ஒரு தோட்டம் அங்கு காட்சியளிக்கிறது. பூமியின் மேற்பரப்பு—வயல்கள், புல்வெளிகள், சாலைகள்—மெலெகைத் (malachite) மூட்டத்தில் ஆடுவது போல ஒளி பாய்கின்ற மரங்களின் மீது சூரியத் தீப்பொறிகள் பட்டுச் சிதறுகின்றன.

''சூரியன் தீப்பொறிகளைச் சிதறுகிறன்'', மெதுவாகச் சொன்னுள் காத்யா.

அவர்களைக் கவர்ந்திழுத்த உலகத்திலிருந்து குழந்தைகள் விடுபட்டு வர முடியவில்லை. நானே சூரியனைப் பற்றி ஒரு கற்பனைக் கதை சொல்ல ஆரம்பித்தேன்.

''ஆமாம் குழந்தைகளே காத்யா சரியாகத்தான் சொன்னுள். சூரியன் தீப்பொறிகளைச் சிதறுகிறன். அவன் வானத்தின் உயரத்தில் வாழ்கிறன். அவனிடம் இரண்டு ராட்சசக் கொல்லர்களும் தங்கப் பட்டடைக் கல்லும் இருக்கின்றன. பொழுது புலர்வதற்கு முன்பு நெருப்புத் தாடிகளுடன் அந்தக் கொல்லர்கள் சூரியனிடம் போவார்கள். சூரியன் அவர்களுக்கு வெள்ளி நூலின் இரண்டு கொத்தை தருவான். கொல்லர்கள் இரும்புச் சுத்தியல்கள் எடுத்துக் கொள்வார்கள். தங்கப் பட்டடைக்

கல்லின் மீது வெள்ளி நூலை வைத்து அடிப்பார்கள், அடிப் பார்கள், அடித்துக் கொண்டே இருப்பார்கள். சூரிய னுக்கு வெள்ளிப் பூமாலை தயார் செய்கிறார்கள். சுத் தியல்களின் கீழிருந்துதான் வெள்ளித் தீப்பொறிகள் உலகம் முழுதும் சிதறுகின்றன. பூமியின் மீதும் இந்தீப் பொறிகள் விழுகின்றன. அவற்றைத்தான் நீங்கள் பார்க் கிறீர்கள். மாலை நேரத்தில் களைப்படைந்த கொல்லர் கள் சூரியனிடம் பூமாலையைக் கொண்டு போவார்கள். அவன் தனது தங்கச் சடைகளில் மாலையை அணிந்து கொள்வான். பின்பு தனது மந்திரத் தோட்டத்துக்கு ஓய்வெடுத்துக் கொள்ளச் செல்வான்.''

நான் கதை சொல்லும் போதே அதைச் சித்திர மாகவும் தீட்டினேன். ஒரு வெள்ளைக் காகிதத்தில் கற்பனு உருவங்கள் தோன்றின: தங்கப் பட்டடைக் கல்லுக் கருகில் இரண்டு ராட்சசக் கொல்லர்கள். இரும்புச் சுத்தியல்களுக்கடியிலிருந்து வெள்ளித் தீப்பொறிகள் சிதறுகின்றன.

மந்திர உலகத்தால் மயக்கப்பட்டு கதை கேட்கிறார் கள் குழந்தைகள். அமைதியைக் கலைத்து விடுவோமோ, மயக்கம் தெளிந்து விடுமோ என்று அவர்கள் அஞ்சுவது போலிருந்தது. பின்னர் திடுமென்று அவர்கள் கேள்வி களைப் பொழிகிறார்கள்: ராட்சசக் கொல்லர்கள் இரவில் என்ன செய்வார்கள்? ஒவ்வொரு தடவையும் சூரிய னுக்குப் புதிய மாலை எதற்கு? ஒவ்வொரு நாளும் பூமி யின் மீது தீப்பொறிகள் உமிழப்படுகின்றன என்றால் அவை எங்கே போய் விடுகின்றன?

அன்பான குழந்தைகளே, இது பற்றியெல்லாம் நான் உங்களுக்குச் சொல்லுகிறேன். நமக்கு இன்னும் நிறைய நேரம் கிடைக்கும். இன்று உங்களுக்குத் திராட்சைப் பழங்கள் தருகிறேன். திராட்சைக் கொத்துக்களால் கூடை நிறையும் வரை குழந்தைகள் ஆவலோடு காத் திருக்கின்றனர். ஆளுக்கு இரண்டு கொத்துப் பழம் தரு கிறேன் நான். ஒன்றைத் தின்று விடலாம் என்றும், மற்றதை அம்மாவிற்குக் கொண்டு போய்க் கொடுக்க

வேண்டுமென்றும் நான் ஆலோசனை கூறுகிறேன். அம்மா வும் பழத்தைத் தின்று பார்க்கட்டும். குழந்தைகள் வியப்புக்குரிய பொறுமையைக் கடைப்பிடிக்கின்றனர். திராட்சைக் கொத்தைக் காகிதத்தில் சுற்றுகிறார்கள். எனக் கொரு சிந்தனை வந்தது: பள்ளியிலிருந்து வீடு போகிற வரை இந்தப் பொறுமை அப்படியே இருக்குமா? தோல் யாவும் கோல்யாவும் தத்தமது தாய்க்குத் திராட்சைக் கொத்து கொண்டு போய்த் தருவார்களா? நீனாவுக்கு அதிமாகச் சில பழக் கொத்துக்களைத் தருகிறேன்: நோய்ப்பட்ட அம்மாவுக்கு, தங்கைக்கு, பாட்டிக்கு. வார்யா அப்பாவுக்காக மூன்று கொத்துகள் எடுத்துக் கொள்கிறாள். குழந்தைகளுக்குப் போதுமான சக்தி கிட்டியவுடன் ஒவ்வொரு குழந்தையும் தனது திராட் சைத் தோட்டத்தை உருவாக்கும் என்ற எண்ணம் தோன்றுகிறது... வார்யாவுக்கோ இந்த இலையுதிர் காலத்திலேயே டஜன்கணக்கான நாற்றுக்களை நட்டுவிட வேண்டும். அவை அடுத்த ஆண்டே பழம் தர வேண்டும். இது அப்பாவுக்கு நல்ல மருந்தாகும்...

மாயா உலகத்துப் பசிய நிழலிலிருந்து நாங்கள் வெளியே வந்தோம். நான் குழந்தைகளிடம் சொல்லு கிறேன்:

''நாளைக்கு, மாலை தொடங்குவதற்கு முன்னாலேயே, ஆறு மணிக்கு வந்து விடுங்கள். மறந்து விடாதீர்கள்.''

குழந்தைகளுக்கு வெளியே போகவே மனதில்லை என்று நான் காண்கிறேன். ஆயினும், வெள்ளைப் பொட்ட லங்களை மார்புறத் தழுவியபடி அவர்கள் கலைந்து செல்கிறார்கள். இவர்களில் யார் யார் திராட்சையை வீட்டுக்குக் கொண்டு போகாமலிருப்பர் என்று தெரிந்து கொள்ள எனக்கு எவ்வளவு ஆவலாய் இருக்கிறது! ஆனால், இது பற்றிக் குழந்தைகளிடம் கேட்கக் கூடாது. அவர்களில் யாராவது தானாகச் சொன்னால் நல்லது.

நீலவானத்துக்கடியில் பள்ளியின் முதல் நாள் முடிந் தது... சூரியனின் வெள்ளித் தீப்பொறிகள் அன்றிரவு என் கனவில் வந்தன. அதிகாலையில் எழுந்தவுடன் அடுத்து

என்ன செய்வது என்பது குறித்து நீண்ட நேரம் யோசித்தேன். எந்த நாளில் குழந்தைகட்கு என்ன சொல்லப் போகிறேன், அவர்களை எங்கே கூட்டிச் செல்வேன் என்பது குறித்து விவரமான திட்டம் எதையும் நான் தயாரிக்கவில்லை. தனது இயல்பில் குழந்தை ஆர்வமான ஓர் ஆய்வாளன், உலகத்தைக் கண்டுபிடிப்பவன் என்கிற, எனக்கு உத்வேகமூட்டிய ஒரு கருத்தின்படி எங்கள் பள்ளி வாழ்க்கை தொடர்ந்தது. உயிருள்ள வண்ணங்களில், தெளிவான, படபடப்பான சத்தங்களில், கற்பனைக் கதையில், விளையாட்டில், தனது சொந்தப் படைப்பில், இதயத்திற்கு உற்சாகமூட்டும் அழகில், மனிதர்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்கிற ஆவலில் அவன் முன் அற்புத உலகம் விரியட்டும். கதை, கற்பனை, விளையாட்டு, அபூர்வமான குழந்தைப் படைப்பு ஆகியவை மூலமே குழந்தையின் இதயத்திற்கான சரியான வழி கிடைக்கிறது. சுற்றியுள்ள உலகத்தில் தினந்தோறும் அவர்கள் புதிது புதிதாக ஏதாவது கண்டுபிடிக்கிற வகையில், எங்களது ஒவ்வொரு எட்டும் சிந்தனைத் திறமையின், பேச்சின் ஊற்றுக்கண்களுக்கான இயற்கையின் அற்புத அழகுக்கான பயணமாக இருக்கும் வகையில் அந்தச் சுற்றியுள்ள உலகத்திற்குக் குழந்தைகளை நான் அழைத்துச் செல்வேன். புத்திசாலிச் சிந்தனையாளனாகவும் ஆராய்ச்சியாளனாகவும் எனது வளர்ப்புச் சிறுவன் ஒவ்வொருவனும் வளருகின்ற முறையில், உலக அறிவின் ஒவ்வொரு எட்டும் அவனது இதயத்தை மேன்மைப்படுத்தி, சித்தத்தை உறுதிப்படுத்துகின்ற விதத்தில் நான் அவர்களைப் பேணுவேன்.

மாலை நேரத்துக்கு முந்தியே, குழந்தைகள் இரண்டாம் நாளன்று பள்ளிக்கு வந்து விட்டனர். செப்டம்பர் மாதத்து அமைதியான நாள் முடிந்தது. கிராமத்திலிருந்து வெளியேறி ஓர் உயர்ந்த மண்மேடு மீது நாங்கள் முகாமிட்டோம். கதிரவனுக்கடியில் கனன்று கொண்டிருக்கும் பரந்த புல்வெளியையும், வடிவமைந்த பாப்ளார் மரங்களையும், தொடுவானத்தில் தொலைவில் தெரி

யும் மண்மேடுகளையும் கொண்ட ஓர் அற்புதக் காட்சியை அங்கு கண்டோம். சிந்தனைக்கும், வார்த்தைக்கும் ஊற்றுக் கண்ணாய்த் திகழ்கின்ற ஓர் இடத்துக்கு நாங்கள் வந்து விட்டோம். கதையும் கற்பனையும் இந்த ஊற்றுக்கண் களைத் திறக்கும் திறவுகோல்கள், ஊக்கமுள்ள ஊற்றுக் கண்களாக அவை பீறிடும். ''சூரியன் தீப்பொறிகளைச் சிதறுகிறான்...'' என்று காத்யா நேற்று சொன்னது நினைவுக்கு வந்தது. பல ஆண்டுகள் முன் நடந்து செல் கிறேன். 12 ஆண்டுகள் கழித்து பள்ளி முடிக்கையில் காத்யா எழுதிய பிறந்தமண் பற்றிய கட்டுரையில் இயற்கையின் மீது தான் கொண்டுள்ள காதலை வெளிப் படுத்தி இந்த உருவத்தை மீண்டும் அவள் எடுத்துச் சொன்னாள். குழந்தைச் சிந்தனையில் கற்பனை உருவத் தின் வல்லமை இத்தகையது. கற்பனை உருவங்களாலான சுற்றியுள்ள உலகத்திற்குள் குடியேறுகையில், இந்த உருவங்களைப் படைக்கையில் குழந்தைகள் அழகை மட் டும் வெளிப்படுத்துவதில்லை, உண்மையையே வெளிப் படுத்துகிறார்கள். கட்டுக் கதைகளின்றி கற்பனையின் விளையாட்டின்றி குழந்தை உயிர்வாழ முடியாது. சுற்றி யுள்ள உலகம் கட்டுக் கதையின்றி அழகான சித்திர மாய், துணியில் வரைந்த சித்திரமாய் மாறும். கட்டுக் கதையோ இச்சித்திரத்திற்கு உயிரூட்டுகிறது.

உருவகமாகச் சொல்வதென்றால், கட்டுக்கதை என் பது குழந்தைச் சிந்தனையின், பேச்சில் தீ ஊதி விடுகிற சுத்தமான காற்றாகும். கட்டுகதைகளைக் குழந்கைள் கவன மாய்க் கேட்டது மட்டுமின்றி, அவற்றை உருவாக்க வும் செய்கிறார்கள். திராட்சை இலைகளாலான பசிய சுவர்களினூடே குழந்தைகட்கு உலகத்தைக் காட்டுகை யில், அவர்களுக்கு ஒரு கட்டுக்கதை சொல்கிறேன் என்று அறிந்தேன், ஆனால் எத்தகைய கதை அது என்று கருத வில்லை. எனது கற்பனை சிறகடித்துப் பறக்கத் துணை புரிந்தது காத்யாவின் வார்த்தைகளே: ''சூரியன் தீப் பொறிகளைச் சிதறுகிறான்...'' எத்தகைய உண்மையான, துல்லியமான, கலைக்குரியதான பொருள்வளமுள்ள உரு

வங்களைப் படைக்கிறார்கள் குழந்தைகள்! அவர்களது மொழி எவ்வளவு துலக்கமானதாயும் பிரகாசமானதாயும், பொருள் நிரம்பியதாயும் இருக்கிறது!

புத்தகத்தைத் திறந்து முதல் வார்த்தையை அசை கூட்டிப் படிப்பதற்கு முன்னால், மிக அற்புதமான புத்தகமான இயற்கை எனும் புத்தகத்தின் பக்கங்களைக் குழந்தைகள் புரட்டிப் படிக்க வேண்டும் என்று முயன்றேன்.

இங்கே இயற்கையின் நடுவில் மிகவும் தெளிவாகவும் பிரகாசமாகவும் இருந்தது சிந்தனை: இயற்கையிலேயே மிகவும் மென்மையான, மிக நுண்ணிய, மிகக் கூர்மையான பொருளான குழந்தையின் மூளையுடன் ஆசிரியர்களாகிய நாம் காரியமாற்றுகிறோம். குழந்தையின் மூளையைப் பற்றி நினைத்துப் பார்க்கையில் அசைந்தாடும் பனித்துளி கொண்ட ஒரு மென்மையான ரோஜாப் பூவாக அது காட்சியளிக்கிறது. மலரைப் பறிக்கையில் பனித்துளியைக் கொட்டி விடாமலிருக்க வேண்டுமானால் எவ்வளவு எச்சரிக்கையாயும் மென்மையாயும் இருக்க வேண்டும். இத்தகைய எச்சரிக்கைதான் நமக்கு ஒவ்வொரு நிமிடமும் வேண்டும்: இயற்கையிலிருக்கும் மிக நுண்ணிய மிக மென்மையான பொருளான, வளருகின்ற உயிரின் சிந்தனை செய்கிற பொருளையல்லவா நாம் தொடுகிறோம்.

குழந்தை உருவங்களாகச் சிந்திக்கிறது. உதாரணமாக சொட்டுத் தண்ணீர் பயணம் போவது பற்றி ஆசிரியர் சொல்கையில், காலைநேர மூட்டத்தின் வெள்ளி அலைகளையும் கரிய மேகத்தையும், இடி இடிப்பதையும், வசந்த கால மழையையும் தனது கற்பனையில் சித்திரமாய் வரைந்து கொள்கிறது குழந்தை என்று இதற்குப் பொருள். அவனது கற்பனையில் எவ்வளவுக்கு எவ்வளவு இந்தச் சித்திரங்கள் பிரகாசமாய் இருக்கின்றனவோ, அவ்வளவுக்கு அவ்வளவு அவன் இயற்கை விதிகளை ஆழமாகப் புரிந்து கொள்கிறான். அவனது மூளையின் நுண்ணிய, மெல்லிய நியூரான்கள் (neurons) இன்னும்

வலுவடையவில்லை, அவற்றை வளர்க்க வேண்டும், வலிமையாக்க வேண்டும்.

குழந்தை சிந்திக்கிறான்... அதாவது, மூளைப் புறணியின் குறிப்பிட்ட நியூரான்கள் (neurons) சுற்றியுள்ள உலகத்தின் உருவங்களை (சித்திரங்கள், பொருள்கள், தோற்றங்கள், வார்த்தைகள் ஆகியவற்றை) ஏற்றுக் கொள்கின்றன. மிக மெல்லிய நரம்புச் செல்களின் மூலம்—தகவல் தொடர்புக் கம்பி வழியாகச் செல்வது போல—அடையாளக் குறிகள் செல்கின்றன. இந்தத் தகவலை நியூரான்கள் (neurons) ''செம்மைப் படுத்துகின்றன'', முறைப்படுத்துகின்றன, பகுதிகளாகப் பிரிக்கின்றன, ஒப்பிட்டுப் பார்க்கின்றன. இதற்குள் புதிய தகவல் வந்து சேருகிறது. மீண்டும் மீண்டும் அதனை ஏற்றுக் கொண்டு ''செம்மைப்படுத்த'' வேண்டும். வந்து சேருகின்ற புதிய புதிய உருவங்களை ஏற்றுக்கொள்வதற்காகவும், தகவல்களைச் ''செம்மைப் படுத்துவதற்காகவும்'', நியூரான்களின் (neurons) சக்தி மிகச் சிறிய அளவு நேரத்துக்குள் மின்னல் வேகத்தில் உருவங்களை ஏற்றுக் கொள்வதிலிருந்து அவற்றைச் ''செம்மைப் படுத்துவதற்கு'' மாறுகிறது.

நரம்பினது ஆற்றலின் அற்புத வேகமான வேலை மாற்றத்தைத்தான் நாம் சிந்தனை என்று அழைக்கிறோம். குழந்தை சிந்திக்கிறது... குழந்தை மூளையின் உயிரணுக்கள் மிகவும் மென்மையானவை. புலனறிவில் படுகின்ற பொருள்களுக்கு இவை மிக நுண்மையாக பதிலிறுக்கின்றன. புலனறிவில் படுகின்ற, சிந்தனை செய்யப்படுகிற பொருள் கண்ணால் காணத் தக்க, காதால் கேட்கத் தக்க, உடலால் தொட்டுணரத் தக்க உருவகமாக இருந்தால்தான் இந்த உயிரணுக்கள் சாதாரணமாய் வேலை செய்யும். கண்ணுக்கு முன்னால் இருக்கிற, உண்மையான உருவமாய், அல்லது வார்த்தைகளால் உருவாக்கப்பட்ட பிரகாசமான உருவமாய் குழந்தை கண்ணால் காண்பது போலவோ, காதால் கேட்பது போலவோ, உடலால் தொட்டுணர்வது போலவோ சொல்லப்படுகிற விஷயம்

இருந்தால்தான் சிந்தனையின் சாரமாய் இருக்கிற சிந்தனையின் மாற்றம் சாத்தியமாகும். இதனால்தான் குழந்தைகள் கற்பனைக் கதைகளை அப்படி நேசிக்கிறார்கள்.

கண்ணுக்கு முன்னால் உள்ள உருவத்திலிருந்து, இந்த உருவத்தைப் பற்றிய தகவல்களைச் ''செம்மைப் படுத்துகின்ற'' வகையில் சிந்தனை மாற்றமடைவதற்கு, கண்ணால் காணுகின்ற உருவங்களின் மத்தியில், முதன்மையாக இயற்கையின் மத்தியில், குழந்தையின் அறிவு பயிற்சி பெற வேண்டும். இதையே குழந்தையின் மூளை இயல்பாக விரும்புகிறது. இயற்கையிலிருந்து குழந்தையைப் பிரித்து விட்டால், கல்வி கற்றலில் ஆரம்ப நாட்களிலிருந்தே வார்த்தைகளை மட்டுமே குழந்தை ஏற்றுக் கொள்வதானால், மூளை உயிரணுக்கள் விரைவில் களைப்படைந்து விடுகின்றன. ஆசிரியர் வழங்குகின்ற வேலையை அவை சமாளிப்பதில்லை. இந்த உயிரணுக்கள் வளர்ச்சியுற வேண்டும், வலுவுற வேண்டும், ஆற்றல் பெற வேண்டும். தொடக்க வகுப்புக்களில் பலப்பல ஆசிரியர்கள் எதிர்கொள்ளும் தோற்றத்துக்குக் காரணம் இதுதான்: குழந்தை அமைதியாக உட்கார்ந்திருக்கிறது, கவனமாய்க் கேட்பது போல உங்கள் கண்களையே பார்க்கிறது, ஆனால் ஒரு வார்த்தையைக் கூடப் புரிந்து கொள்வதில்லை. ஏனெனில் ஆசிரியர் பேசிக்கொண்டே இருக்கிறார், ஏனெனில் விதிகளைப் பற்றிச் சிந்திக்க வேண்டும், கணக்குகளையும் உதாரணங்களையும் தீர்க்க வேண்டும், இதெல்லாமோ சூட்சுமங்களாக, பொதுமைப்படுத்தல்களாக இருக்கிறது, உயிருள்ள உருவங்களே இல்லை; மூளை களைத்து விடுகிறது... இங்குதான் பின்தங்கிவிடுவது தொடங்குகிறது. இதனால்தான் குழந்தையின் சிந்தனைத்திறமையை வளர்க்க வேண்டும், இயற்கையின் நடுவே குழந்தையின் மன ஆற்றல்களை வளர்க்க வேண்டும். குழந்தையின் உறுப்பு வளர்ச்சியினது இயற்கை விதிகள் இவ்வாறுதான் கோருகின்றன. எனவேதான் இயற்கையினூடே ஒவ்வொரு முறை பயணம் போவதும்

சிந்தனைத் திறமைக்குப் பாடமாக, மூளை வளர்ச்சிக்குப் பாடமாக அமைகின்றன.

மண்மேட்டின் மீது நாங்கள் உட்கார்ந்திருக்கிறோம், வெட்டுக் கிளிகளின் இன்னிசையான கோரஸ் கேட்கிறது, ஸ்டெப்பிப் புற்களின் நறுமணம் காற்றில் மிதக்கிறது. நாங்கள் மௌனமாய் இருக்கிறோம். குழந்தைகளுக்கு அளவு மீறிச் சொல்ல வேண்டியதில்லை. வார்த்தை என்பது ஒரு வேடிக்கை அல்ல. திகட்டல்களிலேயே மிகத் தீங்கானது வார்த்தைத் திகட்டலாகும். ஆசிரியர் சொல்வதைக் கேட்பது மட்டுமின்றி, அது மௌனமாயுமிருக்க வேண்டும். இந்தக் கணங்களில் அது யோசிக்கிறது, கண்டதையும் கேட்டதையும் கிரகித்துக் கொள்கிறது. குழந்தைக்குச் சொல்லுகின்ற வார்த்தைகளின் அளவை ஆசிரியர் கவனமாக கண்காணித்து வர வேண்டும். வார்த்தைகளை ஏற்றுக் கொள்கிற செயலற்ற வஸ்துவாகக் குழந்தைகளை மாற்றி விடக் கூடாது. ஒவ்வொரு பிரகாசமான உருவத்தையும் புரிந்து கொள்வதற்கு — அது பார்வை பூர்வமானதாயினும் சரி, வார்த்தை பூர்வமானதாயினும் சரி—நிறைய நேரமும் நரம்பாற்றலும் வேண்டும். யோசனை செய்யக் குழந்தைக்கு நேரம் தர முடிவது ஆசிரியரின் ஒரு நுண்ணிய இயல்பு அம்சங்களில் ஒன்று ஆகும். இயற்கையின் நடுவே காதால் கேட்பதற்கும், கண்ணால் காண்பதற்கும், உடலால் உணர்வதற்கும் குழந்தைக்கு வாய்ப்புக்களை வழங்க வேண்டும்...

வெட்டுக்கிளிகளின் கோரஸை நாங்கள் கூர்ந்து கேட்கிறோம். இந்த வியப்புக்குரிய சங்கீதத்தில் குழந்தைகள் லயித்துப் போனது கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். அமைதியான மாலை நேரமும், நறுமணம் நிறைந்த வயல் வெளிகளும், அற்புத ஒலிகள் பாய்ந்து வருவதும் குழந்தைகளின் நினைவில் என்றென்றைக்குமாகப் பதிந்து விடட்டும். என்றாவது ஒரு நாள் வெட்டுக்கிளியைப் பற்றி அவர்கள் கற்பனைக் கதை படைப்பார்கள்.

இப்போது குழந்தைகளின் சிந்தனை வயப்பட்ட

பார்வை சூரிய அஸ்தமனத்தில் நிலைத்து நிற்கிறது. தொடுவானத்தில் மறைந்து விட்டான் சூரியன், அந்திப் பொழுதின் மெல்லிய வண்ணங்கள் வானம் முழுதும் படர்ந்திருக்கின்றன.

''ஓய்வெடுக்கப் போய்விட்டான் சூரியன்'' என்கிறுள் லரீசா. அவளது முகத்தில் வருத்தம் தோய்ந்திருக்கிறது.

''கொல்லர்கள் சூரியனுக்கு வெள்ளி மாலை கொண்டு வந்திருக்கிறுர்கள்... நேற்றுக் கொடுத்த மாலையை சூரியன் எங்கே வைத்து விட்டானே?'' என்று கேட்கிறுள் லீதா.

குழந்தைகள் என்னைப் பார்க்கிறுர்கள். கதையின் தொடர்ச்சிக்காகக் காத்திருக்கிறுர்கள். எத்தகைய சித்திரத்தைத் தேர்ந்தெடுப்பது என்று நான் முடிவு செய்யவில்லை. ஃபேத்யா எனக்கு உதவுகிறுன்.

''ஆகாய வழியில் மிதந்து சென்று விட்டது மாலை'' என்று அவன் மெதுவாகச் சொன்ஞன்.

ஆவல் நிறைந்த மௌனம். ஃபேத்யா என்ன சொல்லப் போகிருனே என்று நாங்கள் காத்திருக்கிறேம். சிறுவன் ஏற்கெனவே உருவாக்கி வைத்திருந்த கதையின் தொடர்ச்சிதானே இது. அவன் பேசாமல் இருப்பதற்குக் காரணம் அவன் கூச்சப் படுவதாய் இருக்கலாமே. ஃபேத்யாவுக்கு நான் உதவுகிறேன்.

''ஆமாம் ஆகாய வழியில் மிதந்து சென்று விட்டது மாலை. பகற் பொழுதில் சூரியனின் நெருப்புப் பின்னல்களில் காய்ந்து, மெழுகு போல் அது மிருதுவாகி விடும். சூடான கையால் சூரியன் அதைத் தொட்டு விட்டான். பொன்னிற ஆருக அந்தி நேர ஆகாயத்தில் அது வழிந்தோடுகிறது. ஓய்வெடுக்கப் போகிற சூரியனின் கடைசிக் கதிர்கள் ஆற்றுக்கு ஒளியூட்டுகின்றன. பாருங்கள் ரோஜா நிறத்தில் சூரியன் விளையாடுகிறுன், பாய்ந்தோடுகிறுன். இருட்டுகிறது, இன்னும் தொலைவுக்குப் போகிறுன் சூரியன். தனது மந்திரத் தோட்டத்துக்கு அவன் சீக்கிரம் வந்து விடுவான். அப்போது நட்சத்திரங்கள் வானத்தில் தீப்பிடித்துக் கொள்ளும்...''

''நட்சத்திரங்கள் என்றால் என்ன? அவை ஏன் தீப் பிடித்துக் கொள்கின்றன? எங்கிருந்து அவை வருகின்றன? பகலில் அவற்றை ஏன் காணோம்?'' கேட்கிறார்கள் குழந்தைகள். ஏகப்பட்ட சித்திரங்களால் குழந்தைகளின் உணர்வைத் திகட்டச் செய்து விடக் கூடாது. இன்றைக்கு இது போதும். குழந்தைகளின் கவனத்தை நான் வேறு பக்கம் திருப்பி விடுகிறேன்.

''ஸ்டெப்பியைப் பாருங்கள். பள்ளத் தாக்குகளிலும், புல்வெளியிலும், சமவெளிகளிலும் எப்படி இருட்டுகிறது என்று பார்த்தீர்களா? அந்தக் குன்றுகளைப் பாருங்கள். அந்திக் கருக்கலில் மிதந்து செல்வது போல அவை எவ்வளவு மிருதுவாகி விட்டன. குன்றுகள் சாம்பல் நிறத்தில் மாறுகின்றன. அவற்றின் மேற்புறத்தைப் பாருங்கள்—உங்களுக்கு என்ன தெரிகிறது?''

''காடு... புதர்... பசு மந்தை... இடையர்களுடன் ஆடுகள். வயல்வெளிகளில் இரவைக் கழிக்கத் தங்கி விட்டார்கள் மனிதர்கள். தீ மூட்டியுள்ளனர். நெருப்பு கண்ணுக்குத் தெரியவில்லை. காற்றில் புகைதான் நெளிந்து கொண்டிருக்கிறது...'' வேகமாக கறுத்துக் கொண்டிருக்கிற குன்றுகளைப் பார்க்கையில் இதுதான் குழந்தைக் கற்பனையைத் தட்டி விடுகிறது. வீட்டுக்குப் போகுமாறு குழந்தைகளிடம் கூறுகிறேன். அவர்கட்கு அது விருப்பமில்லை. ''இன்னும் கொஞ்ச நேரம் உட்காருவோம்'' என்கிறார்கள். உலகம் ஒரு மாயப் போர்வையால் போர்த்தப் பட்டிருந்தது போலத் தோன்றிய இந்த மாலைப் பொழுதில், குழந்தைக் கற்பனை புயலெனப் பாய்கிறது. தொலைவிலுள்ள பள்ளத்தாக்குகளிலிருந்தும், காடுகளிலிருந்தும் ஆறுகளைப் போல அந்திக் கருக்கலும் இரவின் இருட்டும் நீந்திச் செல்கின்றன என்று மட்டும் சொன்னேன். குழந்தைகளின் கற்பனையிலோ தேவதைக் கதைகளில் வருகின்ற பிராணிகளாக கருக்கலையும் இருட்டையும் குழந்தைகள் சித்திரங்களாய்ப் படைத்தனர். இந்தப் பிராணிகளைப் பற்றி கதை சொல்கிறாள் சான்யா: தொலைவில் காட்டுக்குப் பின்னாலுள்ள

ஒரு குகைக்குள் அவை வசிக்கின்றன, பகல் நேரத்தில் ஆழங் காணு அகாதத்துக்குள் அவை இறங்குகின்றன, தூங்குகின்றன, தூக்கத்தில் பெருமூச்சு விடுகின்றன (ஏன் பெருமூச்சு விடுகின்றன? கதையாசிரியருக்கு மட்டுமே அது தெரியும்). சூரியன் தனது மந்திரத் தோட்டத் துக்குப் போய்விட்டவுடனே மறைவிடத்திலிருந்து அவை வெளியேறுகின்றன. அவற்றின் பிரம்மாண்டமான பாதங் களை மென்மையான கம்பளி மூடியிருக்கும், எனவே அவை நடந்து வருவது யாருக்கும் கேட்காது. கருக்கலும், இருட் டும் அன்பான, அமைதியான, கனிவான பிராணிகள். யாருக்கும் தொந்தரவு தராதவை.

கருக்கலும் இருட்டும் குழந்தைகளுக்கு எப்படித் தாலாட்டுப் பாடுகின்றன என்று கதை படைக்கக் குழந் தைகள் தயாராகி விட்டனர். இன்றைக்குப் போதும். நாங்கள் வீட்டுக்குப் போகிறோம். வார்யா சொன்னபடி ''நன்றாகக் கதைகள் உருவாகிற'' மாலைநேரத்தில் நாளைக் கும் வர வேண்டுமென்று குழந்தைகள் விரும்புகிறார்கள்.

கற்பனை சிறகடித்துப் பறக்கின்ற சூழல் நிலவும் அந்தி நேரக் கருக்கலைக் குழந்தைகள் ஏன் அப்படி விரும்பு கிறார்கள்? மிகப் பிரியமாக தேவதைக் கதைகளை ஏன் காது கொடுத்துக் கேட்கிறார்கள்? மற்ற எந்தச் சாதனத் தையும் விட தேவதைக் கதை பேச்சையும் சிந்தனையை யும் ஏன் வளர்த்து விடுகிறது? ஏனெனில் கற்பனைச் சித்திரங்களில் உணர்ச்சி வண்ணங்கள் பிரகாசமாய்த் தீட்டப்பட்டிருக்கின்றன. குழந்தையின் உணர்வில் தேவ தைக் கதையின் வார்த்தைகள் உயிர்வாழ்கின்றன. கற்பனாலங்காரச் சித்திரத்தை உருவாக்குகிற வார்த்தை களைக் கேட்கும் போது அல்லது உச்சரிக்கும் போது குழந்தையின் இதயம் குளிர்ச்சி அடைகிறது. தேவதைக் கதைகளைக் கேட்பதும், உருவாக்குவதும் இன்றி பள்ளிக் கல்வியை என்னால் நினைத்துப் பார்க்க முடியாது. ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' முதல் இரண்டு மாதங்களில் சிறுசுகள் படைத்த கற்பனைக் கதைகளும் சிறு கதைகளும் என் முன்னே கிடக்கின்றன. குழந்தை

யின் சிந்தனைகள், உணர்ச்சிகள், விருப்பங்கள், கருத்துக் கள் ஆகியவற்றின் உலகத்தை இவற்றில் நீங்கள் காண லாம்.

**முயல் குட்டி** *(ஷூரா)*

பொம்மை ப்ளஷ் முயல் குட்டி ஒன்றை அம்மா எனக்குப் பரிசளித்தாள். இது புது வருடத்துக்கு முன்பு. புத்தாண்டுப் பிர் மரத்தின் கிளைகள் மீது அதை நான் வைத்திருந்தேன். எல்லோரும் படுத்து விட்டோம். பிர் மரத்தின் மீது சின்னஞ் சிறிய விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. நிமிர்ந்து பார்க்கிறேன். முயல் குட்டி கிளையிலிருந்து குதித்து மரத்தைச் சுற்றி ஓடுகிறது. தத்தித் தத்திக் குதிக்கிறது. மீண்டும் வந்து மரத்தின் மேல் ஏறிக் கொள்கிறது.

**சூரியகாந்தி** *(காத்யா)*

சூரியன் முளைத்தது. பறவைகள் விழித்துக் கொண் டன. வானம்பாடி ஆகாயத்திற்கு உயர்ந்தது. சூரியகாந்தி யும் விழித்துக் கொண்டது. உற்சாகங் கொண்டு தனது இதழ்களிலிருந்த பனித்துளிகளை உதறியது. சூரியனைப் பார்த்துத் திரும்பியது: ''சூரியனே வணக்கம். உனக் காக நீண்ட நேரம் காத்திருந்தேன். பார், எனது மஞ் சள் இதழ்கள் உனது வெப்பம் இல்லாமல் வாடிப் போய் விட்டன. இப்போது அவை எழுந்து நின்று மகிழ்ச்சி கொள்கின்றன. உன்னைப் போலவே, நானும் உருண்டையாய்த் தங்க நிறத்தவளாய் இருக்கிறேன்.''

**வயலை எப்படி உழுதார்கள்** *(யூரா)*

கோதுமைப் பயிரைக் கம்பைன் கொண்டு அறுத் தார்கள். முட்பன்றி ஒன்று பொந்திலிருந்து வெளி வந்து பார்க்கிறது: கோதுமை இல்லை. கதிர்கள் சத்தமிடவில்லை. தாளடித்த வயலில் ரொட்டித் துண்டு உருண்டது. இதை நோக்கி பிரம்மாண்டமான ராட்சசன்—உலோக வண்டு —ஊர்ந்து போயிற்று. அது கூச்சலிட்டது, உறுமியது. அதன் பின்னே கலப்பைகள். பின்னால், உழப்பட்ட கரிய வயல். பொந்துக்குள் முட்பன்றி உட்கார்ந்து கொண்டு நோட்டம் விட்டபடி ஆச்சரியப்பட்டது. அது நினைக்

*கிறது: ''எங்கிருந்து வந்தது இந்தப் பிரம்மாண்டமான வண்டு?'' இதுதான் டிராக்டர்.*

**இரண்டு லெனின் படங்கள்** *(வான்யா)*

*அக்டோபர் குழுவில் எனது அக்கா ஒல்யாவைச் சேர்த்துக் கொண்டனர். அவளிடம் சிவப்பு நட்சத்திரம் இருக்கிறது. அந்த நட்சத்திரத்தில் சிறிய லெனின் படம். இப்போது எங்களிடம் விளதீமிர் இலீச் லெனின் படம் இரண்டு இருக்கிறது. ஒன்று சுவற்றில் தொங்குகிறது. மற்றொன்று ஒல்யாவின் நட்சத்திரத்தில். உழைப்பவர்களின் மகிழ்ச்சிக்காக லெனின் போராடினார். அப்பா சொன்னார்: ''லெனின் பள்ளிக்கூடத்தில் மிக நன்றாகப் படித்தார்''. நானும் மிக நன்றாகப் படிப்பேன். சிறிய லெனின்வாதியாவேன்.*

**ஓக் மரக் காய்** *(ஸீனா)*

*காற்றடித்தது. ஓக் மரத்திலிருந்து காயொன்று விழுந்தது. செம்பால் செய்யப்பட்டது போல மஞ்சள் நிறத்தில் பிரகாசமாய் இருந்தது. கீழே விழுந்து சிந்தித்தது: ''கிளைகளில் எவ்வளவு நன்றாக இருந்தது. இப்போது நிலத்தில் இருக்கிறேன். இங்கிருந்து பார்த்தால் ஆறும் தெரியவில்லை, காடும் தெரியவில்லை''. வருந்தியது காய். மரத்திடம் கேட்கிறது: ''ஓக் மரமே என்னைத் தூக்கிக் கிளையில் வைத்துக் கொள்''. ஓக் மரம் பதில் சொல்கிறது: ''நீ ஓர் அசடு. பார், நானும் பூமியிலிருந்துதானே வளர்ந்திருக்கிறேன். சீக்கிரமே வேர் விட்டு நீயும் வளர்வாயாக. உயரமான ஓக் மரமாக நீயும் மாறுவாய்''.*

*இயற்கையில் என்ன நடக்கிறது என்பது பற்றி மட்டும் குழந்தைகள் கவலைப் படுவதில்லை. உலகத்தில் அமைதி இருக்க வேண்டும் என்று அவர்கள் விரும்புகிறார்கள். போர் பற்றிச் சிந்திக்கிற சக்திகள் சில இருக்கின்றன என்று அவர்களுக்குத் தெரியும். ஒரு கதையில் இந்த இருண்ட சக்திகள் பாம்பு உருவத்தில் கற்பனையாய்த் தீட்டப்பட்டிருப்பதைப் பாருங்கள்.*

சமுத்திரத்துக்குப் பின்னால் வெகு தொலைவில் அவன் வாழ்ந்து வந்தான். நமது மக்களை அவன் வெறுத்தான். அணு குண்டுகள் செய்தான். அவற்றை நிறைய நிறையச் செய்தான். அவற்றை இறக்கைகளில் சுமந்து கொண்டு பறந்தான். சூரியன் மீது அவற்றை வீச விரும்பினான். சூரியனை அணைத்து நம்மை இருட்டில் கொல்ல விரும்பினான். இரும்புப் பாம்பிற்கு எதிராக நான் தூக்கணாங் குருவிகளை விட்டேன். அவை சூரியனி லிருந்து ஆளுக்கொரு தீப்பொறி மூக்கில் எடுத்துக் கொண்டு பாம்பைத் துரத்திப் பிடித்தன. பாம்பின் இறக்கை மீது நெருப்பை வீசின. இரும்புப் பாம்பு சேற்றுக்குள் விழுந்து, குண்டோடு எரிந்து போயிற்று. சூரியனோ விளையாடிக் கொண்டிருக்கிறான். தூக்கணாங் குருவிகள் உற்சாகமாகக் கீழ்ச்சிட்டு மகிழ்கின்றன.

இந்தக் கட்டுக் கதையில் குழந்தையினது உலகக் கண் ணோட்டத்தின் தனிச் சிறப்பு மிளிர்கிறது. தீயதை நல்லது தோற்கடிப்பதைப் பறவைகளும் மிருகங்களும் இல் லாமல் குழந்தையால் கற்பனை செய்து பார்க்க முடிவ தில்லை. இனிமையான முயல் குட்டிகளும் தூக்கணாங் குருவிகளும் குழந்தையின் இதயத்தில் வெறும் கற்பனைப் பிராணிகள் அல்ல. அவை நல்லதின் உருவகமாகும்.

சுற்றியுள்ள உலகத்தில் ஒவ்வொரு நாளும் புதிய கண்டுபிடிப்புக்களைக் கொண்டு வந்தது. ஒவ்வொரு கண்டு பிடிப்பும் கற்பனைக் கதையால் போர்த்தப் பட்டிருந் தது. கதைகளைக் குழந்தைகளே படைத்தனர். பிறந்த மண்ணின் அழகை உணருவதற்குக் கற்பனை உருவங்கள் குழந்தைகட்கு உதவுகின்றன. கதை, கற்பனை, படைப்பு ஆகியவற்றால் வெளிக் கொணரப்படுகிற பிறந்த வட் டாரத்தின் அழகு நாட்டுப் பற்றிற்கு ஊற்றுக் கண்ணா கும். தாய்நாட்டின் மாபெரும் தன்மையையும் வல்லமை யையும் புரிந்து கொள்வதும் உணர்ந்து கொள்வதும் மனிதனுக்கு மெல்ல மெல்ல வருகிறது. இதற்கு ஊற்றுக் கண்ணாகத் திகழ்வது அழகே ஆகும். சின்னஞ் சிறு

குழந்தைகட்குக் கல்வி புகட்டுகிற இளம் போதகருக்கு ஆலோசனை வழங்கத் தோன்றுகிறது: பிறந்த நாட்டின் — சோவியத் யூனியனின் மகத்துவத்தைப் பற்றி நீங்கள் முதல் வார்த்தையை உச்சரிக்கின்ற வேளைக்கு குழந்தையை கவனமாகவும், ஜாக்கிரதையாகவும் தயார் படுத்துங்கள். இந்த வார்த்தை உற்சாகமூட்டுவதாய், உத்வேகம் தருவதாய், நல்லுணர்ச்சிகள் நிரம்பியதாய் இருக்க வேண்டும் (பகட்டாய் இருக்கிறதென்று யாராவது சொன்னால் பரவாயில்லை. சுத்தமான உயர்ந்த உணர்ச்சிகள் உங்களிடம் இருக்கிறதென்றால் இதற்கு அஞ்சாதீர்கள்). இந்த வார்த்தை குழந்தை இதயங்களை நன்கு துடிக்கச் செய்ய வேண்டுமென்றால், உருவகமாகப் பேசும் போதே, குழந்தையுணர்வு எனும் பூமியைக் கவனமாக உழுது, அழகு எனும் விதைகளை அவற்றில் தூவ வேண்டும்.

குழந்தை அழகை உணர்ந்து அதிலேயே அமிழ்ந்து விடட்டும். அதன் இதயத்திலும், நினைவிலும் தாய் நாட்டைப் பற்றிய சித்திரங்கள் என்றென்றைக்குமாக நிலைக்கட்டும். மனிதத் தன்மையின், அன்புணர்ச்சிகளின், இதயபூர்வ உறவுகளின் குருதியும் உடலும் அழகே ஆகும். தோல்யா, ஸ்லாவா, கோல்யா, வித்யா, சாஷா ஆகியோரின் உலர்ந்து போன இதயங்கள் படிப்படியாக எப்படி உருகி வருகின்றன என்பது கண்டு நான் மகிழ்ச்சியடைந்தேன். அழகைக் கண்டு விரிகிற புன்னகையும், ஆனந்தமும், வியப்பும் குழந்தை இதயங்களுக்கு இட்டுச் செல்கிற பாதை போல விளங்க வேண்டும் என்று எனக்குத் தோன்றியது.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' வாழ்க்கை கால அட்டவணைக்குள் கட்டுப்பட்டதல்ல. நீல வானத்திற்குக் கீழே குழந்தைகள் எவ்வளவு நேரம் தங்க வேண்டும் என்று விதி செய்யப் படவில்லை. ''வீட்டுக்குச் செல்லுங்கள்'' என்று ஆசிரியர் சொல்லுகின்ற நிமிடத்திற்காக வருந்திக் காத்திருக்கிற வகையில் குழந்தைகள் சலிப்படையாமல் இருக்க வேண்டும் என்பதே பிர

தானம். குழந்தைகள் ஈடுபட்டிருக்கிற உழைப்பின் மீது, கவனத்திலுள்ள பொருளின் மீது அவர்களது அக்கறை அதிகரிக்கும் போது பள்ளியின் வேலையை நான் முடித்து விட முயல்வேன். நாளைய பொழுதுக்காகக் குழந்தைகள் ஆவலுடன் காத்திருக்கட்டும், அந்தத் தினம் புதிய மகிழ்ச்சிகளை அவர்களுக்கு நல்கட்டும். பூமியின் மீது வெள்ளிப் பொறிகளை சூரியன் தூவுவதாக அவர்கள் கனவு காணட்டும், ஒரு நாளைக்கு நீலவானத்தின் கீழ் ஒன்று, ஒன்றரை மணி நேரம் இருப்பர் குழந்தைகள், அடுத்த நாள் நான்கு மணி நேரம் தங்குவர். இதெல்லாம் போதகர் குழந்தைகட்கு எவ்வளவு மகிழ்ச்சி தர முடிகிறது என்பதைப் பொறுத்திருக்கிறது. இதைவிட முக்கியமானது என்னவென்றால் குழந்தை மகிழ்ச்சியை அனுபவிப்பது மட்டுமின்றி, அது தானும் மகிழ்ச்சியைப் படைத்து தனது படைப்பின் ஒரு துளியை குழுவின் வாழ்க்கைக்கு வழங்க வேண்டும்.

அந்த இலையுதிர்காலம் வெப்பம் மிகுந்ததாய் வரட்சியாய் நீண்ட நாட்கள் நீடித்தது. அக்டோபர் மத்தி வரை மரங்களில் இலைகள் பழுக்கவில்லை. கோடை காலம் திரும்பி வந்து விட்டது போல பல தடவை இடி இடித்தது. புற்களின் மீது காலை வேளையில் பனித்துளிகள் ஒளிர்ந்தன. இது உழைப்புக்கு உகந்த ஒரு சூழ் நிலையைத் தோற்றுவித்தது. எங்களது குன்றுக்குப் பல முறை வந்த மேகதத்தினூடே நாங்கள் ''பயணம் போனோம்''. இந்த நேரமனைத்தும் குழந்தைகளிடம் மறக்க முடியாத மனப்பதிவுகளை ஏற்படுத்தின. வெண்மையான, உடல் பருத்த மேகங்கள் வியப்புக்குரிய கண்டு பிடிப்புகள் நிறைந்த உலகமாகத் திகழ்ந்தன. விசித்திரமாகவும், விரைவாகவும் மாறிய அந்த மேகங்களில் மிருகங்களையும், கற்பனை ராட்சசர்களையும் குழந்தைகள் கண்டனர். குழந்தைக் கற்பனை விரைந்து பறக்கும் பறவை போல மேகங்களுக்கு அப்பாலுள்ள, நீலக் கடல்களுக்கும், காடுகளுக்கும் அப்பாலுள்ள தொலை தூரத்து தெரியாத நாடுகளுக்கும் பறந்து சென்றது. இப்படிப் பறக்கை

யில் குழந்தையின் தனி உலகம் பிரகாசமாக விரிந்தது. ஒரு விசித்திர மேகம் மிதந்து செல்கிறது.

''குழந்தைகளே இதில் நீங்கள் என்ன பார்க்கிறீர்கள்?''

''வைக்கோல் தொப்பி அணிந்த ஒரு கிழட்டு இடையர் கம்பு ஊன்றி நிற்கிறார். அவருக்கு அருகே ஆட்டு மந்தையைப் பாருங்கள். உருண்டைக் கொம்பு ஆடு முன்னால் வருகிறது. அதற்குப் பின்னால் குட்டிகள்... கிழவரின் தோளில் பை ஒன்று தொங்குகிறது. அதற்குள்ளிருந்து என்னமோ ஒன்று எட்டிப்பார்க்கிறது'' என்றாள் வார்யா.

''இது கிழவர் அல்ல. நாம் பனிக் காலத்தில் செய்தோமே அது போன்ற ஒரு பனிப் பெண் இது. இதோ அவள் கையில் விளக்குமாறு. தலையில் இருப்பது வைக்கோல் தொப்பி அல்ல, அது ஒரு வாளி'' என்று மறுப்புத் தெரிவித்தான் பாவெல்.

''இல்லை, இது பனிப் பெண் அல்ல, வைக்கோற் போர். போரின் மீது இரண்டு இடையர்கள் கவட்டையுடன் நிற்கிறார்கள். பாருங்கள், அவர்கள் வைக்கோலைக் கீழே தள்ளுகிறார்கள். கீழே வண்டி நிற்கிறது. ஆடாம், ஆடு! ஆடல்ல, அது வண்டி. கொம்பல்ல அது கவிட்டைக் குச்சி'' என்றான் யூரா.

''இது பிரம்மாண்டமான, மிகப் பெரிய முயல். இது போல நான் கனவில் பார்த்திருக்கிறேன். கீழே தெரிவது வண்டி அல்ல, முயல் வால்...''

எல்லோருமே கற்பனையில் ஈடுபட வேண்டும் என்று விருப்பமாய் இருக்கிறது. ஆனால், கோல்யா, ஸ்லாவா, தோல்யா, மீஷா ஆகியோர் ஏனோ மௌனமாய் இருக்கின்றனர். குழந்தை வேடிக்கைகள் தமது தகுதிக்குக் குறைவானவை என்று எண்ணுகிற பெரியவர்களிடம் காணப்படுகிற இரக்கம் நிறைந்த அலட்சியம் கோல்யாவின் முகத்தில் தெரிவதைக் காணுகையில் எனது இதயம் வலிக்கிறது. என்ன காரணம்? அழகைக் கண்டு சிறுவனின் கண்களில் ஆனந்தப் பொறி பறப்பதை நான் ஏற்

கெனவே கண்டேனே... இது பற்றி அப்போது நான் சிந்தித்தது குறைவே. ஆனால் எனது மனம் சொல்லிற்று: குழந்தைக் களிப்புக்களில் சிறுவனை ஈடுபடுத்த முடியாத வரை, அவனது கண்களில் மெய்யான குதூகலம் தாண்டவமாடாத வரை, குழந்தைக் குறும்புகளில் அவன் கவரப் படாத வரை, ஏதோ போதனைச் செல்வாக்கு ஒன்றை அவன் மீது செலுத்துவதாகச் சொல்லுவதற்கு எனக்கு உரிமை இல்லை. குழந்தை குழந்தையாக இருக்க வேண்டும்... தேவதைக் கதையைக் கேட்கையில், நன்மைக்கும் தீமைக்கும் இடையில் நடக்கும் போராட்டம் பற்றி அவன் உணர்ச்சி வசப்படவில்லை என்றால், வியப்பின் ஆனந்தப் பொறிகளுக்குப் பதிலாக அவன் கண்களில் வெறுப்புத் தோன்றுமேயானால் குழந்தையுள்ளத்தில் ஏதோ முறிந்து போயிருக்கிறது என்று பொருள். குழந்தையுள்ளத்தை நேர்படுத்துவதற்கு நிறையச் சக்தியைச் செலவிட வேண்டும்.

தொடுவனத்தில் விசித்திரமானதொரு கோடுகள் கொண்ட மேகம் தோன்றியது. உயர்ந்த சுவர்களாலும், காவற் கோபுரங்களாலும் சூழப்பட்ட ஓர் அற்புத மாளிகை போலிருந்தது அது. மாளிகையின் எல்லைக்கோடுகள் தெளிவற்றிருந்ததை குழந்தைக் கற்பனை நிறைவு செய்கிறது. பூமியின் மறுகோடியில் உள்ள மாயா உலகம் பற்றி, கொடிய பாபா—யாகா பற்றி, அழகியைக் காப்பாற்றுகிற துணிவு மிக்க பலசாலியைப் பற்றி யூரா கட்டுக் கதை சொல்லத் தொடங்கிவிட்டான். வீத்யாவின் கற்பனை வேறொரு கதை படைத்தது. நமது நாட்டுக்கு வெகு தொலைவுக்கு அப்பால் எங்கோ ஓரிடத்தில் மலைகளில் பயங்கர அரக்கன் வாழ்கிறான், அவன் போர் தொடுப்பதற்குத் திட்டமிட்டு வருகிறான். சிறுவனின் கற்பனைச் சிறகுகள் அவனை வானவெளிக் கப்பலில் சுமந்து சென்றன. இந்தக் கப்பல் ஒரு கணத்தில் அரக்கன் வாழும் குகைக்கு மேலே சென்று கொடுமையை ஒழித்து, நிரந்தர அமைதியை உலகில் நிலைநாட்ட வல்லதாகும்.

பின்னர், வெகு தூரத்திலுள்ள உஷ்ண மண்டல நாடு

களைப் பற்றி, நிரந்தர கோடையைப் பற்றி விசித்திர நட்சத்திரக் கூட்டங்களைப் பற்றி, நீல வண்ணக் கடலைப் பற்றி, ஒய்யாரத் தென்னை மரங்களைப் பற்றி நான் எடுத்துச் சொன்னேன். கற்பனை விஷயங்களும் உண்மைகளும் கலந்து கலந்து வருகின்றன. நான் தூரத்து உலகின் ஏதோ சாளரத்தைத் திறந்து விடுவதைப் போலிருந்தது. பூமியைப் பற்றி, மக்களைப் பற்றி, கடல்களையும் சமுத்திரங்களையும் பற்றி, தாவர உலகத்தின் பிராணி உலகத்தின் செல்வத்தைப் பற்றி, இயற்கைத் தோற்றங்களைப் பற்றி நான் கதை கதையாய்ச் சொன்னேன்.

ஒரு மனிதன் இன்னொருவனை அடிமைப் படுத்துகிற உலகத்தைப் பற்றிச் சொல்லத் தொடங்கினேன். உழைப்பாளர்களின், குறிப்பாகக் குழந்தைகளின் துன்பங்கள் பற்றிய தெளிவான சித்திரங்கள், நன்மைக்கும் தீமைக்கும் இடையில் கடுமையான போராட்டம் உலகில் நடந்து வருகிறது எனும் கவலை மிகுந்த சிந்தனையைக் குழந்தைகளின் உணர்வில் தூண்டி விட்டன. நமது மக்கள் மனித மகிழ்ச்சி, நேர்மை, சுதந்திரம் ஆகியவற்றுக்காகப் போராடுகிறார்கள் என்று எடுத்துக் காட்டின, சிறு வயதிலிருந்தே எனது மாணவர்கள் ஒவ்வொருவரும் மனிதனை மனிதன் சுரண்டுகிற சமுதாயக் கொடுமையுடன் சமரசத்திற்கு இடமில்லை என்கிற உணர்ச்சி கொள்ள வேண்டும். சுதந்திர உழைப்பின் முதல் நாடு என்கிற வகையில் தனது நாடு எல்லையற்ற நேயத்திற்குரியது என்று அவன் தெரிந்து கொள்ள வேண்டும். தீமை என்பது ஏதோ சூட்சுமமான ஒன்றல்ல, நேர்மையான மனிதர்கள் அனைவருக்கும் விரோதமான ஒரு சக்தி அது என்று குழந்தையின் உணர்வில் தெரியச் செய்வது வளர்ப்புப் பணியில் மிக முக்கியமான ஓர் அம்சம் என்று கருதினேன். சிறு கும்பலான முதலாளிகளுக்கும் நிலப்பிரபுக்களுக்குமே செல்வங்கள் உரியதாகவும், உழைக்கின்ற மனிதனுக்கு மிக அவசியமான தேவை கூடக் கிட்டாமலும் இருக்கின்ற நாடுகளைப் பற்றிச் சொன்னேன். ''ஏகாதிபத்தியம்'' எனும் சூட்சுமமான கருத்தைக் குழந்தைகள்

புரிந்து கொள்ள வேண்டும் என்று நான் அவசரப்பட வில்லை. அவர்கள் அதனைப் புரிந்து கொள்கிற காலம் வரும். எந்த வயதைப் பற்றி நாம் சொல்லிக் கொண் டிருக்கிறோமோ அந்த வயதில், பிரகாசமான மனத் தோற்றங்களும் உள்ளக் கிளர்ச்சி வண்ணமும் தீர்மான மான முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்.

குழந்தை முழு மதிப்புள்ள மன வளர்ச்சி பெறுவதற் கும், அவனது வளமான ஆன்மிக வாழ்வுக்கும் மகிழ்ச்சி களையும் வருத்தங்களையும் குழந்தைகளுடன் பகிர்ந்து கொள்கிற ஆசிரியருக்கு கதைகள் கண்டிப்பாக தேவை யாகும். இந்தக் கதைகளின் போதனு முக்கியத்துவம் கற் பனை மனத்தோற்றங்களை உருவாக்குகிற சூழலில் குழந் தைகள் இவற்றைக் கேட்கிறார்கள் என்பதில் அடங்கி யிருக்கிறது: முதல் நட்சத்திரங்கள் வானத்தில் மின்னத் தொடங்குகிற அமைதியான மாலை நேரம்; காட்டில் மூட்டப்பட்ட அடுப்பருகே, வசதியான குடிசையில், அனல் கக்கும் கரியடுப்புக்கருகே, இலையுதிர்காலத்து மழை, சாளரத்துக்கு வெளியே சடசடக்கும் போது, குளிர் காற்று சோர்வு கீதம் இசைக்கும் போது—இவையெல் லாம் இந்தச் சூழலாகும். கதைகள் பிரகாசமானதாய் உருவகமானதாய், சிறியவையாய் இருக்க வேண்டும். ஏகப்பட்ட தகவல்களைக் கொண்டிருக்கக் கூடாது, மனப் பதிவுகளை ஏராளமாகச் சேர்க்கக் கூடாது. இவ்வாறு சேர்த்தால் கதைகளைக் கேட்கும் மென்மைத்தன்மை மந்தமாகி விடுகிறது, குழந்தைக்கு எதிலும் அக்கறை இருக்காது.

போதகர்கட்கு ஆலோசனை சொல்கிறேன். குழந்தை உணர்ச்சிகளின், கற்பனைகளின் கனவுகளின் மீது செல் வாக்குச் செலுத்துங்கள் எல்லையற்ற உலகத்தின் சாளரத்தை **படிப்படியாகத்** திறந்து விடுங்கள், திடுமென்று அதனை அகலத் திறந்து விடாதீர்கள், சாளரத்தைக் கதவாக்கி விட்டீர்களானால் உங்கள் விருப்பத்துக்கு மாறாக, கதைப் பொருளைப் பற்றிச் சிந்தனை வயப்பட் டிருக்கிற மாணவர்களின் கவனம் சிதறி விடும், பந்துகள்

போல் உருண்டோடி விடும்... பலப்பல பொருள்களுக்கு முன்னுல் முதலில் அவர்கள் மனங்குழப்புவார்கள். பின்னர் இன்னும் தெரியாமலிருக்கிற இந்தப் பொருள்கள் சுடர் விட்டு அணைந்து போய், வெறும் ஒலியாகி விடும்.

நீலவானத்துக்குக் கீழ் நடந்த பள்ளி, சுற்றியுள்ள உலகத்துக்குச் சாளரத்தை எப்படித் திறந்து விடுவது என்று எனக்குச் சொல்லித் தந்தது. வாழ்க்கை, அறிவு பற்றிய இந்த விஞ்ஞானத்தை ஆசிரியர்கள் அனைவருக்கும் கொண்டு செல்ல வேண்டுமென்று நான் முயன்றேன். அவர்களுக்கு ஆலோசனை சொன்னேன். பெருவெள்ளமாக அறிவைக் குழந்தை மீது கொட்டாதீர்கள், கற்கப் படுகிற பொருளைப் பற்றிப் பாட நேரத்தில் உங்களுக்குத் தெரிந்ததை எல்லாம் சொல்ல விழையாதீர்கள். அறிவுப் பெருவெள்ளத்தின் கீழ் ஆவலும் அறிவுத்தாகமும் சமாதியாகிப் போகக் கூடும். சுற்றியுள்ள உலகத்தின் ஏதோ ஒரு விஷயத்தை மட்டும் குழந்தையின் முன்னுல் வெளிக் காட்டத் தெரிந்து கொள்ளுங்கள். வானவில்லின் வண்ணங்கள் வாழ்க்கையின் முன்னே ஜாலம் காட்டுவது போலத் திறந்து விடுங்கள். குழந்தை தெரிந்து கொண்ட விஷயத்தை அவன் திரும்பித் திரும்பி நோக்குவதற்கு விரும்புகின்ற வகையில் சொல்லாமல் எதையாவது விட்டு வையுங்கள்.

மனித சிந்தனையின் சாதனைகள் அளவற்றவை. உதாரணமாக ஏராளமான புத்தங்களை மனிதன் உருவாக்கியுள்ளான். ஒரு புத்தகத்திலுள்ள அழகை, விவேகத்தை, சிந்தனையின் ஆழத்தை குழந்தைகளுக்கு எடுத்துக் காட்டுங்கள். படிப்பதை நிரந்தரமாக விரும்புமாறும், புத்தகக் கடலில் தன்னிச்சையால் நீந்தப் போவதற்கு ஒவ்வொரு குழந்தையும் தயாராய் இருக்குமாறும் இவற்றை எடுத்துக் காட்டுங்கள் உயிருள்ள வார்த்தையின் ஊற்றுக்கண்ணுக்குப் பயணங்கள் செய்வது பற்றிய எனது சிந்தனைகளை ஆசிரியர்களுடன் நான் பகிர்ந்து கொண்டேன். தமது சொந்தக் கண்களால் சிறுவர்கள் காண்

கிற, சுற்றியுள்ள உலகப் பொருள்களையும் தோற்றங் களையும் பற்றிய பிரகாசமான, சிறிய, உணர்ச்சிகள் நிறைந்த அவர்களது ''பயணங்கள்'' என்றே இவற்றை நான் அழைக்கிறேன். தொடக்கநிலை வகுப்புகளின் ஆசிரியர்கள், எனது உதாரணத்தைப் பின்பற்றி இத்தகைய **பயணங்கள்** மேற்கொள்ளத் துவங்கினர். வகுப்பறைகளின் கதவுகள் அகலத் திறந்து கொண்டன, பசும் புல் தரையை நோக்கி சுத்தக் காற்றுக்குக் குழந்தைகள் ஓடினர். படித்தல், கணக்கு ஆகிய பாடங்கள் குறிப்பாக முதலாவது, இரண்டாவது வகுப்புக்களில், நீலவானத்தின் கீழ் அடிக்கடி நடக்கத் துவங்கின, பாடத்தையோ, புத்தகத்தையோ, விஞ்ஞானத்தையோ விட்டுவிட்டு இயற்கை உலகத்துக்குப் போவதல்ல இது. மாறாக, இது பாடத்தை வளமைப் படுத்தியது, புத்தகத்துக்கு, விஞ்ஞானத்துக்கு உயிர்ப்பூட்டியது.

சுற்றியுள்ள உலகத்தை அறிந்து கொள்வதும், இயற்கையையும் சமுதாயத்தையும் பற்றிய அறிவைக் கற்றுக் கொள்ளலும் குழந்தைகளுக்கு சலிப்பூட்டுவதாகவும், அலுப்புத் தருவதாயும் ஒருபோதும் ஆகிவிடாமலிருக்க என்ன செய்ய வேண்டும் என்பது பற்றி ஆலோசிக்க, தொடக்கநிலை வகுப்புக்களின் ஆசிரியர்கள் அனைவரும் வகுப்பு முடிந்து ஆசிரியர் அறையில் அடிக்கடி கூடுவார்கள். இந்தக் கூட்டுப் படைப்பில், விவசாய உழைப்பையும் தொழில் நுட்பத்தையும் குழந்தைகள் அறிந்து கொள்வது பற்றியும், சிறந்த மனிதர்களின் ஆக்கப் பணியைச் சிறுகச் சிறுகத் தெரிந்து கொள்வது பற்றியும் ஒரு புதிய சிந்தனை தோன்றியது. உயிருள்ள வார்த்தையின் ஊற்றுக் கண்களுக்குத் தமது மாணவர்கள் மேற்கொள்ள வேண்டிய ''பயணங்கள்'' பற்றித் திட்டமிட்ட தொடக்கநிலை வகுப்பாசிரியர்கள், எனது ஆலோசனையின் பேரில், வசந்த காலம், கோடை காலம், இலையுதிர் காலம், பனிக் காலம் ஆகியவற்றில் குழந்தைகளின் சிந்தனையும் பேச்சும் வளர்ச்சியடைவதற்கு ஏற்ப பயனீட்டும் வகையில் உபயோகப் படுத்துவதற்குத் தகுந்த

இயற்கைத் தோற்றங்கள் பலவற்றையும், அவற்றுடன் தொடர்புள்ள விவசாய சம்பந்தமான உழைப்பையும் நிர்ணயித்தனர்.

## நமது கனவுப் பகுதி

பள்ளிக்குப் பக்கத்தில், கிராமத்திற்கு அப்பால் புதர் களும் மரங்களும் நிறைந்த ஒரு பெரிய பள்ளத்தாக்கு இருக்கிறது. சிறுவர்களுக்கு இது இரகசியம் நிறைந்த அடர்த்தியான, அறியப்படாத காடாக விளங்கியது. பள்ளத்தாக்கின் சரிவில் குகை ஒன்றின் நுழைவாயிலை ஒருநாள் கண்டேன். குகைக்குள்ளே விசாலமாய், உறுதி யான, வரண்ட சுவர்களும் காணப்பட்டன.

இது ஒரு முழுமையான பொக்கிஷம்! எங்கள் கனவுப் பகுதி இங்கே இருக்கும். குழந்தைகளை முதல் முதலாக அந்த குகைக்குள் கூட்டிச் செல்கையில் அவர்கள் அடைந்த ஆனந்தத்தை எழுத்தில் வடிப்பது கடினம். குழந் தைகள் கீச்சிட்டார்கள், பாட்டுப் பாடினார்கள், மாறி மாறிக் குரல் கொடுத்தார்கள், ஒளிந்து விளையாடினார் கள். அன்றைக்கே அவர்கள் காய்ந்த புற்களைத் தரையில் பரப்பினார்கள்.

ஆரம்பத்தில் இந்த இரகசிய இடத்தைக் கண்டு குதூகலம் அடைந்தோம், அதற்குள் வசதிகள் செய் தோம்: சுவர்களில் சில படங்களை ஒட்டினோம், நுழைவா யிலை அகலப்படுத்தினோம், ஒரு சிறிய மேசை செய் தோம். அடுப்பொன்று செய்து அதில் அவ்வப்போது தீ மூட்டலாம் என்ற எனது ஆலோசனையைக் களிப்புடன் குழந்தைகள் ஏற்றுக் கொண்டனர்.

அடுப்புக்காக தரையை ஆழமாகத் தோண்டினோம், புகைக் குழாய்க்காக துளை ஒன்று செய்தோம். தேவை யற்ற மண்ணை வெளியே கொட்டிவிட்டு, செங்கற்களும் களிமண்ணும் கொண்டு வந்தோம். உழைப்பு கடினமா யிருந்தது. ஆனால் அடுப்பு எனும் கனவும் எங்களிடம் இருந்தது. இரண்டு வாரங்கள் நாங்கள் கட்டுமான வேலை

செய்தோம். வேலை எல்லோரையும் கவர்ந்தது. எங்கள் குழு செய்த எதையும் சட்டை செய்யாமல் இருந்த குழந்தைகளான கோல்யா, ஸ்லாவா, தோல்யா ஆகியோரும்கூட ஒதுங்கி நிற்கவில்லை. முன்போ அவர்களது அலட்சியம் என்னைக் கவலைக்குள்ளாக்கியது. இவர்களது கண்களில் அடிக்கடி இப்போது ஒளி தோன்றியது. இந்த ஈடுபாட்டு ஒளி நீண்ட காலம் அணையாமல் இருந்தது. அடக்கமான, கூச்சம் நிறைந்த, தீர்மானமற்ற குழந்தைகளான சாஷா, லூதா, வால்யா ஆகியோருக்கும் இந்தச் சுவாரஸ்யமான வேலை உற்சாகமூட்டியது. குழுவின் மனவெழுச்சியுள்ள மனநிலை—மகிழ்ச்சி, உற்சாகம்—ஒரு பெரிய ஆன்மிக சக்தி என்று நான் மேலும் மேலும் மனவுறுதி கொண்டேன். குழந்தைகளை ஒன்று சேர்த்து, குழு செய்கின்ற வேலை பற்றி அலட்சியம் நிறைந்த இருதயங்களில் அக்கறையை ஊட்டுகிறது இந்தச் சக்தி.

இதோ நாங்கள் அடுப்பில் தீ மூட்டி விட்டோம். வெண்ப ருச்சிகள் சந்தோஷமாய்க் கொழுந்து விட்டெரிகின்றன. பூமியின் மீது மாலை நேரம் கவிழ்கிறது எங்கள் இருப்பிடத்துக்குள் ஒளி நிறைந்து வசதியாய் இருக்கிறது. பள்ளத்தாக்கின் சரிவுகளை மூடி நிற்கிற மரங்களையும் புதர்களையும் நாங்கள் பார்க்கிறோம். அங்கிருந்துதான், அந்த இரகசியப் புதர்களிலிருந்துதான் கற்பனை உருவங்கள் எங்களை நோக்கி வருகின்றன. ''எங்களைப் பற்றிச் சொல்லுங்கள்'' என்று அவை எங்களிடம் கேட்டுக் கொள்வதாயும், நினைவு படுத்துவதாயும் தோன்றியது. அந்தி நேரக் கருக்கலில் பாதி ஒளியுருவும் புகையால் மரங்களும் புதர்களும் மூடப்பட்டிருக்கின்றன. மங்கிய நீல நிறத்ததாயும், பின்னர் செந்நீல நிறத்ததாயும் இந்தப் புகை மாறுகிறது; கொஞ்சம் கூட எதிர்பாராத அழகுடன் விளங்குகின்றன இந்த மரங்கள்.

இந்த நேரத்தில் குழந்தைகள் விருப்புடன் கற்பனையில் ஈடுபடுகிறார்கள், தேவதைக் கதைகளை உருவாக்குகிறார்கள்.

''பள்ளத்தாக்கின் சரிவில் பரவலாய் நிற்கிற மரங்

கள் எதைப் போல் இருக்கின்றன?'' குழந்தைகளை நோக்கி மட்டுமின்றி எனது சொந்தச் சிந்தனைக்கும் இந்தக் கேள்வியை விடுக்கிறேன் நான். பாறைச் சரிவிலிருந்து வேகமாக நீர் வீழ்ச்சியானது, இப்போது உறைந்து போன பஸால்ட் கல்லாலோ (basaltic) மெலகைத் (malachite) கல்லாலோ செதுக்கப் பட்ட சிற்பங்கள் போல எனக்குக் காட்சி தந்தது. எனக்கேற்பட்ட சிந்தனைப் போக்கு ஒரு குழந்தையிடமாவது ஏற்படுமா? குழந்தைகள் எப்படிச் சிந்திக்கிறார்கள் என்று கண்காணிக்க இந்த மாலைப் பொழுதில் நேரம் இருக்கிறது.

ஒரு குழந்தையிடம் சிந்தனை வெள்ளம் விரைவாகவும் வேகமாகவும் பாய்கிறது, புதுப் புதுச் சித்திரங்களைத் தீட்டுகிறது. மற்றொரு குழந்தையிடமோ அகன்ற, நீர் நிறைந்த, வல்லமை வாய்ந்த, இரகசிய ஆழம் படைத்த, ஆனால் மெதுவாக ஓடுகிற ஓர் ஆறாக இச்சிந்தனை உருவாகிறது. இந்த ஆற்றில் ஓட்டம் இருக்கிறதா என்பது கூடத் தெரியவில்லை. ஆனால் இது சக்தி வாய்ந்தது, கட்டுக்கடங்காதது, வேறு புறம் திருப்பி விட முடியாதது. அதே நேரத்தில் வேகமாக, விரைவாக எளிதாகப் பாய்கிற மற்ற குழந்தைகளின் சிந்தனை வெள்ளத்தைத் தடுக்க வேண்டியதுதான் அது உடனே தடையைச் சுற்றிக் கொண்டு ஓட முயலும். மர உச்சிகளில் பசு மந்தைகளைக் கண்டான் ஷூரா. ''அவை எங்கே மேய்கின்றன, அங்குதான் புல் இல்லையே?'' என்று செர்யோஷா கேட்டவுடன் ஷூராவின் சிந்தனை திசை திரும்பி விட்டது. இவை பசுக்கள் அல்ல. மேகங்கள். இரவு நேரத்தில் ஓய்வெடுக்க பூமியில் இறங்கியிருக்கின்றன. இதே போலத்தான் யூராவின் சிந்தனையும் விரைவாகவும், வேகமாகவும் பறக்கிறது. மீஷாவும், நீனாவும் மௌனமாய்க் கருத்தூன்றிப் பார்க்கிறார்கள்—அவர்கள் என்ன காண்கிறார்கள்? குழந்தைக் கற்பனையில் தோன்றிய டஜன் கணக்கான சித்திரங்கள் எங்களுக்கு மேலே விரைந்து பறந்தன. மீஷாவும் நீனாவும் மௌனம் சாதிக்கிறார்கள். ஸ்லாவாவும் அமைதியாய் இருக்

கிறான். அவர்களது மூளையில் எந்தச் சிந்தனையுமே உண்மையில் தோன்றவில்லையா? வீட்டுக்குப் போக நேரமாயிற்று. இதோ எல்லோரிலும் மிகவும் மௌனமான சிறுவன் மீஷா சொல்கிறான்:

''சினங் கொண்ட காளை தனது கொம்புகளால் கல்மலையைத் தாக்குகிறது, அதை ஒன்றும் செய்ய முடியவில்லை என்று அப்படியே நின்று விட்டது. பாருங்கள், அது கொம்பைத் தீட்டிக் கொள்வது போல இருக்கிறது, செங்குத்துச் சரிவை நகர்த்தப் போகிறது...''

எங்களைச் சுற்றிக் கூட்டமாய்த் திரிந்து கொண்டிருந்த சித்திரங்கள் அனைத்தும் உடனே பறந்து விட்டன. சக்தியற்ற சினம் கொண்ட, உறைந்து போன ஒரு காளை போல மரங்களின் கூட்டம் ஒன்று உண்மையிலேயே எங்களுக்குப் பட்டது. குழந்தைகள் குசுகுசுத்தார்கள்: செங்குத்துச் சரிவின் அடியில் காலூன்றி நிற்கிறது காளை. அதன் கழுத்து எப்படி வளைந்திருக்கிறது என்று பாருங்கள், தசை நார்கள் அதிர்கின்றன போலும். பூமிக்குள் கொம்பு பாய்ந்திருக்கிறது...

மீஷாவின் சிந்தனை எப்படி? எங்களின் தலைக்கு மேலே தெளிவான, உயிருள்ள சித்திரங்கள் ஓடிக் கொண்டிருந்த போது அவனது சிந்தனை ஆறு தனது பாதையில் சென்றது. தனது நண்பர்களின் வார்த்தைகளைக் கவனமாய்க் கேட்டான் அவன். ஆனால் ஒரு சித்திரம் கூட அவனைக் கவரவில்லை. இச்சிறுவனின் கற்பனை மிகப் பிரகாசமானது, இப்பூமிக்குரியது. ஒருவேளை வாழ்வில் பார்த்து, உணர்வில் பதிந்துவிட்டதையே அவன் கண்டிருக்கிறான். இறுக்கமாகச் சிந்திக்கிற இத்தகையவர்கள் பாட நேரத்தில் எப்படிக் கஷ்டப்படுகிறார்கள். மாணவன் சீக்கிரம் கேள்விக்குப் பதில் சொல்லிவிட வேண்டும் என்று ஆசிரியர் விரும்புகிறார். குழந்தை எப்படிச் சிந்திக்கிறான் என்பதில் அவருக்கென்ன அக்கறை. அவரைப் பொறுத்தவரை, விடையைச் சொல்லிவிடு, மார்க்கைப் பெற்றுக் கொள்! சக்தி வாய்ந்த ஆற்றின் மெதுவான ஓட்டத்தை

விரைவு படுத்த முடியாது என்று அவருக்குத் தோன்று வதே இல்லை. தனது இயல்புக்கு உகந்தவாறு அது ஓடட் டும், அதன் நீர் நிர்ணயிக்கப்பட்ட எல்லையைக் கண்டிப் பாக எட்டிப் பிடிக்கும், தயவு செய்து அவசரப் படாதீர் கள், பதட்டப் படாதீர்கள். வல்லமை வாய்ந்த ஆற்றை பிர்ச் மரக் குச்சிகளால் தடுக்க முயலாதீர்கள். இதெல் லாம் பயன் தராது.

...ஒப்பீட்டு அளவில் பிராணி உலகத்தின் மற்ற உயிர்களை விட, மனிதனின் உடல் வளர்ச்சி (பிறப்பிலி ருந்து முதிர்ச்சி வரை) மிக நீண்ட நிகழ்ச்சிப் போக் கைக் கொண்டது என்பது குறித்து ஒவ்வொரு ஆசிரிய ருமா நினைத்துப் பார்க்கிறார்? இருபது வயது வரையும் அதற்கு மேலாகவும் மனித உடல் வளர்கிறது, உறுதிய டைகிறது. மனித உடல் வளர்ச்சிக்கு நீண்ட காலம் பிடிப்பது இயற்கையில் ஒரு பெரிய இரகசியமாகும். நரம்பு மண்டலம், அதாவது மூளைப் புறணியின் அரைக் கோளங்கள் வளர்ச்சியடைவதற்காக, உறுதியடைவதற் காக, பயிற்சி பெறுவதற்காகவே இவ்வளவு காலத்தை இயற்கை ஒதுக்கி இருக்கிறது போலும். **நரம்பு மண்டலத்தின் இளமைக் குழந்தைப் பருவமும் மூளையின் குழந்தைப் பருவமும்** நீண்ட காலத்துக்கு மனிதனிடம் நீடிப்பதனால்தான் மனிதன் மனிதனாக மாறுகிறான்.

சுற்றியுள்ள சூழலுக்கு நுண்ணிய முறையில் பதி லளித்து, குறிப்பிட்ட நிலைமைகளில் சிந்தனைச் செயல் புரிவதற்கும் திறன் படைத்த கோடிக் கணக்கான உயிர ணுக்களுடன் குழந்தை பிறக்கிறது. குழந்தையின் உணர் வுக்குப் பொருள்வகை அடிப்படையை இந்த உயிரணுக் கள் வழங்குகின்றன. பிறப்பிலிருந்து முதிர்ச்சி வரை யோ, முதிர்ச்சி முதல் மரணம் வரையோ உள்ள காலத் தில் ஒரு புதிய உயிரணுவைக் கூட இயற்கை அதிகமாக வழங்குவதில்லை. நரம்பு மண்டலத்தின் சிந்திக்கிற பொரு ளினது இளமைப் பருவத்தில் உயிரணுக்கள் தீவிரச் செயற்பாட்டுடன் அன்றாடம் பயிற்சி செய்ய வேண்டும். இப்பயிற்சிகளுக்கு அடிப்படையாக விளங்குவது உயி

ருள்ள புலனறிவு, கவனித்தல், சிந்திப்பு (contemplation) ஆகியவை ஆகும்.

சுற்றியுள்ள உலகத்துத் தோற்றங்களின் காரணம்—விளைவு தொடர்புகளின் சாரத்திற்குள் ஆழமாய் ஊடுருவிப் பார்ப்பதற்குக் கற்றுக் கொள்வதற்கு முன்னால் சிந்தனையில் பயிற்சிகள் பெறுகிற காலத்தைக் குழந்தைப் பருவத்தில் மனிதன் கடந்து செல்ல வேண்டும். பொருள்களையும், நிகழ்ச்சிகளையும் மனதில் காண்பது என்பதே இந்தப் பயிற்சிகள் ஆகும். உயிருள்ள தோற்றத்தைக் குழந்தை காண்கிறது, பின்னர் கற்பனை செய்கிறது, தனது மனத்தோற்றத்தில் இந்தத் தோற்றத்தைப் படைத்துக் கொள்கிறது. உண்மையான பொருளை மனதில் காண்பது, கற்பனாலங்கார நிகழ்ச்சியை மனத்தோற்றத்தில் உருவாக்குவது ஆகிய சிந்தனைச் செயலின் இரு கட்டங்களிலும் எத்தகைய முரண்பாடும் இல்லை. தேவதைக் கதைகளின் கற்பனாலங்கார நிகழ்ச்சியைக் குழந்தை புலனறிவில் ஏற்றுக் கொள்கிறது, அது பற்றிச் சிந்திக்கிறது, பிரகாசமான உண்மையாக குழந்தையே அதனை உருவாக்குகிறது. கற்பனாலங்கார நிகழ்ச்சிகளை உருவாக்குவதுதான் கொந்தளிப்பு மிகுந்த சிந்தனைத் தளிர்கள் விடுவதற்குத் தேவையான, உயர் குணம் கொண்ட அடிமண் ஆகும்.

பிரகாசமான, உயிருள்ள, கண்ணாரக் காணத் தக்க சுற்றியுள்ள உலகத்துப் பொருள்களுடன் குழந்தைப் பருவத்துச் சிந்தனா நிகழ்ச்சிப் போக்குகள் மிகவும் நெருக்கமாகத் தொடர்பு கொண்டிருக்க வேண்டும். ஆரம்பத்தில் காரண-விளைவுத் தொடர்புகள் பற்றி நினைத்துப் பார்க்காமல், பொருளைக் கூர்ந்து பார்த்து அதில் புதிதாக எதையாவது கண்டு பிடிக்கட்டும். அந்திக் கருக்கலால் மூடப்பட்ட மரங்களின் கூட்டத்தில் மூர்க்காவேசம் கொண்ட காளையைக் கண்டான் சிறுவன். இது வெறுமே குழந்தைக் கற்பனையின் விளையாட்டல்ல. சிந்தனைக் கலையம்சமும் கவிதைக் கலையம்சமும் ஆகும் இது. மற்றொரு குழந்தையோ அதே மரங்களில்

வேறொன்றை, தனது கற்பனையால் காண்கிறது. புலன றிவு, கற்பனை, சிந்தனை ஆகியவற்றில் தனது சொந்த அம்சங்களை அவன் புகுத்துகிறான். ஒவ்வொரு குழந்தை யும் விஷயங்களைப் புலனறிவில் ஏற்றுக் கொள்வது மட்டு மின்றி, சித்திரத்தைத் தீட்டுகிறது, உருவாக்குகிறது, படைக்கிறது. குழந்தையின் உலக மனத் தோற்றம் ஒரு தனிவிதமான கலைப் படைப்பாகும். குழந்தையின் புல னறிவு ஏற்றுக் கொள்கிற, அதே போதில் குழந்தையால் உருவாக்கப்பட்ட தோற்றம் பிரகாசமான உணர்ச்சி வண்ணத்தைக் கொண்டிருக்கிறது. சுற்றியுள்ள உலகத்து உருவங்களைப் புலனறிவில் ஏற்றுக் கொள்ளுகையில், கற்பனை அம்சங்கள் சிலவற்றை அத்துடன் சேர்த்துக் கொள்கையில் கொந்தளிப்பாக மகிழ்ச்சியடைகிறார்கள் குழந்தைகள். புலனறிவின் உணர்ச்சிபூர்வத் திருப்தி குழந்தைப் படைப்பிற்கு ஆன்மீக தோட்டாவாகும். உணர்ச்சிபூர்வ எழுச்சி இல்லாமல் குழந்தை மூளையின் உயிரணுக்களது சராசரி வளர்ச்சி சாத்தியமே இல்லை என்று நான் ஆழமான மனவுறுதி பெற்றிருக்கிறேன். உணர்ச்சிவயத் தன்மையுடன் குழந்தை மூளையில் நடை பெறுகிற உடலியல் நிகழ்ச்சிப் போக்குகளும் சம்பந்தம் கொண்டிருக்கின்றன. பதட்டம், எழுச்சி, கவர்ச்சி ஆகியவை தோன்றுகிற நேரத்தில் மூளைப் புறணி அரைக் கோளங்கள் மிக அதிக ஊட்டம் பெறுகின்றன. இந்தக் காலங்களில் உயிரணுக்கள் ஏராளமான ஆற்றலைச் செல விடுகின்றன. ஆனால் அதே போதில் உடலிலிருந்து நிறைய ஆற்றலைப் பெறவும் செய்கின்றன. தொடக்கநிலை வகுப்பு மாணவர்களின் மூளை உழைப்பை பலப்பல ஆண்டுகள் கவனித்து வந்ததால், குழந்தை உணர்ச்சியில் பெரு மளவு எழுச்சி கொள்ளுகையில் அவன் சிந்தனை மிகவும் தெளிவு பெறுகிறது என்றும், ஞாபகத்தில் வைத்துக் கொள்வது மிக விரைவாக நடைபெறுகிறது என்றும் நான் மனவுறுதி பெற்றேன். குழந்தைகட்குக் கற்பிக் கிற நிகழ்ச்சிப் போக்கு இந்தக் கவனிப்புகளுக்கு புதிய ஒளியூட்டியது. தொடக்கநிலை வகுப்பு மாணவனின் சிந்

தனையானது உணர்ச்சிகளிலிருந்தும், உளநெகிழ்ச்சிகளி லிருந்தும் பிரிக்க முடியாததாகும். கற்பிக்கிற நிகழ்ச்சிப் போக்கின் உணர்ச்சி பூர்வத் திருப்தி, குறிப்பாக சுற்றி யுள்ள உலகத்தைப் பற்றிய புலனறிவு — இவை குழந்தைச் சிந்தனையின் வளர்ச்சி விதிகளுக்கான தேவை யாகும்.

...வியப்புக்குரிய இலையுதிர் காலத்துக் கதகதப்பான நாட்கள் வந்தன. நாங்கள் ஓர் இடத்தில் உட்கார்ந் திருக்கவில்லை. வயல்கள், தோப்புகள் ஆகியவற்றின் ஊடே நடந்தோம். கனவுப் பகுதியை அவ்வப்போது பார்த்தோம். கிராமத்திலிருந்து இரண்டு கிலோமீட்டர் தொலைவில் குன்று ஒன்றைக் குழந்தைகள் கண்டு பிடித் தனர். இதிலிருந்து பார்த்தால் தோட்டங்களில் மூழ்கிக் கொண்டிருக்கிற கிராமம், தூரத்து வயல்கள், நீல நிறக் குன்றுகள், வரிவரியாய்க் காடுகள் ஆகியவற்றைக் கொண்ட அற்புதக் காட்சி விரியும். அங்கு ஆச்சரியப் பா[illegible]த்தக்க விதத்தில் சுத்தமாகவும் நிர்மலமாயும் இருந் தது காற்று. பூமிக்கு மேலே ஊசலாடும் வெள்ளிச் சிலந்திவலைகள் அங்கு தென்பட்டன. நீலவானில் இடம் மாறிப் பறந்து செல்லும் பறவைகளின் கூட்டங்கள் அடிக்கடி தோன்றுகின்றன. எங்கள் குன்றுக்கு அருகே சோலை ஒன்று விரிந்திருந்தது. அதன் ஓரத்தில் காட்டு ரோஜாப் புதர்கள் கூட்டம் கூட்டமாய் இருந்தன. ஊதா நிறப் பாசிமணிச் செர்ரிப் பழங்கள், கிளைகளில் தொங்கிய வெள்ளி நிறச் சிலந்தி வலைகள் ஆகியவற்றைக் கண்டு ஆனந்தம் கொண்டோம். ஒவ்வொரு புதரின் உருவத் தையும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டோம். கிராமத்து ஓரத்தில் இருந்த தோட்டங்கள், பாங்கான பாப்ளார் மர வரிசைகள் ஆகியவற்றைக் கூர்ந்து கவனித்தோம். ஒவ்வொரு நாளும் குழந்தைகள் ஏதாவது புதிதாய்க் கண்டுபிடித்தார்கள். பசுஞ் சோலை கருஞ் சிவப்பு உடை உடுத்தியதாயும், செழுமை மிக்க அற்புத வண்ணங்களை இலைகள் பொழிவதாயும் எங்கள் கண்களுக்கு தெரிந்தது.

இந்தக் கண்டுபிடிப்புகள் குழந்தைகட்கு எல்லையற்ற மகிழ்ச்சியை நல்கின.

ஒவ்வொரு மணி நேரத்திலும் ஏதாவது ஒரு கண்டு பிடிப்பை எங்களால் காண முடிந்தால் இவை பலப்பல ஆண்டுகட்குப் போதுமானதாய் இருக்கும். உயிருள்ள வார்த்தை, ஆக்க பூர்வச் சிந்தனை ஆகியவற்றின் ஊற்றுக் கண்கள் அந்த அளவுக்கு வளமை மிக்கதாய், வற்றாத தாய் விளங்கின. கொத்துக் கொத்தாய்க் கிடக்கும் கருஞ்சிவப்புக் காட்டு ரோஜாப் புதர், செடிக்குச் செடி காலை நேரப் பனித் துளிகள் சொட்டுச் சொட்டாய் நின்று நடுங்கிக் கொண்டிருக்கும் சிலந்தி வலைகளின் வெள்ளி நூல்கள் நமக்கு முன்னே காணப்படுகின்றன. இப்பனித்துளிகள் அம்பர் கற்களைப் போல இருக் கின்றன. செடிக்கருகே நாங்கள் மயங்கிப் போய் நிற் கிறோம். எங்கள் கண்களுக்கு முன்னே அற்புதங்கள் நிகழ் கின்றன: சிலந்தி வலையின் ஒரு முனையிலிருந்து பனித்துளி கள், உயிருள்ளவை போன்று, ஊர்ந்து வருவது போல தொங்கலான நடுப் பகுதிக்கு ஓடி வருகின்றன, ஒன்று டன் ஒன்று கலக்கின்றன. ஏன் அவை பெரிதாகவில்லை, பூமியில் விழவில்லை? இக்காட்சியில் நாங்கள் ஒன்றிப் போனோம். பனித் துளிகள் வேகமாக ஆவியாகி விடு கின்றன. கண்ணுக்கு முன்னால் அவை பருமனில் குறை கின்றன, பின்னர் ஒரேயடியாக மறைந்து விடுகின்றன.

''பனித் துளிகளைச் சூரியன் பருகி விடுகிறான்'' என்று குசுகுசுத்தாள் லரீசா. குழந்தைக் கற்பனையில் விளைந்த இந்த உருவம் குழந்தைகளுக்கு அக்கறை ஏற்படுத்தியது. புதிய கட்டுக் கதை ஒன்று முளைக்கிறது. காட்டு ரோஜாப் புதர்களுக்கருகே, உயிருள்ள வார்த்தையின் ஊற்றுக்கண் ணுக்கருகே புதியதான அற்புதச் சிற்றாறு ஒன்று ஓடியது. இது தற்செயலாக நிகழ்ந்திருக்கலாம். ஆனால் எப்போ தாவது இது நிகழ்ந்தே தீர வேண்டும்: பனித்துளி, பாசி மணி, பூச்சி வலை என்கிற வார்த்தைகளுக்கிடையே இசையொற்றுமை கண்டாள் லரீசா. இந்த அற்புத ஒற்றுமை குழந்தைகளைப் பிரகாசமடையச் செய்தது

போலிருந்தது. இது வரை அக்காக்களும் அண்ணன்களும் படிக்கிற கவிதைகளைக் கேட்டிருக்கிறார்கள். புத்தகத்திலிருந்துதான் மூத்தவர்கள் படித்திருக்கிறார்கள்.

இப்போதோ சுற்றியுள்ள உலகத்திலிருந்து, உயிருள்ள வார்த்தையிலிருந்து கவிதை பிறந்து விட்டது:

பூச்சிவலையின் மீது
பனித்துளி விழுந்தது இரவில்,—

என்றான் லரீசா. அவளது கண்களில் ஆனந்தம் சுடர் விட்டது. எல்லோரும் மௌனமாகி விட்டனர். ஆனால், இவ்வார்த்தையின் வல்லமைக்கு முன்னால் ஒவ்வொரு குழந்தையின் சிந்தனையும் பறவை போல் உயரே பறந்தது என்று நான் கண்டேன்.

''அம்பர் பாசி மணிகள் அசைந்தாடின, நடுநடுங்கின'' என்று தொடர்ந்தான் யூரா.

பொருள்களின் மூலாதாரத்தை மனிதன் நெருங்குகையில், ஒரு வார்த்தையில் பொருளின் அர்த்தத்தை மட்டுமின்றி, பூவின் மணத்தையும், பூமியின் வாடையையும், உறவு கொண்ட ஸ்டெப்பிகளும் காடுகளும் எழுப்பும் இன்னிசையையும் சொந்த உணர்ச்சிகளையும் அனுபவங்களையும் காணுகையில் என்னவெல்லாம் தோன்றுகிறது.

போதனை விதிகளின்படி, ஒருவேளை, மேலும் கவிதைகள் இயற்றுமாறு குழந்தைகளுக்குச் சொல்லியிருக்க வேண்டும். ஆனால் இந்த விதிகள் எனது அறிவிலிருந்து பறந்து போய் விட்டன. குழந்தைப் படைப்பு வெள்ளத்தால் கவரப்பட்ட நான் பின்வருமாறு பாடினேன்:

பருகியது சூரியன் பனித்துளி,
குளித்தது வெள்ளைப் பூச்சிவலை,
சிரித்தது செந்நிறப் பாசிமணி...

நாங்கள் கூச்சலிட்டோம், புதரைச் சுற்றி ஓடினோம், நாங்கள் இயற்றிய கவிதையைத் திரும்பத் திரும்பப்

பாடினேம். சுற்றியுள்ள உலகமே ஊற்றுக்கண்ணுய்த் திகழ எங்களுக்கு ஏற்பட்ட உற்சாக வெள்ளத்தைப் பற்றி உடனடியாக ஆசிரியர்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்று நான் விரும்புகிறேன். சிந்தனேயின் முதல் பாடங்கள் வகுப்பறையில் இருக்கக் கூடாது, கரும்பலகைக்கு முன்னே நடக்கக் கூடாது, இயற்கைக்கு நடுவே நடைபெற வேண்டும் என்று ஆலோசனே கூற விரும்புகிறேன். உண்மையான சிந்தனே உணர்ச்சி நடுக்கத்தால் ஊடுருவப் பட்டிருக்கும். வார்த்தையின் வாடையை குழந்தை உணருமேயாளுல் அதன் இதயம் உற்சாகத்தால் தழுவப்படும், என்று சொல்ல விரும்புகிறேன். வயலுக்குச் செல்லுங்கள், பூங்காவிற்குப் போங்கள் சிந்தனேயின் ஊற்றுக்கண்ணுல் பருகுங்கள். இந்த உயிருள்ள தண்ணீர் உங்கள் மாணவர்களே புத்திசாலி ஆய்வாளர்களாயும், ஆவல் நிறைந்த, அறிவு வேட்கை கொண்ட மனிதர்களாயும் கவிஞர்களாயும் மாற்றும். கவிதை ரசனேயும், உணர்ச்சி பூர்வக் கலாரசனேயும் ஆறு போல் ஓடாமல் குழந்தையின் முழுமையான அறிவு வளர்ச்சி சாத்தியமில்லே என்று நான் ஆயிரம் முறை மனவுறுதி கொண்டேன். குழந்தைச் சிந்தனேயின் இயல்பே கவிதைப் படைப்பை விரும்புகிறது. சூரியனேயும் மலர்களேயும் போலவே அழகும் உயிருள்ள சிந்தனேயும் நெருங்கிய உறவு கொண்டுள்ளன. அழகின் மனத் தோற்றத்திலிருந்து தொடங்குகிறது கவிதைப் படைப்பு, இயற்கை அழகு புலனறிவைக் கூர்மைப் படுத்துகிறது, படைப்புச் சிந்தனேயைத் தட்டியெழுப்புகிறது, சொந்த அனுபவ உணர்ச்சிகளால் வார்த்தையை நிரப்புகிறது. குழந்தைப் பருவத்தில் பெருமளவு வார்த்தைகளே மனிதன் ஏன் கிரகித்துக் கொள்கிருன்? ஏனெனில், இந்தக் காலத்தில் அவனுக்கு முன்ஞல் சுற்றியுள்ள உலகத்தின் அழகு முதன்முதலாக விரிகிறது. ஏனெனில், ஒவ்வொரு வார்த்தையிலும் அதன் அர்த்தத்தை மட்டும் அவன் பார்ப்பதில்லே, அழகினது மிக நுண்ணிய வேறுபாட்டையும் அவன் அதில் காண்கிருன்.

படிப்பில் தேர்ச்சி பெறாத மாணவர்களில் 85 சதவீதத்தினரின் பின்தங்கலுக்குப் பிரதான காரணம் மோசமான ஆரோக்கியமோ, ஏதாவது அசௌக்கியமோ அல்லது நோயோதான் என்று எங்களது அனுபவம் நிரூபித்தது. இது அடிக்கடி கண்ணுக்குத் தெரியாமலே இருக்கும். தாய், தந்தை, மருத்துவர், ஆசிரியர் ஆகியோரின் கூட்டு முயற்சியாலேயே இதனைக் குணமாக்க முடியும். குழந்தையினது உயிர்ப்புத் தன்மையாலும், இயக்கத்தாலும் மறைக்கப்பட்டுத் தெரியாமலிருக்கிற இதய நாள அமைப்பில், மூச்சுக் குழலில் ஏற்படுகிற அசௌக்கியமோ, நோயோ, குடல் வியாதியோ பல நேரங்களில் வியாதிகளே அல்ல, சாதாரண உடல் நலத்தில் ஏற்படுகிற பிறழ்ச்சியே. மெதுவாக ஏற்படுகிற சிந்தனை என்று அழைக்கப் படுவது, பெரும்பாலும் பொதுவான அசௌக்கியத்தின் விளைவே என்றும், இதனைக் குறைந்த மூளைத்திறனே இல்லை என்றும், ஏதாவது உடலியல் மாற்றங்களோ, மூளைப் புறணியின் அரைக் கோளத்து உயிரணுக்களின் செயலில் ஏற்படுகிற கோளாறோ இதற்குக் காரணமல்ல என்றும் பல்லாண்டுச் சோதனைகள் நிரூபித்திருக்கின்றன. சில குழந்தைகளின் முகம் நோயால் வெளிறிப் போய் இருப்பதைப் பார்க்கலாம். சிலவற்றுக்குப் பசி இருக்காது. அதிக உணவு வழங்குவதற்குச் செய்யப் படுகிற சிறிய முயற்சியும் எதிர்விளைவு உண்டாக்கும். உடலில் கொப்புளங்கள் தோன்றும். மிகக் கவனமாகச் செய்யப் படுகிற ஆராய்ச்சிகள் கூட ஒரு தகவலும் தருவதில்லை: எல்லாம் ஒழுங்காக இருப்பது போலவே தோன்றும். அறைக்குள்ளேயே நீண்ட நேரம் அடைந்து கிடப்பதால் வளர்சிதை மாற்றத்தில் கோளாறு ஏற்படுகிறது என்பதே இதற்குப் பெரும்பாலும் காரணமாகும். இத்தகைய கோளாறு ஏற்படுகையில், ஒருமுனைப்பட்டு மூளை உழைப்புச் செய்யும் திறனை இழந்து விடுகிறது குழந்தை. உடல் வேகமாக வளர்ச்சி பெறும் காலத்திலும்

பாலின முதிர்ச்சி பெறும் காலத்திலும் ஆரோக்கியக் குறைவின் அளவு அதிகரிக்கிறது.

உழைப்பு நேரத்தையும் ஓய்வுக் காலத்தையும் மாற்றி யமைப்பதுதான் இதற்கு ஒரேயொரு தீவிரமான மருத்துவ மாகும். சுத்தமான காற்றில் நீண்ட நேரம் இருப்பது, சிறு சாளரம் திறந்திருக்கையில் தூக்கம் கொள்வது, சீக்கிரம் படுப்பது, சீக்கிரம் துயிலெழுவது நல்ல உணவு ஆகியவை இதற்கு அவசியமாகும்.

சில குழந்தைகள் பார்வைக்கு ஆரோக்கியமாகத் தோன்றுவார்கள். அவர்களது உழைப்பைக் கவனமாகப் பரிசீலித்தால் மறைவான நோய் எதையாவது காணலாம். ஒரு சுவையான விஷயம்: பாடநேரத்தின் ஒவ்வொரு நிமி டத்தையும் ஆசிரியர் நிறைக்க முயலும் போது மறைவான நோய் தெளிவாகத் தெரியும். ''பாட நேரத்தின் ஒரு நிமிடம் கூட வீணுகக் கூடாது'' என்கிற ஆசிரியரின் போக்கு குழந்தைகள் சிலருக்கு ஒத்துக் கொள்வதில்லை. முற்றிலும் ஆரோக்கியமான குழந்தைகளுக்குக் கூட இந்த ''விரைவு படுத்தல்'' மட்டு மீறியதாய், கெடுதியைச் செய்யும். மூளை யில் ஏற்படுகிற அளவுக்கு மீறிய அழுத்தத்தால், குழந்தை களின் கண்கள் மங்கி, பார்வை குன்றி, இயக்கம் தொய்ந்து போகும். எதுவும் செய்யத் திறனின்றிப் போகிருன் குழந்தை. அவனுக்கு சுத்தக் காற்றுதான் வேண்டும். அவனைப் ''பிணைத்து வைத்திருக்கிருர்'' ஆசிரியர். ''சீக் கிரம் சீக்கிரம்'' என்று விரட்டுகிருர்...

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடம்'' வேலை தொடங் கிய முதல் வாரங்களில் குழந்தைகளின் ஆரோக்கியத்தை நான் கவனமாகப் பரிசீலித்தேன். குழந்தைகள் அனைவரும் கிராமத்திலேயே, இயற்கையின் மடியிலேயே வளர்ந்தவர் கள் என்ற போதிலும் அவர்களில் சிலர் வெளிறிப் போயும், பலவீன நெஞ்சினராயும் இருந்தனர். வலோத்யா, காத்யா, சான்யா ஆகியோர் மிக ஒல்லியாய் நோஞ்சான்களாய், எலும்பும் தோலுமாய் இருந்தனர். அனேகமாக எல்லா வீடுகளிலும் உணவு நன்ருக இருந்தது. சிறுவர்கள் சிலரின் பலவீனத்துக்கும் வியாதிக்கும் காரணம் அவர்கள்

மூடுதோட்டச் சூழ்நிலையில் வாழ்ந்ததாகும். மிகச் சிறு காற்று வீச்சில் கூட அவர்கள் பட்டுவிடாமல் தாய்மார் கள் அவர்களைப் பாதுகாத்தார்கள் சிறுவர்கள் விரைவில் களைத்துப் போனார்கள். ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத் தின்'' ஆரம்ப நாட்களில் ஒரு கிலோமீட்டர் நடப்பது கூட அவர்களுக்குப் பெரும்பாடாய் இருக்கும். இக்குழந்தை கட்குப் பசி எடுப்பதே இல்லை என்று தாய்மார்கள் கூறினர்.

சிறுவர்களுக்குச் சளிப்பிடித்து விடாமல் இருப்பதற் காக எவ்வளவுக்கு எவ்வளவு அவர்களைக் காப்பாற்றுகிறார் களோ அவ்வளவுக்கு அவ்வளவு குழந்தைகள் பலவீனர் களாகி விடுவர் என்று பெற்றோர்களுக்கு எடுத்துச் சொன் னேன். வெப்ப நாட்களில் குழந்தைகளை வெறுங் காலுடன் பள்ளிக்கு அனுப்புமாறு நான் வேண்டிக் கேட்டுக் கொண்டதற்கு எல்லோரும் இணங்கினர். குழந்தைகளுக்கு இது பெரு மகிழ்ச்சியைத் தந்தது. ஒரு நாள் நாங்கள் வெப்பப் பெருமழையில் மாட்டிக் கொண்டோம். தண்ணீர்க் குட் டை ஒன்றின் வழியாகக் குழந்தைகள் நடந்து போக வேண் டியதாயிற்று. பெற்றோர்கள் அச்சப்பட்டதற்கு மாறாக ஒருவருக்கும் நோய் வரவில்லை. ஏராளமான ஆடைகளால் குழந்தைகளைச் சுற்றி மூடாதீர்கள் என்றும், ''அதிகப்படி யாக இருக்கட்டும்'', ''எதற்கும் இருக்கட்டும்'' என்றெல் லாம் கோட்டுக்களையும் ஸ்வெட்டர்களையும் அவர்களுக்கு மாட்டி விடாதீர்கள் என்றும் மிகவும் கேட்டுக் கொண்டு அவர்களைச் சம்மதிக்கச் செய்ய வேண்டியதாயிற்று. இலை யுதிர் கால, வசந்த கால, கோடை கால நாட்களில் ஒரு நிமிடம் கூட அறையில் அடைந்து கிடக்கக் கூடாது என்பது எங்களிடம் ஒரு விதியாகி விட்டது. ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' முதல் 3-4 வாரங்கள் ஒவ்வொரு நாளும் குழந்தைகள் 2-3 கிலோமீட்டர் தூரம் நடந்தனர். இரண்டாவது மாதம் 4-5 கிலோமீட்டரும், மூன்றாவது வாரம் ஆறு கிலோமீட்டரும் நடந்தனர். வயல்களுக்கும் பள்ளத்தாக்குகளுக்கும் இடையில், சோலைகளிலும் காட் டிலும்தான் அவர்கள் நடந்தனர். இத்தனை கிலோமீட்டர்

நடக்க வேண்டும் என்று குறிக்கோள் வைத்துக் கொள்ளா ததால் நாள் பொழுதில் நடந்த தூரம் குழந்தைகளுக்குத் தெரியாமலே இருந்தது. இயக்கமும் நடையும் வேறு நோக்கங்களை அடைவதற்கான சாதனமேயாகும். உலகத் தைப் புரிந்து கொள்வதாகக் குழந்தை உணருவதால் அது நடக்க விரும்புகிறது. ஓய்ந்து போய், ஆனால் உற்சாகத் துடனும் மகிழ்ச்சியுடனும் வீடு திரும்புவார்கள் குழந் தைகள். களைப்பு இல்லாமல் ஆரோக்கியம் வராது. உழைப்பின் அழுத்தத்துக்குப் பின்னால் குழந்தை ஓய்வு கொள்ளும் போதுதான் அதன் உடலில் உயிர்ப்புள்ள ஊற்றுக்கண்ணாக ஆரோக்கியம் பொழிகிறது.

சுத்தமான காற்றில், சில கிலோமீட்டர்கள் நடந்த பின், பெற்றோர்களின் கூற்றுப்படி, குழந்தைகளிடம் ''ஓநாய்ப் பசி'' தோன்றுகிறது. குழந்தைகளுடன் காட் டுக்குக் கிளம்பும் போது, ரொட்டி, வெங்காயம், உப்பு, தண்ணீர், சில பச்சை உருளைக் கிழங்குகள் ஆகியவற்றை உடன் கொண்டு வரும்படி அவர்களிடம் சொல்வேன். ஆரம்பத்தில் பெற்றோர்களுக்குச் சந்தேகம் வந்தது: குழந்தைகள் இதையெல்லாம் சாப்பிடவா போகிறார்கள்? இதை விடச் சத்துள்ள பண்டங்களைக் கூட வீட்டில் அவர் கள் தொடுவதில்லையே. ஆனால், ரொட்டியும், வெங்காய மும், உருளைக் கிழங்கும் காட்டில் வெகு சுவையான உண வென்று தெரிந்தது. மேலும் சிறுவர்களுக்குப் பசி வேறு எடுத்தது. எனவே வீட்டில் கொடுக்கப்பட்ட தட்டு சூப் பையும் அப்படியே பருகி விடுவார்கள். ஒரு மாதத்திலேயே வெளிறிய முகம் கொண்டிருந்த சிறுவர்களின் கன்னங்கள் உப்பி விட்டன. நன்கு பசியெடுக்கிறது என்பதால் குழந் தைகளைப் புகழ்ந்தார்கள் தாய்மார்கள்: முரண்டு பிடிப் பது போய்விட்டது, எது கொடுத்தாலும் தின்னுகிறார்கள்.

இயங்கிக் கொண்டே இருப்பது உடலியல் தேவை களில் ஒன்றாகும். ஓடவும், விளையாடவும் குழந்தைகள் விரும்புகிறார்கள். அவர்களுக்காக சிறு விளையாட்டு மை தானம் ஒன்று அமைத்தோம். விளையாடுவதற்கும் பொழுது போக்குவதற்கும் தேவையான அனைத்தும் சுத்தமான

காற்றில் இங்கிருந்தன. இதைவிட அதிகமாக விஷயங்களைப் பற்றி நான் கனவு கண்டேன். இயக்கம் நிறைந்த விளையாட்டுக்கள் தேவதைக் கதைகளுடனும் கற்பனையுடனும் தொடர்பு கொண்டவையாய் இருக்கும் பொருட்டு குழந்தைக் குடை ராட்டினமும், குழந்தை ஊஞ்சலும் செய்து வைக்க விரும்பினேன். கூன்விழுந்த குதிரை, யானை, கொடிய ஓநாய், தந்திரக்கார நரி ஆகிய உருவங்கள் நமது குடை ராட்டினத்தில் இருக்க வேண்டுமென்று நான் கற்பனை செய்து வைத்திருந்தேன். குடை ராட்டினத்தில் சவாரி செய்வது மட்டுமின்றி கூன் விழுந்த குதிரையின் மீதோ, கொடிய ஓநாய் மீதோ உட்கார்ந்திருந்த உணர்ச்சி அலைகள் தோன்ற வேண்டும். இதெல்லாம் இது வரை வெறும் திட்டமாகவே இருந்தது. அரையாண்டுக்குள், அல்லது ஒரு வருடத்திற்குள் இது நிறைவேறும் என்று நான் திடநம்பிக்கை கொண்டிருந்தேன். குடை ராட்டினம் செய்வதற்குத் தேவையான பொருள்கள் எனக்குக் கிட்டின. குழந்தைகள் பள்ளிக்கூடத்தின் போது, முடிந்த அளவுக்குச் சுத்தமான காற்றில் இருக்க வேண்டுமென்றும், பள்ளிக்கூடத்திற்குக் குழந்தைகளைத் தயார்படுத்த வேண்டுமென்று திட்டமிட்டேன்.

இளைய பள்ளி மாணவர்களின் உடல் வளர்ச்சியை பல்லாண்டுகள் கவனித்து வந்ததால், முழுமையான, ஊட்டம் நிறைந்த உணவு குழந்தைகளுக்கு மிக முக்கியமானது எனும் திடவுறுதி எனக்கு ஏற்பட்டது. உடலுறுப்புக்கள் உறுதியடைவதற்குத் தேவையான, சளி நோய்கள் வராமல் தடுப்பதற்கான, வளர்சிதை மாற்றத்தில் முறிவேற்படாமலிருப்பதற்கு அவசியமான முக்கிய சத்துக்கள் பல குழந்தைகள் உட்கொள்கிற உணவில் போதிய அளவிற்கு இல்லை. எட்டுக் குடும்பங்களில்தான் தேன் இருந்தது. உருவகமாகச் சொன்னால் தேன் அருந்துவது என்பது சூரியத் துண்டு ஒன்று சாப்பாட்டுத் தட்டில் இருப்பதற்குச் சமம். நான் பெற்றோர்களிடம் பேசி, குழந்தைகளின் ஆரோக்கியத்திற்குத் தேன் உபயோகிப்பது எவ்வளவு முக்கியமானது என்று எடுத்துக் காட்டினேன். செப்டம்பர்

இறுதிக்குள்ளாக பதின்மூன்று பெற்றோர்கள் ஒன்றிரண்டு தேனீக் கூடுகள் வைத்தார்கள். வசந்த காலத்தில் இருபத்து மூன்று குடும்பங்களில் தேன்கூடுகள் இருந்தன.

காட்டு ரோஜாப் பூக்களிலும் செர்ரிப் பழங்கள் போன்ற வைட்டமின்கள் நிறைந்த பழங்களைக் கொண்டும் தேவையான ஜாம்கள் செய்து பனிக்காலத்திற்காக இருப்பில் வைத்துக் கொள்ளுமாறு இலையுதிர்காலத்திலேயே தாய்மார்களுக்கு ஆலோசனை சொன்னேன். பழமரங்கள், குறிப்பாக ஆப்பிள் மரங்கள் ஒவ்வொரு வீட்டுத் தோட்டத்திலும் போதுமான அளவுக்கு இருக்க வேண்டும் என்றும் பெற்றோர்களுக்கு எடுத்துச் சொன்னேன். பனிக்காலம் முழுதும் பசிய பழங்கள் கிடைக்க வேண்டும். கிராமத்துச் சூழல்களில் இது மிக எளிது. கொஞ்சம் உழைக்க மட்டும் வேண்டும்.

கோதுமை, ரை, பார்லி, பக்வீட் போன்ற தானியத் தாவரங்களின், புற்களின் ஃபிடனிசீடுகள் (phytonysybes) நிறைந்த காற்று ஆரோக்கியத்திற்கு அமிர்தமாகும். வயல்களுக்கும் புல்வெளிகளுக்கும் நான் குழந்தைகளை அடிக்கடி அழைத்துச் சென்றேன். பயிர்த் தானியங்களின் வாடை கொண்ட காற்றை அவர்கள் சுவாசிக்கட்டும். உங்கள் குழந்தைகள் உறங்குகின்ற அறையின் சன்னலுக்கருகே கொட்டை மரங்கள் சிலவற்றை நட்டு வையுங்கள் என்று பெற்றோர்களுக்குச் சொன்னேன். பலவகையான நோய்க் கிருமிகளைக் கொன்றொழிக்கிற மகரந்தப் பொடியை இந்த மரம் காற்றில் கலக்கிறது. தீமை தரும் பூச்சிகள் கொட்டைகளின் வாசத்தைத் தாங்குவதில்லை. கொட்டை இருக்கிற இடத்தில் ஈயோ கொசுவோ இருக்காது. ஒவ்வொரு வீட்டுத் தோட்டத்திலும் கோடைகாலக் குளியலறை இருக்க வேண்டுமென்றும் நான் சொன்னேன்.

குழந்தைகள் பலர் மோசமான பார்வை கொண்டிருப்பதற்குக் காரணம் என்ன? என்னைப் பல ஆண்டுகளாக இந்தக் கேள்வி அலைக்கழித்தது. மூன்றும் வகுப்பிலேயே குழந்தை கண்ணாடி அணிந்து கொள்ள நேர்வது ஏன்? ஒழுங்கு முறை, குறிப்பாக குழந்தையை உடலுறுதி

பெறவிடாமல் செய்து அழற்சி நோய்கள் சுலபமாய்த் தீண்டுவதற்கு வழி செய்கின்ற வைட்டமின்கள் குறைந்த உணவுதான், படிப்பினுல் பெறுகின்ற களைப்பைவிடத் தீமை தருவதாய்க் குழந்தைக்கு விளங்குகிறது என்று இளம் வயதுக் குழந்தைகள் பலரைக் கவனித்து வந்த தால் முடிவு செய்தேன். குழந்தைப் பருவத்தில் வந்த நோய்கள் சில பார்வையைக் கெடுக்கின்றன. சரியான ஒழுங்கு முறை, முழு மதிப்புள்ள உணவு, உடலுறுதி — இவையெல்லாம் குழந்தைக்கு நோய் வராமல் தடுக் கின்றன, சுற்றியுள்ள உலகு பற்றிய கொண்டாட்டம் மிகுந்த ஆனந்த மகிழ்ச்சியை நல்குகின்றன.

குழந்தைகளை நான் கவனித்து வந்த காலம் கவலை மிக்க தோற்றங்களை எனக்குக் காட்டியது. வசந்த காலத் தில், மார்ச் மாதம் முதல் குழந்தைகள் அனைவரின் ஆரோக்கியமும் பலவீனமடைகிறது. குழந்தை களைப் படைந்து போகிறது; அழற்சி நோய்களைத் தடுக்கின்ற உட லின் சக்தி பலவீனப்படுகிறது, வேலைத் திறன் குறைகிறது. வசந்த காலத்து மாதங்களில் குழந்தையின் பார்வை மங்குவது நன்கு வெளிப்படுகிறது.

மருத்துவர்களும், உளநூல் வல்லுனர்களும் எழுதி யுள்ள நூல்களில் இதற்கான விளக்கம் எனக்குக் கிட்டி யது: உடலுறுப்புக்களது பரஸ்பரச் செயற்பாட்டின் லயம் திடீரென மாறுபடுகிறது. வசந்தம் வருகையில் உடலமைப் பில் வைட்டமின் இருப்புத் தீர்ந்து போகிறது. சூரியக் கதிரியக்கத்தின் தீவிரத்தன்மை வசந்த காலத்தில் குறைவ தால் இது நன்கு வெளிப்படுகிறது, நீண்ட நேரம் நிகழ்க் கிற அழுத்தம் நிறைந்த மூளை உழைப்பு நரம்பு மண் டலத்தை களைப்பு நிலைக்கு ஆட்படுத்துகிறது.

இந்தக் காரணங்களை எப்படிப் போக்குவது என்பது பற்றி நான் யோசித்தேன். வைட்டமின்கள் நிறைந்த உண வுப் பொருள்களை வசந்த காலத்துக்கு என்றே சேர்த்து வைக்கிற வேலையைப் பெற்ருேர்கள் அக்கறையுடன் கவனிக்கத் தொடங்கினுர்கள். பனிக் காலத்திலும் வசந்த காலத்திலும் வெய்யில் வந்த ஒவ்வொரு நாளையும் சுத்த

மான காற்றில் மிக அதிகமாக நடப்பதற்குப் பயன்படுத்த முயன்றேம்.மூளை உழைப்பின் அழுத்தத்தை வசந்த காலத்தில் அகற்றி விடுவதற்கு என்ன செய்வது என்பது எனது சிந்தனையை ஆட்கொண்டிருந்தது. மூளைச் செயலைப் பன்முகப்படுத்துவதுதான் இதற்கு வழி என்று நான் முடிவு கட்டினேன். சிந்தனை நிகழ்ச்சிப் போக்கு முடிந்த அளவுக்கு இயற்கையின் மத்தியில் நடக்க வேண்டுமே தவிர, வகுப்பறையில் அல்ல. இச்சிந்தனை உடலுழைப்புடன் இணைந்து நடைபெற வேண்டும். படிப்படியாக வசந்த காலக் கல்வியின் ஒரு விதியாகி விட்டது இது.

போருக்குப் பிந்திய முதலாண்டுகளில் குழந்தைகள் பலர் நரம்புத் தளர்ச்சிக் கோளாறுக்கு ஆட்பட்டிருந்தனர். எனது மாணவர்கள் சிலரிடம் (குறிப்பாக தோல்யா, கோல்யா, ஸ்லாவா, ஃபேத்யா) இது ஒரு மனச் சோர்வாயும், வாழ்க்கையிலிருந்து விலகிப் போன ஒரு தன்மையாகவும் வெளிப்பட்டது. குழந்தைகளின் கட்டுண்ட தன்மை, கூச்சம், தீர்மானமின்மை, நோய்த்தன்மையுள்ள நாணம் ஆகியவை நரம்பு வியாதியாக வளர்ந்து விடாமல் இருப்பதற்கு முடிந்ததெல்லாம் செய்தேன் நான். குழுவின் வாழ்க்கை குழந்தைகளுக்கு மகிழ்ச்சியைத் தருமாறு செய்வதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதற்காக அடிக்கடி கலந்து பேசிய ஆரம்ப வகுப்பு ஆசிரியர்களாகிய நாங்கள், குடும்பத்தில் குழந்தைக்கு எதிர்ப்படுகிற துன்பங்கள், வருத்தங்கள், சச்சரவுகள் ஆகியவற்றைப் பள்ளிச் சூழலில் குறிப்பாகச் சமன் செய்ய வேண்டும் என்னும் முடிவுக்கு வந்தோம். குழந்தைகளின் மெல்லிய இதயத்தில் தீயது எதுவும் பட்டுவிடாமல் பார்த்துக் கொள்வதற்காக, குழந்தையின் மனத்தில் என்ன நிகழ்கிறது, எத்தகைய இதயத்துடன் அவன் பள்ளிக்கு வந்திருக்கிறன் என்பதைப் போதகர்கள் **அறிந்து கொள்ள** முயன்றனர். ஏதாவதொரு குழந்தையின் வாழ்வு கூர்மையான கவனத்துக்கு உரியதாய் இருந்தால் ''உளவியல் செமினர்'' என்றழைக்கப்பட்ட கூட்டத்தில் அது பற்றி நாங்கள்

விவாதித்தோம். பள்ளிக் குழு குழந்தையின் துக்கங்களை யும், வருத்தங்களையும் அகற்ற வேண்டும்.

துக்ககரமான அனுபவ உணர்ச்சிகளால் உடைந்து போன மனம் கொண்ட குழந்தைகளின் மீது குறிப்பாக அதிகக் கவனம் செலுத்த வேண்டியிருந்தது. கோல்யா, சாஷா, தோல்யா, பெத்ரிக், ஸ்லாவா ஆகியோரின் நரம்பு கள் அவ்வப்போது இறுக்கம் நிறைந்ததாய் இருந்தன. இவர்களில் யாரையாவது தொட வேண்டியதுதான் குழந்தை ''மூண்டெரிந்து'', ''வெடித்துச் சிதறி'' விடு வான் போலிருந்தது. சில நாட்களில் இக்குழந்தைகளிடம் கேள்வி எதையும் கேட்கவே கூடாது. மற்ற குழந்தைகளின் மீது பயன் மிக்க செல்வாக்குச் செலுத்துகிற போதனு முறை இவர்களிடம் ஒரு பயனும் அளிக்கவில்லை. மருத்து வர்களின் நூல்கள் சிலவற்றில் மருத்துவப் போதனை என்று ஒரு கருத்தைக் கண்டிருக்கிறேன். மன இயக்கத்தின் நோய்த் தன்மை நடத்தையின் மீது தனது முத்திரையைப் பதித்திருக்கிற குழந்தைக்குத் தர வேண்டிய போதனை யின் சாரத்தை இக்கருத்து வெகு துல்லியமாக வெளியிடு கிறது. மருத்துவப் போதனையின் பிரதான கோட்பாடுகள் பின்வருவன: 1) எளிதில் புண்படத் தக்கக் குழந்தை யின் மன இயக்கத்தைப் பாதுகாப்பது; 2) துயரம் தரத் தக்க எண்ணங்கள், அனுபவ உணர்ச்சிகள் ஆகியவற்றிலி ருந்து குழந்தையின் கவனத்தை பள்ளி வாழ்வின் எல்லா முறைகளிலும், வழிகளிலும் திருப்பி விடுவது, மகிழ்ச்சி கரமான உணர்ச்சிகளை அவர்கள் மனத்தில் தூண்டி விடு வது; 3) தன்னை ஒரு நோயாளியைப் போல நடத்துகிறார் கள் என்று குழந்தை அறிந்து கொள்ளாத விதத்தில் நடந்து கொள்வது.

எதற்கெடுத்தாலும் ஹிஸ்டீரியா நரம்பு நோய் கொள் கிற குழந்தை வலோத்யா பள்ளியில் இருந்தான். தாயும் தந்தையும் குழந்தையைக் கண்டு வியப்படைவது என்னைப் பெரும் கவலைக்குள்ளாக்கியது. தமது குழந்தை தனிச் சிறப்பு வாய்ந்தவன் என்று அவர்கள் தமக்குத் தாமே நம் பிக்கை ஊட்டிக் கொண்டனர். தவிர்க்க முடியாத ஓர்

ஏமாற்றம் ஏதாவது சிறுவனுக்கு ஏற்பட்டால் பெற்றோர் களிடம், பொதுவாக பெரியவர்களிடமே ஒரு வெறுப்பு ஏற்பட்டு விடுமோ என்று பயந்தேன். அடக்கத்தையும், மற்றவர்களிடம் மரியாதை காட்ட வேண்டும் என்பதை யும் கற்றுத் தருவதே இத்தகைய குழந்தைகளுக்குப் பிர தான சிகிச்சை என்று நான் திடமாக நம்புகிறேன். தனக்கு நெருக்கமான ஒவ்வொருவருக்குள்ளும் ஒரு மனிதனை வலோத்யா பார்க்க வேண்டும் என்பதற்காக நான் முயற்சி செய்தேன்.

மெதுவாக, மனச்சோர்வுள்ள சிந்தனைத் செய்கிற குழந்தைகளைப் பற்றி மருத்துவப் போதனையில் குறிப்பாகப் பேசப்படுகிறது. இதயத் தசை, குடல் தசை நோய் களுக்குச் சிகிச்சை செய்வது போலவே மூளைப் புறணி அறைக்கோளங்களது உயிரணுக்களின் தொய்வுக்கும், மந்தத்துக்கும் கவனமாய் பொறுமையுடன் சிகிச்சை செய்ய வேண்டும் ஆனல், இந்தச் சிகிச்சைக்கு ஆயிரம் மடங்கு அதிக எச்சரிக்கையும், போதனைத் திறனும் ஒவ்வொரு குழந்தைக்கும் உரிய தனித்தனிச் சிறப்புக் கள் பற்றிய அறிவும் தேவை.

## குழந்தை ஒரு கலைஞன்

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' பாடம் தொடங்கிய ஒரு வாரத்திலேயே சிறுவர்களுக்கு நான் சொன்னேன்: ''நாளைக்கு சித்திர நோட்டும் பென்சில் களும் கொண்டு வாருங்கள், சித்திரம் வரைவோம்.'' அடுத்த நாள் பள்ளித் தோட்டத்துப் புல்வெளியில் நாங் கள் அமர்ந்து கொண்டோம். குழந்தைகளிடம் கூறினேன்: ''உங்களைச் சுற்றிலும் பாருங்கள். நீங்கள் பார்க்கிற அழகான பொருளை, உங்களுக்கு மிகவும் பிடித்தமான பொருளைப் படம் வரையுங்கள்.''

எங்கள் முன்னல் இலையுதிர் கால வெய்யில் பொழிகிற பள்ளித் தோட்டமும் பண்படுத்தப்பட்ட நிலமும் இருந் தன. குழந்தைகள் கீச்சிட்டார்கள்: சிவப்பு முலாம் பழமும் மஞ்சள் முலாம் பழமும் ஒன்றுக்குப் பிடித்தன, இன்னென்

றுக்கு பூமியை நோக்கித் தாழ்ந்திருக்கிற சூரியகாந்தியின் தலை பிடித்தது, மூன்றாவது குழந்தைக்குப் புறாக்கூடும், நான்காவதுக்குத் திராட்சைக் கொத்துகளும் பிடித்தன, ஷூராவுக்கு வானத்தில் மிதந்து செல்கிற பொதுபொது வென்று இருக்கிற மென்மையான மேகங்கள் பிடித்தன. தடாகத்தின் கண்ணாடி போன்ற மேற்பரப்பில் நீந்துகிற தாராக்கள் பிடித்தன செர்யோஷாவிற்கு. மீன் வரைய விரும்பினான் தன்கோ. தனது மாமாவுடன் ஒரு நாள் மீன் பிடிக்கச் சென்றது பற்றி உற்சாகத்துடன் சொன்னான் அவன்: ''நாங்கள் பிடித்தது ஒன்றுமில்லை, ஆனால் மீன்கள் எப்படி ''விளையாடுகின்றன'' என்று பார்த்தோம்.

''நான் சூரியன் வரைய விரும்புகிறேன்'', என்றாள் நீனா.

பின்னர் ஒரே மௌனம். உற்சாகம் கொண்டு குழந்தைகள் சித்திரம் வரைந்தார்கள். சித்திரப்பாட போதனை முறை பற்றி நான் நிறையப் படித்திருக்கிறேன். இப்போதோ, என் முன்னால் உயிருள்ள குழந்தைகள் அமர்ந்திருக்கிறார்கள். குழந்தைச் சித்திரம், குழந்தை வரைவது சித்திரப் போக்கும் குழந்தையின் ஆன்மிக வாழ்வின் ஒரு துளி என்று நான் கண்டேன். சுற்றியுள்ள உலகத்திலிருந்து ஏதோ ஒன்றை குழந்தைகள் யாந்திரீகமாக காகிதத்தில் வரைந்து விடுவதில்லை, இந்த உலகத்தில் அவை வாழ்கின்றன, இதற்குள் நுழைகின்றன, அழகைப் படைப்பவர்களாய் இந்த அழகில் மயங்கி நிற்கின்றன. இதோ வேலையில் தன்னையே மறந்து விட்ட வான்யா. அவன் தேன்கூடு வரைகிறான். அருகில் ஒரு மரம், இதில் பெரிய பூக்கள், பூவின் மீது ஒரு தேனீ, இந்தத் தேனீ தேன் கூடு அளவுக்குப் பெரியது. சிறுவனின் கன்னங்கள் சிவந்து விட்டன. அவன் கண்களில் உத்வேகத் தீப்பொறி. இது ஆசிரியருக்குப் பெரு மகிழ்ச்சி தருகிறது.

குழந்தைகளின் படைப்பு—அவர்களது ஆன்மிக வாழ்வின் ஆழ்ந்த தனிச்சிறப்பு வாய்ந்த துறையாகும். சுய வெளிப்பாடும், சுய உறுதிப்பாடும் கொண்ட இப்படைப்பில் ஒவ்வொரு குழந்தையின் தனித்தனியான சுய வாழ்க்

கையும் பிரகாசமாய் விரிகிறது. அனைவரையும் கட்டுப் படுத்துகிற, ஒரே மாதிரியான ஏதோ விதிகளால் இந்தச் சுய வாழ்க்கையை எட்டிப் பிடிக்க முடியாது.

தனக்கு எது பிடித்திருக்கிறது என்று கோல்யா சொல்ல வில்லை. அவன் என்ன வரைகிறான் என்பதில் நான் வெகு அக்கறை கொண்டிருக்கிறேன். சிறுவனின் சித்திர நோட்டில் பெரிய உருண்டைப் பழங்களுடன் கிளைகள் நிறைந்த மரம் ஒன்று நிற்கிறது என்று கண்டேன். அப்படியானால் இது ஆப்பிள் மரம். மரத்தைச் சுற்றி கதிர்கள் வீசும் சிறு சிறு நட்சத்திரங்கள் மொய்த்துக் கொண்டிருக்கின்றன. மரத்திற்கு மேலே சந்திரப் பிறை. இந்தச் சுவாரஸ்யமான சித்திரத்தில் குழந்தையின் அந்தரங்கச் சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் கண்டு பிடிக்க வேண்டும் எனும் ஆவல் மேலிடுகிறது. நாம் உலகத்தைக் கூர்ந்து கவனித்த வேளையில் நமது கண்களில் சுடர் விட்ட உற்சாக ஒளியே அவனது கண்களிலும் காணப்படுகிறதே.

''நட்சத்திரங்கள் போல் மரத்திற்கு மேலே தெரிவது என்ன?'' என்று கோல்யாவைக் கேட்கிறேன்.

''இவை நட்சத்திரங்கள் அல்ல, நிலாவிலிருந்து வந்து தோட்டத்தின் மீது விழுகிற வெள்ளித் தீப்பொறிகள், நிலாவிலும் ராட்சசக் கொல்லர்கள் இருக்கிறார்கள் அல்லவா?'' என்றான் சிறுவன்.

''ஆமாம்'' அமைதியான மாலைப் பொழுதில் குழந்தைக்குக் கிளர்ச்சியூட்டிய சிந்தனைகள் தந்த வியப்பில் நான் பதிலளித்தேன். அதாவது, சிறுவன் இரவு வானத்தைக் கண்டிருக்கிறான், நீலவொளியால் கவரப்பட்டிருக்கிறான், ஆப்பிள் மரங்களுக்கு மேலே நடுங்கிக் கொண்டிருந்த வெளிறிய ஒளியைக் கவனித்திருக்கிறான்.

''ராட்சசக் கொல்லர்கள் எத்தகைய கம்பியை அடித்துக் கொண்டிருக்கிறார்கள்?'' சிந்தனை வயப்பட்ட சிறுவன் கேட்கிறான். இந்தக் கேள்வியை அவன் ஆசிரியரிடம் மட்டும் கேட்கவில்லை இரவு வானத்தைப் பற்றிய, வெளிறிய நிலவொளியைப் பற்றிய, நட்சத்திரங்களின் நாட்டியம் பற்றிய தனது நினைவுகளையே கேட்கிறான்.

சிறுவனின் படைப்பு உற்சாகத்தை நான் கலைத்து விடு வேனோ என்று அஞ்சினேன். மகிழ்ச்சி மிக்க கண்டுபிடிப்பில் எனது இதயம் உறைந்தது: உன்னத உணர்ச்சிகள் உறங்கிக் கொண்டிருக்கிற குழந்தை மனத்தின் அந்தரங்கப் பகுதி களை அவனது படைப்பு திறந்து விடுகிறது. சுற்றியுள்ள உலகத்தின் அழகை உணருவதற்குக் குழந்தைக்கு உதவி செய்கையில் இந்த அந்தரங்கப் பகுதிகளை ஆசிரியர் கவன மின்றித் தொட்டு விடுகிறார்.

லரீசாவைப் பின்பற்றி ராட்சசக் கொல்லர்களை நானும் வரையத் தொடங்கினேன். நான் சுமாராக வரை கிறேன் என்றே எனக்குத் தோன்றியது. நான் வரைந்த கொல்லர்கள் உண்மையில் சம்மட்டி அடிப்பவர்கள் போலவே இருந்தனர். பட்டறைக் கல்லோ கூட்டுப் பண்ணைப் பட்டறையில் இருக்கிற கல் போலவே இருந் தது. நான் வயது வந்த மனிதன் என்பதை மறந்து விட்டு சந்தோஷ உணர்ச்சி கொண்டேன். ''எனது கொல்லர்கள் லரீசா வரைந்த கொல்லர்களை விட நன்றாக இருக்கிறார் கள். ஆனால் எனது படத்தில் குழந்தைகளின் பார்வை நிலைக்கவில்லை. லரீசாவைச் சுற்றியோ ஒரு கூட்டமே கூடி விட்டது. ''அவள் அப்படி என்ன வரைந்து விட்டாள்?'' என்று யோசித்தேன் நான். குழந்தைகளின் தலைக்கு மேலே பார்த்தேன்: குழந்தையின் படத்தில் சிறப்பாக ஒன்றுமே இல்லை. பின் எதற்காக எல்லோரும் மகிழ்ச்சி கொள்கிறார் கள், எனது சித்திரத்தைப் பார்க்க மாட்டேன் என்கிறார் கள்? குழந்தைகள் ஒரு விதமாக உலகத்தைப் பார்க்கிறார் கள் என்றும், கலாபூர்வச் சித்திரத்தில் அவர்களுக்கென்று ஒரு மொழி இருக்கிறது என்றும், எவ்வளவுதான் முயன் றாலும் இந்த மொழிக்கு மாற்று மொழி படைக்க என்னால் முடியாது என்றும் சிறுமியின் சித்திரத்தை எந்த அள வுக்குக் கூர்ந்து பார்த்தேனோ அந்த அளவுக்குத் தெளி வாய் உணர்ந்தேன். எனது ராட்சசக் கொல்லர்கள் சாதா ரணத் தொப்பி அணிந்திருக்கிறார்கள், ஆடை தரித்திருக் கிறார்கள், நீண்ட தாடியும், காலணிகளும் கொண்டிருக் கிறார்கள். அவளது கொல்லர்களின் பரட்டைத் தலைகளைச்

சுற்றி தீப்பொறிகள் சுடர் விடுகின்றன. தாடிகள் வெறும் தாடிகள் அல்ல. அவை நெருப்புக் காற்றுக்கள். பிரம்மாண் டமான சம்மட்டிகள் தலைகளைவிட அனேகமாய் இரண்டு மடங்கு பெரியவை... குழந்தையைப் பொறுத்த வரை இவை உண்மைக்கு அப்பாற்பட்டவையல்ல—இதுவே பிரகாசமான உண்மை. கற்பனை வல்லமை, லாவகம், சக்தி வாய்ந்த மனிதன், தீயினது ஆற்றல் ஆகியவற்றின் கற் பனைப் பொதுமை—இவை படைத்த உண்மை. குழந்தைக் கற்பனையின் அற்புத மொழியை நமது மொழிக்குள், பெரிய வர்களின் மொழிக்குள் அடைக்கக் கூடாது. குழந்தை கள் தமக்கிடையே தமது மொழியில் பேசட்டும். ஆரம்ப வகுப்பாசிரியர்களுக்கு நான் ஆலோசனை சொன்னேன்: அளவுப் பொருத்தம், காட்சித் தோற்றம், பரிமாணம் ஆகியவற்றின் விதிகளைக் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுங்கள். இதுவெல்லாம் நல்லதே. அதே போதில் குழந்தைக் கற்பனைக்கு வாய்ப்புக்களைத் தாருங்கள், உல கத்தின் மீது அவர்கள் செலுத்தும் (மனத்தோற்றம்) குழந்தை மொழியை முறித்து விடாதீர்கள்...

ஒவ்வொரு குழந்தையும் தான் வரைந்துள்ள சித்திரம் பற்றிச் சொல்ல விரும்புகிறது. இவர்களின் வாசகங்களில் பிரகாசமான உருவகங்களும், ஒப்புவமைகளும் விலையு யர்ந்த கற்களில் ஒளிர்வது போல ஒளிர்ந்தன. சித்திரம் வரைவது குழந்தைகளின் பேச்சை வளர்த்தது.

வயலுக்கும் காட்டுக்கும் போகும் போது இப்போதெல் லாம் சித்திர நோட்டுக்களும் பென்சில்களும் அனேகமாக எப்போதும் கொண்டு சென்றோம். சட்டைப் பையில் போட்டுக் கொள்ளத் தக்க அளவில், சிறு சிறு சித்திர நோட்டுக்களை, பெரிய வகுப்பு மாணவர்கள் சிறுவர் களுக்குச் செய்து தந்தனர். எங்கள் பள்ளி வாழ்க்கை தொடங்கி சில மாதங்கள் கழித்து, வசந்த காலத்தில் நான் ஒரு பெரிய சித்திர நோட்டுத் தைத்து வைத்தேன். இதில் ஒவ்வொரு குழந்தையும் தன் விருப்பப்படி சுற்றி யுள்ள உலகத்தில் தனக்குப் பிடித்த இடத்தை வரைந்தது. சுருக்கமான வாசகங்களை இதில் நான் எழுதினேன். எங்கள்

குழந்தைக் குழுவினது ஆன்மிக வளர்ச்சியின் ஒரு முழுமையான பக்கமே இதில் அடங்கி இருக்கிறது.

## உயிருள்ள, அழகான பொருள்களைப் பேணுவது

சுற்றியுள்ள உலகத்தில் காணப்படுகிற அழகான உயிருள்ள விஷயங்களில் சில குழந்தைகள் அக்கறை காட்டாமல் இருப்பது எனக்கு மிகவும் கவலையைத் தந்தது. முதல் பார்வைக்குப் புரியாமல் இருக்கிற, குழந்தை புரிகிற கொடிய செயல் என்னைப் பீதிக்கு உள்ளாக்கியது. புல் தரையில் நடந்து போகிறோம் நாங்கள். புல்லின் மீது வண்ணத்துப்பூச்சிகளும், பெருந்தேனீக்களும், வண்டுகளும் பறந்து கொண்டிருக்கின்றன. வண்டு ஒன்றைப் பிடித்த யூரா சட்டைப் பையிலிருந்து துண்டுக் கண்ணாடி ஒன்று எடுத்து பூச்சியை இரு துண்டாக வெட்டி அதன் உட்புறத்தை "ஆராய்ச்சி" செய்கிறான். பள்ளித் தோட்டத்தின் ஆளரவமற்ற ஓர் இடத்தில் தூக்கணாங் குருவிக் குடும்பங்கள் பல பல்லாண்டுகளாகத் தொடர்ந்து வாழ்ந்து வருகின்றன. எப்படியோ நாங்கள் அங்கு போய்ச் சேர்ந்தோம். அக்குருவிக்கூடுகளைப் பற்றி நான் சில வார்த்தைகள் சொல்வதற்கு முன் பறவைக் கூட்டின் மீது கல் ஒன்றை எறிந்தான் ஷூரா. தோட்டத்தில் பூத்துள்ள பூச்செடிகளை எல்லா மாணவர்களும் பாதுகாத்து வந்தனர். லூஸ்யா பாத்திக்குள் நடந்து சென்று செடியைப் பிடுங்கினாள். "மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்" முதல் நாட்களிலேயே இந்தச் சம்பவங்கள் நடந்தன. அழகில் மயங்குவதும், அழகைப் பற்றி அலட்சியமாய் இருப்பதும் குழந்தைகளிடம் கலந்து இருப்பது என்னைத் திடுக்கிடச் செய்தது. எனது மாணவர்களை நான் சந்திப்பதற்கு வெகு காலத்திற்கு முன்பே உன்னத உணர்ச்சியின் முதல் முளையே அழகில் மயங்குவது என்றும், இதனைச் செயலுக்கான தீவிர நாட்டமாக மாற்றி வளர்க்க வேண்டும் என்றும் திடவுறுதி கொண்டிருந்தேன். கோல்யாவின் செயல்களும், தோல்யாவின் செயல்களும் குறிப்பாக என்னைக் கவலைக்

குள்ளாக்கின. ஊர்க்குருவிக் கூடுகளை அழித்து விடுவதில் ஏதோ ஓர் ஆர்வம் கோல்யாவிடம் காணப்பட்டது. கலைந்து போன கூடுகளில் பிடிப்பில்லாமல் கீழே விழுந்து விடுகிற பறவைக் குஞ்சுகளை எண்ணெய் ஆலையின் கழிவு நீர்க் குழாய்க்குள் அவன் வீசி விடுகிறான் என்று சொன்னார்கள். இவ்வாறு வீசப்பட்ட குருவிக் குஞ்சுகள் நீண்ட நேரம் கீச்சிடும், கோல்யாவோ குழாயின் மீது காதை வைத்துக் கொண்டு அச்சத்தத்தைக் கேட்பான். குடும்பத்திற்குள் தீமையைக் கண்ட கோல்யாவிடம் மட்டும் குழந்தைக் கொடுமை இருக்கவில்லை. சாதாரணச் சூழலில் வளர்கிற குழந்தைகளிடமும் இது காணப்பட்டது. உயிர்களுக்கும், அழகுக்கும் தீமை புரிவதும் அவற்றை அலட்சியப் படுத்து வதுமான ''சின்னஞ் சிறு'' வெளிப்பாடுகள் கண்டிக்கத் தக்கவை என்பதைக் குழந்தைகள் புரிந்து கொள்ளாதது என்னை மிகவும் கவலைக்குள்ளாக்கியது. இத்தகைய வெளிப் பாடுகளிலிருந்துதான் குருட்டுத்தனமான இதயமின்மை மெல்ல மெல்லத் தோன்றுகிறது.

ஒளிமயமான நல்லுணர்ச்சிகளைக் குழந்தைகளிடம் எப்படித் தோற்றுவிப்பது? உயிர்களிடமும், அழகுப் பொருள்களிடமும் பரிவுடனும் அக்கறையுடனும் நடந்து கொள்ள வேண்டும் என்று அவர்களது இதயங்களில் உறுதி யேற்படுத்துவது எப்படி? வயலில் நடை போட்டுக் கொண்டிருக்கையில் வெட்டுண்ட இறக்கையுடன் வானம் பாடி ஒன்று புல்வெளியில் கிடந்தது. இடத்திற்கு இடம் தத்திக் கொண்டிருந்தது பறவை. ஆனால் பறந்து போக அதனால் முடியவில்லை. குழந்தைகள் வானம்பாடியைப் பிடித்து விட்டனர். அந்தச் சிற்றுயிர் குழந்தைகளின் கை களிலே நடுங்கியது. பயப்பீதி கொண்ட அதன் சிறு கண் கள் நீல வானத்தை நிமிர்ந்து பார்த்தன. கோல்யா கையில் அதை நெருக்கினான். பறவை வீறிட்டுக் கதறியது. குழந் தைகள் சிரித்தனர். ''வெறுமையாகக் கிடந்த அந்த வயலில் தனது சகோதரர்களால் புறக்கணிக்கப்பட்ட அந்தப் பறவையின் மீது உண்மையிலேயே ஒருவருக்கும் அனு தாபம் இல்லையா?'' என்று சிந்தித்தபடி குழந்தைகளைப்

பார்த்தேன் நான். லீதா, தான்யா, தன்கோ, செர்யோஷா, நீனு ஆகியோரின் கண்களில் நீர் அரும்பியது.

''பறவையை ஏன் சித்திரவதை செய்கிறுய்?'' இரக்கம் நிறைந்த குரலில் கோல்யாவிடம் கேட்டாள் லீதா.

''உனக்குப் பாவமாக இருக்கிறதா? இந்தா, இதற்குப் பணிவிடை செய்'' என்று கூறியவாறு லீதாவை நோக்கிப் பறவையை வீசினுன்.

''பாவம்தான், பணிவிடை செய்யத்தான் போகிறேன்'' வானம்பாடியைத் தடவிக் கொடுத்தபடி சொன்னுள் சிறுமி.

காட்டின் ஓரத்தில் நாங்கள் அமர்ந்தோம். இலையுதிர் காலத்தில் வேறிடம் போகும் பறவைகள் நீண்ட பயணத்திற்குத் தயாராகின்றன என்று குழந்தைகளுக்குச் சொன்னோம். வெறுமையான வயல்களில் தன்னந் தனிப் பறவைகள் தங்கி விடுகின்றன. இந்தப் பறவையின் இறக்கை அடிபட்டிருக்கிறது. மாமிச பட்சிணியின் கால் நகங்களால் முடமாகி [illegible] விடுபட்டுத் தப்பி இருக்கிறது... இனிமேல் கடுமையான பனிக்காலம் பனிப்புயல்களுடன் வரப் போகிறது. இந்த வானம்பாடிக்கு என்ன நேரும்? பாவம் உறைந்து போகும். வசந்த காலத்திலும், கோடை காலத்திலும் ஸ்டெப்பி வெளிகளில் மனோகரமான இசையை நிரப்பி எவ்வளவு அழகாக இந்தப் பறவை பாடுகிறது? சூரியனின் குழந்தை வானம்பாடி. ''சூரிய நெருப்பில் இப்பறவை பிறந்தது'' என்று கட்டுக் கதையில் சொல்லப்படுகிறது. எனவே தான் இப்பறவையை வானம்பாடி அல்லது நெருப்புக் காகம் என்று அழைக்கின்றனர்... கடுமையான பனி கைவிரல்களை மரத்துப் போகச் செய்யும் போதும், கொடுமையான காற்று மூச்சுத் திணறச் செய்யும் போதும் எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது என்பது உங்களில் யாருக்குத்தான் தெரியாது. நீங்கள் அப்போது வீட்டுக்கு ஓடுகிறீர்கள், வெப்பம், நிறைந்த அடுப்பை நோக்கி, இனிமையான நெருப்பை நோக்கி ஓடுகிறீர்கள்... பறவைக் குஞ்சு எங்கே போகும்? அதற்கு இடம் தருவோர் யார்? உறைந்து போய் ஒரு கல்லாக அது மாறி விடும்.

''வானம்பாடி மடிந்து போக நாங்கள் விட மாட்டோம். வெதுவெதுப்பான இடம் ஒன்றில் அதனை வைத்திருப்போம். கூடு கட்டித் தருவோம். வசந்த காலத்திற்கு அது காத்திருக்கட்டும்...'' என்றாள் வார்யா.

வானப்பாடிக்கு எப்படி வீடு கட்டித் தருவது என்பதற்கு போட்டி போட்டுக் கொண்டு ஆலோசனைகள் வழங்கினர் குழந்தைகள். பனிக் காலத்தில் வானம்பாடியை தனது வீட்டில் வைத்திருக்க ஒவ்வொரு குழந்தையும் விரும்பியது. கோல்யா, தோல்யா இன்னும் சில சிறுவர்கள் மட்டும் மௌனமாய் இருந்தனர்.

''குழந்தைகளே, வானம்பாடியை எதற்காக வீட்டுக்கு எடுத்துச் செல்வது? பள்ளிக்கூடத்திலேயே அதற்கு வெதுவெதுப்பான கூடு செய்வோம். தீனி போடுவோம், சிகிச்சை செய்வோம். வசந்தம் வந்தவுடன் நீல வானில் பறக்க விடுவோம்.''

வானம்பாடியை பள்ளிக்குக் கொண்டு வந்தோம். கூட்டுக்குள் அதனை விட்டோம். குழந்தைகளுக்கான அறைக்குள் கூண்டை வைத்தோம். ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு குழந்தை வானம்பாடியிடம் வரும். சிறுவர்கள் அதற்குத் தீனி கொண்டு வந்தனர்.

சில தினங்கள் கழித்து காத்யா ஒரு மரங்கொத்திக் குருவி கொண்டு வந்தாள். அவள் அப்பா அதனைக் காட்டில் கண்டுபிடித்திருக்கிறார். அது மாமிச பட்சிணியின் கால்களில் அகப்பட்டிருந்து எப்படியோ அற்புதமாய்த் தப்பித்திருக்கிறது. மரங்கொத்திக் குருவியின் இறக்கைகள் உயிரின்றித் தொங்கிக் கொண்டிருந்தன. முதுகில் இரத்தம் உறைந்திருந்தது. வானம்பாடியுடன் இதனையும் ஒன்றாக வைத்தோம். மரங்கொத்திக்கு என்ன தீனி தருவது என்று யாருக்கும் தெரியவில்லை. வண்டுகள்தான் தர வேண்டுமா? வண்டுகளை எங்கே தேடுவது? மரப்பட்டைக்கடியிலா?

''எனக்குத் தெரியும்'' பெருமையுடன் சொன்னான் கோல்யா. ''அது வண்டுகளையும் பூச்சிகளையும் மட்டும் தின்பதில்லை. வில்லோ மரத் தளிர்களையும், புல் விதைகளையும் கூட அது தின்னும். நான் பார்த்திருக்கிறேன்...''

என்று இன்னும் ஏதோ சொல்ல வந்தான் சிறுவன், ஆனால் வெட்கப்பட்டு நிறுத்திக் கொண்டான். ஒருவேளை அவன் மரங்கொத்திகளை வேட்டையாடினானோ என்னவோ.

''மரங்கொத்திக்கு உணவு என்னவென்று உனக்குத் தெரியுமல்லவா, அப்படியானால் அதற்குத் தீனி கொண்டு வா. பார், அது எப்படிப் பரிதாபமாகப் பார்க்கிறது.''

கோல்யா தினமும் பறவைக்குத் தீனி கொண்டு வரத் தொடங்கினான். உயிர்ப் பிராணியின் மீது அவனுக்கு இது வரை இரக்கம் வந்ததில்லை. நண்பர்கள் மகிழ்ச்சியடைவது அவனுக்கு ஒரு திருப்தியைத் தந்தது; நமது கோல்யா எப்படிப் பட்டவன், பறவைக்கு என்ன தருவதென்று தெரிந்து வைத்திருக்கிறான். நல்லுணர்ச்சிகள் சுயமரியாதையிலிருந்தாவது தொடங்கட்டும். அதனால் பரவாயில்லை. நற்செயல் ஒரு பழக்கமாகி விடட்டும். பின்னர் அது இதயத்தை உசுப்பி விடும்.

''எப்படிப்பட்ட மனிதனாக நீ விளங்க விரும்புகிறாய்?'' என்ற கேள்விக்கு நூற்றுக் கணக்கான சிறுவர்கள் தந்த பதில்களை நான் நினைத்துப் பார்த்தேன். ''பலசாலியாக, தைரியசாலியாக, துணிவு மிக்கவனாக, புத்திசாலியாக, அச்சமற்றவனாக... நிலைமைகளைச் சமாளிக்கும் சக்தியுள்ளவனாக...'' அன்புடையவனாக... என்று ஒருவருமே சொல்லவில்லை. தைரியம், துணிவு ஆகிய பண்புகளின் வரிசையில் அன்பு ஏன் சேரவில்லை? ஒருவன் அடுத்தவனுக்கு வழங்குகிற உண்மையான இதய வெப்பம் இன்றி உள்ளத்து அழகு இருக்க முடியாது அல்லவா? சிறுமிகளிடம் இருப்பதை விட சிறுவர்களிடம் கனிவு குறைவாய் இருப்பதற்கு என்ன காரணம் என்றும் நான் யோசித்துப் பார்த்தேன். ஒருவேளை, வெறுமே அப்படித் தோன்றுகிறதா? இல்லை, அப்படித்தான் இருக்கிறது. தாய்மையின் உணரப் படாத இயல்புணர்ச்சி சிறு வயதிலேயே சிறுமியிடம் இருப்பதால் அவள் அன்பானவளாயும், இரக்க மனத்தினளாயும், கொஞ்சல் நிறைந்தவளாயும் இருக்கிறாள் போலும். புதிய உயிரை அவள் படைப்பதற்கு வெகு காலத்துக்கு முன்பே உயிரைப் பேணுகின்ற தன்மை அவள் இதயத்தில் நிலை

கொண்டிருக்கிறது. படைப்பில், சிருஷ்டியில், உயிரின் உறுதியில், அழகின் பலத்தில் காணப்படுகிறது கனிவினது வேர், கனிவின் ஊற்றுக்கண். அன்பு அழகுடன் இடையரு த தொடர்பு கொண்டிருக்கிறது.

ஓரியோல் பட்சி ஒன்றை ஃபேத்யா பள்ளிக்குக் கொண்டு வந்த காலை நேரம் சிறுவர்களுக்கு ஒரே கொண்டாட்ட மாய் இருந்தது. இந்தப் பறவையாலும் பறக்க முடிய வில்லை. கால்நடை வளர்ப்புப் பண்ணைக்கு அருகே புதர் களினிடையே சிறுவன் இதைக் கண்டெடுத்திருக்கிறான். ஓரியோல் பட்சி பறவையின் அழகான, பல வண்ண இறக் கைகளை வைத்த கண் வாங்காமல் பார்த்தார்கள் குழந் தைகள். ''பறவை மருத்துவமனை'' (இப்படித்தான் குழந் தைகள் அறையின் ஒரு மூலையை அழைத்தனர்) அருகே பகல் வரை இருந்து விட்டு, அடுத்த நாள் வரலாம் என்று போய் விட்டோம். பாதையோரத்தில் கண்டெடுத்த பல வீனமான, மெலிந்த ஊர்க்குருவிக் குஞ்சு ஒன்றை கோஸ்த்யா கொண்டு வந்தான். தானியத்தையோ, ரொட் டித் துணுக்கையோ கொத்த மறுத்து விட்டது குஞ்சு. பறவையின் நோய் கண்டு வெகுவாக வருத்தப் பட்டான் சிறுவன். இக்குஞ்சு இறந்து போன போது நாங்கள் அனை வரும் வேதனை அடைந்தோம். கோஸ்த்யா வாய்விட்டு அழுதான். சிறுமிகளும் அழுதனர். துயரம் நிறைந்தவனாய் பேச்சின்றி நின்றான் கோல்யா.

யானுஷ் கர்ச்சாக்கின் வார்த்தைகள் என் நினைவுக்கு வந்தன: ''ஒளி மிக்க குழந்தைகளின் ஜனநாயகம் அதிகாரத் தலைமை ஒன்றை அறியாது. பண்ணையாளின் வேர்வையும், தன்னையொத்தவனின் பசியும், விவசாயியினது குதிரை யின் மோசமான தலைவிதியும் அறுபட்ட கோழியும் குழந் தைக்கு சிறு வயதில் வருத்தத்தைத் தருகின்றன. நாயும் பறவையும் அவனுக்கு நெருங்கிய நண்பர்கள். பூவும் வண் ணத்துப்பூச்சியும் அவனுக்குச் சமமானவை. கல்லிலும், சிப்பியிலும் அவன் தனது சகோதரனைக் காணுகிறான். கர்வமும் அகந்தையும் அவனுக்கு அன்னியமானவை. மனி தனுக்கு மட்டுமே மனம் உண்டு என்று அவனுக்குத் தெரி

யாது.''[1] இதெல்லாம் உண்மையே. ஆனால் நல்ல குழந்தை என்பது ஆகாயத்திலிருந்து குதிப்பதில்லை. குழந்தையை அப்படி பயிற்றி வளர்க்க வேண்டும்.

ஒரு பள்ளத்தில் நாங்கள் நடை போட்டுக் கொண் டிருக்கும்போது ஒடிந்துபோன காலுடன் கிடந்த ஒரு முயல் குட்டியைக் கண்டனர். தமது அறைக்கு அதனை எடுத்து வந்து புதிய கூண்டுக்குள் விட்டனர். இன்னொரு பிராணி மருத்துவமனை இவ்வாறு தோன்றியது. மெலிந்து போய் குளிரில் நடுங்கிக் கொண்டிருந்த பூனைக் குட்டி ஒன்றை லரீசா ஒரு வாரம் கழித்துக் கொண்டு வந்தாள். அதை முயல் குட்டியின் கூண்டுக்குள் விட்டனர். குழந்தைகளுக்கு விதவிதமான கவலைகள் வந்தன. முயல் குட்டிக்குக் கேரட் டும், பூனைக் குட்டிக்குப் பாலும் கொண்டு வந்தார்கள் அவர்கள். முயல் குட்டியும் பூனைக் குட்டியும் ஒன்றை யொன்று அணைத்தபடி இனிமையாகத் தூங்கிக் கொண் டிருந்ததை ஒரு நாள் நாங்கள் பார்த்தபோது குழந்தைகள் அடைந்த வியப்புக்கு அளவில்லை. பிராணிகள் விழித்துக் கொள்ளுமோ என்ற பயத்தில் குழந்தைகள் குசுகுசுவென்று பேசிக் கொண்டனர்...

பனிக் காலத்தில் ''பறவை மருத்துவமனைக்கு'' சிட்டுக் குருவிகள் சில வந்து சேர்ந்தன. பனிக் காலத்துக்காக பறவைகளுக்கு வைக்கப்பட்டிருந்த தீனிக் கூட்டிற்கு அருகே இவற்றைக் குழந்தைகள் கண்டெடுத்தனர்... இன் னும் ஒரு சம்பவம் எனக்குப் பெரு மகிழ்ச்சியைத் தந்தது: சிறுவர்கள் சிலர் தத்தமது வீடுகளில் ''பறவை மருத்து வமனையும்'' பிராணிகளுக்கான இடமும் ஏற்படுத்தினர். எங்களது அறையில் மீன் குஞ்சுகளுடன் மீன் தொட்டி ஒன்று தோன்றிய பின், வீட்டில் ஒரு மீன் தொட்டிக்கு வழி செய்யும்படி குழந்தைகள் பெற்றோர்களை வேண்டி னர். பெற்றோர்கள் பலர் பள்ளிக்கு வந்து இது எப்படிச் செய்வது என்று கேட்டனர். மீன் தொட்டிக்குத் தாவரங்

[1] யானுஷ் கர்ச்சாக். **போதனையியல் தேர்வு நூல்கள்.** மாஸ்கோ, ''பிரஸ்விஷேனியேப் பதிப்பகம்'', 1966, பக். 271.

களையும், மீன் குஞ்சுகளையும் கண்டுபிடிப்பது கஷ்டமாக இருந்தது. தீனி கிடைப்பதும் எளிதாக இல்லை. குழந்தைகளின் விடாமுயற்சியால்தான் இந்தக் கஷ்டங்களை நாங்கள் சமாளித்தோம். பெற்றோர்களையும் சரி, என்னையும் சரி அமைதியாக இருக்க விடவில்லை குழந்தைகள். ஸ்லாவா, தீனு ஆகியோரின் பெற்றோர்கள் பள்ளிக்கு வந்தனர். ''குழந்தைகள் எங்களை நிம்மதியாக இருக்க விடுவதில்லை. தங்க நிற மீன்கள் எல்லோரிடமும் இருக்கின்றன, எங்களிடம் இல்லை'' என்றார்கள் அவர்கள். முதிய பள்ளி மாணவர்களிடம் நாங்கள் உதவி நாட வேண்டியதாயிற்று. அந்தக் காலத்தில் பள்ளிப் பட்டறைகள் இருக்கவில்லை. மீன் தொட்டிகள் சம்பந்தமான வேலைகள் குழந்தைகளுக்கான முதல் பட்டறையை ஏற்படுத்துமாறு நிர்பந்தித்தன.

சிறு விளக்கு ஒன்றால் ஒளியூட்டப்பட்ட மீன் தொட்டிக்கருகில் உட்கார்ந்து தங்க நிற மீன் குஞ்சுகளைக் கண்டு ஆனந்தம் கொண்ட அந்த மாலை நேரங்களை நான் ஒரு போதும் மறக்கவியலாது. சமுத்திரத்தின் ஆழத்தைப் பற்றி, கடல் பிராணிகளின் அரிய சுவாரஸ்யமான வாழ்க்கை பற்றி நான் குழந்தைகளுக்கு எடுத்துச் சொன்னேன். வெகு காலத்துக்கு முன்பே பள்ளி முடித்துச் சென்ற, இன்று வயது வந்து மனிதர்கள் ஆகிவிட்ட எனது மாணவர்கள் வாழ்க்கை முழுதுக்கும் இந்த மாலை நேரங்களை மனதில் கொண்டுள்ளனர். சில நாட்களுக்கு முன்பு கோல்யா என்னிடம் சொன்னான்:

''இந்த விளக்கு எனது கனவில் அடிக்கடி வந்தது. அதன் சிற்றொளிதான் அறிவின் முதல் ஊற்றுக்கண்ணாகத் திகழ்ந்தது. இரகசியக் கடல் ஆழங்களையும், விசித்திரமான மீன்களையும் பற்றி இன்னும் அதிகமாகத் தெரிந்து கொள்ள விரும்பினேன்...'' இருபத்தி நான்கு வயதான மனிதன் இத்தகைய அன்புடன் மீன்களைப் பற்றி நினைவு கொள்கிறான் என்றால் இது ஒன்றும் சிறு விஷயமல்ல. நல்லுணர்ச்சிகளின் ஒரு சிறு சிற்றாறு இது. சுற்றியுள்ள உலகத்தின் அழகு அலட்சியம் நிறைந்த இதயங்களில் அன்பு, அனுதாபம் ஆகிய நல்லுணர்ச்சிகளை எப்போது மூட்டி விடும்

என்று நான் உறைந்து போன இதயத்துடன் காத்திருந்தேன். அந்த வருடம் வந்த முதல் இலையுதிர்காலக் குளிரை நான் ஒரு போதும் மறக்க மாட்டேன். நாங்கள் தோட்டத்திற்கு, ரோஜாப் புதருக்குச் சென்று பிரகாச நிறத்தில் மலருகின்ற பூவைப் பார்த்தோம். மென்மையான அதன் இதழ்களில் பனித்துளிகள் படிந்திருந்தன. குளிர் நிறைந்த இரவு நேரத்தை அது சமாளித்தது ஓர் அற்புதமே. அதனைக் கண்ட எங்கள் இதயங்களில் வேதனை நிரம்பியது. இந்த அழகை இனி பனி அழித்து விடும். எனது கண்கள் கோல்யாவின் பார்வையைக் கவனித்தன. சுத்தமான குழந்தை உணர்ச்சிகளை — வேதனையை, கவலையை அவனது கண்களில் அப்போது முதன் முதலாக நான் கண்டேன். பின்னர் நாங்கள் மூடு தோட்டத்துக்குப் போனோம். அங்கு எங்கள் வட்டாரத்திற்கு மிக அரியதான சப்பாத்திக் கள்ளி, ரோடடெண்ட்ரோன் ஆகிய செடிகளைத் தொட்டிகளில் கண்டோம். சப்பாத்திக் கள்ளியின் செந்நிறப் பூக்களுக்கருகே நாங்கள் அமர்ந்தோம். ஆர்வத்துடன் அப்பூக்களைப் பார்த்துக் கொண்டிருந்தோம்.

உயிர்ப் பிராணிகளையும், அழகுப் பொருள்களையும் பேணுகின்ற பழக்கம் குழந்தைகளின் வாழ்வுக்குள் மெதுவாக நுழைந்து விட்டது. 1951ஆம் வருடம் இலையுதிர் காலத்தின் இறுதியில், மரங்களிலிருந்து இலைகள் உதிர்ந்து போன பின்பு நாங்கள் காட்டுக்குப் போனோம். லிண்டன் (Linden) செடி ஒன்றைத் தோண்டி எடுத்து வந்து பள்ளித் தோட்டத்தில் நட்டோம். இந்த மரம் எங்கள் நண்பனாகி விட்டது. எங்கள் உணர்ச்சிகளையும், கவலைகளையும் உணரும் திறன் படைத்த ஓர் உயிர் போல அதனைப் பாவித்து அது பற்றிக் கனவு கண்டோம், கற்பனை செய்தோம், கதைகள் கட்டினோம். வெதுவெதுப்பான மழை பெய்யவே குழந்தைகளுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. எங்கள் நண்பனுக்கு நிறையத் தண்ணீர் வேண்டும். பூமியெங்கும் பனி படிந்து ஊடுருவிப் பாய்கிற காற்று வயல்களின் மீது வீசியது கண்டு நாங்கள் கவலை கொண்டோம். எங்கள் நண்பன் குளிர் வயப்பட்டான். அடி மரத்தைச் சுற்றி பனியைக் கொட்

டினர் குழந்தைகள். சிறுமிகள் நாணல் தண்டுகள் சில கொண்டு வந்து மரத்தைச் சுற்றிக் கட்டி விட்டனர். வசந்த காலம் வந்தவுடன் அடிக்கடி எங்கள் நண்பனை அணுகி, அவன் தளிர் விடுகிறானா என்று பதட்டத்துடன் பார்த்து வந்தோம். முதல் பசுந் தளிர்கள் வெளிவந்தவுடன் மகிழ்ச்சிக் கூத்தாடினர் குழந்தைகள். மரம் பிழைத்திருக் கிறது. எங்கள் லின்டன் மரத்திற்குக் கோடையில் நாங் கள் நீர் ஊற்றினோம்.

குழு உணர்ச்சிகளான கனிவும், அன்பும், குழுவின் நல் விருப்பமும் எவ்வளவு பிரம்மாண்டமான சக்தி! இந்த உணர்ச்சிகள் ஒரு காட்டாற்று வெள்ளத்தைப் போல் மிக அலட்சியமாய் இருப்பவர்களையும் கவர்ந்து இழுக்கிறது. கோல்யாவும், தோல்யாவும், ஸ்லாவாவும், பெத்ரிக்கும் எவ்வளவு பதட்டத்துடன் தமது நண்பனான லின்டன் செடியை நோக்கிப் போனார்கள் என்பதையும், மீன் தொட்டியில் இருந்த மீன் குஞ்சுகளுக்குத் தீனி போடுகை யில் அவர்கள் கண்கள் எப்படிச் சுடர் விட்டன என்பதை யும் கண்ட போது நான் மகிழ்ச்சி கொண்டேன்.

கொடிய குளிரில் லின்டன் செடி நடுங்குமே என்ற சிந்தனையில் இதயம் துடித்தவர்கள் இன்று வயது வந்தவர் களாக, பெரியவர்களாக ஆகி விட்டனர். எங்கள் நண்பன் பெரியவனாக, கிளைகள் நிறைந்தவனாக மாறிவிட்டான். இளம் பெண்களும் இளைஞர்களும், இளைய தந்தைமாரும் தாய்மாரும் இவனிடம் வருகிறார்கள். தம் இளமைப் பரு வத்தின் பொன்னிற இலையுதிர் காலத்தை நினைக்கும் போது நல்லுணர்ச்சிகளால் அவர்களது இதயம் நிறை கிறது.

குழந்தைப் பருவத்திலேயே நல்லுணர்ச்சிகள் வேர் பாய்ச்ச வேண்டுமென்றும், மனிதத்தன்மை, அன்பு, கனிவு, நல் விருப்பம் ஆகியவை உழைப்பு, பணிவிடை கள், சுற்றியுள்ள உலகில் நிரம்பியுள்ள அழகு பற்றிய பதட்டம் முதலியவற்றில் பிறக்கின்றன என்றும் அனுபவம் உறுதிப்படுத்துகிறது. நல்லுணர்ச்சிகள், உணர்ச்சி பூர்வக் கலாசாரம் ஆகியவை மனிதத் தன்மையின் மையப் புள்ளி

ஆகும். நல்லுணர்ச்சிகள் குழந்தைப் பருவத்தில் ஊட்டப் படவில்லை. என்ருல், அவற்றை ஒருபோதும் ஊட்டிவிட முடியாது. ஏனெனில், உண்மையான மனிதப் பண்பு முதல் உண்மைகளையும், முக்கியமான உண்மைகளையும் அறிந்து கொள்வதும் சொற்களின் மிக நுண்ணிய அர்த்த மாறு பாடுகளை உணர்ந்து கொள்வதும் ஒரு சேர நடைபெறு கிறது. மனவெழுச்சிப் பள்ளியில்—நல்லுணர்ச்சிகளை ஊட்டுகிற பள்ளியில் குழந்தைப் பருவத்தில் மனிதன் பயிற்சி பெற வேண்டும்.

## உழைப்பு உலகத்தில் உல்லாசப் பயணம்

குழந்தைகளுக்கு மிக முக்கியமான ஆன்மிக தேவை யாக உழைப்பு விளங்குவதற்கு என்ன செய்ய வேண்டும்? எங்கள் ஆசிரியர் குழு முழுமையும் இந்தக் கேள்வி அலேக் குறித்தது. பள்ளித் தோட்டத்தில், பள்ளிச் சோதனை இடத்தில் சாத்தியமான அளவு உழைக்கும் வண்ணம் குழந் தைகளை ஆயத்த வகுப்பு ஆசிரியர்கள் பயிற்சித் தொடக் கத்திலிருந்தே ஈடுபடுத்தினர். நாங்கள் மூடு தோட்டம் ஒன்று ஏற்படுத்திஞேம். இதில் பனிக்காலத்தில் வேலே செய்தனர் குழந்தைகள். குழந்தை உழைப்புக்கு உயர்ந்த கொள்கைத் தூண்டுதல்களால் எப்படி உற்சாகம் ஊட்டு வது என்று ஆலோசித்த ஆசிரியர்கள் பின்கண்டவாறு முடிவு செய்தனர்: பாசிஸ்டு ஜெர்மனியின் மீது வெற்றி பெற்ற நாளில்[1] ஒரு ஓர் மரம் நடுவோம். நமது மகிழ்ச்சி யின் உயிருள்ள நிகழ்ச்சிக் குறிப்பாக இது விளங்கும். அன்று முதல் ஒவ்வொரு ஆண்டும் வெற்றி நாளன்று, எங்கள் ஓக் சோலேயில் இன்னும் ஒரு நூருண்டு மரம் (ஓக் மரத்தை குழந்தைகள் இப்படி அழைத்தனர்) தோன்றியது.

---

[1] பாசிஸ்டு ஜெர்மனியை சோவியத் மக்கள் முறி யடித்த வெற்றி நாள் (1945ஆம் ஆண்டு) மே 9ஆம் தேதி வருடா வருடம் கொண்டாடப் படுகிறது.

இயற்கையுலகம் குழந்தைகளைச் சுற்றி நிற்பது மட்டு மின்றி உழைப்பு, படைப்பு கட்டுமானம் ஆகியவற்றின் உலகமும் குழந்தைகளைச் சுற்றி நிற்க வேண்டும் என்பதில் தான் முக்கியமான போதனு வளர்ப்புப் பணியை நாங் கள் பார்த்தோம். எல்லாவற்றையும் விட உழைப்பில் தான் மனித அழகு மிகப் பிரகாசமாக வெளிப்படுகிறது.

எங்கள் ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' உழைப்பு உலக ''உல்லாசப் பயணங்கள்'' தொடங்கி விட் டன. கூட்டுப் பண்ணையின் தானியக் களஞ்சியத்துக்குக் குழந்தைகள் போன முதல் ''பயணத்தை'' அவர்கள் ஒரு போதும் மறக்க மாட்டார்கள். ஆயிரக் கணக்கான சென் ட்னர்கள் தானியம் குவியல் குவியலாகக் கிடப்பதைக் குழந்தைகள் கண்டனர். விவசாயப் பயிர்களை மிக அதிக அளவுக்கு விளைவிக்கிற மனிதர்களைப் பற்றி வான்யாவின் அப்பா எங்களுக்குச் சொன்னுர். கிராமத்துக்கு அருகே, தானியக் கிடங்குக்குப் பக்கத்தில் உள்ள வயலுக்குக் கம் பைன் ஓட்டி கிரிகோரி அந்திரேயிவிச் குழந்தைகளைக் கூட்டிச் சென்ருர். ''இந்த 250 ஏக்கர் நிலத்தில், இவ் வாண்டு நானூறு டன் தானியம் அறுவடை செய்தேன் நான். அலெக்சாந்த்ரீயா நகரத்துக்கு எவ்வளவு தானியம் தேவையோ அவ்வளவு தானியத்தைப் பத்தாண்டுகளில் நான் அறுவடை செய்திருக்கிறேன்'' என்ருர் அவர்.

இது மூளையால் மட்டுமின்றி இதயத்தாலும் உலக அறிவு பெறுவதாகும். மனித உழைப்பாளியின் அழகு குழந்தைகளுக்கு வியப்பூட்டுகிறது. மனிதனுக்காகப் பெருமை உணர்ச்சி கொள்கிருர்கள் அவர்கள். உழைப்பு உலகப் ''பயணத்தின்'' போது தமது தந்தையரையும் தாய் மார்களையும் கண்டால் இந்தப் பெருமை உணர்ச்சி குழந் தைகளிடம் இன்னும் ஆழமடைகிறது. ஆயிரத்து ஐநூறு மனிதர்களுக்குத் தேவையான பாலை கால்நடைப் பண்ணை யில் தான்யாவின் அம்மா சேகரிக்கிருர் என்று அவர்கள் தெரிந்து கொண்டனர். இலையுதிர் காலத்துக் கதகதப்பான நாள் ஒன்றில் இயந்திரம் கட்டும் தொழிற்சாலைக்கு நாங் கள் போனேம். அங்கே வால்யாவின் தந்தை எங்களை

வரவேற்றார். தேனிரும்பை உருக்குகிற வார்ப்புப் பிரிவுக்கு அவர் குழந்தைகளைக் கூட்டிச் சென்றார். குழந்தைகள் கேட்ட, அவர்களாகப் புனைந்த கற்பனைக் கதைகளை எல்லாம் விட மிகவும் சுவாரஸ்யமாக இருந்தது இந்த நிகழ்ச்சி: மனிதன் கடினமான வஸ்துவை செந்நெருப்பு நதியாக மாற்றினான், அவனது சித்தத்தாலும் உழைப்பாலும் இந்த ஆறு உலோகப் பாளங்களாக மாறியது. குழந்தைப் படைப்பாற்றல் புதிய உள்ளடக்கத்தால் எப்படி நிரம்புகிறது என்று பெருமகிழ்ச்சியுடன் கவனித்தேன் நான். நெருப்பு உலோக ஆற்றை உருவாக்குகிற வீரர்கள் பற்றி கதைகள் படைத்தனர் குழந்தைகள். உலோகத் தொழிலாளர்களைச் சித்திரமாய் வரைந்தனர். தொழிற்சாலையின் வார்ப்புப் பிரிவுக்கு அவர்கள் மேற்கொண்ட முதல் பயணம் மறக்க முடியாத மனப்பதிவினை அவர்களிடம் ஏற்படுத்தியது. ஏற்கெனவே பார்த்தவற்றைக் குழந்தைகள் ஒரு புது முறையில் இப்போது பார்த்தனர்: உலோகம் மட்டும் இல்லையென்றால் மனிதன் ஒரு நாள் கூட உயிர் வாழவோ சமைக்கவோ முடியாது. தொழிலாளர்கள், [illegible], தொழிலாளர்கள், இயந்திரம் கட்டுபவர்கள் இவர்கள் எல்லாம் உயிர் வாழ்க்கையை உண்மையிலேயே படைக்கிறவர்கள். எனது மாணவர்கள் இவர்களிடம் ஓர் ஆழமான மரியாதை உணர்ச்சியைக் காட்டினர்.

இயந்திர—டிராக்டர் நிலையத்துத் தொழில் வல்லுனர்களான கொல்லர்கள், கடைசற்காரர்கள் ஆகியோரைக் காண நாங்கள் போன ''பயணங்கள்'' சுவாரஸ்யமாக இருந்தது. இங்கு டிராக்டருக்கும், கம்பைனுக்கும் வேண்டிய பகுதிகள் துண்டு உலோகத்திலிருந்து எவ்வாறு உருவாகின்றன என்று கண்டார்கள் குழந்தைகள். இயந்திரம் இயங்குவதற்கு மிகவும் அத்தியாவசியமான திருகாணியை லரீசாவினது அப்பாவின் திறமை மிகுந்த கைகள் எப்படிப் படைக்கின்றன என்பதை மூச்சு விடாமல் பார்த்தனர்.

மனித நலத்துக்காக மேற்கொள்ளப் படுகிற உழைப்பில்தான் முதற்கண் மனிதன் மனிதனுடன் கொள்கிற உறவும் அவனது சமுதாய வாழ்வும் விரிகின்றன. மற்றவர்

களுக்காக மனிதன் எப்படி உழைக்கிறான் என்பதில்தான் அவனது மனிதத்தன்மை வெளிப்படுகிறது. நமது சோஷலிச எதார்த்தத்தின் இந்த அம்சமே குழந்தைகளைச் சுற்றி யுள்ள சூழலில் வெளிப்படுமாறு பார்த்துக் கொள்வது தான் எனது முதல் கடமைகளில் ஒன்றாக விளங்கியது. இயற்கை அழகுடன் தொடர்புடைய விஷயங்கள் மட்டு மின்றி, நமது நாட்டு மனிதனின் சாரமாகவே விளங்குகிற நாட்டுக்கு, சமுதாயத்துக்கு, மனிதர்களுக்குச் செய்கிற சேவையும் குழந்தைகளை உற்சாகப்படுத்தி மனவெழுச்சி கொள்ளச் செய்ய வேண்டும் என்பதற்காக நான் முயற்சி செய்தேன். உழைக்கும் மக்கள் மீது குழந்தை செலுத் தும் அன்புதான் மனித ஒருங்கிற்கு ஊற்றுக்கண்ணாகும்.

## இயற்கையின் இசைக்குச் செவி மடுப்போம்

இசை, ராகம், இசையொலியின் அழகு ஆகியவை மனி தனின் ஒழுக்க உயர்வுக்கும் அறிவு வளர்ச்சிக்கும் முக்கிய மான சாதனமாகும். நல்லிதயத்துக்கும் பரிசுத்த மனத் துக்கும் இவை ஊற்றுக் கண்ணாகும். இயற்கையின் அழகு, ஒழுக்க உறவுகளின் அழகு, உழைப்பின் அழகு ஆகியவற் றுக்கு மக்களின் கண்ணைத் திறந்து விடுகிறது இசை. சுற்றி யுள்ள உலகில் மட்டுமின்றி, தனக்குள்ளேயே இருக்கிற உயர்வான, மகத்தான, அழகான விஷயங்கள் பற்றிய எண் ணங்களை மனிதனுக்குள் தூண்டி விடுகிறது இசை. சுய போதனைக்கு ஏற்ற சக்தி வாய்ந்த சாதனம் இசை.

சினிமா, வானொலி, தொலைக் காட்சி ஆகியவை குழந் தைகள் மீது செலுத்துகின்ற முறைப்படுத்தப் படாத செல்வாக்கு அவர்களது கலாரசனை வளர்ச்சிக்கு நன்மை செய்வதைவிட தீமையே புரிகிறது என்று பல மாணவர் களின் ஆன்மிக வளர்ச்சியை அவர்களது இளவயது முதல் முதிர்ந்த வயது வரை நான் கவனித்து வந்ததால் திட்ட வட்டமாக உணர்ந்தேன். சங்கீதத்தின் அபரிமிதமான மனப்பதிவுகள் குறிப்பாகத் தீமை பயப்பனவாகும். வயல் களின், புல்வெளிகளின் அமைதி, ஓக் மரங்களின் சரசரப்பு,

நீல வானில் கேட்கிற வானம்பாடியின் பாடல், முற்றி வரும் கோதுமைக் கதிர்களின் குசுகுசுப்பு, தேனீக்கள், வண்டுகளின் ரீங்காரம் ஆகியவற்றைக் கொண்ட இசை யழகை மனிதன் புரிந்து கொள்ளுவதற்கு ஏற்ற பின்னணி யைப் புலனறிவில் ஏற்றுக் கொள்வதும், அத்துடன் சங் கீதமும் மாறி மாறி வருமாறு பார்த்துக் கொள்வது குழந் தைகளது கல்வியின் ஒரு முக்கியமான பணிகளில் ஒன்று என்று நான் கண்டேன். இதெல்லாம்தான் இயற்கை இசை யாகும், இசை ராகத்தைப் படைத்தபடி மனிதன் பெறு கிற மன ஊக்கத்தின் ஊற்றுக்கண்ணுகும்.

பொதுவாக கலாரசனைக் கல்வியில் குறிப்பாக இசைக் கல்வியில் உளவியல் பாதை முக்கியமானவையாகும். இவற் றை வழி நடத்துகிற ஆசிரியர் குழந்தைகளை அழகின் உல கத்துடன் தொடர்பு படுத்துகிருர். மனவெழுச்சி கொண்டு அழகை அணுகுகிற திறமையும், கலாரசனைத் தன்மை தரும் மனப்பதிவுகளின் தேவையையும் கொண்ட கல்விப் பாதையே எனக்கு பெரு முக்கியமாய் இருந்தது. அழகின் உலகத்தில் மனிதன் வாழக் கற்றுத் தருவதும், அழகு இல் லாமல் அவனுல் வாழ முடியாது போகுமாறு செய்வதும், உலகத்தின் அழகு அவனுள்ளேயே அழகைப் படைப்பதற் குப் பள்ளிக்கூடம் வகை செய்வதுமே கல்வி முறை அனைத் திற்கும் முக்கிய குறிக்கோளாகும் என்று நான் கண்டேன்.

இசை கேட்பதற்கு—இசைப் படைப்புக்களை,இயற்கை இசையைக் கேட்பதற்கு ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக் கூடத்தில்'' அதிகக் கவனம் செலுத்தப் பட்டது. ராகத் தைக் கேட்கையில் மனவெழுச்சி விளைவு ஏற்பட வேண்டும் என்பதும், பின்னர் சுற்றியுள்ள உலகத்தின் அழகே இசை யழகின் ஊற்றுக் கண்ணுக விளங்குகிறது என்று குழந்தை களை நம்பச் செய்வதுமே பள்ளியின் முதற் பணியாகும்; ''நில், இயற்கையின் இசையைக் கேள், உலகத்தின் அழ கில் ஆனந்தம் கொள், இந்த அழகைப் பாதுகாத்து பல்கிப் பெருகச் செய்'' என்று இசை ராகம் மனிதனுக்கு அறை கூவல் விடுக்க வேண்டும். தாய் மொழியையும், இசை ஞானத்தின் அரிச்சுவடியையும்— இசை ராகத்தை ஏற்றுக்

கொள்கிற, புரிந்து கொள்கிற, உணர்ந்து கொள்கிற, அனுபவிக்கிற திறமையை—குழந்தைப் பருவத்தில்தான் மனிதன் பெற்றிருக்கிறுன் என்று பல்லாண்டு கால அனு பவம் உறுதிப் படுத்துகிறது. குழந்தைப் பருவத்தில் விட்டு விட்ட ஒன்றை முதிர்ந்த வயதில் எடுத்து நிறுத்துவது என்பது மிகவும் கடினம், அனேகமாக இது முடியவே முடியாது. தாய் மொழி வார்த்தைக்கும், இயற்கை அழகுக் கும், இசை ராகத்துக்கும் ஒரே மாதிரி குழந்தையின் மனம் உணர்ச்சி வசப்படுகிறது. குழந்தைப் பருவத்ினது ஆரம் பத்தில் இசைப் படைப்பின் அழகு குழந்தையின் இதயத் துக்கு எட்டுமாறு செய்தால், மனித உணர்ச்சிகளின் பலப் பல வேறுபாடுகளேக் குழந்தை ஒலிகளில் உணர்ந்தால், வேறெந்தச் சாதனத்தாலும் எட்ட முடியாத கலாசாரத் தின் உயர் படியைக் குழந்தை எட்டும். இசை ராகத்தின் அழகு உணர்ச்சி குழந்தையின் சொந்த அழகை அதன் முன்னே திறந்து விடுகிறது. தனது தகுதியை அந்தச் சிறிய மனிதன் அறிந்து கொள்கிறுன். இசைக் கல்வி என்பது இசைக் கலேஞனேத் தயார் செய்கிற கல்வி அல்ல. முதற் கண் இது மனித வளர்ப்புக் கல்வியே ஆகும்.

... இலேயுதிர் காலத் தொடக்கத்தில், ஒவ்வொரு ஒலி யும் தெளிவாகக் கேட்கிற நிர்மலமான காற்றில், மாலேக்கு முந்திய நேரம் பசும் புல்தரையில் குழந்தைகளுடன் அமர்ந் திருந்தேன். ரீம்ஸ்கி-கோர்சக்கவ் எழுதிய ''சுல்தான் அரசன் பற்றிய கதையில்'' வருகிற ஒபெராவின் ''வண்டு பறக்கிறது'' என்னும் இசையைக் கேட்கலாம் என்று ஆலோசனே சொன்னேன். இந்த இசை குழந்தைகளிடம் மனக்கிளர்ச்சியை ஏற்படுத்தியது. சிறுவர்கள் சொன்னுர் கள்: ''வண்டு நெருங்கி வருகிறது, விலகிப் போகிறது. சிறு சிறு பறவைகளின் கிசுகிசுப்புக் கேட்கிறது...'' இசை யை இன்னெரு முறை கேட்கிறேம். பின்னர் தேன் இருக் கும் புல்லுக்குப் போகிறேம். தேனீயின் இசையை, வண் டின் ரீங்காரத்தைக் கேட்கிறுர்கள் குழந்தைகள். இதோ ஒரு பெரிய, ரோம்மிகுந்த வண்டு, அது பூவுக்கு மேலே எழும்புகிறது, அல்லது கீழே இறங்கிப் பறக்கிறது. குழந்

தைகட்கு ஒரே ஆனந்தம். நாடாவில் பதிந்துள்ள இசை போலவேயன்றோ இது இருக்கிறது. இசைப் படைப்பில் ஒரு தனிச் சிறப்பு வாய்ந்த அழகு இருக்கிறது. இசையமைப்பாளர் இதனை இயற்கையில் கேட்டு நமக்கு வழங்குகிறார். நாடாவில் பதிந்துள்ள இசையை இன்னொரு முறை கேட்க வேண்டும் என்று குழந்தைகள் விரும்புகிறார்கள்.

ஒரு நாள் கழித்து காலையில் தேன் இருக்கும் புல்லுக்கு நடக்கிறோம். குழந்தைகள் தேனீ இசையைக் கேட்கின்றனர். ரோமமிகுந்த வண்டின் ரீங்காரத்தை வேறுபடுத்திக் கேட்க முயல்கின்றனர். இது வரை சாதாரணமாக இருந்த ஒன்றில் அழகு விரிந்தது. இதுதான் இசையின் ஆற்றல்.

குழந்தைகள் தம்மைச் சுற்றிக் கேட்கின்றவற்றைத் தெளிவான உருவங்களாகப் புரிந்து கொள்கிற வண்ணம் குழந்தைகள் கேட்பதற்கு ராகங்களைத் தேர்ந்தெடுத்தேன் நான்: பறவைகளின் கிசுகிசுப்பு, இலைகளின் சரசரப்பு, ஆற்றின் சலசலப்பு, காற்றின் ஊதல், இடி முழக்கம்... அதே நேரத்தில் அளவு கடந்த மனப்பதிவுகள் ஏற்படா வண்ணம் குழந்தைகளைப் பாதுகாத்தேன். இன்னும் ஒரு முறை சொல்லுகிறேன்: மித மிஞ்சிய இசை உருவங்கள் குழந்தைகளுக்குத் தீமை பயக்கும்; அது தடுமாற்றத்தை ஏற்படுத்தி பின்னர் பதில் உணர்ச்சிகளை மழுங்கடித்து விடும். ஒரு மாதத்துக்கு இரண்டு ராகத்துக்கு மேல் நான் பயன்படுத்தவில்லை. ஆனால் ஒவ்வொரு ராகத்துடனும் தொடர்புள்ள பெரிய போதனைப் பணியை நான் மேற்கொண்டேன். ராகத்தை மீண்டும் மீண்டும் கேட்பதற்குக் குழந்தைகள் விருப்பம் கொள்ளச் செய்வதும், ஒவ்வொரு முறையும் இசையில் புதிய அழகைக் குழந்தைகள் காண வேண்டும் என்பதுமே இதன் நோக்கமாகும். இசை ஞானத்தின் அரிச்சுவடியைக் கற்றுக் கொள்வதற்கும் குறிப்பிட்ட முக்கியத்துவம் கொடுக்கிற ராகங்களுக்குச் செவி மடுப்பதற்கும் இசையில் தானாக ஏற்படுகிற, ஒழுங்கற்ற மனப் பதிவுகள் இல்லாமலிருப்பது மிக முக்கியமாகும். ராகங்களைக் கேட்ட பின்னர் குழந்தைகள் வயல்வெளியின் அமைதிக்குச்

செவி மடுக்க வேண்டும்,இரண்டு ராகங்களை ஏற்றுக் கொள் வதற்கிடையில் இயற்கை அழகை அவர்கள் அறிந்து கொள்ள வேண்டும்.

ஓக் மரச் சோலைக்கு நாங்கள் போகிறோம். வெப்பம் நிறைந்த கோடையின் வெய்யில் மிகுந்த நாள். சூரியக் கதிர்கள் பட்டு வண்ண வண்ண மரங்கள் ஒளி உமிழ்கின் றன. இலையுதிர் காலப் பறவைகளின் பாட்டுக் கேட்கிறது, டிராக்டர் முழக்கம் வருகிறது, அணியணியாய் தாராக் கள் பறந்து செல்கின்றன. சய்கோவ்ஸ்கியின் ''இலையுதிர் காலப் பாட்டை (அக்டோபர்)'' கேட்கிறோம். சுற்றியுள்ள உலகத்தில் குழந்தைகள் இது வரை கவனிக்காமலிருந்த காணக் கிடைக்காத அழகாய் விளங்கும் பழுத்துக் கொண் டிருக்கிற ஓக் மரத்து இலைகளின் அமைதியான சரசரப் பையும், நிர்மலமான காற்றின் வாடையையும், பாதை யோரத்தில் சாமந்திப் பூக்கள் வதங்குவதையும் அவர்கள் உணருவதற்கு இசை உதவுகிறது.

குழந்தைகள் சுறுசுறுப்பான மகிழ்ச்சி மிக்க மனநிலை கொண்டிருக்கின்றனர். சோக ராகம் சிறு துயரத்தைக் கிளப்பி விடுகிறது. மூட்டம் நிறைந்த, மழைக் கால நாட் களும் குளிர்ப் புயலும் விரைவில் கவிழும் இருட்டும் நெருங்கி வருகின்றன என்று குழந்தைகள் உணர்ந்தனர். இசை ராகம் ஏற்படுத்திய மனப்பதிவினால் கோடை அழகு பற்றியும் பொன்னிற இலையுதிர் காலத்து முதல் நாட்கள் பற்றியும் குழந்தைகள் பேசுகின்றனர். பிரகாசமான, அழுத்தந் திருத்தமான எதையோ குழந்தைகள் நினைவில் வைத்திருக்கின்றனர். இப்போது கோடை கால, இலை யுதிர் காலச் சித்திரங்கள் குழந்தையின் உணர்வில் முழு அழகுடன் எழுந்து நின்கின்றன. உதாரணமாக, லரீசா சொன்னாள்: ''நான் அப்பாவுடன் பள்ளத்தாக்குக்குப் போனேன். பள்ளத்தாக்கின் சரிவில் பசுஞ் சுவர்—காடு, காடு, காடு, வெய்யில் கொட்டும் காடு. கரும்புறாக்கள் எங்கோ கூவத் தொடங்கின. காட்டின் அழகு, கொள்ளை அழகு... எப்போதும் சூரியன் பிரகாசிக்க வேண்டும். நடந்து கொண்டே இருக்கத் தோன்றுகிறது. 'கரும்புறா

கூவும் போது மரங்களில் இலைகளெல்லாம் மயங்கிப் போய் செவி மடுப்பது போல இருக்கும்.''

ஷூரா நினைவு கூர்கிறான்: ''அம்மா என்னை வயலுக்கு இட்டுச் சென்றாள். கம்பைன் ஓட்டுகிற மாமாவுடன் நான் கம்பைனில் சவாரி செய்தேன். பின்னர் தூக்கம் வந்தது. புதிய வைக்கோற் போரின் மீது அம்மா என்னைப் படுக்க வைத்தாள். நீல வானத்தை நான் பார்த்தேன். வைக்கோற் போர் மிதக்கத் தொடங்கியது, பூமிக்கு மேலே உயரே உயரே எழும்பியது. நான் ஒரு சிறு பறவையை நெருங்கினேன். பறவையோ வானத்தில் நடுங்கிக் கொண்டிருந்தது வானமோ அதை விட்டு விலகிப் போய்க் கொண்டிருந்தது. என்னுடன் வெட்டுக் கிளிகள் பறந்து வந்தன. அவை கோரஸ் பாடின, பறவையை நோக்கிப் பறந்தன. அப்படியே நான் தூங்கிப் போனேன். நான் விழித்துப் பார்த்த போது சிறு பறவை வானத்தில் இன்னும் நடுங்கிக் கொண்டிருந்தது. வெட்டுக் கிளிகளோ சத்தமாய்ப் பாட்டுப் பாடின.''

இன்னும் ஒரு முறை சாய்கோவ்ஸ்கியின் இசையைக் கேட்கிறோம் நாங்கள். மறக்க முடியாத கோடை நாட்களில், இலையுதிர் கால நாட்களின் அழகைப் பற்றிய தமது இதயத்து இனிய நினைவுகளைக் குழந்தைகள் காண்கிறார்கள் என்று உணருகிறேன் நான். புதிய நினைவுகளுக்குச் செவி மடுக்கிறார்கள் குழந்தைகள்.

''நானும் அம்மாவும் உலர்ந்த புல்லை வண்டியில் எடுத்துச் சென்றோம். நான் உலர்ந்த புல் மீது படுத்திருந்தேன். வானத்தில் நட்சத்திரங்கள் மின்னின. வயலில் கவுதாரி கூவிக் கொண்டிருந்தது. விளக்கைத் தூக்குவது போல கையை உயர்த்தி நட்சத்திரத்தை எடுத்துக் கொள்ளலாம் என்னும் அளவுக்கு அவ்வளவு பக்கத்தில் இருந்தன நட்சத்திரங்கள்.''

இது ஸீனுவின் நினைவு. சிறுமி சொல்வதைக் கேட்டு நான் வியப்படைந்தேன். ஸீனு எப்போதும் மௌனமாய் இருப்பவளாயிற்றே, ஒரு வார்த்தை பேச மாட்டாளே. அவளைக் கூடப் பேசும்படி இசை நிர்பந்தித்திருக்கிறது.

இசை மனக்கிளர்ச்சியைக் கூர்மைப் படுத்துகிறது, இசைச் சித்திரங்களின் அழகு தூண்டி விட்ட மனத்தோற்றங்களை உசுப்பி விடுகிறது என்பது எவ்வளவு மகிழ்ச்சிக்குரிய விஷயம். இசையின் செல்வாக்கால் ஒவ்வொரு குழந்தையும் கனவு கண்டு, கற்பனைகள் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். குழந்தை இயல்பின் கவிதைப் பண்பையும், கனவுக் குணத்தையும் இசை ஆழப் படுத்துகிறது—இது எவ்வளவு நல்லது. தான்யாவும் லரீசாவும் சொன்ன உணர்ச்சி வசப்பட்ட கதைகளைக் கேட்கையில் கோல்யாவும் தோல்யாவும் சிந்தனை வயப்பட்டு உட்கார்ந்திருக்கிறார்கள்—அவர்களும் எதையோ நினைவு கூர்கிறார்கள். இது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது.

சிந்தனையின் சக்தி வாய்ந்த ஊற்றுக்கண் இசை. இசைப் பயிற்சி இல்லாமல் குழந்தை முழுமையான மன வளர்ச்சி பெற முடியாது. இசையின் மூலாதார ஊற்றுக்கண்ணாக இருப்பது சுற்றியுள்ள உலகம் மட்டுமல்ல, மனிதனும், அவனது ஆன்மிக உலகும், சிந்தனை திறமையும் பேச்சும் கூட இத்தகைய ஊற்றுக் கண்ணாக விளங்குகின்றன. எதார்த்த உண்மையாய் இருக்கின்ற பொருள்கள், தோற்றங்கள் ஆகியவற்றின் சிறப்பியல்புகளை, மனிதர்களுக்கு முன்னால் புதிய முறையில் விரிவடையச் செய்கிறது இசைச் சித்திரம். பொருள்கள், தோற்றங்கள் மீது குழந்தையின் கவனம் ஒருமுகப்படுகிறது. இப்பொருள்களையும் தோற்றங்களையும் அவனுக்கு முன்னால் புதிய வகையில் திறந்து விடுகிறது இசை. அவனது சிந்தனை பிரகாசமான சித்திரம் தீட்டுகிறது. சித்திரம் வார்த்தையை நாடுகிறது. புதிய மனத்தோற்றங்களுக்கும், சிந்தனைகளுக்கும் தேவையான விஷயங்களை உலகத்திலிருந்து அள்ளியெடுத்தபடி வார்த்தைகளால் படைப்புப்பணி செய்கிறது குழந்தை.

இசை—மனத்தோற்றம்—கற்பனை—கட்டுக்கதை—படைப்பு—இந்தப் பாதையில் சென்றபடிதான் குழந்தை தனது ஆன்மிகச் சக்திகளை வளர்த்துக் கொள்கிறது. இசை ராகம் குழந்தைகளிடம் பிரகாசமான மனத்தோற்றங்களைத் தூண்டி விடுகிறது. பகுத்தறிவின் படைப்புச் சக்தி

களைப் பயிற்றுவிப்பதற்கேற்ற ஒப்பிடற்கரிய சாதனம் இது. கிரீக்கின் இசைகளைக் கேட்டபடி கற்பனைக் குகைகளையும், கடக்க முடியாத காடுகளையும், நல்ல, கொடிய விலங்குகளையும் தமது மனத்தோற்றத்தில் சித்திரமாகத் தீட்டினர் குழந்தைகள். மிக அமைதியாக இருப்பவர்களுக்கும் கூட பேசத் தோன்றுகிறது; பென்சில்களையும் சித்திர நோட்டுக்களையும் குழந்தைக் கைகள் நாடுகின்றன; கற்பனைச் சித்திரங்களைக் காகிதத்தில் பதியத் துடிக்கிறார்கள். ரொம்பவும் செயலற்று இருக்கிற குழந்தைகளிடம் கூட சிந்தனை ஆற்றலை உசுப்பி விடுகிறது இசை. சிந்தனை செய்கிற பொருளின் உயிரணுக்கள் மீது ஏதோ ஓர் அற்புதச் சக்தியை அது பொழிவது போலத் தெரிகிறது. அறிவாற்றலின் இந்த உயர்ச்சியில், இசைச் செல்வாக்குக்கு உட்பட்டு சிந்தனையின் மனக்கிளர்ச்சி ஊற்றுக்கண்ணை நான் கண்டேன்.

நாங்கள் செல்லும் ஒற்றையடிப் பாதைகள் எல்லாம் பனியால் மூடப்பட்டுக் கிடந்த பனிக்கால நாட்களில் பள்ளி அறையில் அமர்ந்து சய்கோவ்ஸ்கி, கிரீக், ஷொப்பேன், ஷுமான், [illegible] ராகங்களைக் கேட்டுக் கொண்டிருந்தோம். கற்பனை ராகங்களை அந்தப் பொழுதில் கேட்டது குழந்தைகட்குக் குறிப்பாகப் பெரு மகிழ்ச்சியைத் தந்தது. பாபா-யாகா என்னும் உக்ரேனிய நாட்டுப்புறக் கற்பனைக் கதையைக் குழந்தைகளுக்குச் சொன்னேன். பின்னர் சய்கோவ்ஸ்கியின் ''பாபா-யாகா'' ராகத்தைக் கேட்டோம். இந்த இசையின் செல்வாக்கில் தோன்றிய கற்பனைச் சித்திரங்கள், மனத்தோற்றங்கள் ஆகியவற்றின் வளமையை வார்த்தைகளால் வர்ணிப்பது கஷ்டம். தூரத்து மலைகள், தொலைவிலுள்ள காடுகள், நீலக் கடல்கள், புதிரான குகைகள், கணவாய்கள் ஆகியவற்றுக்கு அப்பால் குழந்தைகளின் கனவுகள் நிலை கொண்டன. குழந்தைகளால் புனையப்பட்ட முற்றிலும் நம்ப முடியாத கதைகளை வியப்பு மிகுந்து கேட்டுக் கொண்டிருந்தேன் நான். இவற்றில் சில ஆயுள் முழுதுக்கும் என் நினைவில் நிலைத்தன. யூராவின் கற்பனையில் மனிதர்களை வெறுக்கிற

சூனியக்காரியான பாபா-யாகா மனிதர்களின் மகிழ்ச்சியை யும் பாட்டையும் கொள்ளையிட்டாள். ''அவள் பானை ஒன்றைத் தூக்கிக் கொண்டு உரலின் மீது உட்கார்ந்தவாறு உலகம் முழுதும் சுற்றிப் பறந்தாள். பாட்டுச் சத்தத்தைக் கேட்டவுடனே மக்கள் பாட்டுப் பாடி மகிழ்ச்சியடைகிற இடத்துக்குப் பறந்தோடி வந்து உரலின் மீது பானையை இடிப்பாள். உடனடியாக மனிதர்கள் மௌனமாகி விடுவர், எப்படிப் பாடுவது என்பது மறந்து போகும். ஏனெனில் பாட்டு பானைக்குள்ளே மறைந்துவிடும் இப்படித்தான் எல்லாப் பாட்டுக்களையும் பாபா-யாகா மறைத்து வைத் திருக்கிறாள். பாட்டுப் பாடுகிற இடைச் சிறுவன் ஒரே ஒரு வன்தான் மிஞ்சி இருக்கிறான். அவன் குழல் ஊதி பாட்டுப் பாடினான். சூனியக்காரி எவ்வளவுதான் பானையை உரல் மீது இடித்த போதும் அவளால் ஒன்றும் செய்ய முடிய வில்லை. குழல் மந்திரத் தன்மை வாய்ந்தது. இப்படியாக மிகக் கொடிய பாபா-யாகா தனது மலையில் பாட்டுக்கள் நிறைந்த பானையுடன் உட்கார்ந்திருக்கிறாள். உலகத்தில் எங்கும் அமைதியாக இருக்கிறது. ஒருவரும் பாடுவதில்லை, மகிழ்ச்சி கொள்வதில்லை. இடைச் சிறுவன் மட்டும் குழல் ஊதுகிறான். அவன் படுத்து விட்டான். பாபா-யாகா அவனது குழலைத் திருடிக் கொண்டாள். பையன் விழித்துப் பார்த்தான். துணிவு மிக்க சிறுவர்களைக் கூட்டிக் கொண்டு பாபா-யாகாவிடம் அவன் போனான்...'' பாட்டுக்களை சிறுவன் எப்படி விடுவித்தான் என்றும், மனிதர்களுக்கு எப்படி மகிழ்ச்சி திரும்பியது என்றும் யூரா கற்பனை செய் தான். இசையின் செல்வாக்கில் நல்லதையும் தீயதையும் உருவகப் படுத்துகிற கற்பனைப் பிராணிகளைப் பிரகாச மான சித்திரங்களாக குழந்தை தனது மனத்தோற்றத்தில் தீட்டுவது, நியாயத்துக்காக நடக்கின்ற போராட்டத்தில் அவன் பங்கு கொள்வது போல இருக்கிறது. இது ஓர் அற் புதத் தோற்றமே. இதயத்தின் உயிருள்ள துடிப்பினால், சிந்தனையின் படபடப்பினால் கற்பனைச் சித்திரங்களை நிரப்பு கிறது இசை. நன்மையின் உலகத்துக்குக் குழந்தையைக் கூட்டிச் செல்கிறது இசை.

குழந்தைகளின் சிந்தனை சோம்பல் கொள்வதை நான் கவனித்த ஒவ்வொரு தடவையும் ஓக் மரச் சோலைக்கோ, தோட்டத்துக்கோ அவர்களைக் கூட்டிச் சென்றேன். நன்மையையும் தீமையையும் பற்றிய தெளிவான மனத் தோன்றங்களை உசுப்பி விடுகிற இசையை நாங்கள் அங்கு கேட்டோம். இசை ராகம் அங்கு சிந்தனை ஊற்றைத் திறந்து விட்டது போலிருந்தது.

பனிக் காலத்தில் எங்கள் பள்ளியில் கனவு காண்பவர்கள் புதிது புதிதாய்த் தோன்றினர். பொடியனான தான்கோ மிகவும் கூச்ச சுபாவமுள்ளவன். அவனிடமிருந்து ஒரு வார்த்தை வெளி வராது. இந்தச் சிறுவன் கூட பாபா-யாகா பற்றி தனது கதையைச் சொல்லத் தொடங்கினான். யூராவின் கதையைப் போலவே இதுவும் இருந்தது உண்மைதான். தான்கோவின் கதையில் பாபா-யாகா உரலில் உட்கார்ந்தபடி உலகம் பூராவும் பறந்து பூக்கள் அனைத்தையும் பறித்து விட்டாள்; ஒரு [illegible] இருக்கும் தனது [illegible] வைத்தாள் பூக்கள் அனைத்தும் மடிந்து போயின. கதையின் [illegible] தம்மைப் புனைந்து கொள்கின்றனர் குழந்தைகள். "மலர்கள் அனைத்தின் விதைகளையும் நான் சேகரித்து பூமியில் தூவி விட்டேன். பூக்கள் மறுபடியும் மலர்ந்தன. பாபா-யாகா இதை அறிந்த போது கோபம் கொண்டு தனது எலும்புக் காலையும் [illegible]லையும் உடைத்தெறிந்து விட்டாள். இப்போது மனிதர்களுக்குக் கேடு செய்ய அவளால் முடியாது."

இந்தக் கதைகளுக்குப் பின்னர் குழந்தை வளர்ப்பில் இருக்கிற கஷ்டங்களையும் பலவீனங்களையும் பற்றி ஆசிரியர்களிடம் பேசினேன். நாங்கள் ஒரே மனதாய் ஒரு முடிவுக்கு வந்தோம். பள்ளியில் பயிலுகிற காலத்தின் பெரும் பகுதியை மாணவன், முதற்கண் குழந்தையாகவே இருந்து கழிக்கிறான் என்பதை நமது போதனை முறை மறந்து விடுகிறது. தயாராய்த் தரப்பட்ட உண்மைகளையும், பொதுமைப்படுத்தப்பட்ட விஷயங்களையும், முடிவுகளையும் குழந்தைகளின் தலையில் திணிக்கிற ஆசிரியர் சிந்தனையின் ஊற்

றுக்கண்ணுக்கோ உயிருள்ள வார்த்தையின் ஊற்றுக்கண்ணுக்கோ குழந்தைகள் நெருங்குவதற்கான சாத்தியக்கூறுகளைக்கூட அவ்வப்போது வழங்குவதில்லை, கனவு கற்பனை, படைப்பு ஆகியவற்றின் இறக்கைகளை இணைக்க விடுவதில்லை. உயிருள்ள, தீவிரமான, செயல்பற்றுள்ள ஜீவனாக இருக்கிற குழந்தை ஒரு நினைவு இயந்திரமாக அடிக்கடி மாறி விடுகிறது... இல்லை, இப்படி இருக்கக் கூடாது. சுற்றியுள்ள உலகத்துக்கும் குழந்தைக்கும் இடையில் கற்சுவர் எழுப்பி விடக்கூடாது. ஆன்மிக வாழ்வின் ஆனந்தத்தைக் குழந்தையிடமிருந்து பறித்து விடக் கூடாது. விளையாட்டு, கதை, இசை, கற்பனை, படைப்பு ஆகியவை நிறைந்த உலகத்தில் குழந்தை வாழும் போதுதான் அதன் ஆன்மிக வாழ்வு முழுமையானதாய் இருக்கும். இதின்றி அவன் வாடிப் போன மலராவான்.

நிரந்தரமான, நிறைவான திருப்தி தருவதல்ல படிப்பு என்பது சொல்லாமலே விளங்கும். படிப்பு என்பது முதற்கண் உழைப்பே ஆகும். இந்த உழைப்பை ஒழுங்குபடுத்துகையில், அதாவது, குழந்தையின் மன, ஒழுக்க, உணர்ச்சி, கலாரசனை வளர்ச்சியை, குழந்தையின் ஆன்மிக உலகத்தின் தனித்தன்மைகளைக் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். குழந்தையின் மூளை உழைப்பு, முதிர்ச்சியுற்ற மனிதனின் மூளை உழைப்பிலிருந்து வேறுபட்டதாகும். மூளை மேற்கொள்கிற முயற்சிகளுக்கு அறிவு பெற வேண்டும் என்னும் இறுதிக் குறிக்கோள் முதிர்ச்சியுற்ற மனிதனிடம் காணப்படுவது போல குழந்தையிடம் காணப்படாது. குழந்தையின் மூளை உழைப்பினது இயல்பிலேயே, சிந்தனையின் மனக்கிளர்ச்சியிலேயே, அறிவாற்றலின் அனுபவ உணர்ச்சிகளிலேயே கற்றுக் கொள்ள வேண்டும் எனும் விருப்பத்தின் ஊற்றுக்கண் இருக்கிறது. இந்த ஊற்றுக்கண் வற்றிப் போனால், புத்தகத்தினருகே உட்கார்ந்திருக்குமாறு எந்தவொரு முறையாலும் குழந்தையை நிர்ப்பந்திக்க முடியாது.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' முதல் பனிக்காலத்தை நான் ஒருபோதும் மறக்க மாட்டேன். இசை,

கற்பனை, படைப்பு ஆகியவை இல்லாமல் வெதுவெதுப்பான, வசதி மிகுந்த வகுப்பறை உப்புச் சப்பற்றுப் போயிருக்கும். எங்களைச் சுற்றியுள்ள உலகத்தை வியப்பு மிகுந்த கவர்ச்சியால் இசை நிரப்பியது. அம்பர் நிற அந்திப் பொழுதில், நிலாவுக்குக் கீழே ஒளிர்ந்த வெள்ளிக் கம்பளங்களின் ஒளியில், பனிப் புயல் காற்றில், உறைந்து போன குளத்தின் வெடிப்பில் — எங்கெங்கும் எங்கள் மனம் புனைந்த கற்பனை விலங்குகளை நாங்கள் கண்டோம்.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' முதல் வசந்தம் வந்தது. ஓடைகள் சலசலத்தன. சூரிய காந்திப் பூக்கள் மலர்ந்தன, ஆப்பிள் மரங்களும் பேரி மரங்களும் வெண்ணிறப் பூக்களால் நிறைந்திருக்கவே தேனீக்களின் ரீங்காரம் கேட்டது. வசந்த காலத்துக் காடு, நீல நிற வானம், புல்வெளிகள், ஸ்டெப்பிகள் ஆகியவற்றின் இசையை இந்த நாட்களில் நாங்கள் கேட்டோம்.

அமைதியான மாலைப் பொழுதில் புல்வெளிக்குப் போனோம். எங்களுக்கு முன்னே மெல்லிய இலைகள் போர்த்திய [illegible] வில்லோ மரங்கள், குளத்திற் குள்ளே ஆழங்காண முடியாத ஆகாயவீதி பிரதிபலித்தது. நிர்மலமான வானில் அன்னப் பறவைகள் கூட்டம் கூட்டமாய்ப் பறந்தன. அழகு நிறைந்த மாலை நேரத்தில் இசைக்குச் செவி மடுத்தோம் நாங்கள். குளத்தில் எங்கோ ஓரிடத்தில் வியத்தகு ஒலி கேட்டது. பியானோவை யாரோ அழுத்துவது போலிருந்தது. குளமும், குளக்கரையும், நீல வானும் ஒலியெழுப்பியதாகத் தோன்றியது. ''இது என்ன?'' குசுகுசுத்தான் வான்யா. நான் குழந்தைகளுக்குச் சொன்னேன்: ''இது வசந்த காலப் புல்வெளியின் இசை. குளத்துக்குள் நீல நிற ஆகாயவீதி பிரதிபலிப்பதை நீங்கள் பார்க்கிறீர்கள். மிக மிக ஆழத்தில் பிரம்மாண்டமான பளிங்கு மணி இருக்கிறது. அங்கே ஓர் அற்புத மாளிகையில் வசந்தம் எனும் அழகி வாழ்கிறாள். அவள் பளிங்கு மணியைத் தங்கச் சுத்தியால் தட்டி விட்டாள். அந்தச் சத்தம்தான் புல்வெளியெங்கும் பொழிகிறது.''

அந்த ஒலி மீண்டும் ஒரு முறை கேட்டது. கோல்யா புன்னகை பூத்தான்: ''இது தவளைக் கத்தல்''. குழந்தைகள் சிரிப்பார்கள், எங்களைப் பீடித்திருந்த கவர்ச்சி மறைந்து போகும் என்று நான் அஞ்சினேன். ஆனால் ஒருவரும் அசையக்கூட இல்லை. ''இது தவளையாயும் இருக்கலாம், தவளையல்லாமலும் இருக்கலாம். தவளையாய் இருந்தால்தான் என்ன. இருக்கட்டும் புல்வெளியல்லவா பாடுகிறது'' என்றான் சாஷா.

அவன் வார்த்தைகளுக்குப் பதில் சொல்வது போல, சில கணம் கழித்து அருகே இருந்த குளத்துக்கு மேலே எங்கேயோ தொலை தூரத்துப் புல்வெளி ஒலியெழுப்பியது. வசந்த காலப் புல்வெளியின் இசையில் மயங்கி நாங்கள் நின்று கொண்டிருந்தோம். உலகப் புலனறிவு பற்றிய வருங்கால நம்பிக்கைக்கு உயிர் தரும் ஊற்றுக்கண் இந்த இசை. வாழ்க்கை மகிழ்ச்சியை அழகியல் புரிந்து கொள்ளவும், திறந்து விடவும், உணர்ந்தறியவும் அது குழந்தைகளுக்கு உதவியது. குழந்தைப் பருவத்தின் மறக்க முடியாத நினைவுகளை வாழ்க்கை முழுதுக்கும் நம்மிடம் இருக்கச் செய்கிற அழகினது பொருத்தம் எனக்கு விளங்கியது.

வெய்யில் நிறைந்த முதல் ஏப்ரல் நாளில், கானல் நீரில் பண்டைய ஸ்தூபங்கள் நடுங்கும் போது, வானம் பாடியின் பாட்டைக் கேட்பதற்காக ஸ்டெப்பிக்குப் போனோம் நாங்கள். நீல வானில் உயிர் நிறைந்த சாம்பல் நிறக் குஞ்சு ஒன்று படபடக்கிறது. வெள்ளி மணியின் மெல்லிய நாதம் எங்களுக்குக் கேட்கிறது. திடுமென்று மணியொலி நின்று விட்டது. சாம்பல் குஞ்சு கீழே பாய்கிறது. பனிக் காலக் கோதுமை வயலின் பசுமை மீது பறவை இறக்கைகளை நீட்டி நிமிர்த்துகிறது. பின்னர் கண்ணுக்குத் தெரியாத நூலிழையை இழுப்பது போல மேலே மேலே எழும்புகிறது. இப்போது மணி நாதத்தை நாங்கள் கேட்கவில்லை, வெள்ளித் தந்திகளின் நாதத்தைக் கேட்கிறோம்... இந்த அற்புத இசை குழந்தை இதயங்களை எட்டி, சுற்றியுள்ள உலகத்தின் அழகுக்கு அவற்றின் கண்

களைத் திறந்து விட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். வானம்பாடியைப் பற்றிக் கதை சொல்கிறேன்.

''இது சூரியனின் குழந்தை. பனிக்காலத்தில் சூரியன் நம்மை விட்டு வெகு தொலைவுக்குப் போய் விடுகிறான். பூமியின் மீது பனியைத் தூவி கடுங் குளிரால் அதனைக் கட்டிப் போட்டு விடுகிறார்கள். மெல்ல மெல்ல சூரியன் நம்மிடம் திரும்பி வருகிறான். பனியை உருக்க அதற்குக் கஷ்டமாக இருக்கிறது. சூடு பறக்கும் நெருப்புப் பொறி களை பனிக் குவியல்களுக்குள் வீசுகிறான் சூரியன். நெருப்புப் பொறிகள் விழுகிற இடத்தில் பனி உருகிய குட்டைகள் ஆங்காங்கு தோன்றுகின்றன. பூமி உருண்டை உயிர் பெறுகிறது. அதிலிருந்து வியத்தகு பறவையான வானம் பாடி பிறக்கிறது. அது நீல வானத்தில் மேலே கிளம்பி சூரியனிடம் பறந்து செல்கிறது, பறக்கிறது பாடுகிறது. சூரியனே வெள்ளிப் பொறிகளை உமிழ்கிறான். நீல வானத் தில் தொங்குகிறது வானம்பாடி. பூமியைப் பார்க்கிறது. மிகவும் பிரகாசமான தீப்பொறியைக் கூர்ந்து நோக்கு கிறது. அதைப் பார்த்தவுடன் ஒரு கல்லைப் போல பூமியை நோக்கிப் பாய்கிறது, தீப்பொறியைப் பிடித்துக் கொள் கிறது. தீப்பொறி ஒரு கணத்தில் மெல்லிய வெள்ளி நூலாக மாறி விடுகிறது. நூலின் ஒரு முனையை பூமியின் மீது விட்டது வானம்பாடி. கோதுமைப் பயிரின் தண்டில் அந்த முனையைத் தொங்க விட்டு விட்டு, மறு முனையைச் சூரியனை நோக்கி மேலே மேலே ஆகாயத்தில் இழுக்கிறது. பாருங்கள், அது எவ்வளவு கஷ்டப்பட்டு மேலே பறக் கிறது, அதன் சாம்பல் நிற இறக்கைகள் எப்படித் துடிக் கின்றன. வெள்ளி நூல் ஒரு தந்தி போல் பாடுகிறது. வானம்பாடி எந்த அளவுக்கு மேலே உயருகிறதோ அந்த அளவுக்கு நாதம் எழுப்புகிறது தந்தி. வெள்ளி நூலை அந்தச் சூரியனிடமே கொண்டு போய் நீட்டுகிறது வானம் பாடி. பின் மீண்டும் பூமிக்கு வந்து நெருப்புப் பொறியை மீண்டும் தேடிப்பிடிக்கிறது.''

உண்மையான இயற்கை விதிகளை அறிந்து கொள்வதற் குச் சிரமத்தைத் தருவதில்லையா கட்டுக்கதை? இல்லை,

மாருக அதனே எளிமைப் படுத்துகிறது. பூமி உருண்டை உயிருள்ள பிராணியாக மாற முடியாது என்றும், ராட்சசக் கொல்லர்களோ, பாபா-யாகாவோ, சிரஞ்சீவி காஷேயோ இல்லை என்றும் குழந்தைகள் நன்ருகப் புரிந்து கொள் கிருர்கள். இதெல்லாம் குழந்தைகளிடம் இல்லையென்ருல், நல்லதுக்கும் தீயதுக்கும் நடக்கிற போராட்டத்தை அவர் கள் அனுபவிக்கவில்லை என்ருல், உண்மை, நேர்மை, அழகு ஆகியவை பற்றி மனிதனின் மனத் தோற்றங்களேத்தான் கட்டுக்கதைகள் பிரதிபலிக்கின்றன என்று அவர்கள் உணர வில்லை என்ருல் அவர்களது உலகம் வசதியற்றதாய், கசப்பு நிறைந்தாய் இருக்கும்.

வானம்பாடி பற்றிய கதை இயற்கையின் இன்னிசை யைப் புரிந்து கொள்ளக் குழந்தைகளுக்கு உதவியது. இசை ராகத்தைக் கேட்பதற்கு அவர்களேத் தயார் படுத் தியது. பள்ளிக்குத் திரும்பி வந்து சய்கோவ்ஸ்கியின் ''வானம்பாடிப் பாட்டைக்'' கேட்கிருேம்.வியத்தகு இசை யொலியில் மணி நாதத்தையும் பசிய வயலேயும் சூரியனே யும் இணைக்கிற மெல்லிய வெள்ளித் தந்தியின் சங்கீதத் தையும் குழந்தைகள் புரிந்து கொண்டார்கள். தெளிவான காலே நேரத்திலும், மப்பும் மந்தாரமுமாய் இருக்கிற பகல் பொழுதிலும் இந்தப் பாட்டை நாங்கள் பல முறை கேட்கிருேம். சூரியன் பொழிகிற வியத்தகு உலகம், நீல நிற ஆகாயவீதி, உயிர் நிறைந்த பறவை, எல்லேயற்று விரிந்த வயல்கள் ஆகியவற்றைக் குழந்தைகள் எப்போதும் நினைவு கூர்கிருர்கள். கற்பனேப் பறவைக்குப் பிரகாசமான உருவத்தில் உயிர் கொடுக்க வேண்டும் என்று சிறுவர்கள் விரும்புகிருர்கள். வானம்பாடியை, வெள்ளித் தீப்பொறி யை, பூமியிலிருந்து சூரியனுக்கு இழுத்துக் கட்டப்பட் டுள்ள இசைத் தந்தியை அவர்கள் கற்பனு உருவங்களாக வரைகிருர்கள்.

குழந்தைகளுக்குப் பிடித்தமான இசைப் படைப்புகள் கொண்ட நோட்டுப் புத்தகம் மெல்ல மெல்ல எங்களிடம் உருவாகிறது. அவ்வப்போது எங்கள் அறைக்கு வந்து இசை கேட்போம் நாங்கள். நோட்டுப் புத்தகத்துக்கு

''இசைப் பெட்டி'' என்று நான் பெயரிட்டேன். குழந்தை களுக்கு இந்தப் பெயர் பிடித்துப் போயிற்று. ''எங்களிடம் இசைப் பெட்டி இருக்கிறது'' என்று அவர்கள் பெருமை யுடன் சொல்வார்கள். ஒரு யோசனை தோன்றியது: இசைக் கலாசாரப் பொக்கிஷத்திலிருந்து மிகச் சிறப்பானவற்றை வருடாவருடம் தேர்ந்தெடுப்போம். ''இசை அறை''. ஒன்று ஏற்படுத்துவோம். இங்கு இயற்கை படைத்த, மனி தன் உருவாக்கிய அழகினைப் பருகி ஆனந்தம் அடைவோம். பாடுவோம், பிடிலும் பியானோவும் வாசிக்கக் கற்றுக் கொள்வோம். இதெல்லாம் எதிர்காலத்தில் நடக்கும். இப் போது வஞ்சனையற்று குழல் ஊதுவோம்.

ஒரு மூட்டம் நிறைந்த நாளில் நாங்கள் சோலைக்குப் போனோம். நாணலை வெட்டி குழல் செய்தோம். அதற்கு நெருகிட்டுத் தொளைகள் போட்டோம். உற்சாகம் ததும் பும் இடையன் பற்றிய உக்ரேனிய நாட்டுப்புறப் பாட்டை நான் அதில் இசைத்தேன். குழந்தைகள் அடைந்த மகிழ்ச் சியை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. தமது திறமையைச் சோதித்துக் கொள்ள வேண்டும் என்று ஒவ்வொரு குழந்தையும் விரும்பியது, சொந்தமாக இசைக் கருவிகள் வைத்துக் கொள்ள வேண்டுமென்று கனவு கண் டது. ஒவ்வொருவரும் தத்தமக்குக் குழல் செய்து கொண் டனர். லீதா, லரீசா, யூரா, தீனு, செர்யோஷா, கோஸ்த்யா ஆகியோரிடம் மென்மையான சங்கீத ஞானமும் இசை நுண்ணுணர்வும் இருந்தன. சில தினங்களுக்குள்ளாக நாட்டுப்புறப் பாடல்களையும் நடனங்களையும் இசைக்கத் தொடங்கி விட்டனர். உக்ரேனிய நாட்டுப்பாடல் ஒன்றை தீனு இசைத்த அந்த அமைதியான மாலைப் பொழுதை ஒருபோதும் நான் மறக்க மாட்டேன். சிறுமியின் கண்கள் ஒளி உமிழ்ந்தன, கன்னங்கள் சிவந்தன. வீட்டுத் தோட் டத்தில் நீண்ட நேரம் தீனு அமர்ந்திருக்கிறாள் என்றும், எதையோ ''கற்பனையால் எட்டுகிறாள்'' என்றும், ராகம் வாசிக்கிறாள் என்றும், சில சமயங்களில் வானத்தையும் மரங்களையும் கனவு போல் பார்க்கிறாள் என்றும் அவள் அம்மா சொன்னாள்.

ஒரு நாள் அதிகாலையில் நான் பள்ளிக்கூடத்துக்கு வந்தேன். எங்கும் அமைதி. திடீரென்று தோட்டத்தின் உள்ளே இருந்து மெல்லிய குழலோசை கேட்டது. இசை வந்த திசை நோக்கிப் போனேன் நான். சொந்த இசையை யாரோ ஒருவர் வாசித்துக் கொண்டிருந்தார். தயாரிப்பின்றி எழுந்த ராகம் அது. ராகத்தினூடே வேதனை ஒன்று பிரகாசமாயும் தெளிவாயும் இழையோடியது. இசைக் கலைஞனைக் கலவரப் படுத்தாமல் இருக்கும் பொருட்டு ரோஜாப் புதருக்கு நான் போனேன். புல்லின் மீது உட்கார்ந்திருந்தாள் தீனு. குழல் அவளது உடலின் உறுப்பாகி விட்டது போலத் தோன்றியது. மலர்ந்து கொண்டிருக்கிற ரோஜாப் பூக்களைச் சிறுமி பார்த்தாள். அவளது கண்கள் கனிவு நிரம்பி, மென்மை கொண்டிருந்தன. இப்போது இந்த இசை எனக்குப் புரிந்து விட்டது. அழகு மிக்க மலரையும், வசந்த கால நீல வானம் பற்றியும் இசையெழுப்பிக் கொண்டிருக்கிறாள் சிறுமி. அவளது வேதனை என்று எனக்குத் தோன்றியது உண்மையில் கவலையே ஆகும்: எதிர் காலத்தைப் பற்றிய தனது சிந்தனையை இசையாக வெளியிட்டுக் கொண்டிருந்தாள் சிறுமி.

கோஸ்த்யாவையும் குழல் கவர்ந்தது. ஒற்றைக் கையால் வாசிப்பதற்குப் பையனுக்குக் கஷ்டமாக இருந்தது. பின்னர் நாட்டுப்புறப் பாடல்கள் சிலவற்றை வாசிக்கக் கற்றுக் கொண்டான். தனது சிந்தனைகளை, உணர்ச்சிகளை, அனுபவங்களை இசையில் புனைந்து, கற்பித்துத் தரத் தொடங்கினான். இடிமழை கொட்டிய ஒரு வசந்தகால நாளில் ''கனவுப் பகுதியில்'' நாங்கள் அமர்ந்திருந்தோம். இடி ஒன்று இடித்தது. பூமியின் மீது ஒரு வானவில் தொங்கியது. அந்தக் காட்சியின் அழகில் மயங்கி நாங்கள் மௌனமாய் இருந்தோம். ஒரு மெல்லிய ராகம் வந்தது. கோஸ்த்யா குழலூதிக் கொண்டிருந்தான். ஓடையின் சலசலப்பும், பின்னர் கவலை தரும் கர்ஜனையால் அது மாறுவதும், புயல் மேகம் நெருங்கி வருவதும், தொலை தூரத்தில் இடியொன்று தாக்குவதும் இந்த இசையில் வெளிப்பட்டன. தனது இசையை மற்றவர்கள் கேட்கிறார்கள்

என்பதையே மறந்து விட்டான் சிறுவன். தனது படைப்பில் அவன் முழுமையாய் ஈடுபட்டு விட்டான். திடீரென்று நினைவு பெற்ற அவன் சிந்தனை வயப்பட்டிருந்த நண்பர்களைக் கண்டு கூச்சமடைந்தான்... இவர்களில் ஒவ்வொருவரும் இசைக் கலைஞர்களாகி விடப் போவதில்லை. ஆனால் இசை ராகத்தைக் கேட்டு ஆனந்த உணர்ச்சி பெறுகிற திறனை ஒவ்வொரு குழந்தையிடமும் வளர்க்க முடியும் என்பதில் நான் ஆழமான உறுதி கொண்டிருக்கிறேன்.

வஞ்சனையற்ற இந்த நாட்டுப்புற இசையில் நாங்கள் கவர்ச்சி கொள்வது எங்களுக்கு மிகவும் சொந்தமான விஷயமாகும். தனிச் சிறப்பு வாய்ந்த ''இன்னிசை மனநிலை'' எங்களுக்கு அவ்வப்போது வரும். உட்கார்ந்து இன்னிசை வாசிக்க வேண்டும் என்று குழந்தைகள் விரும்புவர். அமைதியான தொடுவானில் மறைந்து விட்ட சூரியனின் கதிர்கள் தரும் பிரதிபலிப்பால் உலகம் இன்னும் ஒளியூட்டப்படுகின்ற அமைதியான மாலை நேரங்களில் அவர்களுக்கு இந்த விருப்பம் அடிக்கடி தோன்றும். மகிழ்ச்சியையும் திருப்தியையும் நமக்குத் தருகிறது இசை என்பதே எங்களுக்குப் பேரானந்தத்தை நல்கியது.

இசைக்கேற்ற மென்மையான செவிப்புலன் படைத்திருந்தான் கோல்யா. நாட்டுப்புறப் பாடல்களை வாசிப்பதற்கு அவன் விரைவில் கற்றுக் கொண்டான். ஒரு நாள் காட்டிலிருந்து வீட்டுக்குத் திரும்புகையில் கோல்யாவிடம் நான் சொன்னேன்: ''வெள்ளி மாலை செய்கிற கொல்லர்களை நீ வரைந்தாயே நினைவிருக்கிறதா? அந்தக் கொல்லர்களைப் பற்றி இந்தக் குழல் வழியாகச் சொல்லேன்: எப்படி அவர்கள் பட்டை தீட்டுகிறார்கள், குளிர்ந்த தீப்பொறிகள் பூமியின் மீது எவ்வாறு தெறிக்கின்றன...''

''அவை குளிர்ந்தவை அல்ல, அல்லவே அல்ல. அவை சூடானவை, எவ்வளவு சூடானவை...'' ஆவேசமாக மறுத்துரைத்தான் சிறுவன்.

''ஆமாம், அவை சூடானவைதான்... சுத்தியலிலிருந்தும் பட்டறைக் கல்லிலிருந்தும் குளிர்ந்ததாய் எதுவும் பிறக்க முடியாதே. நானும் கூட அந்தக் கொல்லர்களைப்

பற்றிக் குழல் வழியாகச் சொல்ல முயல்கிறேன். அந்த சூரியக் கொல்லர்களைப் பற்றி.''

இரண்டாம் நாள் பள்ளித் தோட்டத்துக்கு நாங்கள் வந்தோம். எங்கள் குழல்களிலிருந்து கிளம்பிய வஞ்சனை யற்ற ராகங்களின் மூலம் கொல்லர்களைப் பற்றி நாங்கள் சொன்னோம். நாங்கள் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டது மட்டுமின்றி, எங்கள் ராகங்கள் தோன்றுவதற்குக் காரணமாய் இருந்த அந்த மனநிலையையும் புரிந்து கொண்டோம். கோல்யாவின் ''கொல்லர்களது'' இசையை நான் கேட்டேன். சிறுவன் அவர்களது சுத்திகளின் மெல்லிய நாதத்தை வெளிக்காட்டியது மட்டுமல்லாமல் அவர்களது ஆற்றலில் ஆனந்தமும் கொண்டான். வயல்கள் மீதும் தோட்டங்கள் மீதும் விழுகிற வெள்ளித் தீப்பொறிகளைக் கண்டு திகைப்படைந்தான் அவன். பூமி முழுதையும் தனது கண் பார்வைக்குள் அடக்க முடியவில்லையே என்று வருத்தம் கொண்டான். எல்லாவற்றிலும் மங்கலாகத் தெரிகிற அழகைக் காண அவன் விரும்புகிறான்.

இந்தக் குழந்தையின் இதயத்துக்கு இட்டுச் செல்கிற பாதையை நான் கண்டு கொண்டேன். உள்ளத்தைப் பயிற்றுவிக்கிறது இசை. உணர்ச்சிகளுக்கு அது மனிதத் தன்மையைத் தருகிறது. உண்மையான மனிதத் தன்மை வார்த்தையில் வெளிப்படுவது போலவே, இசையிலும் வெளியாகிறது. இசைக்கேற்ற நுண்ணுணர்வைக் குழந்தையிடம் வளர்க்கையில் அவனது சிந்தனைகளையும் முயற்சிகளையும் நாம் மேன்மைப் படுத்துகிறோம். ஒவ்வொரு இதயத்திலும் மனித உணர்ச்சிகளின் உயிர் படைக்கும் ஊற்றுக் கண்ணை இசை ராகம் திறந்து விடுமாறு செய்வதுதான் நம் முன்னுள்ள பணியாகும். உயிருள்ள, அசைவுள்ள தாய் மொழிச் சொல்லில், சுற்றியுள்ள உலகின் அழகு குழந்தையின் முன்னே விரிவது போலவே இசை ராகத்திலும் அந்த அழகு விரிகிறது. மனித உணர்ச்சிகளை வெளியிடும் மொழியான ராகம், சுற்றியுள்ள உலகத்தின் அழகை மட்டும் குழந்தையின் உள்ளத்துக்கு எடுத்துச் செல்வதில்லை. மனிதனின் மகத்துவத்தையும் தகுதியையும் மக்களின்

முன்னே அது திறந்து விடுகிறது. இசை ஆனந்தத்தைத் தரு கிற பொழுது, தன்னை ஓர் உண்மையான மனிதனாக குழந் தை உணருகிறது. குழந்தை உள்ளம்—இது நுண்ணுணர்வு கொண்ட கலைஞனின் உள்ளம். இதில் தந்திகள் இறுக்க மாக இழுத்துக் கட்டப் பட்டுள்ளன. அவற்றை உங்களால் மீட்டி விட முடிந்தால் மனோகரமான சங்கீதத்தை நீங்கள் கேட்கலாம். உருவக அர்த்தத்தில் அல்ல நேரடி அர்த்தத் திலேயே இவ்வாறு நடக்கும். விளையாட்டும் கட்டுக்கதை யும் இல்லாமல் குழந்தைப் பருவம் எப்படி இருக்க முடியாதோ அதே போல இசை இல்லாமலும் இப்பருவம் சாத்தியமில்லை.

ஆசிரியருக்கும் குழந்தைகளுக்கும் இடையில் ஆன்மீகப் பொதுமையைத் தருகிற மிகவும் பயன் தரும் பின்னணி, இசையே என்று அனுபவம் உறுதிப்படுத்தி இருக்கிறது. மனிதர்களின் இதயங்களை அது திறந்து விடுகிறது. இராகத்தைக் கேட்கையில், அதன் அழகை அனுபவிக்கை யில், ஆனந்தம் கொள்கையில் ஆசிரியரும் மாணவனும் சமநிலையாளர்களாக, நெருங்கியவர்களாக மாறுகிறார்கள்.

இசையால் மட்டும் எட்டப்படுகிற கூட்டு அனுபவத் தின் போது, இசை இல்லாமல் ஒருபோதும் ஆசிரியர் காண முடியாத விஷயங்களை குழந்தைக்குள்ளே அவர் காண் கிறார். இசையொலியின் செல்வாக்கின் கீழ், உயர்வான அனுபவ உணர்ச்சிகளால் உள்ளம் கட்டுண்டிருக்கிற போது தனது கவலைகளையும் பதட்டங்களையும் உங்களிடம் நம்பி வெளியிடுகிறது குழந்தை. இத்தகைய ஒரு நேரத்தில், கோல்யா தன்னை அசைத்தாட்டுகிற, மகிழ்ச்சிப் படுத்துகிற, கவலைக்குள்ளாக்குகிற விஷயங்களை எல்லாம் தான்வரைந்து இருக்கிற சித்திர நோட்டு ஒன்று வைத்திருப்பதாகக் கோல்யா என்னிடம் சொன்னான். பின்னர் தனது சித்திரங் களைச் சிறுவன் என்னிடம் காட்டினான். கனவுலகம் ஒன்று என் முன்னே விரிந்தது. டிராக்டர் ஓட்ட வேண்டும் என் றும் எல்லைக் காவல் நிலையத்தில் நிற்க வேண்டும் என்றும் கோல்யா விரும்பினான்.

## பனிக்காலத்தில் மகிழ்ச்சிகளும் தொந்தரவுகளும்

பனிக்காலம்—இந்த உன்னத காலத்தில் குழந்தைகளைப் பயிற்றுவிப்பதற்கும் வளர்ப்பதற்கும் எத்தகைய அருமையான சாத்தியப்பாடுகள் இருக்கின்றன. கோடை காலம் மட்டுமே குழந்தைகளின் ஆரோக்கிய காலம் என்று கருதுகிறவர்கள் பெரிய தவறு செய்கிருர்கள். மிதமான பனிக்குளிரையும் மிருதுவாய், மிகுதியாய்க் கிடக்கும் வெண்பனியையும் ஆரோக்கியத்தின் உறுதிக்குப் பயன் படுத்திக் கொள்ளவில்லை என்ருல், கோடைகாலமும் பயனெதையும் தராது. கடுங் குளிரில் இருப்பதற்கும், குளிர் காற்றைச் சுவாசிப்பதற்கும் குழந்தைகளுக்கு நான் கற்றுக் கொடுத்தேன்.

சூரிய உதயத்தைச் சந்திப்பதற்காகப் பள்ளியின் மூடுதோட்டத்துக்குக் காலையில் நாங்கள் போனேம், அந்த மூடுதோட்டத்தின் வராந்தாக் கண்ணுடிகளின் மீது உறைந்து போய்ப் படிந்திருந்த அலங்காரக் கோலங்களுக்கு செக்கச் சிவந்த வண்ணத்தை ஊட்டியது சூரியன். ஒவ்வொரு கண்ணுடியிலும் அற்புத உலகங்களை எங்கள் மனத்தோற்றம் வரைந்தது: கற்பனை மிருகங்களை, இரகசிய மலைக் கணவாய்களை மேகங்களை, மலர்களை நாங்கள் கண்டோம். பனி உறைந்த கண்ணுடிகளின் அருகில் பலப் பல கற்பனைக் கதைகளை உருவாக்கினர் குழந்தைகள். இங்கு அவர்கள் படிப்பதற்குக் கற்றுக் கொண்டனர். இது பற்றிப் பின்னர் சொல்கிறேன்.

சூரியனைக் கண்ட குழந்தைகள் வராந்தாவிலிருந்து மூடுதோட்டத்துக்குச் செல்கிற கதவைத் திறந்து மலர்களின் உலகத்துக்குள் அடியெடுத்து வைத்தனர். மூடு தோட்டங்கள் ஒன்றில் பனிக்காலத்தில் கிரிசான்திமம் பூக்கள் மலரும். இங்கு ஒவ்வொரு குழந்தைக்கும் தனது மலர்—தனது நண்பன் இருந்தான். செடிகளுக்குத் தண்ணீர் வார்த்தனர் குழந்தைகள். இவை மகிழ்ச்சி நிறைந்த நிமிடங்கள். சிறு தண்ணீர்த் துளிகளில் வானவில் ஒளிர்ந்தது. ஆனந்தம் கொண்டு அதனைப் பார்த்தார்கள் குழந்

தைகள், கோடைகாலம் பற்றிக் கனவு கண்டார்கள்... சூரியப் பாலமான தங்க வானவில் பற்றி கதையொன்று இங்கு பிறந்தது.

பூமி மீது படிந்திருந்த வெள்ளைப் போர்வை புதுப்பிக் கப்படுகிற ஒவ்வொரு பனிப்புயலுக்கும் பின், பள்ளித் தோட்டத்துப் பனிக் குவியலைக் காணச் சென்றோம். திடு மென்று, புதிராக வருகிற மேகத்தைப் போலவே வெண் பனிக் குவியலும் ஒரு வியத்தகு உலகமே. வியத்தகு வெண் பனிக் குவியலில் எட்ட முடியாத மலைச் சிகரங்களின் கற்பனைக் கோபுரங்களை, உறைந்து போன கடலலைகளை, வெண்ணிற அன்னப் பறவையை சாம்பல் நிற ஓநாயை, தந்திரக்கார நரியைக் கண்டனர் குழந்தைகள். ஒரு நாள், பாய் மரங்களும், உயர் சதுக்கங்களும், நங்கூரமும், தொலை தூரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிற கொள்ளைக்காரர் களும் கொண்ட கற்பனைக் கப்பல் ஒன்றை இயற்கை எங் களுக்காகக் கட்டித் தந்து போயிருந்தது. காற்றும் வெய் யிலும் இந்தக் கப்பலைக் கலைத்து விடாமலிருந்த வரை இக்கப்பல் பயணம் பல நாட்கள் தொடர்ந்து சென்று வந் தது. கடற் கொள்ளைக்காரர்கள், பலவீனமானவர்களையும் அநீதியாய்த் துன்புறுத்தப் பட்டவர்களையும் விடுதலை செய் தார்கள், நல்லதுக்கும் தீயதுக்கும் நடக்கிற போராட்டம், அநியாயத்தின் மீது நியாயம் அடைகிற வெற்றி ஆகியவை பற்றி நான் சொல்கிற கதையைக் கேட்பதற்காகப் பள்ளிக் கூடத்தில் மாலை நேரத்தில் மாணவர்கள் கூடுவர்.

கடுமையான குளிர் இருக்கையில் நடந்து வர நாங்கள் போக மாட்டோம். பனி உருகத் தொடங்கும் போது எங் களது உண்மையான கொண்டாட்டம் ஆரம்பித்து விடும். வெண்பனி நகர் ஒன்று நிர்மாணிக்க பயனீர் மாணவர்கள் எங்களுக்கு உதவினர். குகை போன்று தோற்றம் தந்த, பனிப் பாளங்களால் ஆன பதுங்குமிடம் ஒன்று உருவா கியது. இங்கும் கூட ஓய்வுக்கும் உழைப்புக்கும் உடன் இணைந்தன கதையும் விளையாட்டும். துருவ விஞ்ஞானிகள் விளையாட்டு விளையாடினோம் நாங்கள். பனியின் மாபெரும் மௌனம் பற்றி கதைகள் சொன்னேன் குழந்தைகட்கு.

இவற்றில் கற்பனையும் மனிதர்களின் உண்மையான வீரச் செயல்களும் கலந்து கலந்து வந்தன. சூரியக் கதிர்களின் கீழ் உருகிக் கொண்டிருந்த பதுங்குமிடத்திலிருந்து ஒரு வருத்தத்துடன் வெளியேறினார்கள் சிறுவர்கள்.

பனிக் காலத்தில் இரு முறை நாங்கள் காட்டுக்குச் சென்றோம். ஒரு முறை காரிலும், மற்றொரு முறை குதிரைகள் மீதும் போனோம். மிருதுவான பனிக்குளிர் கன்னங்களை எரித்தது. ஆனால் ஒருவரும் குளிர் பற்றிப் புகார் கூறவில்லை. பனிக் காலக் காட்டில் கழித்து மகிழ்ந்த நாட்கள் குழந்தைகள் நினைவில் என்றென்றும் நிலைத்தன. பனிக் காலக் காட்டின் சங்கீதத்தைக் கேட்டோம். நாங்கள், பறவைகளின் வாழ்க்கையைக் கவனமாய்ப் பார்த்தோம். காட்டின் சரிவில் உறைந்து போகாத ஊற்று ஒன்றைக் கண்டோம். அங்கு மூட்டிய அடுப்பில், குளிர் காய்ந்தோம், கஞ்சி காய்ச்சினோம். அந்திச் சூரியனின் அழகில் மயங்கினோம். பனி மூடியிருந்த கிளைகளின் வண்ணங்கள் வெளிறிய ரோஜா நிறமாக, ஆரஞ்சு நிறமாக, கருஞ்சிவப்புக் நிறமாய் வயலெட்கலந்த ஊதா வண்ணத்தில் எங்கள் கண்களுக்கு முன் மாறி மாறித் தெரிந்தன. குழந்தைகளைத் தொற்றிக் கொண்டிருந்த கற்பனா பூர்வ அசாதாரணத் தன்மையும், அழகும் நிறைந்த புதிய சித்திரங்களால் சூரியனைப் பற்றிய கதை செழுமை பெற்றது. இங்கு நாங்கள் கவிதை இயற்றினோம். பனிக்காலக் காடு பற்றிய தமது மனப்பதிவுகளைக் குழந்தைகள் இக்கவிதையில் வடித்தனர் பனியுடை பூண்டு அலங்காரமாக இருந்த பைன் மரத்தின் அழகில் மயங்கிய காத்யா சொன்னாள்:

''தூக்கம் போடுது தேவதாரு.''
ஸீனா மேலும் பிரகாசமான சித்திரம் தீட்டினாள்:
''தூக்கம் போடுது தேவதாரு கோடை வரை...''
''தூக்கம் போடுது தேவதாரு வசந்தம் வரை''

என்றான் செர்யோஷா. இந்த வார்த்தைகளில் தொனித்த ராகத்தை எல்லோரும் உணர்ந்தனர். நண்பனின் சிந்தனையைத் தொடர விரும்பினார்கள் குழந்தைகள்.

''கனவு வருது, கனவு வருது, கனவதற்கு வருது'' என்று ஒரு குழந்தை சொல்லிற்று.

தூக்கம் போடுது தேவதாரு வசந்தம் வரை
கனவு வருது, கனவு வருது கனவதற்கு வருது.

தாமாகவே கவிதை கட்டி விட்டபெருமை உணர்ச்சி யுடன் சிறுவர்களும் சிறுமிகளும் பாடினர். குழந்தையின் ஆன்மிக வளம் நிறைந்த முழு உலகத்தையே இந்தப் பனிக்கால மாலை நேரம் என் முன்னே திறந்து விட்டது. சிந்தனை செய்யக் கற்றுத் தருவது, குழந்தை மூளையினது சக்தியையும் திறனையும் வளர்ப்பது ஆகியவை சிந்தனை யின், வார்த்தையின் ஊற்றுக்கண்ணருகேயே நேரடியாக நடைபெற வேண்டும் என்னும் எனது கருத்து முற்றாக உறுதிப்பட்டது.

பனிப் பொம்மை செய்யவும் வழுக்கு வண்டியில் சறுக் கவும் எந்தச் சிறுவன்தான் விரும்ப மாட்டான்! மிதமான குளிரில், அமைதியான காலநிலையில், குறிப்பாக பிரகாச மாகச் சூரியன் ஒளிரும் போது முழு நாளையும் நாங்கள் வெட்ட வெளியில் கழித்தோம். கிராமத்தின் ஓரத்தில் பனி மலை ஒன்றை உருவாக்கினோம். மரத்தாலும், உலோ கத்தாலும் ஆன சறுக்கு வண்டிகளில் எங்களுக்குத் திருப்தி ஏற்படவில்லை. போதுமான வேகத்தில் அவை சறுக்க வில்லை. வெண்பனியிலேயே ஒரு இருபது சறுக்கு வண்டி கள் செய்தோம். வைக்கோல் எடுத்து, அதனை எருவுடன் கலந்து அதன்மீது தண்ணீர் ஊற்றினோம். அது பனிக் கட்டி போல உறைந்து போயிற்று இத்தகைய சறுக்கு வண்டி எந்தவித ஆபத்தும் அற்றதாக இருந்தது.

எனது குழந்தைப் பருவமே எனக்கு ஞாபகம் வந்தது... ஒரு வண்டிச் சக்கரம் எங்களுக்குக் கிடைத்தது. அதன் அச்சை உறைந்து போன குளத்தில், நாங்கள் போட்ட துவாரத்திற்குள் நுழைத்தோம். அந்தச் சக்கரம் வெண் பனிக் குடைராட்டினம் ஆகிவிட்டது. சக்கரத்தின் குறுக் கே இருந்த குச்சிகளைப் பிடித்துக் கொண்டு குளத்தின் கண்ணடி போன்ற மேற்பரப்பில் வழுக்கிக் கொண்டு சுற்றி னார்கள் குழந்தைகள். இந்த விளையாட்டிலும் வேடிக்கை களிலும் முழு நாட்களையும் கழிப்போம் நாங்கள். பலவீன

மாயிருந்த குழந்தைகளான சான்யா, வலோத்யா, காத்யா, கோஸ்த்யா ஆகியோர் செவ்வண்ணத்தவர்களாய், சிவப்பேறிய கன்னங் கொண்டவர்களாய் மாறிப் போயினர்.

அமைதியான, மேகமற்ற பனிக் குளிர் மாலை நேரங்களில் குழந்தைகளின் முன்னுல் இயற்கையின் தனியழகு குறிப்பாகப் பிரகாசமாய் விரியும். தோட்டத்தில் எங்காவது நின்று கொண்டு சூரிய அஸ்தமனத்தின் செவ்வண்ணத்தைப் பார்த்தபடி முதல் நட்சத்திரங்கள் தோன்றுவதற்காகக் காத்திருப்போம். மாலை நேர ஒளியால் பிரகாசம் பெற்ற வெண்பனி இளஞ் சிவப்பு நிறமாகவும் பின்னர் பிரகாசமான வயலட் நிறமாகவும் தோன்றியது. இந்த நிமிடங்களில் குழந்தைகளைப் பற்றியிருந்த உணர்ச்சிகளெல்லாம் வார்த்தைகளாகவும் இசையாகவும் வெளியாயின. ஒப்பற்ற அழகு வாய்ந்த நாட்டுப்புறப் பாடல்கள் இராகங்கள் நினைவுக்கு வந்தன. கவர்ச்சி வயப்பட்ட நாங்கள் பள்ளிக்குச் சென்று அடுப்பில் தீ மூட்டி பாட்டுப் பாடினோம்.

பனிக் காலத்தின் அமைதியான காலை வேளையில் சூரிய உதயத்தைக் கண்டு பரவசமுற்றூர்கள் குழந்தைகள். தமது ஆனந்தத்தை வெளியிடுவதற்கு வார்த்தைகளைத் தேடிக் கண்டுபிடிக்க விரும்பினுர்கள் அவர்கள். வார்த்தைகளைத் தேடுவதற்கு நான் உதவி செய்தேன். ஒவ்வொரு கண்டு பிடிப்பும் மகிழ்ச்சியைத் தூண்டிவிட்டது மட்டுமல்லாமல், சிந்தனையின் ஆற்றலுக்குப் புதிய பயிற்சியாகவும் இருந்தது.

## வானம்பாடியின் முதல் பண்டிகை

பறவைகள், பிராணிகள் ஆகியவற்றின் ''மருத்துவ மனைக்'' கூண்டுக்கு அருகே பனிக்காலத்தில் நின்று கொண்டு, எங்கள் சிறிய நண்பர்கள் நீல வானத்துக்குப் பறந்து செல்லுகிற, சோலையில் குதித்து விளையாடுகிற வெதுவெதுப்பான வசந்த நாள் பற்றிக் கனவு கண்டோம். நெடுநாள் காத்திருந்த அந்தப் பண்டிகை இதோ வந்து

விட்டது. முதல் வானம்பாடி ஆகாயத்தில் தோன்றியதற்கு அடுத்த நாள் பறவைகளும் பிராணிகளும் வசித்துக் கொண் டிருந்த கூண்டுகளைக் குன்றின் உச்சிக்குக் கொண்டு சென் றோம். பறவைக் குரல்களால் ஸ்டெப்பி வெளி கலகலத் தது. குழந்தைகள் கூண்டுகளைத் திறந்து விட்டனர், வானம் பாடி, மரங்கொத்தி, ஓரியோல பட்சி முயல் ஆகியவை சுதந்திரம் பெற்று விட்டன, இதோ எங்கள் வானம்பாடி ஏற்கெனவே ஆகாயத்தில் பாடுகிறது. பூமியை நோக்கிப் பாய்கிறது... அழகில் மயங்கி அப்படியே நிற்கிறோம் நாங் கள். இப்பிராணிகளின் உயிரைப் பாதுகாத்து வைத்திருந் தோம் என்பதில் மகிழ் உணர்ச்சி கொள்கிறோம்.

இந்தக் கணங்களில் எதிர்காலத்தைப் பற்றிய சித்திரம் எனது மனக்கண்ணில் தோன்றியது. வானம்பாடிப் பண் டிகையைக் கொண்டாடுவதற்காக ஒவ்வொரு ஆண்டும் குன்றின் உச்சிக்கு நாங்கள் வந்தோம்.

வானம்பாடிப் பண்டிகை வசந்தத்தையும் கோடை காலத்தையும் [illegible] ஒரு [illegible] கோடு போலாயிற்று. பறவைக் குஞ்சைக் காப்பாற்றிய பெருமை தம்மைச் சேரும் என்று குழந்தைகள் கருதினர். ஒவ்வொரு குழந்தை யும் "அழகுக்கும் உயிருக்கும் இடம்'' ஒன்று அமைத்தது. வானம்பாடியின் உருவம், சூரியக் கதிர்கள் பொழிகிற வயல்களின் மீது கலகலக்கிற ஒப்பற்ற இசை ஆகியவை எல்லாம் குழந்தைகளின் ஆன்மிக உலகத்திற்குள் என் றென்றைக்குமாக நுழைந்து விட்டன. இந்தப் பண்டிகைக் காகப் பொறுமையிழந்து குழந்தைகள் காத்திருந்ததற்கு இன்னொரு காரணம், கலைப் படைப்பு ஆர்வம் இந்த நாளு டன் தொடர்பு கொண்டிருந்ததே ஆகும், சின்னஞ்சிறு வானம்பாடி, தூக்கணங்குருவி, மைனா, செம்பறவை, கருப்பு வால் பறவை, அன்றில் பறவை, சிட்டுக்குருவி ஆகிய வற்றை, தமது தாய்மாருடன் சேர்ந்து கொண்டு வெண் மையான கோதுமை மாவில் செய்தனர். இவற்றைப் பள்ளிக்குக் கொண்டு வந்தனர். தமது சின்னஞ் சிறு படைப் புக்களில், இயற்கையின் மீது கொண்டுள்ள அன்புணர்ச்சி யை, உருவகப் படுத்தினர். அழகு பற்றிய தனது எண்ணத்

தை ஒவ்வொரு குழந்தையும் தனது வழியில் வெளியிட்டது.

இலையுதிர் காலத்தில் வேறிடம் பறந்து செல்லும் பறவைகளிடம் குழந்தைகள் வருத்தத்துடன் விடை பெற்றனர். இந்த வருத்தம் மனித இதயத்தை மேன்மைப் படுத்துகிறது. இதில்லாமல் அன்பு இல்லை.

## படிக்கவும் எழுதவும் எப்படிக் கற்றுக் கொண்டோம்

சிறுவர்கள் படிக்கவும் எழுதவும் எப்படிக் கற்றுக் கொண்டார்கள் என்பது பற்றி இனிச் சொல்கிறேன். அன்புள்ள வாசகரே, நான் சொல்லப் போகிற விஷயங்களை, எழுத்தறிவு கற்பிப்பதில் புதிய முறை என்று பார்க்காதீர்கள். எங்களது படைப்பின் விஞ்ஞான அடிப்படைகள் பற்றி நான் சிந்தித்ததில்லை. குழந்தைகளின் படைப்பு, போதனைப் பணி ஆகியவை பயிற்சிப் பணிக்கு உதவி செய்கிறவையே ஆகும். பதிற்றுக் கணக்கான ஆண்டுகளாக பரிசோதிக்கப் பட்ட எழுத்தறிவு கற்பிக்கும் முறையை எந்த அளவிலாவது இது மாற்றி விடக் கூடும் என்று நான் அறவே நினைக்கவில்லை. வயல்களுக்கும் புல்வெளிகளுக்கும் நடுவே, ஓக் மரச் சோலைகளின் நிழலிலும் வெப்பம் மிகுந்த ஸ்டெப்பிவெளிக் காற்றுக்குக் கீழும், கோடை நாளின் உதய வேளையிலும் பனிக்கால இருட்டிலும் பிறந்தது இந்தப் படைப்பு.

குழந்தையினது பள்ளி வாழ்க்கையின் முதல் நாட்களில் படிப்பதும் எழுதுவதும் அதற்கு எவ்வளவு கடினமான, களைப்பூட்டும், சுவாரஸ்யமற்ற வேலையாக இருக்கும் என்பது பற்றியும், கல்வி கற்பது வெறும் புத்தக சம்பந்தமான வேலையாக மாறி விடுவதால், அறிவுக்கு இட்டுச் செல்கிற இடர் மிகுந்த பாதையில் குழந்தைகளுக்கு எவ்வளவு தோல்விகள் ஏற்படுகின்றன என்பது பற்றியும் நான் பல வருடங்களாக யோசித்து வந்திருக்கிறேன். எழுத்துக்களுக்கு இடையில் வித்தியாசம் கண்டுபிடிப்பதற்

காகக் குழந்தை எவ்வளவு கடுமையான முயற்சிகள் செய்கிறது. அதன் கண்களுக்கு முன்னுல் என்னவென்றே கண்டு பிடிக்க முடியாதபடி அந்த எழுத்துக்கள் எப்படிக் தத்தித் தத்திக் குதிக்கின்றன, ஒரு அலங்காரமாக ஒன்றுகலந்து விடுகின்றன என்று நான் கவனித்து வந்தேன். அதே போதில், இந்தப் பாடம் ஏதாவது சுவாரஸ்யமான விஷயத்துடனே, விளையாட்டுடனே தொடர்பு கொண்டதாய் இருந்தால் (''இதைக் கண்டிப்பாக நினைவில் வைத்துக் கொள். தெரிந்து கொள்ளவில்லை என்ருல் உனக்குக் கேடு விளையும்'' என்று அதனிடம் யாரும் சொல்லாமலிருப்பது குறிப்பாக முக்கியத்துவம் வாய்ந்ததாகும்) குழந்தைகள் எழுத்துக்களை எவ்வளவு சுலபமாக ஞாபகத்தில் வைத்துக் கொள்கிருர்கள், அவற்றிலிருந்து வார்த்தைகளை எவ்வளவு எளிதாக உருவாக்குகிருர்கள் என்றும் நான் கண்டேன்.

பள்ளி வாழ்க்கையின் முதல் நாட்களில், இடர் மிகுந்த போதனைப் பாதையில் குழந்தை நடை போடுகையில் மதிப்பெண்தான் அது வழிபடும் விக்கிரகமாகும். ஒரு குழந்தைக்கு இது அன்பு நிறைந்த, அனுதாபம் மிகுந்த விக்கிரகமாகும். வேறு குழந்தைக்கு இதுவே கொடுமையான, கருணையற்ற, இரக்கமற்ற ஒன்ருகும். ஒருவனுக்கு ஏன் இது அருள் பாலிக்கிறது, மற்றவனுக்கு ஏன் கொடுமை இழைக்கிறது என்று குழந்தைகளுக்குப் புரிவதில்லை. தனது உழைப்பையும், சொந்த முயற்சிகளையும் பொறுத்ததே மதிப்பெண்கள் என்று ஏழு வயதுக் குழந்தை புரிந்து கொள்ள முடியாதல்லவா? அவனுக்கு இது எட்ட முடியாத விஷயம். இந்த விக்கிரகத்தைத் திருப்திப் படுத்த அவன் முயற்சி செய்கிருன், மிக மோசமாகப் போனுல் இதனை ஏமாற்றி விட முயன்று, சொந்த மகிழ்ச்சிக்காகவன்றி மதிப்பெண்களுக்காகக் கற்பதற்குப் படிப்படியாகப் பழகிக் கொள்கிருன். பள்ளி வாழ்க்கையிலிருந்தே மதிப்பெண்ணை விரட்டி விட வேண்டும் என்கிற எண்ணம் எனக்கு ஒரு சிறிதுமில்லை. மதிப்பெண் இல்லாமல் முடியாதுதான். ஆனுல், படிப்பிற்காகச் செலவழிக்கப் படுகிற சொந்த முயற்சிகளைப் பொறுத்ததுதான், தனது மூளை உழைப்பின்

தரம் என்பதைக் குழந்தை புரிந்து கொள்ளத் தொடங்கிய பின்பே, இந்த மதிப்பெண் அவனை அணுக வேண்டும்·

தொடக்கப் பள்ளியில், எதிர்காலத்துக்கு நம்பிக்கை தருகிற மகிழ்ச்சி மிக்க வாழ்க்கையின் ஆரம்பமாக மதிப்பெண் விளங்க வேண்டும் என்பதே மிக முக்கியமானது என்று நான் கருதுகிறேன். உழைப்பு விருப்பத்துக்கு மதிப்பெண் பரிவு வழங்க வேண்டும். சோம்பேறித் தனத்துக்கும் கவனமின்மைக்கும் அது தண்டனை வழங்கக் கூடாது. இரண்டு மார்க்கும் ஒரு மார்க்கும் சோம்பேறிக் குதிரையை முடுக்கி விடுகிற சவுக்குப் போன்றது என்றும், நான்கு மார்க்கும் ஐந்து மார்க்கும் பிஸ்கோத்து போன்றது என்றும் ஆசிரியர் கருதினால், சவுக்கு, பிஸ்கோத்து இரண்டையுமே குழந்தைகள் விரைவில் வெறுக்கத் தொடங்கி விடுவார்கள். இரண்டு மார்க்கும் ஒரு மார்க்கும் மிகவும் கூர்மையான, மென்மையான ஆயுதமாகும். அறிவு சார்ந்த, அனுபவம் மிக்க ஆசிரியரிடம் இந்த ஆயுதம் எப்போதும் இருப்பில் இருக்கும். ஒரு போதும் அவர் இதனை உபயோகிப்பதில்லை. தொடக்கப் பள்ளியில், ஒரு போதும் உபயோகிக்கப் படக் கூடாது என்பதற்காகவே இந்த ஆயுதம் இருக்க வேண்டும் என்று அறிந்து கொள்ளுங்கள். தனது சக்தியில் குழந்தை ஒருபோதும் நம்பிக்கை இழந்து விடாமலிருக்குமாறும், தனக்கு எதுவுமே கைவரவில்லை என்று அது உணராதிருக்குமாறும் பார்த்துக் கொள்வதில்தான் ஆசிரியரின் போதனை ஞானம் அடங்கி இருக்கிறது. ஒவ்வொரு வேலையும் ஒரு சிறிய முன்னேற்ற இயக்கமாகவாவது குழந்தைக்கு விளங்க வேண்டும். பள்ளிக் கூடத்தின் வாசற்படியை அப்பொழுதுதான் தாண்டியுள்ள, 'அ'வுக்கும் 'ஆ'வுக்கும் இடையேவுள்ள வித்தியாசத்தை அப்போதுதான் காணத் தொடங்கியுள்ள ஏழு வயதுச் சிறுவன், திடீரென்று இரண்டு மார்க்கு வாங்குகிறான். 'இதென்ன விஷயம்' என்று அவனுக்குப் புரிவதில்லை, வருத்தமோ கவலையோ படுவதில்லை. அவன் அதிர்ச்சியடைகிறான். ''சுருக்கெனத் தைக்கிற, நரைத்த தலையின் அசட்டுத்தனத் தாக்குதலின் முன்னே வியப்புக் கொண்டு

அப்படியே நின்று விடுகிறது புத்திசாலிக் குழந்தை'', என்று எழுதினுர் யானுஷ் கர்ச்சாக். ''குழந்தையின் அறியாமையை மதித்து நடவுங்கள்''—போலந்து நாட்டுப் போதனை வல்லுனரின் இந்த வார்த்தைகள் என்றென்றைக்குமாக ஆயுள் முழுதுக்கும் எனது நினைவில் பதிந்தன. மனித வளர்ப்பின் உயர் ஞானத்தை—குழந்தையின் அறியாமையை மதித்து நடக்கும் திறனை ஆசிரியர் எப்போது பெற்றிருக்கிறுரோ அப்போதுதான், மிகக் கூர்மையான, மிக மென்மையான, தொடக்கப் பள்ளியில் ஒருபோதும் உபயோகிக்கத் தகாத ஒரு ஆயுதமாக இரண்டு மார்க்கு விளங்கும்.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடம்'' தொடங்குவதற்கு சில ஆண்டுகளுக்கு முன்பு பின்வரும் சம்பவம் நிகழ்ந்தது. பள்ளி வயதுக்கு முந்தியவர்களான ஆறு வயதுக் குழந்தைகளுடன் நாங்கள் ஒரு சோலைக்குப் போனோம். சோலையின் ஓரத்தில் உட்கார்ந்தோம். நான் குழந்தைகளுக்கு வண்ணத்துப் பூச்சிகளைப் பற்றியும் வண்டுகளைப் பற்றியும் கதை சொல்லத் தொடங்கினேன். புல்லின் மீது ஊர்ந்து [illegible] பெரிய கொம்பு மீசை வண்டு ஒன்று எங்கள் கவனத்தைக் கவர்ந்தது. காற்றில் உயரப் பறப்பதற்கு அது பல முறை முயன்றது, ஆனுல் புல்லிலிருந்து அதனுல் விடுபட முடியவில்லை. வண்டின் எல்லா உறுப்புக்களையும் நன்கு பயின்றுர்கள் சிறுவர்கள். என் முன்னே சித்திர நோட்டு கிடந்தது. அதில் நான் வண்டை வரைந்தேன். ஒரு குழந்தை சித்திரத்தின் பெயரை எழுதித் தரச் சொல்லிற்று. பெரிய அச்சு எழுத்துக்களில் வண்டு (ЖУК ஷுக்) என்று நான் எழுதினேன். ஆர்வம் நிறைந்த குழந்தைகள் இந்த வார்த்தையைத் திரும்பச் சொல்லத் தொடங்கினர்: **ஷுக், ஷுக்.** சித்திரங்கள் போலத் தோன்றிய எழுத்துக்களைக் கவனமாகப் பரிசீலிக்கத் தொடங்கினர். இந்த எழுத்துக்களை—சித்திரங்களை மணலில் வரைந்தது ஒரு குழந்தை. இன்னொரு குழந்தை இந்த வார்த்தையை புல் தண்டிலேயே பின்னியது. ஒவ்வொரு வார்த்தையும் குழந்தைகளுக்கு எதையோ நினைவூட்டியது: உதாரணமாக Ж (ஷ்)

என்ற எழுத்தில், மிகவும் பாடுபட்டு பிறக்க முயன்று கொண்டிருந்த துரதிருஷ்டசாலியான எங்கள் வண்டைப் பார்த்தார்கள் அவர்கள்... சில மாதங்கள் கழித்து இதே குழந்தைகளின் வகுப்புக்கு—பள்ளியில் அவர்கள் ஏற்கெனவே கற்கத் தொடங்கி விட்டனர்—நான் சென்றேன்· ''படிப்பதுதான் அவர்களுக்குக் கஷ்டம்'' என்று ஆசிரியை புகார் செய்தார். இது போல ஒரு தற்செயல் சம்பவம் நடக்க வேண்டுமே! அன்றைய பாடத்தில்தான் Ж என்ற எழுத்தைக் கற்றுக் கொண்டிருந்தார்கள் அவர்கள். குழந்தைகளின் முகங்கள் புன்னகையால் மலர்ந்தன. வகுப்பில் ரீங்கார ஒலி கேட்டது: ЖУК (வண்டு) என்ற வார்த்தையைச் சிறுவர்கள் அனைவரும் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தனர். அவ்வாறு சொல்லும் போது Ж என்ற எழுத்தைத் தனியாக உச்சரித்தனர், குழந்தைகள் கையை உயர்த்தினர். எல்லாக் குழந்தைகளுக்கும் ЖУК என்ற வார்த்தையை எழுத முடியும் என்று அவர்கள் சொல்வதை ஒன்றும் புரியாத ஆசிரியை காது கொடுத்துக் கேட்டார். இந்தப் பாடம் எவ்வளவு மகிழ்ச்சிகரமானதாயும் சந்தோஷம் நிறைந்ததாயும் இருந்தது...போதனை முறைக்கு வாழ்க்கை கற்றுக் கொடுத்த பாடங்களில் ஒன்றாக இது விளங்கியது.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' இப்போது இதை நான் நினைத்துக் கொண்டேன். அழகு, விளையாட்டு, கட்டுக்கதை, இசை, சித்திரம், கற்பனை, படைப்பு ஆகியவை நிறைந்த உலகத்தில் குழந்தைகள் வசிக்க வேண்டும், படிக்கவும் எழுதவும் குழந்தைக்குக் கற்றுக் கொடுக்க நாம் விரும்பும் போதும் இந்த உலகம் அவனைச் சுற்றி இருக்க வேண்டும். உலகை அறிகிற முதல் படிக்கட்டில் ஏறும் போது குழந்தை எத்தகைய உணர்வு கொள்கிறது, எத்தகைய அனுபவ உணர்ச்சி கொள்கிறது என்பதைப் பொறுத்தே அறிவை நோக்கி அவன் மேற்கொண்டு செல்கிற பாதை இருக்கும். பல குழந்தைகளுக்கு இந்தப் படிக்கட்டே முட்டுக்கட்டையாகி விடுகிறது என்பதை நினைத்தாலே பயமாக இருக்கிறது. பள்ளி வாழ்க்கையைக்

கூர்ந்து பாருங்கள். எழுதப் படிக்கக் கற்றுக் கொள்கிற காலத்தில்தான் குழந்தைகள் பலர் தமது சக்தியில் நம்பிக்கை இழந்து விடுகின்றனர் என்பதைக் காண்பீர்கள். களைப்பை உணராதபடி குழந்தைகள் அறிவை நோக்கி எடுத்து வைக்கிற ஒவ்வொரு எட்டும் இருக்க வேண்டும். பறவை பெருமையுடன் பறப்பது போல இந்தப் படிக்கட்டில் குழந்தை ஏறுவதற்கு, அன்புள்ள நண்பர்களே நீங்கள் வகை செய்யுங்கள். முதுகில் ஏற்றிய தாங்க முடியாத பாரத்தால் முற்றிலும் சோர்ந்து போகிற வலுவிழந்த வழிப்போக்கனின் களைப்பான நடையைப் போல இந்தப் படியேற்றம் இல்லாமலிருக்குமாறு பார்த்துக் கொள்ளுங்கள்.

வார்த்தையின் ஊற்றுக்கண்களுக்குக் குழந்தைகளுடன் நான் ''பயணங்கள்'' போகத் தொடங்கினேன்: உலகத்தின் அழகைக் காண குழந்தைகளுக்குக் கண் திறந்து விட்டேன். அதே போதில் வார்த்தையின் இசையைக் குழந்தை இதயத்துக்குக் கொண்டு செல்ல முயன்றேன். பொருள்கள், வஸ்து, தோற்றம் ஆகியவற்றை அர்த்தப் படுத்து கிறவையாய் மட்டும் வார்த்தை இருக்காமல் அது தன்னுள் ஆனது மணத்தை, நுண்ணிய வேறுபாடுகளைக் கொண்டிருக்குமாறு செய்ய முயன்றேன். மனிதப் பேச்சில் ஒலிகளின் இசையை எழுத்துக்களிடம் எடுத்துத் தருகிற சித்திரங்களிடம் இந்த வார்த்தை பிரதிபலிக்கிற அழகும் உலகத்துச் சிறு துகளின் அழகும் அக்கறையைத் தூண்டுகிற விதத்தில் ஒரு அற்புத இசையைப் போல, குழந்தைகள் வார்த்தைக்குச் செவி மடுக்க வேண்டியது அவசியமாகும். வார்த்தையின் மணத்தைக் குழந்தை உணராத வரை, இந்த வார்த்தையின் மிக நுண்ணிய வேறுபாடுகளை அது காணாத வரை அதற்கு எழுதப் படிக்கச் சொல்லித் தரத் தொடங்கக் கூடாது. இவ்வாறு செய்கிற ஆசிரியர் குழந்தையைக் கடுமையாக உழைக்க வைக்கிறார் இறுதியில் குழந்தை இந்தக் கஷ்டத்தைச் சமாளிக்கும் (ஆனால் இதற்குக் கொடுக்கப்பட்ட விலை என்ன!).

உயிருள்ள சித்திரங்களாலும், ஒலிகளாலும், ராகங்

களாலும் நிரப்பப்பட்ட பிரகாசமான, பரவசப்படுத்து கிற ஒரு வாழ்க்கைத் துண்டாகக் குழந்தைகளுக்கு எழுத் தறிவு விளங்குமேயாஞல் எழுதவும் படிக்கவும் கற்றுக் கொடுக்கிற நிகழ்ச்சிப் போக்கு எளியதாகி விடும். குழந்தை எதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டுமோ அது முதற்கண் சுவாரஸ்யமாய் இருக்க வேண்டும். எழுதப் படிக்கக் கற்றுத் தருவது சித்திரம் வரைவதுடன் நெருக்க மான தொடர்பு கொண்டிருக்க வேண்டும்.

வார்த்தையின் ஊற்றுக் கண்களுக்கு நாங்கள் மேற் கொண்ட ''பயணங்களின்'' போது சித்திர நோட்டுக்களை யும் பென்சில்களையும் உடன் கொண்டு சென்ருேம். நாங் கள் மேற்கொண்ட ஒரு முதல் பயணங்களில் ஒன்றின் அனு பவம் இதோ. புல்வெளி என்ற வார்த்தையின் அழகையும் நுண்ணிய கருத்துச் சாயல்களையும் குழந்தைகளுக்குக் காட்ட வேண்டும் என்ற குறிக்கோள் கொண்டேன் நான். குளத்துக்கு மேலுள்ள சரிவில் இருந்த ஒரு வில்லோ மரத் துக்குக் கீழே நாங்கள் அமர்ந்தோம். சூரியஞல் ஒளி பாய்ச் சப்பட்ட புல்வெளி தூரத்தில் பசுமை காட்டியது. நான் குழந்தைகளிடம் சொன்னேன்: ''பாருங்கள் நம் முன்னே காட்சி தருகிற அழகை. புல்லுக்கு மேலே வண்ணத்துப் பூச்சிகள் பறக்கின்றன, தேனீக்கள் ரீங்காரம் செய்கின் றன. பொம்மைகளைப் போலக் காட்சி தருகிற பசு மந்தை தொலைவில் தெரிகிறது. புல்வெளி என்பது பிரகாசமான பசிய ஆறு என்றும், மரங்கள் என்பது கரும் பச்சை ஆற்றுக் கரை என்றும் தோன்றுகிறது. பசு மந்தை ஆற்றில் குளிக்கிறது. வந்து கொண்டிருக்கிற இலையுதிர் காலம் எவ்வளவு அழகிய மலர்களை உதிர்த்திருக்கிறது என்று பாருங்கள். புல்வெளியின் இசையைக் காது கொடுத்துக் கேட்போம். ஈக்களின் ரீங்காரமும் வெட்டுக்கிளிகளின் பாட்டும் உங்களுக்குக் காதில் விழுகிறதா?''

எனது சித்திர நோட்டில் புல்வெளியை வரைகிறேன் பசுக்களையும், வெள்ளைப் பூஞ்சிறகுகள் போல நாலாபக்க மும் தெரிந்த தாராக்களையும் லேசாகத் தெரிந்த புகை யையும், தொடுவானத்துக்கு மேலே வெள்ளை மேகத்தை

யும் நான் வரைகிறேன். அமைதியான காலை நேரத்தின் அழகில் மயங்கி நிற்கிறார்கள் குழந்தைகள். அவர்களும் வரைகிறார்கள். சித்திரத்துக்குக் கீழே எழுதுகிறேன்: ЛУГ (''லூஹ்'' என்றால் ''புல்வெளி''). சிறுவர்களில் பெரும் பாலோருக்கு எழுத்துக்கள் என்பவை சித்திரங்களே. ஒவ் வொரு சித்திரமும் எதையோ நினைவு படுத்துகிறது. அது என்ன? புல் தண்டு. தண்டை வளைத்தால் Л (ல்) என்ற சித்திரம் கிடைக்கிறது. இரண்டு தண்டுகளை மடித்து வைத் தால் У (உ) என்ற சித்திரம் கிடைக்கிறது. தமது சித்திரங் களுக்குக் கீழே ЛУГ (புல்வெளி) என்று எழுதுகிறார்கள் குழந்தைகள். பின்னர் இந்த வார்த்தையை நாங்கள் படிக் கிறோம்: லூஹ், லூஹ். இயற்கை இசைக்கு உகந்த நுண் ணுணர்வு வார்த்தையின் ஒலியைப் புரிந்து கொள்ள குழந் தைகளுக்கு உதவி செய்கிறது. ஒவ்வொரு எழுத்தையும் வரைகின்ற முறை நினைவில் பதிகிறது. ஒவ்வொரு சித்திரத் திலும் உயிருள்ள ஒலியைப் பொழிகிறது குழந்தை. எழுத்தோ நன்கு நினைவில் நிற்கிறது. வார்த்தையின் சித் திரம் எழுத்தோ முழுமையாக ஒன்றாகப் புரிந்து கொள்ளப் படுகிறது. வார்த்தை படிக்கப் படுகிறது. ஒலி ஆய்வு, ஒலி இணைப்பு ஆகியவற்றில் கொடுக்கப்பட்ட நீண்ட பயிற் சியில் வருவதல்ல படித்தல். இப்பொழுதுதான் குழந்தை களால் வரையப்பட்ட, கண்ணால் காணப்பட்ட காட்சிக்கு இணையான ஒலி, இசைச் சித்திரத்தை உணர்வு பூர்வமாக மீண்டும் வெளியிடுவதுதான் இந்தப் படித்தல். வார்த்தை யினது காட்சிச் சித்திரத்திலும் இசை ஒலியிலும் பதிந் துள்ள மனக்கிளர்ச்சி வேறுபாடுகளின் வளமை நிறைந்த காட்சிப் புலனறிவும் ஒலிப் புலனறிவும் ஒன்று படுகையில் எழுத்தும் சிறு வார்த்தையும் ஒரே நேரத்தில் நினைவில் பதிந்து விடுகிறது. அன்புள்ள வாசகரே, எழுத்தறிவுப் பயிற்சி முறையில் ஏதோ ஒரு புதிய முறை கண்டுபிடிக்கப் பட்டுள்ளதல்ல இது. விஞ்ஞானம் ஏற்கெனவே மெய்ப் பித்த ஒன்றை நடைமுறையில் நிறைவேற்றுவதுதான் இது: கண்டிப்பாக எதை நினைவில் வைத்துக் கொள்ள வேண் டுமோ அது எளிதாக நினைவில் பதிகிறது. புலனறிவில்

ஏற்றுக் கொள்ளப் படுகிற சித்திரங்களின் உணர்ச்சி வண்ணம் நினைவில் பதிகிற நிகழ்ச்சியில் மிகப் பெரும் பங்கு வகிக்கிறது.

வார்த்தையின் காட்சிச் சித்திரம் ஒலி, உணர்ச்சி வண்ணம் ஆகியவற்றில் இருக்கிற ஒருமைப்பாடு சுயேச்சையான, தனியான ஒலி ஆய்வை எந்த விதத்திலும் அலட்சியம் செய்வதில்லை. இதற்கு மாறாக, луг (புல்வெளி) என்ற வார்த்தை ஒலிப்பதைக் கேட்கையில் அதில் ஒவ்வொரு ஒலியையும் பிரித்துப் பார்க்கின்றன குழந்தைகள். தனித்தனி ஒலிகளைக் கொண்டதே வார்த்தை என்றும், ஒவ்வொரு ஒலிக்கும் அதற்கேற்ற எழுத்து இருக்கிறது என்றும் புரிந்து கொள்கிறார்கள்.

சில நாட்கள் கழித்து புதிய ''பயணம்'' மேற்கொண்டோம். காலை நேரத்தில் பள்ளித் தோட்டத்திற்கு வருகிறோம். சூரியனைக் காண்கிறோம். தரையில் புல், மரங்களில் இலைகள், திராட்சைக் குலைகள், பழுத்த பேரிக் காய்கள், மங்கிய நீலநிறமான பிளம் பழங்கள் ஆகிய அனைத்தின் மீதும் பனித் திவலைகள் தூவப் பட்டிருந்தன. ஒவ்வொரு திவலையிலும் சூரியப் பொறி சுடர் விட்டது. அந்தப் பொறிகள் ஓரிடத்தில் மறைந்து போய் மறு இடத்தில் தோன்றுகின்றன. சில துளிகளைச் சூரியன் விழுங்கி விடுவது போலவும், மற்றவற்றை அது தூவி விடுவது போலவும் இருந்தது. ஆனால் இது வெறும் தோற்றம்தான். பனித் திவலையைச் சூரியன் பிரகாசிக்கச் செய்யும் போதுதான் அதில் பொறி தோன்றுகிறது, ஆனால் திவலை எங்கே போகிறது? சில திவலைகள் ஆவியாகி விடுகின்றன, மற்றவை புல் தண்டு வழியாக கீழே ஒழுகி விழுகின்றன, அவற்றை பூமி குடித்து விடுகிறது. பனித் திவலைகள் இல்லாவிட்டால் புல்லும், பூக்களும் வரண்டு போகும். பின்னர் சாமந்திப் பூக்கள், நஸ்தூரியம் (nasturium) ரோஜாப்பூக்கள் ஆகியவற்றின் மீது ஒளிர்ந்து கொண்டிருக்கும் பனித் திவலைகளைப் பார்த்தோம். புல் தண்டு, பூ, சூரியன், சுடர்விடும் பொறிகளைக் கொண்ட பனித் திவலைகள் ஆகியவற்றை வரைகிறேன். குழந்தைகளும் வரைகிறார்கள். படங்களுக்

குக் கீழே பெயர் எழுதுகிறோம்: poca (ரொஸா என்றால் பனித்திவலை என்று பொருள்). இந்த எழுத்துக்கள் சூரியனையும் பனித்திவலைகளையும் குழந்தைகளுக்கு நினைவூட்டுகின்றன. எழுத்துக்களை-சித்திரங்களை நாங்கள் படிக்கிறோம். சுற்றியுள்ள உலகத்தைப் பற்றிய தனது மனத் தோற்றத்தைச் சித்திரத்துக்குத் தகுந்தபடி ஒவ்வொரு குழந்தையும் எழுத்துக்களை வரைகிறது. செர்யோஷா நண்பர்களிடம் சொல்கிறான்:

''பனித் துளி புல் தண்டில் தொங்குவது தான் இது (இப்படித்தான் p (ர்) என்ற எழுத்து அவனது கற்பனையில் தோன்றுகிறது). விரைவில் அது பூமியின் மீது விழுந்து விடும். இந்தத் துளி சூரியனுக்காக ஆவலோடு காத்திருக்கிறது (O (ஒ) என்ற எழுத்தைச் சிறுவன் அவ்வாறு பார்க்கிறான்). இந்தத் துளியில் சூரியப் பொறி சுடர் விடுகிறது. C (ஸ்) என்ற எழுத்தின் மீது இன்னொரு முறை பென்சிலால் கோடிட்டான் சிறுவன்.

பனித் துளியுடன் புல் தண்டு ஒன்று வரையுமாறு ஒவ்வொரு குழந்தைக்கும் ஆலோசனை கூறுகிறேன். குழந்தைகள் தமது சித்திரத்துக்குக் கீழே poca (பனித்துளி) என்று எழுதுகிறார்கள். இது சொல்வதற்கு எளிது. குழந்தைகளைப் பொறுத்தவரை சித்திரங்கள், ஒலிகள், வண்ணங்கள், உணர்ச்சிகள் ஆகியவற்றின் முழு உலகமே சித்திரமும் அவற்றின் பெயர்களும்தான். குழந்தையின் உணர்வில் ஒவ்வொரு எழுத்தும் காட்சிச் சித்திரங்களுடன் தொடர்பு கொண்டிருக்கிறது. எனவே முழு வார்த்தையும், ஒவ்வொரு எழுத்தும் எளிதாக நினைவில் பதிந்து விடுகின்றன.

சில நாட்கள் தொடர்ந்து மீண்டும் மீண்டும் பனித் திவலைகளில் ஆர்வம் காட்டுகிறோம், மீண்டும் மீண்டும் வரைந்து பெயர் எழுதுகிறோம். ஒவ்வொரு புதிய படமும் அடுத்தடுத்து வரும் பயிற்சி அல்ல, அது படைப்பு. poca (பனித்திவலை) என்ற வார்த்தையுடன் இரண்டு—மூன்று வார காலம் எங்கள் படைப்பு தொடர்பு கொண்டிருந்தது. தனக்குப் பிடித்த தண்டையோ இலையையோ ஒவ்வொரு

குழந்தையும் பல தடவை வரைகிறது, வார்த்தையின் ஒலியைக் கூர்ந்து கேட்கிறது, தனித்தனி ஒலிகளை அதில் பிரிக்கிறது, அவற்றை எழுத்துக்களால் குறிப்பிடுகிறது. எழுத்துக்களும் சுத்றியுள்ள உலகத்தில் இருக்கிற வஸ்துக் களும் ஒன்று போல இருக்கும் தன்மை சாரத்தில் வெறும் கற்பனையாய், கட்டுக் கதையாய், குழந்தைகளின் படைப் பாய் இருக்கிறது.

சித்திர நோட்டின் அட்டையில் நான் எழுதுகிறேன் ''நமது தாய் மொழி''. ''இந்தச் சித்திர நோட்டை நாம் நீண்ட காலம், நீங்கள் பள்ளி முடித்து வயது வந்தவர் களாகிற வரை பத்திரமாய் வைத்திருப்போம். படங்களு டனும், வார்த்தைகளுடனும் உங்கள் ஒவ்வொருவரிடமும் ஒரு சொந்த நோட்டு இருக்கும். இது நமது பொதுவான சித்திர நோட்டு'' என்று நான் குழந்தைகளிடம் சொல் கிறேன்.

நாட்களும் வாரங்களும் கடந்து சென்றன. உயிருள்ள வார்த்தையின் ஊற்றுக்கண்களுக்கு நாங்கள் புதுப்புது ''பயணங்களை'' மேற்கொண்டோம். **கிராமம், பைன்மரக் காடு, ஓக் மரம், வில்லோ, காடு, பனிக் கட்டி, மலை, தானியக் கதிர், வானம், உலர்ந்த புல், சோலை, லைம் மரம், அசோக மரம், ஆப்பிள் மரம், மேகம், குன்று, ஓக் மரக் காய், இலையுதிர்வு** ஆகிய வார்த்தைகளைத் தெரிந்து கொண்டது குறிப்பாக சுவாரஸ்யமாய் இருந்தது. **பூக்கள், சீனப்பூ, லாந்திஷ் பூக்கள், கருவேள், திராட்சை, குளம், ஆறு, ஏரி, காட்டின் ஓரம், மூடுபனி, மழை, இடிப்புயல், சூரிய உதயம், புறுக்கள், பாப்ளார் மரம், செர்ரி மரம்** ஆகிய வார்த்தைகளுடன் தொடர்பு கொண்டிருந்தன எங்களது வசந்த காலப் ''பயணங்கள்''. பிரகாசமான, மனக் காட்சிகளையும், உணர்ச்சிகளையும், நினை வுகளையும் எந்தக் குழந்தையிடம் வார்த்தை தோற்றுவிக் கிறதோ, அந்தக் குழந்தை ''நமது தாய் மொழி'' என்ற இந்தச் சித்திர நோட்டில் தனது படத்தை வரைந்தது. தாய் மொழிப் பேச்சின் அழகை அசட்டை செய்கிறவர் ஒருவருமில்லை. 1952ஆம் வருடத்து வசந்த காலத்திலே யே, அதாவது நாங்கள் வேலை தொடங்கிய எட்டு வாரங்

களிலேயே குழந்தைகள் எல்லா எழுத்துக்களையும் அறிந்திருந்தனர். வார்த்தைகளை எழுதினர், படித்தனர்.

இந்த இடத்தில், யாந்திரீக ரீதியில் அனுபவத்தைக் கடன் வாங்குவது பற்றி எச்சரிக்கை விடுக்க வேண்டும். இந்த முறையில் படிப்பதற்கும் எழுதுவதற்கும் பயிற்றுவிப்பது படைப்பு வேலை முறையாகும். ஒவ்வொரு படைப்பு வேலைக்கும் முன் மாதிரி கிடையாது. ஆக்கபூர்வமாகத் தான் புதிய ஒன்றை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

எழுத்துக்களைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்றும், படிக்கக் கற்றுக் கொள்ள வேண்டுமென்றும் குழந்தைகளிடம் கோராமலிருப்பது மிக முக்கியமானதாகும். உலக அறிவின் முதல் படிக்கட்டில் விளையாட்டுப் போக்கிலேயே குழந்தைகள் ஏறினார்கள். அழகு, கட்டுக் கதை, இசை, கற்பனை, படைப்பு வேலை, மனக் கற்பனை விளையாட்டு ஆகியவை அவர்களது அறிவு வாழ்க்கைக்கு உற்சாகமூட்டின. அவர்களது உணர்ச்சிகளைப் பதட்டப் படுத்திய விஷயங்களையும், அழகிய மயங்கிய விஷயங்களையும் குழந்தைகள் ஆழமாக நினைவில் வைத்துக் கொண்டார்கள். தமது அனுபவ உணர்ச்சிகளை வார்த்தைகளால் வெளியிடுவது மட்டுமின்றி அவற்றை எழுதியும் காட்டுவதற்குக் குழந்தைகள் கொண்ட ஆர்வம் ததும்பிய விருப்பம் என்னை வியப்புக்குள்ளாக்கியது.

ஒரு நாள் காட்டின் காவல்நிலையத்தில் நாங்கள் மழைக்காக ஒதுங்கினோம். அப்போது இடி முழங்கியது. மின்னல்கள் அம்புகளாய்ப் பாய்ந்தன. ஆலங் கட்டிகள் சிறு சிறு மணிகளாய்ச் சிதறின. இவை பசும் புல்லில் மழை விட்ட பின்னும் சில நேரம் அப்படியே இருந்தன. மேகங்களுக்குப் பின்னாலிருந்து எட்டிப் பார்த்தான் சூரியன். சிறு சிறு ஆலங் கட்டிகள் பசிய நிறத்தில் மாறின. ஆனந்தம் தாங்காது கூவினார்கள் குழந்தைகள்: கொள்ளை அழகாய் இருக்கின்றன! அன்று பார்த்ததை அடுத்த நாள் வரைய விரும்பினார்கள் குழந்தைகள், யூரா, செர்யோஷா, ஷூரா, சால்யா ஆகியோரும் கூட படத்திற்குப் பெயரிட்டார்கள். அவர்கள் நன்கு படித்தார்கள். அவர்களது முதல்

வாக்கியங்களை நான் கண்டேன் அவை இதோ: ''ஆலங் கட்டியை புல்லின் மீது மேகம் தூவியது'', ''வெள்ளை நிற ஆலங் கட்டி பச்சை நிறப் புல்லில்'', ''வெள்ளை ஆலங் கட்டியை சூரியன் உருக்கி விட்டது'', ''வெள்ளை ஆலங் கட்டியை இடி எடுத்துத் தூவுகிறது.''

சிந்தனைக்கும் வார்த்தைக்கும் மூல ஊற்றுக் கண்ணாக இருக்கிற சுற்றியுள்ள உலகத்துக்கு, குழந்தைகள் எவ்வளவு நெருக்கமாக இருக்கிறார்களோ அவ்வளவு அழுத்தந் திருத்தமாக அவர்களது பேச்சு இருக்கும் என்று நான் இந்த உதாரணத்தில் மீண்டும் மனவுறுதி பெற்றேன். எனது குழந்தைகள் யாவும் விரைவில் குட்டிக் கட்டுரைகள் எழுது வார்கள் என்று நம்பினேன். எனது நம்பிக்கை 1952 கோடைகாலத்தில் மெய்யாயிற்று. பள்ளித் தோட்டத்தின் ஒரு மூலையில் கசகசாச் செடி போடப்பட்டிருந்தது. கச கசாத் தண்டில் நூற்றுக் கணக்கான பல வண்ணப் பொறி கள் வெடித்துக் கொண்டிருந்த போது குழந்தைகளை அங்கு நான் கூட்டிச் சென்றேன். குழந்தை இதயங்களில் மகிழ்ச்சி உணர்ச்சிகளை அலையலையாக இந்த அழகு எழுப்பியது. நீண்ட நேரம் அந்தப் பூக்களின் அழகில் மயங்கி நின்றோம், தேனீக்களின் ரீங்காரத்தைக் கேட்டோம், அடுத்த நாள் இந்த இடத்துக்குச் சித்திர நோட்டுக்களையும் கலர்ப் பென் சில்களையும் நாங்கள் கொண்டு வந்தோம். குழந்தைகள் படம் வரைந்தனர். கசகசா விதைக்கு ஏழு வண்ணங்களின் அழகை வானவில் எப்படி வழங்கியது என்பது பற்றி நான் கதை சொன்னேன். தமது வியப்பை வார்த்தைகளால் வெளியிட விரும்பிய குழந்தைகள் பலர் தெளிவான, அழுத் தந்திருத்தமான வாக்கியங்கள் எழுதினர்: ''சிறு கச கசாக் கம்பளம் மலர்கிறது'' (தான்யா), ''கசகசா சின்னக் கம்பளம் பூமியை மூடி விட்டது'' (நீனா), ''மலர்ந்து விட் டது கசகசா, மகிழ்ச்சி கொள்ளுது சூரியன்'' (ஸீனா), ''கச கசா சின்னக் கம்பளத்தில் தேனீக்கள் ரீங்காரம்'' (கால் யா), ''பூமியின் மீது மலர்களைத் தூவியது சூரியன்: நீல மலர்கள், ரோஜா நிற மலர்கள், சிவப்பு மலர்கள், ஊதா மலர்கள்'' (லரீசா), ''நீல நிற இதழ்களில் ரோமமிகுந்த

வண்டு'' (செர்யோஷா), ''மெல்லிய தண்டுகளில் ஊஞ்சலாடுகின்றன மலர்கள்'' (ஷூரா), ''கசகசாப் பூக்களில் சூரியன் விளையாடுகிறது'' (கோல்யா), ''வானத்திலிருந்து நீல நிற இதழ்கள் விழுந்தன, பூமியின் மீது ஒரு சிறு கம்பளம் விரிந்தது'' (காத்யா). இந்த வாக்கியங்களுடன் வரைந்திருந்த படங்களைத் தமது சித்திர நோட்டிலிருந்து எடுத்து ''நமது தாய் மொழி'' எனும் சித்திர நோட்டுக்குக் குள் இணைத்தனர்.

பக்வீட் வயலுக்கும் மலர்ந்து கொண்டிருக்கும் சூரிய காந்திச் செடிகளுக்கும் நாங்கள் ''பயணங்கள்'' போன போது உயிருள்ள ஊற்றாக பிரகாசமான சித்திரமாக குழந்தைகளின் மனக் கற்பனை விளையாடியது. சுற்றியுள்ள உலகத்தின் அழகு, குழந்தையை எந்த அளவுக்குப் பதட்டப் படுத்தியதோ அந்த அளவுக்கு எழுத்துக்கள் குழந்தைகளின் நினைவில் நின்றன. இது முதற் குறிக்கோளாக வைக்கப்படவில்லை என்பது உண்மையே. உலகத்தைச் சித்திரமாகப் பார்ப்பது, அழகு உணர்ச்சியை வார்த்தையில் வெளியிடும் [illegible] ஆர்வம் ஆகியவை குழந்தைச் சிந்தனையின் ஆன்மாவும் இதயமும் ஆகும் என்று மேலும் மேலும் நான் உறுதி கொண்டேன். கலாபூர்வமான, சித்திரத் தன்மை வாய்ந்த, மனவெழுச்சி நிரம்பி நிற்கும் சிந்தனையே குழந்தைச் சிந்தனையாகும், அறிவு ததும்புகிற புரிந்து கொள்ளும் தன்மை வாய்ந்ததாகக் குழந்தை விளங்க வேண்டுமானால் அதன் குழந்தைப் பருவத்தின் ஆரம்ப காலத்திலேயே உலகத்தைக் கலைத் தன்மையுடன் பார்க்கிற மகிழ்ச்சியை அதற்கு வழங்க வேண்டும்.

அழகானவற்றைக் குழந்தை பார்க்கிற போதும் உணர்கிற போதும் கற்பனை, படைப்பு, உயிருள்ள சிந்தனை ஆகியவற்றின் எத்தகைய தீராத ஊற்றுக்கண்கள் குழந்தையின் மனத்தில் வெளிப்படுகின்றன! உயிருள்ள வார்த்தையின் ஊற்றுக் கண்களுக்கு நாங்கள் மேற்கொண்ட ''பயணங்களில்'' ஒன்றை நான் ஒரு போதும் மறக்க மாட்டேன். கூட்டுப் பண்ணையின் தேனீ வளர்ப்புப் பிரிவுக்கு நாங்கள் போனோம். தேனீ வளர்க்கிற தாத்தா புத்தம் புதிய தேனும்

குளிர்ந்த ஊற்றுத் தண்ணீரும் தந்து உபசரித்தார். ஆப் பிள் மரத்துக்கடியில் குழந்தைகள் அமர்ந்தனர், பக்வீட் வயல் மலர்ந்திருப்பது கண்டு ஆனந்தம் கொண்டனர் குழந்தைகள். ஸ்டெப்பி வெளிக்குப் பறந்து சென்ற தேனீக்கள் கூட்டிற்குத் திரும்பி வருகையில் குளிர்ந்த ஊற்று நீரின் சிற்றோடைக்கு மேலே சுற்றிச் சுற்றிப் பறந்து மெல்லிய ரீங்காரம் எழுப்பின. ''பூக்களையும் சோலைகளை யும் பற்றி, பக்வீட்டையும் சூரிய காந்தியையும் பற்றி, பிரகாசமான கசகசாக் காய்களையும் நீல நிற க்ளோவர் பூக்களையும் பற்றி அவைகள் ஒன்றுக் கொன்று சொல்லிக் கொள்கின்றன'' என்றார்கள் குழந்தைகள்.

ஐந்து ஆண்டுகளுக்குப் பின்பு எனது சிறுவர்கள் நாலாம் வகுப்பு மாணவர்களாகி விடுவர், அப்போது ''தேனீக்கள் எதைப் பற்றி ரீங்காரம் செய்கின்றன'' என்ற தலைப்பில் அவர்களைக் கட்டுரை எழுதச் சொல்லுவேன். மறக்க முடி யாத இந்த ஜூன் மாதத்து மனப்பதிவுகள் எல்லாம் பிர காசமான சித்திரங்களாக உயிருள்ள சிந்தனை வெள்ளமாக அப்போது வெளிக் கொட்டும். ஆமாம், ஆரம்ப காலக் குழந்தைப் பருவத்தில் ஆர்வம் செலுத்தப்பட்ட எதுவும் என்றென்றும் மறந்து போகாது. குழந்தைப் பருவத்தில் தாய்மொழியின் அழகும் சுற்றியுள்ள உலகத்து அழகும் சிறுவர்களின் உணர்வில் காலகாலத்துக்கும் பதிந்து விடட் டும். செங்குத்தான, கஷ்டமான அறிவு ஏணியில் எடுத்து வைக்கிற முதல் எட்டு அழகால் உற்சாகம் பெறட்டும்!

குழந்தைகள் எழுத்தறிவு பெறுகின்ற அளவுக்கு அவர் களது ஆன்மிக வாழ்வில் புத்தகம் நுழைந்தது. புத்தகங் களும் படங்களும் கொண்ட ஒரு சிறிய நூலகத்தை நாங் கள் ஏற்படுத்தினோம் துரதிருஷ்டவசமாக புத்தகக் கடை களில் நல்ல புத்தகம் ஏதும் கிட்டவில்லை. நானே சித்திரம் வரையவும் புத்தகம் எழுதவும் வேண்டியதாயிற்று. பனித் தாத்தா, கொடிய மாற்றாந்தாய், மாற்றாந்தாயின் நல்ல மகள், சோம்பேறியான சொந்த மகள் ஆகியவை பற்றிய உக்ரேனிய நாட்டுப்புறக் கதை கொண்ட படப் புத்தகம்

தான் நான் முதலில் எழுதியது. புத்தகம் சிறியதாயில்லை, 30 பக்கத்துக்கு மேல் இருந்தது. ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு படமும் சில வாக்கியங்களும் இருந்தன (சில சமயங் களில் ஒரேயொரு வாக்கியம்). 1952 வசந்த காலத்தில் பெரும்பாலான குழந்தைகளுக்கு வேகமாகப் படிக்க முடிந் தது. வார்யா, கோல்யா, கால்யா, லரீசா, செர்யோஷா, லீதா ஆகியோர் குறிப்பாக நன்கு படித்தனர். இதோ நாங் கள் புல்தரையில் உட்கார்ந்திருக்கிருேம். ஒரு குழந்தை படப் புத்தகத்தைத் திறந்து படிக்கிறது... இது வெறும் வார்த்தைகளைப் படிப்பது மட்டுமல்ல, இவற்றைக் கொண்டு வாக்கியங்கள் அமைப்பதுமாகும். இது ஒரு படைப்பு வேலை. கதையைப் படிக்கையில், படத்தில் சித் திரிக்கப் பட்டுள்ள உலகத்திற்குச் சென்று விடுகிறது குழந் தை. நல்லவரான பனித் தாத்தா, கொடிய மாற்ருந்தாய், உழைப்பை விரும்பும் அன்பு நிறைந்த மாற்ருந்தாய் மகள், இரக்கமற்ற சோம்பேறியான சொந்த மகள் ஆகியோரின் உணர்ச்சிகளிலும் பாவங்களிலும் தொனிக்கிற நுண்ணிய வேறுபாடுகளை குழந்தை படிக்கிற முறை வெளியிடுகிறது. குழந்தைகள் எதைப் பற்றிப் படிக்கிருர்களோ அதில் ஆழ மான உணர்ச்சி கொள்கிருர்கள்: தீயதை வெறுக்கிருர் கள், நல்லதின் வெற்றியில் மகிழ்ச்சி கொள்கிருர்கள்.

கதையை பதிற்றுக் கணக்கான முறை படித்தார்கள் குழந்தைகள். ஆயினும் படிப்பதை ஒவ்வொரு முறையும் சுவாரஸ்யமாகக் கேட்டார்கள் என்பதுதான் சுவையான விஷயம். ஒரே குரலில், உணர்ச்சியில்லாமல் ஏன் குழந் தைகள் படிக்கிருர்கள்? குழந்தைகள் படிக்கும் போது உணர்ச்சி வேறுபாடுகளை எப்பொழுதாவதுதானே கேட்க முடிகிறது, இது ஏன்? என்று போதகர்கள் கவலைப் படுவது என் நினைவுக்கு வந்தது. குழந்தைகளின் ஆன்மிக வாழ்வு, சிந்தனைகள், உணர்ச்சிகள், மனக் கற்பனைகள் ஆகியவற் றுடன் படிப்பது சம்பந்தமில்லாமல் இருப்பதுதான் இதற் குப் பல நேரங்களிலும் காரணம். குழந்தைக்குக் கிளர்ச்சி யூட்டுவது ஒன்று, அது படிப்பதோ வேருென்றைப் பற்றி, குழந்தைகளின் இதயத்து அந்தரங்க முனைகளை வார்த்தை

சுண்டி இழுக்கும் போதுதான், படிப்பது அவர்களின் வாழ்க்கையை வளமைப் படுத்தும்.

நாங்கள் படப் புத்தகங்கள் உருவாக்கத் தொடங்கினோம். யூரா, செர்யோஷா, காத்யா, லீதா, லூதா, லரீசா ஆகியோர் படங்கள் வரைந்தனர். படம் வரைவதற்கு விரும்பாத குழந்தை ஒன்று கூட இருக்கவில்லை. படம் வரைவதில் இருந்த நாட்டமே எழுதப் படிக்கக் கற்றுக் கொள்வதில் இருந்த கஷ்டங்களைச் சமாளிப்பதற்குப் பிரதான காரணமாய் இருந்தது.

1952ஆம் வருடத்துக் கோடை காலத்தில் அச்சிடப் பட்ட சிறு சிறு குழந்தைப் புத்தகங்களைச் சிறுவர்கள் படிக்கத் தொடங்கினர். லேவ் தல்ஸ்தோய் செம்மைப் படுத்திய நாட்டுப்புறக் கட்டுக்கதைகள், க. உஷீன்ஸ்கியின் ''தாய் மொழி'' எனும் புத்தகத்திலிருக்கும் கதைகள், ருஷ்யக் கவிஞர்களான அ. புஷ்கின், மி. லெர்மந்தவ், நி. நிக்ராசவ் ஆகியோரின் கவிதைகள், உக்ரேனியக் கவிஞர்களான த. ஷெவ்ச்சென்கோ, லேசியா உக்ரயின்கா, இ. ஃபிரன்கோ ஆகியவர்களின் கவிதைகள் முதலியவற்றை அவர்கள் படித்தார்கள். க. உஷீன்ஸ்கியின் ''தாய் மொழியில்'' இருந்து ''குழந்தைகளே பள்ளிக்குக் கிளம்புங்கள்'' என்னும் கவிதையைப் படித்த பின் அது சிறுவர்களின் நினைவில் அப்படியே பதிந்து விட்டது. இதில் நான் மகிழ்ச்சி கொண்ட போதே இன்று இருக்கிற அரிச்சுவடி முதல், படிப்பதற்கான புத்தகங்கள் பலப்பலவும் பாங்கற்ற கவிதைகளால் நிரம்பி இருப்பதைக் கவலையுடன் நினைத்துப் பார்த்தேன். அலுவலக முறையில் எழுதப் பட்டுள்ள வரட்சியான கவிதைகள் வார்த்தையின் மீது ஒரு நேசத்தை வளர்ப்பதற்குப் பதிலாக கவிதை உணர்ச்சியையே கொன்று விடுகின்றன.

எனது ஒவ்வொரு வெற்றியையும், ஒவ்வொரு கஷ்டத்தையும் ஆசிரியர்களுடன் நான் பகிர்ந்து கொண்டேன். பள்ளி வயதுக்குட்பட்ட குழந்தைகளை முதல் வகுப்பில் கல்வி பயிலத் தயார் படுத்துவது எங்கள் பள்ளியின் ஆரம்ப வகுப்பு ஆசிரியர்கள் அனைவரின் கூட்டுப்பணியாயிற்று.

ஆசிரியர்களின் ஆக்க வேலை அனுபவத்தில் போதனை முறை ஒவ்வொரு ஆண்டும் முழுமையுறுகிறது, ஆழமடைகிறது. வெற்றிகரமாகக் கல்வி கற்பதற்கு அவசியமான ஆரம்ப நிலை நடைமுறைத் திறமைகளைக் குழந்தைகள் பெறுவதையும் அவர்களது அறிவு வளர்ச்சியையும் ஒற்றுமைப் படுத்துகிற, வகுப்புக்கு வெளியிலும், பள்ளிக்கு வெளியிலும் நடக்கிற போதனைப் பணி இந்த அனுபவத்தால் முழுமையுற்றது, ஆழமடைந்தது என்று சொல்வது இன்னும் பொருத்தமானதாகும். இத்திறமைகளில் முதலிடம் வகிப்பது படித்தலே.

முதல் வகுப்பில் பாடம் தொடங்கும் போதே குழந்தைகளுக்கு படிக்கத் தெரிந்திருக்க முடியும் என்பதற்காக, பள்ளிக்கு முந்திய வயதுள்ள குழந்தைகளைப் பயிற்றுவிக்கையில் சில ஆண்டுகளாக ஆசிரியர்கள் முயன்று வருகிறார்கள். இது ஆரம்ப வகுப்புகளில் மட்டுமின்றி, நடுத்தர, உயர் தர வகுப்புகளிலும் நடக்கிற பயிற்சியின் முழு நிகழ்ச்சிப் போக்கையும் போதிய கணிசமான அளவுக்கு எளிமையாக்கி விடுகிறது. வேகமாகவும், உணர்ச்சியோடும், உணர்வு பூர்வமாகவும் படிப்பது, குழந்தையின் அறிவாற்றல் வளர்ச்சியிலும், கல்வி பயிலும் நிகழ்ச்சிப் போக்கிலும், படைப்பு மிக்க மூளை உழைப்பிலும் எத்தகைய பாத்திரம் வகிக்கிறது என்பது பற்றிய மிக முக்கியமான முடிவு மேற்கொள்ள பல்லாண்டுக் கூட்டு அனுபவம் வகை செய்கிறது. இந்த முடிவு பின்கண்டவாறு: எவ்வளவு விரைவில் குழந்தை படிக்கத் தொடங்குகிறதோ அவ்வளவுக்கு அவனது ஆன்மிக வாழ்வு முழுதுடனும் படித்தல் இறுக்கமான தொடர்பு கொண்டு விடுகிறது. படிக்கிற போது நடக்கிற சிந்தனை செய்யும் நிகழ்ச்சிப் போக்கு சிக்கல் மிகுந்ததாகிறது, மன வளர்ச்சிக்கு அதிகமான விஷயங்களை நல்குகிறது. ஏழு வயதுக்கு முன் படிக்கக் கற்றுக் கொள்கிற குழந்தையிடம் மிகவும் மதிப்பு வாய்ந்த திறமை உருவாகிறது: வார்த்தைகளையும் வாக்கியப் பகுதிகளையும் உரக்க உச்சரிப்பதை விட பார்வைப் புலனறிவும், சிந்தனைப் புலனறிவும் வேகமாகச் செயல்படுகின்றன. படிக்கும் போது

குழந்தை வார்த்தையுடன் கட்டுண்டு விடுவதில்லை. இப்போது ஒரு கணம் புத்தகத்திலிருந்து தனது பார்வையை விலக்கி அடுத்து உரக்கச் சொல்லப்படப் போவது என்ன என்று இந்த நேரத்தில் சிந்திக்கவும் கிரகித்துக் கொள்ளவும் குழந்தைக்கு வாய்ப்பு இருக்கிறது. இவ்வாறாக, ஒரே நேரத்தில் குழந்தை படிக்கிறது, சிந்திக்கிறது, கிரகிக்கிறது, புரிந்து கொள்கிறது.

உணர்வு பூர்வமாகப் படிப்பதற்கு இவ்வாறு வேகமாகப் படிப்பதுதான் முக்கியமான தேவைகளில் ஒன்று என்று எங்களது கூட்டு அனுபவம் உறுதிப்படுத்துகிறது.

## மகனே, நீ மனிதர்களுக்கு மத்தியில் வாழ்கிறாய்

பள்ளித் தோட்டத்தின் அரவமற்ற ஒரு மூலையில் பயனீர்க் குழந்தைகள் கிரிசான்திமம் மலர்ச் செடிகள் நட்டனர். இலையுதிர் காலத்துக்கு முன் இங்கு வெள்ளை நிற, நீல நிற, இளஞ்சிவப்பு நிறப் பூக்கள் பூத்தன. தெளிவாக, வெதுவெதுப்பான காலநிலை இருந்த ஒரு நாளில் நான்குழந்தைகளை இங்கு அழைத்துச் சென்றேன். பூக்கள் ஏராளமாய் இருப்பது கண்டு ஆனந்தம் கொண்டனர் குழந்தைகள். குழந்தைகள் அழகில் பரவசமுறுவது, அடிக்கடி சுயநலத்தின் பால்பட்டதே என்று கசப்பான அனுபவம் எனக்கு எடுத்துக் காட்டியுள்ளது. கண்டனத்துக்கு உரியது ஏதுமில்லை என்று எண்ணி குழந்தை பூவைப் பறித்து விடலாம். இப்போதும் அப்படித்தான் நடந்தது. குழந்தைகளின் கைகளில் ஒன்று, இரண்டு, மூன்று என்று பூக்களை நான் பார்க்கிறேன். மலர்களில் பாதியளவே செடிகளில் மிஞ்சி இருந்த போது காத்யா கூச்சலிட்டாள்:

''கிரிசான்திமம் மலர்களைப் பறிக்கத்தான் வேண்டுமா?''

அவளது வார்த்தைகளில் வியப்போ, ஆத்திரமோ தொனிக்கவில்லை. சிறுமி சும்மா கேட்டு வைத்தாள். நான் பதிலொன்றும் கூறவில்லை. இந்த நாள் குழந்தைகளுக்கு ஒரு

படிப்பினையாக இருக்கட்டும். இன்னும் சில பூக்களைக் கொய்தனர் சிறுவர்கள். அந்த இடத்தின் அழகு மறைந்து போயிற்று, புல்தரை அனுதையாகிவிட்டது. குழந்தை கள் உள்ளத்தில் அழகு மூட்டிய பரவசம் அணைந்து போ யிற்று. மலர்களை என்ன செய்வது என்று அவர்களுக்குத் தெரியவில்லை.

''குழந்தைகளே, இந்த இடம் அழகாய் இருக்கிறதா? நீங்கள் பூக்களைப் பறித்த பின் செடித் தண்டுகள் அழகாய் இருக்கின்றனவா?'' என்று நான் கேட்டேன்.

குழந்தைகள் மௌனமாய் இருந்தனர். பின்பு ஒரே நேரத்தில் பல குழந்தைகள் பேச முனைந்தனர்.

''இல்லை, அழகாய் இல்லை...''

''எந்தப் பூக்களைக் கண்டு இப்போது ஆனந்தம் கொள் வதாம்?''

''இந்தப் பூச்செடிகளை பயனீர் குழந்தைகள் நட்ட னார். அழகைக் கண்டு ஆனந்தம் கொள்வதற்காக அவர் கள் இங்கு வருவார்கள். இங்கு அவர்கள் என்ன காண் பார்கள்? நீங்கள் மனிதர்களுக்கு மத்தியில் வாழ்கிறீர்கள் என்பதை மறந்து விடாதீர்கள். அழகைக் கண்டு ஆனந் தப்பட ஒவ்வொருவரும் விரும்புவர். நமது பள்ளியில் நிறையப் பூக்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மாணவனும் ஆளுக்கொரு பூவாகப் பறித்துக் கொண்டால் என்ன வாகும்? ஒன்றும் மிஞ்சாது. ஆனந்தம் கொள்ள மனிதர் களுக்கு ஒன்றும் இருக்காது. அழகினை உருவாக்க வேண்டும், அதனை உடைத்தெறியவோ அழித்து விடவோ கூடாது. இலையுதிர் காலம் வரும், குளிர் நாட்கள் வரும். அப்போது இந்தக் கொத்து மலர்ச் செடிகளை மூடு தோட்டத்திற்குள் நடுவோம். அழகால் ஆனந்தம் கொள்வோம். ஒரு பூவைப் பறிக்க வேண்டுமானால் பத்துப் பூக்களை மலரச் செய்ய வேண்டும்'' என்று நான் குழந்தைகளுக்குச் சொன்னேன்.

சில தினங்கள் கழித்து வேறொரு புல்வெளிக்கு நாங் கள் சென்றோம். இங்கு கொத்து மலர்கள் இன்னும் அதிக மாக வளர்ந்திருந்தன. இப்போது குழந்தைகள் மலர்களைப் பறிக்கவில்லை, அழகில் அவர்கள் ஆனந்தம் கொண்டனர்.

அழகைப் படைக்குமாறும், மனிதர்களுக்கு மகிழ்ச்சியை உருவாக்குமாறும் விடுக்கிற அழைப்புக்கு நுண்ணுணர்வுடன் பதில் தருகிறது குழந்தை உள்ளம். இந்த அழைப்புக்குப் பின்னாலேயே உழைப்பும் வர வேண்டும் என்பதுதான் முக்கியமானதாகும். தனக்குப் பக்கத்தில் மனிதர்கள் இருக்கிறார்கள் என்றும், தனது செயல்களால் அந்த மனிதர்களுக்கு மகிழ்ச்சியைத் தருகிறோம் என்றும் அந்தக் குழந்தை உணர்ந்தால் தனது சுய விருப்பத்தை மனிதர்களின் நலன்களுக்குப் பொருத்தமுடையதாகச் செய்யும். அன்பையும் மனிதத் தன்மையையும் பயிற்றுவிப்பதற்கு இது மிக முக்கியமானதாகும். தனது விருப்பங்களின் எல்லைக் கோடுகளை எவர் அறிந்து கொள்ளவில்லையோ அவர் நல்ல குடிமகனாக ஒருபோதும் ஆக மாட்டார். குழந்தைப் பருவத்தில் தனது விருப்பத்தை மட்டும் தெரிந்து கொண்டு குழுவின் நலன்களில் அக்கறை காட்டாதவர்கள்தான் சுயநலமிகளாகவும், தன்னல வேட்டையராயும் மற்றவர்களின் வேதனையையும் துன்பங்களையும் அலட்சியப் படுத்துகிறவர்களாயும் வளர்கிறார்கள். தனது விருப்பங்களை முறைப்படுத்துவதில்தான்—மிக எளிமையானதாய்த் தோன்றுகிற, ஆனால் உண்மையில் மனிதப் பழக்க வழக்கத்திலே மிகவும் சிக்கலானதான இதில் தான்—மனிதத் தன்மை, மென்மை, கனிவு, மனச்சாட்சிக்கு உண்மையான மனிதனாய் விளங்குவதற்கு மிக அவசியமான உள்மனத்தின் சுயகட்டுப்பாடு ஆகியவற்றின் ஊற்றுக்கண் இருக்கிறது.

மனிதத் தன்மையைப் பயிற்றுவிப்பதில் சிறு வயது வகிக்கிற முக்கியத்துவத்தை இங்கு கோடிட்டுக் காட்ட வேண்டும். ஒழுக்கக் கருத்துக்கள், கண்ணோட்டங்கள், பழக்க வழக்கங்கள் ஆகிய அனைத்தும் உணர்ச்சிகளுடன் சம்பந்தப்பட்டவை. ஆகும். உருவகமாகச் சொல்வதென்றால், உயர்வான ஒழுக்க நடவடிக்கைகளுக்கு உயிர் தரும் மன உணர்ச்சிகள் ஆகும். சுற்றியுள்ள உலகைப் புரிந்து கொள்வதில் மென்மையும், நுண்ணுணர்வுத் தன்மையும் எங்கே இல்லையோ, அங்கே ஆன்மாவற்ற, இதய

மற்ற மனிதர்கள் வளர்கிருர்கள். உள்ளத்தின் நுண்ணு ணர்வும், கருத்துப் பதிவும் குழந்தைப் பருவத்திலேயே உருவாகின்றன. குழந்தைப் பருவத்தை விட்டு விட் டால்—இதனை என்றென்றும் ஈடு செய்ய முடியாது.

மனித உறவுகள் எனும் சிக்கலான உலகத்திற்குள் குழந்தையை இட்டுச் செல்வது குழந்தை வளர்ப்பிலேயே மிகச் சிக்கலான ஒரு பணியாகும். மகிழ்ச்சி கொள்ளா மல் குழந்தைகளால் வாழ முடியாது. குழந்தைப் பரு வம் மகிழ்ச்சி நிரம்பியதாய் இருப்பதற்குத் தேவையான அனைத்தையும் நமது சமூகம் செய்து கொடுக்கிறது. ஆனுல் இந்த மகிழ்ச்சிகள் முன்யோசனையற்றவையாக இருக்கக் கூடாது. மிகக் கவனமாகப் பெரியோர்களால் பேணி வளர்க் கப்பட்ட மரத்திலிருந்து பழங்களைப் பறிக்கிற சிறுவன், மற்றவர்களுக்கு மரத்தில் என்ன மிஞ்சியிருக்கும் என்பது பற்றி எண்ணிப் பார்க்கவில்லை என்ருல், மிக முக்கிய மனிதத் தன்மையான மனச்சாட்சியை அவன் இழந்தவனு கிருன். நான் சோஷலிசச் சமுதாயத்தின் எதிர்காலக் குடி மகன் என்று குழந்தை உணருவதற்கு முன் அன்புக்கு மாற் ருக அன்பு செய்ய வேண்டும் என்றும், மற்றவர்களுக்காக மகிழ்ச்சியையும் சந்தோஷத்தையும் தனது கைகளால் படைக்க வேண்டும் என்றும் அவன் கற்றுக் கொள்வது அவசியமாகும்.

தமது குழந்தைகளின் மீது அன்பு செலுத்துகிற உள் ளுணர்வால் குருடாகிப் போன பெற்ருேர்கள் பலர் தமது குழந்தையிடம் உள்ள மோசமான அம்சங்களைக் கவனிக் காமல் நல்லவற்றை மட்டுமே பார்க்கிருர்கள் என்பது ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடம்'' தொடங்குவதற்குப் பல வருடங்களுக்கு முன்பிருந்தே என்னைக் கவலைக்குள் ளாக்கி வந்தது. ஒரு சம்பவம் நினைவுக்கு வருகிறது: நாலு வயதுச் சிறுவன் கக்கூசுக்குப் போவதற்கு பதிலாக அம் மாவுக்கும் அண்டை வீட்டுக்காரிக்கும் முன்னுலேயே அசிங் கம் பண்ணினுன். இது கண்டு மானக்கேடுருத தாய் மன முருகிச் சொல்கிருள்: ''பாரேன், என் பையன் எப்படிப் பட் டவனென்று—எதற்கும் அவன் பயப்படுவதில்லை.'' நான்கு

வயதுக் குழந்தையின் முரண்டுப் பார்வையில், பிதுங்கிய உதடுகளில், அகந்தைப் புன்னகையில் ஏற்கெனவே ஒரு ஆபாசமான பிராணி காணப்படுகிறது. இவனைக் கண்டித்துத் திருத்தவில்லை என்றால், தன்னைத் தானே மற்றவர்களின் கண்களால் பார்க்கும்படி இவனைக் கட்டாயப் படுத்தவில்லை என்றால் இவன் ஒரு அயோக்கியனாய் வளர்ந்து விடக் கூடும்.

வலோத்யாவின் தாயாருடன் நான் பலமுறை பேச நேர்ந்தது. அவள் ஏதாவது பேசத் தொடங்க வேண்டியது தான் பையன் அவள் கவுனைப் பிடித்து இழுத்தான், கையைப் பற்றித் தொங்கினான்—எப்போதும் அவனிடம் ஒரு அவசர காரியம் இருந்தது. தொந்திரவு செய்வது, கட்டுப் பாடின்மை ஆகியவை தனித் தன்மையின் குழந்தை வகைகளாகும். எல்லாவற்றையும் மன்னித்து விடுவது, மழலைக் கொஞ்சல் என்று தண்டிக்காமலிருப்பது முதலியவையே இந்தத் தனித் தன்மையின் ஊற்றுக்கண்ணாகும். பெற்றோர்களில் சிலர் (துரதிருஷ்டவசமாக சில தனிப்பட்ட போதகர்களும் கூட) குழந்தைகளுடன் பேசும் போது ஏதோ ஒருவிதக் குழந்தைத் தொனியில் எப்போதும் பேச வேண்டும் என்றும், இந்தத் தொனியில் நுண்ணுணர்வு கொண்ட குழந்தை மழலையைக் காணும் என்றும் கருதுகிறார்கள். வளர்ந்த மனிதனின் குழந்தைப் பிதற்றலுக்கு, திறமையற்ற குழந்தையுள்ளம் முரண்டு பிடிப்பதன் மூலம் பதில் தருகிறது. இந்தத் தொனியில் பேசுகையில் நான் தடுமாறுவேன் என்று எப்போதும் கவனமாக இருந்தேன். என் முன்னே நிற்பது குழந்தைகள் என்பதை ஒரு கணமும் மறக்காது சிறிய குழந்தையில் எதிர்காலக் குடிமகனைக் கண்டேன் நான். குழந்தை மற்றவர்களுக்காக உழைக்கும் போது அது எவ்வாறு அணுகப்பட வேண்டும் என்பது மிக மிக முக்கியமாகும் என்று எனக்குத் தோன்றியது. பெரிய கைம்மாறு ஒன்றைப் பெரியவர்களுக்குச் செய்வதாகவும் எனவே பெரும் புகழ்ச்சிக்கும் பரிசுக்கும் கூட தாம் தகுதி வாய்ந்தவர்கள் என்றும் வேலை செய்யும் போதே நினைக்

கின்றன குழந்தைகள் என்பது மிக மோசமான விஷய மாகும்.

... இலையுதிர் காலத்தில் கிரிசாந்திமம் மலர்ச் செடி களை தோண்டியெடுத்து மூடுதோட்டத்திற்குக் கொண்டு சென்றோம். கிராமத்துக் குழந்தைகளின் சக்திக்குட்பட் டதே இந்த வேலை. இடம் மாற்றி நடப்பட்ட செடிகளுக்குக் குழந்தைகள் தினமும் தண்ணீர் ஊற்றினார்கள். முதல் பூக்கள் எப்போது மலரும் என்று ஆவலுடன் காத்திருந் தனர். மூடுதோட்டம் ஒரு அற்புத இடமாக மாறியது. ''இனி இங்கு விருந்தினரை அழைக்கலாமா? யாரை அழைக் கலாம்?'' என்று நான் கேட்டேன். பல குழந்தைகளுக்குத் தம்பி தங்கைகள் இருந்தனர். அவர்களைச் சிறுவர்கள் மூடுதோட்டத்திற்குக் கூட்டி வந்தனர். சிறுசுகளின் கைகள் மலர்களை நோக்கி நீண்டன. ஆனல் எனது மாண வர்கள் பூக்களைப் பறிக்க அவர்களை அனுமதிக்கவில்லை.

''நாம் நிறைய பூச் செடிகளை வளர்க்க முடிந்தால், மார்ச் 8-ஆம் நாள் சர்வதேச மாதர் தினத்தன்று உங்கள் அம்மாமார் ஒவ்வொருவருக்கும் ஆளுக்கொரு பூக்கொத்து கொடுக்கலாம்'' என்று நான் குழந்தைகளிடம் சொன் னேன். இந்த நோக்கம் குழந்தைகளுக்கு உற்சாகமூட்டி யது. மார்ச் தொடக்கத்தில் போதுமான பூச் செடிகள் எங்களிடம் இருந்தன. பண்டிகை அன்று தாய்மார்களை அழைத்தோம், மூடுதோட்டத்தை அவர்களுக்குக் காட்டி னேம், ஆளுக்கொரு அழகான மலர் பரிசளித்தோம். கால் யாவின் மாற்றுந்தாயும் பள்ளிக்கு வந்தார். சிறுமி அவ ருக்கு மலர்க் கொத்து அளித்தாள். மாற்றுந்தாயுடன் கால்யா கொண்டுள்ள உறவு பற்றி நான் அவளிடம் பல முறை பேசி இருக்கிறேன். அவர் அன்பு வாய்ந்த பெண் மணி என்று எடுத்துக்காட்டி இருக்கிறேன். எனது வார்த் தைகள் குழந்தையின் இதயத்தை எட்டின. கோல்யா, தோல்யாவின் தாய்மாரும் சாஷாவின் பாட்டியும் கோஸ்த் யாவின் மாற்றுந்தாயும் பண்டிகையன்று வந்தார்கள் என் பதில் நான் மகிழ்ச்சியடைந்தேன்.

சிறு குழந்தையிடம் பல விஷயங்களைப் பற்றிப் பேசு

வது இன்னும் சாத்தியமில்லை. அன்பு பற்றிய அழகான வார்த்தைகள் குழந்தையின் உணர்வு வரை எப்போதும் செல்வதில்லை. ஆனால் மனிதத் தன்மையின் அழகை இதயத்தால் உணருவதற்குச் சிறுவர்களால் கூட முடியும். மற்றவரின் மகிழ்ச்சி, வேதனை, துயரம், துன்பம் ஆகியவற்றை ஒவ்வொரு குழந்தையும் உணர வேண்டும் என்பதற்காக, ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' முதல் நாளிலிருந்தே நான் முயன்று வந்தேன். கூட்டுப் பண்ணையின் தேனீ வளர்ப்பவரான அந்திரேய் தாத்தாவின் வீட்டுக்கு நாங்கள் அடிக்கடி போய் வந்தோம். தாத்தாவிற்குக் குடும்பம் இல்லை. தனிமையே அவரது பெருந் துன்பம். எங்களது ஒவ்வொரு விஜயத்திலும் அந்திரேய் தாத்தா மகிழ்ச்சி அடைகிறார் என்று குழந்தைகள் உணர்ந்தனர். தேனீ வளர்ப்புப் பிரிவுக்கு நாங்கள் போகும் போது ஆப்பிளும், திராட்சைப் பழங்களும், பிளம் பழங்களும் தாத்தாவிற்குக் கொண்டு போவோம், காட்டுப் பூக்களைச் சேகரித்துக் கொண்டு போய்த் தருவோம், அவர் மகிழ்ச்சி அடைவார் என்று குழந்தைகளிடம் ஆலோசனை சொன்னேன். மனிதனின் மனநிலையையும், உணர்ச்சிகளையும், வாழ்க்கை அனுபவத்தையும் சிறுவர்களின் உள்ளம் நுண்ணுணர்வுடன் அறிந்து கொள்ளத் தொடங்கியது. தாத்தாவிற்கு எத்தகைய மகிழ்ச்சியைத் தரலாம் என்று குழந்தைகளே யோசிக்கத் தொடங்கினர். ஒரு நாள் நாங்கள் காட்டில் கஞ்சி காய்ச்சினோம். மூட்டிய அடுப்பு எரியத் தொடங்குகின்ற வினாடி எத்தகைய மகிழ்ச்சி மிக்க உணர்ச்சிகளைக் குழந்தைகளுக்குத் தருகிறது... இந்த மகிழ்ச்சி மிக்க வேளையில்தான் வார்யா ஒரு யோசனையுடன் சொன்னாள்:

''அந்திரேய் தாத்தாவோ இப்போது தனியாக இருப்பார்.''

குழந்தைகள் யோசனையில் ஆழ்ந்தார்கள். பெரியவர்கள் சிலருக்கு இந்தக் காட்சி ஏதோ உணர்ச்சி மிக்கதாகத் தெரியலாம். ஏழு வயதுக் குழந்தையிடம் இது போல ஆன்மிக உணர்வு பெருக்கெடுக்குமா? என்று சிலர் சிந்திக்

கலாம். ஆமாம், அன்புள்ள ஆசிரியத் தோழர்களே! இந்த வயதில் குழந்தைகளின் நுண்ணுணர்வை நீங்கள் கூர்மைப் படுத்தினீர்களானால், ''நீ மனிதர்கள் மத்தியில் வாழ் கிறாய்'' என்கிற மகத்தான உண்மையைக் குழந்தையின் இதயத்துக்கு நீங்கள் எடுத்துச் சென்றால், தனது மகிழ்ச்சி களைக் குழந்தை மற்ற மனிதர்களுடன் பகிர்ந்து கொள்ள விரும்பும், அவன் மகிழ்ச்சியில் திளைக்கையில் அவனது நண்பன் தனிமையில் இருக்கிறான் என்கிற நினைவு அவனுக்குப் பெரிய வேதனையைத் தரும்.

தாத்தா அந்திரேயுடன் தமது மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று குழந்தைகள் முடிவு கட்டினர். ''கட்டிக் கொழுப்பும் கஞ்சியும் அவருக்குக் கொண்டு போவோம்...'' என்றான் கோஸ்த்யா. இந்த ஆலோசனையை அனைவரும் மகிழ்ச்சியுடன் வரவேற்றார் கள். மிகுந்த பசி கொண்ட மனிதன் ஒருவனால் கூடச் சாப் பிட்டு முடிக்க முடியாத அளவுக்குத் தாத்தாவுக்குக் கஞ்சி கொண்டு வந்தார்கள் குழந்தைகள். தேனீ வளர்ப்புப் பிரிவில் தாத்தாவுடன் சேர்ந்து இன்னொரு முறை உண வருந்தினோம்.

மகிழ்ச்சியையும் வேதனையையும் நுண்ணுணர்வுடன் அணுகுவது குழந்தைப் பருவத்தில்தான் கற்றுக் கொள் ளப் படுகிறது. மனிதத் துன்பங்களை, துயரத்தை, வேதனை யை, தனிமையை இந்த வயதில் இதயம் நுண்ணுணர் வுடன் அணுகுகிறது. மற்றொருவரின் இடத்தில் தன்னை வைத்துப் பார்க்கிற குழந்தை வேறொரு உருவெடுக்கிறது போலும். ஒரு நாள் காட்டிலிருந்து திரும்புகையில் தன்னந் தனியாய், வெட்ட வெளியில் நின்ற ஒரு வீட்டைக் கடந்து வந்தது எனக்கு நினைவு வருகிறது. மாபெரும் தேச பக்தப் போரில் உறுப்பிழந்து போனவர் இங்கு வசிக்கிறார் என்றும், அவர் நோய்வாய்ப் பட்டிருக்கிறார் என்றும், அவரால் ஆப்பிள் மரங்களோ, திராட்சைக் கொடிகளையோ நட முடியாது என்றும் நான் குழந்தைகளுக்கு எடுத்துச் சொன்னேன். குழந்தைகளின் கண்களில் கண்ணீர்த் துளி கள் அரும்பினது. ஒவ்வொரு குழந்தையும் நோயாளியின்

தனிமையை உணர்ந்தது. இரண்டு ஆப்பிள் மரங்களையும் இரண்டு திராட்சைப் பாத்திகளையும் நாங்கள் அங்கு நட்டோம். அந்த மனிதருக்கு எங்கள் பரிசு இது. மற்றவருக்கு மகிழ்ச்சி தந்த மதிப்பிற்கரிய சந்தோஷம் எங்களுக்குக் கிட்டியது.

நுண்ணுணர்வையும் மற்றவர்களின் வேதனைக்கும் துன்பத்துக்கும் இரக்கம் காட்டுமாறும் பயிற்றுவிப்பது சோவியத் பள்ளியின் முக்கியமான கடமையாகும். மற்றவரின் வேதனை தனது வேதனையாக மாறும் போதுதான் மற்றவரின் நண்பனாகவும் தோழனாகவும், சகோதரனாகவும் மனிதன் மாற முடியும். என் முன்னாலிருந்த வளர்ப்புப் பணியின் முக்கியமான நோக்கத்தை இவ்வாறு எடுத்துச் சொல்லலாம்: **மற்றவரின் இதயத்தைக் குழந்தை உணருமாறு செய்வது.**

தனது தோழன், நண்பன், தாய், தந்தை, தாய்நாட்டினன் ஆகியோரைச் சந்திக்கும்போது அவர்களது இதயத்தில் என்ன இருக்கிறது என்பது பற்றி குழந்தை அலட்சியமாய் இருந்தால், மற்றொரு மனிதனின் இதயத்தில் என்ன இருக்கிறது என்பதை அவனது கண்களில் குழந்தை காணவில்லை என்றால் அக்குழந்தை ஒருபோதும் உண்மையான மனிதனாக முடியாது. குழந்தைகள் அன்றாடம் தொடர்பு கொண்டுள்ள மனிதர்களின் கண்களில் மட்டுமின்றி, ''தற்செயலாகச்'' சந்திக்கிற மனிதர்களின் கண்களிலும் தெரிகிற உணர்ச்சிகள், அனுபவங்கள், மகிழ்ச்சிகள், வேதனைகள் ஆகியவற்றை எனது மாணவர்கள் காணத் தக்க வகையில் அவர்களது இதயத்தின் நுண்ணுணர்வைக் கூர்மைப்படுத்த முயன்றேன் நான்.

காட்டிலிருந்து நானும் குழந்தைகளும் திரும்பி வந்து கொண்டிருந்தோம். வழியில் ஒரு தாத்தா உட்கார்ந்திருப்பதைப் பார்த்தோம். ஏதோ காரணத்தால் அவர் கலங்கிப் போயிருக்கிறார். ''மனிதருக்கு என்னமோ நடந்திருக்கிறது. நடு வழியில் நோயுற்று விட்டாரோ? எதையாவது இழந்து விட்டாரோ?'' என்று நான் குழந்தைகளிடம் சொல்கிறேன். கிழவரை அணுகிக் கேட்கிறோம்: ''தாத்தா

உங்களுக்கு நாங்கள் உதவி செய்யலாமா?'' தாத்தா பெரு மூச்சு விடுகிறார். ''நன்றி குழந்தைகளே, நீங்கள் என்ன தான் முயன்றாலும் உங்களால் எனக்கு உதவி செய்ய முடியாது. எனது வேதனை மிகப் பெரியது. மனைவி மருத்துவ மனையில் இறந்து கொண்டிருக்கிறாள். அவளைப் பார்க்கப் போகிறேன். பஸ் வருவதற்குக் காத்திருக்கிறேன். உங்களால் எப்படி உதவ முடியும்? ஆனாலும் பளு கொஞ்சம் குறைந்திருக்கிறது: நல்ல மனிதர்களும் உலகத்தில் இருக்கிறார்கள்.'' குழந்தைகள் மௌனமானார்கள். கவலையற்ற கீச்சுக் குரல்கள் ஓய்ந்து போயின, கிழவரின் வேதனை மிக்க வார்த்தைகள் ஏற்படுத்திய மனப்பதிவுடன் அவர்கள் போய்க் கொண்டிருந்தனர். இன்னும் கொஞ்சம் விளையாடலாம் என்று நினைத்தனர். விளையாட்டோ பிடிக்கவில்லை. விளையாட்டை மறந்து விட்டு அவரவர் வீட்டை நோக்கிப் பிரிந்து சென்றனர்.

**உணருவதற்குப் பயிற்றுவிப்பது** இது தான் போதனைப் பணியிலேயே மிகவும் கடினமானதாகும். கனிவு, நுண்ணுணர்வு, இரக்கம், அனுதாபம் ஆகியவையே நட்பு, தோழமை, சகோதரத்துவம் ஆகும். மற்றவர்களின் மகிழ்ச்சி, சந்தோஷம், ஆன்மிக அமைதி ஆகியவற்றுக்காக குழந்தை ஏதாவது செய்யும் போதுதான் மற்றொருவரின் நுண்ணிய அனுபவ உணர்ச்சியைக் குழந்தை உணருகிறது. தந்தை, தாய், பாட்டி, தாத்தா ஆகியோரிடம் சிறு குழந்தை கொண்டிருக்கிற அன்பு, நல்லது செய்கிற படைப்பு வேலையால் உற்சாகப்படுத்தப் படவில்லை என்றால் சுயநல உணர்ச்சியாக மாறிவிடும்: தனது மகிழ்ச்சிக்கு ஊற்றுக்கண்ணாக, தனது சந்தோஷத்துக்கு வேண்டியவராக தாயார் விளங்குகிற வரைதான் அவரை குழந்தை நேசிக்கும். உண்மையான மனித அன்பைக் குழந்தை இதயத்தில் ஊட்டி வளர்க்க வேண்டும். மற்றொருவருக்காகக் கொள்கிற கவலை, பதற்றங்கள், கடமைகள், அனுபவ உணர்ச்சிகள் ஆகியவற்றைக் குழந்தை இதயத்தில் வளர்க்க வேண்டும். மற்றொருவரின் துன்பத்திற்காக அனுபவ உணர்ச்சி கொள்வதன் மூலம்தான் உண்மையான

அன்பு இதயத்தில் பிறக்கும். குழந்தை அக்கறை கொள்ள வேண்டிய ஒரு நண்பன் இருப்பது எவ்வளவு அவசியம். தேனீ வளர்ப்பாளரான அந்திரேய் தாத்தா இத்தகைய ஒரு நண்பராக எனது மாணவர்களுக்கு விளங்கினார். மற்ற வருக்காகக் குழந்தை எந்த அளவுக்குக் கவலைப் படு கிறதோ அந்த அளவுக்கு அவனது நண்பர்களிடமும், பெற் றோர்களிடமும் அவன் இதயம் மென்மையாய் இருக்கும். அந்திரேய் தாத்தாவின் கஷ்டமான வாழ்க்கை பற்றி சிறு வர்களுக்கு எடுத்துச் சொன்னேன்: ''அவரது இரண்டு பையன்களும் போர்முனையில் கொல்லப்பட்டனர். மனைவி இறந்து விட்டார். அவர் தன்னந் தனியாய் இருப்பதாய் உணருகிறார்.''

''குழந்தைகளே, நாம் தாத்தாவிடம் அடிக்கடி போவோம், ஒவ்வொரு முறையும் ஏதாவது ஒரு வகையில் அவரை மகிழ்விப்போம்.''

நாங்கள் அவரிடம் போவதற்குக் கிளம்பும் போது ''எப்படி அவரை மகிழ்விப்பது'' என்று குழந்தைகள் யோசிக்கிறார்கள். குழந்தைகள் ஒவ்வொருவரும் படம் வரைந்திருந்த சித்திர நோட்டை அவரிடம் எடுத்து வந் திருந்தார்கள். ஆற்றங்கரையில் பலப்பல நிறங்களில் கிடந்த கற்களைச் சேகரித்து வந்து அந்திரேய் தாத்தாவுக் குப் பரிசளித்தார்கள். மரத்தால் ஒரு சிறு பெட்டி செய்து இந்தக் கற்களை அதில் போட்டு எங்களுக்குப் பரிசளித்தார் தாத்தா... தமது நண்பருக்காக வைக்கோலைக் கொண்டு தொப்பி பின்னினார்கள் சிறுவர்கள். முயல் குட்டி, நரி, ஆட்டுக் குட்டி ஆகிய உருவங்களை மரத்தில் எங்களுக்குச் செதுக்கித் தந்தார் தாத்தா...

தமது நண்பரிடம் எந்த அளவுக்குக் குழந்தைகள் மன தார அக்கறை செலுத்தினார்களோ அந்த அளவுக்குத் தம்மைச் சுற்றி வேதனை, வருத்தம், கவலை ஆகியவை இருப் பதைக் கண்டனர். நீனாவும் சாஷாவும் பள்ளிக்கூடத்துக்கு வரும் போது வருத்தம் தோய்ந்தவர்களாக இருப்பதை யும் அவர்களது கண்களில் வேதனையும் சிந்தனையும் படர்ந் திருப்பதையும் குழந்தைகள் கவனித்தனர். சகோதரி

களைத் துருவித் துருவிக் கேட்டார்கள் சிறுவர்கள்: ''அம்மா எப்படி இருக்கிறார்?'' தாயாருக்கு உடல் நலமில்லை. எனவேதான் சிறுமிகள் வருத்தம் தோய்ந்தவர்களாய் இருக்கின்றனர்... நண்பனின் வேதனையைக் குறைப்பதற்காகக் குழந்தை ஏதாவது செய்யும் போதுதான் அவனது இதயத்தில் அன்பு உணர்ச்சி உறுதிப்படுகிறது. நீனு, சாஷா குடும்பத்திற்கு நாங்கள் பலமுறை சென்று வந்தோம். வீட்டுத் தோட்டத்தில் இருந்து களை பிடுங்கினோம், உருளைக் கிழங்கு தோண்டி எடுப்பதற்கு உதவி செய்தோம். காட்டுக்குப் போகலாம் என்று குழந்தைகள் ஒவ்வொரு முறை கிளம்பும் போதும், நீனுவும் சாஷாவும் நம்மோடு வர முடியுமா என்ற கேள்வி அவர்களைக் கவலைக்குள்ளாக்கும். வீட்டில் தங்கி தந்தைக்கு உதவ வேண்டி நேரலாமே. எங்களது பொதுவான மகிழ்ச்சி நாளிற்கு முதல் தினம் நீனு, சாஷா குடும்பத்திற்குச் சென்று முடிந்த உதவிகளைச் செய்தோம்.

மற்றவர்களின் நன்மைக்காகவும் அமைதிக்காகவும் தனது மகிழ்ச்சிகளைப் பகிர்ந்து தருவதுதான் சமுதாயத்தில் வாழ்வது என்பதற்குப் பொருளாகும். குழந்தையின் முன்னே துன்பம் வருத்தம், கண்ணீர் இருக்கையில் மகிழ்ச்சியில் அது திளைப்பதை நாம் ஒவ்வொருவரும் பார்த்திருக்கலாம். முழுமையான மகிழ்ச்சி நிறைந்த குவளையிலிருந்து ஒரு துளியைக் கூட குழந்தை சிந்தி விடாமலிருக்கும் பொருட்டு வேதனை,வருத்தம் ஆகியவற்றிலிருந்து அவனது கவனத்தைத் திருப்புவதற்குத் தாயார் முயற்சி செய்யலாம். இது அப்பட்டமான சுயநலம். மனித வாழ்க்கையின் வேதனைப் பகுதியைக் காட்டாமல் குழந்தையை வெளியே அழைத்துச் சென்று விடாதீர்கள். நமது வாழ்வில் மகிழ்ச்சி மட்டுமின்றி வேதனையும் இருக்கிறது என்று குழந்தைகள் தெரிந்து கொள்ளட்டும் மற்றவர்களின் வேதனை குழந்தையின் இதயத்துக்குள் செல்லட்டும்.

குழந்தைப் பருவத்தில் எந்த ஊற்றுக்கண்களிலிருந்து மகிழ்ச்சியை மனிதன் அள்ளிப் பருகுகிறான் என்பதைப் பொறுத்து இறுதியில் ஒரு நபரின் ஒழுக்கப் பண்பு இருக்

கும். சிந்தனையற்றதாய், நுகரும் தன்மை படைத்ததாய் குழந்தையின் மகிழ்ச்சி இருக்குமானால், வேதனை, மனத் தாங்கல், துயரம் ஆகியவற்றைக் குழந்தை தெரிந்து கொள்ளாதிருக்குமானால், அவன் ஒரு சுயநலமியாகவும் மற்றவர்களைக் காணாதவனாகவும் வளருவான். உயர்ந்த மகிழ்ச்சியான, மனிதனைப் பற்றிய அக்கறை தோற்றுவிக்கிற, அனுபவ உணர்ச்சிகள் ஏற்படுத்துகிற மகிழ்ச்சியை நமது மாணவர்கள் அறிந்து கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகும்.

## எங்கள் குழு ஒரு நட்புக் குடும்பம்

குடும்பத்து அன்பு, மனம் நிறைந்த பண்பு, இரக்கம், பரஸ்பர நம்பிக்கை, உதவி ஆகியவற்றை இந்தக் குழுவிற்கும் கொண்டு வருவதற்கு ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக் கூடத்தின்'' முதல் நாட்களிலிருந்தே நான் முயன்று வந்தேன். செப்டம்பர் மாதத்தில், வீத்யா, வால்யா, கோல்யா ஆகிய மூன்று குழந்தைகளின் பிறந்த நாட்கள் வந்தன. எங்கள் குழு முழுதும் இந்த நாட்களைக் கொண்டாடினோம். பள்ளி உணவு விடுதியில் பணியாரம் சுட்டோம். சித்திரங்களும் புத்தகங்களும் அவர்களுக்குப் பரிசளித்தோம். கோல்யாவின் குடும்பத்தில் பெற்றோர்களின் பிறந்த நாளாகட்டும் குழந்தைகளின் பிறந்த நாளாகட்டும் எதையும் கொண்டாடுவதில்லை என்று கேள்விப்பட்டு நான் வியப்புற்றேன். இதுதான் பையனின் வாழ்வில் முதல் பண்டிகை. நண்பர்கள் காட்டுகிற அக்கறையால் குழந்தை உணர்ச்சிவசப்பட்டான்.

குழந்தைப் பருவத்தில் ஒவ்வொரு மனிதனும் மற்றவர்களின் அன்பையும் கனிவையும் நாடுகிறான். கனிவற்ற சூழ்நிலையில் குழந்தை வளருவானேயானால் நல்லதையும் அழகையும் அலட்சியப் படுத்துகிறவனாக அவன் மாறி விடுவான். குடும்பத்துக்கோ, குறிப்பாகத் தாயாருக்கோ முழுமையான மாற்றாகப் பள்ளிக்கூடம் விளங்க முடியாது. கனிவும், அன்பும், அக்கறையும் குடும்பத்தில் குழந்தைக்குக்

கிடைக்கவில்லை என்றால் போதகர்களாகிய நாம் இக் குழந்தையிடம் குறிப்பாகக் கவனம் செலுத்த வேண்டும்.

பொருள்வகை மதிப்புக்களும், இரகசியங்களும், அக்கறைகளும், வேதனைகளும் எங்களது சிறு குழுவில் தோன்றின. விளையாட்டுப் பொம்மைகளும், பென்சில்களும், நோட்டுக்களும் அலமாரியில் இருந்தன. கனவுப் பகுதியில் ''உணவுப் பொருள்'' கிடங்கு இருந்தது. இலையுதிர்கால மழை தெருவில் பெய்கிற போது வருகிற கொண்டாட்டங்களுக்குத் தேவையான உருளைக் கிழங்கு, தானியம், வெண்ணெய், வெங்காயம் ஆகியவற்றை இங்கு நாங்கள் சேர்த்து வைத்தோம். எங்கள் குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் குழந்தைகளே. இவர்களில் சிலரான தன்கோ, தீனா, வால்யா ஆகியோர் மிகவும் சிறியவர்களாக இருந்தனர். காட்டிற்குப் போகிற வழியில் சிறுசுகளுக்கு உதவுவது தமது கடமை என்று அனைவரும் கருதினர்.

எங்களுக்குத் தெரியாத காரணங்களால் சில குழந்தைகள் வீட்டில் தங்கி விட்டால் மாலை நேரத்தில் அவர்களது வீடுகளுக்கு நண்பர்கள் செல்வர். யாருக்காவது உடல் நலமில்லையா என்று அறிந்து வருவர். இது ஒரு நல்ல மரபாகி விட்டது. பாச உணர்ச்சிதான் மிக முக்கியமான ஆன்மிகத் தேவையாகும். கம்யூனிசத்தின் பரஸ்பர மனித உறவுகளை—மனிதனுக்குள் இருக்கும் தேவையை—இதில்லாமல் நினைத்தும் பார்க்க முடியாது. நண்பர்களுடன் தொடர்பு கொள்வது, ஆன்மிக வளத்தைப் பரஸ்பரம் பரிமாறிக் கொள்வது ஆகியவை மகிழ்ச்சி, உணர்ச்சிகள், அனுபவ உணர்ச்சிகள் ஆகியவற்றிற்கு ஊற்றுக்கண்ணாக ஒவ்வொரு குழந்தைகளிடமும் விளங்குமாறு செய்வதற்கு முயன்றேன். ஒவ்வொருவரும் குழுவிற்குத் தன்னுடையது ஒன்று எதையாவது நல்க வேண்டும், மற்றவர்களுக்காக மகிழ்ச்சியைப் படைக்க வேண்டும்.

குழந்தைக் குழுவைப் பயிற்றுவிக்கிற நிகழ்ச்சிப்போக்கில் நான் பலப்பல இடையூறுகளை எதிர்கொண்டேன். இவற்றைக் களைவதற்காக, குழந்தையின் மனத்தையும் குழுவின் நாடித் துடிப்பையும் நுண்மையாக அறிகிற அனு

பவமிக்க போதகர்களுடனும், ஆரம்ப வகுப்பு ஆசிரியர் களிடமும் ஆலோசனை கேட்டேன், விவாதித்தேன். பள்ளிக் கட்டிடத்திற்குள்ளும், தோட்டத்திலும் குழந்தைக் குரல்கள் அடங்கிய பின்னே நாங்கள் அடிக்கடி கூடுவோம். குழந்தைக் குழுவின் பன்முகப்பட்ட வாழ்வை நாங்கள் ஒவ்வொருவரும் எப்படி நினைத்துப் பார்க்கிறோம் என்பது பற்றிக் கருத்துப் பரிமாறிக் கொள்வோம். தாலாட்டுப் பாடலைக் கேட்டு அம்மாவின் முகத்தைப் பார்த்துச் சிரிக்கத் தொடங்குகிற பொழுது குடும்பத்தில் உலகத்தை அறியத் தொடங்குகிறது குழந்தை என்று எங்கள் அனை வருக்கும் தெரியும். உலகத்தில் இருக்கிற நல்லதை, அன் பானதை, மிக அழகானதை—மனிதர்கள் ஒருவர் மீது ஒருவர் கொள்கிற நேசத்தை—பற்றிய முதல் சிந்தனை களைத் தாயும் தந்தையும் தனக்கு மிக நெருங்கியவர்களாக விளங்குமாறு செய்கிற சொந்த அனுபவம் தூண்டி விடுவது எவ்வளவு முக்கியமானது. இந்த உண்மையான மனிதத் தன்மை குடும்பத்தில் இருப்பது போதவில்லை என்றாலோ, சுத்தமாக இல்லை என்றாலோ, இதனை எந்த அளவுக்குக் குழு ஈடு செய்ய முடியும்? நுண்ணிய, கருத்துப்பதிவு கேற்ற குழந்தை இதயத்தின் முன்னே மனித மனத்தின் அன்பையும் அழகையும் எப்படித் திறந்து விடுவது?

விவாதங்கள், ஆலோசனைகள், சிந்தனைகள் நிறைந்த இந்த நேரங்களில், எங்கள் ஆசிரியர் குழுவின் மனவுறுதி யாக மாறிய பெரிய போதனைக் கருத்து சிறு சிறு துளி யாகச் சேர்ந்தது என்று நான் நினைக்கிறேன்: ஒவ்வொரு மனிதனையும் உயர்ந்து நிற்கச் செய்கிற போதுதான், தனது தகுதியை, தனக்குத் தானே மரியாதையை நிலைநாட்டு கிற போதுதான் குழந்தைக் குழு ஒரு பயிற்றுவிக்கிற சக்தி யாக மாறும் என்பதே இந்தக் கருத்து. தனது பையனும் பெண்ணும் தனக்குத் தானே தருகிற மரியாதையை உணர்ந்தபடி நல்ல மனிதர்களாக விளங்க வேண்டும் என் கிற ஆர்வத்தை அனுபவிக்க வேண்டும் என்பதைத்தானே உண்மையான தாயன்பும் தந்தையன்பும் தமது ஆன்மிக இதயமாகக் கொண்டிருக்கின்றன. படைப்புப் பணியின்

மிக மதிப்பு வாய்ந்த சிறு துளிகளை அனுபவமிக்க போதகர்களிடம் நான் கண்டேன். குழந்தை தன்னைப் பற்றி தானே பெருமைப் படுவதும், தனது நடவடிக்கைகளால் சுய கௌரவத்தையும் தகுதியையும் காப்பாற்றிக் கொள்வதும் இப்பணியின் கருத்தாகும்.

எங்கள் பள்ளியின் சிறந்த ஆசிரியர்களது போதனை அனுபவத்தின் மதிப்பு மிக்க சுரங்கங்களைக் கவனமாகச் சேகரித்தபடி குழுவிலுள்ள குழந்தைகளுக்கு இடையில் நிலவும் கனிவு மிக்க, அன்பு நிறைந்த உறவுகளில், நல்லவனாக இருக்க வேண்டும் என்ற விருப்பம் வெளிப்பட வேண்டும் என்பதற்காக நான் முயற்சி செய்தேன். குழுவிற்குள் நிலவும் உறவுகளில் அன்பும் கனிவும் இருக்குமாறு பார்த்துக் கொள்வது எனது நிரந்தரப் பணியாயிற்று. குழந்தைக் குழுவின் வாழ்க்கையில் பன்முகத் தன்மை என்பது ஒரே குறிக்கோள்களாலும், பொது உழைப்பாலும் ஒன்று சேர்ந்துள்ள ஒத்த சிந்தனையாளர்களிடையே இருக்கிற ஒத்துழைப்பாக மட்டும் எனக்குக் காட்சியளிக்கவில்லை. ஒருவர் மீது ஒருவர் கொள்கிற மென்மைத் தன்மையும், மற்றவரின் மகிழ்ச்சியை, வேதனையை, மனதாலும் அறிவாலும் புரிந்து கொள்கிற ஆன்மிகத் திறன் பெற்றிருப்பதும் இந்தப் பன்முகத் தன்மைக்குள் அடங்கும். குழு உறவுகளில் இருக்கிற இந்த அன்பிலும் கனிவிலும்தான் நல்லவனாய் விளங்குவதற்காக (வெளி வேஷத்திற்காகவோ மற்றவர்கள் புகழ வேண்டும் என்பதற்காகவோ அன்றி தனது நற்பண்பை உணர வேண்டும் எனும் உளப்பூர்வத் தேவைக்காக) செய்யப்படுகிற முயற்சியின் நற்பண்பு அடங்கியிருக்கிறது.

எனது போதனைப் பணியின் பிந்தைய ஆண்டுகள் அனைத்தும் குழந்தையின், சிறுவனின், இளைஞனின், இளம் பெண்ணின் மனிதத் தகுதியை உயர்த்துவதற்காக மேற்கொண்ட பணி நிறைந்த ஆண்டுகளாகவே இருந்தன. இதன் மீதுதான் குழு உறவுகள் அமைக்கப்பட்டன, இன்றும் அமைக்கப் படுகின்றன. சமுதாயத்தின் ஒரு துளியாக இருக்கும் குழந்தைக் குழுவின் வாழ்க்கையை மனிதனை

உயர்த்துவது எனும் பணிக்குக் கீழ்ப்பட்டதாக இருக்கச் செய்வதற்கே நான் எப்போதும் முயன்று வந்தேன். குழந்தைகளின் படைப்பு, அவர்களது மனப்போக்குகள், திறமைகள், ஆற்றல்கள் ஆகியவையும் இந்தப் பணிக்குக் கீழ்ப்பட்டவையே.

## ஆரோக்கியத் தோட்டத்தில் நாங்கள் வாழ்கிறோம்

எனது குழந்தைகள் மாணவர்களாக மாறுவதற்கு இன்னும் ஒரு மாதமே இருந்தது. கோடை காலத்தின் அற்புத மாதமான ஆகஸ்டு நெருங்கி வந்தது. ஜூலை மாதத்தின் வெப்ப நாட்களில் அதிகாலையிலோ மாலை நேரத்துக்கு முந்தியோ குழந்தைகள் பள்ளிக்கு வந்தனர். சிலர் மதிய உணவுக்காக வெகு தொலைவு நடக்க வேண்டி இருந்தது. ஆறு-ஏழு குழந்தைகள் சில சமயங்களில் பள்ளி உணவு விடுதியிலேயே மதியச் சாப்பாட்டை முடிப்பார்கள். எனக்கு ஒரு எண்ணம் தோன்றியது. ஒரு மாதத்திற்குக் குழந்தைகள் வீட்டில் வசிக்காமல் ஏரிக் கரையில் எங்காவது ஒரு தோட்டத்தில் வசிக்கட்டுமே. ஏரிக்கருகே ஒரு இடத்தைத் தேர்ந்தெடுத்தோம். புதர்களாக வளர்ந்திருந்த மரங்களுக்குக் கீழே சில குடிசைகள் கட்டுவதற்கு பயனீர்கள் எங்களுக்கு உதவினர். கூட்டுப் பண்ணையின் தர்ப்பூசணி வயல்களைக் காவல் காப்பவர்கள் இத்தகைய குடிசைகளில்தான் கோடை முழுதும் வசித்து வருவர். குடிசைக்குள்ளே வைக்கோல்களைப் பரப்பினோம், சித்திரம் வரைவதற்கு மேசைகள் செய்தோம். எங்கள் குடிசைகளுக்கு அருகே பெரிய கூட்டுப் பண்ணைத் தோட்டம் இருந்தது. நாங்கள் ஓய்வு கொள்வதற்குப் பிரதான இடமாக அந்தத் தோட்டம் இருந்தது. வருவதற்குத் தோட்டக்காரர் அனுமதி தந்தார். குடிசைகளுக்கருகே சமையலறை கட்டினோம். உணவுப் பொருள்களைக் கூட்டுப் பண்ணை வழங்கியது, சமையற்காரரையும் தந்தது. சான்யாவின் தந்தை குளியலறை கட்டித் தந்தார்.

அதற்கருகில் இயந்திரப் படகு நின்றது. அதைப் பார்த்த வுடன் சிறுவர்களின் கண்கள் சுடர்விட்டன.

ஆரோக்கியத் தோட்டத்தில் (எங்கள் குடியிருப்பையும், ஓய்விடத்தையும் குழந்தைகளின் பெற்றோர்கள் இப்படி அழைத்தனர்) எங்கள் குழுவின் வாழ்க்கை தொடங்கியது. ஒரு மாதம் முழுதும் நாங்கள் காற்று வெளியில் இருந்தோம். சூரியன் கிளம்புவதற்கு முன்னால் அதிகாலையிலேயே நாங்கள் விழித்துக் கொள்வோம். ஏரியில் குளித்தோம், உடற்பயிற்சி செய்தோம், காலை உணவு அருந்தினோம், காட்டுக்கோ, தோட்டத்துக்கோ, வயலுக்கோ நடந்து வரக் கிளம்புவோம். வார்த்தை ஊற்றுக்கண்களுக்கு மிகவும் சுவாரஸ்யமான ''பயணங்களை'' இந்த மாதம் மேற்கொண்டோம். ஸ்டெப்பிக் குன்றின் உச்சியிலிருந்து காலை விடிவதையும் சூரிய உதயத்தையும் கண்டோம். நூற்றுக் கணக்கான தூக்கணங்குருவிகள் உஷ்ண மண்டல நாடுகளுக்குப் பறந்து போவதற்குத் தயாராய் கூட்டங் கூட்டமாய்ச் சேர்ந்து கொண்டிருப்பதையும், நதியை மூடிக் கொண்டிருந்த மேக மூட்டத்தைக் கதிரவனும் காலைக் காற்றும் விரட்டிக் கொண்டிருப்பதையும் கண்டோம். வயலில், புல்வெளியில் அல்லது காட்டில் குழந்தைகள் இரண்டாம் முறை காலை உணவு அருந்தினர். ஆப்பிள்கள், பேரிக்காய்கள், பிளம்கள், புதிய வெள்ளரிக்காய்களுடன் வேக வைத்த பிஞ்சு உருளைக் கிழங்குகள், தர்ப் பூசணிப் பழங்கள், முலாம் பழங்கள், வேக வைத்த மக்காச் சோளக் கதிர்கள், தக்காளிப் பழங்கள் ஆகியவற்றை அவர்கள் தின்றார்கள். பழங்கள் காய்கள் நிறைந்த மாதமாகும் ஆகஸ்டு. இந்த நாட்களில் ஒவ்வொரு குழந்தையும் குறைந்த பட்சம் இரண்டு கிலோகிராம் ஆப்பிள்களும் பேரிக்காய்களும் சாப்பிட்டது. ஒவ்வொரு நாளும் அந்திரேய் தாத்தா எங்களுக்குத் தேன் கொண்டு வந்தார். காலையிலும் மாலையிலும் குழந்தைகள் புதுப் பால் குடித்தனர். பச்சைக் காய்களைக் கொண்டு சுவையான சூப் தயார் செய்து தந்தார் சமையற்காரர்.

வெய்யில் காய்ந்த உடம்புடன், ஜட்டிகளும் பனியன்

களும் அணிந்து கொண்டு, வெறுங் காலுடன் ஒவ்வொரு நாளும் பயணம் கிளம்பினர் குழந்தைகள். இயந்திரப் படகில் சவாரி செய்தனர்.

ஆரோக்கியமான உணவு, வெய்யில், காற்று, தண்ணீர், உடலுக்கேற்ற உழைப்பு, ஓய்வு ஆகிய யாவும் ஒன்று சேர்ந்திருப்பது நோய் தீர்க்கிற, வெறெதனுலும் ஈடு செய்ய முடியாத ஆரோக்கிய ஊற்றுக்கண்ணுகத் திகழ்ந்தது.

## கல்வி ஆண்டு தொடங்குகையில் ஏற்பட்ட சிந்தனைகள்

எங்கள் ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' வாழ்க்கை முடிந்து கொண்டிருந்தது. எனது சிறுவர்கள் சீக்கிரம் மாணவர்களாக மாறப் போகிறுர்கள். இந்தச் சிந்தனை எனக்கு மகிழ்ச்சியையும் கவலையையும் தந்தது. வாழ்க்கை, உழைப்பு, உலக அறிவு எனும் பாதையில் எனது சிறுவர்களை இன்னும் பல ஆண்டுகள் நான் அழைத்துப் போவேன் என்பதும், இந்த ஒரு ஆண்டில் எனது மாணவர்கள் உடலுறுதி பெற்றவர்களாய், பழுப்பு நிறத்தவர்களாய் வெய்யில் காய்ந்தவர்களாய் மாறி விட்டனர் என்பதும் எனக்கு மகிழ்ச்சியைத் தந்தன.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' நாங்கள் கழித்த நாட்கள் முடிவு பெற்ற பின், வலோத்யா, காத்யா, சான்யா, தோல்யா, வார்யா, கோஸ்த்யா ஆகியோர் ஓர் ஆண்டுக்கு முன்பு எப்படி இருந்தார்கள், இப்போது எப்படி இருக்கிறுர்கள் என்பதை சிந்தனை பூர்வமாக ஒப்பிட்டுப் பார்த்தேன். அவர்கள் வெளிறிப் போய், பலவீனமானவர்களாய், கண்களுக்குக் கீழே நீல நரம்பு ஓடியவர்களாய் இருந்தனர். இப்போது அனைவரும் செவ்வண்ணத்தவர்களாய், வெய்யில் காய்ந்தவர்களாய் மாறி இருந்தனர். இத்தகைய குழந்தைகளைத் திடகாத்திரமானவர்கள் என்று சொல்கிறுர்கள். கரும்பலகையும் சாக்குக் கட்டியும் இல்லாமல், வெளிறிய படங்களோ, வெட்டப்பட்ட எழுத்

துக்களோ இன்றி உலகை அறிவதில் முதல் படியில் குழந்தைகள் ஏறி விட்டனர்—படிக்கவும் எழுதவும் கற்றுக் கொண்டனர் என்பது சந்தோஷத்தைத் தந்தது. நேரான சட்டங்களால் விளிம்பு கட்டப்பட்ட வகுப்பறைக் கரும் பலகையிலிருந்து இந்த முதல்படியை ஏறுகின்ற சிறுவனை விட ஒப்பிடற்கரிய வகையில் இவர்களுக்கு இது எளிதாகும்.

நான், அறிவுறுத்தும் போதனையை ஆழமாக மதிக்கிறவன், அதீதக் கற்பனைகளை அடியோடு வெறுக்கிறவன். அறிவில் தேர்ச்சி பெறுவது சிறுகச் சிறுக நடைபெற வேண்டும் என்றும். மிகுந்த காரியப் பற்றுடனும் விடாமுயற்சியுடனும் நடைபெறுகிற குழந்தை உழைப்பான கல்வி கற்றல் அதே நேரத்தில் குழந்தையின் ஆன்மிக ஆற்றலையும் உடலாற்றலையும் உறுதி செய்கிற மகிழ்ச்சி மிக்க உழைப்பாகவும் இருக்க வேண்டும் என்றும் வாழ்க்கையே கோருகிறது. உழைப்பின் குறிக்கோள்களையும், கஷ்டங்களின் சாரத்தையும் இன்னும் புரிந்து கொள்ள முடியாமல் இருக்கிற சிறுவர்களுக்கு இது குறிப்பாக அவசியமாகும்.

கல்வி கற்றல் என்பது உழைப்பு எனவும், இதனை விளையாட்டாக மாற்றி விடக்கூடாது எனவும் ஆயிரம் முறை சொல்லியாயிற்று. ஆனால், உழைப்புக்கும் விளையாட்டுக்கும் இடையில் ஒரு சீனச் சுவரை எழுப்பி விட முடியாது. குழந்தையின் வாழ்க்கையில், குறிப்பாக பள்ளி வயதுக்கு முந்திய குழந்தையின் வாழ்க்கையில் விளையாட்டு எத்தகைய பாத்திரம் வகிக்கிறது என்று கூர்ந்து கவனிப்போம். அவனுக்கு விளையாட்டு என்பது மிகவும் காரியப் பற்றுடன் நடக்கிற விஷயம். விளையாட்டில்தான் குழந்தைகளின் முன்னே உலகம் விரிகிறது, தனிநபர் படைப்புத் திறன் வெளிப்படுகிறது. விளையாட்டு இல்லாமல் முழுமையான அறிவு வளர்ச்சி சாத்தியமில்லை. விளையாட்டு என்பது பிரகாசமான பெரியதொரு சாளரம். சுற்றியுள்ள உலகத்தைப் பற்றிய மனத்தோற்றங்களும் கருத்துருவங்களும் உயிரோட்டமுள்ள வெள்ளமாக இந்தச் சாளரத்தின் வழியாகத்தான் குழந்தையின் ஆன்மிக உலகத்துக்குள்

பாய்கிறது. ஆர்வத் தீயையும் ஆவல் தீயையும் மூட்டி விடுகிற நெருப்புப் பொறிதான் இந்த விளையாட்டு, விளையாடும் போதே எழுதக் கற்றுக் கொள்கிறது குழந்தை. அறிவாற்றல் வளர்ச்சியின் ஏதோ ஒரு கட்டத்தில் விளையாட்டும் உழைப்பும் ஒன்று சேர்கின்றன. அந்த நேரத்தில் ''விளையாடியது போதும், உழைக்கலாம் வாருங்கள்'' என்று ஆசிரியர் அடிக்கடி சொல்வதில்லை. இதில் அச்சம் தருவது என்ன இருக்கிறது?

விளையாட்டு என்பது பரவலான பன்முகப்பட்ட ஒரு கருத்தாகும். ஓடும் பொழுதும், வேகத்தில், விரைவில் போட்டியிடும் போதும்தான் குழந்தைகள் விளையாடுகிறார்கள் என்பதில்லை. படைப்புத் திறனில், கற்பனையில் ஏற்படுகிற இறுக்கத்திலும் விளையாட்டு அடங்கி இருக்கலாம். அறிவாற்றலின் விளையாட்டு இன்றி, படைப்புக் கற்பனை இன்றி முழுமையான போதனைப் பயிற்சியை நினைத்தும் பார்க்க முடியாது. குறிப்பாக பள்ளிக்கூட வயதுக்கு முந்தி இது சாத்தியமே இல்லை. விளையாட்டு என்ற கருத்தின் பரவலான பொருளில் பார்க்கும் போது, அழகு இருக்கிற இடத்தில்தான் அது தொடங்குகிறது. அழகுணர்ச்சியின் ஆரம்பம் இல்லாமல் சிறிய குழந்தை செய்யும் உழைப்பை நினைத்தும் பார்க்க முடியாது என்பதால், சிறு வயதில் உழைப்புப் பணி விளையாட்டுடன் இறுகப் பிணைந்திருக்கிறது. பள்ளித் தோட்டத்தில் அறுவடை தொடங்குகிற கொண்டாட்ட நாளில், பண்டிகை ஆடை பூண்டு குழந்தைகள் வருவர். முதலில் அறுக்கப்பட்ட கதிர்கள் விரிப்புப் போட்ட மேசை மீது நின்ற பூக்குவளையில் வைக்கப் பட்டிருக்கின்றன. இது ஒரு விளையாட்டு, ஆழ்ந்த பொருள் கொண்ட விளையாட்டு. உழைப்புடன் விளையாட்டு செயற்கையாக ''இணைக்கப்படுகிற போதுதான்'', போதனை முக்கியத்துவத்தை விளையாட்டு இழந்து விடுகிறது, அப்போது தான் சுற்றியுள்ள உலகத்து அழகிலும், தன்னுள்ளேயே இருக்கிற அழகிலும் மனிதனது மனக் கிளர்ச்சி வெளிப்படுவதில்லை.

முதல் வகுப்பில் பள்ளி மேசைக்கருகே உட்கார்ந்து

குழந்தை மாணவனாகி விடுகிற நேரந்தான் எழுத்தறிவுப் பயிற்சிக்கு ஏற்ற நேரமா? அல்லது பள்ளிக்கூட வயதுக்கு சிறிது முன்பாகவே இந்தப் பயிற்சியைத் தொடங்கி விடலாமா? குழந்தைகளின் வாழ்வில் திடீர் மாற்றத்தைப் பள்ளிக்கூடம் ஏற்படுத்தக் கூடாது என்று எங்கள் போதகாசிரியர் குழுவுக்கு அனுபவம் உணர்த்தி இருக்கிறது. மாணவனாக மாறிவிட்ட குழந்தை நேற்று என்ன செய்து கொண்டிருந்தானோ அதையே இன்றும் தொடர்ந்து செய்யட்டும். அவனது வாழ்வில் புதியது சிறுகச் சிறுக முளைக்கட்டும், பனிச்சரிவு போன்ற மனப்பதிவுகளால் அவன் திகைப்படையாமல் இருக்கட்டும்.

படம் வரைதல், விளையாட்டு ஆகியவற்றுடன் இறுகப் பிணைந்துள்ள எழுத்தறிவுப் பயிற்சி பள்ளிக்கு முந்தித் தரப்பட்ட போதனையையும் பள்ளியில் தரப்படுகிற பயிற்சியையும் இணைக்கிற பாலமாக விளங்க முடியும் என்று எனக்கு திடவுறுதி ஏற்பட்டிருக்கிறது. பனித்துளியில் சூரியப் பொறி, நூறு வயது ஓக் மரம், ஏரிக்கு மேலே சாய்ந்து நிற்கும் வில்லோ மரம், நீல வானில் நாரைகள் எழுப்பும் நாதம், ஜூலை மாத வெப்ப நாளுக்குப் பின்னே உறங்கிப் போன புல்வெளி ஆகியவற்றின் அழகு எனது மாணவர்கள் வரைந்த சித்திர எழுத்துக்களில் வெளிப்பட்டது. எழுத்துக்களை இன்னும் அழகாக குழந்தைகள் வரையாமல் இருக்கட்டுமே. இதுவல்ல பிரதானமானது. ஆனால், ஒவ்வொரு சித்திரத்திலும் வாழ்க்கையின் துடிப்பை அவர்கள் உணருகிறார்கள் அல்லவா? வண்ணங்களில் வேறுபாடுகளையும் வார்த்தையின் இசையையும் குழந்தைகள் புரிந்து கொள்ளத் தொடங்கினர் என்பது எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது. அவர்களது உணர்வில் பிரகாசமான, சித்திர பூர்வமான, கவிதைச் சிந்தனையின் உறுதியான அடித்தளம் இடப்பட்டிருக்கிறது. படம் வரைவது குழந்தைகளின் ஆன்மிக வாழ்வுக்குள் வந்து விட்டது. தமது உணர்ச்சிகளையும், சிந்தனைகளையும், அனுபவத்தையும் சித்திரங்களில் அவர்கள் வெளியிட முயன்றனர். இசைக்குச் செவி மடுப்பது எனது மாணவர்களின் ஒரு ஆன்மிகத் தேவையாகி விட்டது.

ஒழுக்க முன்னேற்றத்தில் குழந்தைகள் முதல் எட்டு எடுத்து வைத்தனர் என்பதும் மகிழ்ச்சிப் பதட்டத்தை ஏற்படுத்தியது. மனித நடத்தைகளின் அழகு எனும் உலகில் அவர்கள் அடி எடுத்து வைத்தனர். மற்ற மனிதர்களின் இன்ப துன்பங்கள் குழந்தைகளின் இதயங்களில் நுண்ணுணர்வை ஏற்படுத்தின. மற்றவருக்காக அழகையும் மகிழ்ச்சியையும் படைக்கிற இன்பத்தை அவர்கள் ஏற்கெனவே உணரத் தொடங்கினர். பள்ளிக்கூடத்துக்குள் ஒருவன் அடியெடுத்து வைக்கிற நாளிலிருந்து, முதிர்ச்சியுற்ற, பன்முக வளர்ச்சி பெற்ற தனிநபரின் உலகத்துக்குள் அவன் அடியெடுத்து வைக்கிற நாள் வரையும் நடைபெறுகிற போதனை எனும் பல்லாண்டு நிகழ்ச்சிப் போக்கானது முதற்கண் மனித உணர்ச்சிகளைப் பயிற்றுவிப்பது தான் என்றே எனக்குத் தோன்றுகிறது: நாம் பயிற்றுவிக்கிற மனிதன், தனக்கருகில் வாழ்கிறவர்களிடமும் தன்னிடம் தோன்றுவது போலவே வேதனை, துன்பம்,வருத்தம், துயரம் ஆகியவை தோன்றக் கூடும் என்று ஆழமாக உணர வேண்டும். எனது மாணவர்களின் நன்னடத்தைகள்; குழந்தைப் பருவத்தில் மனித உணர்ச்சிகளின் அடிப்படையிலேயே தோன்ற வேண்டும் என்பதற்காக நான் முயற்சி செய்தேன்.அடுத்தவர்களோடு சேர்ந்து அனுபவ உணர்ச்சிகள் கொள்வதற்கும், தமது சக மாணவர்கள், முதிய நண்பர்கள், பெற்றோர்கள், பொதுவாகவே பெரியவர்கள் ஆகியோரைக் கவலைக்குள்ளாக்குகிற உணர்ச்சிகளால் வேகமாக ஊடுருவப்பட்டவர்களாய் விளங்கக் கற்றுக் கொண்டார்கள் என்பதும் என்னை மகிழ்ச்சிக்குள்ளாக்கின. வாழ்க்கையில் குழந்தைகள் எவருடன் தொடர்பு கொள்ள நேர்ந்ததோ அந்த ஒவ்வொருவருள்ளும் முதற்கண் ஒரு மனிதனையே குழந்தைகள் கண்டார்கள் என்பது எனக்குப் பேரானந்தத்தைத் தந்தது.

மகிழ்ச்சி உணர்வு கொள்ளும்போதே எனக்குப் பதட்டமும் ஏற்பட்டது. அன்றாட மூளை உழைப்பு குழந்தைகளின் பிரதான கடமையாகி விடும். சுற்றியுள்ள உலகின் மீது ஏற்படுகிற உயிருள்ள அக்கறையை நான் தொடர்ந்து

காத்து வருவேனு? சுற்றியுள்ள உலகத்தை ஒவ்வொரு குழந்தையும் தனக்கேயுரிய விதத்தில் பார்க்கிறது, பொருள்களையும் தோற்றங்களையும் தனக்கேயுரிய விதத்தில் புரிந்து கொள்கிறது, அது தனக்கேயுரிய விதத்தில் சிந்திக்கிறது. விரைவான, வேகமான ஆற்றுக்கும், கண்ணுக்குத் தெரியாத நீரோட்டமுள்ள தண்ணீர் நிறைந்த அமைதியான ஆற்றுக்கும் அறிவு உலகத்துக்கும் அவர்களை நான் அழைத்துச் செல்ல முடியுமா?

ஒவ்வொரு குழந்தையின் ஆன்மிக உலகமும் இன்னும் அதிகமாக என்னைக் கவலைக்குள்ளாக்கியது. நுண்ணுணர்வும், மென்மையும், புரிந்து கொள்கிற தன்மையும் கொண்ட இதயம் என் முன்னே இருக்கிறது. குழந்தைகளுடன் எந்த அளவுக்கு நான் தொடர்பு கொள்கிறேனே, அந்த அளவுக்கு வார்த்தைகள், பார்வை, ஆலோசனைகள், குறிப்புகள் ஆகியவற்றை நான் வெளியிடும் விதத்தை ஒவ்வொரு குழந்தையின் அறிவும் இதயமும் ஏற்றுக் கொள்கிற முறை கூர்மையடைந்து வந்தது. என் முன்னே 31 குழந்தைகள், அதாவது 31 உலகங்கள் இருக்கின்றன. கோல்யாவும், கோஸ்த்யாவும், வார்யாவும், தீனுவும், தன்கோவும், லரீசாவும், வலோத்யாவும், ஸ்லாவாவும்... பள்ளி வயதுக்கு முன்பே எவ்வளவு மாறுபட்டவர்களாய் இருக்கின்றனர். தன்னுடைய, தனிநபருடைய, மிகவும் சொந்தமான தன்மை ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வாரமும் மேலும் மேலும் பிரகாசமாகவும் தெளிவாகவும் வெளியாகிறது அல்லவா? ஒவ்வொரு குழந்தையின் இதயத்திலும், எங்கோ ஒரு ரகசிய இடத்தில் இசைத் தந்தி ஒன்று இருக்கிறது. அது தனது லயத்தில் ஒலியெழுப்புகிறது. எனது வார்த்தைக்கு இதயம் மறுமொழி சொல்ல வேண்டுமானுல் இந்தத் தந்தியின் இசைக்கேற்ப எனக்கு நானே சுருதி கூட்டிக் கொள்ள வேண்டும். ஏதோ ஒன்றினுல் குழந்தை கவலைக்குள்ளாகி, வருத்தமுற்று இருக்கையில் ஆசிரியர் இதனைக் கவனிக்காமல் இருந்தால் எத்தகைய கடுமையான அனுபவ உணர்ச்சிக்குக் குழந்தை இதயம் உள்ளாகிறது என்பதை நான் பலமுறை கண்டிருக்

கிறேன். ஒவ்வொரு நாளும் குழந்தை என்ன உணர்ச்சிக்கு ஆளாகிறது, அதன் மனத்தில் என்ன இருக்கிறது என்பதை என்னுல் அறிந்து கொள்ள முடியுமா? குழந்தைகளிடம் எப்போதும் நான் நியாயமாக நடந்து கொள்வேனு?

சமுதாய வாழ்வு எனும் பேருலகுக்குக் குழந்தைகளை எப்படி அழைத்துச் செல்வது? தனது கிராமத்தையும், குழந்தைப் பருவத்தின் இளமைக் காலம் எந்த நதி தீரத்தில் கழிந்ததோ அந்த நதியின் அழகையும் மட்டும் குழந்தை பார்க்காமல் தனது தாய்நாட்டின் பிரம்மாண்டமான எல்லையற்ற பரப்பையும் அது பார்ப்பதற்கு என்ன செய்வது? இந்தப் பிரதான கேள்விதான் நான் பணியாற்றிய காலம் முழுதும் எனக்கு நிம்மதி தராமல் இருந்தது. இயற்கையின் அழகையும் மனித மனத்தின் அழகையும் குழந்தை நேசிப்பதோடு மட்டுமின்றி மக்களை அடிமைப் படுத்துகிற விரோத சக்தியான ஏகாதிபத்தியத்தை அவன் வெறுக்கவும் வேண்டும். சோவியத் மக்களின் சாதனைகளை—சோஷலிச அமைப்பு, சுதந்திரம், நேர்மை, நம் நாட்டு மக்களினங்களிடையே நட்பு ஆகியவற்றைக் காத்து நிற்பதற்கு அவன் தயாராய் இருக்க வேண்டும். குடிமகனுக்கான பயிற்சியுடன் பன்முக வளர்ச்சியை எப்படி ஒன்றிணைப்பது? இளம் மாணவர்களைப் பயிற்றுவிப்பது மிகவும் சிக்கலான பிரச்சினை. வயதுக்கேற்றபடி இந்தப் பிரச்சினையை என்னுல் தீர்க்க முடியுமா?

## இளமைப் பருவம்

### தொடக்கப் பள்ளி என்பது என்ன?

1952ஆம் ஆண்டு ஆகஸ்டு மாத இறுதி நாளின் வெய்யில் நிறைந்த அமைதியான காலைநேரத்தில், பள்ளிக் கட்டிடத்திற்கு முன்புள்ள பசிய புல்வெளிக்கு எல்லா மாணவர்களும், ஆசிரியர்களும், பெற்றோர்களும் வந்தனர். கல்வியாண்டு தொடங்குவதற்கு முந்திய நாளான இந்தக் கொண்டாட்ட நாள், வெகுகாலமாக பள்ளியும் புத்தகமும் கொண்டாடும் பரம்பரைப் பண்டிகை நாளாக விளங்கி வருகிறது. அன்றைய காலைநேரப் பண்டிகை குறிப்பாகப் பதட்டம் நிறைந்ததாக இருந்தது.

வெகு தொலைவிலுள்ள, தெரியாத பூமிக்குக் கிளம்பிய உலகம் சுற்றுகிறவன் தனது பயணத் துணைவர்களையும், நண்பர்களையும் ஊடுருவிப் பார்ப்பது போல, எனது சிறுவர்களின் கண்களை நான் ஊடுருவிப் பார்த்தேன். அவர்கள் இதோ நிற்கிறார்கள். 16 சிறுவர்கள், 15 சிறுமிகள். குழந்தைகளுடன் அவர்களது பெற்றோர்களும், பல பாட்டிகளும் தாத்தாக்களும் வந்திருக்கின்றனர். கோல்யா, தோல்யா ஆகியோரின் தாய்மார்கள் நிற்கின்றனர். கால்யாவின் தோள் மீது அவளது மாற்றாந்தாய் கை வைக்கிறார். ஒரு ஆண்டுக்கு முன்பு சிறுமி முகம் சுழித்தது போல இப்போது செய்யவில்லை. நல்ல பயணம் நடக்கட்டும் என்று எல்லோரும் எங்களுக்கு வாழ்த்துச்

சொல்கிறார்கள். பத்தாம் வகுப்பு மாணவர்கள் சிறுவர் களை நெருங்குகிறார்கள், ஒவ்வொரு குழந்தைக்கும் நினைவுப் பரிசு-புத்தகம் வழங்குகிறார்கள். ''சிறிய நண்பனே நற்பயண வாழ்த்துக்கள். இந்தப் புத்தகத்தைப் பத்திர மாக வைத்துக் கொள். நீ மாணவனாக மாறிய அந்த நாளைப் பற்றி, பள்ளிப் பண்டிகையைப் பற்றி உன் வாழ்க் கை முழுதும் இது நினைவுபடுத்தட்டும். உனது குடும்பத்து நூலகத்தில் என்றென்றும் இது இருந்து வரட்டும்.'' (ஆண்டு கள் சென்றன. எனது மாணவர்கள் வயது வந்தவர்களாகி விட்டனர். ஒரு புனிதப் பொருளாக, பொற்கால இளமைப் பருவத்தைப் பற்றிய மதிப்பரிய நினைவாக இந்தப் புத்த கத்தை ஒவ்வொருவரும் பத்திரமாக வைத்திருக்கிறார் கள்).

பெற்றோர்களுடன் குழந்தைகளும், ஆசிரியர்களும், பத்தாம் வகுப்பு மாணவர்களும் பள்ளித் தோட்டத்துக்குப் போகிறோம். இளைஞர்களும் இளம் பெண்களும் எச்சரிக் கையுடன் ஆப்பிள் மரத்தருகே தோண்டினார்கள், நிறைந்த அடிமண்ணுடன் அதனை வேறிடத்துக்குக் கொண்டு வந்து சீராகக் குழியில் நட்டார்கள். ஒவ்வொரு சிறுவனும் ஒரு குத்து மண் அள்ளிக் குழியில் தூவினான். மரத்துக்குத் தண் ணீர் ஊற்றினார்கள் குழந்தைகள். பின்னர் வீடு திரும்பி னர். நாளை அவர்கள் பள்ளிக்கு வருவார்கள். முதல் பாடம் தொடங்கப் போகிறது. தொடக்கப் பள்ளியில் அவர்கள் நான்கு ஆண்டுகள் இருப்பார்கள். நான்கு ஆண்டு கள் அவர்களுக்கு நான் போதிப்பேன், அவர்களைப் பயிற்று விப்பேன். இதற்கு முந்திய நாள் என்னை ஒரு சிந்தனை கிளறி விட்டது. ''தொடக்கப் பள்ளி என்பது என்ன?'' தொடக்கப் பள்ளியின் பெரிய, தீர்மானமான பங்கு பற்றி நிறைய பேசப்படுகிறது. ''ஆரம்ப வகுப்புகளில்தான் அறி வின் உறுதியான அடித்தளம் நிறுவப்படுகிறது'', ''ஆரம்ப வகுப்புகள் அடித்தளங்களின் அடித்தளம்.'' நடுத்தர வகுப்புகளிலும் உயர் வகுப்புகளிலும் நடக்கிற பயிற்சி யில் காணப்படுகிற பலவீனங்களையும் தவறுகளையும், மேம் போக்கான, உறுதியற்ற அறிவையும் பற்றிப் பேச்சு வருகிற

போது இந்த வார்த்தைகளை அடிக்கடி கேட்கிறோம். வரப் போகிற கல்விப் பயிற்சிக்கு அவசியமான குறிப்பிட்ட அறிவையும் திறமைகளையும் குழந்தைகளுக்குத் தொடக்கப் பள்ளி தரவில்லை என்று அதைக் குறை கூறுகிறார்கள்.

தொடக்கப்பள்ளியானது முதற்கண் கற்றுக் கொள்வதற்குப் பயிற்றுவிக்கிற வேலையைத்தான் செய்ய வேண்டும் என்று அனுபவம் உணர்த்தி இருக்கிறது. பிரபலமான போதனு வல்லுனர்களான யான் அமோஸ் கமேன்ஸ்கி (1592—1670), க. தி. உஷீன்ஸ்கி, பி. அ. திஸ்தெர்வேக் (1790—1866) ஆகியோர் இவ்வாறு எழுதியிருக்கிறார்கள். நடைமுறையும் ஆசிரியர்களின் அனுபவமும் இதனை மெய்யென்று உறுதி செய்கின்றன. குறிப்பிட்ட அளவுக்கு உறுதியான அறிவையும் திறமைகளையும் குழந்தைகளுக்குத் தருவதுதான் தொடக்கப்பள்ளியின் மிக முக்கியமான பணியாகும். கற்றுக்கொள்கிற திறமைக்குள் அறிவு பெறுவதுடன் தொடர்புடைய பல திறமைகள் அடங்கும்: படிப்பது, எழுதுவது, சுற்றியுள்ள உலகத்துத் தோற்றங்களைக் கூர்ந்து கவனிப்பது, சிந்திப்பது, தனது சிந்தனையை வார்த்தைகளால் வெளியிடுவது ஆகியவையாகும் இவை. உருவகமாகச் சொல்வதென்றால், இவை அறிவில் தேர்ச்சி பெறுவதற்கு அத்தியாவசியமான கருவிகளாகும்.

ஆரம்ப வகுப்புகளில் பயில்வதற்குக் குழந்தைகளைத் தயார் செய்தபடி, குழந்தைகள் எதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும், எதை உறுதியாக நினைவில் பதித்துக் கொள்ள வேண்டும், அவர்களுக்கு என்ன செய்யத் தெரிய வேண்டும் என்பதைத் துல்லியமாக நிர்ணயிக்க முயன்றேன்.

ஆனால் இத்துடன் தொடக்கப்பள்ளியின் பணிகள் முடிந்து விடவில்லை. ஆரம்ப வகுப்புகளில் ஆசிரியர் குழந்தையுடன் தொடர்பு கொண்டிருக்கிறார் என்பதை ஒரு கணமும் மறந்து விடக் கூடாது.

முதல் வகுப்பிலிருந்து நான்காம் வகுப்பு வரை—7 வயது முதல் 11 வயது வரை—நடைபெறுகிற பயிற்சியின் போதுதான் மனிதன் உருவாவது நிகழ்கிறது. ஆரம்ப

வகுப்புகள் முடிவதற்குள் இந்த நிகழ்ச்சிப் போக்கு முடிந்து விடுவதில்லை. ஆனால் இந்த ஆண்டுகளில்தான் மனித வாழ்வின் தீவிரமான பகுதி கடந்து செல்கிறது. மேற்கொண்டு நடைபெறப் போகிற பயிற்சிக்குத் தன்னை தயார் செய்து கொள்வதுடனும், இனிமேலும் வெற்றிகர மாக கல்வி கற்பதற்காக அறிவையும் திறமைகளையும் சேகரிப்பதுடனும் மாணவனின் வேலை நின்று விடுவதில்லை. வளமான ஆன்மிக வாழ்க்கையையும் அவன் வாழ வேண் டும். ஆரம்ப வகுப்புகளில் நடைபெறுகிற பயிற்சியின் காலமானது ஒழுக்கம், அறிவாற்றல், உள நெகிழ்ச்சி, உடலுறுதி, அழகுணர்ச்சி ஆகியவை வளர்ச்சியுறுகிற முழு மையான காலமாக உண்மையிலேயே மாற வேண்டு மானல். குழந்தை வளமான ஆன்மீக வாழ்வை இன்று வாழ வேண்டும், நாளைய அறிவில் தேர்ச்சியுறுவதற்கு இன்று தயார்படுத்திக் கொள்வதுடன் நின்று விடக்கூடாது.

நம் நாட்டுப் பள்ளிக்கூடங்களில் சிறப்பு மிக்க ஆரம்ப வகுப்பு ஆசிரியர்கள் ஆயிரக் கணக்கானேர் இருக்கின்ற னர். இவர்களில் ஒவ்வொருவரும் குழந்தையினது அறிவு விளக்கு மட்டுமல்ல, வாழ்க்கையின் ஆசிரியர், வாழ்க்கைக் குரு (இந்தக் கருத்தின் உண்மையான பொருளில்) ஆவர். சோவியத் நாட்டில் தொடக்கப்பள்ளி, அனைவருக்குமுரிய மத்திய தரக் கல்விக்கான உறுதியான அஸ்திவாரமாகத் திகழ்கிறது. ஆனல், பலப்பல தொடக்கப்பள்ளிகளில் குறிப்பாக எட்டாண்டுப் பள்ளிகளிலும் மத்தியதரப் பள்ளிகளிலும் இருக்கிற ஆரம்ப வகுப்புகள் கடுமையான பலவீனங்களைக் கொண்டிருக்கின்றன என்பது பற்றியும் மௌனம் சாதிக்கக் கூடாது. சில பள்ளிகளில் இருக்கிற ஆரம்ப வகுப்புகளில் பயில்கிற மாணவனின் தலைவிதி மிக மோசமானதாக எனக்குத் தோன்றியது. குழந்தையின் முதுகில் மூட்டை ஒன்று தொங்குவது போலவும், அதில் எவ்வளவு முடியுமோ அவ்வளவு பாரத்தை ஆசிரியர் ஏற்றிக் கொண்டிருந்ததுபோலவும் இருந்தது. இந்தப் பாரத் தை ஒரு எல்லை வரை, அதாவது மத்தியதர உயர்தர வகுப்புக்களில் பயிலத் தொடங்குவது வரை மாணவன்

சுமந்து செல்ல வேண்டும் என்பதில்தான் அவனது வாழ்க்கையின், வேலையின் அர்த்தத்தை ஆசிரியர் அடிக்கடி பார்க்கிறார்.

மாணவனுக்குத் தொடக்கப்பள்ளி ஒரு உறுதியான அறிவு வட்டத்தைத் தர வேண்டும். இந்தப் பிரச்சினையில் தோன்றுகிற எந்தவொரு தெளிவின்மையும், நிர்ணயமின்மையும் தொடக்கப்பள்ளியை மட்டுமின்றி கல்விப் பயிற்சியின் அடுத்த கண்ணிகளையும் பலவீனமாக்குகிறது. குழந்தைக்குத் தர வேண்டிய அறிவு, திறமைகள், நடைமுறைத் தேர்ச்சிகள் ஆகியவற்றின் வட்டத்தைத் தெளிவாக வரையறுக்காமல் பள்ளிக்கூடம் இருக்க முடியாது. கல்வி கற்கிற முதல் வகுப்பு இரண்டாம் வகுப்பு போன்றவற்றில் எத்தகைய விதிகளையும் வரையறுப்புகளையும் குழந்தை ஆழமாகப் புரிந்து கொண்டு, நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும், எத்தகைய வார்த்தைகளைச் சரியாக எழுதக் கற்றுக் கொண்டு சரியாக எழுதுவதை ஒருபோதும் மறக்காமலிருக்க வேண்டும் என்பவற்றை ஆசிரியர் மனதில் கொள்வதில்லை என்பதுதான் பல பள்ளிக்கூடங்களில் நடைபெறுகிற பயிற்சியின் ஆரம்பக் கண்ணியில் இருக்கின்ற ஒரு கடுமையான குறையாகும். குழந்தையின் மூளை உழைப்பை முடிந்த அளவுக்குக் குறைக்க முயல்கிற சில ஆசிரியர்கள், ஒரு விஷயத்தை அறிந்து கொள்வதோ, அதில் அக்கறை கொள்வதோ மட்டும் ஒரு குழந்தையின் வேலையல்ல என்பதையும் குழந்தை அந்த விஷயத்தை ஞாபகத்தில் ஏற்றுக் கொண்டு என்றென்றைக்கும் நினைவில் பதித்துக் கொள்ள வேண்டும் என்பதையும் மறந்து விடுகிறார்கள். ஆரம்ப வகுப்புகளில் மாணவன் பெற வேண்டிய பொது வளர்ச்சி பற்றி இப்போது நிறையப் பேசப் படுகிறது. பொது வளர்ச்சி என்பது கற்பிப்பதிலும் போதிப்பதிலும் மிக முக்கியமான அம்சமாய் விளங்குகிறது என்பது உண்மையே. ஆரம்ப அறிவும் இதே அளவுக்கு மிக முக்கியமானதே. இந்த ஆரம்ப அறிவை ஞாபகத்தில் கொள்ளாமலோ, உறுதியாக நினைவில் நிறுத்தாமலோ இருந்தால் பொது வளர்ச்சி பெறுவது சாத்தியமில்லை. ஏனெனில்

பொது வளர்ச்சி பெறுவது என்பது தொடர்ந்து அறிவுத் தேர்ச்சி பெறுவதே, இதற்கோ கற்றுக் கொள்கிற திறமை வேண்டும்.

தொடக்கப்பள்ளியின் முன் நிற்கிற கடமையின் சிறப்பான முக்கியத்துவத்தைக் கருத்தில் கொள்கிற போதே, நரம்பு மண்டல அமைப்பு உறுதி பெறுகிற கொந்தளிப்பான ஒரு காலத்தினூடே செல்கிற மனிதனுடன் ஆசிரியர் பணியாற்றுகிறார் என்பதையும் மறந்துவிடக் கூடாது. அறிவில் தேர்ச்சி பெற்று, அதனை ஞாபகத்தில் கொண்டு, என்றென்றைக்கும் நினைவில் நிறுத்துவதற்காக, ஆசிரியரிடம் தயாராய் தரப்பட்ட ஒரு உயிருள்ள அமைப்புதான் குழந்தையின் மூளை என்று கருதக் கூடாது. ஏழு வயது முதல் பதினோரு வயது வரை குழந்தைகளின் மூளை விரைவான வளர்ச்சி பெறுகிற நிகழ்ச்சிப் போக்கில் நிற்கிறது. மனிதனின் நரம்பு மண்டல அமைப்பைப் பேணிக்காப்பதிலும் மூளை அரைக் கோளத்தின் மூளைப் புறணி உயிரணுக்களை உறுதி செய்வதிலும் ஆசிரியர் கவனம் செலுத்தவில்லை என்றால் கல்விப் பயிற்சியால் குழந்தைக்குக் களைப்பேற்படும்.

இடைவிடாமல் அறிவைச் சேமிப்பதும், களைப்பூட்டுகிற, மந்தப் படுத்துகிற, யாருக்கும் தேவையற்ற, குழந்தையின் ஆரோக்கியத்துக்கும் அறிவு வளர்ச்சிக்கும் கேடு செய்கிற மனனப் பயிற்சியும்தான் கல்வி கற்பது என்று கருதக் கூடாது. குழந்தையின் வளர்ச்சிக்கு உதவி செய்து அவனது அறிவை வளமைப் படுத்துகிற செழுமையான ஆன்மிக வாழ்வின் ஒரு துளியாக கல்வி கற்பது இருக்குமாறு செய்ய வேண்டும் எனும் குறிக்கோள் கொண்டேன் நான். நெட்டுருப் போடுவதல்ல, விளையாட்டு, கதை, அழகு, இசை, கற்பனை, படைப்பு ஆகியவற்றைக் கொண்ட உலகில் நடக்கிற அறிவாற்றல் வாழ்க்கைதான் எனது மாணவர்களின் கல்வி கற்றலாக இருக்கும். இந்த உலகத்தில் உல்லாசப் பயணிகளாக, கண்டுபிடிப்பாளர்களாக, படைப்பாளர்களாக குழந்தைகள் விளங்க வேண்டுமென்று விரும்புகிறேன். கூர்ந்து பார்க்க, சிந்தனை செய்ய, அறிவு

பூர்வமாய் ஆய்வு செய்ய, உழைப்பு தரும் மகிழ்ச்சியை அனுபவிக்க, படைக்கப்பட்டது கண்டு பெருமைப்பட, மனிதர்களுக்காக அழகையும் மகிழ்ச்சியையும் படைக்க, இந்தப் படைப்பில் ஆனந்தத்தைக் காண, இயற்கை, இசை, கலை, ஆகியவற்றின் அழகில் பரவசமடைய, இந்த அழகினுல் தனது ஆன்மிக உலகை வளமைப் படுத்திக் கொள்ள, மற்றவர்களின் இன்ப துன்பங்களை நெஞ்சத்தில் ஏற்றுக் கொள்ள, அவர்களது தலைவிதியைத் தனது ஆழ மான சொந்தக் காரியமாக பாவிக்க இவற்றைக் கற்றுத் தருவதுதான் எனது போதனை ஆதர்சம். இதோடு கூடவே தெளிவாக, கருராக வரையறுக்கப்பட்ட குறிக்கோளை யும் மறந்து விடக் கூடாது. குழந்தைகள் எதைத் தெரிந்து கொள்ள வேண்டும், எந்த வார்த்தைகளை அவர்கள் சரியாக எழுதக் கற்றுக் கொண்டு ஒருபோதும் அதனைத் தவறின்றி எழுத வேண்டும், எந்தக் கணித விதிகளை என்றென் றைக்குமாக நினைவில் கொள்ள வேண்டும் ஆகியவற்றைக் கொண்டது இந்தக் குறிக்கோள். ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்திலேயே'' ஒன்று முதல் நான்காம் வகுப்பு வரை குழந்தைகள் உறுதியாக நினைவில் வைத்திருந்த தாய்மொழி வார்த்தைகளின் பட்டியல் ஒன்றை நான் தயாரித்திருந்தேன்.

மூளை உழைப்பின் முறைகள், வடிவங்கள், வழிகள் ஆகிய வற்றில் தேர்ச்சி பெறுவதை பெருத்த முக்கியத்துவம் வாய்ந்த போதனைப் பணியாக நான் கருதினேன். பள்ளித் தலைவர்களும் பார்வையாளர்களும் ஆரம்ப வகுப்புகளை அலட்சியமாகப் பார்த்தது என்னைக் கவலைக்குள்ளாக்கியது. பள்ளிக்கு வருகிற பார்வையாளர் உயர் வகுப்புகளையும், மத்திய வகுப்புகளிலுமே முதற்கண் அக்கறை காட்டுகிருர். இளைய வகுப்புக்களிலோ உண்மையான கல்வி கற்றல் நிகழவில்லை, வெறும் குழந்தை விளையாட்டுதான் நடை பெறுகிறது என்பது போல அவற்றை அவர் பார்க்கிருர். இந்த விளையாட்டு தரும் மனமுருக்கும் தன்மை மாணவர் கள் 5ஆம் வகுப்புக்குச் சென்றவுடன் அவனது மோசமான

அறிவு பற்றிய கவலை தரும் சிந்தனைகளாக மாறி விடுகின்றன.

எந்த விதமான மனமுருகலும் கூடாது என்று சிறு குழந்தைகளுடன் பணியாற்றப் போகும் போது நான் முடிவு செய்து கொண்டேன். சிறு வாக்கியங்களையும், பெரிய வாக்கியங்களின் நிறைவான பகுதிகளையும் முழுமையானவையாக, கண்களால் புரிந்து கொள்ளத் தக்க விதத்தில் விரைவாகவும், பொருள் வளத்துடனும், உணர்வு பூர்வமாகவும் இரண்டாம் வகுப்பு முடிவதற்குள் குழந்தைகள் படிக்க வேண்டும். சிந்தனையையும் அறிவு வளர்ச்சியையும் தருகின்ற ஊற்றுக் கண்களில் ஒன்று படிப்பது. **படிக்கிற போதே** குழந்தை **சிந்திக்கவும் வேண்டும்** என்கிற வகையில் படிப்பதற்குக் கற்றுத் தருவது எனது பணி என்று கருதினேன். அறிவுத் தேர்ச்சி பெறுவதற்குத் தணை புரியும் நுண்ணிய கருவியாக குழந்தைக்கு படித்தல் விளங்க வேண்டும், அத்தோடு கூடவே செழுமையான ஆன்மிக வாழ்வை நல்கும் ஊற்றுக் கண்ணுகவும் அது விளங்க வேண்டும்.

நாலாண்டு காலத்தில்—1952 இலையுதிர் காலம் முதல் 1956 வசந்த காலம் வரை—தொடக்கப் பள்ளியில் ஒரே மாதிரி முக்கியத்துவமுள்ள இரண்டு பணிகளை எவ்வாறு ஒன்றிணைத்தேன் என்று இந்த அத்தியாயத்தில் எடுத்துச் சொல்கிறேன்: முதலாவதாக ஆழமான, உறுதியான அறிவை குழந்தைகளுக்குப் புகட்டினேன்; இரண்டாவதாக நெட்டுருப் போடுவதைத் தடுத்து குழந்தைகளின் செழுமையான ஆன்மிக வாழ்வையும் அவர்களது ஆரோக்கியத்தையும் பேணி வந்தேன்.

## ஆரோக்கியம், ஆரோக்கியம், ஆரோக்கியம்

உடல் நலம் பேணுவதுதான் போதனைப் பணியில் மிக முக்கியமான அம்சம் என்று திரும்பத் திரும்பச் சொல்லுவதற்கு நான் அஞ்ச மாட்டேன். குழந்தைகளின் ஆன்மிக வாழ்வு, உலகக் கண்ணேட்டம் மன வளர்ச்சி, அறிவின் உறுதி, தமது சக்தியில் நம்பிக்கை ஆகியவை அவர்களது

களிப்பையும் உற்சாகத்தையும் பொறுத்ததே. நாலாண்டு காலப் போதனையின் போது குழந்தைகள் பற்றி நான் கொண்ட கவலைகளையும் பதட்டங்களையும் அளந்து பார்த்தால் அதில் பாதிக்கு மேல் ஆரோக்கியத்தைப் பற்றியே இருக்கும்.

குடும்பத்துடன் இடையறாத தொடர்பு கொள்ளாமல் ஆரோக்கியத்தைப் பேணுவது சாத்தியமில்லை. பெற்றோர்களுடன் நடந்த உரையாடல்களில் மிகப் பெரும்பகுதி, குறிப்பாக முதல் இரண்டாண்டுப் பயிற்சியின் போது நடந்த உரையாடல்கள் சிறுவர்களின் ஆரோக்கியத்தைப் பற்றியதாகவே இருந்தன. குழந்தைகளுக்கு வீட்டுப் பாடம் கொடுக்கப்பட மாட்டாது என்று நான் பெற்றோர்களுக்கு எடுத்துச் சொன்னேன். விதிகளையும், விவரங்களையும் பாட நேரத்தின் போதுதான் அவர்கள் ஞாபகத்தில் வைத்துக் கொள்வார்கள், கற்றுக் கொள்வார்கள். வீட்டில் சில பயிற்சிகளையே அவர்கள் செய்ய வேண்டும். இப் பயிற்சிகளின் நோக்கமெல்லாம் தகவல்களைக் கிரகித்துக் கொள்வதற்கு உதவி செய்வதாகவே இருக்கும். இதைத் தவிர, வீட்டில் குழந்தைகள் படிப்பார்கள், படம் வரைவார்கள், இயற்கைத் தோற்றங்களைக் கூர்ந்து பார்ப்பார்கள், சுற்றியுள்ள உலகத்தில் காணப்படும் பொருள்களையும் தோற்றங்களையும் பற்றி சிறு கட்டுரைகள் வரைவார்கள் மகிழ்ச்சி தரும் செய்யுள்களை மனனம் செய்வர். வீட்டில் செய்யப்படுகிற மூளை உழைப்பு களைப்புத் தருவதாக இருக்கக் கூடாது, அதே போதில் இந்த உழைப்பு இல்லாமல் முன்னேற்றமும் சாத்தியமில்லை. பாட நேரங்களில் மேற்கொள்ளப் படுகிற போதனை முறையைச் செம்மைப் படுத்துவதன் மூலம் வீட்டுப் பாடங்களே இல்லாமல் செய்து விடலாம் என்று கூறுகிற வாதத்தைச் சரியென்று ஏற்றுக் கொள்ளவே முடியாது. உண்மையான நோக்கங்களையும் போதனு நியதிகளையும்இந்த வாதங்கள் பிரதிபலிக்கவில்லை. ஏனெனில், குழந்தையின் மூளை உழைப்பு முழுவதையும் 3—4 மணி நேரத்துக்குத் தொடர்ச்சியாக ஒருமுனைப் படுத்திவிட முடியாது.

சுத்தக் காற்றில் குழந்தைகள் அதிக நேரம் இருக்குமாறும், சீக்கிரம் படுத்து சீக்கிரம் எழுந்திருக்குமாறும், சிறு சாளரம் திறந்திருக்கும் வண்ணம் தூங்குமாறும் பார்த்துக் கொள்வதாக பெற்றோர்கள் வாக்களித்தனர். கோடை காலம் முழுதும், வெப்பம் மிகுந்த இலையுதிர்கால, வசந்த கால மாதங்களிலும் திறந்த வெளியிலேயே குழந்தைகள் தூங்க வேண்டும். இதிலும் நாங்கள் பெற்றோர்களுடன் உடன்பாடு கொண்டோம். தாய் தந்தையர் மழைக்குப் பாதுகாப்பாக வைக்கோல் போர்களிலும், பந்தல்களுக்கு அடியிலும் விசேஷமான ''தூங்குமிடம்'' கட்டி அவற்றில் வசதிகள் செய்தனர். குழந்தைகளுக்கு இது மிகவும் பிடித்துப் போயிற்று. மாணவர்கள் இருக்கிற ஒவ்வொரு குடும்பத்திலும் வசந்த காலத்தின் ஆரம்பம் முதல் இலையுதிர் கால இறுதி வரை படிப்பதற்கு, படம் வரைவதற்கு, ஓய்வு கொள்வதற்கு ஏற்றவாறு தோட்டப் பகுதியில் ஒரு பந்தல் இருக்க வேண்டும். இது பற்றி பல ஆண்டுகளுக்கு முன்பாகவே பெற்றோர்களுடன் பேசி முடிவு செய்திருந்தோம். சில சிறுவர்களின் தாய்மார்கள் பந்தல் போட முடியாமல் இருந்ததால் அவர்களுக்கு முதிய வகுப்பு மாணவர்கள் உதவினர்.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' இருக்கும் போதே காலை நேரத்தில் உடற்பயிற்சி செய்யக் கற்றுக் கொண்டிருந்தனர் குழந்தைகள். இந்தப் பழக்கம் தொடர்ந்து இருந்து வருமாறு பார்த்துக் கொள்வது முக்கியமாகும். உடற்பயிற்சி செய்கிற பழக்கம் குழந்தைப் பருவத்தின் இளமைக் காலத்தில்தான் உறுதியாக ஏற்படுகிறது என்று நான் திடவுறுதி கொண்டேன். அன்றாடம் ஒரே நேரத்தில் துயிலெழுவதற்குப் பெற்றோர்கள் கற்றுத் தந்தனர். திறந்த வெளியில் உடற்பயிற்சி செய்த பின் குழந்தைகள் குளித்தனர். கோடை காலத்தில் குளத்தில் குளிக்க அவர்கள் பழகிக் கொண்டனர். இது தவிர, பெற்றோர்கள் பலர் முற்றத்திலோ, தோட்டத்திலோ ''ஷவர்'' குளியலறை கட்டியிருந்தனர். வருடத்திற்கு ஆறு மாதங்கள் (மே முதல் செப்டம்பர் வரை) குழந்தைகள் ''ஷவர்

—பாத்'' எடுத்துக் கொண்டனர். இது ஒரு உறுதியான பழக்கமாகி விட்டதால் பனிக்கால மாதங்களில் கூட அவர்கள் இடுப்பு வரை (அறைகளில்) குளித்தனர்.

பெற்றோர்களின் உதவியுடன் திறந்த வெளியில் ஆறு ''ஷவர்கள்'' கட்டினோம். பலவீன உடல்நிலை காரணமாக ''ஷவர்'' குறிப்பாக அத்தியாவசியமாக இருந்த தீனு, தோல்யா, கோஸ்த்யா, லரீசா, நீனு, சாஷா, ஸ்லாவா ஆகியோர் இவற்றைப் பயன்படுத்தினர். பிறவியிலேயே கூனல் விழுந்து, உடலுறுப்புக்கள், முகம் ஆகியவற்றின் அளவு சரியில்லாதிருந்த சிறுவர்களும் சிறுமிகளும் உடற்பயிற்சி செய்து, ''ஷவரில்'' குளிக்கும்படி பார்த்துக் கொண்டேன்... மனிதன் ஆரோக்கியமானவனாய் மட்டுமின்றி, அழகானவனாயும் இருக்க வேண்டும். ஆரோக்கியமும், உடலுறுப்புக்களின் சீரான வளர்ச்சியும் அழகிலிருந்து பிரிக்கப்பட முடியாதவை.

உடலுறுப்புக்களின் அளவு விகிதமும், எலும்புத் திசுக்கள் குறிப்பாக மார்புக் கூடு சரியாக வளர்ச்சியுறுவதும் குழந்தைப் பருவத்து ஊட்டத்தையே பொறுத்திருக்கின்றன. சில கனியப் பொருள்களும் நுண் கூறுகளும் உணவில் இல்லாமலிருந்தால் எலும்புக்கூட்டின் சில பகுதிகள் சரியான அளவில் வளருவதில்லை என்றும் இது வாழ்க்கை முழுவதையும் பாதிக்கிறது என்றும் பல ஆண்டுகளாக நடத்திய ஆய்வுகள் எடுத்துக் காட்டுகின்றன. இதைத் தவிர்ப்பதற்காக, உணவில் வைட்டமின்கள் இருக்குமாறும், வைட்டமின்களுடன் கனிப் பொருள்களும் உணவில் இருக்குமாறும் நான் பார்த்துக் கொண்டேன்.

இதற்கு முந்திய பல ஆண்டுகள் செய்த சோதனைகளும், விசேஷ ஆய்வுகளும் கவலை தரும் ஒரு முடிவுக்கு இட்டு வந்தன: சிறு வயதுக் குழந்தைகளில் 25 சதவீதத்தினர் பள்ளிக்குப் போகும் போது காலை உணவு சாப்பிடுவதில்லை, அவர்களுக்குச் சாப்பிடப் பிடிப்பதில்லை; 30 சதவீதத்தினர் சாதாரண உணவில் பாதியளவுக்கும் குறைவாகவே சாப்பிடுகிறார்கள், 23 சதவீதத்தினர் பாதியளவுக்கே காலை உணவு கொள்கின்றனர், 22 சதவீதத்தினர்தான் தேவை

யான அளவு சாப்பிடுகின்றனர். சில மணி நேரம் வகுப்பில் உட்கார்ந்திருந்த பின், காலை உணவு அருந்தாத குழந்தைகளுக்கு வயிற்றைப் புரட்டுகிறது, தலை சுற்றுகிறது. பள்ளியிலிருந்து திரும்பி வருகிறான் மாணவன், இன்னும் சில மணி நேரம் அவன் எதுவும் சாப்பிடுவதில்லை, சரியாகப் பசியெடுக்கவில்லை (சாதாரணமான ஆரோக்கிய உணவான சூப்; பீட்ரூட் சூப், கஞ்சி, பால் ஆகியவற்றை குழந்தைகள் விரும்புவதில்லை என்றும், ''ஏதாவது ருசியானதாகச்'' சாப்பிடுவதற்கு விரும்புகிறார்கள் என்றும் பெற்றோர்கள் புகார் செய்கிறார்கள்).

பசியின்மை உடல் நலத்துக்குப் பயங்கர உற்பாதம் விளைப்பதாகும். நோய்களுக்கும், நலமின்மைக்கும் மூல காரணமாகும். புழுக்கம் நிறைந்த வகுப்பறையில் பல மணி நேரம் உட்கார்ந்திருப்பதும், ஒரே மாதிரியான மூளை உழைப்பும், திறந்த வெளியில் பலவித நடவடிக்கைகள் மேற்கொள்ளாமலிருப்பதும், பொதுவாகவே ''பிராண வாயுவின் பற்றாக் குறையும்தான்''(கரியமிலவாயு நிறைந்த காற்றையே நாள் முழுதும் குழந்தை சுவாசிக்கிறது) இந்தப் பசியின்மைக்குப் பிரதான காரணமாகும். பல்லாண்டுகளாக நடத்திய ஆய்வுகள் இன்னொரு கவலைக்குரிய முடிவைத் தந்தன: கரியமிலவாயு நிறைந்த இடத்தில் நீண்ட நேரம் இருப்பது ஜீரணத்துக்கு மிக முக்கியமான ஜீரண நீரைச் சுரக்கும் சுரப்பிகளை நோய்வாய்ப்பட வைக்கின்றது. மேலும் இந்த நோய்கள் நிரந்தரமானதாகி, எத்தகைய சிகிச்சையாலும் குணப்படுத்த முடியாதவகையாகி விடுகின்றன. பசியைத் தூண்டி விடும் பொருட்டு ருசியுள்ள பண்டங்களை, குறிப்பாக இனிப்புப் பலகாரங்களைப் பெற்றோர்கள் குழந்தைகட்குத் தருவதன் காரணமாகவும் ஜீரண உறுப்புக்கள் வியாதிக்குள்ளாகின்றன. ''பிராண வாயுவின் பற்றாக்குறையை'' அனுமதிக்காமலிருப்பதும், முழுமையான வாயு மண்டலத்தின் முறையை அமைப்பதும்தான் ஆரோக்கியத்தைப் பேணுகின்ற மிக முக்கியமான ஒரு முன் தேவையாகும்.

குழந்தைகளுக்கு சுவையான, ஆரோக்கிய உணவைத்

தயாரித்துத் தரும்படியும், வைட்டமின்கள் நிறைந்த பழங்களைப் பனிக்காலத்துக்காக அதிகம் சேர்த்து வைக்குமாறும் பெற்றோர்களுக்கு நான் ஆலோசனை சொன்னேன். அப்போது எங்களிடம் சில தேனீக் கூடுகள் இருந்தன. எனவே பனிக்காலத்தில் பள்ளிக்கூடத்து உணவு விடுதியில் குழந்தைகளுக்குத் தேன் தர முடிந்தது.

குழந்தைகள் நாளில் பெரும்பகுதியைத் திறந்த வெளியில் கழித்ததாலும், அதிகம் இயங்கியதாலும், உடலுழைப்புச் செய்ததாலும், வகுப்பு முடிந்தவுடன் உடனடியாக புத்தகமும் கையுமாக உட்கார்ந்திருக்காததாலும் அவர்களுக்கு நன்கு பசியெடுத்தது. காலையில் குழந்தைகள் முழுமையான உணவு அருந்தினர்; பள்ளிக்குக் கிளம்பிய மூன்று மணி நேரம் கழித்து (வகுப்புப் பாடம் தொடங்கிய பின் சுமார் $2^1/_2$ மணி நேரம் கழித்து) பள்ளிக்கூட உணவு விடுதியில் அவர்கள் மதிய உணவு சாப்பிட்டனர்: சூடான சூப் அல்லது மாமிச பீட்ரூட் சூப்பும், கட்லெட்டு, ஒரு கப்புப் பால், வெண்ணெயுடன் ரொட்டி ஆகியவை அவர்கட்குக் கிடைத்தன. வகுப்புப் பாடங்கள் முடிந்தவுடன் (பள்ளிக்கூட மதிய உணவு சாப்பிட்ட $3—3^1/_2$ மணி நேரம் கழித்து) வீட்டில் ஒரு முறை சாப்பிட்டனர்.

பிற்பகலைக் குழந்தைகள் திறந்த வெளியில் (வீட்டிலோ, பள்ளியிலோ) கழித்தனர். மழை பெய்யும் போதோ, பனிப்புயல் வீசும் போதோதான் அறைக்குள் அவர்கள் இருப்பர்.

குழந்தையின் சீரான வளர்ச்சியில் எல்லாமே ஒன்றுடன் ஒன்று பரஸ்பரம் இணைந்தவை. எத்தகைய வீட்டுப் பாடங்கள் குழந்தைக்குக் கொடுக்கப் படுகிறது, எப்படி அவன் அவற்றைச் செய்து முடிக்கிறான் என்பதையும் பொறுத்திருக்கிறது ஆரோக்கியம். வீட்டில் குழந்தை தானாக மேற்கொள்கிற மூளை உழைப்பின் உளநெகிழ்ச்சி வேறுபாடு ஆரோக்கியத்தில் பெரும் பங்கு வகிக்கிறது. குழந்தை விருப்பமின்றிப் புத்தகத்தைக் கையிலெடுத்தால், அது அவனது ஆன்மிக ஆற்றலை ஒடுக்குவது மட்டுமின்றி உடலின் உள் உறுப்புக்களிடையே நிகழ்கிற பரஸ்

பர நடவடிக்கைகளின் சிக்கலான அமைப்பையும் பாதிக் கிறது. படிப்பின் மீது வெறுப்புக் கொண்டிருக்கிற குழந் தைக்கு ஜீரணம் கெட்டு, வயிற்று, குடல் நோய்கள் ஏற் படுவதை நான் அடிக்கடி கண்டிருக்கிறேன்.

இலையுதிர்கால, வசந்தகால, பனிக்கால விடுமுறை களைத் திறந்த வெளியில், இயற்கையின் நடுவே—பிர யாணத்தில், வழித் தங்கல்களில், காட்டில், விளையாட்டில் நாங்கள் எப்போதும் கழித்தோம்... முதலாவது பனிக் கால விடுமுறையின் போதே குழந்தைகள் பனிச் சறுக்கு விளையாட்டில் ஈடுபட்டனர்; காட்டுக்குள் போயினர், மலையிலிருந்து சறுக்கினர். எங்களது ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' பனிக்காலத்தில், வெண்பனிக் குன்று கட்டியது போலவே,பனியில் உருளும் சக்கரம் செய்தோம். குழந்தைகள் பயணீர்களாய் மாறிய போது தமது பிரிவின் மிகச் சுவாரஸ்யமான கூட்டங்களைக் காட்டில் நடத்தினர்.

பனிக்காலத்தில் திறந்த வெளியில் உழைப்பதுதான் எங்களது ஆரோக்கியத்துக்கு ஊற்றுக் கண்ணாகத் திகழ்ந் தது. மிதமான பனிக் குளிரில் (—10°C வரை) எட்டு வயதுக் குழந்தைகள் வாரத்திற்கு ஒரு முறை இரண்டு மணி நேரம் உழைத்தனர். ஒன்பது—பத்து வயதுக் குழந் தைகள் மூன்று மணி நேரமும், பதினொரு வயதுக் குழந் தைகள் நாலு மணி நேரமும் உழைத்தனர். மரங்களின் அடித் தண்டுகளை நாணலால் சுற்றினர், சிறு சட்டிகளில் பனித்துகள்களை அள்ளி வந்து குளிருக்கு அடக்கமாக இருப் பதற்காக செடிகளின் மீது தூவினர்—இத்தகைய வேலை கள் செய்தனர். திறந்த வெளியில் செய்யப் படுகிற இந்த வேலை உடலுறுப்புக்கள் உறுதி பெறுவதற்கும், அழற்சி நோய்கள் போன்றவை வராமல் தடுப்பதற்கும் நல்ல தொரு வழியாக இருக்கும்.

புல்வெளிகளிலும், வயல்களிலும், காடுகளிலும் நடை நடந்தும் பயணம் செய்தும் கோடை கால விடுமுறை யைக் குழந்தைகள் கழித்தனர். இயற்கையுடன் நேரடி யாகத் தொடர்பு கொண்டிருந்த மாதங்கள் சிறுவர் களின் உடல் நலம் உறுதியுறுவதற்கும், அறிவு வளர்ச்சி

அடைவதற்கும் நிறையப் பயனுள்ளதாயிருந்தது. முதல் வகுப்பு முடித்தவுடன், ஆகஸ்டு மாதத்தைக் கூட்டுப்பண்ணைத் தோட்டத்திலும் தேனீ வளர்ப்புப் பிரிவிலும் குழந்தைகள் கழித்தனர். இரண்டாம் வகுப்பு முடித்தவுடன் தர்ப்பூசணிப் பழத் தோட்டத்தில் நாட்களைக் கழித்தனர்.

ஆகஸ்டு மாதம் இயற்கை தனது பரிசுகளை அள்ளிக் கொடுக்கும் காலம். அது இயற்கை அழகு மலர்ந்தோங்கி நிற்கும் காலம், உழைப்பின் கொண்டாட்ட காலம். அறுக்கப்பட்ட கோதுமைக் கதிர்கள், பழுத்துக் கொண்டிருக்கும் முலாம் பழங்கள், திராட்சைப் பழங்கள், ஆப்பிள் பழங்கள் ஆகியவற்றின் மணம் நிறைந்த காற்று குறிப்பாக சுத்தமானதாயும், தெளிவானதாயும், சுறுசுறுப்பூட்டுவதாயும் விளங்கும். கோடை காலம் முடிந்து இலையுதிர் காலம் தொடங்கும் தறுவாயில் குறிப்பாக காற்று பிதன்சீடு (phytonsidum) நிறைந்ததாய் இருக்கும். நுரையீரல் சம்பந்தமான வியாதிகளோ, அழற்சி நோய்களோ, வாத சம்பந்தமான வியாதிகளோ வரக் கூடிய குழந்தைகளுக்கு உடலுறுதி தர வேண்டுமானுல், நாள் கணக்காய், அக்குழந்தையைக் காற்ருட இருக்குமாறு விடுங்கள்.

ஒரு நாள் தர்ப்பூசணித் தோட்டத்தில் குழந்தைகள் பொழுதைக் கழித்தனர். தர்ப்பூசணிப் பழங்களும் முலாம் பழங்களும் தாராளமாய்த் தந்து அவர்களை அங்குள்ளோர் உபசரித்தனர். கவர்ச்சி மிக்க ஸ்டெப்பிவெளிச் சுதந்திரத்தை ஒரு வருத்தத்துடன்தான் நாங்கள் விட்டுப் பிரிந்தோம். அன்று மாலையே தர்ப் பூசணித் தோட்டத்தில் நான்கு குடிசைகள் கட்டுமாறு கூட்டுப் பண்ணைத் தலைவர் உத்திரவிட்டார். இரண்டாவது நாள் குடிசைகள் கட்டி முடிக்கப்பட்டு விட்டன. தர்ப்பூசணித் தோட்டத்தில் தங்கி நாம் ஓய்வு கொள்ளப் போகிருேம் என்று குழந்தைகளிடம் சொன்ன போது அவர்கள் அதை நம்பவில்லை. ''நம்மை அங்கே விடுவார்களா?'' அவர்களுக்காகக் கட்டப்பட்டு வைக்கோலால் மூடப்பட்டிருந்த குடிசைகளைக் கண்டபின்தான் அவர்களுக்கு நம்பிக்கை வந்தது. இங்கு

தான் நாங்கள் இரவையும் கழிக்கப் போகிறோம் என்று கேள்விப்பட்டவுடன் அவர்கள் பேராளந்தம் கொண்டனர். மணம் வீசும் வைக்கோற் புல்லைத் தரையில் பரப்பினர், போர்வைகளும் கம்பளிகளும் கொண்டு வந்தனர், முகம் கழுவும் வட்டில்கள் கொண்டு வந்து வைத்தனர், பெற்றோர்கள் சமையலறை கட்டித் தந்தனர், குழந்தைகளின் உணவுக்கு ஏற்பாடு செய்தனர். இரண்டு குடிசைகளில் சிறுவர்களும், மற்ற இரண்டு குடிசைகளில் சிறுமிகளும் தங்கினர். தர்ப்பூசணித் தோட்டத்தில் கழித்த இந்த ஒரு மாதம் நீல வானையும், சுடரும் சூரியனையும் பற்றிய கவர்ச்சி மிக்க பாடல் போல குழந்தைகளின் நினைவில் வாழ்க்கை முழுதும் பதிந்தது.

சூரியோதயத்தின் போது நாங்கள் எழுவோம், இரவு நேர உறக்கத்துக்குப் பின் மீண்டும் வராத இயற்கை அழகைக் கண்டு ஆனந்திப்போம், பனித்துளிகளினூடே நடந்து செல்வோம், பெரிய மரப் பீப்பாய்களில் கொண்டு வரப்பட்டு வட்டில்களில் நிரப்பப்படும் ஊற்றுத் தண்ணீரில் முகம் கழுவுவோம். உடற்பயிற்சி, குளிர்ந்த நீரில் இடுப்புவரை குளிப்பது, தக்காளியுடன் கிடைக்கிற வேக வைத்த உருளைக் கிழங்கு, தர்ப்பூசணிப் பழங்கள் ஆகிய அனைத்துமே குழந்தைகளுக்குப் பெருமகிழ்ச்சியைத் தந்தன. காலை உணவுக்குப் பின் நாங்கள் வேலை செய்தோம்: முலாம் பழங்களும் தர்ப்பூசணிப் பழங்களும் சேகரிக்க கூட்டுப் பண்ணையாளர்களுக்கு உதவினோம்.

நகரத்துக் குழந்தைகள் சிலர் தமது பெற்றோருடன் எங்கள் விருந்தினராக வந்தனர். தர்ப்பூசணித் தோட்டத்தை ஒரு பெருமையுடன் அவர்களுக்குக் காட்டினோம், தர்ப்பூசணிப் பழங்களும், முலாம் பழங்களும் தந்து உபசரித்தோம். வெளிப்பார்வையிலேயே தர்ப்பூசணி பழுத்துவிட்டதா என்று நிர்ணயிக்கக் குழந்தைகள் கற்றுக் கொண்டனர். இந்தத் தோட்டத்திற்கருகே தேன் நிறைந்த புற்கள் இருந்தன. ஆகஸ்டு மாதத்தில் இங்கு தேன் கூடுகள் கொண்டு வந்து வைப்பர். நாங்கள் அந்திரேய் தாத்தாவிடம் நாள்தோறும் போய்விடுவோம். தர்ப்பூசணிப் பழங்

கள், பாஷா அத்தை செய்து தரும் சூடான கட்லெட்டுகள் ஆகியவற்றை அவருக்கு கொண்டு செல்வோம். எங்கள் வகுப்புக்கு தேனீக்களுடன் தேன் அடை பரிசளித்தார் அந்திரேய் தாத்தா. ''இதை உங்கள் பள்ளித் தோட்டத்திற்கு எடுத்துச் செல்லுங்கள்'' என்ருர் அவர். தேனீக்களின் வாழ்க்கையை சுவாரஸ்யமாகக் கவனித்தார்கள் குழந்தைகள்.

ஒவ்வொரு நாளும் குழந்தைகள் ஏரியில் குளித்தனர், காட்டுக்குள் நடந்தனர், ஸ்டெப்பி வெளியில் காட்டுப் பூக்களைச் சேகரித்தனர், அவற்றை அந்திரேய் தாத்தாவுக்கும் பாஷா அத்தைக்கும் கொண்டு வந்து தந்தனர். உச்சி நேர வெய்யிலின் போது குடிசைக்கு வந்து படுத்துக் கொள்வர். சுவரிலுள்ள சில ''சன்னல்களைத்'' திறந்து விட்டுக் கொள்வர். அங்கு காட்டுப் புற்களின் தண்டுகளைத் தொங்க விடுவர். இவற்றின் வாடையால் கொசுக்களும் ஈக்களும் வராமல் இருக்கும். வெளியில் உஷ்ணம், உள்ளேயோ குளுகுளுவென்று இருக்கும். ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' ஆரம்ப நாட்களிலேயே ஊடுருவும் காற்றுக்காகப் பயப்பட வேண்டியதில்லை என்று சிறுவர்களுக்குக் கற்றுக் கொடுத்தோம்; குழந்தைப் பருவத்திலேயே பழகிவிட்டால் எத்தகைய ஊடுருவும் காற்றுக்கும் அஞ்ச வேண்டியதில்லை என்று வாழ்க்கை போதித்திருக்கிறது. காற்ருேட்டம் தரப்படாத புழுக்கம் நிறைந்த அறையைச் சகித்துக் கொள்ளாமலிருக்கக் கற்றுக் கொள்வது சுத்த—சுகாதாரப் பழக்கங்களைக் கற்றுக் கொள்வது போலவே முக்கியமானதாகும்.

வெப்பம் குறைந்த பின்பு குழந்தைகள் வேலை செய்யப் போவார்கள். மாலை நேரத்துக்கு முந்தி தர்ப்பூசணிகளும், முலாம் பழங்களும் சேகரிக்கத் தோட்டத்துக்கு வருவார்கள் கூட்டுப் பண்ணை விவசாயிகள். சூரியன் மறைந்த பின்பு, வயல்களும், குன்றுகளும், புல்வெளிகளும் செந்நீலப் புகையால் போர்த்தப்பட்டிருக்கும் போது, வானத்தில் ஒன்றுக்குப் பின் ஒன்ருய் நட்சத்திரங்கள் சுடர் விடுகின்ற வேளையில் ஒரு குடிசைக்கு அருகே குழந்தைகள் ஒன்று

சேர்வர். அசாதாரணமான வீரச் செயல்கள், வழிப் பயணங்கள், துணிகரச் செயல்கள் பற்றிய கதைகளேயும் கட்டுக்கதைகளேயும் குறிப்பாக மாலேப்பொழுதில் கேட்க வேண்டுமென்று விருப்பம் ஏற்படுகிறது. நமது மக்களின் கற்பனேயில் உருவான சூனியக்காரிகள், செழுமையின் பரிசுகளே ஆகஸ்டு கடற்கன்னிகள், இரவுகளில் சுமந்து சென்று தருகிற இலேயுதிர்கால அழகி ஆகிய கற்பனே உயிர் கள் பற்றி நான் கதை சொன்னேன்.

இரவு நேர அமைதியில் ரம்மியமான இசையொன்றை நாங்கள் அடிக்கடி கேட்டோம். அண்மையில் கோதுமை யை அறுத்த வயல்களில் குழலோசை தரும் இன்னிசை ஒன்று மிதந்து வரும். எங்களுக்குத் தெரியாத இரவு நேரப் பறவை ஒன்று பாடியது போலும். ஆனுல் குழந்தை களின் கற்பனேயிலோ கோதுமைக் கதிர்களே மாலேயாய் அணிந்த சிறுவனின் உருவம் தோன்றியது. அவன் குழ லூதினுன். மக்களே மகிழ்வித்தான். இந்தச் சிறுவனுக்குச் சோல்நிச்னே கோலஸ் (சூரியக் கதிர்) என்று குழந்தைகள் பெயரிட்டனர். அவர்களது மனத்தோற்றத்தில் சூரியக் கதிர் சூரியனுக்கும் செழுமையான பூமிக்கும் பிறந்தவனு வான். கோதுமையில் கதிர் தோன்றும் போது சூரியக் கதிர் பிறக்கிருன். அறுவடை செய்கிருர்கள். அப்போது அவன் வாடை நிறைந்த வைக்கோல் போருக்குள் குடியேறு கிருன். மாலேநேரங்களில் மகிழ்ச்சி மிகுந்த பாடலேயும் சோகப் பாடலேயும் பாடுகிருன். பனிக்காலம் நெருங்கி வருகிறது, செழுமையின் உயிர்ச் சாறு உறங்குகிற வெப்ப பூமியை நோக்கி அவன் போய்விட வேண்டும். கோதுமைப் பசுமை தோன்றுகிறது, தனது வயலுக்கு வருகிருன் சூரியக்கதிர். அவன் பாட்டுப்பாடத் தொடங்குகிருன்.

கற்பனேக்கும் இயற்கைக்கும் குழந்தைகள் அடிக்கடி உயிர் கொடுக்கிருர்கள் என்றும், இது அவர்களே எதார்த்த உண்மையிலிருந்து விலக்கி வைக்கிறது என்று தோன்றக் கூடும். ஆயிரம் தடவை சொல்லுவேன், அப்படியொன் றும் இல்லே. வாழ்க்கையைப் பற்றி, செழுமையைப் பற்றி, மனிதனேப் பற்றிய இந்தக் கதை உத்வேகமூட்டும் ஆற்

றல் நிறைந்த ஊற்றுக்கண் அல்லவா? கற்பனுரீதியில் உயிரூட்டப்பட்டுள்ள ஜீவன், வாழ்க்கை, அழகு, செழுமை, வளமை, ஆகியவற்றைக் கொண்டுள்ள ஜீவன் மூட்டி விட்ட உத்வேகத்தில் சூரியக் கதிர் பற்றி குழந்தைகள் கவிதை இயற்றினர். இதோ கபடமற்ற அந்தப் பாடல்:

பூமித் துயிலேக் கலேத்து விட்டும்,
போதுமைக் கதிரைக் கனியச் செய்தும்,
குழலிசை நாதம் எழுப்புவது யார்?
சூரியக் கதிர், ஆமாம் சூரியக் கதிரே!
கோதுமைக் கதரில் ஆடைகள் பூண்டு,
பச்சைக் கதிர்மணிப் புருவம் தீட்டி,
களிப்புத் துள்ளும் கண்ணிமை கொண்டு,
மந்திரக்காரனுய் வந்ததும் அவனே!..

கற்பனேச் சித்திரங்கள் ஏற்படுத்தும் மனப்பதிவிற்குக் குழந்தைகள் ஆட்பட்டிருக்கையில் வியத்தகு தோற்றம் ஒன்று உருவாகிறது: எப்பொழுதோ கேட்ட அல்லது படித்த வார்த்தை உணர்வின் மறைவிடத்திற்குள் தட்டி எழுப்பப்படுவது போலிருக்கிறது. பிரகாசமான வண்ணங்களால் சுடர் விட்டு, வயல்களின், புல்வெளிகளின் மணத்தால் அது நிறைந்து வழிகிறது. அப்போது குழந்தை படைப்புத் தொழில் புரிகிறது, கவிதைச் சித்திரங்களே உருவாக்குகிறது.

ஆரோக்கியத்தைப் பற்றிச் சொல்லுகிற நேரத்தில் கட்டுக்கதைகளேயும், கற்பனேச் சித்திரங்களேயும், குழந்தைப் படைப்பையும் பற்றிய பேச்சு எழுவது ஏன் என்று வாசகர் கேட்கலாம். ஏனெனில் இதுதான் குழந்தைக் களிப்பு. களிப்பின்றி ஆரோக்கியமான உடலும் ஆரோக்கியமான உள்ளமும் இசைவுற்றிருப்பது சாத்தியமில்லே. வயல்களின் அழகாலும் நட்சத்திரங்களின் கண்சிமிட்டல்களாலும், வெட்டுக்கிளிகளின் முடிவற்ற பாட்டுக்களாலும், காட்டுப் பூக்களின் மணத்தாலும் கவர்ச்சியுற்ற குழந்தை கவிதை இயற்றினுல் அவன் உடலும் உள்ளமும் இசைவுற்றிருக்கிற உச்சியில் இருக்கிருன் என்று பொருள். சுகாதாரப் பழக்கங்கள், விதிகள் ஆகியவற்றின் கூட்டுத்

தொகுதி மட்டுமோ, முறையான வாழ்க்கை, உணவு, உழைப்பு, ஓய்வு ஆகிய தேவைகளின் சேர்க்கையைக் கவனித்துக் கொள்வது மனித ஆரோக்கியம், குறிப்பாகக் குழந்தை ஆரோக்கியம் ஆகிவிடாது. எல்லாவிதமான உடலாற்றலையும் உள்ளத்து ஆற்றலையும் முழுமையாக இசைவாக்குவதுதான் மனித ஆரோக்கியத்தைப் பேணுவதாகும். படைப்புத் தொழில் மகிழ்ச்சியில் இந்த இசைவு மகுடம் சூடுகிறது.

மூன்றும் வகுப்பு முடித்தவுடன் வந்த கோடை விடுமுறையையும் தர்ப்பூசணித் தோட்டத்திலேயே கழித்தோம். வேறொரு இடத்திலிருந்த இந்தத் தோட்டத்திற்கருகே திராட்சைப் பண்ணை இருந்தது. இப்பண்ணையில் குழந்தைகள் வேலை செய்தனர். அவர்கள் திராட்சைக் கொத்துக்களைக் கூடைகளில் அடுக்குவதற்குப் பெரியவர்களுக்கு உதவினர். காலையிலும் மாலையிலும் குளத்தில் குளித்தனர். குழந்தைகள் சுவாரஸ்யமான விளையாட்டொன்றைக் கண்டுபிடித்தனர். அவர்களது கற்பனையில் மூன்று படகுகளும் திமிங்கில வேட்டைக் கப்பல்களாக மாறின. சிறிய குளம் பெரிய சமுத்திரமாக மாறிற்று. நாங்கள் வேவு பார்க்கச் சென்றோம். திமிங்கிலங்களைத் தேடினோம்... இங்கு இசைக் குழல்கள் செய்தோம். மாலை நேரங்களில் எங்கள் சங்கீதக் குழு கூடியது. குழுவினர் நாட்டுப் பாடல்களை வாசித்தனர். கோடைகால மாலைப் பொழுது பற்றியும், இடிப்புயல் பற்றியும், செந்நிற வானவீதி பற்றியும், அணை நீரின் ரகசியச் சுழற்சி பற்றியும் வேறிடம் செல்லும் பறவைகள் பற்றியும் அவர்கள் இசை வடித்தனர். எங்களது ஆன்மிக வாழ்வில் ஆண்டுதோறும் அதிகமாகப் புகுந்தது இசை. சிறுவர்கள் எங்கே ஓய்வு கொண்ட போதிலும், மக்கள் பாடல்களுக்கு இசையமைத்த புகழ் பெற்ற இசையமைப்பாளர்களின் சங்கீதத்தை நாடாக்களிலிருந்து கேட்டனர்.

நான்காவது ஆண்டுப் படிப்பு முடிந்தது. 1956ஆம் வருடத்துக் கோடைகாலம் வந்தது. ஏரிக்கரைப் புல்வெளியில் ஓய்வு கொண்டனர் குழந்தைகள். அருகே ஓக் மரச்

சோலை. குச்சிகளைக் கொண்டு குடிசைகள் கட்டினர். அவற்றுக்கு வைக்கோல் கூரை வேய்ந்தனர். குளியலிடமும் சமையலறையும் கட்டுவதற்குப் பெற்றோர்கள் உதவி செய்தனர். உணவு தயாரிப்பதில் சமையற்காரருக்கு இப்போது உதவினர் குழந்தைகள். கிராமத்திற்குச் சென்று ரொட்டி, உருளைக் கிழங்கு, மீன், பால், காய்கறிகள் வாங்கி வந்தனர். நாங்கள் இருந்த இடத்தில் 20 பசுமாடுகளும் 2 குதிரைகளும் எங்களிடம் ஒப்படைக்கப் பட்டன. பகற்பொழுதில் பசுமாடுகளை மேய்த்தார்கள் குழந்தைகள். மாலையில் ஏரிக்கரையில் கட்டப்பட்ட சிறு கொட்டிலுக்குள் அவற்றை அடைத்தனர். எல்லோரும் குதிரைச் சவாரி கற்றுக் கொண்டனர். உணவுப் பொருள்களுக்காக கிராமத்துக்கு குதிரையில் போய் வந்தனர். இதில் கருரான வரிசை முறை கடைப்பிடிக்கப்பட்டது. ஒவ்வொருவருக்கும் பல கிலோமீட்டர் தூரம் சவாரி செய்ய வேண்டுமென்று ஆசையாய் இருந்தது. வலோத்யா, சான்யா, தீனு ஆகியோர் குறிப்பாக நன்கு சவாரி செய்தனர் என்பது எனக்கு மகிழ்ச்சி தந்தது. குதிரைச் சவாரி அவர்கள் உடலுறுதி பெற உதவி செய்தது.

குழந்தைகள் அனைவரும் இந்த வருடம் ஆழமான ஏரியில் குளித்தபடி நன்றாக நீந்துவதற்குக் கற்றுக் கொண்டனர். பாதுகாப்பான துறையொன்றைக் குளிப்பதற்காகத் தேர்ந்தெடுத்தேன். ஒவ்வொரு முறையும் ஒரு குழந்தையுடன் நான் நீந்தி வருவேன்.

புல்லறுக்கும் பருவ நாட்கள் குறிப்பாகக் களிப்பு தரும் நாட்களாய் இருந்தன. புல்லை உலர்த்துவதிலும் அதனைப் போர் போடுவதிலும் பெரியவர்களுக்கு நாங்கள் உதவினோம். மாலை நேரத்தில் போரின் உச்சியில் உட்கார்ந்து கொள்வோம். இந்த நேரம் குழந்தைகளுக்கு விசேஷக் கவர்ச்சி தந்தது. நட்சத்திரங்களைப் பற்றியும், தொலைதூர உலகங்கள் பற்றியும் கதை கேட்க விரும்பினார்கள் அவர்கள். நட்சத்திரக் குடும்பத்துக்குக் கீழே பிரபஞ்சத்துடன் நேருக்கு நேர் நிற்பதாய் உணர்ந்தனர். ஆசிரியரை நோக்கிக் கேள்வி கேட்டனர்: ''பூமி, சூரியன், நட்சத்

திரங்கள் இவையெல்லாம் எங்கிருந்து வந்தன?'' அழகுக்கும், இயற்கை மகத்துவத்துக்கும் முன்னுல், பகுத்தறிவும் உணர்ச்சிகளும், வியப்புக்கும் ஆச்சரியத்துக்கும் உள்ளாகும்போதுதான் இத்தகைய கேள்விகள் குழந்தைகள் உணர்வில் தோன்றுகின்றன என்று நான் திட்டவட்டமாக நம்புகிறேன்.

நட்சத்திர உலகங்களைப் பற்றிய கதைகளில் ஒன்றைக் கேட்ட பின்னே ''அதற்கும் அப்பால் என்ன இருக்கிறது?'' என்று குழந்தைகள் கேட்ட கேள்வியை நான் ஒருபோதும் மறக்க மாட்டேன். நமது கண்ணுக்குத் தெரிகிற நட்சத்திர உலகங்களுக்கு அப்பாலும் இதே போலப் பிரபஞ்சங்களே இருக்கின்றன என்றும் இவை எண்ணிலடங்கா நட்சத்திர உலகங்களைக் கொண்டதென்றும் கேட்டு வியப்புற்ற குழந்தைகள் ''பிரபஞ்சம் எங்கேதான் முடிகிறது?'' என்று கேட்டனர். எல்லையற்றது பிரபஞ்சம் என்பது அவர்களுக்கு மிகவும் நினைத்தற்கரிய ஒன்ருக இருந்தது. இந்த உண்மையால் திகைப்படைந்த குழந்தைகள் மௌனமுற்று, எல்லையின்மையை மனக்கண்ணுக்குக் கொண்டு வர முயன்றனர். அது அவர்களால் முடியவில்லை. அன்றிரவு சிறுவர்கள் நீண்ட நேரம் தூங்கவில்லை; தொலைதூரத்துச் சூரியனும் கிரகங்களும் பலருக்குக் கனவில் வந்தன. அடுத்த நாள் சிறுவர்களும் சிறுமிகளும் அவர்களுக்குத் திகைப்பூட்டிய வினவுக்கே மீண்டும் மீண்டும் வந்தனர்:''எல்லையற்றது என்பது என்ன?'' இந்தக் கேள்வி அந்தப் பள்ளியாண்டுகள் முழுத்திலும் எனது மாணவர்களுக்கு வியப்புத் தரும் புதுமையாகவே இருந்தது.

...''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' பயிற்சி தொடங்கிய முதல் நாட்களிலிருந்தே விளையாட்டுக்களுக்கு நான் பெரும் முக்கியத்துவம் கொடுத்து வந்தேன். உயர் வகுப்பு மாணவர்களின் உதவியுடன் விளையாட்டு மைதானத்தில் விளையாட்டுச் சாதனங்கள் கொண்டு வந்து வைத்தோம், ஊஞ்சல்கள் செய்வோம். எங்களிடம் எப்போதும் போதுமான அளவு பந்துகள் இருந்தன. இரண்டாம் வகுப்புப் படிக்கும்போதே குழந்தைகள் டென்னிஸ்

விளையாடத் தொடங்கினர். வட்டு வீச்சு, பந்தெறிவது, கயிற்றுக் கம்பத்தில் ஏறுவது ஆகியவற்றில் அக்கறை காட்டினர்.

கோடைகாலம் முழுதும் குழந்தைகள் வெறுங் காலுடனேயே நடந்தனர். அவர்கள் மழைக்கு அஞ்சவில்லை. இது தான் உடலுறுதிக்கான முக்கியமான அம்சம் என்று நான் கண்டேன். முதல் வகுப்பிலும் இரண்டாம் வகுப்பிலும் அழற்சி நோய்களால் குழந்தைகள் மூன்று தடவை பாதிக்கப்பட்டனர். மூன்றும் நான்காம் வகுப்பில் ஒருவரும் நோய் வாய்ப்படவில்லை.

சளிப் பிடிக்கிற எல்லா சாத்தியப்பாடுகளையும் வராமல் தடுப்பதற்கு ஏற்பப் பயிற்றுவிப்பது விசேஷமாக முக்கியமானது என்று நான் கருதினேன். இந்த விஷயம் பல ஆண்டுகள் எனது நிம்மதியைக் குலைத்தது: காலநிலை திடீரென்று மாறுகின்ற போது குழந்தைகளில் பாதிப் பேர் தும்மிக் கொண்டிருந்தனர். குழந்தைக்குக் காய்ச்சலடிக்கா விட்டாலும் கூட இத்தகைய நோய்ப்பட்ட நிலையில் அவனால் வேலை செய்ய முடியாது. சளியைத் தீர்த்து விடக் கூடிய தீவிர மருந்துகள் இல்லை. சளியில் பலவிதமானவை தொற்று நோய்களல்ல என்று விஞ்ஞானம் நிரூபித்திருக்கிறது. சுற்றுச் சூழலில் ஏற்படுகிற திடீர் மாறுதலுக்கு நுண்ணுணர்வு கொண்ட உடலுறுப்பு பதிலளிக்கிற விதமே இது. கால்கள் விசேஷமாக நுண்ணுணர்வு கொண்டவை என்று பல்லாண்டுச் சோதனை காட்டியுள்ளது. மிகச் சிறு அளவு குளிருக்கும் கூட கால்கள் பயப்படுமானால் தொற்று நோயல்லாத சளி பிடித்துக் கொள்ளும். எங்கள் போதனைப் பணியில் உருவான உடலுறுதிப் பயிற்சி கால்களுக்கு வலுவூட்டுவதில்தான் தொடங்குகிறது. குழந்தையின் பொதுவான உடல் நலமும் இதில் கண்டிப்பாகக் கணக்கில் எடுத்துக் கொள்ளப் படுகிறது. கால்களுக்கு உறுதியூட்டு வதற்கு விசேஷப் பயிற்சிகள் எதுவும் குறிப்பிட்ட காலத்திற்குத் தரப் படுவதில்லை. பொதுவான வேலை முறையைத் தொடர்ந்து கவனித்து வர வேண்டியது அவசியமாகும். செயற்கை வெப்பச் சூழலுக்குக் குழந்தையைப் பழக்கி

விடக்கூடாது. உடலுறுப்பில் இருக்கக் கூடிய நோய் எதிர்ப்புத் தன்மையை பலவீனமாக்கி விடக் கூடிய அனுவசியமான அக்கறைகளைத் தவிர்க்க வேண்டும். வெய்யில் காலத்தில் வெறுங் காலுடன் குழந்தை நடக்கவில்லை என்றால் எந்தக் குளியலும், எத்தகைய ஈரத் துண்டுக் குளியலும் அவனுக்குப் பயன் தராது.

...இவ்வாறாக குழந்தைகள் தொடக்கப்பள்ளியை முடித்து விட்டனர். விடுமுறையின் கடைசி நாள். ஏரியில் குளித்த பின்னே, உறுதியான, வெய்யில் காய்ந்த, அழகானவர்களான குழந்தைகள் பசும் புல்வெளியில் கூடியுள்ளனர். அவர்களுக்கு 11 வயது. ஆனால் 12—13 வயது பலசாலிகளாகக் காட்சியளிக்கிறார்கள் அவர்கள். அனைவராலும் பொடியன் என்று அழைக்கப்பட்ட சின்னஞ்சிறிய தன்கோ கூட உயரத்தில் ஐந்தாம் வகுப்பு மாணவர்கள் அனைவரையும் போலவே இருந்தான்.

ஒவ்வொரு ஆண்டும் குழந்தைகளின் கண்கள், இதயம், நுரையீரல் ஆகியவற்றை டாக்டர் பரிசோதிப்பார். முதல் வகுப்பில் பார்வைக் கோளாறு உள்ள சிறுவர்கள் பலர் இருந்தனர். இரண்டாம் வகுப்பில் இருவர் இருந்தனர். மூன்றாம் வகுப்பில் ஒருவரும் இல்லை. பார்வைக் கோளாறு என்பது கண்ணில் தோன்றும் நோயல்ல என்று அனுபவம் எடுத்துக் காட்டியிருக்கிறது. உடல் வளர்ச்சிக்கும் உள்ளத்து வளர்ச்சிக்கும் இடையில் இசைவான ஒற்றுமை உடலில் இல்லாததன் விளைவே இது. முதல் இரண்டாண்டுகளில் நடந்த மருத்துவப் பரிசோதனைகளில் மூன்று குழந்தைகளின் இருதய நாளங்கள் பலவீனமாய் இருக்கிற அறிகுறிகள் தென்பட்டன ப்ளூரிஸி அழற்சியின் பின்விளைவுகள் இருவரிடம் காணப்பட்டன. இருவரிடம் மூச்சுக் குழல் அழற்சியின் அறிகுறிகள் தெரிந்தன. க்ஷயரோகத்து நோய் மறைவான வடிவில் ஒரு குழந்தையிடம் இருக்குமோ என்ற சந்தேகம் வந்தது. வகுப்புகள் முடியும் போது இருதய நாளத்தின் பலவீனத்திற்கான அறிகுறி ஒரேயொரு குழந்தையிடமே காணப்பட்டது. இதுவும் கூட முதல் இரண்டாண்டு காலப் பயிற்சியின் போது காணப்பட்டதை விட வெகு குறைவாகவே இருந்தது.

## ஆன்மிக வாழ்வின் ஒரு துளியே கல்வி கற்றல்

பள்ளிக்கு வருவதற்கு முன் குழந்தைகளைச் சுற்றி நின்ற இயற்கை, விளையாட்டு, அழகு, இசை, கற்பனை, படைப்புத் தொழில் ஆகியவற்றைக் கொண்ட வியத்தகு உலகத்தை வகுப்பறைக் கதவு மூடிவிடக் கூடாது என்பது மிக முக்கியமாகும். பள்ளி வாழ்க்கையின் முதல் மாதங் களிலும் ஆண்டுகளிலும் நடக்கிற ஒரேயொரு வேலையாக படிப்பு ஆகி விடக் கூடாது. எந்த மகிழ்ச்சிகள் குழந்தை யிடம் முதலில் இருந்தனவோ அவற்றை ஆசிரியர்கள் தாராளமாக அள்ளித் தந்தால்தான் குழந்தை பள்ளிக் கூடத்தை விரும்புவான். அத்தோடு கூடவே குழந்தை மகிழ்ச்சிகளுக்கு மட்டுமே படிப்பு வகை செய்யக் கூடாது. குழந்தைக்குச் சலிப்பாகத் தோன்றக் கூடாது என்பதற் காக உணர்வு பூர்வமாக படிப்பை எளிதாக்கி விடக் கூடாது. மனித வாழ்வின் மிகப் பிரதான விஷயமான காரியப் பற்றுள்ள, விடாமுயற்சியுடைய, சுறுசுறுப்பான உழைப்புக்குக் குழந்தையைச் சிறுகச் சிறுகத் தயார் படுத்த வேண்டும். அழுத்தமான சிந்தனையின்றி இது சாத்திய மில்லை.

அழுத்தம் நிறைந்த, படைப்பாற்றல் மிக்க மூளை உழைப்புக்குப் படிப்படியாகப் பழக்கப் படுத்துவதுதான் பிரதானமான போதனைப் பணி என்று நான் கருதினேன். ஆசிரியர் கொடுத்த,அல்லது தனக்குத் தானே முன்வைத்துக் கொண்ட குறிக்கோளை நிறைவேற்றுவதற்குத் தனது அறிவு முயற்சிகளை திருப்பிக் கொள்வதற்கேற்றபடி, குறிப் பிட்ட நேரத்தில் சுற்றியுள்ள விஷயங்களிலிருந்து தன்னை விலக்கிக் கொள்கிற திறமையைக் குழந்தை பெற்றிருக்க வேண்டும். இவ்வாறு கவனத்தை ஒருமுகப்படுத்தக் குழந்தைகள் பழகிக் கொள்ள வேண்டும் என்பதற்காக நான் முயற்சி செய்தேன். இத்தகைய நிலைமையில்தான் மூளை உழைப்பு விருப்பமுள்ள வேலையாக விளங்கும்.

உடல் ரீதியான கஷ்டங்களை மட்டுமின்றி, அறிவாற்றல் பூர்வமான கஷ்டங்களையும் கடப்பதற்குக் குழந்தைகளுக்கு

மெல்ல மெல்ல கற்றுக் கொடுப்பதுதான் தொடக்கப் பள்ளியின் பணியாகும். அறிவார்ந்த முயற்சிகளில் அழுத்தம், வஸ்துக்கள், உண்மைகள், தோற்றங்கள் ஆகிய வற்றின் விதவிதமான சிக்கல்கள், நுண்ணிய தன்மைகள், விவரங்கள், முரண்பாடுகள் ஆகியவற்றுக்குள் ஊடுருவிப் பார்த்தல் ஆகியவற்றைக் கொண்ட அறிவாற்றல் உழைப் பின் சாரத்தைக் குழந்தைகள் புரிந்து கொள்ள வேண்டும். மாணவர்களுக்கு அனைத்தும் எளிதாகக் கிட்டி விடுமாறும், கஷ்டம் என்பது என்னவென்றே குழந்தை அறியாதவாறும் ஒருபோதும் செய்து விடக் கூடாது. அறிவு தருகிற நிகழ்ச் சிப் போக்குடனேயே, கலாசாரத்தையும் அறிவாற்றல் உழைப்பில் சுய ஒழுங்கையும் குழந்தைக்குக் கற்றுத் தர வேண்டும். ஆசிரியரின் செல்வாக்கும் சுயபயிற்சியும் ஒன்று கலப்பதைக் கொண்ட ஆன்மிக வாழ்வின் ஒரு பகுதிதான் அறிவாற்றல் போதனையாகும். அறிவுச் சக்தியை ஒரு முனைப்படுத்துவது, கிரகித்துக் கொள்வது, சுயகட்டுப்பாடு ஆகியவற்றை ஒரு குறிக்கோளாக சிந்தனு பூர்வமாய்த் தன் முன்னே ஒருவர் வைத்துக் கொள்வதிலிருந்துதான் மனவுறுதிப் போதனை தொடங்குகிறது. கடினமானது என் ருல் என்ன என்று அறிவாற்றல் உழைப்பிலே குழந்தைகள் புரிந்து கொள்வதுதான் முக்கியமான போதனைப் பணி என்று எனக்குத் தோன்றியது.

கல்வி கற்றலில் அனைத்துமே எளிதாக மாணவனுக்குக் கிட்டி விடுமாளுல், அவன் சிந்தனையில் சோம்பேறித் தனம் படிப்படியாக வளர்ந்து விடும். இது மனிதனைக் குட்டிச் சுவராக்கி வாழ்க்கையின் மீது ஒரு பொறுப்பற்ற தன்மை யை அவனிடம் உருவாக்கி விடும். கல்விப் பயிற்சி எனும் நிகழ்ச்சிப் போக்கு சக்திக்குட்பட்ட கஷ்டங்களை குழந்தை களிடம் தோற்றுவிக்கவில்லை என்றுல் திறமை மிக்க குழந்தைகளிடமே சிந்தனைச் சோம்பல் அடிக்கடி தோன்று கிறது என்பது விசித்திரமானதே. மற்ற குழந்தைகளுக்குக் குறிப்பிட்ட அளவு அழுத்தம் நிறைந்த அறிவாற்ற லால் கிட்டுகிற விஷயத்தை, எளிதாக எட்டி விடுகிற குழந்தை, வெட்டியாகப் பொழுது போக்கிக் கொண்

டிருந்தால் இளம் வகுப்புக்களிலேயே இந்தச் சிந்தனைச் சோம்பல் வளருகிறது. மாணவர்கள் வெட்டியாகப் பொழுது போக்காமல் இருக்குமாறு செய்வது ஒரு விசேஷ மான போதனைப் பணியாகும்.

எங்கள் முதல் வகுப்பு தனியான சிறு வீட்டில் நடந்து வந்தது. நாங்கள் பாடம் பயின்ற பெரிய, வெளிச்சமான அறையின் சன்னல்கள் கிழக்கேயும் மேற்கேயும் பார்த்துக் கொண்டிருந்தன. வகுப்பறையில் எப்போதும் நிறைய வெளிச்சம் இருக்கும். சன்னங்களுக்கு அருகே கொட்டை மரங்கள். அதற்கப்பால் ஆப்பிள் மரங்கள், பேரி மரங் கள், ஏப்பிரிக்காட்டு மரங்கள். இன்னும் அப்பால் ஓக் மரச் சோலை. நாங்கள் இருந்த வீட்டை மட்டுமின்றி மற்ற வகுப்புகள் நடந்த வீடுகளையும் பசுமை மூடி இருந்தது. மரங்களின் இலைகள் காற்றில் ஏராளமான பிராணவாயு வைச் செலுத்துகின்றன. பள்ளித் தோட்டத்தில் எப் போதும் அமைதி தவழும். எங்கள் வகுப்பறையை ஒட்டி பெரிய நடைகூடம் இருந்தது. இது இன்னொரு அறைக்கு இட்டுச் சென்றது. இங்கே கற்பனாலங்கார அறை ஒன்றை உருவாக்க வேண்டுமென்று கனவு கொண்டோம்.

எங்கள் வீட்டு வாசல் முன்னே, செருப்புகள் கழுவு வதற்குப் பயன்பட்ட சிறு காங்கிரீட் சதுக்கம் ஒன்று இருந் தது (பிடித்து வைக்கப்பட்டிருந்த மழைத் தண்ணீர் இதற்கு உபயோகமாயிற்று). பீச் மரங்கள் லின்டன் மரங் கள் செஸ்ட்நட்டு மரங்கள் ஆகியவை இருமருங்கும் நிற்கிற சில பாதைகள் இந்தச் சதுக்கத்திலிருந்து செல்கின்றன. பள்ளிக்கூட முற்றத்தின் நடுவில் இருந்த பெரிய திராட்சைத் தோட்டத்திற்கு இட்டுச் சென்றது ஒரு பாதை. இரண்டு ஐந்தாம் வகுப்புகள் இருந்த அண்டை வீட்டுக்கு இரண்டாவது பாதை இட்டுச் சென்றது. பசும் புல்வெளிகளுக்கும் சோலைகளுக்கும் சென்றது மூன்றாவது பாதை. புதர்கள் மண்டியிருந்த பள்ளத்தாக்குக்கு நான் காவது பாதை போயிற்று.

முதல் வகுப்பும் இரண்டாம் வகுப்பும் தனிக் கட்டடத் தில் நடப்பது நல்லது என்று எனக்கு அப்போதே தோன்

றியது. படிப்பு, வேலை, ஓய்வு ஆகியவற்றுக்கான நேரம் அவர்களுக்குக் குறிப்பாக முதல் வகுப்புக்குத் தனிவகை யானதாகும். பெரிய குழுக்களுக்கு உரியதாய் இருக்கும் கூச்சல்களையும் சத்தடிகளையும் இளம் வகுப்புக் குழந்தை களிடம் அனுமதிக்கக் கூடாது. முழுமையான அறிவு வளர்ச்சிக்கு அவசியமான அமைதியை எவ்வளவு முடி யுமோ அவ்வளவு நீண்ட காலத்துக்குச் சின்னஞ் சிறு மாண வர்கள் அனுபவிக்கட்டும். பள்ளியில் குழந்தையைச் சுற்றி இருக்கிற சூழல் பள்ளி வாழ்க்கையின் முதல் நாட்களில் அதற்குத் திகைப்பூட்டுகிறது என்று பல ஆண்டுகளாக நடத்திய சோதனை எடுத்துக் காட்டுகிறது. குழந்தைகட்கு மூளை உழைப்பு ஏற்படுத்துகிற களைப்பை விட இடைவேளை களிலும் பாடம் துவங்குவதற்கு முன்பும் எழுகிற கூச்சல் கள், பரபரப்புகள், சந்தடிகள் ஆகியவை தருகிற உள்ளக் கிளர்ச்சி அதிகமாகக் களைப்பூட்டுகிறது. பெரிய இடை வேளையின் போது முதல் வகுப்பு மாணவர்கள் நடந்து கொள்கிற விதத்தை ஐந்து வருட காலம் நான் கவனித்து வந்தேன். பெரியதான பள்ளிக் குழுவின் கூச்சல்கள் கூப் பாடுகள், நெரிசல்கள், சந்தடிகள் ஆகியவற்றிடையே அரை மணி நேரம் இருக்கிறார்கள் குழந்தைகள். இடை வேளை முடிந்து விடுகிறது. வகுப்புக்குத் திரும்புகிறார்கள் மாணவர்கள். குழந்தைகளை அமைதிப்படுத்துவதற்காகப் பாடநேரத்தில் பத்து நிமிடத்தை அனுபவம் வாய்ந்த ஆசி ரியர்கள் செலவிடுகிறார்கள். முதல் வகுப்பு மாணவர்கள் தமது சிறு குழுவுடன் ஓய்வு கொள்கிற இடத்தில் வேறு மாதிரியான காட்சியைப் பார்க்கிறோம். இங்கு குழந்தை களை அமைதிப் படுத்தவும், அவர்களது மனக் கிளர்ச்சியை அமிழ்த்தி விடவும் இரண்டு நிமிடத்திற்கு மேல் செலவாக வில்லை.

கட்டுப்பாடற்ற கூச்சல்கள், பரபரப்புக்கள் ஆகியவை பள்ளிக்கூடத்தின் நல்ல அம்சங்கள் அல்ல. குழந்தைக் களிப்பு எனும் ஆறு எவ்வளவுதான் நிரம்பி வழிந்த போதும் வெள்ளப் பெருக்கையும் விருப்பங்களையும் கட்டுப் படுத்துகிற கரை அதற்கு இருக்கத்தான் வேண்டும்.

பசுமை சுற்றி நிற்கிற வசதியான, தனியான ஒரு சிறு வீட்டில் முதல் இரண்டாம் வகுப்புக்கள் இப்போது நடைபெறுகின்றன. மாணவர்களுக்காக உருவாக்கப்பட்டுள்ள சூழல், உழைப்பும் ஓய்வும் மாறி மாறி வருவதற்கு வகை செய்கிறது.

முதல் வாரங்களில் குழந்தைகளுக்குப் புதியதான ஒரு வாழ்க்கைக்குள் அவர்களை மெல்ல மெல்ல அழைத்துச் சென்றேன். ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தை'' விட கல்விப் பயிற்சி அதிகமாக ஒன்றும் வேறுபட்டிருக்கவில்லை. நான் இதற்காகத்தான் முயன்று வந்தேன். செப்டம்பர் மாதத்தில் ஒரு நாளைக்கு நாற்பது நிமிடத்திற்கு மேல் நாங்கள் வகுப்பறையில் உட்கார்ந்திருக்கவில்லை. அக்டோபரில் இரண்டு மணி நேரத்துக்கு அதிகமாயில்லை. இந்த வகுப்பு நேரத்தை எழுத்துப் பயிற்சிக்கும் கணக்குப் பயிற்சிக்கும் உபயோகப் படுத்திஞேம். மீதமுள்ள இரண்டு மணி நேரத்தைத் திறந்த வெளியில் கழித்தோம். உண்மையான **பாடத்துக்காக** (வகுப்புப்பாடத்தை அவர்கள் இப்படி அழைத்தார்கள்) அவர்கள் ஆவலுடன் காத்திருந்தனர். இந்த ஆவல் கண்டு சந்தோஷம் கொண்ட நான் நினைத்தேன்: ''புழுக்கம் நிறைந்த வகுப்பறையில் இருப்பதால் களைப்புற்றுப் போன உங்களைப் போன்ற மாணவர்கள் மணியடிப்பதற்காக எப்படிப் பொறுமையிழந்து காத்திருக்கிறுர்கள் என்று மட்டும் உங்களுக்குத் தெரிந்தால்...''

உழைப்பு, ஒழுக்கம், உடலுறுதி, அறிவாற்றல் ஆகியவற்றில் குழந்தைகள் முழுமையான பயிற்சி பெறுவதற்கு அத்தியாவசியமான நிபந்தனை, வகுப்புப் பாடங்களுக்கு அவர்களைப் படிப்படியாகத் தயார் படுத்துவதே. பல்வேறு சூழல்களில் வேலை செய்வதற்கு மனிதனைப் பயிற்றுவிப்பதே இறுதிக் குறிக்கோளாகும். விருப்பமிருக்கிறதோ இல்லையோ நீ கண்டிப்பாக இணங்கியே ஆக வேண்டிய ஏதோ ஒரு வருந்தத்தக்க அவசியமல்ல வகுப்புப் பாடங்கள். குழந்தையின் மூளை உழைப்புக்கேற்ற சிறந்த சூழலை நல்குகின்றன வகுப்புப் பாடங்கள். ஆனுல் இந்தச் சூழலுக்குக் குழந்தையைச் சிறுகச் சிறுகத் தயார் படுத்த

வேண்டும். இதுதான் இளம் வகுப்பு மாணவர்களைப் பயிற்று விப்பதில் இருக்கிற விசேஷமாகும். வகுப்பறையில் ஒரு நாளைக்கு நாலு மணி நேரம் வேலை செய்யுமாறு குழந்தை களைத் திடுமென்று நிர்பந்தித்தால், அறிவாற்றல் உழைப் புக்கு மிகச் சிறந்ததாக எதிர்காலத்தில் விளங்கக் கூடிய சூழல், குழந்தையின் ஆரோக்கியத்துக்குப் பெரும் கேடு விளைவிப்பதாய் முடியும்.

வகுப்பறையில் நாங்கள் அரிச்சுவடி படித்தோம். வட் டங்கள், கோடுகள், எழுத்துக்கள் வரைந்தோம். கணக்கு கள் போட்டு விடை கண்டு பிடித்தோம். இவையெல்லாம் குழந்தைகளின் பன்முகப்பட்ட ஆன்மிக வாழ்விற்குள் மெல்ல மெல்ல நுழைந்தன. ஒரே மாதிரி வேலை செய்து அவர்களுக்கு அலுப்பேற்படவில்லை. அரிச்சுவடியிலிருந்து திரும்பத் திரும்ப, படித்ததையே பல முறை படிக்கவில்லை. குழந்தைகள் அனைவருக்கும் எழுத்துக்கள் நன்ருகத் தெரிந் தன. படிக்கிற முறையைச் செம்மைப் படுத்துவதற்காக பலவிதமான தீவிர நடவடிக்கைகளை நான் மேற்கொண் டேன். இயற்கையைப் பற்றி குட்டி வியாசங்களை கற்பனை செய்து எழுதினார்கள் குழந்தைகள். இது அரிச்சுவடி யிலிருந்து ஒரே வாசகத்தைத் திரும்பத் திரும்ப வாசிப் பதால் கிடைக்கும் படிக்கிற திறனை விட மிக வேகமாக அத்திறனை வளர்த்து விட்டது.

அவசியமான படிக்கிற முறை ஒன்று ஒவ்வொரு குழந் தையிடமும் செம்மையுறுவதற்காக நான் பாடு பட்டேன். பயிற்சிகளோ,படிப்பதற்கான குறிப்பிட்ட அளவோ இன்றி இதில் முன்னேற்றம் எதுவும் கிட்டாது. எழுத்துக்களையும் அசைகளையும் சொற்களையும் மட்டும் தெரிந்திருந்தால் போதாது. படிப்பது உலகத்தை நோக்கித் திறந்திருக்கும் ஒரு சாளரம். கல்விப் பயிற்சியில் மிக முக்கியமான கருவி. வேகமாகவும், விரைவாகவும் படிக்க வேண்டும். அப் போதுதான் இந்தக் கருவி வேலைக்குத் தயாராய் இருக்கும். பல்வேறு விதமான தீவிரச் செயல்கள்—பொருள்வளத் தோடு படிப்பது, எழுதுவது, வரைவது—படிப்பதை அனே கமாக பாதியளவுக்கு ஒரு தானியங்கும் நிகழ்ச்சிப் போக்

காக மாற்றி விட வேண்டும் என்பதற்காக நான் முயற்சி செய்தேன். அப்போதுதான், இரண்டாம் வகுப்பிலேயே பல அசைச் சொற்கள் பார்வையாலேயே முழுமை யானவையாகக் கிரகித்துக் கொள்ளப்பட வேண்டும் என்பதற்கு நான் முயன்றேன். இயற்கையைப் பற்றிக் குழந்தைகள் குட்டி வியாசங்கள் எழுதுமாறு செய்தேன், இத்தகைய வேலையில் குழந்தைகள் உற்சாகமுள்ள ஈடுபாடு காட்ட வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். இவையெல்லாம், நன்ருகப் படிப்பதற்குக் குழந்தை கட்குக் கற்றுத் தருவது எனும் ஒற்றைக் குறிக்கோளை எட்டுவதற்காக நான் மேற்கொண்ட ''போதனு முறை வழிகளாகும்.''

பாட நேரத்தின் போது செய்யப்பட்ட பல்வேறு வித மான உழைப்புக்களை இத்தகைய ''வழிகளில்'' ஒன்ருகக் கருதலாம். முதல் வகுப்பின் ஆரம்ப நாட்களிலேயே ''சுத்த மான'' படிப்புப் பாடம், எழுத்துப் பாடம், கணக்குப் பாடம் ஆகியவை இருக்கக் கூடாது என்று சோதனை காட்டி யுள்ளது. ஒரே மாதிரியான வேலை சீக்கிரம் களைப்பூட்டி விடுகிறது. குழந்தைகள் களைப்படையத் தொடங்கியவுடனேயே, நான் புதிய வேலை முறையை மேற்கொள்ள முயன்றேன். பயிற்சியின் பலவகைத் தன்மைக்கு சக்தி வாய்ந்த சாதனமாகத் திகழ்ந்தது படம் வரைவது ஆகும். குழந்தைகள் களைப்புறத் தொடங்குவதைப் பார்க்கிறேன். உடனே நான் சொல்கிறேன்: ''குழந்தைகளே சித்திர நோட்டுக்களைத் திறவுங்கள். நாம் படிக்கிற கட்டுக் கதை யைப் படமாக வரைவோம்.'' களைப்பின் முதல் அறிகுறி களே மறைந்து விடுகின்றன. குழந்தைகளின் கண்களில் மகிழ்ச்சிச் சுடர் ஒளிர்கிறது. ஒரே மாதிரியான வேலை படைப்புத் தொழிலால் மாற்றமுறுகிறது... கணக்குப் பாடத்தின் போதும் இதே போன்ற காட்சியைக் காண லாம்: தாஞகச் செய்கிற வேலைக்கென்று கொடுக்கப் பட்ட கணக்கைக் குழந்தைகள் புரிந்து கொள்ள சிரமப்பட்டனர் என்று காண்கிறேன். படம் வரைகிற படைப்புத் தொழில் உதவிக்கு வருகிறது. கொடுக்கப்பட்ட பயிற்சியைக் குழந்

தைகள் இன்னொரு முறை படிக்கிறார்கள். பின்பு அதனைப் ''படமாக வரைகிறார்கள்''. இதுவரை எட்ட முடியாத தாக இருந்த சார்புத் தன்மைகள் இப்போது புரிந்து போகிறது... தொடர்ந்து காதால் கேட்டுக் கொண்டிருப் பதும் களைப்புத் தருகிறது. குழந்தைகளின் கண்கள் மங்கு வதைக் கண்ணுற்ற நான், சொல்லிக் கொண்டிருந்த கதைக்கு முற்றுப்புள்ளி வைத்து விடுகிறேன். நாங்கள் சித்திரம் வரையத் தொடங்குகிறோம்.

பள்ளியாண்டு தொடங்கிய மூன்று வாரங்களுக்குள் ளேயே எனது மாணவர்கள் இயற்கையைப் பற்றிய படப் புத்தகங்கள் உருவாக்கத் தொடங்கினர். ஒவ்வொரு குழந் தைக்கும் கெட்டி அட்டை போட்ட, அழுத்தமான இருபது காகிதங்கள் கொண்ட நோட்டுப் புத்தகம் ஒன்றை உயர் வகுப்பு மாணவர்கள் செய்து கொடுத்தனர். அட்டை யுடன் பென்சில் ஒன்று இணைத்திருந்தனர். சிந்தனையின், வார்த்தையின் ஊற்றுக்கண்களுக்கு நாங்கள் வாரம் ஒரு முறை செல்லுவோம். அப்போது சுற்றியுள்ள உலகம் பற்றிய ஒரு கதையைப் படமாக வரைவோம். சில காலத் திற்குப் பின்பு பழங்கள் கனிகிற ஆப்பிள் மரங்கள் நிறைந்த தோட்டத்திற்கு முதலில் நாங்கள் சென்றோம். புலனறிவு கள், மனத்தோற்றங்கள் ஆகியவற்றின் தனியுலகம் பிரதி பலிக்கிற கதைகளை உருவாக்கினார்கள் சிறுவர்கள்.

''ஆப்பிள்கள் பூமி மீது சாய்கின்றன'', ''ஆப்பிள்கள் வெய்யில் காய்கின்றன'', ''பசிய இலைகளுக்கு நடுவே சிவப்பு ஆப்பிள்கள்'', ''ஆப்பிளிடம் சூரியன் கொஞ்சு கிறது, மரக்கிளை அதனை ஊஞ்சலாட்டுகிறது'', ''வசந்த காலத்தில் வெண்ணிறப் பூக்கள், இலையுதிர் காலத்தில் பொன்னிற ஆப்பிள்கள்'', ''ஆப்பிளின் வீட்டுக்கு விருந் துக்கு வந்திருக்கிறோம்''—இவ்வாறெல்லாம் குழந்தை கள் தமது படப் புத்தகத்தில் தலைப்புகள் கொடுத்திருந் தனர். குழந்தைகள் தமது குட்டி வியாசங்களை வகுப் பறையில் படித்துக் காட்டினர். இது அளவற்ற திருப்தியை அவர்களுக்குத் தந்தது. தோட்டத்தில் பாடம் கற்பது பாடம் கற்க வேண்டும் என்பதற்காகவே அல்ல. சுறுசுறுப்

பான, அழுத்தம் நிறைந்த, எதிர்காலத்து மூளை உழைப்புக்கு அரியதொரு சாதனமாக அவர்கள் இயற்றிய குட்டி வியாசங்கள் விளங்கும். முதல் வகுப்பிலிருந்தே—(குறிப்பாக இரண்டாம் வகுப்பிலிருந்து) ஒவ்வொரு குழந்தையும் தனது சொந்தப் பயிற்சியாக ஏதாவது ஒன்றைச் செய்து வர வேண்டும், செய்து முடிக்க வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். மூளை உழைப்பில் ஒரு கட்டுப்பாட்டைப் பயிற்றுவிப்பதற்கு இது மிகவும் அவசியமாகும்.

முதல் வருடப் படிப்பின் போது படப்புத்தகங்கள் அனைத்தும் பட வியாசங்களால் நிறைந்தன. சிவப்பு ஸ்னோபால் மரம் (snowball tree) தானிய அறுவடை, உறங்கிப் போன ஏரி (உறங்கிப் போன ஏரி என்று அவர்கள் சொல்லக் காரணம் இங்கு நாங்கள் பயணம் வந்த பொழுதெல்லாம் ஏரித் தண்ணீர் கண்ணாடிபோல, சுத்தமாய், அமைதியாய் இருந்ததே ஆகும்); பள்ளித் தோட்டத்தில் குழந்தைகள் எப்படி வேலை செய்தார்கள், சூரியன் மறைகிற போது தெரிகிற கருஞ்சிவப்பு வானம், இலையுதிர் காலத்து முதல் பனித்துளிகள், மூட்டம் நிறைந்த இலையுதிர் கால மழை நாள், 1917ஆம் வருட மாபெரும் அக்டோபர் சோஷலிஸ்டுப் புரட்சியின் ஆண்டு விழா, எங்கள் கிராமத்து வாழ்க்கை, முதல் பனி, ஜனவரி மாதத்து பனிப் புயல், ஆறுகளையும் ஏரிகளையும் கட்டிப் போட்டு விருகிற கற்பனைக்கதைப் பனித்தாத்தா, பிப்ரவரி மாதத்துப் பனித் துளிகள், மார்ச்சு மாதத்தில் வெண்பனியில் தெரிகிற ஊதா நிழல்கள், முதல் வெண்மலர், வெப்பப் பிரதேசத்திலிருந்து மிகச் சீக்கிரம் திரும்பி வந்து மார்ச்சு மாதத்துப் பனிப்புயலில் திடுதிப்பென்று மாட்டிக் கொள்கிற மைனாக்கள், வேறிடம் செல்லும் பறவைகளின் மகிழ்ச்சி துள்ளும் வசந்தகாலக் கூட்டங்கள் (மகிழ்ச்சி துள்ளும் வசந்தகாலக் கூட்டங்கள் — இவை குழந்தைகளின் வார்த்தைகள்), கடிய கோடை நாளில் கேந்திப் பூக்களிடம் விடை பெற்றுக் கொள்ளுவதற்காகப் பறந்து

செல்கிற தேனீக்கள் ஆகியவை பற்றியெல்லாம் குழந்தைகள் வியாசங்கள் வரைந்தனர்.

இயற்கையைப் பற்றிய படப் புத்தகங்கள் எங்கள் குழுவின் தனிப்பட்ட, கவிதைச் சிறப்புக் கொண்ட பாடப் புத்தகமாகத் திகழ்ந்தன. பிறந்த மண்ணின் இயற்கை, பூ, வானம் ஆகியவற்றின் சங்கீதம், வார்த்தை, மணம் ஆகியவற்றின் நுண்ணிய வேறுபாடுகள் முதலியன இப் பாடப்புத்தகத்தில் பிரதிபலித்தன. எந்த மகிழ்ச்சி இல்லாமல் ஆன்மிக வாழ்வுக்குள் கல்விப் பயிற்சி நுழைய முடியாதோ, அந்த மகிழ்ச்சியாக இவை விளங்கின.

குழந்தையுடன் வகுப்பில் கழித்த நேரத்தை வகுப்புப் பாடங்களால் அளக்க வேண்டுமென்ருல், பள்ளியாண்டின் முதலிரண்டு மாதங்களில் தினந்தோறும் ஒரு பாடமும், மூன்று—நான்கு மாதங்களில் இரண்டு பாடங்களும், ஐந்து—ஆறு மாதங்களில் இரண்டரைப் பாடங்களும், ஏழு—எட்டு மாதங்களில் மூன்று பாடங்களும் நடந்ததைக் காணலாம். இரண்டு இடைவேளைகளுக்கு இடையே நடந்த பாடத்தின் நேரம் முதலிரண்டு மாதங்களில் 30 நிமிடமாகவும், பின்னர் 45 நிமிடமாகவும் இருந்தது. இடைவேளைக்கு முன்னே குழந்தை வெளியே போக வேண்டியதாயிருந்தால் அனுமதி கேட்டுக் கொண்டு அவன் வெளியே போஞன். ஆசிரியர் சொல்லிக் கொண்டிருக்கிற விஷயத்துக்கு நடுவில் தடங்கல் ஏற்படுத்தக் கூடாதென்ருல் அனுமதியின்றியே அவன் வெளியே போவான்: வெளியே போக வேண்டியது மாணவனுக்கு அவசியம் என்று ஆசிரியர் கண்டால் மௌனமாக அனுமதி அளிப்பார். மிகப் பெரும்பாலோருக்குப் படிப்பு நேரம் எளிதாக இருக்கையில், இதற்குப் பழகிக் கொள்ளுவதற்குச் சில குழந்தைகளுக்குக் கஷ்டமாய் இருந்தது. தோல்யா, காத்யா, கோஸ்த்யா, ஷூரா ஆகியோர் விரைவில் களைத்துப் போயினர். முன்னை விட சுதந்திரமான நடவடிக்கை இப்போது மிகக் குறைவு என்றும், குறிப்பிட்ட வேலை முறையால் அது கட்டுப்படுத்தப் பட்டிருக்கிறது என்றும் உணர்ந்தபடி வகுப்பில் அமர்ந்திருப்பதால் அனுபவிக்கிற சிரமமே

அவர்களை விரைவில் களைத்துப் போக வைக்கிறது. விருப்பங்கள் அனைத்துக்கும் ''ஆமாம்'' போடுவது கூடாது என்பது சொல்லாமலே விளங்கும். சுறுசுறுப்பான காரியப் பற்றுள்ள உழைப்புக்கு எல்லா மாணவர்களையும் பயிற்றுவிப்பது அவசியமாகும். அதே நேரத்தில் குழந்தையின் விருப்பங்களையும் பழக்கங்களையும் திடீரென்று முறித்துவிடவும் கூடாது. இந்தக் குழந்தைகள் பாடத்திற்கு நடுவே எழுந்து போவதற்குச் சில வாரங்கள் நான் அனுமதித்தேன். சுறுசுறுப்பான உழைப்புக்கு அவர்களைச் சிறுகச் சிறுகப் பழக்கப் படுத்தினேன். கல்வியாண்டு தொடங்கிய மூன்று — நான்கு மாதங்களிலேயே பள்ளியில் வேலை நேரத்தை ஒழுங்காகக் கடைப்பிடித்தனர்.

இலையுதிர்காலத்தின் வெய்யில் நிறைந்த நாட்களில், புல்வெளியில், உயரமான ஆப்பிள் மரங்களுக்கு நடுவே ''பசுமை வகுப்புக்கள்'' ஒன்றில் நாங்கள் பாடம் பயின்றோம். சில ஆண்டுகட்கு முன்பு உயர் வகுப்பு மாணவர்களுடன் சேர்ந்து கயிறுகளையும் கம்பிகளையும் கொண்டு எதிர்காலத்துப் பசுமை வகுப்புக்கான கூடு ஒன்று கட்டினோம். உயர்ந்து படரும் ஹாப் கொடிகளையும், நாட்டுத் திராட்சைச் செடிகளையும் இங்கு நட்டிருந்தோம். இரண்டு ஆண்டுகள் கழித்து கொடிகள் கூரை கட்டி பசிய அறையை உருவாக்கி இருந்தன. பலப்பல ''சன்னல்கள்'' போதுமான வெளிச்சத்தைத் தந்தன. வெய்யில் நாட்களில் இங்கு குளுகுளுவென்று இருந்தது, இலையுதிர் காலத்தில் வெதுவெதுப்பாகவும் வசதியாகவும் இருந்தது. ''பசுமை வகுப்பில்'' எப்போதும் அமைதி கோலோச்சிக் கொண்டிருக்கும். ஹாப் கொடிகளின் கிளைகளால் சன்னல்களை மூடி விடலாம். அப்போது பாதி இருட்டு பசுமையாய் வரும். இலைகளுக்கு இடையே இருந்த துவாரங்களின் வழியாக ஒளியும் நிழலும் கலந்த அற்புத விளையாட்டாக சூரியக் கதிர்கள் ஒளிரும். ''கற்பனைக் கதைக்காகக் கதவினை மூடுவது'' என்று இதனைக் குழந்தைகள் அழைத்தனர். பசுமை வகுப்பில் சிறு சிறு மேசைகளும் பெஞ்சிகளும்

இருந்தன. இங்கு குழந்தைகள் படித்தனர், எழுதினர், கணக்குப் போட்டனர்.

புல்வெளிதான் இரண்டாவது ''பசுமை வகுப்பு'' ஆகும். இது மூன்று புறமும் பனிக் குளிரைத் தாங்கக் கூடிய ஒரு வகை திராட்சைக் கொடிகளால் சூழப்பட்டிருந்தது. கடுமையான வெய்யிலில்—வசந்த காலத்திலும் இலையுதிர் காலத்திலும் வெய்யில் நாட்கள் எங்கள் பகுதியில் அபூர்வமல்ல—இங்கு குளுகுளுவென்று இருக்கும்.

பள்ளத்தாக்கை ஒட்டி பச்சை மரங்களுக்கிடையே, அடர்ந்த சோலைகளில் இன்னுமொரு ''பசுமை வகுப்பு'' எங்களிடம் இருக்கிறது. பள்ளிக் கட்டிடத்திற்கு இனி மேல் திரும்ப வேண்டிய தேவையில்லாத கடைசி வகுப்பின் போது நாங்கள் இங்கு வருவோம். ஆண்டு முழுதும் நடந்த வகுப்புக்களில் சுமார் 40 சதவீதம் பள்ளி அறைக்குள் அல்லாமல் ''பசுமை வகுப்பிலேயே'' நடந்தது. மீதமுள்ள 60 சதவீதத்தில் கணிசமான பகுதி வகுப்புக்கள் ''பசுமை ஆய்வகத்திலும்'' பள்ளிக்கூட மூடு தோட்டத்திலும் நடந்தன. மரங்களாலும் திராட்சைக் கொடிகளாலும் நாற்புறமும் சூழப்பட்டுள்ள ஒரு தனிக் கட்டிடம் தான்'' பசுமை ஆய்வகம்'' ஆகும். இதில் பாடங்கள் நடத்துவதற்கான அறை ஒன்று இருந்தது. இந்த அறையில் ஏராளமான செடிகொடிகள் இருந்தன.

இயற்கையின் நடுவே, திறந்த வெளியில், நீல வானத்துக்குக் கீழே பாடங்களில் கணிசமான பகுதியை நடத்தினேம் என்பது குழந்தைகளுக்குச் சிறப்பான முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்கியது. பாடம் நடக்கிற வேளையில் குழந்தைகள் சுறுசுறுப்பானவர்களாயும் உற்சாகம் மிக்கவர்களாயும் விளங்கினர். பாரமான தலையுடன் ஒரு போதும் அவர்கள் வீடு திரும்பியதில்லை.

பாடங்கள் முடிந்த பின்பு குழந்தைகள் வீட்டில் ஓய்வெடுத்துக் கொண்டனர். பாட நேரத்தில் குழந்தைகளைத் களைத்துப் போகாமல் இருப்பதற்காக என்னதான் நடவடிக்கைகளை நாம் மேற்கொண்டாலும் குழந்தை மிகவும் களைத்துத்தான் போகிறது. பாட நேரத்துக்குப் பின் அது ஓய்

வெடுக்க வேண்டியது அவசியமாகும். காலையில் பள்ளியில் மேற்கொள்கிற கடுமையான மூளை உழைப்பைப் போல பிற்பகலில் குழந்தை உழைக்கக் கூடாது என்று பல்லாண்டு அனுபவம் எனக்கு எடுத்துக் காட்டி இருக்கிறது. மேலும் இளம் வயதுக் குழந்தையின் மீது அதிகமாக வேலைப்பளுவைச் சுமத்தக் கூடாது. பள்ளியில் குழந்தை மேற்கொண்ட மூன்று—நான்கு மணிநேரக் கடும் உழைப்புக்குப் பின்பு வீட்டிலும் குழந்தை அதே போலக் கடுமையாக வேலை செய்தால் விரைவில் அவன் வலுவிழந்து போவான்.

வீட்டுப்பாடம் செய்யாமல் இருக்க முடியாதுதான். அறிவாற்றல் முயற்சிகளை ஒன்று சேர்த்து, கவனத்தை ஒரு முனைப்படுத்துவதற்குக் குழந்தைக்குக் கற்றுத் தர வேண்டும். ஆனால், சுயேச்சையான மூளை உழைப்புக்குப் பழக்கப்படுத்தியபடி பாடநேரத்தில் தான் இதனைச் செய்ய வேண்டும். கவனமாகவும் ஒருமுனைப்பட்டும் வேலை செய்யக் கற்றுக் கொள்வது குழந்தைக்கு எளிதல்ல. தான் சொல்லுகின்ற விஷயத்தை, விளக்கத்தை, உரையை குழந்தையின் கவனத்துடன் பிணைத்து விடுகிற காரியத்தை மாணவர்களின் மீது செல்வாக்குச் செலுத்துகிற விசேஷ முறைகளால் அனுபவம் வாய்ந்த ஆசிரியர் செய்வதில்லை. பாடத்தின் உள்ளடக்கத்தால் தான் இதனை அவர் நிறைவேற்றுகிறார். தனது சக்தியை ஒன்று திரட்டுகிறோம், ஆசிரியர் சொல்வதைக் கவனமாகக் கேட்பதற்கும், ஞாபகத்தில் கொள்வதற்கும் யோசிப்பதற்கும் தன்னைத் தானே நிர்பந்திக்கிறார் என்று ஆரம்ப நாட்களில் குழந்தை உணராத வண்ணம் ஆசிரியர் சொல்வதைக் குழந்தை கவனமாகக் கேட்குமாறும், நினைவில் கொள்ளுமாறும், சிந்திக்குமாறும் செய்வதுதான் இளம் வயதில் மூளை உழைப்பை ஒழுங்கமைக்கிற திறனாகும்.

போதகர் இதில் வெற்றி கண்டாரானால் குழந்தையிடம் அக்கறையைத் தூண்டிவிட்ட அனைத்தையும், அதற்கு வியப்பூட்டிய விஷயங்களை இன்னும் அதிகமாகவும், குழந்தை நினைவில் வைத்துக் கொள்ளும். எழுத்துக்களை இவ்வளவு விரைவாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவும்,

எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளவும் எனது குழந்தை களுக்கு எப்படி முடிந்தது? இவ்வாறு செய்ய வேண்டும் என்ற குறிக்கோள் அவர்கள் முன் வைக்கப்படவில்லை என் பதே இதற்குக் காரணம். ஒவ்வொரு எழுத்தும் குழந் தைக்கு அற்புத உணர்வைத் தோற்றுவிக்கிற, பிரகாச மான சித்திரத்தின் உருவகமாகத் திகழ்ந்தது. பள்ளி வயதுக்கு முந்திய சிறுவர்களுக்கு ஒவ்வொரு நாளும் ''அறிவுத் துண்டு'' ஒன்றைத் தந்திருந்தால்—எழுத்தொன் றைக் காட்டி இவனை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் என்று சொல்லியிருந்தால் ஒரு பயனும் கிட்டியிருக்காது. குழந்தையிடமிருந்து குறிக்கோளை ஒளித்து வைத்துவிட வேண்டும் என்று இதற்குக் கண்டிப்பாகப் பொருளல்ல. குறிக்கோளைப் பற்றிக் குழந்தைகள் சிந்திக்காமலிருக்கு மாறு அவர்கட்குக் கல்வி புகட்ட வேண்டும். இது மூளை உழைப்பை எளிதாக்கும். மேம்போக்காகப் பார்க்கிற போது தோன்றுகிறபடி இது ஒன்றும் எளிய வேலையல்ல. குழந்தையின் அறிவாற்றல் வளர்ச்சியில் ஒரு குறிப்பிட்ட கட்டத்தைப் பற்றி நாம் பேசுகிறோம். மனிதனுடைய நரம்பு மண்டல அமைப்பின் இளமைப் பருவம் என்று விஞ்ஞானிகள் இந்தக் கட்டத்தை அழைக்கிறார்கள். இந்தக் காலத்தில்—பள்ளிக் கல்வியின் ஆரம்ப ஆண்டுகளில், குறிப்பாக முதல் ஆண்டுக் கல்வியின் போது—குழந்தை யால் கவனத்தை ஒருமுகப்படுத்தவே முடியாது.. குழந் தையின் கவனத்தை ஆசிரியர் கையாள வேண்டும். தன்னிச்சையற்ற கவனம் என்று உளவியலில் கூறப்படுகிற ஒன்றை குழந்தையிடம் ஆசிரியர் உசுப்பிவிட வேண்டும்.

சிறு குழந்தையின் கவனம் ஒரு முரண்டு பிடிக்கிற ''ஜீவனாகும்''. கூட்டுக்கு அருகே யாராவது நெருங்குகிற போது கூட்டை விட்டுத் தூரப் பறந்து போகிற அச்சம் நிறைந்த பறவை போன்றது இந்தக் கவனம் என்று எனக்குத் தோன்றுகிறது. பறவையைக் கடைசியாகப் பிடித்தே விடுகிற போது கையிலோ கூண்டிலோதான் அதனை வைத் திருக்க முடியும். தான் ஒரு சிறைக்கைதி என்று பறவை உணர்ந்தால் அதனிடமிருந்து பாடலை எதிர்பார்க்காதே.

அப்படிப்பட்டதுதான் குழந்தையின் கவனமும். பறவைக் கைதியைப் போல அதனை நீ பிடித்து வைத்திருந்தால் கேடு செய்யும் உதவியாளனுகவே அது விளங்கும்.

பாட நேரத்தில் குழந்தைகளிடையே ''தொடர்ச்சியான, அறிவாற்றல் இறுக்கம் நிறைந்த சூழலைத்'' தோற்றுவிக்கத் தம்மால் முடிவது ஒரு சாதனை என்று கருதுகிற ஆசிரியர்கள் இருக்கிருர்கள். குழந்தையின் கவனத்துக்கும் கடிவாளம் போடுகிற வெளிக்காரணங்களால்தான் இது சாத்தியமாகிறது: அடிக்கடி நினைவு படுத்துவது (''கவனமாய்க் கேட்டுக் கொள்''), ஒரு விதமான வேலையிலிருந்து மற்ருெரு வித வேலைக்குத் திடீரென்று மாறுவது, விளக்கம் தந்தவுடனே சோதிப்பது வரக்கூடும் எனும் பயமுறுத்தல் (சரியாகச் சொன்னுல், நான் சொல்லுவதைக் கவனமாக நீ கேட்கவில்லையென்ருல் உனக்கு இரண்டு மார்க்கு தான் போடுவேன் என்று பயமுறுத்துவது), ஏதாவது கோட்பாடு பூர்வமான கூற்று ஒன்றை விளக்கியவுடனே, நடைமுறைப் பயிற்சி செய்து நிறைவேற்றுமாறு நிர்ப்பந்திப்பது ஆகியவற்ருல் இது சாதிக்கப்படுகிறது.

தீவிரமான மூளை உழைப்பு நடைபெறுவது போல ஒரு தோற்றத்தை இந்த முறைகள் உண்டாக்குகின்றன என்று மேம்போக்காகப் பார்க்கையில் தெரியும். பலவண்ணக் காட்சிக் கருவியில் மாறி மாறி வருவது போல, வேலைகளும் மாறி மாறி வருகின்றன. கவனத்தை ஒருமுகப் படுத்திய குழந்தைகள் ஆசிரியரின் ஒவ்வொரு வார்த்தைக்கும் செவி மடுக்கிருர்கள். வகுப்பில் இறுக்கம் நிறைந்த அமைதி. ஆனுல், இதெல்லாம் எப்படி வந்தது? எத்தகைய விளைவுகளை இது ஏற்படுத்தும்? வெறெதிலும் திரும்பி விடாத கவனம் செலுத்துவதற்காகச் செலவழிக்கப்படும் இறுக்கம் நிறைந்த சக்தி—இந்த வயதில் மாணவன் கவனத்திற்குள்ளாகுமாறு தன்னைத் தானே நிர்பந்திக்க முடியாதவன்—களைப்பூட்டி, அலுப்பேற்படுத்தி, மாணவனை வலுவிழக்கச் செய்து விடுகிறது. தீவிரமான அறிவாற்றல் உழைப்புச் செய்யாமல், ஒரு நிமிடத்தைக் கூட, ஒரு கணத்தைக் கூட விட்டு விடாமலிருப்பது என்பது, மனிதனைப் பயிற்று

விக்கிற நுண்ணிய காரியத்தில் புரிகிற பெரிய அசட்டுத் தனமாகும். ஆசிரியரின் வேலையில் காட்டப்படுகிற இது போன்ற ஒருமுனைப்பாடு, குழந்தைகள் எதையெல்லாம் தரமுடியுமோ அதையெல்லாம் இறுக்கிப் பிழிந்து விடுவ தாகப் பொருள்படும். இத்தகைய ''பயன் மிக்க'' பாடங் களுக்குப் பின்னே குழந்தை களைத்துப் போய் வீடு திரும்பு கிறது. அவன் சீக்கிரம் எரிச்சலடைகிறான், உணர்ச்சிவசப் படுகிறான். அவனுக்கு நல்ல ஓய்வு கிடைக்க வேண்டும். ஆனால் வீட்டுப்பாடம் வேறு இருக்கிறது. புத்தகங்கள் இருக்கிற பையைப் பார்த்த மாத்திரத்தில் குழந்தை கட்குக் குமட்டுகிறது.

மாணவர்கள் மரியாதையின்றி ஆசிரியர்களிடம் நடந்து கொள்வது, ஒருவருக்கு ஒருவர் முரட்டுத் தனம் காட்டுவது, கண்டனம் செய்தால் துடுக்குத்தனமாக பதி லிறுப்பது ஆகிய ஒழுங்கீனங்கள் பலப்பல முறை காணப் படுவது ஏதோ தற்செயலானதல்ல. இதன் காரணமாக தகராறுகள் முளைக்கின்றன. குழந்தைகளின் நரம்பாற்றல் எல்லையற்ற அளவுக்கு இறுக்கப்பட்டிருக்கிறதல்லவா? ஆசி ரியரும் ஏதோ மின்னணு இயந்திரமல்லவே! பல்வண்ணக் காட்சிக் கருவியில் வருவது போல, மாறி மாறி வரும் வேலையின் ஒரு ''உயர்ந்த பயன்மிக்க'' அமைப்பில், பாட நேரம் முழுதும் வகுப்பின் கவனத்தை இழுத்துப் பிடித்துப் பாருங்கள்! பாடம் முடிந்து வீடு திரும்புகிற குழந்தைகள் அடிக்கடி கடுகடுப்பான முகத்துடனும், பேச்சேதுமின்றி யும், எல்லாவற்றையும் அலட்சியமாய்ப் பார்த்தபடியும், அல்லது எதைக் கண்டாலும் எரிச்சலுறுவதும் தற்செய லானதல்ல.

குழந்தைகளின் கவனத்தையும், ஒருமுனைப்பாட்டை யும், அறிவாற்றல் செயல்களையும் இவ்வாறு பெற முயலவே கூடாது. மாணவர்களின், குறிப்பாக இளவயது மாணவர்களின் அறிவாற்றலும் நரம்புச் சக்தியும், இறைத் துக் கொண்டே இருக்கக் கூடிய அடியற்ற கிணறு அல்ல. இந்தக் கிணற்றிலிருந்து அறிவுடனும், எச்சரிக்கையாக வும் நீர் இறைக்க வேண்டும். மிகவும் பிரதானமானது

என்னவென்றால் குழந்தையின் நரம்பாற்றல் ஊற்றுக்கண்ணைத் தொடர்ந்து நிறைத்துக் கொண்டே இருக்க வேண்டும். சுற்றியுள்ள உலகத்துப் பொருள்களையும் தோற்றங்களையும், இயற்கையின் நடுவே வாழ்க்கையையும் கூர்ந்து கவனிப்பது, அக்கறையைத் தூண்டி விடக்கூடியவற்றைப் படிப்பது, கேள்வி கேட்பார்களோ என்ற பயமின்றி எதையாவது அறிந்து கொள்ள வேண்டும் என்கிற விருப்பம், உயிருள்ள சிந்தனை, வார்த்தை ஆகியவற்றிற்கு மேற்கொள்ளும் ''பயணங்கள்'' ஆகியவையே இவ்வாறு நிறைக்கிற ஊற்றுக்களாகும்.

உள்ளத்தின் சமநிலை என்று அழைக்கத் தக்க, எட்டுதற்கரிய ஒரு வஸ்து பள்ளிக் குழுவின் வாழ்க்கையில் இருக்கிறது. இந்தக் கருத்தில் நான் பின்கண்ட உள்ளடக்கத்தை வைக்கிறேன்: வாழ்க்கையை முழுமையைக் குழந்தைகள் உணருவது, சிந்தனைத் தெளிவு, தமது ஆற்றலில் நம்பிக்கை, கஷ்டங்களைச் சமாளிப்பது சாத்தியமே எனும் மனவுறுதி. ஒரு நோக்கத்துடன் செய்யப்படுகிற உழைப்பில் அமைதியான சூழல், சீரான, தோழமை மிக்க பரஸ்பர உறவுகள், எரிச்சலடையாமல் இருப்பது ஆகியவை உள்ளத்தின் சமநிலைக்கே உரிய சிறப்புத் தன்மையாகும். உள்ளத்தின் சமநிலையின்றி சாதாரணமாக வேலை செய்வது சாத்தியமில்லை. இந்தச் சமநிலையில் முறிவு ஏற்படும் போது குழுவின் வாழ்க்கை நரகமாக மாறிவிடுகிறது, மாணவர்கள் ஒருவர் மனத்தை ஒருவர் புண்படுத்துகிறார்கள், ஒருவருக்கொருவர் எரிச்சலூட்டுகிறார்கள், பள்ளியில் அமைதியின்மை கோலோச்சுகிறது. எந்த முறையில்—இதுதான் முக்கியமானது—உள்ளத்தின் சமநிலையைக் கட்டிக் காப்பது? பாய்ச்சல்களோ, விரைவுகளோ, மனச் சக்தியின் முறிவுகளோ இல்லாமல் நிகழ்கிற, களைப்புத் தராத தொடர்ச்சியான சிந்தனை நடவடிக்கையே கல்விப் பயிற்சியின் மிக நுண்ணிய அம்சத்தில் பிரதானமானது என்று சிறந்த போதனை வல்லுனர்களின் அனுபவம் எனக்கு எடுத்துக் காட்டியிருக்கிறது.

ஒவ்வொரு மாணவனிடமும் இருக்கும் நல்லெண்ணம்,

பரஸ்பர உதவி, அறிவுத் திறன்களின் இசைவு, சக்திக்குட் பட்ட அவனது உழைப்பு ஆகியவை உள்ளத்தின் சம நிலைக்கு அவசியமாகும். உள்ளத்தின் சமநிலையை ஏற்படுத்து வதில் கை தேர்ந்த உண்மையான வல்லுனர்களான பலப் பல ஆசிரியர்களுக்குக் கைவந்த போதனைக் கலையை நான் மிகக் கவனமாகப் பயின்றேன். எனது கருத்தில் மிகவும் புத்தி சாதுர்யம் நிறைந்த, அதே நேரத்தில் மிகவும் இயற் கையானதாய் இருந்த வஸ்துவின் ''ரகசியத்தை'' கண்டு பிடிக்க முயன்றேன்: தனது சக்தியின் முழு அளவையும் ஒவ்வொரு குழந்தையும் அவர்களிடம் கற்றுக் கொள் கிறது. சிறப்பாகப் படிக்கக் கூடிய, ஆனால் சுமாராகப் படிக்கிற ஒரு குழந்தை கூட இல்லை. மூன்று மார்க்கு வாங்கு கிறவன் துரதிருஷ்டத் தலைவிதி படைத்தவன் என்று கருதுவதோ, நண்பர்கள் அவனை பரிதாப உணர்ச்சியோடு அணுகுவதோ இல்லை.

சிறந்த மார்க்குகள் வாங்க வேண்டுமென்று வெறி பிடித்து அலைவது பற்றி எப்போதும் நான் கவலையுடன் சிந்தித்து வந்தேன். குடும்பத்தில் பிறக்கிற இந்த வெறி போதகர்களைப் பற்றிக் கொண்டு, பள்ளி மாணவர்களின் இளம் உள்ளங்களில் பளுவான பாரமாய் நின்று அவர்களை அலைக்கழிக்கிறது. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் சிறந்த மார்க்கு வாங்குவதற்கான திறமை இருப்பதில்லை. பெற் றோர்களோ அவன் ஐந்து மார்க்கு வாங்கியே தீர வேண் டும் என்கிறார்கள், ரொம்ப மோசமாகப் போனால் நான்கு மார்க்கை ஒத்துக் கொள்வார்கள். மூன்று மார்க்கு வாங் கிய துரதிருஷ்டசாலியான மாணவன் அனேகமாக ஒரு குற்றவாளியாகி விட்டது போல உணருகிறான். அனுபவம் வாய்ந்த போதகர்களிடம் இவ்வாறு நிகழ்வதில்லை. ஐந்து மார்க்குப் பெறுகிறவர்கள் தம்மை அதிருஷ்டசாலிகளாக வும், மூன்று மார்க்கு வாங்குகிறவர்கள் தாம் முழுமையற்ற வர்கள் என்ற உணர்ச்சியால் ஒடுக்கப் படுவதாகவும் கருதுவது இல்லை. புத்திசாலித்தனமான, ஒருமுனைப்பா டுள்ள, அறிவாற்றல் உழைப்புக்கான மெய்யான திறமை யை இத்தகைய உண்மையான ஆசிரியர்களிடம் நான்

கற்றுக் கொண்டேன். எனது அபிப்பிராயத்தில் போதனைக் கலையின் மிக நுண்ணிய அம்சத்தை—குழந்தைகளின் இதயத்திலும் அறிவிலும் உலகை அறிகிற ஆனந்தத்தின் அறிவாற்றல் உணர்ச்சியைத் தட்டியெழுப்புகிற திறமை யை—கண்டு கொண்டேன். உண்மைக் கண்டுபிடிப்புடனும், ஆராய்ச்சியுடனும், அறிந்து கொள்வதுடனும் தொடர் புடைய மிகிழ்ச்சி தரும் ஆன்மிக எழுச்சி கொண்டே, இந்த ஆசிரியர்களின் ஒவ்வொரு குழந்தையும், எந்தவொரு மிகச் சாதாரண வெற்றியையும் ஈட்டியது. போதனைக் கலை வல்லுனர்களது அனுபவத்தின் தங்கத் துகள்களைப் பொதுமைப் படுத்திய நான், மதிப்பெண்கள் பெறுவதற் காகக் குழந்தை உழைக்கக் கூடாது என்பதற்காகவும் அறி வாற்றல் உணர்ச்சியின் அலைகளை அனுபவிக்கிற விருப்பத் துடனேயே அது உழைக்க வேண்டும் என்பதற்காகவும் பாடு பட்டேன். எங்கள் குழந்தைக் குழுவில் ஐந்து மார்க்கு வெறி இல்லை என்பதும், அதே போலத் தீமை பயக்கும் நோயான, மூன்று மார்க்கு கண்டு உணர்ச்சி வசப் படுவது இல்லை என்பதுமே எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது.

...ஒவ்வொரு வாரத்திலும் சில பாடங்களை தாய் மொழி வார்த்தையின் ஊற்றுக்கண்களுக்குப் ''பயணங் கள்'' மேற்கொள்வதற்காக ஒதுக்கினோம். இயற்கையுடன் நேரடித் தொடர்பு ஏற்படுத்துகிற ஒன்றாக இது விளங் கியது. இந்தத் தொடர்பு இல்லையேல் குழந்தையின் அறி வாற்றல் திறனும், நரம்புச் சக்தியும் நிறைந்திருக்கிற கிணறு விரைவில் வற்றிப் போகும். வெப்பம் நிறைந்த காலநிலையில் இலையுதிர்காலத்தில், வசந்த காலத்தில், கோடைகாலத்தில் விடிவதற்கு வெகு நேரத்துக்கு முன் னேயே நாங்கள் பயணம் கிளம்பி விடுவோம்—கிராமத் துக் குழந்தைகளால் சீக்கிரம் துயிலெழ முடியும். சுற்றி யுள்ள உலகத்தின் இயற்கை, பொருள்கள், தோற்றங்கள் ஆகியவை பற்றிய கதை குழந்தைகளிடம் ஏற்கெனவே ஆவலைக் கிளப்பி விட்டிருந்தது. பலப்பல கேள்விகளுக்கு நான் பதில் சொல்ல வேண்டியதாயிற்று. அவற்றில் சிலவற் றை இங்கு தருகிறேன்: ''சூரியன் காலையில் ஏன் சிவப்

பாயும், மதியத்தில் தீப் பிழம்பாயும் இருக்கிறது? மேகங்கள் எங்கிருந்து வருகின்றன? டாண்டெலியன் பூ காலையில் ஏன் விரிகிறது, மதியம் ஏன் மூடிக் கொள்கிறது? இடியும் மின்னலும் எதனால் உண்டாகின்றன? மேற்கிலிருந்து மழையையும், கிழக்கிலிருந்து வரட்சியையும் காற்று ஏன் கொண்டு வருகிறது? சூரிய காந்திப் பூ சூரியனைப் பார்த்து ஏன் திரும்புகிறது, அது மனிதனைப் போல் பார்க்கவா செய்கிறது? இரும்பு துருப் பிடிப்பது ஏன்? புறா ஏன் மரத்தின் மேல் ஒருபோதும் உட்காருவதில்லை? மரம் இலைகளுடன் இருக்கும் போது, அதனைக் கோடைகாலத்தில் ஏன் பிடுங்கி வேறிடத்தில் நடக்கூடாது? வானத்திலிருந்து நட்சத்திரங்கள் எங்கே விழுகின்றன? வெண்பனித் துகள்கள் யாரோ சீவித் தள்ளியது போல அவ்வளவு அழகாக இருக்கக் காரணம் என்ன? பறவைகள் வெகு தொலைவு பறக்கின்றனவே, அவற்றுக்கு பாதை எப்படித் தெரிகிறது? நிலாவைச் சுற்றி வெள்ளை வட்டம் எப்படி வருகிறது? சூரியன் மறையும் போது ஆகாயம் சிவப்பு நிறமாய் இருக்கக் காரணம் என்ன? தேன் தேடிப் பறந்து செல்வதற்கு முன்னால் தேனீக்கள் ஏன் ''நடனமாடுகின்றன''? மரங்கள் தளிர் விடும் போது தோட்டங்களில் வைக்கோலைப் போட்டு எரிப்பது எதற்காக? காட்டில் எதிரொலி கேட்பது ஏன்? வானவில் என்பது என்ன? பனிக்காலத்தில் இடியும் மின்னலும் ஏன் வருவதில்லை? உப்புத் தண்ணீர் மிகக் கடும் குளிரில் மட்டும் உறைவது ஏன்? குழிமுயல்கள் ஏன் குழி தோண்டுகின்றன, சாதாமுயல்கள் ஏன் குழி தோண்டுவதில்லை? கோடை காலத்தில் பால் இருக்கிற குவளையைச் சுற்றி ஈரம் ஏன் படிகிறது? கடுமையான வெய்யிலிலும் அது ஏன் சூடேறுவதில்லை? மழை பெய்யத் தொடங்கும் முன்னே தூக்கணாங் குருவிகள் ஏன் வெகு தாழ்வாகப் பறக்கின்றன? வானம்பாடி தானியம் விதைக்கப்பட்ட வயலின் மீதும், மைனா, சிட்டுக்குருவி பறவை ஆகியன மரத்தின் மீதும் ஏன் கூடு கட்டுகின்றன? வாத்துக்கள் ஏன் நீந்துகின்றன, கோழிகள் ஏன் நீந்துவதில்லை? மெல்லிய நீளப் பட்டையாக ஆகாயத்தில் விமானம் இன்று ஏன் புகையை

விட்டுச் செல்கிறது, நேற்று ஏன் விடவில்லை? வானத்தி லிருந்து நட்சத்திரங்கள் ஏன் விழுகின்றன, அவை எங்கே விழுகின்றன? காற்று கம்பமாக, தூசிப் படலத்தை நீர்ச் சுழல் போல ஏன் உயர்த்துகிறது? வில்லோ மரம் ஏன் ''அழுகிறது''? வெண்மலர்ச் செடிகள் வசந்தகாலத் தொடக்கத்தில் மட்டும் ஏன் பூக்கின்றன? குளிர்காலக் கோதுமை வகையை இலையுதிர் காலத்திலும் வசந்தகாலக் கோதுமை வகையை வசந்தகாலத்திலும் ஏன் நடுகிறார் கள்? மின்மினிப் பூச்சிகள் ஏன் ஒளி விடுகின்றன? பசுமாட் டுக்கு ஒரேயொரு கன்றும் பன்றிக்குப் பல குட்டிகளும் இருக்கக் காரணம் என்ன? கோடை காலத்தில் உயரத் திலும், பனிக்காலத்தில் தாழ்வாகவும் சூரியன் இருப்பது ஏன்? பனி படிந்த கண்ணாடிகளில் அலங்கார உருவங்கள் எப்படித் தோன்றுகின்றன? இலையுதிர்காலத்தில் மரத்தில் இலைகள் ஏன் பழுத்துப் போகின்றன?''

இயற்கைத் தோற்றத்தின் சாரத்தை விரித்துக் காட்டு வதாக மட்டுமின்றி குழந்தைகளிடம் ஆர்வத் தீயையும் அறிந்து கொள்ளும் ஆவலையும் கிண்டி விடுகின்ற வண்ணம் நான் ஒவ்வொரு கேள்விக்கும் பதிலளித்தேன். குழந்தை களின் கேள்விகளுக்குக் கொடுக்கப் படுகிற பதில்கள், சுற்றியுள்ள உலகம் பற்றிய விவாதம் ஆகியவைதான் சிந்தனையின் முதல் பள்ளிக்கூடமாகும். சில கேள்விகளுக்கு எப்படிப் பதில் சொல்வது என்று எனக்குத் தெரியவில்லை. மேம்போக்காகப் பார்க்கையில் எந்த அளவுக்கு ஒரு கேள்வி எளிதாகத் தோன்றுகிறதோ, அந்த அளவுக்கு அதற்கு பதில் சொல்வது கடினமாய் இருந்தது. குழந்தைகளின் ''தத்துவஞானக்'' கேள்விகளுக்கு எப்படி பதிலிறுப்பது என்பது பற்றி ஆலோசனை செய்வதற்காக ஆரம்ப வகுப்பு ஆசிரியர்களான நாங்கள் அடிக்கடி கூடினோம். குழந்தைச் சிந்தனையின் மாயச் சுழலை ஆய்வு செய்வதற்காக மாலை நேரம் முழுவதையும் சில நாட்கள் செலவழிப்போம். ஆரம்ப வகுப்பு போதகர்களின்—குழந்தைச் சிந்தனை வல் லுனர்களின்—அனுபவம், எளிதாகவும் தெளிவாகவும் தோன்றுகிற விஷயத்துக்குள் பெரிய சிக்கல் அடிக்கடி

அடங்கி இருக்கிறது என்ற முடிவை எனக்குத் தந்தது. உதாரணமாக, ''குளிர்காலக் கோதுமையை இலையுதிர் காலத்திலும், வசந்தகாலக் கோதுமையை வசந்தகாலத்திலும் ஏன் நடுகிறார்கள்'' என்ற கேள்விக்கு விடையளிப்பது, கீழே வீழ்கிற எரிநட்சத்திரங்களைப் பற்றிய கேள்விக்கு விடையளிப்பதை விடக் கடினமானது. இயற்கை உலகுக்குள் ''பயணம்'' போகும் போதே வஸ்துக்களுக்கு இடையிலும், தோற்றங்களுக்கு இடையிலும் இருக்கிற காரண விளைவுத் தொடர்பைக் குழந்தைகள் கூர்ந்து கவனிக்க வேண்டும், அவற்றுக்கிடையே இருக்கிற சார்புத் தன்மையைக் காண்பதற்குக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதே முக்கியமான போதனைப் பணி என்று நான் கருதினேன்.

கடைசிப் பாடத்தின் போது ''பயணம்'' போக நேர்ந்தால், நாங்கள் பாடநேரத்துக்குப் பின்னே விளையாட்டில் ஈடுபட்டோம். குழுவின் விளையாட்டைக் குழந்தைகளே கண்டுபிடித்தனர். இயற்கைத் தோற்றங்களின் உலகம் கற்பனைக் கதையுடன் பின்னிப் பிணைந்திருந்தது. இதோ குழந்தைகளை விசேஷமாகக் கவர்ந்த ஒரு விளையாட்டு. ''புதிரான தீவைத் தேடுவது'' என்று இதற்குப் பெயர். நாங்கள் அனைவரும் இரண்டு குழுவாகப் பிரிந்தோம். காட்டின் கண்காணாத ஒரு மூலையில் ஒரு குழு இருக்கும். எங்களுக்கு மட்டும் தெரிந்த ஒரு கற்பனையான அடையாளச் சங்கிலிகளால் விளையாடுமிடத்தைச் சுற்றினோம்—மிருகங்கள் பலவற்றைக் கொண்ட குன்றுகள் நிறைந்த தீவுக் கரைதான் அது. அவர்கள் விபத்துக்குள்ளான கப்பலில் பயணம் செய்ததால் குழந்தைகள் புதிரான தீவில் தங்கி விடுகிறார்கள். சில இடங்களில் நன்கு மறைக்கப்பட்ட அடையாளங்கள் செய்தார்கள். தீவுக்குச் செல்வதற்கான குறுகிய பாதையை இது குறிக்கிறது (இரண்டு குழுக்களும் அடையாளங்கள் இடுவது பற்றி முன்னரே ஒத்துக் கொண்டன). விபத்துக்குள்ளான பயணிகளைக் காப்பாற்ற வேண்டும். காட்டிற்குள் நாலாபக்கமும் கலைந்து செல்கிறார்கள் குழந்தைகள். ஒவ்வொரு எட்டாக எடுத்து வைத்து கரையில் பல கிலோமீட்டர் தூரத்தை ஆய்வு செய்கிறார்கள்.

எந்த இடத்தின் வழியாகத் தீவுக்குச் செல்லலாம் என்று பார்க்கிறார்கள். கூரிய கண்களும், துணிவும் மட்டுமின்றி பலப்பல இயற்கைத் தோற்றங்களைப் புரிந்து கொள்ளவும், தர்க்க பூர்வமாகச் சிந்திக்கவும் திறன் பெற்றிருக்க வேண்டும். நேர்மையையும் நியாயத்தையும் விளையாட்டு பயிற்றுவிக்கிறது. தீவுக்குச் செல்லுவதற்கான புதிரான பாதைகளைக் கண்டுபிடித்து விடுகிறார்கள் குழந்தைகள், பயணிகளுக்கு உதவி வழங்குகிறார்கள், நோயாளிகளை மருத்துவமனைக்கு அனுப்பி வைக்கிறார்கள். விளையாட்டில் விமான மோட்டிகளும் மருத்துவர்களும் தோன்றுகிறார்கள். கப்பல் விபத்துக்குள்ளானவர்களும் உதவிக்கு வந்தவர்களுமாகச் சேர்ந்து கஞ்சி காய்ச்சுவதாக விளையாட்டு முடிகிறது. நாங்கள் முகாம் அடுப்புக்கருகே உட்கார்ந்திருக்கிறோம், நான் கற்பனைக் கதை ஒன்று சொல்கிறேன். இந்த நேரத்தில் சிறுவர்கள் பலர் கற்பனைக் கதையைப் படமாக வரைகிறார்கள், கற்பனை உருவங்களைப் பற்றிய தமது மனத் தோற்றங்களைப் படத்தில் வடிக்கிறார்கள்.

இயற்கைக்குள் நாங்கள் மேற்கொண்ட "பயணங்களின்" போது பிராணிகள், பறவைகள் ஆகியவற்றின் வாழ்க்கையைக் கூர்ந்து நோக்குவதில் பெரும் கவனம் செலுத்தினோம். எங்கள் முன்னே முற்றிலும் புதியதான, அற்புத உலகம் ஒன்று விரிகிறது. அமைதியான இலையுதிர் காலத்து நாட்களில், நீர்த் துறையை நோக்கிச் செல்கிற முள்ளம் பன்றியின் மந்தையை ஒளிந்து நின்று கூர்ந்து பார்த்தோம். வயதான முள்ளம் பன்றி தனது குழந்தைகளைப் பாதுகாத்துக் கொண்டு சென்றது. வசந்தகாலத்து நாட்களில் முயல்குட்டிகளைக் கவனித்தோம். அப்பொழுதுதான் பிறந்த முயல் குட்டியை விட்டு விட்டுப் போய் விடுகிற தாய் முயல் மீண்டும் குட்டியிடம் திரும்பி வராமல் இருந்து விடுவதையும், தற்செயலாக வருகிற ஏதாவது ஒரு பெண் முயல் உணவு கொடுக்கும் என்று குட்டி காத்திருப்பதையும் குழந்தைகள் கண்டனர். ஜூலை மாதத்தில் மரத் தவளைகளைக் கவனித்தார்கள் குழந்தைகள். ஒரு நாள் ஆளரவமற்ற இடத்

தில் நாங்கள் நரி வளை ஒன்றைக் கண்டோம். தனது சிறு குழந்தைகளை நடை போடுவதற்கு நரி கூட்டிச் செல்வதையும், அவற்றுக்கு ஓடக் கற்றுக் கொடுப்பதையும், அவற்றுடன் சேர்ந்து விளையாடுவதையும் குழந்தைகள் கண்டனர். காட்டின் அரவமற்ற ஒரு மூலையில் நீர்க்கீரிகளைக் கண்டோம்.

எங்கள் பயணங்களும், கவனித்தல்களும் சிந்தனையை வளமைப் படுத்தி, கற்பனையையும் பேச்சையும் வளர்த்தன. நடைபோடும் போதும் உல்லாசப் பயணங்களின் போதும் எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமாகக் கேள்விகள் குழந்தைகளிடம் தோன்றினவோ, அவ்வளவுக்கு அவ்வளவு இயற்கைத் தோற்றங்கள், உழைப்பு, தொலைதூர நாடுகள் ஆகியவை பற்றி வகுப்பு நேரத்தில் பேச்சு வரும் போது அறியத் துடிக்கும் ஆர்வமும், ஆவலும் வெளிப்பட்டன. இயற்கைக்குள் மேற்கொள்கிற ''பயணங்களுக்கு'' பின்னர், குழந்தைகளிடம் காணப்படுகிற மனக்கிளர்ச்சி நிலையைக் காண்கையில், ''வியப்பிலிருந்து தான் சிந்தனை தொடங்குகிறது'' என்னும் பண்டைய மூதுரையின் மெய்மையில் ஒவ்வொரு முறையும் மேலும் மேலும் திடவுறுதி கொண்டேன்.

இயற்கை தருகிற வியப்பும், உலகை அறிகிற மகிழ்ச்சியின் அனுபவமும் குழந்தைகளைத் தூண்டி விட்டு, ஊக்குவிக்கிற உந்துவிசையாக இருக்க வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். சிக்கலில்லாத கணக்கின் உள்ளடக்கத்தைக் கூட அதிக நேரம் கழித்தே கிரகித்துக் கொள்கிற மாணவர்களான வால்யா, பெத்ரிக், நீனு எங்கள் வகுப்பில் இருந்தனர். ஒவ்வொன்றுக்கும் தனக்குரிய காரணம் இருந்தது, ஆனால் விளைவு மட்டும் ஒன்றேதான்: இந்தக் குழந்தைகளின் மூளை அரைக் கோளத்தின் உயிரணுக்கள் ஏதோ ஒரு ஒடுக்கப்பட்ட நிலையில் இருந்தன. இந்தக் குழந்தைகள் வகுப்பில் சொல்லித் தரப்படுகிற விஷயங்களை அலட்சியப் படுத்தினர்.

இக்குழந்தைகளின் சிந்தனை நிகழ்ச்சிப் போக்கில் ஒரு குறைபாடு இருக்கிறது என்று அவர்களைக் கவனித்ததால்

தெரிய வந்தது. மூளை அரைக் கோளத்தின் உயிரணுக்கள் தொய்வுற்று, மந்தமாய் இருக்கின்றன என்கிற முடிவு இதிலிருந்து ஏற்பட்டது. சில பொருள்கள் அல்லது நிகழ்ச்சிகளுக்கு இடையில் இருக்கிற தொடர்பைக் கண்டுபிடிப்பதற்கு, குறிப்பாக அதனை நினைவில் கொள்வதற்குக் குழந்தைகளுக்குக் கஷ்டமாய் இருந்தது என்பதே இந்தக் குறையாகும். ஆப்பிள் பழங்கள், கூடைகள், குழந்தைகள் பற்றி பயிற்சி கொடுக்கப்படுகிறது. ஆப்பிள்களையும் கூடைகளையும் பற்றி குழந்தை சிந்திக்கும் பொழுது குழந்தைகளை மறந்து விடுகிறது. குழந்தைகளைப் பற்றி நினைவூட்டினால் ஆப்பிள்களையும் கூடைகளையும் மறந்து விடுகிறது. சுற்றியுள்ள உலகத்தில் இருக்கிற பொருள்களுக்கும் தோற்றங்களுக்கும் இடையில் நிலவும் தொடர்புக்கான காரண-விளைவு பற்றிய சிந்தனை ஆழப்படுவது, சிறிய கண்டுபிடிப்பு, உண்மை தருகிற வியப்பு முதலிய அனைத்தும் வால்யா, பெத்ரிக், நீனு ஆகியோரிடம் அளவற்ற மகிழ்ச்சியைத் தூண்டிவிட்டன. பெரியதொரு ஆன்மிக எழுச்சியைக் குழந்தைகள் அனுபவித்தனர். மகிழ்ச்சி மிக்க ஊக்கம் அவர்கள் கண்களில் ஒளிவிட்டது. அலட்சியம் மறைந்து போயிற்று, கற்கப்படுகிற பொருளில் ஆர்வம் தோன்றியது. உளநெகிழ்ச்சி வேறுபாடு தெளிவாகத் தெரிகிற பிரச்சினையைக் குழந்தையின் உணர்வில் தூண்டிவிட முடியுமானால், இந்த நேரத்தில், இதுவரை உறங்கிக் கொண்டிருந்த சக்திகள் நடவடிக்கையில் இறங்கினாற் போல குழந்தையின் மூளையில் கொந்தளிப்பு மிக்க நிகழ்ச்சிப் போக்குகள் நடைபெறும். அறிவு வளர்ச்சியில் மிகச் சிக்கலானதாக விளங்குகிற அம்சங்கள் குழந்தைகளிடம் விழித்துக் கொள்கின்றன: சொல்லப் படுகிற விஷயத்தை அது அக்கறையுடன் கேட்கிறது, பயிற்சியின் உள்ளடக்கத்தைக் கிரகித்துக் கொள்கிறது. நாங்கள் கடுமையான போதனைப் பணியை இன்னும் மேற் கொள்ள வேண்டி இருந்தது. அனுபவம் வாய்ந்த ஆரம்ப வகுப்பு ஆசிரியர்களுடன் எனது கருத்துக்களை நான் பகிர்ந்து கொண்டேன். இந்த வேலையை

பகுத்தறிவின் உளநெகிழ்ச்சி விழிப்பு என்று நாங்கள் அழைத்தோம்.

அறியப் படுகிற பொருளில் ஒரு அக்கறையைத் தோற்றுவிக்க ஆசிரியரால் முடிந்தால், வால்யா, பெத்ரிக், நீனு போன்ற மாணவர்கள் என்ன ஆவார்கள் என்று நான் நினைத்துப் பார்க்க முயன்றேன். உயிரியல் வல்லுனர்கள், உளவியல் வல்லுனர்கள், போதனைக் கலை வல்லுனர்கள், நரம்பு நோய் வல்லுனர்கள் ஆகியோரின் நூல்களை நான் படித்தேன். மூளை அரைக் கோளத்தின் உயிரணுக்களும் புறணிக்கடியிலுள்ள மையங்களின் உயிரணுக்களும் பரஸ்பரச் செயல் புரிவது பற்றிய சுவையான சிந்தனை ஒன்றை பிரபல விஞ்ஞானியான சி. பிராய்டின் (1856—1939) நூல்களில் கண்டேன். புறணியின் அடியிலுள்ள மையங்கள் மனித மன இயக்கத்தின் உளநெகிழ்ச்சி நிகழ்ச்சிப் போக்குகளை நிர்வகிக்கின்றன என்று ஆய்வாளர்கள் பலர் நிரூபித்துள்ளனர். இந்த மையங்கள் சிந்தனை செய்வதில் தீர்மானமான பாத்திரம் வகிக்கின்றன என்று பிராய்டு கருதினார். உணர்ச்சிகளையும் பகுத்தறிவையும் முறையே குதிரையுடனும் அதன் மீது சவாரி செய்பவனுடனும் விஞ்ஞானி ஒப்பிட்டார்; செல்லுகின்ற பாதையைக் குதிரையே (அதாவது உணர்ச்சிகளே—புறணிக்கு அடியிலுள்ள மையங்களே) நிர்ணயிக்கின்றது என்று அவர் கருதினார். தான் விரும்புகிற பக்கம் போகிறது குதிரை. வெகு தந்திரமாக குதிரை அவ்வாறு செய்வதால், சவாரி செய்பவனுக்குத் தானே குதிரையை வழிநடத்துவது போலத் தோன்றுகிறது. எனவே, பிராய்டின் கருத்தில் பிரதானமானது மூளைப் புறணி அல்ல புறணிக்கு அடியிலுள்ள பாகமே.

பிராய்டின் இவ்வளவு உறுதியான கருத்தை மறுத்துக் கூறிய மாபெரும் ருஷ்ய உடலியல் விஞ்ஞானியான இ. ப. பாவ்லவ் (1849—1936) அதே போதில் புறணியின் அடிப்பகுதிக்கு மிகப் பெரும் முக்கியத்துவமும் தந்தார். ''புறணியின் நடவடிக்கைக்குப் பிரதானமான தூண்டுதலைத் தருவது புறணியின் அடிப்பகுதியே. இந்த

உளநெகிழ்ச்சியை அகற்றி விட்டால் சக்தி தரும் பிர தான ஊற்றுக் கண்ணை இழந்து விடுகிறது புறணி'' என்று எழுதினார் அவர். ஆனால் மனித சிந்தனை, மனித நடத்தை ஆகியவற்றை பிரதானமாக ஒழுங்கு படுத்து வது மூளைப் புறணியே (குதிரையை நிறுத்துவதற்கும் வேறு புறம் திருப்புவதற்கும் சக்தி பெற்றவன் சவாரி செய்பவனே) என்று பாவ்லவ் கருதினார்.

புறணியின் அடிப் பகுதியிலிருந்து புறணிக்குச் செல் கிற உளநெகிழ்ச்சித் தூண்டல்கள் (மகிழ்ச்சிக் கிளர்ச்சி, வியப்பு, திகைப்பு ஆகியவற்றைத் தருகிற உணர்ச்சி) உறங்கிக் கொண்டிருக்கிற புறணியின் உயிரணுக்களைத் தட்டியெழுப்பி, அவற்றை வேலைக்குத் தூண்டி விடுகின்றன என்று, குழந்தைகளின் மூளை உழைப்பைக் கவனித்து வந்ததால் எனக்கு மேலும் மேலும் தெளிவாகத் தெரிந் தது. உலகை அறிவதற்குத் தேவையான அறிவு வேட் கையும் அறிவுத் தாகமும் சிறு குழந்தைகளிடம் வளரும் படி செய்வதன் மூலம்தான் அவர்களது அறிவு வளர்ச் சிக்கு வகை செய்ய முடியும் என்று அனுபவம் எடுத்துக் காட்டி இருக்கிறது.

இயற்கைக்குள் மேற்கொள்கிற ''பயணங்கள்'' ஆரம்ப வகுப்புகளில் ஒரு வழக்கமாகி விட்டது. காட் டுக்கும், வயலுக்கும், ஏரிக்கும் எப்போது போவோம் என்று ஆவலுடன் காத்திருந்தனர் குழந்தைகள். முன்ன தாகவே அவர்கள் விளையாட்டுக்களைத் தீர்மானித்தனர். தடைகளைக் கடப்பதுடன் சம்பந்தப்பட்ட விளையாட்டுக் கள் குழந்தைகளுக்கு மிகவும் பிடித்தவை ஆயின. கற்பனையான, உண்மையான கதாநாயகர்கள் இதில் பங்கெடுத்துக் கொண்டனர். இரண்டாம் வகுப்பில் ராபின் சனைப் பற்றி நான் மாணவர்களுக்குச் சொன்னேன். இதி லிருந்து பலமாதங்கள் நீடித்த கவர்ச்சியான விளையாட்டு ஒன்று தோன்றியது. ஸ்பார்டகஸ் பற்றிய கதையைக் கேட்ட பின் மலையுச்சியில், செங்குத்தான சரிவுக்கும் ஆழமான கணவாய்க்கும் அருகில் வெகுண்டெழுந்த அடி மைகளின் முகாம் ஒன்றைக் குழந்தைகள் அமைத்தனர்.

கால்நடை வளப்பவர்களாகவும்,வேட்டையாடுபவர்களா யும் இருந்த, பண்டைய காலத்தில் எங்கள் பகுதியில் வாழ்ந்த சித்தியர்கள் பற்றி நான் சொன்ன கதையால் வெகுவாகக் கவரப்பட்ட குழந்தைகள்,பண்டைய உழைப் பாளர்களின் வாழ்க்கையையும் உழைப்பையும் எடுத்துக் காட்டுகிற விளையாட்டுக்களை உருவாக்கினர்.

அறிவாற்றலுடனும் உடலாற்றலுடனும் சம்பந்தம் கொண்ட பன்முக விளையாட்டுகளுடன் தொடர்புடைய தாய் கல்விப் பயிற்சி இருக்க வேண்டும். பிரகாசமான உணர்ச்சி அலைகளை இந்த விளையாட்டு தூண்டிவிட வேண் டும். விரும்பிப் படிக்கிற சுவாரஸ்யமான புத்தகமாக குழந்தைகளின் முன்னே சுற்றியுள்ள உலகம் காட்சி தர வேண்டும். இயற்கைக்கும், விளையாட்டுக்கும் மேற் கொண்ட ''பயணங்களைத்'' தவிர, அறிவாற்றலும் உட லாற்றலும் வளர்ச்சியுறுவதற்குப் பரவலான வாய்ப்பை உடலுழைப்பு நல்கியது. மகிழ்ச்சி நிறைந்த உணர்ச்சி அலைகளால் ஊக்கமூட்டப்படுகிற உழைப்பு நடவடிக்கை இல்லாமல் முழுமையான, ஆனந்தம் நிறைந்த இளமைப் பருவத்தை நினைத்தும் பார்க்க முடியாது. சிறு குழந் தைக்கு உடலுழைப்பு என்பது சில திறமைகளை, பழக் கங்களைப் பெறுவதாகவும் ஒழுக்கப் பயிற்சியாகவும் மட்டு மின்றி, எல்லையற்ற, அற்புத வளமை வாய்ந்த சிந்தனை உலகமாகவும் விளங்குகிறது. ஒழுக்க பூர்வமான, அறிவு சார்ந்த, அழகு பற்றிய உணர்ச்சிகளை இந்த உலகம் தட்டியெழுப்புகிறது. இவ்வுணர்ச்சிகள் இன்றி உலகை அறிவது, அதாவது கல்வி கற்றல் சாத்தியமில்லை. பள்ளிப் படிப்புடன் மாறி மாறி வருகிற உடலுழைப்பு படைப்புலகத்துக்கும், கனவுலகத்துக்கும் குழந்தையை இட்டுச் செல்லுகிற பரவசப் படுத்தும் பயணமாக எனக்குக் காட்சியளிக்கிறது. உடலுழைப்பின் நிகழ்ச்சிப் போக்கில்தான் எனது மாணவர்களது அறிவின் மிக முக்கியமான தன்மைகளான அறிவு வேட்கை, அறிவுத் தாகம், சிந்தனையின் நெளிவு சுளிவு கற்பனைத் தெளிவு ஆகியவை உருவாயின.

பாட நேரத்தில் நிகழ்கிற மூளை உழைப்பு விரும்பத் தகுந்ததாகவும், கவர்ச்சி மிக்கதாகவும் மாறுகிறது. குழந்தையின் வாழ்வில் சிந்தனையால் உற்சாகமூட்டப் படும் உடலுழைப்பு இருக்குமானால் மூளை உழைப்பு பாட நேரத்தில் விருப்பத்திற்குரிய ஒன்றாக மாறும். இரண்டாம் வகுப்பிலேயே வாரத்திற்கு ஒருமுறை விருப்பமான உழைப்பை நாங்கள் மேற்கொண்டோம். குழந்தைகளின் சிந்தனையையும் உணர்ச்சிகளையும் கவர்ந்த வேலையை அப்போது அவர்கள் செய்தார்கள். மூன்றும், நான்காம் வகுப்புக்களில் வாரம் இரண்டு மணி நேரம் விருப்பமான உழைப்பு மேற்கொண்டோம்.

விருப்பமான உழைப்பு... குழந்தைக்குக் கவர்ச்சி தோன்றும் வரை ஆசிரியர் செயலற்றுக் காத்திருக்க வேண்டும் என்று இதற்கு அர்த்தமில்லை. பொதுவாகவே போதனைப் பயிற்சியிலும் உழைப்புப் பயிற்சியிலும் தன் போக்கில் எதையும் விட்டு விடக் கூடாது. உழைப்புக் கவர்ச்சி எனும் சூழலால் குழந்தைகள் சூழப்பட வேண் டும். எனது மாணவர்களைச் சுற்றி சிறுவர்களும், இளம் பெண்களும், இளைஞர்களும் வேலை செய்து வந்தனர். மாணவர்கள் டஜன் கணக்கான வேலைகளால் ஈர்க்கப் பட்டிருந்தார்கள். அவர்கள் மரங்களும் பயிர்களும் வளர்த்தனர், இயந்திரங்கள், பொறிகள் ஆகியவற்றின் மாதிரிகளை உருவாக்கினர், விளைமண் கலவைகளைத் தோற்றுவித்தனர், பிராணிகளைப் பேணி வந்தனர், மூடு தோட்டம் அல்லது பட்டறை கட்டினர், தண்ணீர்க் குழாய்களைப் பழுது பார்த்தனர்.

ஆராய்ச்சி, அறிவு வேட்கை, அறிவுத் தாகம் ஆகிய வையே உழைப்புக்கான அக்கறையைக் குழந்தைகளிடம் தோற்றுவிக்கின்றன. உழைப்பே ஒரு இறுதிக் குறிக் கோளாக இன்றி, சமுதாய, சித்தாந்த, ஒழுக்க பூர்வ, அறிவு பூர்வ, படைப்பாற்றலுள்ள, அழகுணர்ச்சி கொண்ட, உளநெகிழ்ச்சி தருகிற போதனை நிகழ்ச்சிப் போக்கின் பன்முகக் குறிக்கோளை எட்டுவது என்பதே எனது முழக்கமாக இருந்தது.

சிந்தனை, உணர்ச்சிகள், படைப்பு, அழகு, விளையாட்டு ஆகியவற்றின் தெளிவான ஒளியால் பிரகாசப் படுத்தப் பட்டால்தான் கல்விப்பயிற்சி சுவையுள்ள கவர்ச்சி மிக்க ஒரு வேலையாகத் திகழ முடியும். குழந்தை எப்படி உணவு கொள்கிறது, உறங்குகிறது, அதன் உடல் நலம் எப்படி, எவ்வாறு விளையாடுகிறது, ஒரு நாளைக்கு எவ்வளவு நேரம் திறந்த வெளியில் இருக்கிறது, என்ன புத்தகம் படிக்கிறது, எத்தகைய கதை கேட்கிறது, என்ன வரைகிறது, தனது உணர்ச்சிகளையும் சிந்தனையையும் படத்தில் எங்ஙனம் வெளியிடுகிறது, இயற்கை இசையும், மக்களால் படைக்கப்பட்ட அல்லது இசையமைப்பாளர்கள் உருவாக்கிய சங்கீத ராகங்களும் அதன் உள்ளத்தில் எத்தகைய உணர்ச்சிகளைத் தட்டியெழுப்புகின்றன, குழந்தையின் விருப்பமான வேலை என்ன, மனிதர்களின் இன்ப துன்பங்களை எப்படி அது கிரகித்துக் கொள்கிறது, மற்றவர்களுக்காக அது படைத்தது என்ன, இந்தப் படைப்பில் அது அனுபவித்த உணர்ச்சிகள் யாவை என்பனவற்றில் அக்கறை கொள்வதிலிருந்து தொடங்குவதாகவே, பள்ளிப் படிப்பில் பெறுகிற வெற்றிகளில் நான் அக்கறை காட்டத் தொடங்கினேன்.

தீவிர நடவடிக்கையிலிருந்து பிரிக்கப்படாத ஒன்றாய் அறிவு இருக்கும் போதுதான், குழந்தைகளது ஆன்மிக வாழ்வின் ஒரு அங்கமாக கல்விப் பயிற்சி விளங்கும். வாய்ப்பாடோ சதுரத்தின் பரப்புக் கண்டுபிடிக்கிற சூத்திரமோ குழந்தைகளுக்குத் தாமாகவே கவர்ச்சி தருமாறு செய்வது கடினமாகும். படைப்பு வெற்றிகளை ஈட்டுகிற, உழைப்புக் குறிக்கோளை எட்டுகிற சாதனமாக அறிவு விளங்கினால் தான் சிறு மனிதனின் விருப்புள்ள வெற்றியாக அந்த அறிவு விளங்கும். இளம் வயதிலேயே உடலுழைப்பு குழந்தைகளுக்குக் கிளர்ச்சியூட்டி விவேகத்தையும் கண்டு பிடிப்புத் தன்மையையும் வெளிப்படுத்தும் வாய்ப்புக்களை அவர்களுக்கு நல்க வேண்டும் என்பதற்காகப் நான் பாடுபட்டேன். பள்ளிக் கூடத்தின் மிக முக்கியமான பணிகளில் ஒன்று அறிவைப் பயன்படுத்தக்

கற்றுத் தருவதாகும். புதிய புதிய திறமைகளையும் பழக்கங்களையும் கற்றுக் கொள்வதுடன் தொடர்புடையதாக மூளை உழைப்பு விளங்குகின்ற இளம் வகுப்புக்களில் ஒரு ஊமைப் பாரமாக அறிவு மாறிவிடும் ஆபத்து இருக்கிறது. இந்தத் திறமைகளும் பழக்கங்களும் வெறுமே கற்றுக் கொள்ளப்பட்டு நடைமுறையில் பயன்படுத்தப் படவில்லை என்றால் கல்விப் பயிற்சி குழந்தையின் ஆன்மிக வாழ்விலிருந்து வெளியேறி, அவனது அக்கறைகளிலிருந்தும் கவர்ச்சிகளிலிருந்தும் தனிமைப்பட்ட ஒன்றாகி விடும். இப்படி ஆகிவிடாமல் தடுப்பதற்காக முயல்கிற ஆசிரியர், ஒவ்வொரு குழந்தையும் தனது திறமைகளையும் பழக்கங்களையும் ஆக்கரீதியில் பயன்படுத்த வேண்டும் என்பதற்காகப் பாடுபடுகிறார்.

## ''இயற்கைப் புத்தகத்தின்'' முன்னூறு பக்கங்கள்

பிரபலமான கணிதவியல் வல்லுனரான பி. கிளேன் (1849—1925), உயர்நிலைப் பள்ளி மாணவனை, அறிவினால் பத்து வருடம் அடைக்கப் பட்டிருந்து அதன் பிறகு சுட்ட பின்னர் மீதம் ஏதுமற்ற ஒரு பீரங்கியுடன் ஒப்பிட்டார். கிரகித்துக் கொள்ளப்படாத, மனத்தோற்றங்களையும் சித்திரங்களையும் எண்ணத் தொடர்புகளையும் உண்டாக்காத விஷயங்களை உருப் போடும்படி நிர்ப்பந்திக்கப்பட்ட குழந்தையின் மூளை உழைப்பை நான் கண்காணித்து வருகையில், இந்த வருந்தத் தக்க வேடிக்கை நினைவுக்கு வந்தது. ஞாபகத்தினாலும், தெளிவான புலனறிவு, தோற்றங்களின் சாரத்தைக் கண்காணிப்பது ஆகியவற்றை உருப்போடுவதாலும் சிந்தனையை மாற்றிவிடுவது குழந்தையை மந்தப்படுத்தி கல்விக்கான அவனது ஆர்வத்தைத் தட்டிப் பறிக்கிற பெரும் கேடாகும்.

பள்ளி வயதுக்கு முந்திய குழந்தைகளின் கூரிய, திட்பமான நினைவாற்றல் கண்டு வியப்படையாதது யார்? தாய் தந்தையுடன் காட்டுக்கோ, வயலுக்கோ நடந்து வரப் போயிருந்த ஐந்து வயதுக் குழந்தை இதோ திரும்பி

வருகிருன். பிரகாசமான காட்சிகள், சித்திரங்கள், தோற்றங்கள் ஆகியவற்றின் மனப்பதிவுகளால் நிறைந்த வனுய் அவன் வருகிருன். உருண்டோடுகிறது மாதமும் வருடமும். தாயுடன் சேர்ந்து நடந்து வருவதற்கு மீண்டும் கிளம்புகிருர் தந்தை. அமைதியான வெய்யில் நிறைந்த காலே நேரத்துக்காக ஆவலுடன் பையன் காத்திருக்கிருன். அவனது கற்பனைக்கு எட்டாத ஒரு காலத்தில் அம்மா அப்பாவுடன் காட்டில் நடந்து வந்ததை அவன் நினைத்துப் பார்க்கிருன். மின்னல் வெட்டு வது போன்ற குழந்தை நினைவுகளைக் கண்டு தாயும் தந்தையும் திகைப்படைந்து போயினர்: வேறு வேறு நிறத்தில் இரண்டு இதழ்களைக் கொண்ட ஒரு அற்புத மலரைக் குழந்தை நினைவு கூர்ந்தது. அண்ணனும் தங் கையும் ஒரு மலராக மாறி விட்டது பற்றிய ஒரு பழங் கதையை சிறுவன் திரும்பச் சொல்வதைத் தந்தை திகைப் புடன் கேட்டார்; ஒரு வருடத்துக்கு முன்பு காட்டுச் சரி வில் தாயாருக்கு இந்தக் கதையை தந்தை சொல்லி யிருந்தார். அந்த நேரத்தில் இந்தக் கதையைப் பையன் காது கொடுத்துக் கேட்காமல் பட்டாம்பூச்சியைத் துரத்திக் கொண்டிருந்தான். சுற்றியுள்ள உலகத்தின் மிக நுண்ணிய ஒரு அம்சம் அவன் நினைவில் எப்படி நின்றது?

வண்ணங்கள், நிற வேறுபாடுகள், ஒலிகள் ஆகிய வற்றையும், விளையாட்டுப் போல் பிரகாசமாக அசைந் தாடும் சித்திரங்களையும் வியத்தகு கூர்மையுடன் குழந் தைகள் கிரகித்துக் கொள்கிருர்கள் என்பதுதான் விஷயம். சுற்றியுள்ள உலகத்துக் காட்சிகளை கிரகித்துக் கொள்ளு கிற நிகழ்ச்சிப் போக்கின்போது சிறுவர்களின் உணர் வில் தோன்றுகிற கேள்விகளை அவர்கள் திடுமென்று கேட்டு பெரியவர்களை வியப்புறச் செய்கிருர்கள். இப் போது அற்புத மலரை நினைத்துக் கொண்ட தந்தையைக் கேட்கிருன் குழந்தை: ''அண்ணனும் தங்கையும் ஒரு வரை ஒருவர் பார்த்துக் கொள்கிருர்களா இல்லையா? தாவரங்களுக்கு உயிர் உண்டு என்று நீங்கள் சொல்லி இருக்கிறீர்கள்—அப்படியானுல் அவை பார்க்கவும் கேட்க

வும் வேண்டுமே? அவர்கள் ஒருவரோடு ஒருவர் பேசிக் கொள்கிறார்களா? இந்தப் பேச்சை நம்மால் கேட்க முடியுமா? '' சிந்தனைகள் வெள்ளமாகப் பாய்கின்றன. இவற்றின் முன்னே திகைப்புற்று நிற்கிறார் தந்தை: ஒரு வருடத்துக்கு முன்னே இதைப் பற்றிப் பையன் ஏன் கேட்கவில்லை? மலரின் பிரகாசமான சித்திரம் மட்டுமின்றி, மறத்தற்கரிய அந்த விநாடிகளின் உளநெகிழ்ச்சி வேறுபாடுகளும் இவ்வளவு காலம் எப்படி நினைவில் நிற்கின்றன? காட்டுச் சரிவையும், கம்பளமாக ஒளிர்ந்த பூக்களையும், நீல வானத்தையும், விமானத்தின் தொலைதூர உறுமலையும் சிறுவன் மனக்கண் முன்னே தெளிவாகக் காண்கிறான் என்று உறுதி கொள்கிறார் தந்தை.

இதைப் பற்றிச் சிந்தித்தபடி என்னை நானே கேட்டுக் கொண்டேன்: உயிருள்ள, பிரகாசமான கற்பனையாலும், கூரிய நினைவாலும், நுண்ணிய உளநெகிழ்ச்சியாலும் சுற்றியுள்ள உலகத்துத் தோற்றங்களை கிரகித்துக்கொள்கிற குழந்தையால் இலக்கண விதிகளை ஏன் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள முடிவதில்லை? 'ஸ்டெப்பி' என்ற வார்த்தையை சரியாக எப்படி எழுதுவது என்பதையோ ஒன்பதை ஒன்பதால் பெருக்கினால் என்ன கிடைக்கும் என்பதையோ ஞாபகத்தில் வைத்துக் கொள்ள அவன் அவ்வளவு கஷ்டப்படுவது ஏன்? ஜெர்மன் விஞ்ஞானி கொண்ட முடிவை விட வேதனையான ஒரு முடிவுக்கு நான் வந்தேன்: பள்ளியாண்டுகளில் அறிவில் தேர்ச்சி பெறுகிற நிகழ்ச்சிப் போக்கு ஆன்மிக வாழ்விலிருந்துதான் விரிகிறது. பிரகாசமான காட்சிகள், சித்திரங்கள், புலனறிவுகள், மனத்தோற்றங்கள் ஆகியவற்றின் தெளிந்த சிற்றாறு குழந்தை நினைவுக்குள் பாய்வதால்தான் அந்த நினைவு கூர்மையாகவும் திட்பமாகவும் இருக்கிறது. இந்தச் சிற்றாறின் உயிரோட்டமுள்ள ஊற்றுக்கண்ணால் ஊட்டம் பெறுவதால்தான் குழந்தைச் சிந்தனையானது நுண்ணிய, எதிர்பாராத, ''தத்துவஞானக்'' கேள்விகளைத் தொடுத்து நம்மை வியப்புக்குள்ளாக்குகிறது. சுற்றியுள்ள உலகம் குழந்தை உணர்வுக்குள் நுழையாதபடி பள்ளிக்

கதவு தடுத்து விடக்கூடாது என்பது மிக முக்கியமான தாகும். குழந்தைப் பருவகாலம் முழுதும் சுற்றியுள்ள உலகமும் இயற்கையும் பிரகாசமான காட்சிகள், சித்திரங் கள், புலனறிவுகள், மனத்தோற்றங்கள் ஆகியவற்ருல் குழந்தை உணர்வை ஊட்டி வளர்க்க வேண்டும் என் பதற்காகவும், சிந்தனை விதிகளை ஒரு ஒய்யார மாளிகை போலக் குழந்தை உணர வேண்டும், இந்த மாளிகையின் கட்டிட அமைப்பு இதைவிட ஒய்யார மாளிகையான இயற்கையால் சரிசெய்யப்பட வேண்டும் என்பதற்காக வும் நான் பாடுபட்டேன். அறிவைச் சேமித்து வைக்கிற, உண்மைகள், விதிகள், சூத்திரங்கள் ஆகியவற்றைக் கொட்டி வைக்கிற கிடங்காகக் குழந்தையை மாற்றி விடக் கூடாது. சிந்தனை செய்ய அவனுக்குக் கற்றுத் தர வேண்டும். பிரகாசமான சுற்றியுள்ள உலகம் அதன் நியதிகளுடன் ஒரு நிமிடம் கூட குழந்தையின் முன்னே மூடிக் கிடக்கக் கூடாது என்று குழந்தைச் சிந்தனையின், குழந்தை நினைவில் இயற்கையே கோருகிறது. சிந்திப் பதற்கும், நினைவில் கொள்வதற்கும், ஆய்வு செய்வதற் கும் எந்தச் சூழலில் குழந்தை கற்றுக் கொள்கிருனே அந்தச் சூழல் சுற்றியுள்ள உலகமேயாளுல் குழந்தை நினை வும், சிந்தனைத் தெளிவும் பள்ளியில் நுழைந்தபின் பல வீனப்படாதது மட்டுமல்ல, அது மேலும் சக்தி வாய்ந் ததாகவும் மாறும்.

அறிவுப் பயிற்சியில் இயற்கை வகிக்கும் பாத்திரத்தை மிகைப் படுத்திக் கூறவே முடியாது. குழந்தைகளைச் சுற்றி நிற்பது இயற்கையாளுல், அறிவு வளர்ச்சிக்கு ஆற் றல் வாய்ந்த காரணமாக இதுவே விளங்கும் என்று கருதுகிற ஆசிரியர்கள் கடுமையான தவறு புரிகிருர்கள். பகுத்தறிவு, உணர்ச்சிகள், சித்தம் ஆகியவற்றின் மீது நேரடிச் செல்வாக்குச் செலுத்துகிற மந்திர சக்தி எது வும் இயற்கையில் இல்லை. இயற்கையை மனிதன் அறிந்து கொண்டு, அதன் காரண-விளைவுத் தொடர்புகளுக்குள் ஊடுருவும்போதுதான் அந்த இயற்கை வல்லமை வாய்ந்த போதனு ஊற்றுக்கண்ணுக விளங்கும். காட்சி

முறைக்கு அதிமுக்கியத்துவம் கொடுப்பது, குழந்தைச் சிந்தனையின் சில தனி இயல்புகளை முழுமுதலானதாகவும் (absolute), அறிதல் நடவடிக்கையை உணர்ச்சி வடிவானதாகவும் கொள்வதற்குச் சமமாகும். குழந்தைச் சிந்தனையின் சிறப்புத் தன்மையை குறிப்பாக, காட்சிகளாகவும், வண்ணங்களாகவும், ஒலிகளாகவும் குழந்தை சிந்திக்கிறது என்பதை குருட்டுத்தனமாக வழிபடக் கூடாது. இந்தச் சிறப்புத் தன்மை ஒரு எதார்த்த உண்மையாகும். இதன் முக்கியத்துவத்தை மிகப் பெறும் உறுதியுடன் எடுத்துக் காட்டினுர் க. தி. உஷீன்ஸ்கி. காட்சிகளாகவும், வண்ணங்களாகவும், ஒலிகளாகவும் குழந்தை சிந்திக்கிறது என்றால் சூட்சுமமாகச் சிந்திப்பதற்கு அதற்குக் கற்றுத் தர வேண்டும் என்று இதற்கு அர்த்தமேயில்லை. காட்சி முறையின் முக்கியத்துவத்தையும் அறிவுப் பயிற்சியில் இயற்கை வகிக்கும் பெரிய பங்கையும் கோடிட்டுக் காட்டுகிற அனுபவம் வாய்ந்த போதகர், சூட்சுமச் சிந்தனை, ஒரு முனைப்பாடுள்ள கல்விப் பயிற்சி ஆகியவற்றின் வளர்ச்சிக்கு இவை நல்லதொரு சாதனமாக விளங்கும் என்று கருதுகிறார்.

எனது மாணவர்களின் சிந்தனைக்கு ஊற்றுக்கண்ணாக எது விளங்க வேண்டும் என்பது பற்றி நான் தீர ஆலோசித்தேன். நான்காண்டு காலத்தில் ஒவ்வொரு நாளும் குழந்தைகள் எதனைக் கவனித்து வர வேண்டும், அவர்களது சிந்தனைக்கு ஊற்றுக்கண்ணாக சுற்றியுள்ள உலகத்தின் எந்தத் தோற்றங்கள் விளங்க வேண்டும் என்பனவற்றை நான் நிர்ணயித்தேன். ''இயற்கைப் புத்தகத்தின்'' முன்னூறு பக்கங்கள் இப்படித்தான் தயாராயின. இது குழந்தைகளின் உணர்வில் பதிந்த முன்னூறு காட்சிகளாகும், முன்னூறு சித்திரங்களாகும். சிந்திக்கக் கற்றுக் கொள்வதற்காக வாரத்திற்கு இரண்டு தடவை நாங்கள் இயற்கையிடம் போனோம். வெறுமே கூர்ந்து பார்ப்பதற்கு மட்டுமல்ல—சிந்திக்கக் கற்றுக் கொள்வதற்காகப் போனோம். உண்மையில் இந்தப் பயணங்கள் சிந்தனைப் பாடங்களாகவே இருந்தன. கவர்ச்சி தரும்

உல்லாச நடையாகவல்ல, பாடங்களாகவே இவை இருந்தன. பாடமானது மிகவும் கவர்ச்சி மிக்கதாயும் சுவாரஸ்யம் நிறைந்ததாயும் இருக்க முடியும் என்பதே குழந்தைகளின் ஆன்மிக உலகத்தை இன்னும் செழுமைப் படுத்துகிறது.

எதார்த்த உண்மையின் தெளிவான சித்திரங்கள் குழந்தையின் உணர்வில் பதிய வேண்டும், உயிருள்ள, மனத்தோற்றக் காட்சிகளின் அடிப்படையில் சிந்தனு நிகழ்ச்சிப் போக்கு நடைபெற வேண்டும், குழந்தைகள் சுற்றியுள்ள உலகத்தைக் கூர்ந்து பார்த்தபடி தோற்றங் களின் காரணங்களையும் விளைவுகளையும் நிர்ணயிக்க வேண்டும், பொருள்களின் பண்புகளையும் அவற்றின் அடையாளங்களையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்— இவையே எனது குறிக்கோளாக இருந்தன. சூட்சுமமான உண்மைகளிலும் பொதுமைப் படுத்தல்களிலும் எந்த அளவுக்குப் பாட நேரத்தில் தேர்ச்சி பெற வேண்டி யுள்ளதோ, அப்போது மூளை உழைப்பு எவ்வளவு அழுத்த மானதாய் இருக்கிறதோ அந்த அளவுக்கு அறிவின் ஊற் றுக்கண்களை, இயற்கையை மாணவன் அணுகுவான். அந்த அளவுக்குச் சுற்றியுள்ள உலகத்தின் காட்சிகளும் சித்தி ரங்களும் அவனது உணர்வில் பதியும் என்கிற குழந்தை யினது அறிவு வளர்ச்சி பற்றிய மிக முக்கியமான நியதியை,கவனித்தல்கள் உறுதிப் படுத்தின.ஆனால், குழந் தையின் உணர்வில் பிரகாசமான காட்சிகள் போட்டோ பிலிமில் பிரதிபலிப்பது போலப் பிரதிபலிப்பதில்லை. மனத்தோற்றங்கள் எவ்வளவுதான் பிரகாசமானதாய் இருப்பினும் இதுவே குறிக்கோளாகவோ கல்விப் பயிற்சி யின் இறுதி நோக்கமாகவோ இருக்க முடியாது. கோட் பாடுபூர்வச் சிந்தனை இருக்கிற இடத்தில்தான், உயிருள்ள சிந்தனையே இறுதிக் குறிக்கோளாக இன்றி, ஒரு சாதன மாக மட்டுமே அது இருக்கிற இடத்தில்தான் அறிவுப் பயிற்சி தொடங்குகிறது. சுற்றியுள்ள உலகத்தின் பிர காசமான சித்திரம், பல்வேறு வடிவங்களில், வண்ணங் களில், ஒலிகளில் வெளிப்படுகிற ஊற்றுக்கண்ணுக மாண

வனுக்குத் திகழ்கிறது. இதற்குள் ஆயிரக் கணக்கான பிரச்சினைகள் அடங்கியுள்ளன. இந்தப் பிரச்சினைகளின் உள்ளடக்கத்தைத் திறந்து காட்டுகிற ஆசிரியர், ''இயற்கைப் புத்தகத்தின்'' பக்கங்களைப் புரட்டிப் பார்க்கிறார்.

இதோ ''இயற்கைப் புத்தகத்தின்'' முதல் பக்கம். ''உயிருள்ளதும் உயிரற்றதும்'' என்று இதற்குப் பெயர். இலையுதிர்காலத்தின் ஆரம்பத்தில், வெதுவெதுப்பான வெய்யில் நிறைந்த நாளின் நடுப்பகலில் ஆற்றங் கரைக்கு நாங்கள் போகிறோம். அங்கு புல்தரையில் அமர்கிறோம். இலையுதிர் காலப் பூக்களால் நிறைந்த புல்தரை எங்கள் முன் இருக்கிறது. நிர்மலமான ஆற்றுத் தண்ணீரின் ஆழத்தில் மீன் குஞ்சுகள் நீந்துகின்றன. பட்டாம்பூச்சிகள் காற்றில் சிறகடித்துச் செல்கின்றன, நீலவானில் வானம் பாடிகள் பறந்து கொண்டிருக்கின்றன. உயரமான செங்குத்துச் சரிவுக்குச் செல்கிறோம். பலப்பல ஆண்டுகளாக இங்கு மண் அரித்துச் செல்லப்பட்டது. மஞ்சள், சிவப்பு, ஆரஞ்சு, வெள்ளை ஆகிய பலப்பல நிறங்களில் கிடந்த களிமண் அடுக்குகளையும் மணல் அடுக்குகளையும் சுவாரஸ்யமாகக் கூர்ந்து பார்த்தார்கள் குழந்தைகள். இதோ வெள்ளைக் களிமண்ணின் மெல்லிய அடுக்கு, அதற்குக் கீழே பொன் மணல், அதற்கும் கீழே கனசதுர வடிவத்தில் அழகான படிகங்கள். மண்ணின் மேலடுக்கையும், கரிசல் மண்ணையும் ஆழமான அடுக்குகளுடன் குழந்தைகள் ஒப்பிட்டுப் பார்த்தனர்.

''மண்ணின் மேலடுக்கில் நாம் என்ன பார்க்கிறோம்?''

''தாவரங்களின் வேர்கள். மண்ணின் ஆழத்தில் வேர்கள் இல்லை'' என்று பதிலளிக்கிறார்கள் குழந்தைகள்.

''குழந்தைகளே, செங்குத்துச் சரிவின் கடைசி முனையில் பசும் புல் புதர் முளைத்திருப்பதைப் பாருங்கள். இந்த ஓரத்தில் பொன்னிற மணல். புல்லுக்கும் மணலுக்கும் என்ன வித்தியாசம்?''

''புல் கோடை காலத்தில் முளைக்கிறது, இலையுதிர் காலத்தில் வாடிப் போகிறது, வசந்தத்தில் மீண்டும்

உயிர் பெறுகிறது... புல்லில் சிறு தானியங்கள் இருக்கின்றன. அவை பூமியில் விழுகின்றன, அவற்றிலிருந்து புதிய தண்டுகள் முளைக்கின்றன...'' என்கிறார்கள் குழந்தைகள்.

''மணல்?'' சுற்றியுள்ள உலகத்தில் இருக்கிற பொருள்களை எல்லாக் குழந்தைகளும், குறிப்பாக மந்தப் போக்கு கொண்ட பெத்ரிக், வால்யா, நீனா ஆகியோர் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். மெதுவான நீரோட்டமும், நிறைவான தண்ணீரும் கொண்ட ஆற்றை ஒத்த சிந்தனை கொண்ட குழந்தைகளான மீஷா, சாஷா போன்ற குழந்தைகளும் வகுப்பில் இருந்தனர். லூதா என்ற இன்னொரு சிறுமி இருந்தாள். இவளது சிந்தனை ஏழு கடலுக்கு அப்பாலுள்ள ரகசியம் போலத் தோன்றியது எனக்கு. இந்தக் குழந்தையின் அறிவு வளர்ச்சி நிகழ்ச்சிப் போக்கு மெதுவாக நடைபெறுகிறது என்றும், மற்ற குழந்தைகள் எளிதாகப் புரிந்து கொள்வதை இந்தக் குழந்தை புரிந்து கொள்ளக் கஷ்டப்படுகிறது என்றும் நான் ஆரம்பத்தில் நினைத்தேன். ஆனால் சிறுமியின் கண்கள் உயிரோட்டமுள்ளவையாய், கருத்துப் பதிவு கொண்டவையாய் விளங்கின. உள்ளிருக்கும் ஏதோ சக்திகளால் இழுத்துப் பிடிக்கப்படுகிற சிந்தனை கொண்டிருந்தது குழந்தை. நன்றாகத் தெரிந்த விஷயத்தைச் சொல்லுவதற்கு அது உணர்வு பூர்வமாகத் தாமதப்பட்டது போல் தோன்றியது...

''குழந்தைகளே, இதோ பாருங்கள் பொன்னிற மணலும் பச்சை நிறப் புல்லும். இன்னும் நன்றாகச் சொல்வதென்றால்—இதோ பச்சை நிற மணலும் பச்சை நிறப் புல்லும். இவற்றிடையே எதில் ஒற்றுமையில்லை, இவற்றிற்கிடையே என்ன வித்தியாசம்?''

குழந்தைகள் சிந்திக்கிறார்கள். பசிய புல்வெளியையும், வெறுமையாய் இருந்த செங்குத்துச் சரிவையும் பார்க்கிறார்கள். லூதாவின் கண்களில் ஆழமான யோசனை. பெத்ரிக் புருவங்களைச் சுழித்தான், வால்யா மணலை ஒரு கையிலிருந்து இன்னொரு கைக்குக் கொட்டிக் கொண்டிருந்தாள்.

''மணலில் பூக்கள் இல்லை. புல்லில் இருக்கின்றன'' என்கிறாள் லூதா.

''புல்லில் மாடுகள் மேய்கின்றன. மணலில் மாடு மேய்த்துப் பார்!'' என்கிறான் பெத்ரிக்.

''மழை பெய்தால் புல் முளைக்கிறது. மணல் மழையிலா முளைக்கிறது?'' ஒரு சிந்தனையுடன் சொல்கிறான் மீஷா.

''பூமியில் ஆழத்தில் கூட மணல் இருக்கிறது. புல் பூமியின் மேலே இருக்கிறது...'' என்று சொல்கிறான் யூரா.

ஆனால் அவனுக்கு மறுப்புக் கூறுகிறான் செர்யோஷா: ''ஆற்றங்கரையில் மணல் இல்லையா? சூரியனை நோக்கிப் போகிறது புல். மணலோ சூரியன் தரும் வெய்யிலில் சும்மா காய்கிறது...''

பின்னர், யாரோ ஒருவர் கொண்டு வந்திருந்த சிறு கல் ஒன்றையும் பசிய மேப்பிள் இலையையும், சிவப்புக் கண்ணாடித் துண்டையும் கேந்திப் பூவையும், குளத்தில் நீந்துகிற மீனையும் தாராவின் இறகையும், பாலத்தின் இரும்புக் கம்பியையும் ஹாப் கொடித் தண்டையும் நாங்கள் ஒப்பிட்டுப் பார்த்தோம். குழந்தைச் சிந்தனை மும்முரமாய் வேலை செய்கிறது. மேம்போக்காகப் பார்க்கையில் தெரிகிற சுற்றியுள்ள உலகத்தில் இருக்கிற பொருள்களுக்கும் தோற்றங்களுக்கும் இடையிலுள்ள தொடர்புகளையும் உடனடியாகத் தெரியாத தொடர்புகளையும் கண்டறிந்து கொண்டனர். உயிருள்ளதையும் உயிரற்றதையும் பற்றிய முதல் கருத்துக்கள் குழந்தைகளின் உணர்வில் சிறுகச் சிறுகத் தோன்றுகின்றன. சில பொருள்கள் உயிருள்ளவை, சில பொருள்களுக்கு உயிர் இல்லை. பலப் பல உண்மைகளில் குழந்தைகள் இதைக் காண்கிறார்கள். ஆனால் ''உயிருள்ளதுக்கும் உயிரற்றதுக்கும் இடையில் இருக்கிற வேறுபாடு என்ன?'' என்று நான் கேட்டால் அவர்களால் பதில் சொல்ல முடியவில்லை. முடிவு மெல்ல மெல்லத்தான் வருகிறது. கண்கள் காணுகின்றவற்றையே சிந்தனையும் நோக்குகிறது. சரியாகச் சில அடையாளங்களை

அறிந்து கொள்வதுடனேயே குழந்தைகள் சில தவறு களும் செய்கிறார்கள். இங்கேயே மேற்கொள்கிற உயிருள்ள கண்காணிப்புகளால் இத்தவறுகள் திருத்தப்படுகின்றன. ''உயிருள்ளது அசைகிறது, உயிரற்றது அசைவதில்லை'' என்று கோஸ்த்யா சொல்லும் போது எல்லோரும் அவன் சொல்வதை ஒத்துக் கொள்கிறார்கள். பின்னர் ஒரு மௌனம். குழந்தைகள் தம்மைச் சுற்றியும் பார்க்கிறார்கள். மறுப்புக்கள் கேட்கின்றன:

''குச்சி அசைகிறது. ஆற்றில் நீந்துகிறது. அதுவும் உயிருள்ளதா?''

''டிராக்டர் நகர்கிறது. ஆனால் அதற்கு உயிர் இல்லையே!''

''சிலந்திக் கூடு காற்றில் ஆடுகிறது. அதுவும் உயிருள் ளதுதானா?''

''பழைய கூரையில் இருக்கும் பாசி அசைவதில்லை. அது உயிருள்ளதா, உயிரற்றதா?

''மணலும் கூடத்தான் அசைகிறது. மணல் எடுக்கும் இடத்தில் ஆறு போல் மணல் ஓடியதைப் பார்த்தோமே.''

அசைவு அல்ல விஷயம் என்று தெரிகிறது. உயிருள்ள துக்கும் உயிரற்றதுக்கும் இடையில் உள்ள வேறுபாடுதான் என்ன? சுற்றியுள்ள உலகத்துப் பொருள்களை மீண்டும் மீண்டும் ஒப்பிட்டுப் பார்க்கிறார்கள் குழந்தைகள். ஷூரா மகிழ்ச்சியில் கத்தினான்:

''உயிருள்ளது வளர்கிறது, உயிரற்றது வளர்வ தில்லை.''

இந்த வார்த்தைகளைச் சிந்தித்துப் பார்க்கிறார்கள் குழந்தைகள். சுற்றியுள்ள பொருள்களின் மீது மீண்டும் அவர்கள் பார்வை பதிகிறது. உரக்கச் சிந்திக்கிறார்கள் குழந்தைகள். புல்—உயிருள்ளது புல் வளர்கிறது, மரம்— உயிருள்ளது, அது வளர்கிறது; காட்டு ரோஜாச் செடி— உயிருள்ளது, அது வளர்கிறது; கல் — உயிரற்றது, அது வளர்வதில்லை. மணல்—உயிரற்றது, ஏனெனில் அது வளர் வதில்லை; இதுதான் உண்மை! உயிருள்ளவை அனைத்தும் வளர்கின்றன, உயிரற்ற அனைத்தும் வளர்வதில்லை. மீஷா

என்னவோ யோசித்தபடி தொலைவில் பார்க்கிறான். நண்பர்களின் வார்த்தைகளை அவன் காது கொடுத்துக் கேட்கிறானா? தம்மைச் சுற்றியுள்ள உயிருள்ள பொருள்கள் உயிரற்ற பொருள்கள் ஆகியவற்றைக் குழந்தைகள் குறிப்பிட்ட போது:

''சூரியன் இன்றி உயிருள்ளவை இருக்க முடியாது'' என்று கூறியபடி காடு, புல்வெளி, வயல் ஆகியவற்றைச் சுட்டிக் காட்டுகிறான் சிறுவன்.

மந்தப் போக்கு கொண்டவர்கள் பலர் மிகக் கூரிய அறிவும், கவனமும், கூர்ந்து பார்க்கும் திறனும் படைத்தவர்களாய் இருப்பர் என்று இந்த வார்த்தைகள் இன்னொரு முறை உறுதியாய் எனக்கு எடுத்துக் காட்டின. மீஷாவின் சொற்கள் குழந்தைகளின் உணர்வுக்கு ஒளியூட்டுகின்றன. ''இதைப் பற்றி நான் எப்படி ஏற்கெனவே யோசிக்காமல் போனேன்'' என்று சிறுவர்களும் சிறுமிகளும் சிந்தனா பூர்வமாகத் தம்மைத் தாமே கேட்டுக் கொண்டனர். திட்பமான சிந்தனை சுற்றியுள்ள உலகத்துப் பொருள்களை மீண்டும் தொட்டுணர்கிறது. மீண்டும் உரக்கச் சிந்திக்கிறார்கள் குழந்தைகள்: ''புல்லோ, பூச்செடியோ, மரமோ, கோதுமைப் பயிரோ, சூரியனின்றி உயிர் வாழ முடியாது. மனிதனும் சூரியனின்றி உயிர்வாழ முடியாது...அல்லது சூரியனின்றி மனிதன் வாழ முடியுமா? எங்கேயோ பூமிக்குக் கீழே வெகு ஆழத்தில் மனிதன் வாழக் கூடும் என்று கற்பனை செய்வதுதான் சாத்தியமா? கிளைகள் அடர்ந்த மரத்து நிழலில் புல் வாடிப் போகிறது என்று நமக்கு நன்றாகத் தெரியும். ''மழை பெய்த பின்னே சூரியன் காய்ந்தால்தான் குளிர்காலப் பயிர் பசுமை அடையும். சூரியன் இல்லையோ, மோசம்தான்...'' என்று அப்பா சொன்னாரே. ஆனால் கல்லோ வெய்யிலிலும் சரி, நிலவறையிலும் சரி ஒரே மாதிரித்தான் இருக்கிறது. இல்லை ஒரே மாதிரி இருப்பதில்லை. நிலவறையில் கல்லின் மீது பூசணம் பூத்திருக்கிறது... பூசணம்—உயிருள்ளதா, உயிரற்றதா? சூரியன் பயன் மட்டும் தருவது இல்லை. நீண்ட நாட்களாக மழை பெய்யவில்லை என்றால் அது பயிர்களை எரித்தும்

விடும். அப்படியானல் உயிருள்ளவைக்குச் சூரியன் மட்டு மின்றி தண்ணீரும் அவசியமாகும்.''

இத்தகைய சிற்ருறுகளாகக் குழந்தைச் சிந்தனை பாய்கிறது. பின்னர் இந்தச் சிற்ருறுகள் ஒன்று கலந்து ஒரே வெள்ளமாகி விடுகின்றன. உயிருள்ளவற்றில் தமக்குப் புரியாத தோற்றங்கள் ஏதோ உண்டாகின்றன என்றும், இந்தத் தோற்றங்கள் சூரியனையும், தண்ணீரையும், இயற்கையில் நம்மைச் சுற்றியுள்ள அனைத்தையும் பொறுத்திருக்கின்றன என்றும் குழந்தைகள் தெளிவாகத் தெரிந்து கொள்கிருர்கள்... ''இயற்கைப் புத்தகத்தின்'' முதல் பக்கத்தின் ஆரம்ப வரிகளைப் படிக்கிருர்கள் குழந்தைகள். இரண்டு விதமான இயற்கைகளை—உயிருள்ளது, உயிரற்றது—கொண்டிருக்கிறது உலகம் என்று அவர்கள் புரிந்து கொள்கிருர்கள். உயிருள்ளது, உயிரற்றது பற்றிய முதல் மனத்தோற்றங்கள் பலப்பல கேள்விகளை உருவாக்கி விடுகின்றன. வீட்டுக்குத் திரும்புகிற குழந்தைகள் சாதாரண விஷயங்களைக் கூர்ந்து பார்க்கிருர்கள். இதுவரை அவர்கள் காணுதவற்றை அவற்றில் காண்கிருர்கள். எந்த அளவுக்குக் கூர்ந்து பார்க்கிருர்களோ அந்த அளவுக்கு அதிகமாகக் கேள்விகள் எழுகின்றன: ஓக் விதையிலிருந்து முளைவிட்டு சிறுசெடி எப்படி சக்தி வாய்ந்த ஓக் மரம் ஆகிறது? அடர்த்தியான இலைகளும், கிளைகளும் பருத்த தண்டும் எங்கிருந்து வருகின்றன? இலையுதிர்காலத்தில் மரங்களிலிருந்து இலைகள் ஏன் உதிர்கின்றன? பனிக்காலத்தில் மரங்கள் வளர்கின்றனவா, இல்லையா? இந்தக் கேள்விகளுக்கு உடனடியாக பதில் சொல்ல முடியாது. பதில் சொல்ல வேண்டும் என்கிற நோக்கத்தை முன்வைக்கவும் கூடாது. இந்தக் கேள்விகள் குழந்தைகளிடம் தோன்றுகின்றன என்பதே நல்ல விஷயமாகும். சிந்தனை செய்தவாறு, அறிவின், சிந்தனையின் ஊற்றுக்கண்ணுன சுற்றியுள்ள உலகத்தை அணுகுகிறது குழந்தை என்பதே நல்ல அம்சமாகும். தனது சிந்தனையை வெளியிடுவதற்குத் துல்லியமான, சரியான வார்த்தையை அவன் கண்டுபிடிக்கிருன் என்பதே நன்மையாகும். சிந்தனை செய்வதன் மிக முக்கிய பண்பான

சிந்தனைத் தெளிவு, சுற்றியுள்ள உலகத்துடன் நேரடித் தொடர்பு கொள்ளும் போதுதான் தோன்றுகிறது.

சித்திரங்களாக, வண்ணங்களாக, ஒலிகளாக குழந்தை சிந்திக்கிறான். திட்டவட்டமான சிந்தனையில் அவன் தடு மாறி நின்றுவிட வேண்டும் என்று இதற்கு அர்த்தமல்ல. கருத்துருக்களால் சிந்திக்கிற கட்டத்துக்கு மாறிச் செல்வதற்கு உருவகச் சிந்தனை அத்தியாவசியமாகும். தோற்றம், காரணம், விளைவு, சம்பவம், காரணமாதல், சார்புநிலை, வேறுபாடு, ஒற்றுமை, பொதுமை, ஒத்திசைந்தது, ஒத்திசையாதது, சாத்தியம், சாத்தியமின்மை போன்ற கருத்துருக்களைக் குழந்தைகள் சிறுகச் சிறுகக் கையாள வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். சூட்சுமச் சிந்தனைகள் உருவாவதில் இந்தக் கருத்துருக்கள் பெரும் பங்கு வகிக்கின்றன என்று பல்லாண்டு அனுபவம் எனக்கு எடுத்துக் காட்டியது. உயிருள்ள உண்மைகளையும், தோற்றங்களையும் ஆய்வு செய்யாமல், கண்ணால் காண்பதைக் கிரகித்துக் கொள்ளாமல், திட்டவட்டமான வஸ்து, உண்மை, தோற்றம் ஆகியவற்றிலிருந்து சூட்சுமமான பொதுமைப் படுத்தலுக்குப் படிப்படியாக மாறிச் செல்லாமல் இந்தக் கருத்துருக்களைக் குழந்தையால் புரிந்து கொள்ள முடியாது. இயற்கையைப் பயில்கிற நிகழ்ச்சிப் போக்கில் குழந்தைகளிடம் தோன்றுகிற கேள்விகள் இந்த மாற்றத்துக்குத்தான் உதவுகின்றன. திட்டவட்டமான இயற்கைத் தோற்றங்களைக் கூர்ந்து பார்த்து அவற்றிலுள்ள காரண—விளைவுத் தொடர்புகளைத் தேட வேண்டுமென்று எனது மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுத்தேன். திட்டவட்டமான சித்திரங்களுடன் சிந்தனை நெருக்கமான தொடர்பு கொண்டதால்தான் சூட்சுமக் கருத்துருக்களை மெல்ல மெல்லக் கையாளும் பழக்கம் குழந்தைகளிடம் ஏற்படுகிறது. இது பல்லாண்டு காலம் நடக்கும் நீண்டதொரு நிகழ்ச்சிப் போக்கு என்பது உண்மையே.

''இயற்கைப் புத்தகத்தைப்'' படிப்பதில் குழந்தைகள் பெரும் அக்கறை காட்டினர். இந்த அக்கறையே ஒரு குறிக்கோள் அல்ல. கல்விப் பயிற்சியில் குழந்தைகள்

ஊதிப் பெருத்த அக்கறை காட்ட வேண்டும் என்பதை யும், கல்விப் பயிற்சி எனும் நிகழ்ச்சிப் போக்கின் இறுதிக் குறிக்கோள் குழந்தைகளின் நடவடிக்கையே என்பதையும் சோவியத் போதனு முறை மறுக்கிறது. க. தி. உஷீன்ஸ் கியே எழுதினுர்: ''குழந்தையைக் கவருகின்ற விஷயத்தை மட்டுமின்றி, அவனைக் கவராத விஷயத்தையும்—ஒரு இன்பத்துக்காக, ஒரு பொறுப்பை நிறைவேற்றுவதற்காக அவனுக்குக் கற்றுக் கொடுங்கள். குழந்தையை நீங்கள் வாழ்க்கைக்குத் தயார் படுத்துகிறீர்கள். வாழ்க்கையிலோ எல்லாப் பொறுப்புக்களும் கவர்ச்சியானவை அல்ல.''[1] கல்விப் பயிற்சியின் உள்ளடக்கம், வடிவங்கள், முறைகள் ஆகியவற்றை மாணவர்களின் சொந்தத் தேவைகளைத் திருப்திப் படுத்துகின்ற கண்ணேக்கில் பார்க்கிற முதலா ளித்துவ விஞ்ஞானிகளின் போக்கு சோவியத் போதனு விஞ்ஞானத்துக்கு ஒரு சிறிதும் ஏற்புடையதல்ல. பள்ளிக் கூடத்தின் கல்விப் பணிகள், பயிற்சிப் பணிகள் ஆகியவற் றில் வெற்றி ஈட்டுகின்ற ஒரு சாதனமாகவும், பலப்பல விஞ்ஞானங்களில் அறிவையும், இயக்கவியல்-பொருள் முதல்வாதக் கருத்துக்களை உருவாக்குவதற்கான ஒரு சாத னமாகவுமே குழந்தையின் சொந்த அக்கறையை சோவியத் போதனு முறை பார்க்கிறது. வேடிக்கையான ஒரு பொழுதுபோக்காகவோ, கவர்ச்சியான ஒரு விளையாட் டாகவோ''இயற்கைப் புத்தகம்'' படிப்பதை நான் பார்க்க வில்லை. விஞ்ஞான அறிவுக்கு இட்டுச் செல்கின்ற ஒரு வழியாகவே அதனை நான் கண்டேன். இயற்கை நியதி களின் சாரம் வெளிப்படுகின்ற சுற்றியுள்ள உலகத்துத் தோற்றங்களைக் குழந்தைகள் கிரகித்துக் கொண்டனர். ஒவ்வொரு குழந்தையின் சொந்த ஆர்வத்தையும் திருப்திப் படுத்துகின்ற முறையில் அன்றி, உலகத்தை விஞ் ஞான பூர்வமாக அறிகின்ற இயக்கவியல் முறையில் ''இயற் கைப் புத்தகத்தின்'' உள்ளடக்கத்தை ஆசிரியர் நிர்ண

---

[1] க. தி. உஷீன்ஸ்கி. நூல் திரட்டு, தொகுதி 6, APN RSFSR பதிப்பகம், மாஸ்கோ, 1949, பக். 252.

யித்தார். பள்ளி மாணவனின் நடவடிக்கைக் குறிக்கோளை, நடவடிக்கையே அறிவு தருகிறது என்று வரையறுக்கிற காரியவாதிகளின் பிரபலமான கோட்பாட்டிலிருந்து, இவ்வாறுதான் சோவியத் போதனாமுறைத் தத்துவம் கொள்கை பூர்வமாக மாறுபட்டிருக்கிறது.

சோவியத் போதனா முறையில், நடவடிக்கை என்பது முறையான விஞ்ஞானக் கல்விக்கு மாற்று அல்ல, கல்வி, பயிற்சிக் குறிக்கோள்களை எட்டுகின்ற சாதனமே அது. அறிவில் தேர்ச்சி பெறுவதற்கு உதவி செய்கிற நடவடிக்கையைக் குழந்தையின் சொந்த ஆர்வம் இன்றி நினைத்தும் பார்க்க முடியாது என்பது உண்மையே. ஆர்வம் என்பது கிரகித்துக் கொள்வதிலும் ஆராய்ச்சி செய்வதிலும், பள்ளி மாணவனின் படைப்புத் தன்மையுள்ள ஆன்மிகச் சக்திகள் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொள்வதுதான் என்று சோவியத் போதனா முறை கருதுகிறது. மாணவன் எந்த உண்மைகளில் தேர்ச்சி பெற்று வருகிறானோ அந்த உண்மைகள் எந்த அளவுக்கு அவனது சொந்த மனவுறுதிகளாக ஆகின்றனவோ அந்த அளவுக்கு அவை அறியப்படுகின்றன. ஆராயப்படுகிற விஷயத்தில் அவனது ஆர்வம் அதிகரிக்கிறது. சோவியத் போதனா முறைத் தத்துவத்தில் ஆர்வம் என்பது சித்தாந்த, விஞ்ஞான, பொருள்முதல்வாதப் பயிற்சியுடன் பிரிக்க முடியாத தொடர்புடையது.

''இயற்கைப் புத்தகத்தின்'' பக்கங்களை ஒன்றுக்குப்பின் ஒன்றாகப் படித்தோம், சிந்திக்கக் கற்றுக் கொண்டோம். குழந்தைகள் படித்த இரண்டாம் பக்கம் ''உயிரற்றது, உயிருள்ளதுடன் தொடர்புடையது'' என்று அழைக்கப்பட்டது. மூடு தோட்டத்துக்குப் போய், பூமிக்கடியிலிருந்து எடுத்து வந்த சிறிய சல்லிக் கற்களில், பொன்னிற மண்ணில் வெள்ளரி, தக்காளி, பார்லி, ஓட்ஸ் ஆகிய பயிர்களை மூத்த மாணவர்கள் எப்படி வளர்க்கிறார்கள் என்று கவனித்தோம். உலோக, இரும்புப் பெட்டிகளில் மண்ணையும் சல்லிக் கற்களையும் போட்டு ரசாயனத் திரவத்தை அதில் ஊற்றுவதைச் சிறுவர்கள் கண்டனர். வெள்ளரி, தக்காளி ஆகியவற்றின் வேர்கள் இதிலிருந்து வளர்வதற்

கும், பழம் தருவதற்கும் வேண்டிய சத்தை எடுத்துக் கொள்கின்றன. உயிர் வளர்ச்சிக்கு வேண்டியதெல்லாம் உயிரற்ற கற்கள். தண்ணீரில் கரைக்கப்பட்ட வெள்ளைப் பொடி ஆகியவையே என்று தோன்றுகிறது. இதோ, தட்டையான பாத்திரங்களில் பசிய பார்லித் தண்டுகள் மண்ணும் கல்லும் கூட இல்லாமல் வளர்கின்றன. இவற்றின் வேர்கள் வெள்ளைப் பொடி கரைக்கப்பட்ட திரவத்திலிருந்து ஊட்டச் சத்துக்களைப் பெறுகின்றன. செடிகளில் பூ மலர்வதையும் அவை பழம் தருவதையும் பார்த்த குழந்தைகள் வெய்யிலும் தண்ணீரும் இருக்கிற இடத்தில்தான் உயிரற்றதானது உயிருள்ளதுக்கு உகந்த சூழலாக மாற முடியும் என்று கண்டனர். ஒளி, வெப்பம், நீர் இன்றி. உயிர் வாழ்க்கை சாத்தியமில்லை. இன்று மூட்டமான நாள் மூடு தோட்டத்தில் மின் விளக்குகள் எரிகின்றன. முற்றத்தில் குளுகுளுவென்று இருக்கிறது காலைப் பொழுது. மூடு தோட்டத்தில் இருக்கிற குழாய்களில் காற்று சூடேற்றப் படுகிறது.

ஆசிரியர் சொல்கிறார்: ''உங்கள் முன் காணப்படுவதைக் கூர்ந்து நோக்குங்கள். உயிரற்றது இல்லாமல் உயிருள்ளது இருக்க முடியுமா என்று யோசியுங்கள். இதோ உங்கள் முன் சிறு சிறு பெட்டிகளைக் கொண்ட பெரிய பெட்டி ஒன்று இருக்கிறது. இதில் விதவிதமான ரசாயன உரங்கள் இருக்கின்றன. வெள்ளை நிற மஞ்சள் நிற, சாம்பல் நிறப் பொடிகளை வேறு வேறு பெட்டிகளிலிருந்து உங்கள் நண்பர்கள் எடுத்து, அவற்றைக் கலந்து தண்ணீரில் கரைப்பதைப் பாருங்கள். இதுதான் செழுமையான விளைமண். மண்ணுருண்டைகள் சத்து மண்ணுடன் கலக்கப்படுகின்றன. எவ்வளவு சாறு நிறைந்த பழங்கள் இந்த மண்ணில் விளைகின்றன என்று பாருங்கள். இலைகள், தண்டுகள், பழங்கள் ஆகியவற்றுக்குத் தேவையான பொருள்களைச் செடி எங்கிருந்து பெறுகிறது? உயிரற்ற பொருளிலிருந்து பெறுகிறது. உயிரற்றதுதான் உயிருள்ளதுக்கான சூழல்''. இந்த உண்மை, இயற்கை ரகசியங்களின் முன்னே குழந்தையுள்ளத்தில் ஒரு வியப்பைத் தோற்றுவிக்கிறது.

அரிஸ்டாடில் (கி.மு. 384-322) கூறியது என்று சொல்லப்படும் ''வியப்பிலிருந்தே சிந்தனை பிறக்கிறது'' என்னும் பண்டைய முதுரை, மீண்டும் நினைவுக்கு வருகிறது. இயற்கை ரகசியத்தின் முன்னே வெளிப்படுகிற உண்மையான வியப்புதான் பாய்ந்து வரும் சிந்தனை வெள்ளத்துக்குச் சக்தி வாய்ந்த உந்துவிசையாய் விளங்குகிறது. இரசாயனப் பொருள்கள் கலந்த திரவத்தில் முற்றிலும் வேறு வேறான பயிர்களான தக்காளி, வெள்ளரி, பார்லி ஆகியவை விளைவது கண்ட குழந்தைகள் என் மீது கேள்விகளைப் பொழிந்தார்கள்: ''நிர்மலமான இந்தத் திரவம் தடியான தண்டுகளாகவும் தேனீக்கள் மொய்க்கும் பிரகாசமான பூக்களாகவும், சாறு நிறைந்த பழங்களாகவும் எப்படி மாறுகிறது?'' ''உயிருள்ளது எங்கிருந்து தோன்றுகிறது? பசுமைத் துண்டுகளைச் சூரியன் கொண்டு வருவதில்லையே, அது வெறுமே ஒளியும் சூடும்தானே தருகிறது.'' ''ஒரே திரவத்திலிருந்து பச்சை வெள்ளரியும், சிவப்புத் தக்காளியும் எப்படி விளைவிக்கிறார்கள்?'' ''வெள்ளரி பச்சையாகவும், தக்காளி சிவப்பாகவும் இருப்பது ஏன்? அவைதான் அருகருகே வளர்கின்றனவே.'' ''இந்தப் பல வண்ணப் பொடிகளில் என்ன இருக்கிறது?'' ''மண்ணுக்குள் கலக்கப்பட்ட பின் சத்துமண்ணால் செடி பச்சையாவது எப்படி?''

குழந்தையின் அறிவு மேற்கொண்டு வளர்ச்சியடைவதற்கு உயிரற்றதற்கும் உயிருள்ளதுக்கும் இடையில் இருக்கிற தொடர்பு பற்றிய காட்சி பூர்வ மனத் தோற்றம் எவ்வளவு அவசியமாகும்! ''உயிருள்ள பொருள் எங்கிருந்து தோன்றுகிறது?'' ''உயிரற்றதிலிருந்து உயிருள்ளதைச் சூரியன் எப்படி 'உருவாக்குகிறது?'' போன்ற கேள்விகளைப் பற்றிக் குழந்தை யோசிக்கையில், வாழ்க்கையின் மாபெரும் புத்தகத்தைப் படிப்பதற்கும், சிக்கலான நிகழ்ச்சிப் போக்குகளின் ரகசியத்தை அறிவதற்கும் குழந்தை தன்னைத் தானே தயார் செய்து கொள்கிறது.

''இயற்கைப் புத்தகத்தைப்'' படிப்பது என்பதை அறிவின் தீவிரத்தன்மையைப் பயிற்றுவிப்பதற்கான ஒரு சாதன

மாகவே நான் கண்டேன். மனத் தோற்றம், சித்திரம், காட்சி ஆகியவை தீவிரமான சிந்தனை நடவடிக்கையின் தொடக்கமே ஆகும். பி. அ. திஸ்தெர்வேக் எழுதினர்: ''எளிய புலனறிவையோ, செயலின்மையையோ கற்றுத் தருகிற ஒவ்வொரு போதனு முறையும் மோசமானதாகும். போதனு முறை எந்த அளவுக்கு சுய நடவடிக்கையைத் தூண்டி விடுகிறதோ அந்த அளவுக்கு அது நல்லதாகும்.''[1] ''இயற்கைப் புத்தகத்தைப்'' படிப்பது இயற்கைக் காட்சிகள் சித்திரங்கள் ஆகியவற்றின் எளிய புலனறிவாக ஆகிவிடாமல், தீவிரச் சிந்தனைக்கும், உலகத்தைத் தத்துவார்த்தமாக அறிவதற்கும், விஞ்ஞான அறிவிற்கும் தொடக்கமாக விளங்க வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன்.

''விஷயத்தின் சிறப்பான உள்ளடக்கம் மாணவனின் சொந்த நடவடிக்கைக்குள் நுழையும் போதுதான் அவன் உணர்வுக்குள் அது நுழையும்'' என்றூர் பிரபலமான சோவியத் உளவியல் வல்லுனர் கி. கொஸ்தியூக். சொந்த ஆர்வத்தைப் பூர்த்தி செய்வதற்கென்றும், நடவடிக்கைக்கென்றேயும் மேற்கொள்ளப்படுகிற நடவடிக்கை தேவையில்லை, விஞ்ஞான அறிவின் உள்ளடக்கத்தை வெளிப்படுத்துகிற நடவடிக்கையே தேவை—இதுதான் சோவியத் போதனு முறையில் தீவிரத் தன்மைக்கும் விஞ்ஞானத் தன்மைக்கும் இடையில் இருக்கிற ஒன்றுமையின் சாரமாகும்.

''இயற்கைப் புத்தகத்தின்'' அடுத்த பக்கம் ''இயற்கையில் எல்லாமே மாறிக் கொண்டிருக்கிறது'' என்று அழைக்கப்பட்டது. இந்தப் பக்கத்திற்கு நாங்கள் மீண்டும் மீண்டும் திரும்பி வந்தோம். இலையுதிர்காலத்து நாள் ஒன்றின் நடுப்பகலில் வகுப்பு மாணவர்கள் பழத் தோட்டத்துக்கு போகிறுர்கள். பழங்களின் பாரத்தால் ஆப்பிள்

---

[1] பி. அ. திஸ்தெர்வேக். தேர்ந்தெடுத்த போதனு முறைக் கட்டுரைகள். மாஸ்கோ, உச்பெத்கிஸ் பதிப்பகம். பக். 128.

மரக் கிளைகளும் பேரி மரக் கிளைகளும் வளைந்து தொங்கு கின்றன. ஆசிரியர் சொல்கிறார்: ''எப்படி மொட்டை யாய், பனி நீரால் மூடப்பட்ட கிளைகளையும், பனித் துகள் களால் தூவப்பட்ட அடித்தண்டுகளையும் கொண்ட மரங் களுடன் நமது தோட்டம் இருந்தது என்பதை நினைத்துப் பாருங்கள்... இப்போது, கிளைகள் இலைகளால் மூடப் பட் டிருக்கின்றன. ஆப்பிள் பழங்களும் பேரிக்காய்களுமாக பூமி சாறு தருகின்றது.''

இரண்டு மாதம் கழித்து நாங்கள் மீண்டும் தோட்டத் துக்கு வந்தோம், அது எப்படி மாறி இருந்தது? பழுப்பு இலைகள் மெதுவான கம்பளம் போல் பூமியை மூடி இருந் தன. கிளைகள் பாதி மொட்டையாய் இருந்தன. பொந் துள்ள வயதான ஆப்பிள் மரமும் காட்டுச் செடியொன் றும் அருகருகே இருக்கின்றன. இந்த ஆப்பிள் மரத்தை நமது தாத்தாக்கள் நட்டார்கள். அதில் பாதிக் கிளைகள் காய்ந்து போய்விட்டன. சில கிளைகள்தான் பச்சையாக இருக்கின்றன. அவற்றில் சாறு நிறைந்த பெரிய பழங்கள் இருக்கின்றன. சூரியனுக்கடியில் இன்னும் ஒன்றிரண்டு வருடங்களே இந்த மரம் நிற்கும். பின்பு இதனை வெட்டி விட நேரும். காட்டுச் செடியின் அடித் தண்டில் இருக்கிற மெல்லிய குச்சி பசுமை காட்டுகிறது. வயதான ஆப்பிள் மரத்திலிருந்து இந்தக் குச்சியை எடுத்து இச்செடியுடன் ஒட்ட வைத்திருக்கிறார்கள் மாணவர்கள். சில ஆண்டுகள் கழித்து இக்குச்சி மரமாகி விடும். அதில் பூக்கள் மலரும், பொன்னிறப் பழங்கள் பழுக்கும்.

''குழந்தைகளே, உங்களைச் சுற்றிலும் கவனமாகப் பாருங்கள். எல்லா நேரங்களிலும் ஒரே மாதிரி இருந்து விடக் கூடிய செடி ஏதாவது இருக்கிறதா?''

குழந்தைகளின் வாழ்க்கை அனுபவம் சிறிதே. ஆனால் இள வயதிலிருந்தே உழைப்பு இயற்கை ஆகியவற்றைக் கொண்ட உலகிலேயே அவர்கள் வாழ்ந்து வருகிறார்கள். செடி பிறக்கிறது. பூ விடுகிறது, பழம் தருகிறது என்று அவர்களுக்குத் தெரியும்... பூமியிலிருந்து சிறிய தண்டு எப்படித் தோன்றுகிறது, செடியின் பருமனான தண்டாக

எப்படி அது மாறுகிறது, மரத்தில் தளிர்கள் எப்படி விரி கின்றன, எப்படி இலைகள் தோன்றுகின்றன... என்றெல் லாம் குழந்தைகள் சொல்கிறார்கள். உயிருள்ளதின் பாய்ச் சல்களாக விரைந்து வருகின்ற மாற்றங்கள் குழந்தை களுக்கு வியப்பூட்டுகின்றன. பீச் பழ மரங்கள் நிறைந்த தோட்டத்துக்கு நேற்று நாங்கள் வந்திருந்தோம். கரிய மொட்டுகளையும், மொட்டைக் கிளைகளையும் கண்டோம். இன்று இங்கு வருகிறோம். எங்கள் கண்ணுக்கு முன்னே புதிய காட்சி விரிகிறது. சிறிய சிறிய ரோஜா நிறப் பூக் களால் கிளைகள் நிறைந்திருக்கின்றன... ஒரே இரவில் மொட்டுகள் விரிந்து மரம் பூக்கள் நிறைந்ததானது எப்படி? இரவு நேரத்தில் அது தூங்குகிறதா, இல்லையா? பொது வாகவே மரங்கள் தூங்குகின்றனவா, இல்லையா? கிளையை வெட்டும் போது மரத்துக்கு வலிக்கிறதா, இல்லையா? மரம் ஏன் முதிர்ச்சியுற்று இறந்து போகிறது?—இந்தக் கேள்விகளுக்கு விடை காண நான் நீண்ட நேரம் யோசிக்க வேண்டியதாயிற்று. நான் தந்த விடைகளோ புதிய கேள்விமாரியை உருவாக்கின.

குளக் கரையிலும், பள்ளத்தாக்கிலும், அடர்ந்த புதர் களுக்கருகேயும் இருந்தபடி ''இயற்கைப் புத்தகத்தின்'' இந்தப் பக்கத்தைப் படித்தோம். இதோ ஆழமில்லாத நீரில் தலைப்பிரட்டைகள் நீந்திக் கொண்டிருக்கின்றன. இவை தவளைகளாக மாறிவிடும் என்று குழந்தைகட்குத் தெரியும். ஆனால் இந்த நிகழ்ச்சிப்போக்கு எப்படி நடை பெறுகிறது? மீன் தொட்டியில் இருக்கிற மீன் குஞ்சு மீன் போலவே இருக்கிறது, தலைப்பிரட்டையோ கொஞ்சம் கூடத் தவளை போலவே இல்லையே, ஏன்? கூட்டுப்பண்ணை யில் பட்டுப் புழுக்களுக்குத் தீனி போடுவதைப் பார்த் திருக்கிறோம். கசகசாத் தானியம் போல இருக்கிற சிறிய முட்டையிலிருந்து பெரும்பசி கொண்ட சிறு புழு பிறக் கிறது. அது முசுக்கொட்டை இலையை மட்டுமே தின்கிறதே ஏன்? சிறிய புழு பெரிய புழுவாக மாறி, முதிர்ச்சியுற்ற தோலுக்குள்ளிருந்து பலமுறை சட்டையுரிக்கிறதே ஏன்? தன்னைச் சுற்றிப் பட்டு வலை பின்னி தங்க வீட்டுக்குள்—

புழுக்கூட்டுக்குள் ஒளிந்து கொள்கிறது—அங்கே அதற்கு என்ன நேர்கிறது? சில புழுக்கூடுகளைக் கையில் எடுக்கிறோம், சன்னலின் மேல் வைக்கிறோம். கொஞ்ச நேரம் கழித்து அழகான பட்டாம்பூச்சி அதிலிருந்து தோன்றுவதைக் காண்கிறோம். பட்டாம்பூச்சிகள் முட்டையிடுகின்றன. மீண்டும் அதே போல நடக்கிறது. மெல்லிய பட்டு நூலை புழு எவ்வாறு செய்கிறது? கூடுகட்டுவதற்கு முன்னால் முசுக்கொட்டை இலைகளை புழு ஏராளமாகத் தின்பதேன்?

தீவிரமாக இயற்கையை அறிவதுடன் எந்த அளவுக்கு நடவடிக்கை சம்பந்தம் கொண்டிருக்கிறதோ, அந்த அளவுக்கு ஆழமாக, சுற்றியுள்ள உலகத்துக் காட்சியைக் கிரகித்துக் கொள்ள முடியும். முன்னர் கவனத்தில் எடுத்துக் கொள்ளாத தோற்றங்களை, மேலும் மேலும் அதிகமாக குழந்தைகள் ஒவ்வொரு மாதமும் கண்டார்கள். உதாரணமாக அவர்களுக்குத் தெரியாமலிருந்த வாழ்க்கையின் வடிவங்களை அவர்கள் கண்டனர்: இருண்ட, ஈரமான நிலவறையில் உருளைக் கிழங்கிலிருந்து வெள்ளை நூலிழைகள் வெளிவந்தன. இவை என்ன? இவை வேர்களா அல்லது எதிர்காலத் தண்டுகளா? மரங்களது அடித் தண்டுகளின் வடக்குப் பகுதியில் பாசி படருகிறது, வெய்யிலிலிருந்து அது ஏன் ஒளிந்து கொள்கிறது? பாசிக்கு விதைகள் ஏன் இல்லை? அது எப்படிப் பல்கிப் பெருகுகிறது? தாவரங்கள் அனைத்தும் பூக்கின்றன. பாசியோ பூப்பதில்லையே, அப்படியானால் என்ன செடி இது?

மாற்றமடைவது உயிருள்ளது மட்டும் அல்ல என்று ''இயற்கைப் புத்தகத்தின்'' சில வரிகளே குழந்தைகட்கு எடுத்துக் காட்டின. கரைக்கருகில் இருந்த ஒரு பாறையை நோக்கி நாங்கள் போனோம். சாம்பல் நிறக் கற்களைக் கூர்ந்து பார்த்த குழந்தைகள் அவற்றில் மெல்லிய விரிசல்கள் இருப்பதைக் கண்டனர். ஒரு கல்லிலிருந்து நொறுங்கிய ஒரு மெல்லிய படிவம் கைகளில் உதிர்ந்தது. அப்படியானால் கல் எப்போதும் கல்லாகவே இருப்பதில்லை. சில மாதங்களுக்கு முன்பு ''வெய்யிலிலும் சரி, நிலவறையிலும்

சரி கல் ஒரேமாதிரி இருக்கிறது'' என்று அவர்கள் சொன்னதைக் குழந்தைகள் நினைத்துப் பார்க்கின்றனர். பகலில் கல் சூடேறுகிறது, இரவில் குளிர்ச்சியடைகிறது. விரிசல்கள் தோன்றுகின்றன, இவ்விரிசல்களில் தண்ணீர் நுழைகிறது. எனவே கல்லும்கூட நிரந்தரமாய் இருப்பதில்லை என்று தெரிகிறது.

''இயற்கையில் எல்லாமே மாறிக் கொண்டிருக்கிறது'' என்பது பற்றிய சிந்தனைப் பாடங்களைப் பகுத்து ஆய்வு செய்த நான், கவனிக்கப் படாமலிருந்த அன்றாட வாழ்க்கையின் நியதிகளை குழந்தை எந்த அளவுக்குத் தெரிந்து கொள்கிறதோ, எந்த அளவுக்கு அவற்றைக் கண்டுபிடிக்கிறதோ, அந்த அளவுக்கு அவனிடம் அறிந்து கொள்ள வேண்டும் என்ற விருப்பம் ஆழப்படுகிறது,அந்த அளவுக்குச் சுற்றியுள்ள உலகத்துத் தோற்றங்களை அறிகிற புலனறிவு உறுப்புக்களின் நுண்ணிய தன்மை தெளிவடைகிறது, அந்த அளவுக்கு புலனறிவு உறுப்புக்கள் சிந்தனையுடன் கொண்டுள்ள தொடர்புகள் கூர்மையடைகின்றன என்ற முடிவுக்கு வந்தேன். சோவியத் மனித இயல் வல்லுனரான மி. நெஸ்தூர்ஹின் நூல்களில் காணப் படுகிற பின்கண்ட வார்த்தைகள் குழந்தையின் அறிவு வளர்ச்சி நிகழ்ச்சிப் போக்கினை விளக்குவதற்கான திறவு கோலைத் தருகின்றன என்று நான் கருதுகிறேன்: மேலும் மேலும் புதிய புதிய தகவல்களை இடையறாது வெள்ளமாகப் பெறுகிற குழந்தைப் பருவத்தில்தான் உலகை அறிவதில் வளர்ந்து வரும் நாட்டத்தைப் பெறுகிறான் மனிதன்.

முழுமையான அறிவு வளர்ச்சிக்கு மிக முக்கியமான தேவை தகவல் வெள்ளமே. ஏதோ சில காரணங்களால் இந்த வெள்ளம் வற்றத் தொடங்கி விடுகிறது.அது நிறைவு செய்யப் படுவதில்லை என்றால் என்னவாகும்? குழந்தை தானாகப் பார்க்கிற விஷயத்தைத் தகவல் வெள்ளம் என்று சொல்ல முடியாது. சுற்றியுள்ள உலகத்தைப் பற்றிய தமது அறிவைக் குழந்தைகளுக்கு முதியவர்கள் தருவதும், தமது சிந்தனை ஆற்றலால் குழந்தையின் மீது செல்வாக்குச் செலுத்தும் தகவல் வெள்ளத்துக்கு முதியவர்கள்

ஊட்டம் தருவதும்தான் மனிதனைப் பயிற்றுவிப்பது ஆகும்.

குழந்தை பிறந்ததிலிருந்து அவன் பள்ளிக்கூடம் வரத் தொடங்குவது வரை குடும்பத்தில் அவனைச் சுற்றி நிலவும் சூழலை நான் கவனமாகப் பரிசீலிக்கத் தொடங்கினேன். சுவையான நியதிகள் விரியத் தொடங்குகின்றன பள்ளிக் கூடத்துக்கு முந்திய வயதில் குழந்தையைத் தன்னந் தனியாக இருக்க விட்டு விட்டால், சாதாரண மனிதச் சூழலுக்கு அத்தியாவசியமான தகவல் வெள்ளத்தை முதியவர்கள் தரவில்லை என்ருல் குழந்தையின் மூளை மந்தநிலைக்கு உள்ளாகிறது: ஆர்வமும், அறிந்து கொள்ளும் ஆவலும் மறைந்து போகிறது, அலட்சியம் வளர்கிறது. உலகை அறிய வேண்டும் என்ற வளர்ந்து வரும் நாட்டம், குழந்தையின் அறிவு வளர்ச்சியைப் பெருமளவுக்கு நிர்ணயிக்கிற அந்த மிக முக்கியமான சிந்தனை ஆற்றலாக விளங்கவில்லையா? பார்க்கப் போனுல் இது உண்மையே.

குழந்தைப் பருவத்தில் பெத்ரிக் தன்னந்தனியாக விடப்பட்டான். தாயும் தாத்தாவும் காலையில் வேலைக்குப் போஞர்கள். சிறுவன் வீட்டில் தனியாக இருந்தான். கூரிய கம்பிகளால் வேலியிடப்பட்ட கொட்டகையில் அவனை விட்டுச் சென்றனர். அண்டை வீட்டுக்கார அம்மாள் குழந்தை எப்படி இருக்கிருன் என்று அவ்வப்போது பார்த்துக் கொள்வார். இரண்டாவது வயதிலிருந்து ஐந்தாவது வயது வரை இவ்வாறுதான் பெத்ரிக் ''வளர்க்கப் பட்டான்''. ஏதோ ஒரு ''செடியின்'' வளர்ச்சி போன்றது இது. சிறுவனுக்கு நல்ல உணவு, உடை, காலணி ஆகியவை கிடைத்தன. ஆனுல் மிக முக்கியமான மனிதச் சூழல் மட்டும் இருக்கவில்லை. பிரதானமாக சமவயதுள்ள குழந்தைகளுடன், ஐந்து வயது வரை தெருவில் விளையாடினுன் பெத்ரிக். பள்ளிக்கூடத்துக்கு வந்த அவனுக்குச் சில மிகச் சாதாரணமான தாய்மொழி வார்த்தைகளுக்குக் கூட அர்த்தம் தெரியவில்லை. சுற்றியுள்ள பொருள்களின் மீது சரிந்து செல்கிற அவனது அலட்சியப் பார்வை ஒரு குட்டிக் கிழவனின் பார்வை போல எனக்குத் தெரிந்தது. சிந்தனைக்கான உயிருள்ள பொருள், அதாவது மூளை அரைக்

கோளத்தின் உயிரணுக்கள் மந்தப்பட்டு இருந்தன. ஏனெனில் நரம்பு மண்டலம் உருவமைகிற மிக முக்கிய பருவத்தில்—மூளையின் இளமைப் பருவத்தில்—சுற்றியுள்ள உலகத்திலிருந்து பெருக்கெடுத்து வருகிற தகவல் வெள்ளம் அவனுக்குக் கிட்டவில்லை. எனவே, ''இயற்கைப் புத்தகத்தைப்'' படிப்பது குழந்தை வளர்ப்பில் பெரும் பங்கு வகிக்க வேண்டும்.

*...நாங்கள் அடுத்த பக்கத்தைத் திருப்புகிறோம்—''வாழ்க்கை விதை''. ஆப்பிள், பேரி, பீச், பிளம் விதைகளை நாற்றுக்கள் தயாரிப்பதற்காகக் குழந்தைகள் சேகரிக்கிறார்கள். விதையிலிருந்துதான் செடி முளைக்கிறது என்று அவர்கள் அனுபவம் மூலமாக அறிந்திருந்தனர். வசந்த காலத்திலும், கோடைகாலத்திலும் ஸ்டெப்பியில், காடுகளில், சோலைகளில் வாழ்க்கை வேகமாக மலரும் போது தாவரங்களில் விதைகள் முற்றுகின்றன, இனம் தொடர்ந்து தழைக்கிறது. நாங்கள் உல்லாசப் பயணம் போகிறோம். பாப்ளார் மரத்திலிருந்து பஞ்சுப் பூக்களையும், டாண்டெலியன் செடியிலிருந்து மணிப் பூக்களையும் காற்று பிய்த்துக் கொண்டு போகிறது. மெல்லிய பஞ்சுப் பூக்களில் விதைகளைக் காணுகிறார்கள் குழந்தைகள். அவர்கள் வியப்படைகிறார்கள்: இந்தத் தாவரங்களின் விதைகளை இயற்கை எப்படிப் பேணிக் காக்கிறது. மண்ணின் வரண்ட மேற்பரப்பில் இவை தங்குவதில்லை, மண்ணில் ஈரத்தைக் கண்டவுடன் விதை அதில் ஒட்டிக் கொள்கிறது, ''கப்பல் நங்கூரம் பாய்ச்சுவது போல வேரூன்றுகிறது'' விதை முளை விடுகிறது. ''இயற்கைப் புத்தகத்துப்'' பக்கத்தை வரி வரியாகச் சுவாரஸ்யமாகப் படிக்கிறார்கள் குழந்தைகள். பல செடிகள் விதைகளை எப்படி வெடிக்கின்றன, வாழ்க்கை விதைகள் எப்படி நாலாபுறமும் சிதறிப் பறக்கின்றன, காற்று அசைத்தாட்டும் கசகசாச் செடியின் குண்டுக் காயின் சிறிய ''கதவுகளிலிருந்து'' மற்றவற்றை விட விரைவில் முதிர்ந்து விடுகிற விதைகள் எப்படி வெளியே பறக்கின்றன என்றெல்லாம் அவர்கள் படித்தார்கள். மனித ஆடைகளிலும், பிராணிகளின் தோல்களிலும்*

ஒட்டிக் கொள்வதற்கு வகை செய்யும் செடிகளின் உறுப்பு களை உருப்பெருக்காடியின் வழியாகக் கூர்ந்து பார்க்கி ரோம். பயிர்களின் விதைகளைச் சேகரிக்கிரோம். குழந்தை கள் யோசனையில் ஆழ்கிருர்கள்: சிறு விதையிலிருந்து பெரிய செடி எப்படி வளர்கிறது? விதை உயிருள்ளதா, உயிரற்றதா? இந்தப் பக்கத்தின் சில சுவாரஸ்யமான வரி களைச் சிறுவர்கள் பனிக்காலத்தில் படிக்கிருர்கள். சில தாவரங்கள் தமது விதைகளைப் பனியில் வீசி விடுகின்றன. பனியிலேயே அது பல வாரங்கள் கிடக்க வேண்டும். பின் னர்தான் அவை முளை விடுகின்றன.

அறிந்து கொள்ள வேண்டும் எனும் நாட்டம் எந்த அளவுக்குச் சக்திவாய்ந்ததாக இருக்கிறதோ, அந்த அள வுக்கு அதிகமான அக்கறையுடன் குழந்தைகள் வேலை செய் கிருர்கள், அந்த அளவுக்கு உழைப்பின் ஆராய்ச்சித் தன்மை ஆழமாக வெளிப்படுகிறது. சிந்திப்பதற்குக் கைகள் உத வும் போது, குழந்தையைப் பதட்டப் படுத்துகிற கேள்வி களுக்கு உழைப்பிற்குள் அவன் விடை காண முயலும் போது, புதிர்களை விடுவிக்கும் போது, வெறும் கருது கோளாக இதுவரை ஏற்றுக் கொள்ளப்பட்டு வந்த விஷயம் உண்மையே எனும் உறுதி ஏற்படும் போது சுற்றி யுள்ள உலகத்திலிருந்து வருகிற தகவல் வெள்ளம் அறிந்து கொள்வதற்கு குறிப்பாக ஆற்றல் வாய்ந்த தூண்டுதலாக விளங்குகிறது. நிர்பந்தத்தால் அன்றி மெய்யான விருப் பத்தின்படி உழைப்பாளனுகிய குழந்தை உண்மையான சிந்தனையாளனுகிறது. உழைக்க வேண்டும் எனும் குழந் தை விருப்பத்துக்கு ஊற்றுக்கண்ணுக விளங்குவது முதற் கண் **அறிந்து கொள்கிற ஆர்வமே.** ஆகும். இந்த விருப் பம் வளர்ந்து வந்தால், உழைப்பில் குழந்தைகள் கொள் கிற அக்கறை உறுதிப்படும். குழந்தையின் அறிவுவேட்கை, அறிவுத்தாகம் சொந்தத் தகுதி பற்றிய உணர்ச்சி ஆகிய வற்றின் கூட்டுக் கலவையே போதனைப் பணியின் நடை முறையில், உழைப்பின் மீது அன்பு என்று அழைக்கப்படு கிறது.

''இயற்கைப் புத்தகத்தின்'' மிகச் சுவாரஸ்யமான

பக்கங்களில் ஒன்முன ''வாழ்க்கையின் ஊற்றுக்கண் சூரி யனே'' எனும் பக்கத்தைப் படித்த நாட்கள், குழந்தை கள் உணர்விலும், உளநெகிழ்ச்சி நிறைந்த ஞாபகத்திலும் ஆழமான சுவடு பதிக்கின்றன. வெய்யில் நிறைந்த கோடை காலத்தின் வெப்பம் நிறைந்த நாள் ஒன்றில் வயலுக்கும், தோட்டத்துக்கும், திராட்சைப் பண்ணைக்கும் நாங்கள் போகிறேம். கோதுமை வயல்கள், சூரியகாந்தி வயல்கள், திராட்சைக் கொத்துகள், பழுத்துக் கொண்டிருக்கும் பேரிக்காய்கள், முற்றி வரும் தக்காளிகள் ஆகியவற்றைக் கண்டோம். பயன் தரும் இந்தப் பரிசுகளில் சூரியனின் ஒளியையும் வெப்பத்தையும் குழந்தைகள் கண்டனர். மனி தனுக்கு வேண்டிய அனைத்தையும் சூரியனின் உதவியால் பூமி தருகிறது. ஏராளமான கவனித்தல்கள், ஒப்பீடுகள் ஆகியவற்றின் மூலமும், காரண-விளைவுத் தொடர்புகளை நிர்ணயிப்பது மூலமும் செய்யப்பட்ட இந்த முடிவு குழந் தைகளுக்கு வியப்பைத் தருகிறது. சிந்தனை சிறகடித்துப் பறக்க புதியதொரு உந்துதலாக இது விளங்குகிறது. சுற்றி யுள்ள உலகத்தைக் கூர்ந்து பார்க்கிருர்கள் குழந்தை கள், ஒவ்வொரு பொருளின் தோற்றத்தைப் பற்றியும் ஆழ்ந்து யோசிக்கிருர்கள். வாழ்க்கையின் ஒரே ஊற்றுக் கண் சூரியனே என்பதில் அவர்களுக்கு மனவுறுதி ஏற்படும் போது இந்த வியப்பு இன்னும் ஆழமாகிறது.

ரொட்டி, உருளைக் கிழங்கு, சூரியகாந்தி—இவற்றில் எதுவும் சூரியன் இன்றித் தோன்ற முடியாது. சூரிய ஒளி யாலும் வெப்பத்தாலும் வளர்கிற தாவரங்களையே பிராணி கள் புசிப்பதால் சூரியன் இல்லாமல் மாமிசம், பால், வெண்ணெ ஆகியவையும் இருக்க முடியாது. வியப்புற்ற குழந்தைகள் கேட்கிருர்கள்: ''சூரியன் என்பது என்ன? சூரியன் நம் மீது கொட்டுகிற வெப்பம் அதற்கு எங்கிருந்து கிடைக்கிறது? பனிக்காலத்தில் சூரியன் பூமிக்கு ஏன் அவ் வளவு குறைவாகச் சூடு தருகிறது? சூரியன் அணைந்து போகாதா? சூரியன் அணைந்து போனுல் என்னவாகும்?''

அறிவின் உச்சிக்குச் சிந்தனை விரைவாகச் சிறகடித்துப் பறப்பதின் தொடக்கம்தான் ''இயற்கைப் புத்தகத்தைப்''

படிக்கும் போது எழுந்த கேள்விகளாகும், இந்த உச்சியில் தான் வாழ்க்கை ரகசியத்தின் சிக்கல் விடுபடும். ஆர்வம் நிறைந்த ஆய்வாளர்களாகவும், உலகத்துக் கண்டுபிடிப் பாளர்களாகவும் குழந்தைகள் விளங்க வேண்டும் என்பதற் காகவும், உண்மை என்பது போதகர்களால் தயார் நிலையில் தரப்படுகிற முடிவுகளாக அன்றி, இதயத் துடிப் பால் உணரப்படுகிற சுற்றியுள்ள உலகத்தைப் பற்றிய பிரகாசமான சித்திரமாக அது விளங்க வேண்டும் என்பதற் காகவும் நான் பாடுபட்டேன். கண்டுபிடிப்பானது குழந்தை யைப் பதட்டப்படுத்தினுல் மனிதன் வாழ்க்கை முழுதும் போற்றுகிற சொந்த மனவுறுதியாக உண்மை விளங்கும். அறிவாற்றல் உணர்ச்சிகள், உலகை அறிகிற மகிழ்ச்சி அனுபவம், இயற்கையின் மகத்துவம் கண்டு அடைகிற வியப்பு, இயற்கை நியதிகளின் ஒழுங்கு—இவை உறுதி யான ஞாபகத்துக்கு ஊற்றுக் கண்ணுகும்.

சில குழந்தைகளின் ஞாபக சக்தி வளர்வதற்கும், உறுதி யடைவதற்கும் அறிவாற்றல் உணர்ச்சிகளே பிரதான சாதனமாக விளங்குகின்றன என்று நான் கண்டேன். வால் யா விஷயங்களை ரொம்பவும் மோசமாக நினைவு வைத்துக் கொள்கிருள். அவள் மூளையில் எல்லாமே ''தலைகீழாகப் புரள்கிறது'' என்று தோன்றுகிறது. சுற்றியுள்ள உலகத்துக் காட்சிகளின் முன்னே சிறுமியின் இதயம் வியப்பால் துடிக்குமாறு செய்ய வேண்டும். ''இயற்கைப் புத்தகத் தின்'' ஒரு பக்கமான ''எந்தவொரு உயிரும் சுற்றுச் சூழ லுக்குத் தன்னைப் பழக்கப் படுத்திக் கொள்கிறது'' என் னும் பக்கத்தைப் படிப்பதற்காக வயல், காடு, ஆற்றங் கரை, தோட்டம், தேனீப் பண்ணை ஆகியவற்றுக்குப் பல நாட்கள் போய் வந்தோம். சில பூக்கள் உஷ்ண நேரத்தில் தமது இதழ்களை மடித்துக் கொள்கின்றன என்பதையும், மாலை நேரக் குளுமையில் இதழ்களை விரிக்கின்றன என் பதையும் குழந்தைகளுக்குச் சுட்டிக் காட்டினேன். தாழ் வாக இறங்கியுள்ள அடர்த்தியான இலை அடுக்கினூடே வெண்மலர்ச் செடியின் நுண்ணிய தண்டு ஒரு அம்பு போல் எப்படி மேலே வருகிறது, தேனீக்கள் கூடு கட்டி தேன

டையில் எப்படி தேனை நிரப்புகின்றன, திராட்சைக் கொடியின் வேர் ஈரம் எடுப்பதற்காக பூமிக்குள் எப்படி மூன்று மீட்டர் ஆழம் செல்கிறது, மண்ணுக்குள் விழுகிற வில்லோ மரக் கிளை எப்படி வேர் விட்டு அதிலிருந்து மரம் முளைக்கிறது. என்றெல்லாம் நான் குழந்தைகளுக்குக் காட்டினேன்... இந்தப் புதிய விஷயங்கள் சிறுமியின் இதயத்தில் மகிழ்ச்சி அலைகளை ஏற்படுத்தின. குழந்தையின் கண்களில் இருந்த அலட்சியப் பார்வை மறைந்து அங்கு உயிரோட்டமுள்ள அக்கறை தோன்றியது. மௌனம் கொண்டிருக்கும் வால்யா பேசினுள். அவள் கேட்டாள்: ''வீட்டுக்குப் போக எங்கே பறக்க வேண்டும் என்று தேனீக்கு எப்படித் தெரியும்? தனது கூட்டை அது எப்படிக் கண்டுபிடிக்கிறது? மரங்களுக்கு அடியில் இன்னும் பனி கிடக்கிறதே, வெண் மலர்ச் செடியின் பூவிற்குக் குளிராக இல்லையா?'' கேள்வி எங்கே எழுகிறதோ, அங்கே சிந்தனை இருக்கிறது. சிந்தனை எங்கே இருக்கிறதோ அங்கே ஞாபக சக்தியானது சுற்றியுள்ள உலகத்துக் காட்சிகளையும், இயற்கை நியதிகளையும் பாதுகாக்கிறது.

நாங்கள் ஒன்றுக்குப் பின் ஒன்றாகப் படித்த ''இயற்கைப் புத்தகத்துப்'' பக்கங்களின் பெயர்களாவன: ''தாவர உலகமும் பிராணி உலகமும்'', ''தண்ணீர்த் துளி பயணம் போவது எப்படி'', ''இயற்கைச் சக்திகளை மனிதன் பயன்படுத்துகிறான்'', ''வசந்தத்தில் இயற்கை துயிலெழுவது'' ''மிக நீண்ட கோடை நாட்கள்'', ''காட்டில், வயலில், புல்வெளியில் வசந்தகாலப் பூக்கள்'', ''கோடைகாலப் பூக்கள்'', ''லாந்திஷ்களும் ஊதாப் பூக்களும்'', ''இலையுதிர்காலத்துக் குழந்தைகள்—கிரிசான்திம மலர்கள்'', ''குளத்தில் வாழ்க்கை'', ''கடுங் கோடையின் கடைசி நாட்கள்'', ''பனிக்காலத்துக்காக காத்திருக்கிறது இயற்கை'', ''பனிக்காலத்தின் முதல் காலைப் பொழுது'', ''பனிக்காலக் காட்டில் பறவைகளின் வாழ்க்கை'', ''கோதுமைக் கதிர்கள்'', ''தேனீக் குடும்பத்தின் வாழ்க்கை'', ''வானம்பாடிகள் கூடு கட்டுகின்றன'', ''இடிமழை நெருங்குகிறது'', ''இலையுதிர்கால மப்பு நேரம்'', ''பனிக்காலத்

தின் நடுவில் பூக்களின் உலகம்'', ''ஈரத்தைப் பாதுகாக்கிறது காடு'', ''கொக்குகள் பறந்து வந்தன'', ''வெப்பப் பிரதேசத்துக்குப் பறந்து செல்லப் பறவைகள் தயாராகின்றன'', ''கோடைகால மழைக்குப் பின் வருகிறது வெய்யில்'', ''ஆற்றிற்கு மேலே தெரியும் வானவில்'', ''வசந்தத்தில் விதைக்கப்பட்ட கோதுமை'', ''சூரியகாந்திச் செடிகள் பூத்திருக்கின்றன'', ''வானத்தில் நட்சத்திரங்கள்'', ''மண்ணின் வாழ்க்கை'', ''பச்சை இலை ஒரு சூரியக் கிடங்கு'', ''காளானும் பூசணமும்'', ''ஓக் விதையிலிருந்து ஓக் மரம் எப்படி முளைக்கிறது'' இன்ன பிற.

பி. அ. திஸ்தெர்வேக் எழுதினுர்: ''மோசமான ஆசிரியர் உண்மையைக் கொண்டுவந்து தருகிறுர், நல்ல ஆசிரியர் அதனைக் கண்டுபிடிக்கக் கற்றுத் தருகிறுர்.''[1] சுற்றியுள்ள உலகத்துத் தோற்றங்களை ஆய்வு பூர்வமாக அணுகுவது இன்று குறிப்பாக பெருத்த முக்கியத்துவம் பெறுகிறது. ஆய்வுகளையும் தேட்டங்களையும் சிந்தனை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும் என்பதும், விஞ்ஞான உண்மையைக் கிரகித்துக் கொள்வதற்கு முன்ஞல் உண்மைகளைச் சேமித்து அவற்றை பகுத்து ஆய்வு செய்து, எதிர் நிறுத்தி, ஒப்பிட்டுப் பார்ப்பது நிகழ வேண்டும் என்பதும் மிக முக்கியமானதாகும். இயற்கைத் தோற்றங்களையும் காட்சிகளையும் கவனிக்கிற குழந்தை சிந்தனை வடிவங்களையும், நிகழ்ச்சிப் போக்குகளையும் கைக்கொள்கிறது, கருத்துருக்களால் வளமை பெறுகிறது, இந்தக் கருத்துருக்கள் ஒவ்வொன்றும் காரண—விளைவுத் தொடர்புகளின் உண்மையான அர்த்தம் பெற்றிருக்கிறது. இந்தத் தொடர்புகள் கவனிப்பவனின் ஆர்வம் நிறைந்த கூரிய கண்களுக்குத் தட்டுப்படுகின்றன. ''இயற்கைப் புத்தகத்தைப்'' படிக்கிற குழந்தைகளின் சிந்தனையில் ஒரு சிறப்பு மிக்க தனித்தன்மை இருக்கிறது என்று அனுபவம் எடுத்துக்

---

[1] பி. அ. திஸ்தெர்வேக். தேர்ந்தெடுத்த போதனு முறைக் கட்டுரைகள். மாஸ்கோ, உச்பெத்கிஸ் பதிப்பகம், 1956, பக். 158.

காட்டியிருக்கிறது: சூட்சுமமான கருத்துருக்களைச் சார்ந்து நிற்கிற குழந்தை, இந்தக் கருத்துருக்கள் உருவாவதற்கு அடிப்படையாய் இருந்த மனத்தோற்றங்கள், காட்சிகள், சித்திரங்கள் ஆகியவற்றை சிந்தனு பூர்வமாக அணுகுகிறது.

குழந்தைப் பருவத்தில் ''இயற்கைப் புத்தகத்தைப்'' படித்திருந்த எனது மாணவர்கள் சிறுவர்களாகவும், பின்னர் வாலிபர்களாகவும் இளம் பெண்களாகவும் மாறிய பொழுது, பொதுவான அறிவு வளர்ச்சி, மூளை உழைப்பின் தன்மை, முறை, அறிவாற்றல் அக்கறைகளின் பன்முகத் தன்மை ஆகியவற்றில் சுற்றியுள்ள உலகத்தைத் தீவிரமாக அறிந்து கொள்வது எங்ஙனம் பிரதிபலித்தது என்று அறிந்து கொள்ள குறிப்பாக அக்கறை காட்டினேன். மாணவர்களின் அறிவாற்றல் பெருத்த ஆர்வம் நிறைந்ததாய் வாழ்க்கையில் இருந்தது என்று எனக்கு உறுதி ஏற்பட்டது. எல்லாவற்றிலும் அவர்கள் ஆவல் கொண்டனர். சுற்றியுள்ள அனைத்தும் அவர்களது உணர்ச்சிகளையும் சிந்தனைகளையும் சுண்டியிழுத்தது. தோற்றங்களையும், பொருள்களையும் அவற்றின் பரஸ்பரத் தொடர்பில் காணும் திறன் பெற்றிருந்ததுதான் இளமைப் பருவத்திலும், இளமைப் பருவத் தொடக்கத்திலும் எனது மாணவர்களிடம் காணப்பட்ட அறிவாற்றல் வாழ்க்கையின் ஒரு அம்சமாகும். தெளிவற்றிருந்த, புரியாமலிருந்த விஷயங்கள் அனைத்தையும் புத்தகத்தில் புரிந்து கொள்வதற்கு அவர்கள் முயன்றனர். அறிவின் ஊற்றுக்கண்ணுகவும், ஆன்மிகத் தேவையாகவும் விளங்கியது புத்தகம்.

## பொருள்களின் உலகிலிருந்து சமுதாயத்துக்கு. எது எங்கிருந்து வருகிறது?

இயற்கை மனிதனைப் பயிற்றுவிப்பதற்கு வளம் வாய்ந்த ஊற்றுக்கண்ணுகும். இயற்கையை அறிந்து கொள்வதன் மூலம் அறிவு, உணர்ச்சிகள், கண்ணேட்டங்

கள், மனவுறுதிகள் ஆகியவை மட்டும் உருவாகத் தொடங்கு கின்றன. மனிதன் சமுதாயத்தில் வாழ்கிருன். அவனது முழு வாழ்க்கையும் மற்ற மனிதர்களுடன் அவன் கொள் கிற உறவுகளாகவே இருக்கின்றன. நூற்றுக் கணக்கான, ஆயிரக் கணக்கான மற்ற மனிதர்கள் ஒருவனது பொருள் வகைத் தேவைகளேயும் ஆன்மிகத் தேவைகளேயும் நிறைவு செய்வதால்தான் அவனுல் வாழ்க்கை நடத்த முடிகிறது என்றும், நூற்றுக் கணக்கான, ஆயிரக் கணக்கான மற்ற மனிதர்களுக்குப் பொருள்வகை மதிப்புகளேயும் ஆன்மிக மதிப்புக்களேயும் படைக்காமல் சமுதாயத்தில் வாழ முடி யாது என்னும் முக்கியமான உண்மையைக் குழந்தைகள் படிப்படியாகப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற் காகத் தொடக்கப் பள்ளியின் நான்காண்டு காலக் கல்வி போதனேயிலும் நான் பாடுபட்டேன். உழைப்பில், சமு தாயத்தில் இருக்கிற பரஸ்பர உறவுகள் எனும் நிகழ்ச்சிப் போக்கில் மனிதனின் ஒழுக்க மாதிரியும், அவனது ஆன் மிகக் கலாசாரமும், வாழ்க்கைக் கருத்துக்களும், உலகக் கண்ணேட்டமும் உருவாகின்றன. நமது சமுதாயத்தில் மனிதன் மற்றவனிடம் கொள்கிற உறவும், குடிமகனின் சமுதாய உறவும் பொருள்வகை வளங்களேயும் ஆன்மிக வளங்களேயும் படைப்பதிலேயே வெளிப்படுகின்றன என் பதைக் குழந்தைகள் புரிந்து கொள்ளுமாறும், இதயத் தால் உணர்ந்து கொள்ளுமாறும் செய்வதே மிக முக்கிய மான ஒரு போதனேப் பணியாகும்.

பொருள்களேப் புரிந்து கொள்வதிலிருந்து, எது எங் கிருந்து வருகிறது என்பது பற்றி சிந்தித்தபடி, ஒரு முக்கியமான உண்மையைக் கண்டுபிடித்தபடி சமுதாய உறவுகளேச் சிறு குழந்தை புரிந்து கொள்கிறது என்று அனுபவம் எனக்கு எடுத்துக் காட்டியிருக்கிறது.

பள்ளிக்கூட உணவு விடுதியில் நாங்கள் சாப்பிட்டோம், பாத்திரம் கழுவினேம். குழந்தைகளே கொஞ்சம் இருங் கள், உணவு விடுதியிலிருந்து வெளியே போகாதீர்கள். மேசைக்கருகே இன்னும் அரைமணி நேரம் அமர்ந்திருப் போம். நாம் இன்று பயன்படுத்திய பொருள்கள் எல்லாம்

எங்கிருந்து வந்தன என்று யோசிப்போம். இங்கு, இந்த உணவு விடுதியில் நமக்குக் கொடுக்கப்பட்ட பொருள்கள் எல்லாம் எங்கிருந்து வந்தன? குழந்தைகள் தாம் சாப்பிட்டவற்றையெல்லாம் வரிசையாகச் சொல்கிறார்கள். ரொட்டி, மாமிசம், உருளைக் கிழங்கு, பால், வெண்ணை, முட்டைகள்... அடுப்பில் வேக வைக்கப் பட்டது உணவு. புதிய செங்கற்களால் அடுப்பு சில காலம் முன்புதான் கட்டப் பட்டது. நிலக்கரி அடுப்பிற்குச் சூடேற்றுகிறது. நிலக்கரி சுரங்கத்திலிருந்து கொண்டுவரப்பட்டது. மேசைக்கருகே நாங்கள் நாற்காலிகளில் உட்கார்ந்திருக்கிறோம். நாற்காலிகளும் மேசைகளும் உலோகக் குழாய்களாலும், பிளாஸ்டிக்காலும் செய்யப்பட்டவை...

''அவ்வளவுதானா?''—நான் கேட்கிறேன்.

''அவ்வளவுதான்''—இது குழந்தைகள்.

''கவனமாகப் பாருங்கள். விட்டுப் போனவை ஏதோ இருக்கிறது...''

குளிர்பதனப் பெட்டி மூலையில் இருக்கிறது. அது மின் சாரம் இன்றி வேலை செய்ய முடியாது. சுவற்றில் மின் விளக்குகள் எரிகின்றன. சிறுவர்கள் இந்தப் பொருள்களைக் கவனிக்கிறார்களா?

கவனித்தார்கள். மின்சாரம் மட்டும் இல்லையென்றால் வீட்டில் வசிக்கவும் பள்ளியில் பயிலவும் அம்மாடி, எவ்வளவு கஷ்டமாயிருக்கும்... என்கிற உண்மையை அவர்கள் கண்டு கொண்டனர்.

நாம் வாழ்க்கை நடத்துவதற்கு அத்தியாவசியமான பொருள்கள் எங்கிருந்து வருகின்றன?

இந்தக் கேள்வியுடன்தான், உழைப்பின் பரஸ்பர உறவுகள் எனும் சிக்கல் மிகுந்த உலகமான சமுதாய உற்பத்திக்கு நாங்கள் ''பயணங்கள்'' மேற்கொண்டோம். நாங்கள் எடுத்து வைக்கும் ஒவ்வொரு எட்டும் புதிய, புதிய கண்டுபிடிப்பாகும். நமது மேசையின் மீது ரொட்டி தோன்றுவதற்கு அனேகமாக அவர்களது பெற்றோர்கள் அனைவரின் உழைப்பும் தேவையாக இருக்கும் என்னும் உண்மையைக் கண்டு கொண்ட குழந்தைகள் உழைக்கும்

மனிதர்கள் மீது பெருமதிப்பு கொண்ட உணர்ச்சி காட்டினர். இது போதாது. டிராக்டர்கள், கலப்பைகள், கம்பைன்கள் ஆகியவற்றைப் படைத்த தொழிலாளர்களின் உழைப்பும் மிக அவசியமாகும்—இயந்திரங்கள் இன்றி கோதுமை விளைவிக்க முடியாது. சுரங்கத் தொழிலாளியின் உழைப்பும் வேண்டும் — நிலக்கரி இன்றி இரும்பு உருக்க முடியாது — இரும்பு இன்றி இயந்திரம் உற்பத்தி செய்ய முடியாது.

மற்ற பொருள்களை நெருங்கிப் பார்க்கையில் இதே போன்ற வியத்தகு கண்டுபிடிப்புகள் நம்மை எதிர்கொள்ளும். பூமிக்கடியில் இருக்கும் கனிப்பொருளான நிலக்கரி நமது பள்ளிச் சமையலறைக்கு வர வேண்டுமானால் நம் நாட்டின் தொலைவிலும் அருகிலும் இருக்கிற கிராமங்களிலும் நகரங்களிலும் பல்வேறு வேலைத்திறன் கொண்ட நூற்றுக் கணக்கான மனிதர்கள் உழைத்திருக்க வேண்டும். உலோகத்தை உருக்கவும், அதிலிருந்து மேசைகளைச் செய்யவும், களிமண்ணிலிருந்து செங்கற்கள் செய்யவும் நூற்றுக் கணக்கானோர் உழைக்க வேண்டும்.

சமுதாய உற்பத்தியில், உழைப்பின் பரஸ்பர உறவுகள் எனும் உலகுக்குள் இதே போன்றுதான் எங்கள் முதல் எட்டுகளை எடுத்து வைக்கிறோம். நமது ஆடைகள் எங்கிருந்து வருகின்றன? காகிதம் எப்படித் தோன்றுகிறது? புத்தகங்களையும், சினிமாப் படங்களையும் உருவாக்குவது யார்? இசையைப் படைப்பது யார் என்றெல்லாம் அறிந்து கொண்டோம். சிக்கலாகப் பின்னிக் கிடக்கும் சமுதாய உறவுகளை வாரம் வாரமாய், மாதம் மாதமாய் நாங்கள் அறிந்து கொண்டோம். பொருள்களது உலகத்தின் வழியாக மனிதனை நாங்கள் அறிந்து கொண்டோம். பொருள்களும், பொருள்வகை மதிப்புக்களும் ஆன்மிக மதிப்புக்களும் மனிதனைக் காணவும், அவனைப் புரிந்து கொள்ளவும், அவனை உணரவும் உதவி செய்தன. ரொட்டி சுடுபவரான ஸ்தெபான் மாக்சிமவிச்சை அவர் வேலை செய்கிற இடத்தில் நாங்கள் கண்டோம். தனக்கு வேண்டிய உணவையும், உடையையும், மற்றவற்றையும் தனது அடக்க

மான உழைப்பால் சம்பாதிக்கிற ஒரு மனிதராக மட்டும் குழந்தைகளுக்கு அவர் காட்சியளிக்கவில்லை, வாழ்க்கையையே படைப்பவராக அவர் விளங்கினார். அவரின்றி நூற்றுக் கணக்கான, ஆயிரக் கணக்கான மனிதர்கள் வாழவே முடியாது. கம்பைன் ஓட்டுவோர், டிராக்டர் ஓட்டுவோர், கொல்லர்கள், கடைசல் தொழிலாளர்கள் ஆகியோரை—ஆயிரக் கணக்கானோருக்குப் பொருள்வகை வஸ்துக்களையும் ஆன்மிக வஸ்துக்களையும் உற்பத்தி செய்கிற உழைப்பாளர்களை—நாங்கள் ஒவ்வொரு வாரமும் சந்தித்தோம். மூன்றும் வகுப்பு முடிந்த பின்பு, வசந்த காலத்தின் போது ஒரு நாளில் கிரெமென்சுக் நீர்மின் நிலையத்துக்கு நாங்கள் போனோம். மின்சக்தி எப்படி உற்பத்தி செய்யப் படுகிறது என்று பார்த்தோம், மின் தொழிலாளர்களைச் சந்தித்தோம்.

குழந்தைகள் சந்திக்கிற மனிதர்கள் தமது உழைப்பை எப்படி அணுகுகிறார்கள் என்பது குழந்தைகளின் ஒழுக்கப் பண்பு உருவாவதற்குப் பெருத்த முக்கியத்துவம் உடையதாகும். மேம்போக்காகப் பார்க்கையில் எந்த விதத்திலும் விசேஷமாக இல்லாத சாதாரண பொருள்வகை நலன்களான ரொட்டி, மாமிசம், பால், சர்க்கரை போன்றவற்றை மற்றவர்களுக்காக உற்பத்தி செய்கிற மனிதர்கள் தமது உழைப்பு பற்றி பெருமைப் பட்டார்கள் என்பதும், இந்த உழைப்பின் மூலம் தாம் சமுதாயத்துக்குச் சேவை செய்கிறோம் என்று கருதினார்கள் என்பதும் குழந்தை இதயங்களின் மீது பலத்த செல்வாக்குச் செலுத்தியது. உழைப்பு மனிதனை உயர்த்தி விடுகிறது, அவனுக்கு நிறைந்த மகிழ்ச்சியைக் கொண்டு வந்து தருகிறது என்கிற உண்மை குழந்தைகட்கு ஏதோ ஒரு சூட்சுமமாகவன்றி வாழ்க்கையின் சாரமாகவே இருந்தது. தனது ஆற்றலையும் படைப்புத் திறனையும் திறந்து கொட்டுவதற்கான துறை சமுதாயத்துக்கு நல்குகிற நேர்மையான உழைப்பே என்று குழந்தைப் பருவத்திலேயே மனிதன் மனவுறுதி கொள்கிறான்.

ஆர்வமும், படைப்புத் திறனும் கொண்டவனுகவும் சிந்தனையைத் தேடுபவனுகவும் மனிதனை வளர்ப்பதே பள்ளிக்கூடத்தின் மிக முக்கியமான பணியாகும். குழந்தைப் பருவத்தை சிந்தனைப் பள்ளிக்கூடமாகவும், ஆசிரியரை தனது மாணவர்களின் உடலுறுப்புக்களையும், ஆன்மிக உலகத்தையும் கவனமாக உருவாக்குகிறவர் என்றுமே நான் பார்க்கிறேன். குழந்தையின் மூளை வளர்ச்சியுற்று, உறுதியுறுமாறு பேணுவதும், ஒரு கண்ணுடி போல உலகத்தைப் பிரதிபலிக்கிற இந்த மூளை நுண்ணுணர்வும், கிரகித்துக் கொள்ளும் ஆற்றலும் பெற்றதாய் இருக்குமாறு பேணுவதும் போதகரின் பிரதான கடமைகளில் ஒன்ருகும். உடற்பயிற்சிகளால் தசைகள் வளர்ச்சியுற்று உறுதி பெறுவது போல, கஷ்டங்களைச் சமாளிப்பதற்கும், மூளை உருவாகி வளர்ச்சியுறுவதற்கும் உழைப்பும் முயற்சியும் அவசியமாகும்.

சுற்றியுள்ள உலகத்துப் பொருள்களுக்கும் தோற்றங்களுக்கும் இடையிலுள்ள காரண-விளைவு, நேரம், செயல் ஆகிய பன்முகத் தன்மை கொண்ட தொடர்புகள் ஏற்படும் போது நடைபெறுகிற, உயிரணுக்களின் ஆற்றல் தூண்டப்படுகிற சிக்கலான உள் நிகழ்ச்சிப்போக்கின் காரணமாக குழந்தையின் மூளை வளர்ச்சியடைகிறது, உறுதி பெறுகிறது. மாணவன் யோசனையில் ஆழ்ந்து, விஷயங்களைத் தேடி, அவனுக்கு இன்னும் தெரியாமல் இருக்கிற தொடர்புகளின் சாரத்தைப் புரிந்து கொள்ள முயலும் போது, மூளைப் புறணியின் உயிரணுக்கள் பகுத்தறிவாக மாறுகிற சக்தியைத் தரும் சில நுண்ணிய தசைகளைப் பிடித்து இறுக்குகின்றன. சுற்றியுள்ள உலகத்துத் தோற்றங்களுக்கு இடையிலுள்ள தொடர்புகளைப் புரிந்து கொள்வதற்குக் குழந்தைகட்கு உதவுவதும், இறுக்கம் கொண்ட நுண்ணிய தசைகளில் ஒவ்வொரு முறையும் புதிய ஆற்றல் வேலை செய்ய வேண்டும் என்பதற்காக உழைப்பதுமே எனது கடமை என்று நான் கண்டேன். இந்தச் சிக்கலான

தோற்றம்தான் மூளையும் மூளையின் மிக முக்கிய பண்பான ஆர்வம், கூர்மை, கூர்ந்து பார்க்கும் திறன் ஆகிய வற்றைக் கொண்ட அறிவும் உருவாகி, வளர்ச்சியுற்று, உறுதியடைகிற நிகழ்ச்சிப்போக்கு ஆகும்.

மனித மூளையின் வேலை இடைவேளைகளைக் கொண்ட தாகும். சுற்றியுள்ள உலகத்திலிருந்து வருகிற தகவல் வெள்ளத்தால் ஏற்படுகிற தூண்டுதல் புறணியின் அரைக் கோளத்திலுள்ள உயிரணுக்களின் ஏதாவது ஒரு குழுவில் தோன்றுகிறது. சிந்தனை ஒரு விஷயத்திலிருந்து இன்னொரு விஷயத்துக்கு உடனடியாக மாறுகிறது. இந்த மாற்றம் சிந்தனை நிகழ்ச்சிப் போக்கின் மிக முக்கியமான நியதி யாகும். சிந்தனையை விரைவாக மாற்றுகின்ற திறன்— உயிரணுக்களின் ஒரு குழுவிலிருந்து இன்னொரு குழுவிற்கு தூண்டுதல் மாற்றமுறுவதுடன் இது சம்பந்தமுடையது— நல்ல அறிவுத் திறனுக்குப் பிரதானமான முன்தேவை யாகும். யோசிக்கும் திறனுள்ளது குழந்தை என்பதற்கு அர்த்தம், ஏதாவது ஒரு நேர இடைவெளியில் (உதாரண மாக ஒரு வினாடியில்) ஒரு விஷயத்திலிருந்து இன்னொரு விஷயத்துக்குப் பல முறை மாற்றமடைகிறது சிந்தனை என்பதாகும். இந்த மாற்றம் மிக விரைவாக நடைபெறு வதால் மாறுகின்ற நிகழ்ச்சிப் போக்கை யோசிப்பவனே கவனிப்பதில்லை. நீச்சல் குளத்தையும், ஒவ்வொரு நேரத் திலும் ஒரே அளவாய் இல்லாமல் குளத்துக்குள் நீரைக் கொட்டுகிற முதல் குழாயையும் இரண்டாவது குழாயையும் பற்றி ஒரே நேரத்தில் சிந்திப்பதாகவே அவனுக்குத் தோன்றுகிறது. வேறு மாதிரிச் சொல்வதென்றால், பல் வேறு பொருள்களையும், தோற்றங்களையும் மாணவன் சிந்தனை பூர்வமாக எட்டிப் பிடிக்கிறான், அவற்றைப் பகுத்து ஆய்கிறான், ஒப்பிட்டுப் பார்க்கிறான். மூளையின் மிக முக்கியமான இத்திறன் ஒவ்வொரு குழந்தையிடமும் வளர்ச்சியுறுமாறு செய்வதே நமது கடமையாகும்.

புத்தி கூர்மைக்காகவும், விவேகத்துக்காகவும் தரப் படுகிற பயிற்சி மூளையின் உள்ளிருக்கும் சக்தியை உந்தி விட்டு, ''அறிவுத் தசைகளின்'' ஆற்றலைத் தூண்டி விடுகிற

பயிற்சியாக விளங்குகின்றது. சுற்றியுள்ள உலகத்துப் பொருள்கள், வஸ்துக்கள், தோற்றங்கள் ஆகியவற்றுக்குள்ளேயே இந்தப் பயிற்சிகள் இருக்கின்றன. ஏதாவது ஒரு தோற்றத்தின் மீது நான் குழந்தையின் கவனத்தைத் திருப்புகிறேன். அவனுக்கு இதுவரை புரியாமல், மறைவாக இருந்த தொடர்புகளை அவன் காண வேண்டும், இந்தத் தோற்றங்களின் சாரத்தை அவன் கண்டுபிடித்து, உண்மையைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக நான் முயற்சி செய்கிறேன். தீவிர நடவடிக்கையான மனித உழைப்பே பிரச்சினைக்குத் தீர்வாக விளங்குகிறது. அறிவாற்றலை இறுக்கி, பொருள்களுக்கும் தோற்றங்களுக்கும் இடையில் உள்ள தொடர்புகளை நிலைநாட்டுவதற்கு முயன்றபடி குழந்தை குறிப்பிட்ட வேலையை நிறைவேற்றுகிறது. சுற்றியுள்ள உலகத்தில் ஆயிரக் கணக்கான பயிற்சிகள் இருக்கின்றன. அவற்றை மக்கள் கற்பனை செய்தனர். மக்கள் படைப்பில் சுவாரஸ்யமான கதைகளாகவும் விடுகதைகளாகவும் இவை விளங்குகின்றன. இதோ, ஓய்வு நேரத்தின் போது குழந்தைகள் தீர்வு கண்ட முதல் பிரச்சினைகளில் ஒன்று:

''ஆற்றின் ஒரு கரையிலிருந்து மறு கரைக்கு ஓநாய், ஆடு, முட்டைக்கோஸ் ஆகியவற்றைக் கொண்டு போக வேண்டியதாய் இருந்தது. ஓநாயையும் ஆட்டையுமோ, ஆட்டையும் முட்டைக் கோஸையுமோ ஒரே நேரத்தில் எடுத்துச் செல்லவோ, விட்டுச் செல்லவோ கூடாது. முட்டைக் கோஸையும் ஓநாயையும் ஒன்றாகக் கொண்டு போகலாம் அல்லது ஒவ்வொன்றையும் தனித்தனியாகக் கொண்டு போகலாம். எத்தனை முறை வேண்டுமானாலும் இவ்வாறு கொண்டு போகலாம். எல்லாம் நல்லபடி நடக்க வேண்டுமானால் ஓநாய், ஆடு, முட்டைக்கோஸ் ஆகியவற்றை எப்படி எடுத்துச் செல்வது?''

மக்களின் போதனைக் கலையில் இது போன்ற நூற்றுக் கணக்கான விடுகதைகளைக் காணலாம். இத்தகைய விடுகதைகளில் சிறுவர்கள் பெருத்த ஆர்வம் காட்டுகிறார்கள். சிறுவர்களும் சிறுமிகளும் யோசனையில் ஆழ்ந்து விட்டார்

கள். ஓநாய் ஆட்டையும், ஆடு முட்டைக்கோசையும் தின்று விடாதபடி இவற்றை எப்படி எடுத்துச் செல்வது? குளக்கரையில் நாங்கள் உட்கார்ந்திருக்கிறோம். ஆற்று மணலில் படம் வரைகிறார்கள் குழந்தைகள். சிறு கற்களை எடுத்துக் கொள்கிறார்கள். விடுகதைக்கு எல்லோரும் ஒரு வேளை விடைகாணுமல் இருக்கலாம். ஆனால் குழந்தைகள் ஆழமாகச் சிந்திக்கிறார்கள் என்பதே அறிவாற்றல் வளர்ச்சிக்கு உகந்த அருமையான சாதனமாகும்.

இத்தகைய புதிருக்கும் விடுகதைகளுக்கும் விடை காண்பது சதுரங்க விளையாட்டின் போது நடைபெறுகிற மூளை உழைப்பை நினைவூட்டுகிறது. இரண்டிலுமே குறிப்பிட்ட பல விஷயங்களை நினைவில் கொள்ள வேண்டும். ஏழு வயதுக் குழந்தைகள் முதல் வகுப்பில் பாடம் தொடங்கியவுடனேயே அவர்களுக்கு இந்தப் புதிரைத் தந்தேன். பத்து நிமிடம் கழித்து ஷூரா, செர்யோஷா, யூரா ஆகிய மூவரும் புதிருக்கு விடை கண்டனர். இக்குழந்தைகளின் முன்னேக்கிச் செல்லும் விரைவான சிந்தனை வெள்ளம் திட்பமான, கூரிய ஞாபக சக்தியுடன் ஒன்று சேர்ந்திருந்தது. பதினைந்து நிமிடங்களில் அனேகமாக எல்லாக் குழந்தைகளுமே விடை கண்டு பிடித்தனர். ஆனால் வால்யா, நீனு, பெத்ரிக், ஸ்லாவா ஆகியோரால் மறுபடியும் ஒன்றும் முடியவில்லை. இந்தக் குழந்தைகளின் சிந்தனை நூலிழை அறுந்து போவது போலத் தோன்றியது. இவ்விடுகதையின் அர்த்தத்தைக் இக்குழந்தைகள் புரிந்து கொண்டனர், பேசப் படுகிற பொருள்களையும் தோற்றங்களையும் பிரகாசமாக மனத்தில் கண்டனர். மிகப் பிரகாசமாக இருந்த மனத்தோற்றங்கள், முதல் அனுமானங்கள் முன்வைக்கப்பட்டவுடனேயே மங்கிப் போயின. வேறு மாதிரிச் சொன்னால், இப்பொழுது தான் ஞாபகத்தில் வைத்திருந்த விஷயத்தைக் குழந்தை மறந்து விட்டது.

மந்தச் சிந்தனை கொண்ட எனது மாணவர்களிடம் புதிர்கள் — விடுகதைகள் ஆகியவற்றில் அக்கறையைக் கிளறிவிட முடியும் என்ற நம்பிக்கையில் மக்களின் வளம் வாய்ந்த] போதனை முறைக் களஞ்சியத்திலிருந்து புதிய

புதிய விடுகதைகளை நான் தேர்ந்தெடுத்தேன். சில நாட்கள் கழித்து பின்கண்ட மக்கள் விடுகதை ஒன்றைத் தந்தேன்: ''கடந்து செல்ல வேண்டிய ஆற்றங்கரைக்கு சிறிய படைப் பிரிவு ஒன்று வந்தது. பாலம் இடிந்து போயிருந்தது. ஆறோ ஆழமானது. என்ன செய்வது? ஓடம் ஒன்றில் விளையாடிக் கொண்டிருந்த இரண்டு சிறுவர்களைக் கரைக்கருகே திடீரென்று கண்டார் ராணுவ அதிகாரி. அங்கிருந்து ஓடமோ ஒரு நேரத்தில் இரண்டு சிறுவர்களையோ ஒரு படைவீரனையோதான் சுமந்து செல்லும். அதற்குமேல் முடியாது. எனினும் படைவீரர்கள் அனைவரும் இந்த ஓடத்தைக் கொண்டே ஆற்றைக் கடந்து சென்றனர். அது எப்படி?''

குழந்தைகள் எப்படிச் சிந்திக்கிறார்கள் என்று நான் மீண்டும் கவனிக்கிறேன். ''சதுரங்கக் காய் நகர்த்தல்கள்'' பலவற்றை ஞாபகத்தில் கொண்டபடி அவர்கள் மணலில் மீண்டும் படம் போடுகிறார்கள். நீனாவும், ஸ்லாவாவும், பெத்ரிக்கும் துன்பப்படுவதை மீண்டும் பார்க்கிறேன். வால்யாவின் கண்களில் மகிழ்ச்சி துள்ளுகிறது: அவள் விடை கண்டுபிடித்து விட்டாள்.

மந்தச் சிந்தனை கொண்டவர்களுக்கு தனியாகப் பயிற்சி தருகிறேன். நேர் வரிசை எண்ணிக்கையை ஆழமாகப் புரிந்து கொள்ளவும் அவற்றுக்கிடையே உள்ள பரஸ்பரத் தொடர்பை நிர்ணயிக்கவும் வகை செய்கிற எளிய மக்கள் விடுகதைகளை அவர்களுக்குத் தருகிறேன். இத்தகைய ஐந்து பயிற்சிகள் பின்கண்டவாறு:

1. ''பருந்துகளும் ஓக் மரங்களும்'': பறந்து வந்தன பருந்துகள். ஓக் மரத்தின் மீது அமர்ந்தன. அவை மரத்துக்கு ஒன்றாக அமர்ந்தால் ஒரு பருந்து மிச்சமாகிறது. இரண்டு வீதம் உட்கார்ந்தால் ஒரு மரம் மிச்சமாகிறது. அப்படியானால் எத்தனை பருந்துகள், எத்தனை மரங்கள்?

2. ''மேய்ச்சல் வெளியில்'': இரண்டு சிறுவர்கள் ஆடு மேய்த்தார்கள். ஒரு சிறுவன் மற்றவனுக்கு ஒரு ஆடு தந்து விட்டால் இருவரிடமும் ஆடுகள் சமமாக இருக்கும். இரண்டாவது சிறுவன் முதல்வனுக்கு ஒரு ஆடு தந்தால் இரண்டாமவனிடம் இருப்பதை விட முதல்வனிடம் இரு மடங்

காக ஆடுகள் இருக்கும். அப்படியானால், முதல் இடையனிடமும் இரண்டாம் இடையனிடமும் எத்தனை எத்தனை ஆடுகள் இருக்கும்?

3. ''எத்தனை தாராக்கள்'': தாராக் கூட்டம் பறக்கிறது. எதிரே வருகிறது ஒற்றை தாரா ''நூறு தாராக்களே வணக்கம்'', என்கிறது அது.

''நாங்கள் நூறு பேரல்ல. நாங்கள் இப்போதிருப்பது போல் இன்னும் ஒரு பங்கும், அதில் ஒரு பாதியும், இன்னும் கால்வாசியும் பின்னர் உன்னையும் சேர்த்தால் நூறு பேர் ஆவோம்'', என்றன தாராக்கள். அப்படியானால் பறந்த தாராக்கள் எத்தனை?

4. ''தலைகளும் கால்களும்'': கோழிகளும் குழிமுயல்களும் முற்றத்தில் விளையாடிக் கொண்டிருந்தன. மொத்தம் பத்துத் தலைகளும் 24 கால்களும் இருந்தன. அப்படியானால் கோழிகள் எத்தனை, குழிமுயல்கள் எத்தனை?

5. ''பந்துகள் எத்தனை'': ஒரு மூட்டையில் மஞ்சள் பந்துகள் பத்தும், சிவப்புப் பந்துகள் பத்தும், பச்சைப் பந்துகள் ஐந்தும், கறுப்புப் பந்துகள் ஐந்தும் இருக்கின்றன. கண்ணை மூடிக் கொண்டு குறைவான எண்ணிக்கையில் பந்துகளை எடுத்துக் கொள். ஆனால் ஒரே நிறத்தில் ஏழு பந்துகள் நீ எடுத்திருக்க வேண்டும்.

இந்தப் பயிற்சிகள்—விடுகதைகள் அறிவுப் பயிற்சிக்கு இணையற்ற சாதனமாகும். இவற்றில் ஒவ்வொன்றுக்கும் விடை காண்கையில் 2 முதல் 4 வரை முந்தைய பிந்தைய ''சதுரங்கக் காய் நகர்த்தல்களை'' நினைவில் கொள்ள வேண்டும். இந்த வேலை தொடங்கிய ஆறு மாதத்தில் இத்தகைய பயிற்சிகளுக்கு வால்யாவும் ஸ்லாவாவும் விடை கண்டனர். பெத்ரிக்காலும் நீனாவாலும் இன்னும் ஒன்றும் முடியவில்லை. எதை நினைவில் கொள்ளாமல் அடுத்த ''காய் நகர்த்தலைச்'' செய்ய முடியாதோ, அதை அவர்களால் நினைவில் வைத்துக் கொள்ள முடியவில்லை.

இதற்குக் காரணம் என்ன? ஒரு விஷயத்திலிருந்து இன்னொரு விஷயத்துக்குக் கண நேரத்தில் சிந்தனையை மாற்றுகிற திறமை சில குழந்தைகளிடம் இல்லை என்பதும்,

பயிற்சியில் அடங்கியுள்ள எல்லா அம்சங்களையும் நினைவில் நிறுத்திக் கொண்டு பல ''சதுரங்கக் காய் நகர்த்தல்களை'' ஞாபகத்தில் வைத்துக் கொள்ளும் திறமை அவர்களிடம் இல்லை என்பதுமே இதற்குக் காரணம் போலும். மூளைப் புறணியின் அரைக் கோளத்து உயிரணுக்கள் இந்தத் திறமையை உருவாக்காதது ஏன் என்பது வேறு விஷயம். பிறந்த போதே இருக்கக் கூடிய சிறப்புக்களால் இது எல்லா நேரங்களிலும் நிர்ணயிக்கப்பட்டு விடுவதில்லை. ஆனால் இதனை அலட்சியப் படுத்தவும் முடியாது. சிந்தனா நூலிழை கண நேரத்தில் அறுந்து போனால், இப்போது மனக் கண்ணில் தோன்றுவதையும், சில கணத்துக்கு முன்னால் அவன் மனக் கண்ணில் தோன்றியதையும் சிந்தனா பூர்வமாய் ஒரே நேரத்தில் ஒன்றாகக் கட்டிப் பிடிக்க முடியவில்லை என்றால் அவனால் சிந்திக்க முடியவில்லை என்றும், பலப்பல பொருள்களுக்கும் தோற்றங்களுக்கும் இடையில் இருக்கிற தொடர்பை நிலைநாட்டுவது அவனுக்குக் கஷ்டம் என்று இதற்கு அர்த்தமாகும் என்றும் சோதனைகள் நிரூபித்திருக்கின்றன.

குழந்தைகளின் சிந்தனையை, குறிப்பாக மந்தப் போக்கு கொண்ட வால்யா, பெத்ரிக், நீனா ஆகியோரின் சிந்தனையை நான் பயின்று வந்தேன். ஏதோ தத்துவார்த்த நோக்கங்களுக்காக அன்றி, அவர்களின் மூளை உழைப்பை எளிதாக்கவும், கற்றுக் கொள்வதற்குப் பயிற்றுவிக்கவுமே நான் இவ்வாறு செய்தேன். பொருள்கள், தோற்றங்கள் சம்பவங்கள் ஆகியவற்றைச் சிந்தனா பூர்வமாக பார்க்கவும், அவற்றுக்கிடையே உள்ள தொடர்புகளைக் கிரகித்துக் கொள்ளவும் குழந்தைகளுக்கு முதற்கண் கற்றுத் தர வேண்டும் என்று சோதனைகள் உறுதி செய்துள்ளன. ஒரு பொருளின் சாரத்தையும் அதனுள் இருக்கும் நியதியையும் ஆழமாகப் பார்ப்பதிலிருந்து தூரத்திலுள்ள, தொலைவிலுள்ள பல பொருள்களைப் பார்ப்பதற்குக் குழந்தை சிறுகச் சிறுக மாறிச் செல்ல வேண்டும். சூட்சுமப் படுத்துகின்ற, திட்டவட்டமான விஷயத்திலிருந்து கவனத்தைத் திருப்புகிற திறமை இல்லாமலிருப்பதன் விளைவாகத்தான்

கிரகித்துக் கொள்ளுகிற (உதாரணமாக பயிற்சியை) திறமை இல்லாமல் போகிறது என்று மந்தப் போக்குடை யோர் சிந்தனையைக் கண்காணித்து வந்த எனக்கு மேலும் மேலும் உறுதி ஏற்பட்டது. சூட்சுமக் கருத்துருக்களாகச் சிந்திப்பதற்குக் குழந்தைகளுக்குக் கற்றுத் தர வேண்டும். ஓநாயின் திட்டவட்டமான சித்திரத்தை மனக்கற்பனையில் வால்யாவால் வரைய முடியாமல் போகட்டும், ஆடு முட் டைக்கோசைத் தின்னுவதற்கு முயல்வதை அதன் சிந்தனை நின்று பார்க்காமல் இருக்கட்டும். அதனால் பரவாயில்லை. இந்தக் கருத்துக்கள் எல்லாம் குழந்தைக்குச் சூட்சுமக் கருத்துருக்களாக இருக்க வேண்டும். திட்டவட்டமான விஷயத்தை ஆழமாகப் புரிந்து கொள்வதன் மூலம்தான் சூட்சுமப் படுத்தலுக்குப் பாதை செல்கிறது. குழந்தை யோசிக்கும் போது அவன் தலையில் என்ன நடக்கிறது என்று கற்பனை செய்து பார்க்க வேண்டும். சிந்தனை செய்யக் கற்றுத் தரவேண்டும். இல்லையேல் அவர்கள் தமது நினைவை இறுக்கி, உருப்போடுவார்கள். இது சிந்தனையை மேலும் மந்தமாக்கும். எனது மாணவர்களின் தலையில் என்ன நடக்கிறது என்று நான் மனத்தோற்றத்தில் பார்க்க முயன்றேன். இந்த மனத்தோற்றம் ஓரளவுக்குச் சரியான தாக இருக்கலாம். ஆனால், சிந்தனைச் சித்திரத்தை ஓரள வுக்குச் சரியாக இது பிரதிபலிக்கிறது என்று நான் உறுதி கொண்டிருக்கிறேன். சிந்தனா பூர்வமாக குழந்தை ஒரு விஷயத்திலிருந்து இன்னொரு விஷயத்துக்குச் செல்லும் போது மூளையின் உயிரணுக்களது புதிய தொகுதியில் தூண் டுதல் தோன்றுகிறது. புதிய தூண்டலின் பிறப்பிடத்திற் கும், முந்திய மனத்தோற்றங்களின் கருத்துக்களின், புல னறிவின் செல்வாக்கில் தோன்றிய பகுதிக்கும் இடையில் தகவல்களும், சைகைகளும் செல்வதற்குப் பயன்படுகிற நூலிழை அறுந்து போகாமல் இருந்தால்தான் சிந்தனை யானது மேலும் மேலும் முன்னேக்கிச் செல்வதற்கு முயலும். புதிய மனத்தோற்றம் முன்னரே பெறப்பட்ட, ஏற்கெனவே நிலைநாட்டப்பட்ட மனத் தோற்றத்துக்குத் தன்னைப் பற்றித் தகவல் தருகிறது. முந்தைய மனத்

தோற்றமோ புதிய மனத்தோற்றத்திற்குத் தன்னைப் பற்றித் தகவல் தருகிறது. ஒரு கண நேரத்தில், விரைவான இந்தப் பரிமாற்றம் பலப்பல தடவை நடைபெறுகிறது. குழந்தை யோசிக்கிறது, கிரகித்துக் கொள்கிறது என்று நாம் சொல்கிற நிகழ்ச்சிப்போக்கு இதுதான். தூண்டல்களின் பிறப்பிடங்களுக்கு இடையிலுள்ள நூலிழை எவ்வளவுக்கு எவ்வளவு உறுதியாக இருக்கிறதோ, அவ்வளவுக்கு அவ்வளவு சிந்தனை ஆழமாக இருக்கும். குழந்தைகள் தமது பகுத்தறிவால் எட்டிப் பிடிக்கிற பொருள்கள், தோற்றங்கள் ஆகியவற்றின் வட்டம் அந்த அளவுக்கு பெரிதாக இருக்கும்.

மூளை எனும் உயிருள்ள வஸ்துவின் இயல்பும், குறிப்பிட்ட நபரின் மூளையில் நடைபெறுகிற உயிரியல், ரசாயன நிகழ்ச்சிப் போக்குகளும்—பள்ளிக்கூடத்துக்கு முந்திய வயதுக் குழந்தைகளின் மீது நடத்திய கவனித்தல்கள் எடுத்துக் காட்டுகிறபடி—நரம்பு மண்டலத்தின் இளமைக் காலத்தில் அறிவுத் திறன்கள் உருவாவது தீர்மானமான முறையில் எந்தச் சூழலைப் பொறுத்திருக்கிறதோ அந்தச் சூழலின் தன்மையுமே இந்த நூலிழையின் உறுதிக்கு மூல காரணங்களாகும். வால்யா, நீனா, பெத்ரிக் ஆகியோரிடம் உயிருள்ள சிந்தனைத் திரட்டுகளை இணைக்கிற நூலிழைகளின் உறுதிக்கு மூலகாரணமாய் விளங்கும் நரம்பாற்றல், மூளையின் உயிரணுக்களில் போதுமான வளர்ச்சியடையவில்லை என்பதில் சந்தேகமில்லை. நூலிழைகள் பலவீனமாக இருக்கின்றன. தூண்டல்களின் பிறப்பிடங்களுக்கு இடையேயுள்ள தொடர்பு சீக்கிரம் அறுந்து விடுகிறது. ஒரே நேரத்தில் பலப்பல கருத்துக்களை குழந்தையால் சிந்தனா பூர்வமாக எட்டிப்பிடிக்க முடியவில்லை. சில கணங்களுக்கு முன்பு தெளிவாகத் தெரிந்த விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொள்வதற்காக பெத்ரிக் கஷ்டப்பட்டு முயல்கிறான். அவனால் அது முடியாமல் போகிறது. அப்போது சிந்தனா நூலிழை அறுந்து போகிறது என்று நான் தெளிவாகக் காண்கிறேன்.

சிந்தனையின் இந்தச் சிறப்பியல்புகளுக்குக் காரணங்

கள் வெவ்வேறு குழந்தைகளிடம் வெவ்வேறு மாதிரி இருக்கும். பிரதான காரணம் புலனறிவுகளின் பாய்ச்சல் கூர்மையாகவும் பன்முகத் தன்மையுடையதாகவும் விளங்குகிற குழந்தைப் பருவத்தின் ஆரம்ப காலத்தில், சுற்றியுள்ள உலகத்துப் பொருள்களுக்கும் தோற்றங்களுக்கும் இடையில் உள்ள தொடர்புகள் பற்றி, குழந்தை வெகு குறைவாகவே சிந்திக்கிறது. குழந்தைகளின் மூளையிலுள்ள உயிருள்ள சிந்தனைத் தீவுகள் இரு வழித் தகவல் வெள்ளத்தால் இணைக்கப் படுவதில்லை. இதெல்லாம் குழந்தைச் சிந்தனையின் கலாசாரம் பற்றி பெரியவர்கள் கவனமின்றி, அலட்சியமாய் இருப்பதன் விளைவேயாகும். பெரியவர்களைப் பார்த்து குழந்தை ''ஏன்'' என்று கேட்கிறது. பதில் கிடைப்பதில்லை. இரண்டாம் முறையும் பதிலில்லை. பெரியவர்களின் அலட்சியம் (சில சமயங்களில் முரட்டுத் தனமான கூச்சல்: ''சும்மாயிரு. உயிரை எடுக்காதே''), இந்தப் பருவத்தில் மேலும் மேலும் உறுதி பெற வேண்டிய நூலிழைகளை பலவீனப் படுத்துகிறது.

சுற்றியுள்ள உலகத்துத் தோற்றங்களைக் கண்டு வெகுக் குறைவாகவே உளநெகிழ்ச்சி கொள்வதும் எதிர்மறையான சிந்தனைச் சிறப்பியல்புக்கு ஒரு காரணமாகும். இதன் விளைவாக மூளைப்புறணியின் அடியிலிருந்து வரும் உள நெகிழ்ச்சித் தூண்டல்கள் பலவீனமடைகின்றன.

பள்ளிக்கூட வயதுக்கு முந்திய குழந்தைகளின் பெற்றோர்கள் போதனைக் கல்வி பெற வேண்டியது மிக முக்கியமானது என்று ஒவ்வொரு மாதமும் நான் மேலும் மேலும் உறுதி கொண்டேன். குழந்தை இன்னும் பள்ளியில் படிக்காத அந்தக் காலத்தில்தான் தாய் தந்தையரிடம் குழந்தை வளர்ப்பு பற்றி நிறையப் பேச வேண்டும். பள்ளி மாணவர்களின் எதிர்காலத் தலைமுறையைப் பேணுகின்ற வகையில் பெற்றோர்களுக்கான பள்ளி ஒன்று உருவாக்கினோம். இரண்டு—ஆறு வயதுக் குழந்தைகளின் பெற்றோர்களை இந்தப் பள்ளிக்கு அழைத்தோம். பாடத்திட்டம் ஒன்று வகுத்தோம். குழந்தையின் உடல் வளர்ச்சி, உள்ள வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, ஒழுக்க வளர்ச்சி, அழகுணர்ச்சி

வளர்ச்சி, எதிர்கால மாணவர்களின் சிந்தனையைப் பயிற்று விப்பதற்காகப் பெற்றோர்கள் செய்ய வேண்டியது ஆகிய வற்றை இத்திட்டத்தில் சேர்த்தோம். இந்தப் பள்ளி இப்போது நிரந்தரமாக நடந்து வருகிறது.

குழந்தையின் பள்ளிக்கு முந்திய பருவத்தில், தமது குழந்தையை வளர்ப்பவர்களாக தாயும் தந்தையும் மட்டுமே விளங்கும் போது பெற்றோர்கள் போதனா முறை அறிவு பெற்றிருக்க வேண்டியது மிக முக்கியமாகும். இரண்டு முதல் ஆறு வயது வரை குழந்தைகளின் அறிவு வளர்ச்சியும், ஆன்மிக வாழ்வும், தாய் தந்தையரின் இந்த ஆரம்பக் கலாச்சாரத்தைப் பொறுத்ததாகவே இருக்கும். வளர்ந்து வரும் மனிதனின் மிகச் சிக்கலான ஆன்மிக இயக் கங்களைப் புத்திசாலித்தனமாகப் புரிந்து கொள்வதில் தான் இந்தக் கலாசாரம் வெளியாகிறது. குறிப்பிட்ட அறிவையும், பழக்கங்களையும் பெற்றோர்களுக்கு வழங்கு வதற்கு நாங்கள் முயன்றோம். சிந்தனை செய்யக் குழந் தைக்கு எப்படிக் கற்றுத் தருவது, அவனது அறிவுத் திறன் களை எத்தகைய வழிகளில் வளர்ப்பது ஆகிய பிரச்சினை களுக்குப் பெற்றோர்கட்குப் பாடம் நடத்தும் போது குறிப் பாக அதிக நேரம் ஒதுக்கப்பட்டது. பல்லாண்டு கால அனுபவத்தின் அடிப்படையில் சுற்றியுள்ள உலகத்தைப் பற்றி ஆயிரக் கணக்கான கேள்விகளை நாங்கள் முன் வைத்தோம். இந்தக் கேள்விகளைத்தான் குழந்தைகள் அடிக் கடி பெற்றோர்களிடம் கேட்கிறார்கள். சிறுவர்களின் கேள்வி கட்கு எப்படிப் பதிலிறுப்பது, குழந்தைகளின் அறிவு வேட்கையையும் ஆர்வத்தையும் எப்படி வளர்ப்பது என் றெல்லாம் விளக்குகிறோம். பெற்றோர்களுடன் சேர்ந்து பள்ளிக்கு முந்திய குழந்தைகள் இயற்கைக்குள் நடந்து வருவதற்கான ஒரு திட்டத்தை வகுத்தோம். கவனித்தல் களுக்கு உள்ளாக வேண்டிய பொருள்களை நிர்ணயம் செய் தோம். பள்ளிக்கு முந்திய குழந்தை இருக்கிற ஒவ்வொரு குடும்பத்திலும் புத்தகத்தை மதிக்கிற சூழ்நிலை கோலோச்ச வேண்டும் என்பதற்குக் குறிப்பாக கவனம் செலுத்தப் பட்டது.

அறிவுப் பயிற்சிக்குக் கஷ்டத்தைத் தருகிற சில பரம்பரைக் காரணங்கள் இருக்கின்றன என்று பல ஆண்டுகளாக நடத்திய சோதனைகள் உறுதி செய்கின்றன. பெற்றோர்களின் குடிவெறி குழந்தையின் உடலுறுப்பு முழுவதுக்கும் பெரும் விரோதியாகும். குறிப்பாகக் குழந்தையின் மூளையை ஒரேயடியாக அது நாசப்படுத்துகிறது.

மூளைக்குப் பயிற்சி தருவதாக விளங்குகிற, பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு உகந்த சூழல் ஒவ்வொரு முறை உண்டாக்கப்படும் பொழுதும் மெதுவாகச் சிந்தித்து, கஷ்டத்துடன் ஞாபகம் வைத்துக் கொள்கிற குழந்தைகளை என்னருகே நெருக்கி வைத்துக் கொள்வேன். மனத்தோற்றங்களையும் சுற்றியுள்ள உலகத்துச் சித்திரங்களையும் இணைக்கிற நீனுவின் சிந்தனைத் திரட்டுக்களுக்கு இடையில் இருக்கும் முதல் நூலிழைகளை உசுப்பி விடுவதற்குள் பல்வேறு விதமான விடுகதை—பயிற்சிகள், வேடிக்கை—பயிற்சிகள் ஆகியவற்றை கற்பனை செய்ய வேண்டியதாயிற்று.

மீன் தொட்டிக்கு அருகில் நாங்கள் உட்கார்ந்திருந்த பனிக்காலத்து நாள் ஒன்று நினைவுக்கு வருகிறது. மீன் குஞ்சுகளைக் குழந்தைகள் எண்ணிக் கொண்டிருந்தனர். சிலர் அதிக மீன்கள் எண்ணினர், சிலர் குறைவாக எண்ணினர். நான் ஒரு வேடிக்கை—பயிற்சி சொன்னேன்: ''மீன் தொட்டியில் இரண்டு பெரிய மீன்களையும் நான்கு சிறிய மீன்களையும் கண்டான் தம்பி. அக்காளோ இரண்டு பெரிய மீன்களையும் மூன்று சின்ன மீன்களையும் கண்டாள். அம்மாவோ மூன்று பெரிய மீன்களையும் ஐந்து சிறிய மீன்களையும் கண்டாள். மீன் தொட்டியில் இருந்த எல்லா மீன்களையும் அம்மா பார்த்தாள். அப்படியானால் மீன் தொட்டியில் இருந்தவை எத்தனை மீன்கள்?'' பல குழந்தைகளுக்கு விடை காண்பது கஷ்டமாகவே இல்லை. ஆனால், நீனு மட்டும் நீண்ட நேரம் யோசித்தாள். கடைசியில் கையை விசிறிக் கொண்டு அவள் சொன்னாள்: ''தம்பியும் அக்காளும் எல்லா மீன்களையும் பார்க்கவில்லையே. அம்மா தான் எல்லாவற்றையும் பார்த்து விட்டாளே. அப்படியானால் மீன் தொட்டியில் மூன்று பெரிய மீன்கள் ஐந்து சிறிய

மீன்கள். அவை செடிக்குள் ஒளிந்து கொண்டிருக்கின்றன—எனவே தெரியவில்லை... அம்மாவோ அவற்றைப் பார்த்து விட்டாள்.'' இத்தகைய பயிற்சிகளுக்கு வால் யாவும் பெத்ரிக்கும் இன்னும் கஷ்டப்பட்டு விடை கண்டனர்.

கிடைத்த வெற்றியை உறுதிப்படுத்தியபடி மேலும் கஷ்டமான பயிற்சிகளை இந்தக் குழந்தைகளுக்கு நான் கொடுத்து வந்தேன். மூன்றுவது வருடக் கல்விப் பயிற்சியின் போது, கூட்டுப் பண்ணைத் தோட்டத்தில் ஆப்பிள் பழங்கள் சேகரித்த போது நீனு பின்வரும் புதிரை விடுவித்தாள்: ''புல்வெளியில் மூன்று சகோதரர்கள் புல் வெட்டிக் கொண்டிருந்தார்கள். நடுப்பகலில் அவர்கள் ஓக் மரத்துக் கடியில் ஓய்வெடுப்பதற்காகப் படுத்து உறங்கி விட்டனர். சகோதரி அவர்களுக்கு மதிய உணவு கொண்டு வந்தாள். சூப், ரொட்டி, சில ஆப்பிள் பழங்கள் ஆகியவற்றை ஒவ்வொருவருக்கும் கொண்டு வந்தாள். சகோதரர்களை அவள் எழுப்ப வில்லை. சாப்பாட்டு மூட்டையை அங்கே வைத்து விட்டு வீட்டுக்குப் போய்விட்டாள். அண்ணன் விழித்துக் கொண்டான். ஆப்பிள்களைப் பார்த்தான். அவற்றை மூன்று பங்காகப் பிரித்தான். தனது பங்கு ஆப்பிள்கள் அனைத்தையும் அவன் சாப்பிடவில்லை. அவன் மிகவும் விரும்பும் சின்னத் தம்பிக்காக ஒன்றை வைத்து விட்டான். பின்னர் படுத்து உறங்கிவிட்டான். சகோதரர்களில் நடுவன் எழுந்தான். சில பழங்களை அண்ணன் தின்று விட்டான் என்று அவனுக்குத் தெரியாது. இருந்த பழங்களை மூன்றாகப் பிரித்து தன் பங்கிற்கு வந்தவை அனைத்தையும் தின்று விடாமல், தான் மிக விரும்பும் சாப்பாட்டு ராமனு தம்பிக்கு ஒரு பழத்தை விட்டு வைத்தான்... பின்னர் படுத்து உறங்கி விட்டான். பின்னர் கடைசித் தம்பி எழுந்தான். மூட்டையில் ஏழு பழங்கள் இருப்பதைக் கண்டான். இதை எப்படி மூன்றாகப் பங்கு போடுவது என்று யோசித்தான். யோசித்தான் யோசித்தான் நீண்ட நேரம் யோசித்தான். அண்ணன்மார்கள் விழித்துக் கொள்ளும் வரை யோசித்தான். அவர்கள் விழித்த பின் விஷயம் தெளி

வாயிற்று. சகோதரர்களுக்கு எத்தனை பழங்களை சகோதரி கொண்டு வந்தாள்?''

குழந்தைகளுக்கு நன்கு தெரிந்த உழைப்பு பற்றி நிறையப் பயிற்சிகள் எங்கள் பயிற்சிமுறையில் இருந்தன. பெரியவர்கள் எப்படி மண்ணைப் பக்குவப் படுத்துகிறார்கள், விதைகளைச் சுத்தப் படுத்துகிறார்கள், மரம் நடுகிறார்கள், உரம் போடுகிறார்கள், அறுவடை செய்கிறார்கள், உணவுப் பொருள்களைப் பாதுகாக்கிறார்கள், வீடு கட்டுகிறார்கள், பாதை செப்பனிடுகிறார்கள் என்பதையெல்லாம் பயிற்சிகளுக்குத் தீர்வு காணும் போது குழந்தைகள் கண்டார்கள். மனத்தோற்றங்களுக்கு இடையில் இருந்த தொடர்புகளை வாழ்க்கையுடன் ஒன்று சேர்த்ததால் அவை உறுதிப்பட்டன. சிந்தனையும் ஞாபக சக்தியும் இடையறாத முழுமையாய் வளர்ச்சியுற்றன. மிகப் பெரும்பாலான பயிற்சிகளைத் தீர்ப்பதற்குச் சித்திரங்களைக் குழந்தைகள் அணுகினர், அல்லது பேசப்படுகிற பொருள்களைப் பற்றிய மாதிரி உருவங்களைப் படைத்தனர். மூன்றாம் வகுப்புக் கல்வியின் இரண்டாம் பாதியில் குழந்தைகள் வெளியிடத் தொடங்கிய சுவர்ப் பத்திரிகையில் வேடிக்கைகள், விடுகதைகள், புதிர்கள் ஆகியவற்றைப் புகுத்தினர். இந்தப் பயிற்சிகளுக்குத் தீர்வு காண்பது, விடாமுயற்சி, சுறுசுறுப்பு, உழைப்பு நாட்டம் ஆகியவை சம்பந்தமான ஒரு தனி விதமான போட்டியாக விளங்கியது. மூன்றாம் வகுப்பில் முதல் முறையாக நாங்கள் கணக்குப் போட்டி நடத்தினோம். ஒவ்வொரு குழந்தையும் தீர்வு கண்டு விடத்தக்க விதத்தில் பலவிதமான கஷ்டங்கள் நிறைந்த கணக்குகளைத் தந்தோம். இந்தக் கணக்குப் போட்டி சிறுகச் சிறுக மற்ற ஆரம்ப வகுப்புக்களையும் பற்றிக் கொண்டு பள்ளி முழுவதிலும் நடக்கத் தொடங்கியது.

''உலகம் பற்றிய கணக்குப் புத்தகத்தில்'' இருந்த கணக்குகளுக்கு விடை காண்பது குழந்தைப் பருவத்தில் சிந்தனையைத் தூண்டி, யோசிக்கக் கற்றுக் கொடுக்கிறது. குழந்தைகள் யோசிக்கக் கற்றுக் கொள்ளவில்லை என்றால்,

சிந்தனை நிகழ்ச்சிப் போக்கில் மூளை வலுவடையவில்லை என்றால் கணக்கிலும் சரி, மற்ற பாடங்களிலும் சரி நல்ல அறிவு இருக்கும் என்பது பற்றிய பேச்சுக்கே இடமில்லை.

''எண்ணிக்கை சம்பந்தமான விதிகளையும், சூத்திரங்களையும் விட்டுத் தள்ளுங்கள். முடிந்த அளவுக்கு அதிகமாக செயலாற்றும்படி வற்புறுத்துங்கள். ஒரு விஷயம் விதியின்படி செய்யப்படவில்லை என்பதால் அன்றி செய்யப்பட்ட விஷயத்துக்கு அர்த்தம் இல்லை என்பதால் அதனைத் திருத்துங்கள்''[1] என்று லேவ் தல்ஸ்தோய் ஆலோசனை வழங்குகிறார். மேம்போக்காகப் பார்க்கையில் வாசகருக்குத் தோன்றுகிறபடி சூத்திரங்களையும், விதிகளையும் தத்துவார்த்த ரீதியில் பொதுமைப்படுத்துவதையே இந்த ஆலோசனை மறுக்கவில்லை. மாறாக, சூத்திரங்கள், விதிகள் ஆகியவற்றின் சாரத்தை மாணவன் ஆழமாகக் கிரகித்துக் கொள்ள வேண்டும். இந்த விதியில் எங்கிருந்தோ கொண்டு வரப்பட்ட, புரியாத ஏதோ ஒரு உண்மையை அவன் காணுமல் பொருள்களின் இயல்பிலிருந்தே வெளிப்படுகிற நியதியை அவன் காண வேண்டும் என்றே இந்த ஆலோசனை எடுத்துக் காட்டுகிறது. ஆசிரியர் இத்தகைய அணுகல் முறையைக் கையாண்டால் மாணவன் சூத்திரத்தைத் தானே ''கண்டுபிடிப்பான்''. இந்தக் கண்டு பிடிப்பு தருகிற மகிழ்ச்சி, சிந்தனையில் பெரும் பங்கு வகிக்கிற வல்லமை வாய்ந்த உளநெகிழ்ச்சித் தூண்டுதலாக விளங்கும். தல்ஸ்தோய் புத்திமதி சிறு குழந்தைகள் சம்பந்தப்பட்டது என்பதையும் மறந்து விடக்கூடாது.

''உலகம் பற்றிய கணக்குப் புத்தகத்தில்'' இருக்கிற கணக்குகளுக்குத் தீர்வு காண்பதை, கணக்கில் தேர்ச்சி பெறுவதை மேம்படுத்துகிற ஒரே சாதனமாகப் பார்க்கக் கூடாது. சிந்தனையின் வளர்ச்சிக்கு உதவி செய்கிற போதே, பாட நேரங்களில் மேற்கொள்ளப்படுகிற பாட—போதனை நிகழ்ச்சிப் போக்கின் தேவைகளுக்கு உட்பட்டு உதவி நல்

---

[1] லே. நி. தல்ஸ்தோய். **போதனைக் கட்டுரைகள்,** மாஸ்கோ, உச்பெத்கிஸ் பதிப்பகம், 1953, பக். 339.

கும் சாதனமாகவும் அது இருந்தது. அறிவு, ஒழுக்கம், அழகுணர்ச்சி, உழைப்பு ஆகியவை சம்பந்தமான பயிற்சி முறைகளையும் வழிகளையும் கொண்ட ஒரு தொகுதிக்குள் தான் இந்தச் சாதனம் செயல்பட முடியும். உருவகமாகச் சொன்னால் தொடக்கப் பள்ளியின் பிரதான குறிக்கோளை எட்டுகிற—வலுவான அறிவும் நடைமுறைத் திறமையும் உறுதியாக உள்ளடங்கிய ஒரு வட்டத்தை — ஒரு பாலத்தை இதில் நான் கண்டேன். கோரிக்கைகள், குறிக்கோள்கள் ஆகியவற்றில் தெளிவும் வரையறுப்பும் கணக்குக் கற்றுக் கொள்வதில் முக்கியமான பாத்திரம் வகிக்கின்றன. மாணவன் ஆழமாக ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, உறுதியாக நினைவில் நிறுத்த வேண்டியவை என்னென்ன என்று ஒவ்வொரு கல்வியாண்டு தொடங்கும்போதும் நான் நிர்ணயிப்பேன். நேர் வரிசை எண்கள் தோன்றுகின்ற கோட்பாடு குறித்த அறிவே மேற்கொண்டு வரப்போகிற கணக்குக் கல்வியின் உறுதிக்கு அடிப்படையாக விளங்குகிறது. நூறுக்குள் உள்ள எண்ணிக்கையைக் கூட்டுவது, கழிப்பது சம்பந்தமான எந்தக் கேள்விக்கும் முதல் வகுப்பிலேயே யோசனை செய்யாமல் ஒவ்வொரு மாணவனும் விடையளிக்கவேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். இந்த நோக்கத்துடன் எண்களைப் பகுத்து ஆய்வு செய்கிற பயிற்சிகளின் தொகுதி ஒன்று உருவாக்கப்பட்டது. பெருக்கல் வாய்பாட்டில் நல்ல அறிவு இல்லாமல் ஆரம்ப வகுப்புகளிலும் அதற்கப்புறமும், மாணவனின் ஆக்கப் பணி எதையும் நான் நினைத்தும் பார்க்கவில்லை. அவசியமான பல்வகை அறிவை நினைவில் நிறுத்துவது படைப்புச் சிந்தனையின் ஒரு முக்கியமான சாதனமாகும்.

மோசமான ஞாபக சக்தி கொண்ட குழந்தைக்குச் சிந்திப்பதும், புரிந்து கொள்வதும் கஷ்டம் ஆகும். குழந்தையின் ஞாபக சக்தியை உறுதிப் படுத்தி வளர்ச்சியுறச் செய்வது எப்படி, சிந்தனைக்கு ஒரு சாதனமாக உபயோகிக்கத் தக்க கருத்துருக்களையும், உண்மைகளையும், பொதுமைப் படுத்தல்களையும் தந்து அந்த ஞாபக சக்தியை செழுமைப் படுத்துவது எப்படி எனும் பிரச்சினை என்னை வெகு கால

மாகவே அலேக்கழித்து வந்தது. ஞாபக சக்தியின் வளர்ச்சிக்கு ஒரு சாதனமாக ''கணக்குப் பெட்டி'' விளங்கியது. இது ஒரு காட்சித் துணைப் பொருள் ஆகும். இதன் உதவியால் குழந்தைகள் தமது அறிவைப் பரிசோதித்துக் கொண்டனர். கணித சம்பந்தமான சதுரங்களை கவனமாகச் சேர்த்துக் கட்டுவதுதான் இந்தப் பரிசோதனை ஆகும். மரத் துண்டுகளால் கனசதுரத்தின் பக்கங்கள் அமைக்கப் பட்டன. ஒவ்வொரு சதுரத்திலும் எழுதப் பட்டுள்ள எண்களின் கூட்டல் எல்லாப் பக்கங்களிலும் இருக்கிற எண்களின் கூட்டலுக்குச் சமமாகும். பெருக்கல் வாய்ப்பாட்டை திரும்பப் பரிசீலனை செய்வதற்காக ''கணக்குப் பெட்டியில்'' விசேஷமான பயிற்சிகள் இருந்தன.

மின் சங்கிலியின் உதவியால் இயங்கும் கணக்கு மின் கருவி ஞாபக சக்தியை வளர்த்து அதற்கு வலுவூட்டுவதற்கு உகந்த சிறப்பான சாதனமாக விளங்கியது. பெருக்கல் வாய்ப்பாட்டை, நேர் வரிசையில் இந்தக் கருவியின் மூலம் ஒவ்வொரு குழந்தையும் மீண்டும் மீண்டும் ஞாபகப் படுத்திக் கொண்டது. மூன்றும் வகுப்பிலேயே நாங்கள் கணக்குக் கருவி செய்யத் தொடங்கினோம். நான்காம் வகுப்பு முடிவதற்குள் எங்களிடம் இத்தகைய நான்கு கருவிகள் இருந்தன. சிந்தனையையும் கை வேலையையும் இணைப்பது மாணவர்களின் அறிவு வளர்ச்சிக்கு எவ்வளவு முக்கியமானது என்று இந்த நிகழ்ச்சிப் போக்கில் நான் இன்னொரு முறை கண்டு கொண்டேன். உறுதியற்ற ஞாபக சக்தி கொண்டிருந்த குழந்தைகள், காட்சிப் பொருள்களைத் தயாரிப்பதில் பங்கெடுத்துக் கொண்டதன் மூலம் அந்த ஞாபக சக்திக்கு வலுவூட்டினர் (சிந்தனை நிகழ்ச்சிப் போக்கின் மீது செல்வாக்குச் செலுத்தும் மற்ற சாதனங்களுடன் ஒன்று சேர்ந்து இது குறிப்பிட்ட பலன்களைத் தந்தது என்பது சொல்லாமலே விளங்கும்).

சிந்தனைக்கு கலாசாரப் பயிற்சி தருவதில் சதுரங்க விளையாட்டு முக்கியமான பாத்திரம் வகித்தது. ஷூரா, கால்யா, செர்யோஷா, யூரா, வான்யா, மீஷா ஆகியோரும் மற்ற குழந்தைகளும் ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்

திலேயே'' சதுரங்கம் விளையாடக் கற்றுக் கொண்டனர். சிறுவர்களும் சிறுமிகளும் அடிக்கடி சதுரங்கப் பலகைக்கு அருகே உட்கார்ந்திருக்கலாயினர். சதுரங்க விளையாட்டு சிந்தனையை ஒழுங்கு படுத்தியது, ஒரு முனைப்பாட்டை வளர்த்தது. ஞாபக சக்தி வளர்வதுதான் இங்கு பிரதான மானது ஆகும். இளம் சதுரங்க விளையாட்டு வீரர்களைக் கவனித்து வந்த நான், ஏற்கெனவே இருந்த நிலைமை யையும் இனி வரப் போகிற நிலைமையையும் சிந்தனு பூர்வமாக உருவாக்குவதைக் கண்டேன். வால்யா, நீனு, பெத்ரிக் ஆகியோரும் சதுரங்கம் விளையாட வேண்டும் என்று நான் மிகவும் விரும்பினேன். நான் அவர்களுக்கு விளை யாடக் கற்றுக் கொடுத்தேன். குழந்தைகள் அடுத்த காய் நகர்த்தல்களைப் பற்றி யோசித்தனர். லுயூபா, பாவெல் ஆகியோரின் கணிதச் சிந்தனையை வெளிக் கொணருவதற்குச் சதுரங்கப் பலகை எனக்கு உதவி செய்தது. சதுரங்கம் விளையாடத் தொடங்குவதற்கு முன் (மூன்றும் வகுப்பில் இந்தக் குழந்தைகள் விளை யாடத் தொடங்கினர்) இவர்களது சிந்தனையின் கூர்மை யையும் தொடர்ச்சியையும் நான் காணவில்லை.

அறிவுத் திறன், ஞாபக சக்தி ஆகியவற்றைப் பயிற்று விப்பது என்பதை சதுரங்க விளையாட்டு இன்றி நினைத்தும் பார்க்க முடியாது. அறிவுக் கலாசாரத்தின் ஒரு அம்ச மாக, சதுரங்க விளையாட்டு தொடக்கப் பள்ளியின் வாழ் வில் நுழைந்துவிட வேண்டும். தொடக்கப் பள்ளியைப் பற்றித்தான் இப்போது பேசுகிறோம். இங்குதான் அறிவாற்றல் பயிற்சி ஒரு விசேஷ இடத்தை வகிக்கிறது. இந்தப் பயிற்சி சில விசேஷ வடிவங்களையும் முறைகளை யும் எதிர்பார்க்கிறது.

## பூமி உருண்டையில் எங்கள் ''பயணம்''

பிறந்த பூமியின் காடுகள், வயல்கள் ஆகியவற்றைப் பற்றிய குழந்தையின் கண்ணோட்டம், தாய் நாட்டின், உலகம் முழுவதின் இயற்கைக் காட்சி, வாழ்க்கை ஆகியவை

பற்றிய கண்ணேட்டமாகச் சிறுகச் சிறுக வளருமாறு ஆசிரியர் பார்த்துக் கொள்ள வேண்டும்.

பூமி என்பது பிரம்மாண்டமான ஒரு பந்து எனவும், ஒரு புறத்தையோ மறு புறத்தையோ காட்டியபடி சூரியனை நோக்கி பூமி திரும்புகிறது என்றும், ஒரே நேரத்தில் பூமியின் பல்வேறு இடங்களில் உஷ்ணமான கோடை காலம் கடுமையான குளிர்காலம், இரவு, பகல் ஆகியவை இருக்கும் என்றும் எனது மாணவர்கள் முதல் வகுப்பிலேயே நன்கு தெரிந்து வைத்திருந்தனர். இரண்டாம் வகுப்பிலிருந்து பூமி உருண்டையைச் சுற்றி நாங்கள் ''பயணம்'' போய் வரத் தொடங்கினேம். ''பசுமை வகுப்பில்'' குழந்தைகள் உட்கார்ந்திருக்கிருர்கள். அவர்கள் முன்னே பெரியதொரு பூமி உருண்டை இருக்கிறது. செயற்கைச் ''சூரியன்'' அதன் மீது ஒளிர்கிறது. ''சூரியனைச்'' சுற்றி வருகிறது ''பூமி''. ''பூமியைச்'' சுற்றி வருகிறது ''சந்திரன்''. ''இதோ பாருங்கள்'' குழந்தைகளே, என்று தாய்நாட்டின் பரந்த நிலத்தை அவர்களுக்குக் காட்டுகிறேன். ''இதன் மேற்கு எல்லையில் நாம் வசிக்கிறோம். கிழக்கு நோக்கி தொலை தூரப் பயணம் போவோம். நகரங்களிலும் கிராமங்களிலும் தங்குவோம். மக்கள் எப்படி வசிக்கிருர்கள் என்று பார்ப்போம்'' என்கிறேன். பின்னர், எங்கள் வழியில் எதிர்ப்படுகிற. வயல்கள், ஆறுகள், மக்கள் வாழும் பகுதிகள் ஆகியவை பற்றிச் சொல்கிறேன். இவை பற்றிப் பேசும் போதே படங்களையும், நிழற் படங்களையும் நான் காட்டுகிறேன்.

மாலை கவிழ்கிறது. நேரம் போவதே தெரியாமல் ''பயணத்தில்'' இரண்டு மணி நேரம் கழிந்து விட்டது. நாங்கள் இன்னும் நூறு கிலோமீட்டர் கூடப் போகவில்லை. ''பயணத்தைத்'' தொடரப் போகும் நாளுக்காகக் குழந்தைகள் ஆவலுடன் காத்திருக்கிருர்கள்.

... நகரங்கள் கிராமங்கள், காடுகள் ஆறுகள், கட்டுமானங்கள் நினைவுச் சின்னங்கள் ஆகியவை மீண்டும் வருகின்றன. சலிப்பூட்டுகிற வகையில் ஒரே மாதிரியாக இருக்கவில்லை எங்கள் ''பயணம்'' ஏனெனில் நமது நாட்டின்

ஒவ்வொரு பகுதியிலும் புதியதாக விசேஷமாக எதையோ காண்கிருர்கள் குழந்தைகள். ''பயணம்'' பல நாட்கள் தொடருகிறது. நாங்கள் வோல்கா நதியை நெருங்கு கிருேம். அங்கு நீர்மின்நிலையங்களையும், வோல்கா நதிக் கரையின் பரந்த ஸ்டெப்பி வெளிகளில் இடையர்களையும் கண்டோம். மனித குலத்தின் தலைவிதியையே நிர்ணயித்த ஸ்டாலின்கிராடு சண்டையைப்[1] பற்றி மூச்சு விடாமல் கேட்டுக் கொண்டிருக்கிருர்கள் குழந்தைகள். ஆயிரக் கணக்கான, பத்தாயிரக் கணக்கான வீரர்கள் உயிர் கொடுத்து வழிமறித்து நின்றிருக்கவில்லை என்ருல், கொடு மையான பலம் வாய்ந்த எதிரியின் தாக்குதலை எதிர்த்து அழித்திருக்கவில்லை என்ருல் அவனது முதுகெலும்பை முறித்திருக்கவில்லை என்ருல், இந்த வசதியான வகுப்பறை யில் இன்று நாம் உட்கார்ந்து கொண்டிருக்க முடியாது. மனித குலத்தின் தலைவிதிகள், கவலைகள், பதட்டங்கள் ஆகியவற்றின் பேருலகுக்கு சிறு வயதிலிருந்தே குழந்தை களை இட்டுச் செல்ல வேண்டும். இரத்த பயங்கரப் போர் ஒன்றை துவக்கி விடத் தயாராயிருக்கும் சக்திகள் பூமியில் இன்றும் கூட இருக்கின்றன, என்பதைக் குழந்தை உண ரட்டும். சமாதான விரோதிகளின் மீது சிறுவனின் இதயத் தில் வெறுப்பு உணர்ச்சி உண்டாகட்டும், அது உறுதி பெறட்டும். தலைவிதி எனும் சுழிக் காற்றில் வெறும் தூசி அல்ல மனிதன், வல்லமை வாய்ந்த சக்தி அவன் என்று குழந்தைகள் தமது தாத்தாக்களும், கொள்ளுத் தாத்தாக் களும் நிகழ்த்திய வீரச் செயல்களிலிருந்து நம்பிக்கை பெறட்டும்.

பிறந்த மண்ணில் மேலும் மேலும் தொலை தூரத்

---

[1] ஸ்டாலின்கிராடுக்கு (இன்று வோல்காகிராடு) அருகே 1942—1943ல் நடந்த சண்டை. பாசிஸ்டு ஆக் கிரமிப்பாளர்களுடன் நடந்த மாபெரும் தேசபக்தப் போருக்கும், இரண்டாம் உலகப் போர் முழுதுக்குமே மாபெரும் திரும்பு முனையாக இருந்தது ஸ்டாலின்கிரா டுக்கு அருகே நடந்த சண்டையில் சோவியத் ராணுவம் பெற்ற வெற்றி.

துக்குச் செல்கிருர்கள் குழந்தைகள். அவர்கள் முன்னே புதிய காட்சிகள் விரிகின்றன: வற்ருத கனிப் பொருள்கள் கொண்ட வளமான யூரல் பிரதேசம், புதிர் நிறைந்த தாய்கா, சக்தி வாய்ந்த சைபீரிய ஆறுகள்... இயற்கை வளத்தைத் தேடுபவர்களான புவியியல் வல்லுனர்களுடன், மதிப்பு வாய்ந்த கற்களைக் கொண்ட அழகான யூரல் பிரதேசத்தில் நாங்கள் பல நாட்கள் பயணம் செய்தோம். படகில் அமர்ந்து பைக்கால் ஏரியில் மிதந்து செல்கிருேம், மலைகளையும் காடுகளையும் கண்டு ஆனந்தம் கொள்கிருேம், முகாம் அடுப்புக்கு அருகே ஒரு இரவு தங்குகிருேம்... பயணத்தைத் தொடர்கிருேம். தூரக் கிழக்கின் செழிப்பு குழந்தைகளின் கண்முன்னே விரிகிறது. பின்னர் வருகிறது கடல். சமுத்திரப் படகில் உட்கார்ந்து சஹலினுக்குப் போகிருேம். பின்பு குரைல் தீவுகளுக்குச் செல்கிருேம். நமது தாய்நாட்டின் பிறந்த நாள் இங்கு இருக்கும் போது வருகிறது. எங்கள் பயணம் சுமார் மூன்று மாதங்கள் நீண்டது. ஒரு நாளைக்குச் சராசரி ஒரு நூறு கிலோமீட்டர் பயணம் செய்தோம். நாற்பதுக்கு மேற்பட்ட மக்களினங்களைச் சந்தித்தோம். உழவர்கள், கட்டிடத் தொழிலாளர்கள், சுரங்கத் தொழிலாளர்கள், மீன்பிடிப்பவர்கள் புவியியல் வல்லுனர்கள் ஆகியோரைச் சந்தித்தோம். நாம் நன்கு வாழ வேண்டும் என்பதற்காக அவர்கள் அனைவரும் உழைக்கிருர்கள். எவ்வளவு வளம் வாய்ந்த, பிரம்மாண்டமான, நட்பு நிறைந்த நாடு நம்முடைய நாடு என்று குழந்தைகள் பெருமை உணர்ச்சி கொள்கிருர்கள்.

தாய் நாட்டைச் சுற்றி ஒன்றுக்குப் பின் ஒன்ருக இன்னும் சில ''பயணங்களை'' நாங்கள் மேற்கொள்கிருேம். வடக்கு நோக்கிப் போகிருேம். கடுமையான, அழகிய துந்திரப் பிரதேசம், ஆர்க்டிக் சமுத்திரம் ஆகியவற்றைக் காண்கிருேம். வீரம் செறிந்த துருவ ஆய்வு விஞ்ஞானிகள், மான் வளர்ப்பவர்கள், காடு வெட்டுபவர்கள் ஆகியோரை நாங்கள் சந்தித்தோம். மேற்கில் குச்சூல் சகோதரர்களின் வாழ்க்கையைக் கண்டோம். மலைகளில் மேய்ச்சல் தரையைக் கண்டு மகிழ்ச்சி கொள்கிருேம். காகசஸ்

மலைகளினூடேயும், மத்திய ஆசியாவின் சமவெளியிலும் நாங்கள் தெற்கில் ''பயணம்'' போகிறோம்.

ஒரு வருடம் முழுதும் நாங்கள் பயணத்தில் கழித்தோம். குழந்தைகளின் உணர்வில் ''தாய்நாடு'' என்ற சொல் சோவியத் மக்களின் வீரஞ்செறிந்த உழைப்பு பற்றிய பெருமை உணர்ச்சியைத் தோற்றுவிக்கிற பிரகாசமான காட்சிகளை நிறைத்தது. எங்கள் வழியைப் பின்பற்றி ஆரம்ப வகுப்புகளின் மற்ற ஆசிரியர்களும் பிறந்த பூமியில் ''பயணங்கள்'' செய்து வரத் தொடங்கினர். மதிப்பிற்கரிய தியாகங்களால் ஈட்டப் பட்டுள்ள, சோவியத் மக்கள் போற்றுகிற சாதனைகளை ''தாய்நாடு'' எனும் கருத்துருவில் குழந்தைகள் காண வேண்டும் என்பதற்காக நாங்கள் பாடுபட்டோம்.

சோவியத் யூனியன் சகோதரக் குடியரசுகளுக்கு நாங்கள் மேற்கொண்ட ''பயணம்'' கல்விப் பயிற்சியைப் பொறுத்த வரை மிகவும் சுவாரஸ்யமானதாய் இருந்தது. மூன்று மக்களினங்களான ருஷ்யர்கள், உக்ரேனியர்கள், பெலருஷ்யர்கள் ஆகியோருக்கு உரிய நதியான தினேப்பர் நதியிலிருந்து இந்தப் பயணம் தொடங்கியது. பிரம்மாண்டமான நதியில் மிதந்து செல்கையில், நகரங்கள், கிராமங்கள், சகோதர மக்களினங்களின் கடந்த காலம், நிகழ் காலம் ஆகியவற்றைக் கண்டோம். சுரண்டுபவர்களிடமிருந்து விடுதலை பெறுவதற்காகவும்,உள்நாட்டுப் போர், மாபெரும் தேசபக்தப் போர் ஆகியவற்றில் விடுதலையும் சுதந்திரம் ஈட்டுவதற்காகவும் அடிமைப் படுத்துவோருக்கு எதிராக நடத்திய போராட்டத்தில் சிந்திய ரத்தத்தால் பிணைப்புண்ட மக்களின் மாபெரும் சகோதரத்துவத்தை ஸ்மலேன்ஸ்க், லோயெவ், கீவ், கானெவ், செர்க்காசி, கிரெமென்சூக், சபரோஷ்யே, கஹோவ்கா ஆகிய நகரங்களில் ஒவ்வொன்றும் நினைவூட்டியது. அழகையும், ஆற்றின் மகத்துவத்தையும், மக்களினங்களின் சகோதரத்துவம் நட்பு ஆகியவற்றையும் போற்றிப் புகழும் உக்ரேனிய, ருஷ்ய, பெலருஷ்யப் பாடல்களை தினேப்பர் நதியில் பயணம் போகையில் குழந்தைகள் கேட்டனர். சோவியத்

ஆட்சிக் காலத்தில் நமது குடியரசில் முடிக்கப் பட்டுள்ள கட்டுமானங்கள் பற்றிய கதை தமது சோஷலிச நாடு பற்றிய அழமான பெருமை உணர்ச்சியைக் குழந்தை களிடம் தோற்றுவித்தது.

நாட்டின் நினைவுச் சின்னங்கள் உள்ள இடத்துக்கு நாங்கள் மேற்கொண்ட ''பயணம்'' பல நாட்கள் நீடித் தது. ருஷ்ய மக்களுடன் தாம் கொண்டுள்ள நிரந்தர ஒற்று மையை உக்ரேனிய மக்கள் வெளிப்படுத்திய இடமான பெரியஸ்லாவ்—ஹ்மேல்நிச்கில் நாங்கள் பயணம் தொடங் கினோம். பிறந்த மண்ணின் விடுதலைக்காகவும் சுதந்திரத் துக்காகவும், உள்நாட்டுப் போருக்கும்[1] பாசிஸ்டு ஆக்கிரமிப் பாளருக்கு எதிராக நடந்த போருக்கும் பின்னே அழிக்கப் பட்ட தொழிற்சாலைகளைப் புனரமைப்பதற்காகவும் நடந்த பொதுவான போராட்டத்தில் ஒரே தலைவிதியால் ஒன்றிணைக்கப் பட்டிருந்த நூற்றுக் கணக்கான நகரங்களை நாங்கள் சிந்தனை பூர்வமாகக் கடந்து வந்தோம்.

ருஷ்ய சோவியத் சோஷலிசக் கூட்டுக் குடியரசில் நாங் கள் மேற்கொண்ட பலநாள் ''பயணம்'' மறத்தற்கரிய மனப்பதிவுகளைக் குழந்தைகளிடம் ஏற்படுத்தியது. மக்க ளினங்களது நட்பின் மகத்துவம் எங்கள் முன்னே விரிந் தது. ருஷ்ய மண்ணில் நூறுக்கும் மேற்பட்ட தேசிய இனங் கள் வாழ்கின்றன. வோல்கா நதிக்கரை வடக்குக் காக சஸ், யூரல், சைபீரியா, தூர கிழக்கு, வடக்கு முனை ஆகிய பிரதேசங்களில் வாழும் மக்களினங்களின் வாழ்க்கையைக் குழந்தைகள் தெரிந்து கொண்டனர்.

நமது நாட்டில் லெனினுடன் சம்பந்தப்பட்ட இடங் களுக்கு நாங்கள் பல ''பயணங்கள்'' மேற்கொண்டோம். தேசப்படத்தில் இருக்கிற உல்யானவ்ஸ்க், குய்பிஷேவ்,

---

[1] சோவியத் யூனியனில் நடந்த உள்நாட்டுப் போர் (1918—1920) — மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சியில் ஈட்டிய வெற்றிகளைக் கட்டிக் காப்பதற்காக வெளிநாட்டு, உள்நாட்டு எதிர்ப்புரட்சியாளர்களுடன் சோவியத் ருஷ்யாவின் தொழிலாளர்களும் உழைக்கும் விவசாயிகளும் நடத்திய போர்.

கஸான், லெனின்கிராடு, மாஸ்கோ, ஷுஷென்ஸ்கயே ஆகிய புள்ளிகள் ஒவ்வொன்றும் குழந்தை இதயத்தில் பிரகாசமான சித்திரத்தை வரைந்தது. கம்யூனிஸ்டுக் கட்சியையும், சோவியத் அரசையும் நிறுவியவரான விளதீமிர் இலீச் லெனினது குழந்தைப் பருவம், இளமைக் காலம் முதிய பருவம் ஆகியவை பற்றி நான் சொன்னேன்.

பெலருஷ்யா, மல்தாவியா, மத்திய ஆசியாவின் சகோதரக் குடியரசுகள், காகசஸ் மலையை அடுத்த குடியரசுகள் பால்டிக் பிரதேசம் ஆகியவற்றில் செய்த ''பயணங்கள்'' மக்களினங்களின் மாபெரும் நட்பு பற்றிய புதிய புதிய சித்திரங்களைக் குழந்தைகள் முன் கொண்டு வந்தன. ருஷ்ய, பெலருஷ்யப் பள்ளி மாணவர்களுடன் எங்கள் வகுப்பு மாணவர்கள் அப்போது ஏற்கெனவே கடிதப் போக்குவரத்து நடத்தி வந்ததால் நாங்கள் மேற்கொண்டிருந்த சிந்தனுபூர்வமான பயணங்கள் இன்னும் கவர்ச்சி மிக்கதாயும் சுவாரஸ்யம் நிரம்பியதாகவும் இருந்தன.

நமது நாட்டின் எல்லைக்கு அப்பாலும் நாங்கள் ''பயணங்கள்'' கிளம்பினோம். உலகத்தின் பலப்பல பகுதிகளில் இருக்கும் அழகை, பன்முகத் தன்மையைக் காட்டுவதும் உலகத்து மக்களின் வாழ்வில், உழைப்பில் இருக்கின்ற நல்லவை அனைத்தையும் பற்றிச் சொல்வதும், பல்வேறு மொழிகளில் பேசுகிற மக்களின் கலை, கலாசாரம், கடந்த காலம், நிகழ்காலம் ஆகியவை பற்றிக் கூறுவதும், பூமி முழுவதிலும் நன்மைக்கும் தீமைக்கும் இடையில் நடக்கிற போராட்டத்தை எடுத்துக் காட்டுவதும் எனது குறிக்கோளாக இருந்தது. பிறந்த பூமியில் மேற்கொண்ட ''பயணத்தை'' விட இந்தப் ''பயணங்களில்'' காட்சி முறை அதிகப் பங்கு வகித்தது: இங்கு காண முடியாத இயற்கையையும் தொலைதூரப் பிரதேசங்கள் பற்றியும் மனத்தோற்றங்களை உருவாக்கிக் கொள்ள வேண்டியதாயிற்று.

நிரந்தரமாகக் கோடைகாலம் இருக்கிற நாடுகளுக்கு நாங்கள் முதலில் போனோம். எகிப்து, இந்தியா, சிலோன், இந்தோனேசியா ஆகிய நாடுகளின் மக்களினங்களின் இயற்

கை, வாழ்க்கை, உழைப்பு, கலாசாரம் ஆகியவற்றை ஒவ்வொரு நாளும் குழந்தைகள் தெரிந்து கொண்டனர். இந்த நாடுகள் பற்றிய கதைகளைக் கேட்டனர், சினிமாப் படங்களைப் பார்த்தனர். குழந்தைகள் தாம் நெடிதுயர்ந்த தென்னை மரங்களுக்குக் கீழே இருப்பது போல உணர்ந்தனர். வெப்ப நாட்டுச் சூரியனின் சுட்டெரிக்கும் வெய்யிலையும் பெருமழையின் குளுமையையும் அனுபவித்தனர். உழைப்பாளர்களின் வாழ்க்கையைக் கண்டனர். பிரமிட்களின் நாடான எகிப்துக்கு நாங்கள் மேற்கொண்ட ''பயணம்'' மிகவும் சுவாரஸ்யமாக இருந்தது.

பின்னர் நாங்கள் அண்டை அரசுகளான பால்டிக் நாடுகள், ஸ்காண்டினேவிய நாடுகள், மத்திய ஐரோப்பிய நாடுகள், துருக்கி, ஈரான், ஆப்கானிஸ்தான், ஜப்பான் ஆகிய நாடுகளுக்குப் ''பயணம்'' போனோம். பின்னர் ஆப்பிரிக்கா, தென் அமெரிக்கா, கனடா, அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஆஸ்திரேலியா, அன்டார்க்டிக் முதலியவற்றுக்கும் இதே போலப் போய் வந்தோம்.

பூமி உருண்டையின் பல்வேறு பகுதிகளில் மக்கள் மேற்கொள்ளும் உழைப்பின் சித்திரங்கள் பெரிய மனப்பதிவைக் குழந்தைகளிடம் ஏற்படுத்தின. மனிதன் எங்கே வாழ்ந்த போதிலும், அவன் தோலின் நிறம் எதுவாக இருந்த போதிலும், அவன் என்ன மொழி பேசிய போதிலும், அவன் எங்கெங்கும் உழைக்கிறான், குழந்தைகளை வளர்க்கிறான், அவர்களின் மகிழ்ச்சி பற்றிக் கனவு காண்கிறான். சோஷலிசக் கூட்டுறவு நாடுகளில் இருக்கும் மக்களின் வாழ்க்கை, உழைப்பு ஆகியவற்றை முடிந்த அளவுக்குப் பிரகாசமாகக் காட்டுவதற்கும், உழைப்பாளர்களிடம் ஒரு நட்புறவைத் தூண்டுவதற்கும் நான் முயன்றேன். ஜெர்மன் ஜனநாயக குடியரசு பற்றி அவர்களுக்குச் சொன்னேன்.

பாசிசம் என்பதும் ஜெர்மன் மக்களும் ஒன்றேயல்ல என்ற உதாரணங்கள் குழந்தைகளுக்கு உறுதியூட்டின. ஜெர்மானியத் தொழிலாளி வர்க்கத்தின் சிறந்த மக்கள் ஹிட்லரிசப் பிற்போக்கின் துக்ககரமான நாட்களில்,

சோவியத் மக்கள் எதிர்த்துப் போராடிய அதே விரோதி யான நாசிசத்துக்கு எதிராகத் தாக்குதல் தொடுத்தனர்.

உலக உருண்டையில் ''பயணம் போகும் போது'', எல்லா மக்களும் மகிழ்ச்சியில் வாழ்ந்து கொண்டிருக்க வில்லை என்றும் மனிதனை மனிதன் ஒடுக்கிக் கொண்டிருக் கிற, ஏழ்மையும் பட்டினியும் கோலோச்சிக் கொண்டிருக் கிற நாடுகள் உலகில் இருக்கின்றன என்றும் குழந்தைகள் கண்டனர். நியாயமற்ற சமுதாய அமைப்பே இந்தக் கேட் டிற்குக் காரணம் என்னும் மனத்தோற்றம் குழந்தைகளின் உணர்வில் உருவாகிறது. சுரண்டுவோருக்கும் சுரண்டப் படுவோருக்கும் இடையில் சமரசத்திற்கு இடமற்ற கடு மையான போராட்டம் உலகத்தில் நடந்து வருகிறது என்று குழந்தைகள் மனவுறுதி கொள்கின்றனர். சுரண்டுவோ ரால் அடிமைப் படுத்தப்பட்டுள்ள உழைப்பாளர்களின் துயரங்களும், சுதந்திரமின்றி வாழுகின்ற மக்களினங்களின் துயரங்கள் அனைத்தும் எனது மாணவர்களின் இதயத்தை எட்ட வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். குழந்தை இதயங்களை வேதனை இறுக்கியது. தமது தாய் நாட்டு மக்களின் உழைப்பை வேறு மாதிரிப் பார்த்தார் கள் குழந்தைகள். தாய்நாட்டின், தமது குடும்பத்தின், தமது மக்களின் நன்மைக்காக உழைப்பது பெரு மகிழ்ச்சியாகும் என்று அவர்கள் உணர்ந்தனர்.

மனிதனை மனிதன் சுரண்டுவது உலகில் இருந்து வரு கிற வரை, பொதுவாகவே மனித குலத்தின் மீது அன்பு செலுத்த வேண்டும் என்று பயிற்றுவிக்கக் கூடாது. ஏனெ னில் சூட்சுமமான மனித குலம் என்ற ஒன்று இல்லை. வர்க்கச் சகோதரர்களான சுரண்டப்படுவோரும், சமரசத்துக்கு இடமற்ற அவர்களது விரோதிகளான சுரண்டுவோரும் இருக்கின்றனர். புரட்சிகரமான, கம்யூனிசக் கருத்துக்கள் என்பவை என்ன என்று இளம் வயதிலேயே ஒவ்வொரு குழந்தையும் புரிந்து கொள்ள வேண்டும், இதயத்தால் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பது மிக முக்கியமான தாகும். நமது நாட்டில் அண்மைக் காலத்திற்குள் சிறிய பயணம் செய்தபடி, அதன் மக்கள் விடுதலைக்காகவும் சுதந்

திரத்திற்காகவும் நடத்திய போராட்டம் பற்றிச் சொல்லியபடி, இன்றைய காலத்தில் காலனி நாடுகளிலும் முதலாளித்துவ நாடுகளிலுமுள்ள உழைப்பாளர்கள் தமது உரிமைக்காக எப்படிப் போராடுகிறார்கள் என்பதைத் தெளிவான உதாரணங்களில் எடுத்துக்காட்டியபடி, கொள்கைக்காக மனிதர்கள் சாகத் துணிகிறார்கள் என்றும், கொள்கைக்காக நடக்கிற போராட்டத்தில் வர்க்கப் பகைமை தெளிவாக வெளிப்படுகிறது என்றும் குழந்தைகளைச் சிறுகச் சிறுக உணரச் செய்தேன். உயர்வான, நற்கொள்கைகளுக்காக உயிர்த் தியாகம் செய்த மனிதர்கள் நமது மாணவர்களின் லட்சிய வீரர்களாக இருக்க வேண்டும் என்பது மிக முக்கியமான விஷயமாகும். மாறாக ஒடுக்கு முறைக்கு அடக்கமாகக் கீழ்படிகிற மனிதர்கள் மீது வெறுப்புணர்ச்சியைத் தோற்றுவிக்க வேண்டும். மகிழ்ச்சி மிக்க எதிர்காலத்துக்காக மனிதர்கள் மேற்கொள்கிற போராட்டம், உழைப்பு, வாழ்க்கை ஆகியவையே உலகமாக சிறு குழந்தையின் கண்பார்வைக்கு முன்னால் தெரிய வேண்டும்.

கம்யூனிசக் கொள்கைகளைப் புரிந்து கொள்வதிலிருந்து கம்யூனிஸ்டுக் கட்சி எனும் கருத்துருவுக்குக் குழந்தைகளை நான் சிறுகச் சிறுக கொண்டு வந்தேன். தாய்நாட்டின் கடந்த காலத்தைப்பற்றி எடுத்துக் கூறியபடி, மனிதன் சுரண்டாமல் இருப்பதற்காகவும், உழைப்பாளர்கள் மகிழ்ச்சிகரமாக வாழ்வதற்காகவும், செல்வத்தைப் படைக்கிறவர்களுக்கே செல்வம் சொந்தமாக இருக்க வேண்டும் என்பதற்காகவும் தொழிலாளி வர்க்கத்தின் மிகச் சிறந்த பிரதிநிதிகள் தன்னலங் கருதாது போராடியதை தெளிவான உதாரணங்களால் எடுத்துக் காட்டினேன். எதேச்சாதிகாரத்தை வீழ்த்தி, சோவியத் ஆட்சியை நிலைநாட்டுவதற்காகத் தொழிலாளி வர்க்கத்தையும், விவசாயிகளையும் லெனினும் கம்யூனிஸ்டுக் கட்சியும் எப்படித் தயார் படுத்தினர் என்பதை எனது பேச்சினூடே சித்திரமாகத் தீட்டிக் காட்டினேன். நமது தாயகத்தின் விடுதலைக்காகவும் மகிழ்ச்சிக்காகவும் ஒளிமிக்க பாதை அமைத்துத் தந்த, முதலாளித்துவ நாடுகளில் அடிமைப்பட்டுக் கிடக்கிற

கோடிக் கணக்கான மக்களுக்கு அவர்கள் செல்ல வேண்டிய பாதையைச் சுட்டிக் காட்டிய மாபெரும் அக்டோபர் சோஷலிசப் புரட்சி, மகத்தான லெனினது துணைவர்களாய் இருந்த கம்யூனிஸ்டுகளின் தன்னலங்கருதாப் போராட்டத்தால் எப்படி நிகழ்ந்தது என்பதைத் தெளிவான உதாரணங்களால் எடுத்துக் காட்டினேன்.

தாயகத்துக்குள் மேற்கொண்ட ''பயணத்தின் போது'', சோவியத் ஆட்சிக் காலத்தில் நமது தாய்நாடு எப்படி உருத் தெரியாதபடி மாறி விட்டது என்றும், அதன் பரந்த நிலத்தில் பிரம்மாண்டமான ஆலைகள் எங்ஙனம் முளைத்திருக்கின்றன என்றும், எத்தகைய அற்புதமான கூட்டுப் பண்ணைகள் அதன் பூமிக்கு அழகு கூட்டுகின்றன என்றும், சோவியத் மக்களின் கலாசாரம் எவ்வாறு உயர்ந்துள்ளது என்றும் குழந்தைகளுக்குச் சொல்லி வந்தேன். நமது குழந்தையின் வாழ்க்கை பற்றி குறிப்பாக அதிகம் சொன்னேன். மகிழ்ச்சிகரமான குழந்தைப் பருவத்தை நமது மக்கள் அனைவரும் பாதுகாக்கிறார்கள்.

சோவியத் நாட்டின் மலர்ச்சி மிக்க வாழ்க்கைக்கு மாறுபட்ட விதத்தில் இருந்தது முதலாளித்துவ நாடுகளில் நிலவிய வாழ்க்கை.

ஜப்பானுக்குள் ''பயணம் போகும் போது'', 1945ஆம் ஆண்டு ஹிரோசிமா நகரத்தில் வீசப்பட்ட அணுகுண்டினால் ஆயிரக் கணக்கான மனிதர்கள் கதிர்வீச்சு நோயால் அவதிப்படுகின்றனர் என்றும் சதாகோ சசாகி எனும் சிறுமி கடிய நோயால் படுத்த படுக்கையாய் இருக்கிறாள் என்றும் குழந்தைகள் அறிந்து கொண்டனர். வெகு தூரத்திலுள்ள உறவுக்குரிய சிறுமிக்காக ஆழமாக அனுதாபம் கொண்டனர் குழந்தைகள். நோய் வாய்ப்பட்ட குழந்தைக்கு உதவி செய்ய அவர்கள் விரும்பினார்கள். ஆனால் எப்படி உதவுவது? ஜப்பானுக்குள் ''பயணம்'' செய்த சில வாரங்கள் கழித்து, பத்திரிகையில் வந்த செய்தி ஒன்றை நான் குழந்தைகளுக்குப் படித்துக் காட்டினேன். காகிதத்தில் ஆயிரம் கொக்குகள் செய்வது என்று சதாகோ சசாகி குறிக்கோள் கொண்டிருக்கிறாள் (ஆயிரம் கொக்குகள் செய்கிறவர்

என்றென்றும் இன்பமாய் இருப்பார் என்பது ஜப்பானிய நம்பிக்கை) என்று அதில் கண்டிருந்தது. நமது மக்களிடம் இது போன்ற ஒரு நம்பிக்கை இருக்கிறது. நோய்வாய்ப் பட்ட குழந்தையின் அன்பான தாயார் காகிதத்தில் வானம் பாடிகள் செய்கிருர். இது குழந்தைக்கு உடல் நலத்தைக் கொண்டு வரும் என்பது நம்பிக்கை. இதோ, இங்கு சிறு வர்களும் சிறுமிகளும் கொக்குகள் செய்கின்றனர். தொலே வில் உள்ள ஜப்பானுக்கு அனுப்புகின்றனர்... ஆண்டுகள் சில சென்றன. எனது மாணவர்கள் வாலிபர்களாகவும் இளம் பெண்களாகவும் மாறி விட்டனர். சதாகோ சசாகி யின் உடல் நலம் பற்றிய செய்தி ஒவ்வொன்றையும் ஒரு இதய வலியுடன் அவர்கள் அறிகிருர்கள். தூர தேசத்து சினேகிதியின் மரணம் பற்றிய துக்கச் செய்தி சொந்தப் பேரிழப்பாக இளம் உள்ளங்களுக்கு இருந்தது.

குழந்தையின் முன்னே நகர்ந்து வரும் தொடுவானத் தைக் கொண்டுள்ள உலகம் என்பது கடல்களும், சமுத் திரங்களும், கண்டங்களும், தீவுகளும், காணற்கரிய தூரங்களும், உயிரினங்களும், வடதுருவ ஒளியும், ஆர்க் டிக்கும் நிரந்தரக் கோடையும் மட்டும் அல்ல. மனிதர் கள், எதிர்கால மகிழ்ச்சிக்காக நடக்கும் உழைப்பு, போராட்டம், மனிதனே மனிதன் ஒடுக்குவது ஒழிக்கப் பட்டுள்ள நாடுகளில் நனவாகியுள்ள இன்பம், நியாயம் முதலியவை பற்றிக் கால காலமாக வருகிற கனவு ஆகிய வையே முதற்கண் உலகம் ஆகும். எது எங்கே செய்யப் படுகிறது என்பதைத் தெரிந்து கொண்டவர்களாக, இது பற்றி எடுத்துச் சொல்லத் தக்கவர்களாக, உணர்ச்சி வேக மற்ற கவனிப்பவர்களாக அன்றி மனித குலத்தின் தலே விதிக்காகப் பதட்ட உணர்ச்சி கொண்டவர்களாகக் குழந்தைகள் இந்த உலகுக்குள் நுழைய வேண்டும்.

நமது நாட்டுக்குள்ளும் வெளி நாடுகளிலும் மேற் கொள்கிற ''பயணங்களில்'', அறிவு, மனப்பதிவுகள் ஆகிய வற்றின் ''அளவு கடந்த உணவைக் குழந்தைகளுக்கு ஊட்டி விடுகிற'' அபாயத்தைப் புறக்கணியுங்கள். ''மிக வும் விரும்பப் படுகிற (குறிப்பாக வெளிநாட்டுப் பள்ளிப்

பாடப் புத்தகங்களில்) விஞ்ஞானத்திற்கு எட்டியுள்ள அசாதாரண விஷயங்கள் பற்றிய தகவல்களை—உலகத்தின் எடை எவ்வளவு, சூரியனின் நிறை என்ன, எத்தகைய வஸ்துக்களால் ஆனது சூரியன், மரமும், மனிதனும் எப்படி உயிரணுக்களால் ஆனவை போன்ற தகவல்களை ஒதுக்கி வையுங்கள்''[1] என்று சிறு குழந்தைகளைப் பயிற்றுவிக்கிற ஆசிரியருக்கு லேவ் தல்ஸ்தோய் புத்திமதி சொல்கிறார். வரட்சியான வெறும் முடிவுகள் மாணவனின் மீது எதிர் மறைச் செல்வாக்குச் செலுத்துகின்றன, வெறும் வார்த்தைகளின் மீது நம்பிக்கை கொள்ளுமாறு அவனுக்குக் கற்றுத் தருகின்றன என்று தமது புத்திமதிக்கு விளக்கம் தருகிறார் மாபெரும் எழுத்தாளரும், போதகருமான தல்ஸ்தோய். இந்த வார்த்தைகள் எழுதப்பட்ட பின் டஜன் கணக்கான ஆண்டுகள் ஓடி விட்டன. உருத் தெரியாமல் மாறி விட்டது உலகம், பிரம்மாண்டமான வெற்றிகளைக் கண்டிருக்கிறது விஞ்ஞானம், சிறு குழந்தைகளின் கண்ணோட்டமே வேறு மாதிரியாக மாறி இருக்கிறது. ஆனால் தல்ஸ்தோயின் புத்திமதி இன்னும் கூடத் தனது முக்கியத்துவத்தை இழக்கவில்லை. குழந்தைகளுக்குச் சொல்கிற கதைகளைத் திகைப்பூட்டும் தகவல்களால் அடைத்து நிரப்பக் கூடாது.

## மூளை உழைப்பில் மகிழ்ச்சியை, கல்விப் பயிற்சியில் வெற்றியின் மகிழ்ச்சியைக் குழந்தைக்குத் தாருங்கள்

மாணவனின் மூளை உழைப்பும், கல்விப் பயிற்சியில் பெறுகிற வெற்றிகளும் தோல்விகளுமே அவனது ஆன்மிக வாழ்வும் உள்ளத்து உலகமும் ஆகும். இந்த உலகை அலட்சியப் படுத்தினால் அது வேதனை மிக்க விளைவுகளைக் கொண்டு வரும். எதையோ தெரிந்து கொள்வதும், விஷயங்களில்

[1] லே. நி. தல்ஸ்தோய். **போதனைக் கட்டுரைகள்,** மாஸ்கோ, உச்பெத்கிஸ், 1953, பக்கம் 399-400.

தேர்ச்சி பெறுவதும் மட்டும் குழந்தை செய்கிற வேலை அல்ல. தனது உழைப்பால் அவன் அனுபவ உணர்ச்சி கொள்கிறுன், தான் வெற்றி பெறுகிற, தோல்வியடைகிற விஷயங்களை ஆழமான சொந்த உணர்வுடன் அவன் அணுகுவதை வெளியிடுகிறுன்.

சிறு குழந்தைக்கு நியாயத்தின் உருவகமாகத் திகழ்கிறுர் ஆசிரியர். திருப்தி தராத மார்க்கு வாங்கியுள்ள முதல் வகுப்பு மாணவனின் கண்களைப் பாருங்கள்... தான் துரதிருஷ்டசாலி என்று மட்டும் குழந்தை உணருவதில்லை. ஆசிரியரின் மீது வெறுப்பும், சில சமயங்களில் பகைமையுமே கூடக் கொண்டு விடுகிறுன் அவன். எதையோ குழந்தை புரிந்து கொள்ளவில்லை என்பதற்காக இரண்டு மார்க்கு போடுகிற ஆசிரியர் குழந்தையின் கண்களுக்கு நியாயமற்ற மனிதராகக் காட்சி தருகிறுர்.

ஒரு பள்ளிக்கூடத்தில் பின்கண்ட சம்பவம் நிகழ்ந்தது. தாவரம் எப்படி உணவு கொள்கிறது, எப்படிச் சுவாசிக்கிறது, தளிர் எப்படி இலையாகிறது, பூவிலிருந்து எவ்வாறு காய் வருகிறது போன்ற விஷயங்களை ஒரு மாணவனுல் புரிந்து கொள்ளவே முடியவில்லை. மாணவனை அடிக்கடி அருகே அழைத்து, ''இந்த எளிய விஷயங்களைக் கூட உண்மையிலேயே உன்னுல் புரிந்து கொள்ள முடியவில்லையா? பொதுவாக எதைத்தான் உன்னுல் புரிந்து கொள்ள முடியும்?'' என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தார் ஆசிரியர். ஒரு பாடத்தின் போது அவர் சொன்னுர்: ''சில தினங்களில் செஸ்டுநட்டு மரங்கள் தளிர் விடப் போகின்றன, அம்மரங்கள் நிறைந்த சாலைக்கு நாம் வகுப்பு முழுவதுமாகப் போவோம். ஒவ்வொருவருக்கும் புரிகிற விஷயத்தை அங்கே அல்யோஷா எடுத்துச் சொல்லவில்லை என்றுல் அவன் உருப்படமாட்டான்''. செஸ்டுநட்டு மரங்களைக் கொண்ட சாலையை ஒரு குழந்தையை நேசிப்பது போல் நேசித்தார் ஆசிரியர். பாடத்துக்கு முதல் நாள் சில மாணவர்களுடன் அந்த மரங்கள் நிறைந்த சாலைக்குச் சென்றுர். ஒவ்வொரு மரத்தின் உச்சியையும் அலங்கரித்த தளிர்களை கண்டு ஆனந்தம் கொண்டார். செஸ்டுநட்டு

மரச்சாலைக்கு அடுத்த நாள் வகுப்பு முழுவதுடனும் வந்த போது ஆசிரியர் திடுக்கிட்டார்: மரங்களில் இருந்த தளிர்கள் எல்லாம் பிய்த்தெறியப் பட்டிருந்தன. வருத்தம் தோய்ந்தவர்களாய் நின்றார்கள் குழந்தைகள். அல்யோஷாவின் கண்களில் குரோதப் புன்னகை மின்னுவதை ஆசிரியர் கண்டார்...

இந்த நடத்தைக்குப் பின்னால் ஒரு ஆத்திரத்தையும், குழந்தையினது ஆன்மிகச் சக்தியின் கொந்தளிப்பான கோபாவேசத்தையும் காணலாம். தனது சக்திகளில் நம்பிக்கை இன்றி இருப்பதற்கு எதிராகத் தனது ஆட்சேபத்தை வெளியிட்டுள்ளான் மாணவன். அடுத்தடுத்து இரண்டு மார்க்குகள் வாங்குகிற குழந்தைகள் தமது அதிருஷ்டம் இவ்வளவே என்று முடிவு கட்டி, இனி எல்லாம் ஒன்று தான் என்று இருந்து விடுவதை வளர்ப்புப் பணியின் நடைமுறையில் அடிக்கடி காணலாம். தனது மார்க்குகள் பற்றி மாணவன் காட்டும் அலட்சியம் அவனது நண்பர்களிடம் கேலிப் பொருளாகி விடுகிறது. வான்யாவோ பேத்யாவோ இரண்டு மார்க்கைத் தவிர வேறு மார்க்கு எதுவும் வாங்க மாட்டார்கள் என்று எல்லாக் குழந்தைகளையும் அது நினைக்க வைக்கிறது. வளர்ந்து வருகின்ற நபரின் ஆன்மிக வாழ்வில் மிகவும் பயங்கரமான விஷயமாக இருக்கக் கூடியது இதுதான். குழந்தைப் பருவத்திலேயே சுயமரியாதை உணர்ச்சி மந்தப்பட்டு விடுகிற மனிதன் எதற்குத்தான் லாயக்காய் இருப்பான்?

அறிவில் தேர்ச்சி பெறுகிற நிகழ்ச்சிப் போக்கில் ஒவ்வொரு குழந்தையும் மனித கௌரவத்தையும் பெருமை உணர்ச்சியையும் கொண்டிருக்குமாறு செய்ய வேண்டும் என்பது வளர்ப்புப் பணியில் ஒரு முக்கியமான அம்சமாகும். மாணவனுக்கு முன்னே ஆசிரியர் உலகத்தைத் திறந்து காட்டுவது மட்டுமின்றி, தீவிரமான படைப்பாளியாகவும், நிர்மாணியாகவும், தனது வெற்றியில் பெருமை உணர்ச்சி கொள்பவனாகவும் சுற்றியுள்ள உலகத்தில் அவனை நிலைநாட்டுவதும் ஆசிரியரின் பணியாகும். கல்விப் பயிற்சி குழுவிற்குள் நடைபெறுகிறது. ஆனால், உலகை

அறிகின்ற பாதையில் குழந்தை எடுத்து வைக்கிற ஒவ்வொரு எட்டையும் அது சுயமாகவே செய்கிறது; மூளை உழைப்பு என்பது ஒரு ஆழமான சொந்த நிகழ்ச்சிபோக்காகும். இது திறமைகளை மட்டுமின்றி, குழந்தையின் பண்பையும் இன்னும் பல நிலைமைகளையும் பொறுத்ததாய் இருக்கிறது. இவை அடிக்கடி கண்ணுக்குத் தெரிவதில்லை.

திறந்த மனத்துடன் குழந்தைகள் பள்ளிக்கு வருகிறார்கள், நன்றாகப் படிக்க வேண்டும் என்கிற உண்மையான விருப்புடன் வருகிறார்கள். ஒரு சோம்பேறியாகவோ, துரதிருஷ்டசாலியாகவோ மற்றவர்கள் அவனைப் பார்க்க முடியும் என்கிற சிந்தனையே சிறுவனைப் பயமுறுத்துகிறது. அழகு மிக்க மனித விருப்பமான நன்றாகப் படிக்க வேண்டும் என்கிற விருப்பம், குழந்தை வாழ்வின் முழு அர்த்தத்தையும், குழந்தைகளின் மகிழ்ச்சி உலகத்தையும் ஒளிச் சிதறல் காட்டுகிற பிரகாசமான தீப்பொறி என்று கருத வேண்டும் என எனக்குத் தோன்றுகிறது. இந்தத் தீப்பொறி பலவீனமானது, பாதுகாப்பற்றது. ஆசிரியரான உங்களுக்கு எல்லையற்ற நம்பிக்கையுடன் இந்த விருப்பத்தைச் சுமந்து வருகிறது குழந்தை. குழந்தையின் விருப்பத்தை நீங்கள் காணவில்லை என்றால், உங்கள் மாணவர்களைக் கவலைக்குள்ளாக்கும் நிகழ்காலம் பற்றிய, எதிர்காலம் பற்றிய பொறுப்புணர்ச்சி உங்களை எட்டவேயில்லை என்று அதற்கு அர்த்தமாகும். மனதைப் புண்படுத்துகிற வார்த்தையாலோ, அலட்சியத்தாலோ எச்சரிக்கை இன்றிக் குழந்தை இதயத்தைத் தொடுவதால் இந்தத் தீப்பொறியை எளிதாக அணைத்து விட முடியும். கல்விப் பயிற்சியில் குழந்தை பெறுகிற வெற்றியும், தாம் முன்னேக்கி அடி எடுத்து வைக்கிறோம், உலகை அறிதல் எனும் செங்குத்தான பாதையில் ஏறுகிறோம் என்கிற சிந்தனையின் பெருமை உணர்வும், அனுபவமும்தான் அறிவுத் தாகம் எனும் பலவீனமான தீப்பொறிக்கு உயிர் தரும் காற்றாக விளங்குகின்றன.

வீணான, விளைவு தராத உழைப்பு எரிச்சலூட்டுகிற, மந்தப் படுத்துகிற, அர்த்தமற்ற ஒன்றாகப் பெரியவர்களுக்கு ஆகி விடுகிறது. ஆனால் நாம் குழந்தைகளுடன்

அல்லவா வேலே செய்கிறோம்? தனது உழைப்பில் குழந்தை வெற்றிகளைக் காணவில்லை என்றால், அறிவுத் தாகம் எனும் தீப்பொறி அணைந்து போகிறது. குழந்தை இதயத்தில் பனிக்கட்டி உண்டாகி விடுகிறது. தீப்பொறி மீண்டும் பற்றிக் கொள்கிற வரை (இரண்டாம் முறை இதனைப் பற்ற வைப்பது. அப்பாடா, எவ்வளவு கடினம்!) எத்தகைய முயற்சிகளை மேற்கொண்டாலும் இப்பனிக்கட்டியை உருக்கி விட முடியாது. தனது சக்தியில் நம்பிக்கை இழந்து விடுகிறது குழந்தை. உருவகமாகச் சொன்னால், எல்லாப் பொத்தான்களையும் இறுகப் போட்டுக் கொள்கிறது, எச்சரிக்கை கொண்டு விடுகிறது, உடல் சிலிர்த்துக் கொள்கிறது, ஆசிரியரின் ஆலோசனைகளுக்கும் கண்டிப்புகளுக்கும் துடுக்குத்தனமாய்ப் பதிலிறுக்கிறது. அல்லது இன்னும் மோசமாகிப் போய் சுயமரியாதை மந்தப்பட்டு விடுகிறது. தான் எந்தத் திறமையும் பெற்றிருக்கவில்லை என்ற சிந்தனைக்கு அவன் ஆட்படுகிறான். ஆசிரியர் தருகிற அறிவுரைகளுக்கு ஒரு மணி நேரம் வேண்டுமானாலும் அலட்சியமாகவும், அடக்கமாகவும், பொறுமையுடனும் செவிமடுக்கத் தயாராயிருக்கிற, ''நீ பின் தங்குகிறாய், பெயிலாகப் போகிறாய்...'' என்று நண்பர்கள் சொல்கிற வார்த்தைகளை முற்றிலும் அசட்டை செய்கிற குழந்தையைக் காணும் போது கோபமும் ஆத்திரமும் இதயத்தை ஆட்கொள்கின்றன... சுயமரியாதை உணர்ச்சியை நசுக்குவதை விட ஒழுக்கக் கேடானது வேறென்ன இருக்க முடியும்!

குழந்தைப் பருவத்திலும், இளமைக் காலத்திலும் ஒரு மாணவன் தன்னைத் தானே எப்படி அணுகுகிறான், உழைப்பின் உலகத்தின் தன்னை அவன் எப்படிப் பார்க்கிறான் என்பதையே பெருமளவுக்குப் பொறுத்திருக்கிறது அவனது ஒழுக்க உருவம். உள்ளத்துச் சோம்பேறித்தனம் குழந்தையின் இயற்கை அல்ல, அவன் சொந்தமாய்ச் செயலாற்ற வேண்டுமென்று விரும்புகிறான், தானாக எல்லாவற்றையும் செய்ய வேண்டும் என்று ஆவல் கொள்கிறான் என்று க. உஷீன்ஸ்கி எழுதினார். உழைப்பதற்கு, யோசிப்பதற்கு, கூர்ந்து பார்ப்பதற்கு, புரிந்து கொள்வதற்கு குழந்தை

களுக்கு கற்றுத் தர வேண்டும். மூளை உழைப்பு என்பது என்ன, நன்ருக உழைப்பது என்பதற்கு என்ன அர்த்தம் என்று அவனுக்கு சொல்லித் தர வேண்டும். பின்னர் தான் அவனது வெற்றிகளுக்கு மார்க்குப் போட வேண்டும். கல்விப் பயிற்சியில் உழைப்பின் மகிழ்ச்சியை ஒருபோதும் அறியாத, கஷ்டங்கள் சமாளிக்கப்பட்டு விட்டன என் பதில் பெருமை உணர்ச்சி கொள்ளாத குழந்தை மகிழ்ச்சி யற்றவன் ஆவான். மகிழ்ச்சியற்ற மனிதன் நமது சமு தாயத்துக்கு ஒரு பெரிய கேடு. மகிழ்ச்சியற்ற குழந்தை யோ இதை விட நூறு மடங்கு கேடு ஆகும். நான் குழந் தைப் பருவத்துக்கு மனமுருகவே மாட்டேன். உழைப்பை வெறுக்கிற, தனது சக்தியை முழுதாகப் பயன்படுத்தி உழைக்க வேண்டும் என்ற சிந்தனையையே வெறுக்கிற சோம்பேறியாக குழந்தைப் பருவத்திலேயே மனிதன் மாறி விடுகிருன் என்பது எனது அமைதியைக் கெடுத்து வந்தது. குழந்தை ஏன் சோம்பேறியாக மாறுகிருன்? அன்புமிக்க போதகர்களே, உழைப்பு தரும் மகிழ்ச்சி அவ னுக்குத் தெரியாது என்பதே இதற்குக் காரணம். இந்த மகிழ்ச்சியை அவனுக்குக் கொடுங்கள். இதனைப் போற்று மாறு அவனுக்குக் கற்றுக் கொடுங்கள். அவன் தனது மனத்தைப் போற்றுவான், உழைப்பை விரும்புவான்.

உழைப்பு தரும் மகிழ்ச்சியை, கல்விப் பயிற்சியில் பெறு கிற வெற்றி தரும் மகிழ்ச்சியைக் குழந்தைகளுக்குத் தாருங்கள், பெருமை உணர்ச்சியையும், சுய மரியாதை யையும் அவர்களது இதயத்தில் உசுப்பி விடுங்கள்—இது வே வளர்ப்புப் பணியின் முதல் நீதியாகும். மகிழ்ச்சியற்ற குழந்தைகள், தாம் எதற்கும் திறனற்றவர்கள் என்ற சிந் தனை வாட்டும் குழந்தைகள் நமது பள்ளிகளில் இருக்கக் கூடாது. கஷ்டங்களைச் சமாளிக்கிற ஆற்றலைத் தருகிற ஏன் ஆற்றல்களின் ஒரே ஊற்றுக்கண்ணுகவும் கல்விப் பயிற்சியில் விருப்பத்தைத் தருவதாகவும் விளங்குவது கல்வி கற்பதில் பெறுகிற வெற்றியே ஆகும்.

குழந்தைக்கு கற்றுக் கொள்ள வேண்டும் என்ற விருப் பம் மட்டும் இல்லை என்ருல் நமது திட்டங்களும், தேட்டங்

களும் கட்டுமானங்களும் மண்ணுகிப் போகும், உயிரற்ற சவமாக மாறும். இந்த விருப்பமோ கல்வியில் பெறுகிற வெற்றியுடன்தான் வருகிறது. புதிர் ஒன்று தோன்று கிறது: குழந்தை வெற்றி பெற வேண்டுமானுல், அவன் பின்தங்கக் கூடாது. இதில் புதிர் ஒன்றும் இல்லே. மூளே உழைப்பு எனும் நிகழ்ச்சிப் போக்கில் காணப்படும் இயக்க வியல் ஒற்றுமை இது. அறிவுத் தேர்ச்சியில் வெற்றியடை வதன் காரணமாகப் பிறக்கிற ஊக்கம் இருந்தால்தான் கல்வி கற்பதில் அக்கறை பிறக்கும்; ஊக்கம் இல்லேயேல் கல்விப் பயிற்சி வெறும் சுமையாக மாறி விடும். வெற்றி யடைகிருேம் என்ற நம்பிக்கையால் பன்மடங்காக உயர்த் தப்படுகிற ஊக்கம் என்று நான் சுறுசுறுப்பைஅழைப்பேன்.

மேம்போக்காகப் பார்க்கையில் எளிய காரியமாகத் தோன்றுகிற மாணவர்களின் அறிவை மதிப்பிடுவது—உண்மையில் ஒவ்வொரு மாணவனேயும் சரியாக அணுகு கின்ற திறமையை,அவனது மனத்தில் அறிவுத் தாகத்தைப் பராமரிக்கிற திறமையை ஆசிரியர் பெற்றிருப்பது ஆகும். ஆரம்ப வகுப்புகளில் நான்காண்டு காலம் கல்வி போதிக்கையில், எழுத்துப் பயிற்சிக்காகட்டும், வாய்வழிப் பதில்களுக்கு ஆகட்டும் நான் ஒருபோதும் திருப்தியற்ற மார்க்கு போட்டதே இல்லே. படிக்க, எழுத, பயிற்சிகளுக்கு விடைகாண குழந்தைகள் கற்றுக் கொள்கிருர்கள். தனது மூளே உழைப்பில் நல்ல சாதனேகளே ஒரு குழந்தை ஈட்டி இருக்கிறது, இன்னெரு குழந்தையோ இன்னும் ஈட்ட வில்லே. ஆசிரியர் எதைக் கற்றுத் தர விரும்புகிருரோ அதை ஒரு குழந்தை கற்றுக் கொள்கிறது, இன்னெரு குழந்தையால் இன்னும் இது முடியவில்லே. அவன் கற்றுக் கொள்ள விரும்பவில்லே என்று இதற்குப் பொருள் அல்ல. குழந்தைக்கு நல்ல பயிற்சிகளேத் தந்த பின்புதான் அதன் மூளே உழைப்பை நான் மதிப்பீடு செய்தேன். உழைப்பு நிகழ்ச்சிப்போக்கின் போது குழந்தை அடைய முயல்கிற வெற்றிகளே அதனுல் அடைய முடியவில்லே என்ருல் எத்த கைய மதிப்பெண்களும் அவனுக்கு நான் போடுவதில்லே. குழந்தை யோசிக்க வேண்டும், சிந்தனேகளே ஒன்று திரட்ட

வேண்டும், தனது வேலையை அது மீண்டும் செய்ய வேண்டும்.

முதல் வகுப்பில் பாடம் தொடங்கிய நான்கு மாதங்கள் கழிந்த பின்பே நான் முதல் மதிப்பெண்களைப் போட்டேன். சுறுசுறுப்பான, விடாமுயற்சியுள்ள உழைப்பு என்பது என்ன என்று குழந்தை புரிந்து கொள்ள வேண்டும். சிறுவன் வேலையைச் சரியாகச் செய்யாததற்குக் காரணம் அவன் அவ்வாறு விரும்பவில்லை என்பதல்ல. நல்லது என்பது என்ன, கெட்டது என்பது என்ன என்று அவன் புரிந்து கொள்ளாததே இதற்குக் காரணம். அப்படியானல் எதற்காக அவனுக்கு மதிப்பெண் போடுவது? ஒரே பயிற்சியைப் பலமுறை செய்கையில் முன்னர் செய்ததை விட கணிசமான அளவுக்குச் சிறப்பாக அதனைச் செய்ய முடியும் என்று அவன் தனது சொந்த அனுபவத்தில் மனவுறுதி கொள்ள வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். இது பெருத்த போதனு முக்கியத்துவம் வாய்ந்ததாகும்: மாணவன் தனது படைப்பாற்றலைத் திறந்து விடுகிறுன்; தனது வெற்றியைக் கண்டு மகிழ்ச்சி கொண்டு இன்னும் சிறப்பாக வேலை செய்யப் பாடுபடுகிறுன். சிறப்பாகச் செய்த வேலையை மோசமாகச் செய்த வேலையுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் குழந்தை உத்வேக உணர்ச்சி பெறுகிறுன்.

குழந்தைகள் முதல் வகுப்பில் செய்த வேலையைக் கவனித்த நான் குழந்தைகள் ஒரே மாதிரிச் சிந்திப்பதில்லை என்றும், தமது உழைப்பை வெவ்வேறு மாதிரி மதிப்பீடு செய்கின்றன என்றும் கண்டேன். இதோ குளவி என்ற வார்த்தையை அவர்கள் எழுதியுள்ளனர். லீதா, செர்யோஷா, காத்யா, சான்யா, பாவெல் ஆகியோரின் எழுத்துக்கள் அழகாகவும் சீராகவும் இருக்கின்றன. யூராவின் எழுத்துக்கள் கோட்டுக்கு வேளியே போகின்றன, கோணல் மாணலாக இருக்கின்றன; கோல்யாவும் தோல்யாவும் எழுதவில்லை, சித்திரம் வரைகிருர்கள். இயற்கையைப் பற்றி அவர்கள் வரைந்த முதல் வியாசங்களைக் கொண்ட சித்திர நோட்டில் இருந்த எழுத்துக்களை போலவே இந்த எழுத்துக்களும் இருக்கின்றன. பெத்ரிக்கின் நோட்டில் ஏதோ கொக்கி

கள்தான் காணப்பட்டன. நான் அடுத்த பயிற்சிக்குப் போகவில்லை. இதே வார்த்தையைக் குழந்தைகள் இன்னும் பலமுறை எழுதுகிறார்கள். மோசமாக எழுதியவர்களுக்கும் சரி, நன்றாக எழுதியவர்களுக்கும் சரி ஒவ்வொரு முறை திரும்ப எழுதுவதும் ஏறிச் செல்கிற புதிய படிக்கட்டாக இருந்தது. ஆரம்பத்தில் செய்ததை விட இப்போது நன்கு செய்திருக்கிறோம் என்பதில் குழந்தை மகிழ்ச்சியடை கிறது, சந்தோஷப்படுகிறது.

இந்த மகிழ்ச்சியில் பெருமை உணர்ச்சியும் சுயமரியாதை யும் பிறக்கிறது. இந்த உணர்ச்சியைப் பல முறை அனு பவிக்கிற குழந்தை எளிய வழியைத் தேடுவதில்லை, மற்ற வர் உழைப்பின் விளைவைப் பயன்படுத்துவதில்லை. செய்த வேலையைத் திரும்பச் செய்யக் கற்றுக் கொண்டு, இது பற்றி மகிழ்ச்சி உணர்ச்சி அனுபவித்து சுயமரியாதையை உணரத் தொடங்கிய பின்பே நான் அவர்களுக்கு மதிப் பெண்கள் — அதுவும் வெற்றிகளுக்கே தரத் தொடங்கி னேன். பள்ளிப் பாடங்கள் தொடங்கிய நான்கு மாதங்கள் கழித்துச் சில குழந்தைகளும், ஆறுமாதம் கழித்துச் சில குழந்தைகளும் மதிப்பெண்கள் பெறத் துவங்கினர். பெத்ரிக்கும் மீஷாவும் இரண்டாம் வகுப்புப் பாடம் தொடங்கிய பின்பே முதல் மதிப்பெண்கள் பெற்றனர். இவர்களுடன் அதிக நேரம் வேலை செய்தேன். நேற்றை விட இன்று கொஞ்சமாவது சிறப்பாக வேலை செய்ய வேண்டும் என்பதற்காகவும், தமது சக்தியில் நம்பிக்கை இழந்து விடாமல் இருக்க வேண்டும் என்பதற்காகவும் நான் பாடுபட்டேன்.

ஆசிரியரிடமிருந்து குழந்தைக்கு யாந்திரீகமாக அறி வைத் தருவதல்ல கல்விப் பயிற்சி என்பது. முதற்கண் இது மனித உறவுகளேயாகும். அறிவு, கல்விப் பயிற்சி ஆகியவற்றுடன் மாணவன் கொள்கிற உறவு ஆசிரியருடன் அவன் கொண்டுள்ள உறவையே பெருமளவுக்குப் பொறுத் திருக்கிறது. ஆசிரியரிடம் நியாயமின்மை இருப்பதாக அவன் உணர்ந்தால் அவன் அதிர்ச்சி அடைகிறான். இரண்டு மார்க்கினை நியாயமின்மையாகவே எப்போதும் மாணவன்

பார்க்கிறான். அதற்காக மிகவும் மனவேதனை கொள்கிறான். ஏனெனில் ஒருபோதும் குழந்தை கல்வி கற்க விரும்பாமல் இருப்பதில்லை. அவன் கற்றுக் கொள்ள விரும்புகிறான், ஆனால் அவனால் முடியவில்லை. கவனத்தை ஒருமுனைப் படுத்தவும் வேலை செய்வதற்குத் தன்னைத் தானே வற் புறுத்திக் கொள்ளவும் அவனால் முடியவில்லை.

ஒரு நாள் இரண்டு நாளாக பின்னர் வருடம் முழுதும் குழந்தை நியாயமின்மைக்காக வேதனைப் பட்டால் அவனது நரம்பு மண்டலம் முதலில் கிளர்ச்சியுறுகிறது. பின்னர் இழுத்துப் பிடிக்கப் படுகிறது. ஒடுங்கிப் போதல், பலவீனம், உதாசீனம் ஆகியவை தோன்றுகின்றன. திடீர்ப் பாய்ச்சல் கள்—கிளர்ச்சிகள், இழுத்துப் பிடித்தல்கள்—ஆகியவற் றால் குழந்தை நோய்வாய்ப்படுகிறான். மேம்போக்காகப் பார்க்கையில் விசித்திரமானதாய்த் தோன்றும் இந்த நோய் கள் பள்ளிக்கூட நரம்புத் தளர்ச்சி நோய் ஆகும். குழந்தை களுக்கும் ஆசிரியர்களுக்கும் இடையில் இருக்கிற பரஸ்பர உறவுகளை நிர்ணயிக்கிற மிக முக்கிய அம்சமாக மனிதத் தன்மை விளங்க வேண்டிய புனித ஸ்தலமான பள்ளிக் கூடத்தில் மட்டுமே இந்த நோய் தோன்றுகிறது என்பதே இது எழுப்பும் புதிராகும். நியாயமின்மையே குழந்தை யின் பள்ளிக்கூட நரம்புத்தளர்ச்சி ஆகும். பெற்றோர்களோ, ஆசிரியரோ குழந்தையை நியாயமின்றி அணுகுவது பல் வேறு வேறுபாடுகள் கொண்டதாகும். முதற்கண் இது அலட்சியம். இது குழந்தையின் சித்த, ஒழுக்கச் சக்திகள் உருவாவதில், மிகவும் அபாயகரமான, அவனது வெற்றி யில் ஆசிரியர் காட்டுகிற அலட்சியமே ஆகும். பின் னர் கூச்சலிடுவது, பயமுறுத்துவது, எரிச்சலுறுவது! போதனைக் கலாசாரத்தைப் பெற்றிருக்காத ஆசிரியர் களிடம் குரோதம் கூட முளைக்கிறது: உனது மதிப்பெண் பட்டியலைக் கொண்டு வா, உனக்கு இரண்டு மார்க்குப் போடுகிறேன். எவ்வளவு அருமையான மகனைப் பெற் றிருக்கிறோம் என்று உன் பெற்றோர்கள் சந்தோஷப் படட்டும்...

பள்ளிக்கூட நரம்புத் தளர்ச்சி நோயை நான் பல ஆண்டு

களாகப் பயின்று வந்தேன். ஆசிரியரின் நியாயமின்மை யால் தோன்றும் நோய்த் தன்மை கொண்ட பதில்விளைவு சில மாணவர்களை உணர்ச்சி வசப்பட வைக்கிறது. வேறு சிலருக்கு மனத்தாங்கலை ஏற்படுத்தும் பைத்தியக்காரத் தனமாகவும், தொந்தரவு செய்கிற தன்மையாகவும் தோன்றுகிறது. சிலருக்கு சினத்தை மூட்டுகிறது. கவலை யின்மையைத் தோற்றுவிக்கிறது, சிலருக்கு அக்கறையின் மையையும் அளவற்ற பணிவையும் தருகிறது. தண்டனை, ஆசிரியர், பள்ளிக்கூடம் ஆகியவை பற்றிய அச்சத்தை சிலருக்கு உருவாக்குகிறது. சிலரிடம் முகச் சுழிப்பையும் கொக்காணியையும் ஏற்படுத்துகிறது சில சமயங்களில் நோயாக வெளிப்படுகிற கடிய அறிகுறிகளை சிலரிடம் உண்டாக்குகிறது. (எப்போதாவதுதான் இப்படி நடக்கிற தென்ருலும் இதனை அலட்சியம் செய்து விடக் கூடாது). பள்ளிக்கூட நரம்புத் தளர்ச்சி நோய் பற்றி எச்சரிக்கை செய்வது பெற்ருேர்கள், ஆசிரியர் ஆகியோரின் போதனைக் கலாசாரத்தைப் பொறுத்திருக்கிறது. ஒவ்வோரு குழந் தையின் ஆன்மிக உலகையும் உணர்வதும், தன்னைப் பற்றி மற்றவர்கள் மறந்து விடவில்லை, தனது வேதனை, மனத் தாங்கல்கள், துன்பங்கள் ஆகியவற்றை மற்றவர்கள் பகிர்ந்து கொள்கிருர்கள் என்று குழந்தை உணரத் தக்க அளவுக்கு ஒவ்வொரு குழந்தையிடமும் கவனம் செலுத்தி அவனுக்காக ஆன்மிகச் சக்தியைச் செலவிடுவதும் போதனைக் கலாச்சாரத்தின் பிரதான அம்சமாகும்.

குழந்தையின் ஆழமான மனவுறுதியின் படி, அநியாய மாக ஆசிரியர் அவனுக்கு இரண்டு மார்க்குப் போடுவது டன், இந்த மார்க்குக்காகப் பெற்ருேர்களிடம் அவன் தண் டனை பெற வேண்டும் எனவும் அவர் விரும்புகிருர் என் பது ஆசிரியர் செய்யும் மிகப்பெரும் அநியாயமாக குழந் தைக்கு விளங்குகிறது. அவனது இரண்டு மார்க்கு பற்றி ஆசிரியர் கண்டிப்பாகப் பெற்ருேர்களுக்குத் தகவல் கொடுக்க விரும்புகிருர் என்று குழந்தை கண்டால்,ஆசிரிய ருக்கு எதிராகவும் பள்ளிக்கூடத்துக்கு எதிராகவும் மாண வன் விரோதம் கொண்டு விடுகிருன். அவனுக்கு மூளை

உழைப்பு வெறுக்கத் தக்க ஒன்ருக ஆகி விடுகிறது. மற்ற மனிதர்கள் பற்றியும், முதற்கண் பெற்ரேர்கள் குறித்தும் முரட்டுத்தன உணர்ச்சிகள் அவனிடம் பற்றிக் கொள் கின்றன.

அநியாயத்தால் உளநெகிழ்ச்சி மரத்துப் போவதை விட அதிகமாக குழந்தையின் மனத்தை அவலட்சணப் படுத்துகிற வேருென்றை நினைத்துப் பார்ப்பதும் கஷ்டம். தன்னைத் தானே அலட்சியமாக பார்க்கும் போது, நல்ல தையும் கெட்டதையும் நுண்ணுணர்வால் அறிவதைக் குழந்தை இழந்து விடுகிறது. தன்னைச் சுற்றியுள்ள மனிதர் களிடத்தில் இருக்கிற நல்ல அம்சம் எது, கெட்ட அம்சம் எது என்று அவனுல் தெரிந்து கொள்ள முடியாது. மற்ற மனிதர்களிடம் சந்தேகமும், நம்பிக்கையின்மையும் அவன் இதயத்தில் தோன்றுகிறது. இதுதான் கசப்புணர்ச்சிக்கு மூல காரணம் ஆகும்.

தைரியமூட்டுவது, தண்டனை வழங்குவது என்பன பற்றிய பேச்சுக்கள் இப்போது போதகர்களின் மத்தியில் அடிக்கடி எழுகின்றன.ஒருநாள் உயிர் வாழும் வண்ணத்துப் பூச்சி போலவும், கவர்ச்சியான தத்துவங்கள் போலவும் இவை பிறந்து இறந்து போகின்றன... போதனைப் பணியில் பிரதானமான பரிசும் மிகச் சக்தி வாய்ந்த (ஆனுல் எப்போதும் பயன் தருவதல்ல) தண்டனையும் மதிப் பெண்ணே ஆகும். இது மிகக் கூரிய கருவி. இதனைப் பயன் படுத்துவதற்கு நல்ல திறமையும், கலாச்சாரமும் தேவை.

இந்தக் கருவியை உபயோகிக்கத் தகுதி பெற்றிருக்க வேண்டுமானுல், முதலாவதாக குழந்தையை நேசிக்க வேண்டும். நமது நேசத்தைப் பற்றி அவனுக்குச் சொல்ல வேண்டியதில்லை. அவனைப் பேணுவதில் அதைக் காட்ட வேண்டும். ''ஆசிரியர் காரியத்தில் நேசம் காட்டினுல் நல்லாசிரியர் ஆவார். எல்லாப் புத்தகங்களையும் படித்து முடித்த, ஆனுல் காரியத்தையோ, மாணவனையோ நேசிக் காத ஆசிரியரை விட, தாயையும் தந்தையையும் போல மாணவனிடம் நேசம் மட்டும் கொள்கிற ஆசிரியர் சிறந்த

வர் ஆவார். அவர் முழுமையான ஆசிரியர்''[1] என்று எழுதினார் லேவ் தல்ஸ்தோய்.

மனத்தின் நுண்ணுணர்வு எனும் பண்பைக் கல்விப் பயிற்சியால் மட்டும் எட்டி விட முடியாது. போதகரின் மனித நுண்ணுணர்வுக்கு அடிப்படையாக விளங்குவது பொதுவான அறிவாற்றல், ஒழுக்கம், அழகுணர்ச்சி, உள நெகிழ்ச்சிக் கலாசாரம் ஆகியவற்றின் ஒற்றுமையே. இந்த ஒற்றுமை குழுவினது ஒழுக்க உறவில் காணப்படும் சமூக அனுபவம், கல்வியறிவு ஆகியவற்றால் எட்டப்படுகிறது. ஒவ்வொரு குழந்தையின் தலைவிதியும், தனது மனச்சாட்சி யின் கைகளில் இருக்கிறது என்றும், பள்ளிக்கூடம் பயிற்று விக்கிற மனிதனின் பகுத்தறிவும், ஆரோக்கியமும், ஆனந்தமும் தனது ஆன்மிகக் கலாசாரத்தையும் சித் தாந்தச் செழுமையையும் பொறுத்திருக்கின்றன என்றும் ஆசிரியர் அறியவும், உணரவும் வேண்டும்.

... இரண்டாம் வகுப்பில் இலக்கணப் பாடம் நடை பெறுகிறது. விதிகளைப் பயின்று, பயிற்சிகளைச் செய்த பின் குழந்தைகள் சுயமாக வேலை செய்கிறார்கள். இதன் நோக் கம் அறிவை ஆழப்படுத்துவதும், அதே போதில் கட்டுப் படுத்துவதும் ஆகும். இந்த வேலைக்கு மதிப்பெண் தரப் படுகிறது. நோட்டுக்களைப் பரிசோதித்த நான் மீஷாவும் பெத்ரிக்கும் பயிற்சியை மோசமாகச் செய்திருக்கிறார்கள் என்று கண்டேன். நான் அவர்களுக்கு இரண்டு மார்க்குப் போட்டிருந்தால், தமது சக்தியனைத்தையும் பயன்படுத்தி நன்றாகப் படிக்க விரும்புகிற அந்தக் குழந்தைகள், ''உங் கள் நண்பர்கள் முன்னேறி எட்டு எடுத்து வைத்திருக் கிறார்கள், நீங்கள் இருந்த இடத்திலேயே தங்கி விட்டீர் கள்'' என்று நான் வழங்கும் கடும் தீர்ப்பாகவே அதனை ஏற்றுக் கொள்வார்கள். தவறுகளைத் திருத்தி விட்டு, அழ காக எழுதுவதற்குச் சொல்லித் தந்த நான் அவர்களுக்கு மதிப்பெண் எதுவும் தரவில்லை. நோட்டுக்களைக் கொடுத்த படி குழந்தைகளிடம் சொல்கிறேன்:

---

[1] லே. நி. தல்ஸ்தோய். நூல் திரட்டு. தொகுதி 4, மாஸ்கோ, புனைவிலக்கிய அரசுப் பதிப்பகம், பக்கம் 26.

''மீஷாவும் பெத்ரிக்கும் இன்னும் மதிப்பெண்கள் சம்பாதிக்கவில்லை. குழந்தைகளே, நீங்கள் நன்ருக உழைக்க வேண்டும். வேருெரு பயிற்சியைச் சுயமாகச் செய்யுங்கள். மதிப்பெண் சம்பாதிக்க முயலுங்கள்.''

திருப்தியற்ற வேலைக்கு மதிப்பெண் கிடையாது என்பதற்குக் குழந்தைகள் ஏற்கெனவே பழகிக் கொண்டனர். செய்யப்பட்ட வேலை ஆசிரியரின் ''தீர்ப்பால்'' முடிவுற்று விடுகிற கடக்கப்பட்ட கட்டமாக இருக்கவில்லை என்கிற உறுதி அவர்கள் உணர்வில் மெல்லத் தோன்றுகிறது. குழந்தையின் முன் வெற்றிக்கான கதவு அடைக்கப்பட்டு விடவில்லை. இதுவரை அவனுல் செய்ய முடியாதிருந்த காரியத்தை எதிர்காலத்தில்,ஒருவேளை இன்றே கூடவோ,நாளையோ அவன் செய்து விடுவான். இரண்டு மார்க்கு வாங்குகிற குழந்தை தமது நண்பர்களை விட ஒரு எட்டு பின் தங்கி விட்டதாக, தண்டிக்கப்பட்டு விட்டதாக உணருவது போல மீஷாவும் பெத்ரிக்கும் உணர்ச்சி கொள்ளவில்லை. இந்தப் பாட நேரத்திலேயே குழந்தைகள் கேட்கிருர்கள்: ''ஆய்வு செய்கிற பயிற்சி கொடுங்கள்.'' நான் பயிற்சி தருகிறேன். பள்ளிக்கூட வேலை நேரத்திற்குள் அவர்கள் இதனைச் செய்து முடிக்கிருர்கள் (முதலாவதாகத் தான் செய்ய வேண்டிய பயிற்சி என்று மாணவன் நினைக்கிற வேலையைச் செய்வதற்கு ஏற்ற விதத்தில்,அரைமணி நேரம் இருக்கிற வகையில் பள்ளிக்கூட வேலை நேரம் முறைப்படுத்தப் பட்டிருக்கிறது).மற்றவர்களை விடத் தாம் ஒன்றும் மோசமானவர்கள் அல்ல என்று நிரூபிப்பதற்காகத் தம்மாலான அனைத்தையும் செய்கிருர்கள் மாணவர்கள். செய்த வேலையைப் பரிசோதிக்கிறேன் நான். இத்தகைய நேரங்களில் அனேகமாக எப்போதும் நல்ல மதிப்பெண் தரத் தக்க வேலையாகவே அது இருக்கும்.

மதிப்பெண் தருவதை உழைப்புக்கு உந்தித் தள்ளுகிற ஒரு தூண்டுதலாகக் கவனமாகக் கையாள வேண்டும். ஆக்க பூர்வமான அறிவாற்றல் முயற்சிகள், சிந்தனைகள், ஆராய்ச்சிகள் ஆகியவை பள்ளிப் பயிற்சிக்குத் தேவையாய் இருக்கிற போது இது குறிப்பாக முக்கியமாகும்.

ஒரு குழந்தையின் சிந்தனு நிகழ்ச்சிப்போக்கு வேகமாகவும் விரைவாகவும் நடைபெறுகிறது, வேருெரு குழந்தையிடம் இது மெதுவாக நடைபெறுகிறது. ஒரு குழந்தை மற்ற குழந்தையை விட அறிவாளியாக இருக்கிறது என்ருே, அதிகம் வேலே செய்கிறது என்ருே இதற்கு அர்த்தம் அல்ல. தொடக்கப் பள்ளியில் கணக்குப் பாடமும், கணக் குக்கு விடை காண்பதும் போதனுமுறையின் முதல் விதிக்கு உரைகல்லாகும். அறிவாற்றல் உழைப்பில் வெற்றி தரும் மகிழ்ச்சியைக் குழந்தைக்கு நல்குங்கள், பெருமை உணர்ச்சியையும், தகுதி உணர்ச்சியையும் அவனிடம் தூண்டி விடுங்கள். குழந்தைக்கு வருகிற முதற் கஷ்டங் கள் தடைச்சுவராக இருந்து விடாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். குழந்தைகள் சுயமாகச் சிந்தனே செய்யவும் கொடுக்கப்பட்ட பயிற்சியைப் புரிந்து கொள்ளவும், அதனே விடுவிக்க வழி காணவும் கற்றுக் கொள்கிற வரை, அதா வது இந்த உழைப்பில் வெற்றியின் மகிழ்ச்சியை குழந்தை அனுபவிக்காத வரை பயிற்சித் தீர்வுக்கு நான் மதிப்பெண் தரவில்லே. ஒரே மாதிரியான அணுகல் முறையை குறிப் பாக இங்கு அனுமதிக்க முடியாது: ஒரு குழந்தை கணக் கில் மாதத்தில் மூன்று முறை மதிப்பெண்கள் பெறலாம். மற்ருெரு குழந்தை ஒரு முறை கூடப் பெருமல் இருக்க லாம். இரண்டாவது குழந்தை ஒன்றுமே செய்யவில்லே, முன்னேறவே இல்லே என்றெல்லாம் இதற்குப் பொரு ளல்ல. பயிற்சியைப் புரிந்து கொள்ள அவன் கற்றுக் கொள்கிருன். மாணவன் தானுகத் தீர்வு கண்டு விடுகிற, ஒப்பளவில் சிக்கலான கணக்குப் பயிற்சி குழந்தையின் வளர்ச்சியில் ஒரு முக்கியமான படிக்கட்டு ஆகும்.

கணிதத்தில் தேர்ச்சி பெருத மாணவர்களேக் பல் லாண்டுகளாக நான் கூர்ந்து கவனித்து வந்தேன். பின் தங்கி விடுகிற மாணவர்கள் ஆரம்ப வகுப்புகளிலும் மத் திய வகுப்புகளிலும் எந்தவொரு பயிற்சியையும் ஒரு போதும் தானுகச் செய்வதில்லே, என்று உறுதி கொண் டேன். அவர்கள் அலேயில் மிதப்பது போல் இருக்கிருர் கள். தமது நண்பர்கள் ஏற்கெனவே கால் வைத்துவிட்ட

இடத்தில் காலூன்றுகிறார்கள்: விடை தயாராய் இருக்கிற பயிற்சியைக் கரும் பலகையிலிருந்தோ பக்கத்து மாணவனின் நோட்டிலிருந்தோ பார்த்து எழுதுகிறார்கள். சுயமாகப் பயிற்சியைச் செய்வது என்றால் என்னவென்று அவர்கள் கற்பனை செய்வது கூட இல்லை.

போதனா வல்லமையை செம்மைப் படுத்துகிற ஏதோ முறைகளைத் தேடுவதன் மூலம் இந்தக் கெடுதியைக் களைந்து விட முடியாது. கணக்குப் பாடத்தின் போது நடக்கிற மூளை உழைப்பு சிந்தனைக்கு உரைகல் ஆகும். கெடுதிக்குக் காரணம் யோசிப்பதற்குக் குழந்தை கற்றுக்கொள்ளவில்லை என்பதே; பொருள்கள், தோற்றங்கள், சார்புத் தன்மைகள், பரஸ்பரத் தொடர்புகள் ஆகியவற்றைக் கொண்ட சுற்றியுள்ள உலகம் சிந்தனையின் ஊற்றுக்கண்ணாக அவனுக்கு விளங்கவில்லை. இயற்கைக்குள் மேற்கொள்கிற ''பயணங்கள்'' இளம் குழந்தைப் பருவத்திலேயே மூளை உழைப்பின் மெய்யான பள்ளியாக ஆகி விடுமானால் கணிதத்தில் தேர்ச்சி பெறாத குழந்தை வகுப்பில் ஒன்று கூட இருக்காது என்று அனுபவம் எடுத்துக் காட்டுகிறது. பொருள்கள் குழந்தைக்குச் சிந்தனை செய்வதற்குக் கற்றுத் தர வேண்டும். சாதாரணமான குழந்தைகள் அனைவரும் அறிவாளிகளாகவும், கிரகித்துக் கொள்பவர்களாகவும், ஆர்வம் நிறைந்தவர்களாகவும், ஆவல் மிக்கவர்களாகவும் விளங்குவதற்கு இது விசேஷமான நிபந்தனை ஆகும். நான் ஆசிரியர்களுக்கு ஆலோசனை சொன்னேன்: எதையாவது குழந்தை புரிந்து கொள்ளவில்லை என்றால், கூட்டில் அடைபட்ட பறவை போல அவனது சிந்தனை அடித்துக் கொண்டால் உங்களது வேலையையே நீங்கள் கவனமாக ஆராயுங்கள்: நிரந்தரமான, உயிரோட்டமுள்ள, சிந்தனையின் மூல ஊற்றுக்கண்ணான பொருள்களின் உலகம், இயற்கைத் தோற்றங்கள் ஆகியவற்றிலிருந்து, அறுபட்டு வரண்டு போன சிறிய ஏரி போல உங்கள் குழந்தையின் உணர்வு ஆகி விடவில்லையா? இயற்கை, பொருள்கள், சுற்றியுள்ள உலகம் எனும் சமுத்திரத்துடன் இந்தச் சிறிய ஏரியை இணைத்து விடுங்கள். அப்போது உயிருள்ள சிந்தனை

யின் ஊற்றுக்கண் எப்படிப் பீறிடுகிறது என்று காண்பீர்கள்.

சுற்றியுள்ள உலகம் தானுகவே குழந்தைக்குச் சிந்திக்கக் கற்றுத் தந்து விடும் என்று எண்ணுவது தவறுகும். தத்துவார்த்தச் சிந்தனை இல்லையேல் முடியாத சுவராகவும், மறைவாகவும் பொருள்கள் குழந்தைக் கண்களுக்கு இருந்து விடும். தன்னைச் சுற்றியுள்ள பொருள்களிலிருந்து கவனத்தைத் திருப்பி சூட்சுமப் படுத்தும் போதுதான் மூளை உழைப்புப் பள்ளியாக இயற்கை விளங்கும். சுற்றியுள்ள உலகத்தின் மிக முக்கியமான அம்சமாக பரஸ்பரச் செயலைக் குழந்தை அறிந்து கொள்வதற்கு எதார்த்த உண்மையின் பிரகாசமான சித்திரங்கள் மிக அவசியமாகும். பரஸ்பரச் செயலே, இருக்கிற அனைத்துக்கும் causa finalis[1] ஆகும் என்கிற ஹெகலின் சிந்தனையைக் கோடிட்டுக் காட்டிய எங்கெல்ஸ் எழுதினுர்: "இந்தப் பரஸ்பரச் செயலை அறிந்து கொள்வதற்கு அப்பால் நாம் போய்விட முடியாது. ஏனெனில் இதற்குப் பின்னுல் அறிந்து கொள்வதற்கு எதுவுமில்லை"[2]. சூட்சுமச் சிந்தனைக்கு நேரடியான தயாரிப்பாய் விளங்குகிற பரஸ்பரச் செயலை அறிவது கணித பூர்வச் சிந்தனைக்கு முக்கியமான தேவையாகும். பொருள்கள் தோற்றங்கள் ஆகியவற்றின் பரஸ்பரச் செயலைக் காண்பதற்குக் குழந்தைகள் கற்றுக் கொண்டனரா என்பதையே பயிற்சிக்கு வெற்றிகரமாக விடை காண்பது பொறுத்திருக்கிறது.

சிந்தனைக்கு மிக அவசியமான பொதுமைப் படுத்தல் (பெருக்கல் வாய்ப்பாடு, எண்களின் நேர் வரிசை) குழந்தையின் நினைவில் நிரந்தரமாகவும், உறுதியாகவும் நிலை கொண்டிருந்தால் பயிற்சிகளுக்கு விடைகாண்கிற நிகழ்ச்சிப் போக்கில் சுயமாகச் செய்கிற மூளை உழைப்பு பயன் தருகிறது.

---

[1] —இறுதிக் காரணம்.—ஆசிரியர்.

[2] கா. மார்க்சும் பி. எங்கெல்சும். **நூல் திரட்டு.** தொகுதி 20, பக்கம் 546.

கொடுக்கப் பட்டுள்ள கணக்குப் பயிற்சியின் அர்த்தத்தை பெத்ரிக்கால் நீண்ட நேரம் புரிந்து கொள்ள முடியவில்லை. விளக்குவதற்கு நான் விரைந்து செல்லவில்லை. தனது சொந்தமான, கடுமையான அறிவாற்றல் முயற்சிகளால் பொருள்களுக்கும் தோற்றங்களுக்கும் இடையில் இருக்கிற பரஸ்பரச் சார்புத் தன்மைகளைப் புரிந்து கொள்ள வேண்டும் என்பதுதான் பிரதானமானதாகும். குழந்தை தத்துவார்த்தச் சிந்தனைக்குத் தயார் செய்யப்படவில்லை என்றால், ஒப்பிடுவதற்கும் பகுத்தாய்வு செய்வதற்கும் அவனால் முடியவில்லை என்றால் உயிருள்ள சிந்தனை பீறிட்டுக் கிளம்பாது. குழந்தைகளை நான் இயற்கையிடம் கூட்டிச் சென்றேன், கூர்ந்து கவனிப்பதற்கும், பொருள்கள், பண்புகள், தோற்றங்கள் ஆகியவற்றை ஒப்பிடுவதற்கும், பரஸ்பரச் செயலைப் பார்ப்பதற்கும் நான் மீண்டும் மீண்டும் கற்றுத் தந்தேன். பொருள்களின் ஒரு மிக முக்கியமான பண்பான, அளவு எண்கள் பற்றிய மனத்தோற்றத்தைக் குழந்தையின் உணர்வில் உண்டாக்குகிற, சுற்றியுள்ள உலகத்துத் தோற்றங்களின் மீது பெத்ரிக்கின் கவனத்தைத் திருப்பினேன். குழந்தை எண்களின் சார்புத் தன்மைகளைப் புரிந்து கொண்டு, யாரோ கற்பனை செய்தவை அல்ல இவை, உண்மையில் இருக்கிறவை என்று மனவுறுதி கொள்ள வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். மாணவன் உடனடியாக எண்ணிக் கணக்கிடத் தெரிந்து கொண்டு எண்களைக் கையாள வேண்டுமென்பதல்ல முக்கியமானது. சார்புத் தன்மைகளின் சாரத்தை அவன் புரிந்து கொள்ள வேண்டும் என்பதே முக்கியமானதாகும்.

இதோ நாங்கள் ஒரு குடிசையில் உட்கார்ந்து கொண்டு கம்பைன் கோதுமையை அறுவடை செய்வதைப் பார்த்துக் கொண்டிருக்கிறோம். அவ்வப்போது கம்பைனுக்கு அருகிலிருந்து தானியங்களைச் சுமந்து கொண்டு லாரி செல்கிறது. கம்பைனின் கொள்கலம் எவ்வளவு நேரத்தில் நிறைகிறது? சுவாரஸ்யமாகக் கடிகாரத்தைப் பார்க்கிறார்கள் குழந்தைகள். பதினேழு நிமிடங்களில் நிறைகிறது.

கம்பைன் நின்று விடாமலிருப்பதற்கு ஏற்ப மனிதர்கள் எப்படித் தமது வேலையைத் திட்டமிடுகிறார்கள்? கொள் கலம் நிறைவதற்கு இன்னும் 5,4,3 நிமிடங்கள் தான் இருக் கின்றன, குழந்தைகள் பதட்டப் படுகிறார்கள். கம்பைன் நின்று விடத்தான் போகிறது. இன்னும் இரண்டே நிமிடம் தான் இருக்கிறது. இதோ காட்டுக்குள்ளிருந்து லாரி வெளி வருகிறது. தானியக் கிடங்கிற்கு லாரி செல்வதற்குச் சரியாக ஒரு மணி நேரம் ஆகிறது. அப்படியானால் தூரத் துக்கும் நேரத்துக்கும் இடையில் இருக்கிற சார்புத் தன்மையைக் கணக்கிட்டிருக்கிறார்கள் என்று ஆகிறது. கம்பைன் நின்று போகாமல் வேலை செய்வதற்கு எவ்வளவு லாரிகள் வேண்டுமோ அவ்வளவு லாரிகளை வேலையில் ஈடுபடுத்தியுள்ளனர். தானியக் கிடங்கிற்கு லாரி ஒரு மணி நேரத்தில் செல்வதற்கு பதிலாக இரண்டு மணி நேரத் தில் செல்கிறது என்றால் தானியத்தை எடுத்துச் செல்ல லாரிகள் அதிகம் வேண்டுமா குறைவாக வேண்டுமா?

''அதிகம்தான், அதிலென்ன சந்தேகம்!'' என்கிறான் பெத்ரிக். அவன் கண்கள் ஒளி விடுகின்றன. ''இப்போது தொடர்ந்து மூன்று லாரிகள் சென்று வருகின்றன. ஒன்று தானியம் ஏற்றிக் கொண்டிருக்கிறது. மற்றொன்று கிடங் கில் தானியத்தை இறக்கிக் கொண்டிருக்கிறது. பாதை நீண்டதாக இருந்தால் அதிக லாரிகள் வேலையில் ஈடு பட்டிருக்க வேண்டும்.''

தனது அறிவாற்றல் முயற்சிகளைக் குழந்தை இறுக்கு கிறான். பாதையின் நீளம் இரண்டு மடங்கு அதிகமாக இருந் தால் எத்தனை லாரிகள் வேண்டும் என்று அவன் யோசிக் கிறான் என்று நான் காண்கிறேன். ஆனால் இதுவல்ல இப் போது முக்கியம். முக்கியமானது என்னவென்றால் வரட்சி யான மனிதர்கள் கற்பனை செய்ததல்ல இந்தக் கணக்கு என்பதுதான். இயக்கம், வாழ்க்கை, மனித உழைப்பு ஆகியவை இருப்பதால் சுற்றியுள்ள உலகத்தில் இந்தக் கணக்குகள் இருக்கின்றன.

பெத்ரிக் ஏற்கெனவே மூன்றாவது வகுப்புக்குச் சென்று விட்டான். ஆனால் கணக்கு மட்டும் இன்னும் அவனுக்கு

வரவே இல்லை. ஒரு கணக்கைக் கூட அவன் இன்னும் தனது நண்பர்கள் அல்லது ஆசிரியரின் உதவியின்றிச் செய்யவே இல்லை. இது எனக்குக் கவலையைத் தருகிறது. ஆயினும் சிறுவன் சிந்திக்கக் கற்றுக் கொள்வான் என்று நான் நம்பு கிறேன். கணக்குப் பயிற்சிகளுக்கு அடிப்படையாக விளங்கு கிற தோற்றங்களைச் சிந்தனை பூர்வமாக பகுத்தாய்வதன் மூலம் மட்டும் சூட்சுமப் படுத்துவதற்கு அவனை நான் தயார் படுத்தவில்லை. எண்ணிக் கணக்கிடத் தெரியாத சிந்தனையாளன் அறிவில் தேர்ச்சி பெற முடியாது. சிந் தனைக்கு மிகவும் அத்தியாவசியமான விஷயங்கள் பெத் ரிக்கின் நினைவில் படிப்படியாகப் பதிய வேண்டும் என்பது மிக முக்கியமானதாகும். ''கணக்குப் பெட்டிக்கு'' அரு கில் சிறுவன் உட்கார்ந்து கொண்டு தன்னைத் தானே பரி சோதித்துக் கொள்கிறன். 12-8, 19+13, 41-19 ஆகிய வற்றுக்கு விடை என்ன என்று சிறுவன் சிந்திக்காமல் இருக்க வேண்டும் என்று நான் கவனமாகப் பார்த்துக் கொண்டேன் (மூன்ருவது வகுப்பில் மாணவன் இவை பற்றி யெல்லாம் சிந்தித்துக் கொண்டிருந்தால் கொடுக்கப் பட்ட பயிற்சியை அவனுல் புரிந்து கொள்ள முடியாது).

எண்களின் நேர் வரிசை அமைப்பை மாணவன் புரிந்து கொள்ளவில்லை என்பதும், சாதாரண விஷயங்களைப் பற்றி இனிமேல் சிந்திக்க வேண்டாம் என்கிற அளவுக்கு இதனைப் புரிந்து கொள்ளாமல், தனது சக்தி அனைத்தையும் சூட்சுமச் சிந்தனைக்காகவே செலவிடுவதுமே அல்ஜீப்ரா கணிதத் தின் முன்னே அடிக்கடி அவனை மிகவும் பலவீனமாக்கி விடுகிறது என்று வாழ்க்கை எனக்கு உறுதிப்படுத்தி இருக் கிறது. வார்த்தைகளுக்கு அடிப்படையாய் விளங்குகிற அசைகளை ஆயிரக் கணக்கான தடவை மாணவன் படிக்க வில்லை என்ருல், படிப்பது என்பது பாதியளவுக்குத் தானி யங்கி நிகழ்ச்சிப்போக்காய் எப்படி ஆக முடியாதோ அதே போல, விடை நன்ருகத் தெரிவதால் மனிதர்கள் அன்ருட வாழ்க்கையில் ஒரு போதும் யோசித்துக் கொண்டிருக்காத நூற்றுக் கணக்கான உதாரணங்களை மாணவன் நினைவில் கொள்ளவில்லை என்ருல், சூட்சுமமான கணிதச் சிந்தனை

என்பது அவனுக்கு ஒரு புரியாப் புதிராகவே இருந்து விடும். மிக எளிய கணிதச் சிந்தனைக்கு ஏற்ப முடிந்த அளவுக்கு அதிகமாக கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல் ஆகியவற்றின் உதாரணங்களைப் பெற்று அவற்றில் பெத்ரிக் தேர்ச்சியடைய வேண்டும் என்று நான் பாடுபட்டேன்.

நாங்கள் இயற்கையிடம் போகிறோம். உழைக்கிற நிகழ்ச்சிப் போக்கில் மனிதர்கள் தீர்க்கிற எத்தனையோ பிரச்சினைகளைச் சிறுவனுக்கு நான் சுட்டிக்காட்டுகிறேன். கண்டிப்பாக வந்தே தீரும் என்று நான் காத்திருந்த அந்த நாள் இதோ வந்து விட்டது: முற்றிலும் தானாகவே பெத்ரிக் கணக்குப் பயிற்சியைச் செய்தான். சிறுவனின் கண்கள் சுடர் விட்டன. பயிற்சியில் என்ன சொல்லப் படுகிறது என்பது பற்றி அவன் விளக்கத் தொடங்கினான். அவனது விளக்கத்தில் தடுமாற்றம் இருந்தது. ஆனால், இருட்டால் மூடப்பட்டிருந்த ஒன்று குழந்தையின் கண் முன்னே திறந்து கொண்டது என்று நான் கண்டேன். பெத்ரிக் மகிழ்ச்சி அடைந்தான். இறுதியாக பளு குறைந்து விட்டது என்பதில் நானும் பெருமூச்சு விட்டேன். பாடங்கள் முடிகிற வரை மாணவன் காத்திருக்கவில்லை. தனது மகிழ்ச்சியைத் தாயாருடன் பகிர்ந்து கொள்வதற்காக அவன் வீட்டுக்கு ஓடினான். தாயார் வீட்டில் இல்லை. ''நானே கணக்குக்கு விடை கண்டேன்'' என்று சந்தோஷமாய்த் தாத்தாவிடம் சொன்னான். தனது வெற்றியில் பெத்ரிக் பெருமை கொண்டான். சுத்தமான ஒழுக்க பூர்வப் பெருமையே மனித கௌரவத்துக்கு ஊற்றுக்கண் ஆகும். தனது உழைப்புக்காகப் பெருமைப்படாமல் உண்மையான மனிதன் இருக்க முடியாது.

எங்கள் போதனைக் குழுவின் சிந்தனைக்கான விஷயமாக இந்தச் சம்பவம் விளங்கியது. கல்வி கற்றலில் கஷ்டப்படுகிற குழந்தைகளை நாங்கள் வேறு மாதிரிப் பார்த்தோம். ''குழந்தையால் எதுவும் முடிவதில்லை, அவன் தலைவிதி அப்படி'' என்று இறுதியான, உறுதியான முடிவுக்கு வருவதற்கு ஒருபோதும் அவசரம் காட்டக் கூடாது. ஒன்று, இரண்டு, மூன்று வருடங்களுக்கு அவனுக்கு ஏதாவது முடி

யாமல் இருக்கலாம். ஆனால் முடிகிற காலம் கண்டிப்பாக வந்தே தீரும். வாழ்க்கை ரசத்தைத் துளிதுளியாகச் சேர்க்கிற பூச் செடியைப் போன்றது சிந்தனை. பூச் செடியின் வேர்களிலே இந்த ரசத்தை ஊற்றுவோம், செடிக்கு முன்னே சூரியனைத் திறந்து காட்டுவோம், அப்போது செடியில் பூ மலரும். சிந்திப்பதற்குக் குழந்தைக்குக் கற்றுத் தருவோம். சிந்தனையின் மூல ஊற்றுக்கண்ணை—சுற்றியுள்ள உலகத்தை அதற்குத் திறந்து விடுவோம். உலகை அறிகிற மகிழ்ச்சியை — மகத்தான மனித மகிழ்ச்சியை அதற்குத் தருவோம்.

பொருள்களின், வஸ்துக்களின் திட்டவட்டமான எண்ணிக்கையிலிருந்து, தோற்றங்களுக்கு இடையில் தெளிவாக, காட்சி பூர்வமாகத் தெரிகிற சார்புத் தன்மையிலிருந்து சூட்சுமப் பொதுமைப் படுத்தலான விதிகளுக்கும் சூத்திரங்களுக்கும் மாணவனை எப்படி அழைத்துச் செல்வது என்பது பற்றி விசேஷமாகச் சிந்திப்பதற்கென்று ஆரம்ப வகுப்பாசிரியர்களான நாங்கள் ஒருபோதும் மாலை நேரங்களில் கூடியதில்லை. எல்லாக் குழந்தைகளிடமும் சீராகவும், நோகாமலும் இந்த மாற்றம் ஏற்படுவதில்லை என்பதற்குச் சான்றாக விளங்கும் சுவாரஸ்யமான உண்மைகள் பற்றி நாங்கள் எடுத்துச் சொன்னோம். லாவகமாக எண்ணுகிற, வேகமாகக் கணக்கிடும் திறன் பெற்றுள்ள, நன்றாக கணக்குப் போடுகிற, ஆனால் பயிற்சியின் உள்ளடக்கத்தைக் கஷ்டப்பட்டுப் புரிந்து கொள்கிற மாணவர்கள் இருக்கின்றனர். தெளிவான, திட்டவட்டமான, காட்சி பூர்வக்கருத்தினங்களால் சிந்திக்கிற குழந்தைகளுக்குத் திட்டவட்டமான எண்களிலிருந்து சூட்சுமப் படுத்தப்பட்ட கணக்குப் பயிற்சிகள் குறிப்பிட்ட கஷ்டத்தைக் கொடுக்கின்றன. உதாரணமாக, கணக்குப் பயிற்சியை ஒரு முறை படித்தவுடனேயே சில குழந்தைகள் விடை காண முயல்கின்றனர். எதற்காகக் கணக்கிட வேண்டும் என்று தெரியாமலே அவர்கள் கணக்கிடத் தொடங்கி விடுகின்றனர்.

எங்கள் ஒவ்வொருவருக்கும் இத்தகைய குழந்தைகள் எதிர்ப்பட்டனர். திட்டவட்டமான சிந்தனையிலிருந்து சூட்

சுமச் சிந்தனைக்கு அவர்களை எப்படி இட்டுச் செல்வது என்று நாங்கள் ஆலோசனை செய்தோம். கணக்கு பற்றிய விவாதத்தில், எண்கள் இன்றியும், கணக்கு முறைச் செயல்கள் இன்றியும் பயிற்சிக்கு விடை காண்பது என்கிற பயிற்சியின் பல கட்டங்கள் அவசியம் என்னும் முடிவுக்கு நாங்கள் வந்தோம். பயிற்சியைப் பற்றிக் குழந்தைகள் எப்படி விவாதிக்கிறார்கள், கணக்கீடுகள் இன்றி எப்படித் தீர்வு காண்கிறார்கள் என்பதைக் காட்டுவது எனும் விசேஷ நோக்கத்துடன் நாங்கள் பகிரங்கக் கணக்குப் பாடங்கள் நடத்தத் தொடங்கினோம். ஒருவர் வகுப்புக்கு மற்றவர் மாறி மாறி விஜயம் செய்து சில குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்கான வழியைத் தேடினோம்.

மதிப்பெண் குழந்தையின் சிந்தனைக்கு விலங்காக மாறி விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். எனக்கே நம்பிக்கை தராத மந்தச் சிந்தனை கொண்ட மாணவனுக்கு, தனக்கு எட்டாதது எது என்று சிந்திப்பதற்காக நான் எப்போதும் வாய்ப்புக்களை நல்கினேன். கல்வி கற்பதில் குழந்தைகள் ஒருபோதும் அக்கறை இழந்து விடுவதில்லை. சுய கௌரவத்தின் பெருமை, நேர்மை ஆகிய உணர்ச்சிகளைக் குழந்தைகளிடம் தட்டியெழுப்பியபடி, அவர்கள் தானாக வேலை செய்ய முயல வேண்டும் என்பதற்காகப் பாடுபட்டேன்.

**குழந்தையைச் சிந்திக்க விடுவது...** மேம் போக்காகப் பார்க்கிற போது தோன்றுகிறபடி இது ஒன்றும் எளிய வேலை அல்ல. 1-4 வகுப்பு மாணவர்களின் மூளை உழைப்பைக் கூர்ந்து பாருங்கள். சிந்திப்பதற்கு, சிந்தனையை ஒருமுனைப் படுத்துவதற்கு (சில சமயங்களில் கேள்வி திடுதிப்பென்று கேட்கப்படுவதால் அவன் திகைப்படைந்து விடுகிறான்) குழந்தைக்கு அவகாசம் போதவில்லை என்பதாலேயே மிகப் பெரும்பான்மையான சமயங்களில் (அனேகமாக எப்போதுமே) உங்கள் கேள்விக்குக் குழந்தை விடையளிப்பதில்லை. குழந்தை சிந்திப்பதற்கு எப்படி வாய்ப்பளிப்பது என்பது பற்றி ஆலோசிப்பதற்காகவே ஆரம்ப வகுப்பு ஆசிரியர்களாகிய நாங்கள் விசேஷமாகக் கூடினோம். குழந்

தைக்குத் தெரிகிறதா இல்லையா என்பது பற்றி ஒருபோதும் அவசரப் பட்டு முடிவு செய்து விடக் கூடாது என்னும் தீர்மானத்துக்கு நாங்கள் வந்தோம். ''உட்கார், உனக்குத் தெரியாது!'' என்று குழந்தையிடம் ஆசிரியர் சொல்வதை அடிக்கடி காணலாம். குழந்தை உட்கார்ந்து விடுகிறான். அதே விநாடி அவன் தலையில் எல்லாம் ''தெளிவாகிறது''. அவனுக்கு எல்லாம் தெரிகிறது என்று புலனாகிறது... ஆசிரியர் மீது பெரும் மனத்தாங்கல் கொண்டு விடுகிறான் அவன். ஏன் இப்படி நடக்கிறது? இந்தக் கேள்விக்கு உடனடியாக எங்களால் விடை காண முடியவில்லை. கவனிக்க வேண்டும், கவனிக்க வேண்டும் இன்னுமொரு முறை கவனிக்க வேண்டும், பலப்பல உண்மைகளைக் கற்றறிய வேண்டும்.

சித்தத்தையும் சிந்தனையையும் இறுக்கிப் பிடித்துக் குறிக்கோளை எட்டி விடுகிற குழந்தை, கேள்விக்கு விடையைக் குசுகுசுவென்று சொல்லிக் கொடுப்பதையும், துண்டுச் சீட்டைப் பார்த்து எழுதுவதையும், காப்பியடிப்பதையும் கண்டு அருவருப்புக் கொள்கிறான். எனக்கும் குழந்தைகளுக்கும் இடையில் நம்பிக்கையும் நல்விருப்பமும் கொண்ட உறவு எப்போதும் இருந்து வந்தது. என்னதான் முயன்ற போதும் ஏதோவொரு பயிற்சிக்குத் தன்னால் விடை காண முடியவில்லை என்பதை மாணவன் என்னிடம் சொல்ல ஒருபோதும் அஞ்சியதில்லை. தமது சந்தேகங்கள், மகிழ்ச்சிகள், வருத்தங்கள் ஆகிய அனைத்தையும் குழந்தைகள் ஆசிரியரிடம் கொண்டு வருவார்கள். குழந்தைக்கு வேதனை தருபவனாக நான் ஒருபோதும் இருந்ததில்லை. இரண்டு மார்க்குதான் அவனுக்குப் பெருத்த வேதனை தருகிற விஷயமாயிற்றே. ''உனக்கு இரண்டு மார்க்குதான்'' என்று அனேகமாக ஒவ்வொரு நாளும் ஆசிரியர் சொல்வதால் குழந்தையுள்ளம் எப்படித் திரிந்து போகிறது. தான் ஒரு துரதிருஷ்டசாலி என்று உணருவதற்குக் குழந்தைக்கு எவ்வளவு சிறிய வேதனையும் போதுமானது. தனது வேதனைக்குப் பழகிக் கொள்கிற சிறு மனிதன் சுற்றியுள்ள உலகம் முழுதையுமே அலட்சிய

மாகப் பார்க்கிறுன் என்பதும், அவனது இதயமே வரண்டு போகிறது என்பதுமே இந்தக் கெடுதியை இன்னும் ஆழமாக்குகின்றன. உலர்ந்த இதயம் கொடுமை வளரச் சிறந்த விளைநிலமாகும். மகிழ்ச்சியற்ற குழந்தைகள் வகுப்பில் இருந்து, அவர்களது வேதனையைத் தோழர்கள் இலகுவாக்கவில்லை என்ருல் நல்லதான, நட்பு மிகுந்த, நல் விருப்பமுள்ள ஒரு குழு ஒருபோதும் உருவாகாது.

ஆனுல், மதிப்பெண்களால் மாணவர்களுக்குச் செல்லம் கொடுத்து விடவும் கூடாது. துரதிருஷ்டவசமாக பள்ளிகளில் இவ்வாறு அடிக்கடி நடக்கிறது. குழந்தை ஒரு வார்த்தை சொல்ல வேண்டியதுதான் அதற்கு ஐந்து மார்க்குப் போட்டு விடுகிருர்கள். பல மாணவர்களுக்கு ஒரே கேள்வி தரப்பட்டு, அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஐந்து மார்க்கு போடப்பட்டு விடுவதும் அடிக்கடி நடைபெறுகிறது. இதன் விளைவாக குழந்தைகள் கல்வி கற்றலை பொறுப்பற்ற முறையில் அணுகத் தொடங்குகிருர்கள். தனது அறிவாற்றல் முயற்சிகளுக்குத் தரப்பட்டதாக மதிப்பெண்ணைக் குழந்தை புரிந்து கொள்ள வேண்டும்.

பெருத்த முயற்சிகளையும், சித்தத்தின் ஒருமுனைப்பாட்டையும், பலப்பல திருப்திகளைத் தனக்கு வேண்டாம் என்று ஒதுக்கி விடுகின்ற திறமையையும் கோருகின்ற உழைப்புதான் அறிவாற்றல் நடவடிக்கை ஆகும் என்று மாணவன் உறுதி கொள்ள வேண்டும். விடாமுயற்சியும், சித்தத்தின் வலிமையும் உழைப்புச் சூழலில்தான் உருவாகின்றன. எட்டியுள்ள சாதனைகளை விமர்சன பூர்வமாக அணுகக் கற்றுக் கொண்டுள்ள, தனது வேலையில் திருப்தியின்மையை அனுபவித்து அதனை மேலும் செம்மையாகச் செய்ய விழைகிற குழந்தை ஒருபோதும் சோம்பேறியாய் ஆகி விடாது.

மூளை உழைப்பில் எப்படி வெற்றி கிட்டுகிறது என்பதைத் தனது சொந்த அனுபவத்தில் அறிகிற குழந்தைகள் சுயகட்டுப்பாட்டைக் கற்றுக் கொள்கின்றன. கடுமையாக உழைக்கிற, சிறந்த பயனீட்ட வேண்டும் என்னும் முயற்சி ஆகியவற்றைக் கொண்ட குழந்தையின் பழக்கம், அசட்டையாய்ச் செய்யப்பட்ட வேலை, சோம்பேறித்

தனம், கவனமின்மை ஆகியவற்றை சகித்துக் கொள்ளாத் தன்மையைப் பயிற்றுவிக்கிறது.

உழைப்பில் மகிழ்ச்சியும், கல்வியில் வெற்றியும் கல்விப் பயிற்சிக்குத் தூண்டுகிற உந்து சக்தியாக குழந்தைகளிடம் இருக்கும் போது வகுப்பில் சோம்பேறிகள் இருக்க மாட்டார்கள். சில சோம்பேறிகளுடன் போராடுவதற்கு உண்மையான போதனை வல்லுனர்கள் முயல மாட்டார்கள். அறிவு உறங்குவதன் விளைவாகத் தோன்றுகிற சோம்பேறித் தனத்துடன் தான் அவர்கள் போராடுவார்கள்.

மூளை உழைப்பின் நற்பயன்களுக்கு மட்டும் தரப்படுகிற மதிப்பெண்ணை அடிப்படையாகக் கொண்ட போதனு முறை ஆரம்ப, மத்திய, முதிய வகுப்பு ஆசிரியர்களின் வேலையில் மெல்ல மெல்ல அமுலுக்கு வந்தது. காலாண்டுக்குப் பின்போ, கல்வியாண்டு கழிந்த பின்போ ஏதாவது ஒரு பாடத்தில் மாணவன் மதிப்பெண்ணே பெறவில்லை என்ருல் என்னவாகும் என்கிற கேள்வி வாசகர் உள்ளத்தில் எழலாம். மதிப்பெண்ணே இல்லாமல் இருப்பது இரண்டு மார்க்குப் பெறுவதை விட மோசமானது என்பதுதான் விஷயம். ''நான் இன்னும் மதிப்பெண் பெறவில்லை என்ருல், போதுமான அளவுக்கு நான் உழைக்கவில்லை என்று அதற்கு அர்த்தம்'' என்கிற சிந்தனை மாணவனின் உணர்வில் நிலை கொள்ளுகிறது. எனவே, கல்வியாண்டின் இறுதியில் மதிப்பெண் பெருமல் மாணவன் இருந்தான் என்கிற சந்தர்ப்பம் அனேகமாக ஒருமுறை கூட ஏற்படவில்லை. நான்காண்டு காலத்தில், காலாண்டு இறுதியில் ஆறு முறை நான் குழந்தைகளுக்கு மதிப்பெண் வழங்கவில்லை. மகன் அல்லது மகளின் நாட்குறிப்புப் புத்தகத்தில் மதிப்பெண் இல்லையென்ருல், என்னமோ கோளாறு இருக்கிறது என்று பெற்ரேர்களுக்குத் தெரியும். மதிப்பெண் இல்லாமல் இருப்பது குழந்தையின் குற்றமல்ல, அதனுடைய துரதிருஷ்டமே என்றும் அவர்களுக்குத் தெரியும். துரதிருஷ்டத்தின் போது அவனுக்கு உதவி செய்ய வேண்டும். நாங்கள் கூட்டாக மாணவனுக்கு உதவினேம். மிக உயர்ந்த மதிப்பெண்களே பெற வேண்டும் என்று குழந்தையிடம்

கோரக் கூடாது என்றும், அவனது சோம்பேறித் தனம், கவனமின்மை, போதிய முயற்சியின்மை ஆகியவற்றைக் காட்டுவதே இரண்டு மார்க்கு என்று நினைக்கக் கூடாது என்றும் பெற்றோர்களை வற்புறுத்தினேன்.

கூர்மையான போதனை ஆயுதமான மதிப்பெண்ணை சில ஆசிரியர்கள் யோசனையின்றிக் கையாள்கிறார்கள். ஏதோ கண்டிக்கத் தக்க ஒன்று போல மூன்று மார்க்கைப் பல பள்ளிகளில் பார்க்கிறார்கள். ''மூன்று மார்க்கு வாங் காமல் கல்வி கற்போம்!'' என்கிற அறைகூவல்கள் பயனீர்க் கூட்டங்களில் மட்டும் கேட்கப்படுவதில்லை. குழந்தைப் பத்திரிகைகளிலும் இவற்றைப் படிக்கலாம். கல்விப் பயிற்சியில் ஈட்டப் படுகிற திருப்திகரமான வெற்றிகளுக்கு இவ்வாறு ஊக்கம் தருகிற ஆசிரியர், தான் உட்கார்ந் திருக்கிற கிளையையே வெட்டுகிறார், ஆழமின்மையையும் பொறுப்பின்மையையும் குழந்தைகளிடம் வளர்க்கிறார்.

இரண்டாம் வகுப்பில், கல்வியாண்டு துவங்கிய பின் சில வாரங்கள் கழித்து, பாட நேரத்தில் பெறுகிற மதிப் பெண்களைக் குறித்து வைக்கிற நாட்குறிப்புப் புத்தகம் வைத்துக் கொண்டனர் குழந்தைகள். தாம் பெற்ற மதிப் பெண்களைப் பெற்றோரிடமிருந்து மறைக்க முயன்ற ஒரு சந்தர்ப்பம் கூட இருக்கவில்லை. வெற்றியின் மகிழ்ச்சியை மதிப்பெண் பிரதிபலிக்குமானால் இப்படியின்றி வேறுமா திரி இருக்காது. நாட்குறிப்பில் ஆசிரியரின் கையெழுத்து எதுவும் வேண்டாம். ஆசிரியருக்கும் மாணவருக்கும் இடை யில் நிலவுகிற பரஸ்பர நம்பிக்கையின்மை, சந்தேகங்கள் ஆகியவற்றைக் கொண்ட சூழலுடன் நடந்த பழைய காலப் பள்ளிக்கூடத்தின் மிச்ச சொச்சமாகும் இது. வகுப்பில் பரஸ்பர நம்பிக்கை இல்லை என்றால், ஆசிரியரை ஏமாற்று வதற்கு மாணவன் முயன்றால், குழந்தையை பெரியவர்கள் விரட்டுகிற ஒரு சவுக்காக மதிப்பெண் மாறிவிடுமானால் சரியான போதனையின் அடித்தளமே சரிந்து விழுந்து விடும்.

அநியாயமாகப் போடப்படுகிற இரண்டு மார்க்கிலிருந் துதான் பள்ளியின் மிகப் பெரும் கேடுகளில் ஒன்றான குழந்

தையின் நேர்மையின்மை, ஆசிரியரையும் பெற்றோர்களை யும் ஏமாற்றுவது ஆகியவை தோன்றுகின்றன. பள்ளியில் அடைந்த தோல்விகளை தாய் தந்தையிடமிருந்தும், சோம் பேறித்தனத்தை ஆசிரியரிடமிருந்தும் மறைப்பதற்குக் குழந்தைகள் என்னதான் தந்திரங்கள் செய்யவில்லை. மாண வன் மீது எந்த அளவுக்கு நம்பிக்கை இல்லையோ, அந்த அளவுக்கு ஏமாற்றுத் தனத்தில் புதிய கண்டுபிடிப்புக்கள் செய்கிறது குழந்தை, அந்த அளவுக்கு சோம்பேறித்தன மும் கவனமின்மையும் வளருவதற்கு விளைமண் செம்மை யாகிறது. நம்பிக்கையின்மையின் குழந்தைதான் சோம் பேறித்தனம். நான் யாருக்குக் கல்வி கற்றுத் தருகிறேனோ அவன் முதற்கண் ஒரு உயிருள்ள மனிதன், குழந்தை, பின்னரே அவன் மாணவன். நான் அவனுக்கு வழங்குகிற மதிப்பெண் அவனது அறிவை அளவிடுகிற கருவி மட்டும் அல்ல, முதற்கண் ஒரு மனிதனைப் போல் அவனை அணுகி அவனுடன் நான் கொண்டுள்ள உறவே ஆகும் இது.

ஆர்வம், ஆவல், அறிவுத் தாகம் ஆகியவற்றின் குழந்தை நெருப்பைப் பாதுகாத்து நில்லுங்கள் என்று நான் ஆசிரியர்கள் அனைவருக்கும் ஆலோசனை சொல்வேன். உழைப்பில் பெறுகிற வெற்றி, உழைப்பாளனின் பெருமை உணர்ச்சி ஆகியவற்றை மட்டுமே இந்த நெருப்பு உண வாகக் கொள்ளும். ஒவ்வொரு வெற்றிக்கும் ஒவ்வொரு முறை கஷ்டத்தைக் கடக்கும் போதும் மதிப்பெண் களால் பரிசளியுங்கள். இந்த மதிப்பெண்ணைத் தீமைக்கு உபயோகிக்காதீர்கள். குழந்தையுள்ளம் அறிவுடனும், ஆசிரியரான உங்களுடனும் அவன் கொண்டுள்ள உறவி லும் தான் உங்களது போதனை வல்லமை எனும் மாளிகை கட்டப்படுகிற மண் இருக்கிறது என்பதை மறந்து விடா தீர்கள். கற்க வேண்டும் என்ற விருப்பம், உற்சாகம், கஷ்டங்களைக் கடப்பதற்குத் தயாராயிருப்பது ஆகிய வையே இந்த விளை மண்ணாகும். இந்த மண்ணைக் கவன மாகப் பேணுங்கள். இது இல்லையேல் பள்ளியே இல்லை.

## கற்பனைக் கதையின் அறை

கட்டுக்கதை, விளையாட்டு, கற்பனை முதலியன குழந்தைச் சிந்தனை, நல்லுணர்ச்சிகள், முயற்சிகள் ஆகியவற்றின் உயிருள்ள ஊற்றுக்கண்ணாக விளங்குகின்றன. கற்பனைச் சித்திரங்கள் ஏற்படுத்துகிற மனப்பதிவின் விளைவாகக் குழந்தையின் உள்ளத்தில் தோன்றுகிற அழகியல், ஒழுக்கம், அறிவாற்றல் ஆகியன சம்பந்தமான உணர்ச்சிகள் சிந்தனைப் பாய்ச்சலைத் தீவிரப்படுத்துகின்றன என்று பல்லாண்டு அனுபவம் எடுத்துக் காட்டுகிறது. இந்தச் சிந்தனை மூளையைத் தீவிர நடவடிக்கைக்குத் தூண்டி, உயிருள்ள சிந்தனைத் திட்டுக்களை இரத்த நாளங்களால் இணைக்கிறது. கற்பனைச் சித்திரங்களின் மூலமாக வார்த்தை, அதன் மிக நுண்ணிய வேறுபாடுகளுடன் குழந்தையின் உணர்வில் நுழைகின்றது; குழந்தையின் ஆன்மிக வாழ்வாக அது மாறுகிறது; சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் வெளியிடுகிற சாதனமாக-சிந்தனையின் உயிருள்ள எதார்த்தமாக அது மாறுகிறது. கற்பனைச் சித்திரங்களால் தூண்டிவிடப்படுகிற உணர்ச்சிகளது செல்வாக்கின் கீழ், வார்த்தைகளால் சிந்திக்கக் கற்றுக் கொள்கிறது குழந்தை. உயிருள்ள, பிரகாசமான, குழந்தையின் மனத்தையும் உணர்ச்சிகளையும் ஆட்கொள்கிற கற்பனைக்கதை இன்றி, மனித சிந்தனை, பேச்சு ஆகியவற்றின் ஒரு குறிப்பிட்ட கட்டமாக குழந்தைச் சிந்தனையை நினைத்துப் பார்க்கவும் முடியாது.

கற்பனைச் சித்திரங்கள் எனும் உலகில் தமது சிந்தனை வாழ்கிறது என்பதில் ஆழமான திருப்தியைக் காண்கிறார்கள் குழந்தைகள். ஒரே கற்பனைக் கதையை ஐந்து அல்லது பத்து முறை குழந்தை திரும்பத் திரும்பச் சொல்லலாம், அப்போது ஒவ்வொரு முறையும் ஏதோ புதிய ஒன்றை அது கண்டுபிடிக்கிறது. கற்பனைச் சித்திரங்களில் பிரகாசமான, உயிருள்ள, திட்டவட்டமான விஷயத்திலிருந்து சூட்சும விஷயத்திற்கு குழந்தை முதல் எட்டு எடுத்து வைக்கிறது. எனது குழந்தைகளின் வாழ்வில் ஒரு முழுக் காலகட்டமாகவே கற்பனைக் கதை மாறியிருக்கவில்லை

என்றால் சூட்சுமச் சிந்தனைகளையும் அவர்கள் பெற்றிருக்க முடியாது. பாபா—யாகா, தவளைராணி, சிரஞ்சீவி காஷெய் ஆகியனவெல்லாம் உலகத்தில் இல்லை என்று குழந்தைக்கு நன்றாகத் தெரியும். இந்தச் சித்திரங்களில் நல்லதையும் கெட்டதையும் குழந்தை உருவகப் படுத்திக் கொள்கிறது, ஒரே கற்பனைக் கதையைத் திரும்பத் திரும்பச் சொல்லுவதன் மூலம் நல்லதையும் கெட்டதையும் தான் பார்க்கிற விதத்தை வெளியிடுகிறது குழந்தை.

கற்பனைக்கதை, அழகிலிருந்து பிரிக்க முடியாதது. அழகியல் உணர்ச்சிகள் வளருவதற்கு அது உதவுகிறது. இவ்வுணர்ச்சிகள் இன்றி மனத்தின் நற்பண்போ, மனித வருத்தம், துன்பம், வேதனை ஆகியவற்றை இதயத்தின் மென்மையுடன் அணுகுவதோ முடியவே முடியாது. கற்பனைக் கதையின் உதவியால், அறிவால் மட்டுமின்றி இதயத்தாலும் உலகத்தை அறிந்து கொள்கிறது குழந்தை. அறிந்து கொள்வது மட்டுமல்லை, சுற்றியுள்ள உலகத்துச் சம்பவங்களுக்கும் தோற்றங்களுக்கும் அது குரல் கொடுக்கிறது, நல்லதையும் கெட்டதையும் தான் பார்க்கிற விதத்தை வெளியிடுகிறது. நியாயத்தையும் அநியாயத்தையும் பற்றிய முதல் மனத்தோற்றங்களைக் கற்பனைக் கதை தருகிறது. சித்தாந்தப் பயிற்சியின் முதல் கட்டமும் கற்பனைக் கதையின் உதவியாலேயே நடைபெறுகிறது. பிரகாசமான சித்திரங்களாக உருவகப் படுத்தப்பட்டால்தான் சித்தாந்தத்தைக் குழந்தைகள் புரிந்து கொள்கிறார்கள்.

நாட்டுப் பற்றை ஊட்டி வளர்க்க, மாற்றில்லாத ஊற்றுக்கண்ணாக, நன்மை பயக்கும் ஊற்றுக்கண்ணாக விளங்குகிறது கற்பனைக் கதை. கற்பனைக் கதையின் நாட்டுப்பற்றுக் கருத்து அதன் உள்ளடக்கத்தின் ஆழத்தில் இருக்கிறது. ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக வாழ்ந்து வருகிற, மக்களால் படைக்கப்பட்ட கற்பனைச் சித்திரங்கள், உழைக்கும் மக்களின் படைப்பாற்றல் மிகுந்த ஆன்மாவையும், வாழ்க்கையைப் பற்றிய அவர்களது கருத்துக்களையும், நோக்கங்களையும், நாட்டங்களையும்

குழந்தையின் மனதிற்கும் அறிவிற்கும் எடுத்துச் செல்கின்றன. மக்களின் படைப்பு என்பதாலேயே பிறந்த மண் மீது பாசத்தைத் பயிற்றுவிக்கிறது கற்பனைக்கதை. கீவ் நகரத்துச் சேர்பியாவின் அதிசயச் சுவரோவியங்களைக் காணுகையில், இவை மக்கள் வாழ்க்கையின் ஒரு துளியே என்றும், ஆற்றல் வாய்ந்த அவர்களது திறனின் படைப்பே என்றும் நாம் புரிந்து கொள்கிறோம். அவர்களது படைப்புத் திறன் வாய்ந்த ஆன்மா, சிந்தனை, வல்லமை ஆகியவை பற்றி நமது மனத்தில் பெருமை உணர்ச்சி தூண்டப்படுகிறது. மக்கள் இயற்றிய கற்பனைக் கதைகள் இது போன்ற செல்வாக்கைத்தான் குழந்தை மீது செலுத்துகின்றன. ''வீட்டு வாழ்க்கை'' பற்றியே கற்பனைக் கதை இயற்றப் பட்டுள்ளது. என்று தோன்றலாம்: தாத்தாவும் பாட்டியும் டர்னிப் செடி நட்டார்கள், ...ஓநாயை ஏமாற்றுவதென்று முடிவு கட்டினார் தாத்தா, வைக்கோலில் கன்றுக்குட்டி ஒன்று செய்தார், ...இந்தக் கற்பனைக்கதைகள் ஒவ்வொரு வார்த்தையும் அழிவற்ற சுவரோவியத்தின் ஒரு நுண்ணிய கோடு போல விளங்குகின்றது. ஒவ்வொரு வார்த்தையிலும், ஒவ்வொரு சித்திரத்திலும் மக்கள் ஆன்மாவின் படைப்பாற்றல் விளையாட்டைக் காணலாம். மக்கள் கலாசாரத்தின் ஆன்மிக வளமையே கற்பனைக்கதை ஆகும். இந்த வளமையை அறிந்து கொள்கிற குழந்தை தனது தேச மக்களை இதயத்தால் அறிந்து கொள்கிறது.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடம்'' தொடங்கிய மூன்று மாதங்களில் கற்பனைக்கதையின் அறைக்கு வேண்டிய வசதிகள் செய்தோம். கதைச் சித்திரங்களின் உலகத்தில் இருப்பது போலக் குழந்தைகள் உணரத்தக்க சூழலை உயர் வகுப்பு மாணவர்களின் உதவியுடன் செய்தோம். அந்திக் கருக்கலையும், அடுப்பின் களிதுள்ளும் நெருப்பையும் பற்றி இளம் குழந்தைப் பருவத்தில் அம்மா சொன்ன கற்பனைக் கதையின் நினைவுக் காற்று நாலாபுறமிருந்தும் குழந்தைகள் மீது வீசுகின்றபடி செய்ய நிறைய உழைக்க வேண்டியதாயிற்று. இதோ

கொடுமைக்காரியான பாபா-யாகாவின் குடிசை. இந்தக் குடிசை கோழிக் கால்களில் நிற்கிறது. உயரமான மரங்களாலும், மரத்தின் அடிக்கட்டைகளாலும் சூழப்பட்டிருக்கிறது குடிசை. குடிசைக்குப் பக்கத்தில் கற்பனைக் கதையில் வருகிற உயிர்கள்: தந்திர நரி, கொடிய ஓநாய், புத்திசாலி ஆந்தை. இன்னொரு மூலையில் தாத்தாவும் பாட்டியும் வசிக்கிற குடிசை இருக்கிறது. வானத்தில் அன்னப் பறவைகள் பறக்கின்றன. இவை தமது இறக்கைகளின் மீது குட்டிச் சிறுவன் ஒருவனைச் சுமந்து செல்கின்றன. இவன்தான் உக்ரேனிய மக்களின் கட்டுக் கதையில் வரும் கதாநாயகனை இவாசிக்—தெலேசிக். மூன்றாவது மூலையில் நீலநிறமான கடல்—சமுத்திரம். இதன் கரையில் நல்ல கிழவனும் கொடிய கிழவியும் வசிக்கிற இடிந்து போன வீடு. வாசலில் ஒரு பழைய தொட்டி. திண்ணையில் கிழவனும் கிழவியும் உட்கார்ந்திருக்கிறார்கள். கடலில் தங்க மீன் ஒன்று நீந்திக் கொண்டிருக்கிறது. நான்காவது மூலையில் பனிக்கால காடு, வெண்பனிக் குவியல், வெண்பனியின் நடுவில் பனியை மிதித்துக் கொண்டு சிறுமி நடந்து வருகிறாள். செர்ரிப் பழங்கள் கொண்டு வரும்படி பனிக்காலத்தின் கொடிய குளிரில் மாற்றாந்தாய் அவளை அனுப்பியிருக்கிறாள்... குடிசையின் சன்னல் வழியாக ஆட்டுக்குட்டி எட்டிப் பார்க்கிறது. இதோ ஒரு பெரிய கையுறை. இதில் சுண்டெலி வசிக்கிறது. எதிர்பாராத விருந்தாளிகள் இங்கு வருகிறார்கள். ஒட்டுப் பலகைகளால் அடிக்கட்டை செய்து போடப்பட்டிருக்கிறது. அதன் மீது பொம்மைகள்—சிறுமி, சாம்பல்நிற முயல்குட்டி, நரி அக்காள், கரடி, ஓநாய், ஆட்டுக்குட்டி, வைக்கோல் கன்றுக் குட்டி, சிவப்புத் தொப்பி.

இவையனைத்தையும் நாங்களே படிப்படியாகச் செய்தோம். நான் வெட்டிச் செதுக்கினேன், படம் வரைந்தேன், ஒட்டி வைத்தேன். குழந்தைகள் எனக்கு உதவி செய்தனர். குழந்தைகள் கற்பனைக் கதை கேட்கப் போகிற சூழலின் அழகியல் தன்மைக்கு நான் பெருத்த

முக்கியத்துவம் தந்தேன். ஒவ்வொரு படமும், ஒவ் வொரு காட்சிமுறைச் சித்திரமும், கலைப்பண்பு கொண்ட வார்த்தையைக் கிரகித்துக் கொள்கிற தன்மையைக் கூராக்கிற்று; கதையின் கருத்தை அது ஆழமாக வெளிப் படுத்தியது. கதை அறையில் இருந்த வெளிச்சமும் கூட ஒரு மிகப் பெரும் பாத்திரம் வகித்தது. தவளை ராணி யைப் பற்றிக் கதை சொல்லும் போது காட்டுப் புதரில் சிறு விளக்குகள் எரிந்தன. சம்பவங்களை நன்கு வெளிப் படுத்தும் சூழலைத் தரும் பசிய இருட்டு அறையில் கோலோச்சியது.

கற்பனைக்கதையின் அறைக்குக் குழந்தைகளை நான் அடிக்கடி கூட்டிச் செல்வதில்லை. வாரத்திற்கு ஒரு முறையோ அல்லது இரண்டு வாரத்திற்கு ஒரு முறை யோதான் அங்கு கூட்டிச் செல்வேன். திகட்டுகின்ற அள வுக்கு அழகியல் தேவை ஒருபோதும் நிறைவு செய்யப் படக் கூடாது. திகட்டல் இருக்கிற இடத்தில் போலிப் பகட்டு தலைகாட்டும். போலித்தனமான ஏமாற்றம், சலிப்பு, ஓய்வு நேரத்தைக் ''கொல்லுவது'' எப்படி என்று தேடுவது ஆகியவை எட்டிப் பார்க்கும்... இலையுதிர்கால, பனிக்காலம் கருக்கல்களில் நாங்கள் இங்கு வருவோம். இந்த நேரத்தில் கற்பனைக் கதை குழந்தைகளுக்கு ஒரு விசேஷ முறையில் தொனிக்கும். தெளிவான வெய்யில் நாளில் தொனிப்பது போல அது இருக்கவே இருக்காது. முற்றத்தில் இருட்டுகிறது. நாங் கள் விளக்கு ஏற்றவில்லை. இருட்டில் அமர்ந்திருக்கிறோம். திடீரென்று கதைக் குடிசையில் நெருப்புத் தோன்று கிறது. வானத்தில் நட்சத்திரங்கள் சுடர்விடுகின்றன. காட்டுக்குப் பின்னாலிருந்து நிலா மேலெழும்புகிறது. அறையில் சிறு வெளிச்சமே இருக்கிறது. அறை மூலை களில் அதைவிட இருட்டு. எலும்புக் கால் கொண்ட பாபா—யாகா பற்றிய நாட்டுப்புறக் கதையை நான் குழந்தைகளுக்குச் சொல்கிறேன். சிறுவர்களுக்கு எனது வார்த்தையில் புதியதாக எதுவும் இல்லை என்றே தோன்று கிறது. ஆனால் அவர்களது கண்களில் ஆனந்தச் சுடர்

எரிகிறது. கதாநாயகர்களின் தலைவிதியைத் தம்முடையது போல அனுபவிக்கிறார்கள் குழந்தைகள். தீயதை வெறுக்கிறார்கள். நல்லதின் மீது அனுதாபம் கொண்டுள்ளனர். கொடிய பாபா, நம்பத் தகுந்த சிறுமியான அலோன்கா, அன்பு மிகுந்த அன்னப் பறவைகள் ஆகியவை குழந்தைகளின் மனத் தோற்றத்தில் உயிர் பெறுகின்றன. அறிவாலும் உணர்ச்சிகளாலும் உண்டாக்கப் பட்ட உயிர்களாக அவை மாறுகின்றன. இது சிறு குழந்தைகளுக்குச் சொல்கிற கட்டுக்கதை கற்பனைச் சம்பவங்கள் பற்றிய வெறும் வர்ணனை அல்ல; இது முழுமையான ஒரு உலகமே ஆகும். இதில் குழந்தை வாழ்கிறது, போராடுகிறது, தீயதை தனது நற்சித்தத்துக்கு எதிராக நிறுத்துகிறது, விளையாட்டில் தோன்றும் இயக்கத்தையும், இசையில் தோன்றுகிற ராகத்தையும் போல, குழந்தையின் ஆன்மிக ஆற்றலை வெளியிடுகிற உண்மையான வடிவத்தைக் கற்பனைக்கதையில் வார்த்தை கண்டுபிடிக்கிறது. பாட்டைக் கேட்பதற்கு மட்டுமின்றி தானே பாடுவதற்கும், விளையாட்டைப் பார்ப்பதற்கு மட்டுமின்றி, தானே அதில் பங்கெடுத்துக் கொள்வதற்கும் குழந்தை விரும்புவது போல கதையைக் கேட்பதற்கு மட்டுமின்றி, அதனைத் தானே சொல்வதற்கும் விரும்புகிறது குழந்தை.

நாட்கள் சில செல்கின்றன. ''கற்பனைக்கதையின் அறைக்கு நாம் எப்போது போவோம்'' என்று குழந்தைகள் கேட்கிறார்கள். மகிழ்ச்சி நிறைந்த நிமிடங்களுக்காகக் காத்திருப்பதால் பதட்டம் கொள்கிறார்கள் குழந்தைகள். அந்தி நேரக் கருக்கலின் போது நாங்கள் மீண்டும் கூடுகிறோம். மீண்டும் நான் கதை சொல்கிறேன். பின்னர் அந்தக் கதையைக் குழந்தைகள் சொல்கிறார்கள். மிகவும் கூச்ச சுபாவம் கொண்டவர்கள் கூட துணிவு மிக்கவர்களாக, தீர்மானம் மிக்கவர்களாக அப்போது மாறி விடுகின்றனர். மற்ற நேரங்களில் தடுமாற்றம் கொண்டு, சீராக இல்லாதிருக்கும் பேச்சு, இப்போது சீராகவும், உணர்ச்சி பாவங்களுடனும், பாட்டு போல

வும் மாற்றமடைகிறது. பேச்சு, சிந்தனை ஆகியவற்றின் வளர்ச்சியில் கஷ்டப்படுவதாக நான் கண்ட நீனு, பெத்ரிக், லியூதா, ஸ்லாவா, வால்யா ஆகிய குழந்தைகளும் கூட கதை சொல்கிறார்கள்.

கதை அறைக்கு ஒவ்வொரு முறை நாங்கள் வரும் போதும் குழந்தைகள் விளையாட விரும்புகிறார்கள். எல்லோருக்கும்—சிறுவர்களுக்கும் சரி, சிறுமிகளுக்கும் சரி—விருப்பமான பொம்மையோ விளையாட்டுச் சாமானோ கிடைத்தது. விளையாட்டு என்பது படைப்புப் பணியாக மாறுகிறது: சிறுவர்கள் கற்பனைக் கதையின் நாயகர்களாகின்றனர். அவர்கள் கைகளில் இருக்கிற பொம்மைகள் சிந்தனைகளையும் உணர்ச்சிகளையும் நன்றாக வெளியிட உதவுகின்றன. பிரபலமான உக்ரேனியக் குழந்தைக் கதையில் வருகிற வைக்கோல் கன்றுக்குட்டியை ஒரு குழந்தை எடுத்துக் கொண்டது. இன்னொன்று பொம்மைப் பாட்டியை எடுத்துக் கொண்டது. மற்றொன்று பொம்மைத் தாத்தாவை எடுத்துக் கொண்டது. கற்பனைக் கதையுலகில் ஏற்கெனவே வாழத் தொடங்கி விட்டனர் குழந்தைகள். கதாபாத்திரங்களின் சொற்களை மட்டும் அவர்கள் திரும்பச் சொல்லவில்லை. தமது கற்பனையைக் கதைக்குள் புகுத்தி அவர்கள் படைப்புத் தொழில் புரிகிறார்கள். சிறுமிகள் சிலர் பொம்மை வைத்து விளையாட வேண்டும் என்று விரும்புகிறார்கள். இதோ ஒரு குழந்தை பொம்மையைச் சிறு சோபாவின் மீது வைத்து, பாடுகின்ற குரலில் கொஞ்சல் வார்த்தைகள் பேசுகிறது. இன்னொரு சிறுமியின் பொம்மைக் குழந்தைக்கு நோய் கண்டு விட்டது. சிறுமி அதற்கு மருத்துவம் பார்க்கிறாள்.

சிறுவர்களும் சிறுமிகளும் சில ஆண்டுகள் பொம்மை வைத்து விளையாடிக் கொண்டிருந்தனர் என்பது என்னைக் கலக்கமுறச் செய்யவில்லை. சில ஆசிரியர்கள் சில சமயங்களில் நினைக்கிறபடி இது ஏதோ ஒரு ''குழந்தைத்தனம்'' அல்ல. இது அந்தக் கற்பனைக்கதையே. கதையை இயற்றுகிற,கேட்கிற படைப்பு எனும் நிகழ்ச்சிப்

போக்கை ஊடுருவும் ஜீவன் உயிர் பெறுவதே ஆகும் இது. பிரெஞ்சு எழுத்தாளரான செண்ட்-எக்ஸ்யூபெரி *(1900—1944)* சொல்கிற **பழக்கப் படுத்த** வேண்டிய உருவங்களின், உயிர் பெற்ற சித்திரத்தைக் குழந்தைகள் பொம்மையில் காண்கிறார்கள். எல்லையற்ற அன்பும், உடன் பிறந்த பாசமும் கொண்டதாக ஏதாவது ஒன்று தன்னிடம் இருக்க வேண்டும் என்று ஒவ்வொரு குழந்தையும் விரும்புகிறது. குழந்தைகளுக்கும் அவர்கள் விரும்புகின்ற பொம்மைகளுக்கும் இடையில் எத்தகைய ஆன்மிக உறவுகள் உருவாகின்றன என்று நான் கவனமாகக் கண்காணித்து வந்தேன். சிறுவர்கள் நீண்ட காலத்துக்குப் பொம்மைகளுடன் நட்புக் கொண்டிருந்தனர் என்பது எனக்கு மகிழ்ச்சி தந்தது. எந்த விதத்திலும் விசேஷமாயில்லாத, தூண்டிலுடன் இருக்கிற செம்படவப் பொம்மையை கோஸ்த்யா வைத்திருக்கிறான். அப்பொம்மையின் கால் பல முறை உடைந்து விழுந்து கொண்டிருந்தது. கடைசியில் அவன் ஒரு மரத்துண்டு செதுக்கினான். கொம்பு ஒன்று சீவுகிறான். இதை எடுத்துக் கொண்டுதான் செம்படவன் ஆற்றங் கரைக்குப் போகிறான். தனது முதிய நண்பனிடம் பேச்சுக் கொடுப்பது சிறுவனுக்குப் பிடித்த விஷயம். கார்ப் மீன்களும் பிரீம் மீன்களும் எங்கே கிடைக்கும் என்று அவருக்குச் சொல்கிறான் சிறுவன்... பாட்டி, பேத்தி பொம்மைகள்தான் லரீசாவுக்குப் பிடித்த பொம்மைகள். அவள் பாட்டிக்கு மூக்குக் கண்ணாடி செய்து கொடுத்தாள், அவள் காலுக்கடியில் வெதுவெதுப்புத் தரும் கம்பளம் போட்டாள், தோள்களைக் கம்பளிச் சால்வையால் மூடினாள். வால்யாவிடமும் இரண்டு பொம்மைகள்—பூனையும் சுண்டெலியும். பூனைக் குட்டியின் கழுத்தில் ஒவ்வாரு வாரமும் வெவ்வேறு குஞ்சம் கட்டி விட்டாள் சிறுமி. சுண்டெலிக்கு ஏனோ ஒரு பச்சைக் கம்பளம் கொண்டு வந்தாள்...

கற்பனைக்கதை அறையில் குழந்தைகள் செய்யும் கற்பனை முடிவற்றதாய் இருந்தது. ஒரு புதிய பொருளைப் பார்க்க வேண்டியதுதான், உடனே அப்பொருள்

குழந்தை உணர்வில் வேறு பொருளுடன் தொடர்பு கொண்டு விடுகிறது. கற்பனு மனத்தோற்றம் உருவாகிறது, குழந்தைக் கற்பனை விளையாடுகிறது, சிந்தனை துடிக்கிறது, கண்கள் சுடர் விடுகின்றன, சீரான வெள்ளமாய் ஓடுகிறது பேச்சு. இதைக் கணக்கிலெடுத்துக் கொண்ட நான், குழந்தைகளின் கண்களில் படுமாறு அறையின் பல்வேறு இடங்களில் பலப்பல விதமான பொருள்கள் இருக்குமாறு பார்த்துக் கொண்டேன். இவற்றுக்கு இடையில் உண்மையான அல்லது கற்பனையான தொடர்பை உருவாக்க முடியும். குழந்தைகள் கற்பனை செய்ய வேண்டும், படைப்புத் தொழில் புரிய வேண்டும், புதுப்புதுக் கதைகளை இயற்ற வேண்டும் என்று விரும்பினேன். இதோ ஒற்றைக் காலில் நிற்கிற நாரை—பயந்து போன சிறிய பூனைக் குட்டி — குழந்தைக் கற்பனை சுவாரஸ்யமான பல கட்டுக்கதைகளை இயற்றியது. இவற்றில் கதாநாயகர்களாக பூனையும் நாரையுமே விளங்கின. இதோ துடுப்புடன் இருக்கிற படகு, அதனருகே ஒரு தவளை—இவையெல்லாமே கற்பனைக்கதை படைக்குமாறு சொல்கின்றன. எட்டிப் பார்க்கிற கரடிக்குட்டியைக் கொண்ட குகை, கொசு, ஈ. கரடியுடன் ஒப்பிடும் போது கொசுவும் ஈயும் உண்மைக்கு மாறாக மிகவும் பெரிதாக இருக்கின்றன (கட்டுக்கதையில் இது மன்னிக்கத் தக்கதே), சிறு பன்றிக் குட்டி, சோப்புடன் இருக்கிற குளியல் தொட்டி—இவை யாவும் குழந்தைகளிடம் புன்னகையைத் தோற்றுவிப்பது மட்டுமின்றி, கற்பனையைத் தூண்டியும் விடுகின்றன.

சிந்தனை வளர்ச்சியில் கடுமையான கஷ்டங்களைக் கொண்டிருந்த குழந்தை கட்டுக்கதை இயற்ற முடிந்தால், சுற்றியுள்ள உலகத்தின் பல பொருள்களைத் தனது கற்பனையில் இணைக்க முடிந்தால்—இவ்வாறு என்னுல் செய்ய முடிந்தால்—சிந்தனை செய்யக் குழந்தை கற்றுக் கொண்டது என்று உறுதியுடன் சொல்லலாம். வால்யாவின் சிந்தனையைத் தூண்டி, ஞாபகசக்தியை உறுதிப்படுத்துவது எவ்வளவு கஷ்டமாக இருந்தது என்று நான்

ஏற்கெனவே சொன்னேன். சுற்றியுள்ள உலகத்தின் பொருள்களுக்கும் தோற்றங்களுக்கும் இடையில் திடீரென்று வெளிப்படுகிற தொடர்புகளின் முன்னால் அடைகிற திகைப்புணர்ச்சியே அவளது சிந்தனையை உசுப்பி விடுகிற ஒரு சாதனமாக இருந்தது. இதே போன்ற முக்கியத்துவம் வாய்ந்த இன்னொரு சாதனம் கட்டுக்கதையாகும். நீண்ட காலத்துக்கு வால்யாவால் ஒரு கதையும் இயற்ற முடியவில்லை, இது என்னைக் கவலைக்குள்ளாக்கியது. மூன்றாம் ஆண்டுக் கல்வியின் போதுதான் தவளை, படகு, மீன் குஞ்சு ஆகியவை பற்றி சிறுமி கதை கட்டினாள். இதோ அந்தக் கதை: ''ஆற்றங்கரையில் படகு ஒன்றை தவளை கண்டது. செம்படவத் தாத்தா படகை விட்டு விட்டு ரொட்டி வாங்குவதற்குக் கிராமத்திற்குப் போனார். படகில் சவாரி செய்யலாம் என்று தவளைக்கு ஆசை வந்தது. குட்டையிலிருந்து வெளியே வந்து படகுக்குள் எட்டிக் குதித்தது, துடுப்பை எடுத்துக் கொண்டது. அருகே நீந்தி வந்த மீன் குஞ்சு சொல்லிற்று: 'நீ என்ன செய்கிறாய்? குட்டைக்குள்ளேயே படகை ஓட்டுகிறாய். படகுக்கு ஆழமான தண்ணீர் வேண்டும்'. மீன் குஞ்சின் புத்திமதியைத் தவளை கேட்கவில்லை. தனது குட்டைக்கே ஓட்டிச் சென்றது படகை. குட்டையை நெருங்கும் போது படகு கேட்டது: 'தவளையே, தவளையே எங்கே என்னை இழுத்துப் போகிறாய்?' பதில் சொல்கிறது தவளை: 'நான் பிறந்த தண்ணீர்க் குட்டைக்கு. நான் எப்படிப் படகோட்டுகிறேன் என்று எங்கள் இனம் முழுதும் பார்க்கட்டும்'. புன்னகை செய்தபடி யோசித்தது படகு: 'தாத்தா வருவார், உனக்குப் படகோட்டக் கற்றுத் தருவார்'. ரொம்பக் கஷ்டப்பட்டுக் குட்டைக்கருகே படகை இழுத்து வந்தது தவளை. சகதிக்குள்: மாட்டிக் கொண்டது படகு. மேலே போக மாட்டேன் என்கிறது. அழுதழுது புலம்பியது தவளை. நகரவில்லை படகு. ''பாருங்கள் நான் படகில் எவ்வளவு நன்றாகச் சவாரி செய்கிறேன்'' என்று குட்டை முழுதுக்கும் கேட்கிற மாதிரி தவளை கத்திக் கொண்டிருந்ததால்

குட்டைக்குள்ளிருந்து தவளைகள் யாவும் வெளி வந்தன. நன்றாக எட்டிப் பார்த்தன. தவளைக்கு வெட்கமாய்ப் போயிற்று. குட்டைக்குள் குதித்தது. குதித்ததுதான் தாமதம் நாலாபுறமும் சிதறியது சேறு, தவளைகள் எல்லாம் கடகடவென்று சிரித்தன. செம்படவத் தாத்தா வந்தார். குட்டையிலிருந்து படகை வெளியே இழுத்தார். தவளைகளை பயமுறுத்தினர். பசிய நீர்ப்பாசிகளுக்குள் அவை மறைந்து கொண்டன. மாலை நேரத்தில் அவற்றுக்குத் துணிவு வந்து விடுகின்றது. வெளியே வந்து கடகடவென்று சிரிக்கின்றன. அன்றிலிருந்து ஒவ்வொரு இரவிலும் அவை கத்திச் சிரிக்கின்றன. மாலை முதல் காலைநேரம் வரை சேற்றுக்குள்ளிருந்து தவளைக் கத்தல் கேட்கிறது. சவடால் அடித்த தவளையைக் கண்டு மற்ற தவளைகள் சிரிப்பதுதான் இது.''

குழந்தைகளது கவிதைப் படைப்பின் மிகச் சுவையானதொரு வடிவம்தான் கட்டுக்கதை இயற்றுவது. இத்தோடு கூடவே அறிவாற்றல் வளர்ச்சிக்கு இது முக்கியமான சாதனமாகும். குழந்தைகள் படைப்புத் தொழில் புரிய வேண்டுமென்றும், கலைத் தன்மையுள்ள சித்திரங்களை உருவாக்க வேண்டுமென்றும் நீங்கள் விரும்பினால், உங்கள் படைப்பாற்றல் நெருப்பிலிருந்து ஒரு பொறியையாவது குழந்தையின் உணர்வுக்குள் எடுத்து வையுங்கள். உங்களால் படைப்புத்தொழில் புரிய முடியாதென்றால், அல்லது குழந்தைச் சுவைகளது உலகத்தின் அடியாழத்துக்குச் செல்வது வெறும் கேலிக்கூத்து என்று உங்களுக்குத் தோன்றினால்—ஒன்றும் உருப்படாது.

கற்பனைக்கதை அறையில் தீனாவிற்குப் பிடித்த பொம்மை இருந்தது. உலோகத் தொழிலாளியின் உருவம் அது. நெருப்பாய் உருகிய உலோகம் அவன் முகத்தின் மீது ஒளி வீசியது. வார்ப்புப் பட்டறையில் உருக்குத் தொழிலாளியைச் சந்தித்தது அவளுக்கு நினைவு வந்தது. மூன்றாண்டுகள் கழித்து, இன்று நெருப்பு ஆறு பற்றி அவள் சுவையான கதை இயற்றியிருக்கிறாள்:

''ஒரு பிரம்மாண்டமான அடுப்புக்கு அருகில் பல

சாலியான வீரன் நிற்கிறுன். அவன் இரும்பை உருக்கு கிறுன். இரும்பு கொதிக்கிறது, பொங்குகிறது. அடுப்புக்குப் பக்கத்தில் வந்தான் பலசாலி. கதவைத் திறந்து விட்டான். வழிந்தோடியது நெருப்பாறு. வழியும் போது சொல்கிறது: 'மனிதர்களே என்னை விட்டு விடாதீர்கள் நெருப்பிரும்பை எடுத்துக் கொள்ளுங்கள். உங்களுக்கு வேண்டியதைச் செய்து கொள்ளுங்கள். நெருப்பாற்றுக்குப் புத்திசாலி வல்லுனர்கள் வருகிறுர்கள். உருகியோடும் இரும்பை அள்ளுகிறுர்கள். மணலுக்குள் ஊற்றுகிறுர்கள். இரும்பிலிருந்து தமக்கு வேண்டியதெல்லாம் மனிதர்கள் செய்கிறுர்கள்.''

சோவியத் தாயகத்தின் பாதுகாவலர்களான நவீன பலசாலிகளின் உருவங்கள் குழந்தைகளின் உணர்வில் தோன்றுகின்றன. பாசிசத்துடன் நடந்த போர் (1941—1945), சோவியத் மக்களின் வீரஞ் செறிந்த வெற்றி ஆகியவை, நமது மக்களின் ஆன்மிக வாழ்வில் அழிக்க முடியாத சுவடுகளை விட்டுச் சென்றிருக்கின்றன. தாய் நாட்டைக் காத்து நிற்கிற வீரர்கள் கற்பனு வீரர்களாகக் குழந்தைகளின் மனத் தோற்றத்தில் வருகின்றனர். அவர்களைப் பற்றி பிரகாசமான, பதட்டம் நிறைந்த கட்டுக் கதைகள் மனத்தில் உருவாகின்றன. நமது மக்களின் பாதுகாவலர்களான பலசாலிகள் பற்றி குழந்தைகள் இயற்றிய கட்டுக் கதைகள் வழியாக, வீரம், வெல்ல முடியாமை, சோவியத் மனிதனின் நற்பண்பு ஆகியவை பற்றிய கருத்து இழையோடி வருகிறது. இதோ தன்கோ உருவாக்கிய கட்டுக்கதை:

''இராணுவச் சேவைக்கு மகனை வழியனுப்பினுள் தாய். அப்போது அவள் சொன்னுள்: 'பிறந்த மண்ணை ஒரு பிடி அள்ளிக் கொள். இதன் பாதுகாவலன் நீ என்பதை நினைவில் கொள்.'' பிறந்த மண்ணில் ஒரு பிடி அள்ளிக் கொண்டான் மகன். சிவப்பான பட்டுப் பொட்டலமாக அதைக் கட்டிக் கொண்டான். அதனை அவன் ஒரு போதும் விட்டுப் பிரியவில்லை. நமது பூமிக்கு எதிராக விரோதிகள் போர் தொடுத்தனர். எதிரிப் படையினரை

எல்லையில் சந்தித்தான் மகன். இயந்திரத் துப்பாக்கியால் அவர்களை அடித்து நொறுக்கினன். ஆற்றுக்குள் வீழ்ந்தனர் எதிரிகள். மகன் ஒரு எட்டு கூடப் பின்வாங்கவில்லை. எதிரியின் தோட்டா அவன் தலையில் பட்டு காயம் உண்டாக்கியது. இரத்தம் வடிந்து கண்ணை மறைத்தது. கைகள் சோர்ந்து போயின. நெருங்குகிறார்கள் எதிரிகள் இவனைச் சிறைப் பிடிப்போம் என்று எண்ணுகிறார்கள். பிறந்த பூமியின் பிடி மண்ணை நினைத்துக் கொள்கிறான் மகன். சிவப்புப்பொட்டலத்தைத் தொட்டான். உடனே கைகளில் ஏராளமான பலம் வந்து விட்டது. இளம் வீரன் மீண்டும் சுடத் தொடங்கினன். எதிரிகள் ஆற்றுக்குள் விழுந்தனர். விரைவான விமானங்களும் பலம் வாய்ந்த டாங்கிகளும் அதற்குள் அவனுக்கு உதவி செய்ய வந்து விட்டன.''

அந்திக் கருக்கலில் குழந்தைகள் இயற்றிய கற்பனைக் கதைகளை நான் எழுதி வைத்திருக்கிறேன். நான் குழந்தைகளிடம் மூட்டி வைத்த சிந்தனை நெருப்புக்களாக மதிப்பிற்கரியவையாக எனக்கு இவை விளங்குகின்றன. படைப்புத் தொழிலும், கதை கட்டுவதும் மட்டும் இருக்கவில்லை என்றால், பல குழந்தைகளின் பேச்சு தடுமாற்றமும் சிக்கலும் கொண்டதாகவும், அவர்களது சிந்தனை ஒரே குழப்பமாகவும் இருந்திருக்கும். அழகியல் உணர்ச்சிகளுக்கும் குழந்தைகளது பேச்சின் வார்த்தை வளமைக்கும் இடையே நேரடித் தொடர்பு இருக்கிறது என்று நான் உறுதி கொண்டேன். அழகியல் உணர்ச்சிக்கு உளநெகிழ்ச்சி வேறுபாட்டைக் கொடுக்கிறது வார்த்தை. குழந்தைகள் இருக்கிற சூழல் எந்த அளவுக்கு அசாதாரணமாக இருக்கிறதோ, கட்டுக்கதை எவ்வளவு சுவாரஸ்யமாக இருக்கிறதோ, அந்த அளவுக்குக் குழந்தைக் கற்பனையின் விளையாட்டு சக்தி வாய்ந்ததாகவும், அந்த அளவுக்குக் குழந்தைகள் உருவாக்குகிற சித்திரங்கள் எதிர்பாராததாகவும் விளங்கும். அந்திக் கருக்கலில் எனது மாணவர்கள் டஜன் கணக்கான கற்பனைக் கதைகள் இயற்றினர். ''அந்திக் கருக்கல் கதைகள்'' என்று

கையெழுத்துத் தொகுதியில் இவை ஒன்று சேர்க்கப் பட்டிருக்கின்றன.

பிராணிகள், பறவைகள், மரங்கள், மலர்கள் முதலியவை பற்றி மிகச் சுவாரஸ்யமான கதைகள் ''அந்திக் கருக்கல் கதைகளில்'' இருக்கின்றன. மலர்களைப் பற்றி இயற்றப்பட்டுள்ள கதைகள் எங்களுக்குக் குறிப்பாக மகிழ்ச்சியைத் தந்தன. மனிதனின் உளநெகிழ்ச்சி வாழ்க்கையைப் பற்றியும், பாட்டுக்களிலும் பழங் கதைகளிலும் உணர்ச்சிகள் உருவகம் பெறுவது பற்றியும், மலர்கள் பற்றியும் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் எடுத்துச் சொன்னேன். கதைக்கு நான் ஆரம்பம் தருவேன்— குழந்தைகளின் கற்பனை பிரகாசமான சித்திரங்களை உருவாக்கும்.

கற்பனைக்கதை அறையில் இருந்த சூழலை 2-3 மாதங்களுக்கு ஒரு முறை நாங்கள் புதுமைப் படுத்தினேம். பலகையிலிருந்து புதிய உருவங்கள் செதுக்கினேம். மரங்கள், புதர்கள் ஆகியன செய்தோம். கோபுரங்கள், கற்பனை மாளிகைகள், செம்படவர்கள் குடிசை, புகைபிடிக்கும் கூடம் முதலியவற்றைக் கட்டினேம். கட்டுக்கதையில் வரும் கதாபாத்திரங்களின் உருவங்களைக் காகிதக் கூழில் செய்யக் கற்றுக் கொண்டனர் குழந்தைகள், இது கதைபுலருக்குச் செழுமை கூட்டியது. இவ்வாறு நாங்கள் பலப்பல கற்பனைக் கதைகளுக்கு உருவம் தீட்டினேம். ''இவாசிக்—தெலேசிக்'' (உக்ரேனிய மக்கள் கதை), வ. ஜுக்கோவ்ஸ்கியின் ''உறங்கும் அரசி'', சி. அக்சாகவின் ''அலோன்கின் மலர்'', வி. தால் எழுதிய ''பல்லழகிச் சுண்டெலியும் பணக்காரச் சிட்டுக்குருவியும்'', வ. கார்ஷினுவின் ''தவளைப் பயணி'', ஹா. அன்டெர்சனின் ''பனி ராணி'', கிரிம் சகோதரர்களின் ''பிரேமென் தெருப் பாடகர்கள்'', ஷ. பெர்ரோவின் ''தூங்கும் அழகி'', ''நீண்ட சடை கொண்ட மரியா மிரசாவும் வன்யூஷாவும்''(ருஷ்ய மக்கள் கதை),''பிறந்த வீட்டு ஆணி (ஸ்வீடன் மக்கள் கதை), ''சபாயெவ் பற்றிய கதை'', ''கூனல் விழுந்த குருவி'' (ஜப்பானிய

மக்கள் கதை) ஆகியவை இவை. நமக்கு மகிழ்ச்சி நல்கிய அன்புக்குரிய மனிதன் என்றென்றும் நமது உணர்வில் தங்கி விடுவது போல இந்தக் கதைகள் குழந்தைகளின் ஆன்மிக வாழ்வுக்குள் நுழைந்தன. யாரும் கோரவில்லை யாயினும் காதால் கேட்ட இந்தக் கதைகளை வார்த் தைக்கு வார்த்தை ஆயுள் முழுதுக்கும் குழந்தைகள் நினைவில் வைத்துக் கொண்டனர். வார்த்தையொன்று தனது ஒப்பற்ற அழகால் குழந்தையைப் பதட்டப்படுத் தும் போது அது காலகாலத்துக்கும் குழந்தையின் மனதில் பதிந்து விடுகிறது. இவ்வாறு நினைவில் பதிவது ஞாபக சக்தியின் மீது அதிகச் சுமையை ஏற்றுவதில்லை மாருக, ஞாபக சக்தி இன்னும் கூர்மையடைகிறது.

புதிய கதையை முதல் முறை கேட்பது குழந்தை களின் வாழ்வில் ஒரு பெரிய சம்பவம் ஆகும். அன்டெர் சனின் ''பனி ராணி'' எனும் கதைக்கான சூழலை எத் தகைய பதட்டத்துடன் நாங்கள் உருவாக்கிளுேம் என் பதை நான் ஒருபோதும் மறக்க மாட்டேன். கல்விப் பயிற்சியின் இரண்டாவது ஆண்டில் இது நடந்தது. ஆரம்பப் பனிக்காலத்தின் அந்திக் கருக்கல் வந்தது. குழந் தைகள் கற்பனைக்கதை அறைக்கு வந்தனர். கதை நடக் கிற சூழலை—கூர்மையான கூரைகள் கொண்ட வீடுகள், உயரமான குன்றுகளுக்கு இடையில் அற்புத மாளிகை, விரைந்து செல்லும் மான்கள், பனிக் குவியல்கள் ஆகிய வற்றை குழந்தைகள் தமது கைகளால் படைத்தனர், ஆனல் இன்னும் எல்லோரும் கதையைக் கேட்கவில்லை. வீட்டு ஜன்னல்களில் பற்றி எரிகிறது நெருப்பு. வெண் பனிச் சிதள்கள் வானிலிருந்து விழுகின்றன. மாலை நேரத்துப் பாதி இருட்டு எங்களைச் சூழ்ந்து நிற்கிறது. ஆசிரியர் சொல்வதைத் திகைப்புடன் கேட்டுக் கொண் டிருக்கிருர்கள் குழந்தைகள்... கதை முடிந்து விட்டது. ஆனல் இன்னெரு முறை அதைச் சொல்லும்படி கேட் கின்றனர் குழந்தைகள். வார்த்தையின் இந்தக் கவர்ச்சி நான் மிகவும் விரும்புகிற ஒன்ருகும். குழந்தைகள் எத்தனை முறை கோரினுர்களோ அத்தனை முறையும்

நான் கதையைத் திரும்பத் திரும்பச் சொன்னேன். குழந்தைகள் மீண்டும் மீண்டும் பனி ராணியைப் பற்றிக் கேட்க விரும்பியது வார்த்தைகளை அவர்கள் நினைவில் பதித்துக் கொள்ள வேண்டும் என்பதற்காக அல்ல, இந்த வார்த்தைகள் ஓர் அதிசய இசையாக அவர்களுக்கு ஒலித்தன என்பதாலேயே ஆகும்.

தாய்மொழியை ஆழமாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவும். தாய்மொழி வார்த்தை அவர்களின் ஆன்மிக வாழ்வில் நுழைந்துவிட வேண்டும் என்பதற்காகவும், கூரிய குறிதவருத உளியாக, வண்ணக் குழித் தட்டாக, உண்மையை அறிகிற நுண்ணிய சாதனமாக இந்த வார்த்தை மாற வேண்டும் என்பதற்காகவும் ஆசிரியர் பாடுபடுகிறார். சிந்தனையின் பொருள்வகை வெளிப்பாடே மொழி. வார்த்தையின் அர்த்தத்துடன், பிரகாசமான உளநெகிழ்ச்சி வேறுபாட்டையும் தாய்மொழிச் சொல்லின் உயிர்த் துடிப்பையும் குழந்தை கிரகித்துக் கொள்ளும் போதுதான் தாய்மொழியை அது அறிந்து கொள்ளும். வார்த்தையின் அழகை அனுபவித்து உணராமல், அதனுடைய அர்த்தத்தின் அந்தரங்க எல்லையைக் குழந்தையின் அறிவு எட்ட முடியாது. கற்பனை இல்லாமல், படைப்புத் தொழிலில் (இதற்குப் பெயர் தான் கற்பனைக் கதை) குழந்தைகள் தாமாகப் பங்கு கொள்ளாமல் அழகை அனுபவித்து உணருவது நினைத்தும் பார்க்க முடியாது. அறிவு, உணர்ச்சி, கற்பனை, சித்தம் ஆகிய, குழந்தையினது ஆன்மிக வாழ்வின் எல்லாத் துறைகளையும் எட்டிப் பிடிக்கிற தீவிர அழகியல் படைப்புத்தான் கற்பனைக்கதை ஆகும். இந்தப் படைப்புத் தொழில் கதை சொல்வதிலேயே தொடங்குகிறது. இதன் உயர்ந்த கட்டம்—நாடகமாக்கப் படுவது ஆகும்.

எங்கள் கதை அறையில் பொம்மைத் தியேட்டர் ஒன்றும், நாடகக் குழு ஒன்றும் தோன்றின. துணிச்சலான மிருகங்கள் குடி புகுந்த, ருகவீச்கா (கையுறை) எனும் உக்ரேனிய மக்கள் கதையைக் குழந்தைகள் இங்கு முதன் முதலாக நாடகமாக்கினர். பின்னர் பெருத்த

அக்கறையுடன், தவளை ராணி பற்றிய கதை, கூனல் குருவி பற்றிய ஜப்பானியக் கதை ஆகியவற்றையும் நாடகமாக்க ஏற்பாடு செய்தனர். கல்விப் பயிற்சியின் நான்காவது ஆண்டில், தும்பிப் பாடகன் பற்றிய கதையை, குழந்தைகள் ஒன்று சேர்ந்து உருவாக்கி நடித்தனர்.

''ராபின்சன் குருசோ'', ''மியுன்ஹாவுசேனின் வீரச் செயல்கள்'', ''கலிவரின் யாத்திரைகள்'', ''சல்தான் அரசன் பற்றிய கதை'',''கலேஞன் யான்கோ'' எனும் கதைகளை கதை அறையில் நான் முதல் முதலில் குழந்தைகளுக்குப் படித்துக் காட்டினேன். விபத்துக்குள்ளான கப்பலில் வந்த ராபின்சான் குருசோவுடன் ஆளரவம் அற்ற தீவுக்குள் குழந்தைகளும் நுழைந்து, இயற்கையுடன் நடந்த கடிய போராட்டத்தின் கஷ்டங்களைத் தாமும் அனுபவித்த, சன்னலுக்குப் பின்னுல் பனிப்புயல் வீசிய அந்த பனிக்கால மாலை நேரங்களின் கவர்ச்சியை என்றென்றும் நினைவில் கொண்டனர் குழந்தைகள். ஹா. ஆன்டெர்சன், லேவ் தல்ஸ்தோய், க. உஷீன்ஸ்கி, கிரிம் சகோதரர்கள் ஆகியோரின் கதைகள் அனைத்தையும் அதே போல சோவியத் குழந்தை எழுத்தாளர்களான க. சுகோவ்ஸ்கி, மி. மர்ஷாக் ஆகியோரின் கதைகளையும் கதை அறையில் நாங்கள் படித்தோம். நல்லதையும் கெட்டதையும், உண்மையையும் பொய்யையும், நேர்மையையும் நேர்மையின்மையையும் பற்றி புத்தகங்களில் தரப்படுகிற ஒழுக்கக் கருத்துக்கள், குழந்தைப் பருவத்திலேயே இப்புத்தகங்களைப் படிக்கும் போதுதான் மனித மனத்தில் பதிந்து கொள்ளும் என்று பல்லாண்டு கால அனுபவம் எடுத்துக் காட்டுகிறது. கற்பனைக் கதை குழந்தைப் பருவத்துக்கே உரியது ஆகும்.

நாங்கள் ஒரு தனி விதமாகப் படித்தோம். மேலே கூறப்பட்ட கதைகளும் கட்டுக்கதைகளும் எனக்கு மனப்பாடமாகத் தெரிந்தவை. சிறுவர்களுக்குச் சித்திரங்கள் காட்டுவதற்காகவே நான் புத்தகத்தைத் திறப்பேன். அறிவையும் நல்ல மனித உணர்ச்சிகளையும் பயிற்றுவிப்

பதற்கு பார்த்துப் படிப்பதும் கட்டுக்கதைகளைப் போல ஒரு சக்தி வாய்ந்த சாதனமாகும்.

முதற்கண் இதயத்தைப் பயிற்றுவிப்பதும், குழந்தை உள்ளத்தின் அந்தரங்கப் பகுதிகளைத் தொடுவதுமே குழந்தைப் பருவத்தில் பார்த்துப் படிப்பதாகும் என்று சொல்வது மிகையாகாது. நற்கருத்துக்களை வெளிப் படுத்துகிற வார்த்தை, மனச்சாட்சியை உருவாக்குகிற மனிதத் தன்மையின் துளிகளைக் குழந்தை இதயத்தில் என்றென்றைக்குமாகத் தோற்றுவிக்கிறது.

## கதையின் தொடர்ச்சி—<br>எங்கள் ''அற்புதத் தீவு''

பயணங்கள், வீரச் செயல்கள் எனும் ரோமான்ஸ் கனவுகளும், இயற்கைச் சக்திகளுடன் நடத்துகிற போராட்டமும்—அதாவது அசாதாரணமான விஷயம்—குழந்தைகளைக் கவருகிறது. ராபின்சன் குருசோவின் வீரச் செயல்கள் பற்றி நான் குழந்தைகளுக்கு முதன் முதலாகச் சொன்னபோது, பயணிகள் விளையாட்டு விளையாட வேண்டுமென்றும், கடலலைகளின் கூச்சலையும் நீர் வீழ்ச்சியின் முழக்கத்தையும் கேட்க வேண்டுமென்றும் அவர்களிடம் ஆவல் தோன்றியது. விளையாட்டு உலகத்தில் வாழத் தகுந்த புதிர் நிறைந்த இடமான அற்புதத் தீவு ஒன்று அமைக்கலாம் என்று முடிவு செய்தனர் குழந்தைகள். அடர்ந்த காட்டின் ஸ்லோ (Sloe) புதர்களில் இந்தத் தீவை நாங்கள் உருவாக்கினோம். கொடிய விலங்குகளிடமிருந்து பாதுகாப்பதற்கான வேலியுடன் ராபின்சனின் வீட்டைக் கட்டினோம். எங்கள் கதாநாயகனது வீட்டிலிருந்தது போலவே வெப்பம் தரும் அடுப்பு அங்கு இருந்தது. ''கடலின்'' எல்லையற்ற தொலைவைப் பார்ப்பதற்காக சிறிய சாளரம் ஒன்று அமைத்தோம். ஒரு சிறு பாத்தி போட்டு அதில் சில டஜன் கோதுமை பார்லி மணிகளை விதைத்தோம். ராபின்சன் வீட்டில் ஆடுகள் இருந்ததால், கோல்யா தனது வீட்டிலிருந்து ஓர் ஆட்டுக்

குட்டியைக் கூட ஓட்டி வந்தான். பழைய பீப்பாய், கயிறுகள், செங்கல்கள் ஆகியவற்றைக் கொண்டு வந்தோம். தகரங்களிலிருந்து கத்திகள் செய்தோம், மீன் பிடிக்க வலை பின்னினேம். ஆதிகால வேடர்கள் போல காய்ந்து போன இரண்டு மரத் துண்டுகளை உரசித் தீ மூட்டினேம். தீ உண்டாக்குவதற்கு ராபின்சனிடம் வேறு கருவிகள் ஏதும் இருந்திருக்க முடியாது அல்லவா?

வீடு கட்டுவதற்காக நாங்கள் மண் தோண்டிய இடத்தில் ஏற்பட்டிருந்த குழி, மழை பெய்ததால் தண்ணீர் நிறைந்து சிறு குளமாக மாறியது. குழந்தைகள் நீரை அள்ளித் தெறித்து விளையாடினர். சமுத்திரத்தின் எல்லையற்ற பரப்பு போல சித்திரம் வரைந்தது கற்பனை. சமுத்திரம் இருந்தால் கப்பல்களும் இருக்க வேண்டுமே. வில்லோ மரத் துண்டு ஒன்றைக் கண்டெடுத்த குழந்தைகள் அதிலிருந்து படகு செய்யத் தொடங்கினர். இந்த வேலை எளிதாக இருக்கவில்லை. ஆனல் அதில் வெற்றி கிட்டியது. படகில் பாய்மரம் கட்டினார்கள். இதோ ஏற்கெனவே அது கடலுக்குள் பயணம் போகிறது.

ஒரு சிறு குன்றுக்குப் பின்னல்—குழந்தைக் கற்பனையில் இதுவே பெரிய மலையாக இருந்தது—லில்லிபுட் நாட்டை நாங்கள் உண்டாக்கினேம். இதன் தலைநகரான லில்லிபுட்டை பலகைகள், கற்கள் ஆகியவற்றைக் கொண்டு அமைத்தோம். களிமண்ணைக் கொண்டு குதிரைகள், பசுக்கள், ஆடுகள் ஆகியவற்றைப் படைத்தோம். புராணக் கதை வீரனை இல்யா மூரமெத்ஸையும் அவனது எதிரியான சலவேய்-ரஸ்போய்னிக்கையும் உருவாக்கினேம். இந்த உருவங்களைப் புதரில் வைத்தோம். பண்டைய ருஷ்யாவின் உறங்குகின்ற காடு இது. அமைதியான கோடைகால மாலைநேரங்களில் நாங்கள் இங்கு வருவோம். துணிவான, வீரஞ் செறிந்த பல சாலியைப் பற்றிச் சொல்ல வேண்டும் என்று ஒவ்வொருவரும் விரும்பினர்.

கடத்தற்கரிய அடர்ந்த புதர்களுக்குள் ஊடுருவிச்

சென்ற நாங்கள், பள்ளத்தாக்கின் சரிவில் ஒரு சிறு குழி ஒன்றைக் கண்டோம். இது சிரஞ்சீவி காஷெயின் குகை. அங்கே ஏதோ ஒரு புதிர் நிறைந்த இடத்தில் அழகியான அரசி உழன்று கொண்டிருக்கிருள்.

இன்னும் தொலேவுக்குப் பயணங்கள் போக முடியாத வெப்ப காலத்தில், இந்த அற்புதத் தீவில் விடுமுறை நாட்களேக் கழித்தோம். ராபின்சன் வீட்டுக்குப் பக்கத்தில் குடிசை ஒன்று கட்டினேம். இது நாங்கள் மிகவும் விரும்பும் இடம். இங்கிருந்துதான் கற்பனு இறக்கைகள் எங்களேக் கனவுலகுக்கு இட்டுச் செல்லும். கதாநாயகர்கள் எங்கள் அருகே இருந்தனர். பூமியின் மீது இருள் கவிந்த போது, சலவேய்-ரஸ்போய்னிக்கின் சீட்டி யொலியும், சிரஞ்சீவி-கஷேயின் கீச்சுக் குரல் புலம்பலும், காலணி பூண்ட பூனேக் குட்டியின் எச்சரிக்கையான எட்டுக்களும் எங்களுக்குக் கேட்டன. குழந்தைக் கற்பனே எனும் நெருப்பு இங்கு இன்னும் பிரகாசமாக எரிந்தது. யூரா, கால்யா, தீனு, வீத்யா ஆகியோர் இந்த இடத்தில் அற்புதக் கதைகள் கட்டினர். அங்கு இருந்த சூழலே கற்பனே விளேயாட்டைத் தூண்டி விட்டது. சிந்தனே சீராகவும் இழுத்துப் பிடித்தற்கரியதாகவும் வழிந்தது. தமது உணர்ச்சிகளே வெளியிடுவதற்கு தெளிவான வார்த்தைகளேப் பொறுக்கி எடுத்தார்கள் குழந்தைகள். செர்யோஷா கட்டிய தங்க வானவில் பற்றிய கதை பின்வருமாறு:

''ஒரு நாள் மாலே நேரத்தில் சூரியனிடம் வந்த ராட்சசக் கொல்லர்கள் சொல்கிருர்கள்: 'சூரியனே, சூரியனே எங்களது இரும்புச் சம்மட்டிகள் உடைந்து போய் விட்டன. வெள்ளிக் கம்பியை அடித்து இழுப்பதற்கு எங்களிடம் எதுவுமே இல்லே. பட்டறைக் கல்லும் பழையதாகி விட்டது. எங்களே பூமிக்குப் போக விடு. அங்கிருந்து இரும்பு எடுத்துக் கொள்கிறேம்.' கொல்லர்களேப் போக விட்டான் சூரியன். கொல்லர்கள் மனிதர்களே நோக்கிப் போகத் தொடங்கினுர்கள். ஆனுல் மேகங்கள் அவர்களது வழியை மறித்தன. மேகங்களின்

வழியாக பூமியைப் பார்த்தார்கள் கொல்லர்கள். அவர்கள் மிக மிக உயரத்தில் இருந்தார்கள். இறங்குவது எப்படி? சூரியனிடம் திரும்பி வந்து சொல்கிறார்கள்: 'சூரியனே, சூரியனே நாங்கள் பூமிக்கு இறங்குவது எப்படி? ஏதாவது ஒரு பாலம் கட்டிக் கொடு? கறுத்த மேகங்களின் வழியாகத் தனது கிரணங்களைச் செலுத்தினான் சூரியன். சூரியப் பாலம் வானத்தில் பிரகாசித்தது. பூமியிலிருந்த மனிதர்கள் தங்க வானவில்லைப் பார்த்தார்கள். கொல்லர்கள் பூமியில் இறங்கினார்கள். மனிதர்களிடமிருந்து இரும்பு எடுத்துக் கொண்டார்கள். சூரியனிடம் மீண்டும் திரும்பினார்கள். அவர்களது வெள்ளைத் தாடியைச் சூரியன் கண்டவுடனே தனது தங்கக் கிரணங்களை அகற்றி விட்டான், மறைந்து போனது வானவில். அன்று முதல் கறுத்த மேகங்கள் வானத்தில் தோன்றியவுடனே, இரும்பு எடுத்து வருவதற்காக ராட்சசக் கொல்லர்களை பூமிக்கு அனுப்புகிறான் சூரியன். தங்க வானவில் பனிக்காலத்தில் இருக்காது. ஏனெனில் பகல் நேரம் மிகக் குறைவாக இருப்பதால், ராட்சசக் கொல்லர்கள் சம்மட்டியால் அடிப்பது மிகவும் குறைவே.''

ஒவ்வொரு குழந்தையும் இங்கு கட்டுக் கதை இயற்றியது என்பது எனக்குப் பெருமகிழ்ச்சியைத் தந்தது. கோடைகால மாலைநேரம் என்றென்றும் நினைவில் நிற்கிறது. சூரியன் மறைந்த பின்னே ஆகாயம் சாம்பல் நிறமாய் மாறியது. கோடைகாலம் உக்கிரமாய் இருக்கும் போது பல நாட்கள் இத்தகைய மாலை நேரங்கள் வரும். அப்போது மெல்லிய ஒளியை வானமே உமிழ்வது போலத் தோன்றும். இந்த மாலை நேரங்களில், சாதாரணமாய் இருப்பதைவிட நீண்ட நேரம் கருக்கல் நீடிக்கும். வெகு நேரத்துக்கு வானத்தில் நட்சத்திரங்கள் மின்னத் தொடங்காது... இயற்கையால் மயக்கப்பட்ட குழந்தைகள் மௌனமாய் இருக்கிறார்கள். இந்தக் கணங்களில் கற்பனை நெருப்பு மிகப் பிரகாசமாக எரிகிறது. நீனா இயற்றிய கட்டுக்கதையை நாங்கள் கேட்கிறோம்:

''தனது மாயத் தோட்டத்துக்கு ஓய்வெடுக்கப் போய்விட்டான் சூரியன். ஓய்வெடுக்கலாம் என்று படுத்தான், ஆனுல் கண்ணை மூட மறந்து விட்டான். இன்னும் பகற் பொழுதுதான் என்று ராட்சசக் கொல்லர்கள் நினைக்கிருர்கள். வெள்ளிக் கம்பியை அடித்து நீட்டிக் கொண்டே இருக்கிருர்கள். கம்பிகள் விழுந்து சிதறி தூசியாக மாறி விட்டன. வானத்தில் பறக்கிறது வெள்ளித்துகள், எரிகிறது, பிரகாசிக்கிறது...''

இந்த வியத்தகு கட்டுக்கதையைக் கேட்கும் போது எனது இதயம் அவ்வப்போது அடித்துக் கொண்டது. இயற்கை அழகு தரும் கவர்ச்சியும், கட்டுக்கதையின் கற்பனை உருவங்களும் குழந்தையின் உணர்வில் சிந்தனை ஊற்றுக்களைத் திறந்து விடுகின்றன என்பதில் எப்படி மகிழ்ச்சியடையாமல் இருக்க முடியும்? ஜூன் மாதத்தின் மிக நீண்ட மாலை நேரங்களில், சாம்பல் நிற ஆகாய வீதி ஏதோ ஒரு மாயப் போர்வை போலத் தோன்றும் போது, குழந்தைக் கற்பனை விசேஷமாக விளையாட்டுக் காட்டுகிறது. இது ஏன் என்று எனக்குத் தெரியாது.

மூன்ரும் வகுப்பு முடித்த பின் ''அற்புதத் தீவில்'' ''கொரில்லாப் படைப் பிரிவுத் தலைமையகம்'' அமைக்க வேண்டும் என்று விரும்பினுர்கள் குழந்தைகள். ''தலைமையகத்தை நிலவறையில் அமைத்தோம் என்பது சொல்லாமலே விளங்கும். நிலவறையைத் தோண்டுவதற்கும், அதில் வசதிகள் செய்வதற்கும் உயர் வகுப்பு மாணவர்கள் எங்களுக்கு உதவினர். கவர்ச்சி மிக்க விளையாட்டு தொடங்கியது. இது பல மாதங்கள் நீடித்தது. இரவு நேரத்திலும் விளையாட வேண்டுமென்று விரும்பினுர்கள் குழந்தைகள். அவர்களைத் தடுப்பது கஷ்டமாக இருந்தது. அவர்கள் வேவு பார்க்கச் சென்று வந்தார்கள். திசைகாட்டியை உபயோகிக்கக் கற்றுக் கொண்டனர். ''இலேசான இயந்திரத் துப்பாக்கிகளும்'', ''கனரக இயந்திரத் துப்பாக்கிகளும்'' மரத்தில் செய்தனர். தாக்குதல் தொடுப்பதற்கு முன்னுல் சண்டைக்கான உத்தரவுகள் இட்டனர்.

ருஷ்யக் கற்பனைக்கதை எழுத்தாளரான பஸோவின் ''மலகைட் (malachite) கல் பெட்டி'' என்னும் புத்தகம், கடைசி ஆண்டுக் கல்விப் பயிற்சியின் போது குழந்தைகளைக் கவர்ந்தது. யூரல் பிரதேசத்து விந்தைக் கற்களைப் பற்றியும், செம்பு மலையின் நல்லியல்பு கொண்ட எஜமானியின் அளவற்ற செல்வங்கள் வைக்கப் பட்டுள்ள குகையின் வியத்தகு அழகு பற்றியும், பச்சைக்கல் படிவங்கள் பற்றியும் நான் படித்துக் காட்டிய போது குழந்தையின் கண்களில் மகிழ்ச்சிச் சுடர் ஒளிர்ந்தது. அழகான, புதிரான, ரோமான்டிக்கான எதையாவது செய்ய வேண்டும் என்று அந்த நாட்களில் குழந்தைகள் விரும்பினர். பூமிக்கடியில் ஒரு மரகத ராஜ்யம் நிறுவலாம் என்று யாருக்கோ யோசனை தோன்றியது. பச்சை, நீலம், ஊதா, ஆரஞ்சு, சிவப்பு, வயலெட் ஆகிய நிறங்களில் கண்ணாடித் துண்டுகளை நாங்கள் சேகரிக்கத் தொடங்கினோம். இவற்றை எங்கள் குகையின் சுவர்களில் பதித்தோம். சிறிய மின் விளக்கு ஒன்று குகையில் எரிய சுவர்களெல்லாம் பல நிறங்களில் தகதகத்ததால் உண்டான அற்புத அழகைக் கண்டு குழந்தைகள் கொண்ட பேரானந்தத்தை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. இங்கு புதிய கதைகள் பிறந்தன. அறிவாற்றல் சக்திகளைப் பயிற்றுவிப்பதிலும், வளர்ப்பதிலும், உறுதிப் படுத்துவதிலும் அழகியல் உணர்ச்சிகள் மிகவும் வல்லமை வாய்ந்ததாய் விளங்குகின்றன என்பதில் நான் மீண்டும் திடவுறுதி கொண்டேன். வால்யா, பெத்ரிக், நீனு ஆகியோரின் சிந்தனை எனது கண்களுக்கு முன்னுலேயே விரைந்து எழுந்தது. தமது கற்பனை வளத்தால் எனக்கு வியப்பூட்டிய கட்டுக்கதைகளைக் குழந்தைகள் உருவாக்கினர். வியூதாவும் இங்கு கதை கட்டினுள். இத்தனை காலமும் சிறுமி மௌனமாய் இருந்ததற்குக் காரணம் மெதுவான அவளது அறிவு வளர்ச்சி அல்ல, அவள் கனவு காண்பதும் ஆழ்ந்து சிந்திப்பதுமே இதற்குக் காரணம் என்று நான் மனவுறுதி கொண்டேன்.

## குழந்தையின் முன்னால் உலகத்தின் அழகை பாடல் திறக்கிறது

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' செய்தது போலவே தொடக்கப் பள்ளியிலும் நாங்கள் இயற்கையின் இசையைக் கேட்டோம். வார்த்தையின் உள நெகிழ்ச்சி வேறுபாட்டுக்கு மிக முக்கியமான ஊற்றுக் கண்ணாகவும், ராகத்தின் அழகைப் புரிந்து கொள்வதற்கு, அனுபவிப்பதற்குத் திறவுகோலாகவும் இது விளங்குகிறது. இயற்கையின் இசைக்குச் செவி மடுக்கும் போது குழுப்பாடல் பாடுவதற்குக் குழந்தைகள் உளநெகிழ்ச்சி பூர்வமாகத் தயராயினர். நாங்கள் பாடப் போகிற பாடலுக்குப் பொருத்தமான இசையை இயற்கையில் குழந்தைகள் வேறுபடுத்திப் பார்க்க வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன்.

பள்ளிக்கு அருகில் அழகு மிக்க இடம் ஒன்று இருந்தது. இங்கு ஏரியின் கண்ணாடி போன்ற மேற்பரப்பில் மாலைநேர வானம் பிரதிபலிக்கிறது. புல்வெளியிலிருந்து பறவைகள் பாடுவது கேட்கிறது. மாலைநேரக் குளுமையை மணிக்குரல் பாடல்களால் சந்திக்கின்றன வெட்டுக்கிளிகள். உக்ரேனிய இசையமைப்பாளர் யா. ஸ்தெபோவயின் ''எனது அந்திப் பொழுது'' எனும் பாடலை கற்றுக் கொள்வதற்கு முன்னால் இயற்கையின் இசையை இங்கு பலமுறை கேட்டோம். சூரிய மறைவின் அழகு இந்தப் பாடலில் பிரமாதமாக வெளியிடப்படுகிறது. அமைதியான கோடைகால மாலைநேரத்தில், மயக்குகிற இசையைக் குழந்தைகள் இராகத்தில் புரிந்து கொண்டனர். இதே இடத்தில் இந்த இசையை நாங்கள் கற்றுக் கொண்டோம். குழந்தைகள் பாட விரும்பினர். பின்னர் சில வாரங்கள் கழித்து, இசை, பாடல், மக்களின் வாத்திய சங்கீதம் ஆகியவற்றைக் கேட்பதற்காக இந்தப் பாடலை இசைத்தனர் குழந்தைகள். சூரிய மறைவின் அழகைப் பற்றிய நினைவுகளைக் குழந்தைகளிடம் பாடல் தூண்டி விட்டது. அவர்களது முகங்கள் மகிழ்ச்சியால் ஒளிர்ந்தன.

வெய்யில் மிகுந்த நடுப்பகல் இசையை காட்டில் நாங்கள் கேட்டோம். உயர்ந்து வளர்ந்த மரங்களில் அமைதியாகச் சலசலக்கின்றன இலைகள். மரங்கொத்தி எதையோ கொத்திக் கொண்டிருக்கிறது, எங்கோ மலைப் புறு அனத்துகிறது, குயில் ஒன்று கூவுகிறது. இந்த இசை வீசுகிற உணர்ச்சிகள், ருஷ்ய இசையமைப்பாளரான அ. அரேன்ஸ்கியின் ''குயில்'' எனும் பாடலின் அழகைக் குழந்தைகள் முன்னே திறந்து கொட்டின.

மோட்சார்டின் ''தாலாட்டுப் பாடல்'', செக்கோஸ்லவாகிய மக்கள் பாடலான ''வால்பறவை'', பி. சய்கோவ்ஸ்கியின் ''குழந்தைப் பாட்டு'', நி. ஷ்பெய்யெரின் ''வருகிறது கொம்பு கொண்ட ஆடு'', தி. வசீலியெவ்-புக்லாயின் ''இலையுதிர் காலப் பாடல்'', போலந்துப் பாடலான ''பறவைகளின் பாட்டு'', நி. லீசென்கோவின் ''நரிப் பாடல்'', மி. யோர்தான்ஸ்கியின் ''கொக்குப் பாட்டு'', மி. வெரிகோவ்ஸ்கியின் ''வலோத்யா உல்யானவின் உருவம்'', பயனீர்ப் பாடலான ''பறையடிப்போன்'', வி. ரஸ்தேஸ்த்வென்ஸ்கியின் ''லெனின் பாடல்'', அ. பிலிப்பென்கோவின் ''தாய் நாட்டுப் பாடல்'' ஆகிய பாடல்களை பெரு விருப்புடன் குழந்தைகள் சேர்ந்து பாடினர். வழக்கமாக நாங்கள் பக்க வாத்தியம் இன்றிப் பாடினோம். எல்லோருமே பாட விரும்புகிறார்கள் என்பது எனக்கு மகிழ்ச்சி தந்தது. வ. துறுயெவ்ஸ்கியின் ''பறந்து செல்லுங்கள் புறுக்களே, பறந்து செல்லுங்கள்'', வோ. மோட்சார்டின் ''தாலாட்டுப் பாடல்'', ஓ. சாந்த்லெரின் ''தாயார் பற்றிய பாட்டு'', ருஷ்ய மக்கள் பாடல்களான ''இளம் பெண் காட்டு வழியே நடந்து சென்றாள்'', ''ஓ, அகன்ற தெருவே'', ''தோட்டம்'', பெலருஷ்ய நாட்டுப் பாடலான ''பறந்து சென்றன இரண்டு புறுக்கள்'', செக்கோஸ்லவாகிய மக்கள் பாடலான ''இடையன்'', அ. தெஷ்கினின் ''நீல நிற இரவுகளே அடுப்புகளை ஊதுங்கள்'', அ. ஷ்தோகரென்காவின் ''படைவரிசை போகிறது'', மி. கிராசெவின் ''லெனின் பாட்டு'', கி. கிஷ்கோவின்

''தாய் நாட்டை நேசிக்கிறோம்'', க. பகுஸ்லாவ்ஸ்கி யின் ''எல்லைக் காவலர் பற்றிய பாட்டு'' ஆகிய பாடல் களைக் குழந்தைகள் மிகவும் விரும்பினர்.

பாட்டுப் பாடுவதற்காக எல்லோரும் ஓரிடத்தில் ஒன்று சேர வேண்டிய அவசியம் குழந்தைகளிடம் தோன் றியது. அவர்களது ஆன்மிக வாழ்வுக்குள் புகுந்தது பாட்டு. இது அவர்களது சிந்தனைகளுக்கு பிரகாசமான உளநெகிழ்ச்சி வண்ணங்களைத் தீட்டிற்று, தாய்நாட்டின் மீதும் சுற்றியுள்ள உலகத்தின் மீதும் பாச உணர்ச்சி யைத் தூண்டி விட்டது.

உக்ரேனிய மக்கள் பாடலான ''கோதுமை அறுவடை செய்கிறார்கள்'', குழந்தைகளிடம் பெரிய மனவெழுச்சி யை ஏற்படுத்தியது. நமது மக்களின் மிகப் பழைய கடந்த காலத்தைப் பற்றியும், ஆக்கிரமிப்பாளர்களுக்கு எதிராக அவர்கள் நடத்திய போராட்டம் பற்றியும் பிர காசமான மனத் தோற்றங்களை இப்பாடல் ஏற்படுத்தியது. தாய்நாட்டின் சுதந்திரத்துக்காக நடந்த போராட்டத் தின் கடுமையான சூழலை இசை ராகம் குழந்தைகளுக்குக் கொண்டு வந்து தந்தது. பல நூற்றுக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்த நமது பண்டைய மூதாதை யர், உலகத்தை எவ்வாறு பார்த்தனரோ, அவ்வாறே குழந்தைகளும் பார்த்தனர். விவசாயிகள் கோதுமைப் பயிர் அறுவடை செய்கிறார்கள். பெண்களும் ஆண்களும் அவ்வப்போது தொடுவானத்தைப் பார்க்கிறார்கள். அங் கிருந்து எந்த நிமிடமும் எதிரி வந்து விடலாம். அப் போது அரிவாளுக்குப் பதிலாக கத்தியைத் தூக்க வேண் டும். அதோ அங்கே, கதிர்க் கட்டுக்களுக்குக் கீழே நிழலில் படுத்திருக்கும் சிறு குழந்தைகளையும் பிறந்த வீட்டையும் பாதுகாக்க வேண்டும். மயக்குகிற ராகத் துடன் வருகிற பாட்டுத்தான் குழந்தைகளின் உணர்வுக் கும் இதயத்துக்கும் இந்தச் சித்திரங்களை எடுத்துச் சொல்ல முடியும். மக்கள் மனத்தின் அழகை பாடல் மட்டுமே வெளிக் கொணர முடியும். மக்களின் லட்சியங் களையும் நாட்டங்களையும் குழந்தைக்கு முன்னால் திறந்து

காட்டும் பிரம்மாண்டமான வளர்ப்புச் சக்தியாக இசையும் பாடல்களின் வார்த்தைகளும் விளங்குகின்றன.

மென்மை, உளநெகிழ்ச்சி இயல்பு ஆகியவற்றைக் கொண்ட மனிதப் பண்பு என்ற ஒன்று இருக்கிறது. சுற்றியுள்ள உலகம் அனுபவ உணர்ச்சித் திறனைக் கூர்மைப் படுத்துகிறது என்பதில் இந்தப் பண்பு வெளிப்படுகிறது. மற்றொரு மனிதனின் வேதனை, துன்பம், வருத்தம் ஆகியவற்றை மென்மையான, உளநெகிழ்ச்சி இயல்பு கொண்ட மனிதனால் மறக்க முடியாது. அந்த மனிதனுக்கு உதவி செய்ய ஓடி வருமாறு இவனது மனச்சாட்சி வற்புறுத்துகிறது. இந்தப் பண்பினை இசையும் பாடலும் பயிற்றுவிக்கின்றன.

ஒழுக்க பூர்வமாயும் அழகியல் உணர்ச்சியுடனும் பயிற்றுவிக்கப்பட்ட மனிதனுக்கே உரிய இயல்பின் உளநெகிழ்ச்சித் தன்மையானது நல்ல வார்த்தை, அறிவுரை, ஆலோசனை, புத்திமதி ஆகியவற்றை ஏற்றுக் கொள்வதாக இதயம் மாறுவதில்தான் வெளிப்படுகிறது. வார்த்தை வாழ்வதற்குக் கற்றுத் தர வேண்டும் என்றால், உங்கள் மாணவர்கள் நல்லதையே நாட வேண்டும் என்றால், இளம் இதயத்தில் மென்மையையும் உளநெகிழ்ச்சி நுண்ணுணர்வையும் நீங்கள் பயிற்றுவிக்க வேண்டும். இளம் இதயத்தின் மீது செல்வாக்குச் செலுத்துகின்ற பலப்பல சாதனங்களில் முக்கியமான ஒன்று இசை ஆகும். இசையும் ஒழுக்கமும்—ஆழமான பயிற்சியையும் ஆராய்ச்சியையும் எதிர்பார்க்கிற ஒரு விஷயமாகும்.

உலகத்தைக் கவிதா பூர்வமாகப் பார்க்கச் செய்கிறது பாடல். ஆழமான உணர்ச்சிகளை மக்கள் வெளியிடுகிற ஒரு பாடலைப் பாடிய பின் ஒருநாள் நாங்கள் ஸ்டெப்பிக்குச் சென்றோம். எங்கள் முன்னே எல்லையற்ற கடலாக கோதுமை வயல் பரந்து கிடந்தது, தொடுவானத்தில் உயர் குன்றுகள் ஊதா நிறமாகத் தெரிந்தன, மஞ்சள் நிற வயல்களுக்கிடையே மெல்லிய நாடா போல் வளைந்து வளைந்து சென்றது சாலை. நீலவானில் வானம் பாடி பாடியது. நின்று விட்டார்கள் குழந்தைகள். பிறந்த

மண்ணின் இந்த இடத்தை இப்போதுதான் அவர்கள் பார்த்தது போலத் தோன்றியது "இது கதிரறுக்கும் விவசாயிகள் பற்றிய பாடல் போல இருக்கிறது" என்ருள் நுண்ணுணர்வும் மனப்பதிவும் கொண்ட வார்யா. பிறந்த மண்ணின் அழகை இந்தப் பாடல் கண்களுக்கு முன்ஞல் திறந்து விட்டது. இந்த அழகு இன்னும் நெருக்க மானதாகவும், மேலும் அன்புக்குரியதாகவும் ஆயிற்று.

மக்களின் மதிப்பற்ற ஆன்மிக வளமாக வார்த்தையை வெளிக் கொணருகிறது பாடல். பாடலின் உதவியால் வார்த்தை ஒலியின் வன்மையைக் கிரகித்துக் கொள்கிருர்கள் குழந்தைகள்.

லேவ் தல்ஸ்தோய், அ. செகோவ், ம. கார்க்கி, வ. கரலென்கோ, கய்தார், க. சுகோவ்ஸ்கி, கெ. சென்கேவிச், ஜேக் லண்டன் ஆகியோரின் கதைகளையும், அ. புஷ்கின், த. ஷெவ்ச்சென்கோ ஆகியோரின் கவிதைகளையும், ஹா. அன்டெர்சன், கிரிம் சகோதரர்கள் முதலியோரின் கற்பனைக் கதைகளையும் படிப்பது எனக்கு எவ்வளவு அத்தியாவசியமாக இருந்ததோ, அதே போன்று அத்தியாவசியமாகக் கேட்க வேண்டியதாக இருந்த வாத்திய இசைப் படைப்புக்கள் பதிந்த இசைத் தட்டுக்கள், ஆரம்பத்தில் எங்களிடம் குறைவாகவே இருந்தன. இசைக்குச் செவி மடுக்காமல், குழந்தைப் பருவத்திலேயே விருப்பமான ராகங்கள் இல்லாமல் கல்விப் பயிற்சியை என்ஞல் நினைத்தும் பார்க்க முடியவில்லை. எங்கள் "மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடம்" தொடங்கும் போது பல இசை நாடாக்களையும் இசைத் தட்டுக்களையும் போதனைக் குழு சேகரித்தது. இதனை ஒரு பெரும் பொக்கிஷம் என்று நாங்கள் கருதினேம். மனித இனத்தின் ஆன்மிக வளத்தை முழுமையாகக் குழந்தைகளுக்கு எடுத்துக்காட்டவில்லை என்பது எங்களை மிகவும் வருத்தியது. மாணவர்களின் முதலாண்டுப் பயிற்சி முடியும் போது எங்களிடம் 27 இசைப் படைப்புக்கள் இருந்தன. இவை 7 பாடல்களும், 20 வாத்திய இசைகளும் ஆகும். இசைக்குச் செவி மடுப்பதற்கென்றே வாரம்

இரண்டு முறை இசை அறைக்கு நாங்கள் வருவோம். சில ராகங்களும் பாடல்களும் குழந்தைகளுக்கு ஏற்றெனவே தெரிந்தவை. ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக் கூடத்திலேயே'' இவை அவர்களது ஆன்மிக வாழ்வுக்குள் நுழைந்து விட்டன. சய்கோவ்ஸ்கியின் ''வானம் பாடிப் பாட்டு'', ''வெண்மலர்'', வோ. மோட்சார்டின் ''தாலாட்டுப் பாடல்'', ரா. ஷுமானின் ''துணிவு மிக்க குதிரை வீரன்'', எ. கிரீகின் ''மலையரசனின் குகையில்'', நரிப்பாடல், ஆட்டுக்குட்டிப் பாடல், ஓநாய்க் குட்டியின் பாடல்'' லீசென்கோவின் குழந்தை ஆபரா வான ''ஆட்டு வீரனில்'' வரும் உக்ரேனியப் பாடலான ''வானத்தில் பார்க்கிறேன்'' ''வானத்தைப் பார்க்கிறேன்'', ''பரந்த ஆறு முனகுகிறது, கர்ஜிக்கிறது'', ''மறைகிறது சூரியன், இருள்கின்றன மழைகள்''. ஆகியவற்றை எல்லாம் குழந்தைகள் பலமுறை கேட்டிருக்கின்றனர்.

குழந்தைகளுடன் நான்காண்டு காலம் ஆற்றிய பணியின் போது இசைத் தட்டுகளின் தொகுப்பு சுமார் இரண்டு மடங்கு அதிகரித்தது. இது குறைவுதான். ஆனால், நான் அளவுக்காகப் பாடுபடவில்லை. மனித இனத்தின் இசைப் பொக்கிஷங்களில் (முதற்கண் உக்ரேனிய, ருஷ்யப் பொக்கிஷங்கள்) மிகச் சிறப்பானவை எல்லாம் குழந்தைகளின் ஆன்மிக வாழ்வுக்குள் நுழைந்துவிட வேண்டும், ஒரே இசையைப் பலமுறை கேட்பது அழகியல் ஆனந்தத்தை அளிக்க வேண்டும், சிந்தனை, உள நெகிழ்ச்சி வாழ்க்கை ஆகியவற்றில் அது முத்திரை பதிக்க வேண்டும் என்பதற்காகவே நான் பாடுபட்டேன்.

ஒரு மாதத்தில் குழந்தை ஒரேயொரு புதிய ராகத்தைக் கேட்கட்டும். ஆனால், அது வாழ்க்கை முழுதுக்கும் ஆன்மிக ஆனந்தத்திற்கு ஊற்றுக்கண்ணாக மாறும். இதயத்தில் எந்தவிதமான சுவட்டையும் விட்டுச் செல்லாத, வெறும் பொழுது போக்காக இருக்கக் கூடிய புதிய புதிய இசைப் படைப்புக்கள் திகட்டலை ஏற்படுத்தி விடுமோ என்று நான் பயந்தேன்.

மேலே குறிப்பிடப்பட்டவற்றைத் தவிர, நான்காண்டு காலத்தில் எனது குழந்தைகள் பின்கண்ட இசைப் படைப்புக்களையும் கேட்டனர்: மி. கிலீன்காவின் ''ருஸ்லானும் லூத்மிலாவும்'' எனும் ஆபராவில் வரும் ''சொர்னமோர் அணிவகுப்பு'', ஷா. கூனோவின் ''பாவுஸ்டு'' எனும் ஆபராவில் வரும் அணிவகுப்பு இசை, எ. கிரீகின் ''நார்வே நடனம்'', ''கோபோல்ட்'', ''செல்கூன்சிக்'' எனும் பாலே நடனத்தில் வரும் ''பசுமையடைகிறது புல்'', ''இடையர்கள் நடனம்'' ''திராசேயின் நடனம்'', ஆகியவை ''மரச் சிப்பாய்களின் அணிவகுப்பு'', ''பண்டைய பிரெஞ்சுப் பாடல்'', ''பொம்மையின் நோய்'', ''இத்தாலியப் பாடல்'', ''குழந்தைப் பாடல்'', ''கமாரின்ஸ்கயா'', பி. சய்கோவ்ஸ்கியின் ''அன்னத் தடாகம்'' நி. ரீம்ஸ்கி-கர்சாகவின் ''பெருந்தேனி பறக்கிறது'', அவரது ஆபராவில் வரும் ''சுல்தான் அரசன் பற்றிய கதை'', ரா. ஷுமானின் ''மகிழ்ச்சி கொண்ட விவசாயி'', எ. கிரீகின் ''எல்ஃபோக்கள் நடனம்'', பி. ஷுபெர்டின் ''ஏகோசேசி'', வ. துனயெவ்ஸ்கியின் ''பறந்து வந்தன மைனாக்கள்'', க. ஸ்தெத்ஸேன்கோவின் ''நரிக்குட்டி, பூனைக்குட்டி, சேவல் குஞ்சு'' எனும் ஆபராவில் ஒரு பகுதி, நி. லீசென்கோவின் ''பனிக்காலமும் வசந்த காலமும்'' எனும் ஆபராவில் ஒரு பகுதி, பெத்தோவனின் ''பபாக்'', ''குயில்'' எனும் ஸ்விட்சர்லாந்துப் பாடல், போலந்துப் பாடலான ''பறவைகளின் பாட்டு'', உக்ரேனியப் பாடல்களான ''அண்டை வீட்டுக்காரி'', ''மலையின் மீது சணல்'', ''நிற்கிறது உயர்ந்த ஒரு மலை'', ''காற்றே உக்ரேனியா மீது நீ வீசு'', ஹங்கேரிய நாட்டுப்பாடலான ''குயில்'', ருஷ்ய நாட்டுப பாடலான ''வயலில் நிற்கிறது பிர்ச் மரம்'', கவலேவ்ஸ்கியின் ''பயனீர்க் கண்ணி'', அ. அஸ்திரோவ்ஸ்கியின் ''பயனீர்'', வி. முரதேலியின் ''பயனீர் முகாம் அடுப்பு'', ''தோழர்களே துணிவுடன் நடவுங்கள்'' (கி. லொபசேவ் செம்மைப் படுத்திய பழைய புரட்சிப்

பாடல்), ''அடிமைத் தனத்தின் சித்திரவதை'' (லெனி னுக்கு விருப்பமான பாடல்).

இசையைக் கேட்பதற்கு முன்னால், இசைச் சித்திரங் களில் பிரதிபலிக்கப்படும் எதார்த்த உண்மையையோ, கற்பனைக் காட்சிகளையோ பற்றி நான் எடுத்துச் சொல் வேன். இவ்வாறு கதை சொல்வதற்குப் பெரும் முக் கியத்தும் அளிக்கப்படுகிறது; இசையைக் கிரகித்துக் கொள்வதற்குக் குழந்தைகளை இது பக்குவப் படுத்தியது. உதாரணமாக ''திராசே நடனம்'' எனும் இசையைக் கேட்பதற்கு முன்னால், இந்தக் கதைக்கு அடித்தளமாக இருந்த எ. கோப்மனின் பண்டைய கட்டுக் கதையை நான் குழந்தைகளுக்குச் சொன்னேன். இலேசான, காற்றுப் போன்ற, ஒய்யாரமான அன்புக்குரிய ஃபெயின் உருவத்தை தெளிவான பிரகாசமான வார்த்தைகளால் குழந்தைகளின் மனத்தோற்றத்தில் படைப்பதற்கு நான் முயன்றேன். ''படிக மணிகளின் ஓசையை இப்போது நீங்கள் கேட்கிறீர்கள். அழகான ஃபெயினைச் சுற்றியுள்ள சூழலை இந்த இசை சித்திரமாக வரைகிறது. பிரகாச ஒளி வெள்ளம் பாயும் அற்புத மாளிகையின் இலே சான, ஒய்யாரமான தூண்களை கற்பனை செய்கிறேன்'' என்று நான் குழந்தைகளிடம் சொல்கிறேன். இசைக்குச் செவி மடுக்கிறார்கள் குழந்தைகள். பின்னர் ஃபெயினின் மாளிகையை அவர்கள் மனக் கண்ணால் எப்படிப் பார்க் கிறார்கள் என்று குழந்தைகள் சொல்கிறார்கள். குளங் கள், நீரூற்றுக்கள், நிழலடர்ந்த சோலைகள், புதிரான குகைகள் ஆகியவற்றைச் சித்திரம் தீட்டியது கற்பனை. கற்பனாலங்காரச் சித்திரங்கள் இன்னொரு முறை இசை யைக் கேட்க வேண்டும் எனும் விருப்பத்தைத் தூண்டி விட்டன.

இசைப் படைப்புக்களைப் பற்றி விளக்குவதற்கு, குறிப் பாக குழந்தைகளுக்குத் தெரியாத இசையைப் பற்றிப் பேசுவதற்கு சிறந்த நயப்பாங்கும் உயர்ந்த போதனைக் கலாச்சாரமும் வேண்டும். இசையின் மொழி என்பது உணர்ச்சிகளின் மொழியே என்பதை ஒருபோதும் மறந்து

விடக் கூடாது. அப்பாவித் தனமான எளிய வார்த்தை களைக் கொண்ட நாட்டுப்புறப் பாடலும் கூட, இராகத் தின் காரணமாக மட்டுமே ஒரு கலைப் படைப்பாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இசைப் படைப்பினது கலை உருவத்தின் சாரத்தைப் பற்றி விளக்குவதற்கு, இசை யமைப்பாளர் கையாளும் கலா முறைகளின் விசேஷத் தன்மையை ஆசிரியர் புரிந்து கொள்ள வேண்டும். ஆசிரி யரிடமிருந்து குழந்தை கேட்கிற ஒரு தனி வகையான, முழுமையான, கலா பூர்வமான கதையாக இந்த விளக் கம் இருக்க வேண்டும். இந்தக் கதையே உணர்ச்சிகளைத் தட்டியெழுப்பி, அனுபவ உணர்ச்சிகளைத் தோற்றுவித்து, மனக்கண்ணில் பிரகாசமான காட்சிகளை உருவாக்க வேண் டும்.

இசையின் அழகு சக்தி வாய்ந்த சிந்தனை ஊற்றுக் கண் என்று ஆழமான உறுதி கொண்டுள்ளேன் நான். இசை இராகத்தின் செல்வாக்கினால் குழந்தையின் மனத் தோற்றத்தில் உருவாகிற பிரகாசமான காட்சிகள் சிந்தனைக்கு உயிரூட்டுகின்றன, இச்சிந்தனையின் எண் ணிறைந்த கிளை ஆறுகளை ஒரு பெரு நதிக்குள் திருப்பி விடு கின்றன. குழந்தைகளின் கற்பனை தோற்றுவிக்கிற, அவர் கள் உணருகிற விஷயங்களை வார்த்தைகளில் தீட்டு வதற்குக் குழந்தைகள் முயல்கிறார்கள். மெதுவான அறிவு வளர்ச்சி உள்ள குழந்தைகளுக்கு, உண்மையிலேயே சக்தி வாய்ந்த சிந்தனை ஊற்றுக்கண்ணாக இசையைக் கேட்பது விளங்குகிறது. இசை ஒன்றைக் கேட்ட பின்னே, தமது மனப்பதிவுகளைக் குழந்தைகள் தாமாகவே வெளியிட வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன்.

இசை அறையில் நாங்கள் புல்லாங்குழல் ஊதினோம். விருப்பமான இராகங்களைக் கற்று வந்தோம். இரண் டாம் வகுப்பில் குழல் வாசிக்கும் எங்கள் குழுவில் ஒன்பது மாணவர்களும், மற்ற வகுப்புகளிலிருந்து நான்கு மாண வர்களும் இருந்தனர். குழந்தைகள் இசைக் கருவிகளைத் தாமே செய்தனர். புல்லாங் குழல் செய்வதில் உண்மை யிலேயே நிபுணர்களாக செர்யோஷா, யூரா, தீனா, லீதா

ஆகியோர் விளங்கினர். அவர்கள் சோலைக்குப் போய்த் தமக்கு வேண்டிய பொருள்களைப் பொறுக்கி எடுத்த னர், வெட்டிய மரக்கிளைகளை நிழலில் காய வைத்தனர், இசையொலி சுத்தமாக இருக்கும் பொருட்டு இசைக் கருவி எழுப்பும் ஓசையைப் பரிசோதித்தனர். 2 அக்கார் டியன்களும் 3 பிடில்களும் மூன்றும் வகுப்பில் எங்களிடம் இருந்தன. யூரா, செர்யோஷா, ஃபேத்யா, லீதா, கோல் யா, தீனு, லரீசா, சான்யா, ஷூரா ஆகியோர் அக்கார் டியனும், பிடிலும் வாசிக்கக் கற்றுக் கொண்டனர். தொடக்கப் பள்ளியில் கல்விப் பயிற்சி முடியும் போது, 19 குழந்தைகளின் வீடுகளில் இசைக் கருவிகள்—அக் கார்டியன், பிடில் இருந்தன. புல்லாங்குழலையும் குழந் தைகள் மறந்துவிடவில்லை. சில குழந்தைகளிடம் இசை ஆர்வம் வெளிப்பட்டது. தனித் திறமைகளை வளர்ப் பதே பிரதான குறிக்கோள் என்று நான் நினைக்கவில்லை. குழந்தைகள் அனைவரும் இசையை விரும்புமாறும் அனை வருக்கும் அது ஆன்மிகத் தேவையாக விளங்குமாறும் செய்வதே பிரதான குறிக்கோள் என்று நான் கருதி னேன்.

குழந்தைப் பருவத்தில் தவற விட்டுவிட்ட ஒன்றை இளமைக் காலத்திலோ, குறிப்பாக முதிர்ந்த காலத் திலோ ஒருபோதும் நிலைநாட்ட முடியாது. குழந்தை யினது ஆன்மிக வாழ்வின் எல்லாப் பகுதிகளுடனும், குறிப்பாக அழகியல் பயிற்சித் துறையுடன் இது சம் பந்தம் கொண்டது. நுண்ணுணர்வும், அழகைக் கிரகித்துக் கொள்வதும் ஒருவரிடம் வளர்ச்சியுற்ற காலத்தில் இருப்பதை விட, குழந்தைப் பருவத்தில் மிக ஆழமாக இருக்கும். அழகில் ஒரு தேவையைப் பயிற்றுவிப்பது தான் தொடக்கப்பள்ளி ஆசிரியரின் ஒரு பிரதான பணி யாகும். இத்தேவை குழந்தையினது ஆன்மிக வாழ்வின் முழு அமைப்பையும், அவன் குழுவுடன் கொள்கிற பரஸ் பர உறவையும் நிர்ணயிக்கிறது. அழகுத் தேவை, ஒழுக் கத்தில் ஓர் அழகை நிலைநாட்டுகிறது. கீழ்மையையும், அவலட்சணத்தையும் சகித்துக் கொள்ளாத, அவற்றுடன்

சமரசம் செய்து கொள்ளாத பண்பை இது தோற்றுவிக்கிறது.

புகழ்பெற்ற சிந்தனையாளர் கிரிகோரி ஸ்கவரதா (1722—1794) கூறியது என்று சொல்லப்படும் பண்டைய மூதுரை, ''கையில் பிடில் வைத்திருக்கிற மனிதன், மோசமான எதையும் செய்யும் திறனற்றவன்'' என்று பிரகடனப் படுத்துகிறது. கொடுமையும் உண்மையான அழகும் ஒன்று சேராது. உருவகமாகச் சொன்னால், ஒவ்வொரு குழந்தையின் கையிலும் ஒரு பிடில் தர வேண்டும், இசை எவ்வாறு தோன்றுகிறது என்று ஒவ்வொரு குழந்தையும் உணர வேண்டும்—இவ்வாறு செய்வது கல்விப் பயிற்சியின் ஒரு முக்கிய குறிக்கோளாகும். இசையைப் பதிவு செய்வதற்கும், இசை எங்கும் பரவுவதற்கும் வகை செய்கிற சாதனங்கள் பெருமளவுக்கு வளர்ந்துள்ள நமது காலத்தில் இந்தப் பயிற்சிப் பணி விசேஷ அர்த்தம் கொண்டதாகிறது. அழகைப் பருகுகிற தலைமுறையாக மட்டும் இளைய தலைமுறை மாறிவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இந்தப் பிரச்சினை அழகியல் சம்பந்தப்பட்டது மட்டுமல்ல, ஒழுக்கப் பயிற்சி சம்பந்தப்பட்டதும் ஆகும்.

## குழந்தையின் ஆன்மிக வாழ்வில் புத்தகம் வகிக்கும் பங்கு

குழந்தைக்கு நன்றாகப் படிக்கத் தெரிந்த போது மட்டுமின்றி, பொதுவாகவே குழந்தைகளின் ஆன்மிக வாழ்வில் புத்தகம் பெரும் பங்கு வகிக்கிறது. ''நன்றாகப் படிப்பது'' என்றால் என்ன? இது முதற்கண், மிக எளிய ஒரு திறமையான படிக்கிற முறையைத் தெரிந்திருப்பது ஆகும். சொந்தமாகப் படிப்பது குழந்தையின் ஓர் ஆன்மிகத் தேவை ஆகிவிட வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். முதல் வகுப்பிலும் இரண்டாம் வகுப்பிலும் முதல், இரண்டாம் வாரங்களில் நூலகத்திலிருந்து மாணவன் புத்தகம் எடுத்தான், அதனை வாய்

விட்டுப் படித்து வந்தான். இதில்லாமல், வேகமாகப் படிக்கிற, படித்ததைப் புரிந்து கொள்கிற உறுதியான, சீரான திறமையை உருவாக்கிக் கொள்ள முடியாது.

இரண்டாம் வகுப்பிலேயே ஒவ்வொரு குழந்தையிடமும் பதிவு செய்யப்பட்ட புத்தகம்—''வார்த்தைப் பெட்டி'' இருந்தது. சுவாரஸ்யமான வார்த்தைகளை அல்லது புரியாத வார்த்தைகளை இதில் அவர்கள் எழுதி வந்தனர். (வார்த்தையின் அர்த்தத்தை அல்லது உள நெகிழ்ச்சி வேறுபாட்டை நான் பின்னர் எடுத்துச் சொன்னேன்). 3,4ஆம் வகுப்புகளில் தனித்தனி வார்த்தைகளைத் தவிர, மாணவனுக்குப் பிடித்த சொற்றொடர்களையும், வாக்கியப் பகுதிகளையும் வாக்கியங்களையும் இந்த ''வார்த்தைப் பெட்டியில்'' எழுதி வந்தனர்.

ஆன்மிகச் செழுமைக்கு ஊற்றுக்கண்ணாக விளங்குகிற படித்தல் என்பது பார்த்துப் படிக்கிற திறமை மட்டுமல்ல. இந்தத் திறமையில் அது தொடங்க மட்டுமே செய்கிறது. வேகமாகவும் தவறில்லாமலும் குழந்தை படிக்கலாம். ஆனால், அறிவாற்றல், ஒழுக்கம், அழகியல் ஆகியவற்றின் வளர்ச்சியின் உச்சிக்கு இட்டுச் செல்லும் வழியாக இது விளங்காமல் போய் விடலாம். இவ்வாறு அடிக்கடி நடக்கிறது. வார்த்தையின் அர்த்தத்தையும், அழகையும் அதன் நுண்ணிய வேறுபாட்டையும் மென்மையாக உணர்ந்து கொள்வதே படிக்கிற திறமை என்பதற்குப் பொருளாகும். எந்த மாணவனின் உணர்வில் வார்த்தை விளையாடுகிறதோ, படபடக்கிறதோ, சுற்றியுள்ள உலகத்து வண்ணங்களாகவும் இராகங்களாகவும் பாய்கிறதோ அந்த மாணவன்தான் ''படிக்கிறான்''. உலகத்தையும் தன்னைத் தானேயும் குழந்தை பார்த்துக் கொள்கிற சாளரமே படித்தல் ஆகும். படிக்கின்ற பொழுதே, புத்தகத்தைத் திறப்பதற்கு முன்னரே கூட உழைப்பு, விளையாட்டு, இயற்கைத் தொடர்பு, இசை, படைப்பு ஆகியவற்றைக் கொண்ட குழந்தைகளது ஆன்மிக வாழ்வின்,தீவிர நடவடிக்கையின் எல்லாத் துறைகளையும் எட்டிப் பிடிக்கிற வார்த்தையை குழந்தை விடா

முயற்சியுடன் ஆராயத் தொடங்கும் போதுதான் இந்தச் சாளரம் திறக்கும். அழகைப் படைக்கும் ஆக்க பூர்வ உழைப்பு இல்லாமல், கட்டுக்கதையும் கற்பனை யும் இல்லாமல், விளையாட்டும் இசையும் இன்றி, குழந் தையின் ஆன்மிக வாழ்வின் ஒரு துறையாக விளங்கு கிறது என்று படித்தலை நினைத்தும் பார்க்க முடியாது. சிந்தனையின் உயிருள்ள ஊற்றுக்கண்ணுக்குப் போகின்ற ''பயணங்கள்'', பேச்சின் அழகை-உணருகின்ற திற மையின் காரணமாகப் புரிகிற வார்த்தையின் உள நெகிழ்ச்சி—அழகியல் வேறுபாடு, புத்தகங்களில் உரு வெடுக்கும் கலைச் செழுமை ஆகியவையே பேச்சு, சிந்தனை ஆகியவற்றின் வளர்ச்சிக்கு அடிப்படையாகும்.

முதல் வார்த்தையைப் படிப்பதற்கு முன்னால் ஆசிரி யர் தாய், தந்தை ஆகியோர் படிப்பதை குழந்தை கேட்க வேண்டும், கலை உருவங்களின் அழகை உணர வேண்டும். இயற்கை உலகுக்குள் போகிற ''பயணங் களை'' புத்தகத்திலிருந்து பிரிக்கப்பட்டவையாக நினைக்கக் கூடாது. புத்தகத்தில் படித்த வார்த்தையின் அழ கைக் குழந்தை உணரவில்லை என்றால் சுற்றியுள்ள உலகத் தின் அழகையும் குழந்தை உணராது. குழந்தையின் இத யத்துக்கும் உணர்வுக்கும் செல்கிற வழி இரண்டு பக் கங்களிலிருந்து செல்கிறது. மேம்போக்காகப் பார்க் கையில் இவை எதிரும் புதிருமான வழிகளாகத் தோன் றும். புத்தகத்திலிருந்து, படிக்கப்பட்ட வார்த்தையிலி ருந்து வாய்ப் பேச்சுக்குப் போகிறது ஒரு வழி. ஆன்மிக வாழ்வுக்குள் ஏற்கெனவே நுழைந்துவிட்ட வார்த்தை யிலிருந்து புத்தகத்தையும் படிப்பதையும், எழுதுவதையும் நோக்கிச் செல்கிறது இன்னொரு வழி. குழந்தை படிக்க வும் எழுதவும் கற்றுக் கொள்வதற்கு அத்தியாவசிய மான தேவை என்னவென்றால் உளநெகிழ்ச்சி—அழகி யல் பூர்வமாக அது தயார் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பதே. இவ்வாறு கற்றுக் கொள்வது மதிப்பெண்கள் பெறுவதற்காக அல்ல. எழுதுவதும் படிப்பதும் ஆன்மிக வாழ்வுக்கு அத்தியாவசியமானவை என்பதற்காகவே

ஆகும். எழுதவும் படிக்கவும் முடியாமல் இருப்பது பல வித மகிழ்ச்சிகளை அவனிடமிருந்து பறித்துவிடும்.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' இருக்கும் போதே எனது குழந்தைகள், சுற்றியுள்ள உலகத்தின் அழகு பற்றிய தமது உணர்ச்சிகளையும் சிந்தனைகளையும் சித்திரங்களிலும் அவற்றுக்குப் பெயரிடுவதிலும் வெளியிட்டார்கள் என்பதுதான் அவர்கள் உளநெகிழ்ச்சி—அழகியல் பூர்வமாக எழுதவும் படிக்கவும் தயார் செய்யப் பட்டதன் விளைவு ஆகும். இயற்கைக்குப் ''பயணங்கள்'' போவதே எங்கள் பயிற்சி முறையின் நோக்கம் அல்ல. வார்த்தையின் மூலம் குழந்தையின் அறிவாற்றலை வளர்க்கிற சாதனமே இது. வார்த்தையோ அறிவுப் பயிற்சியோ, மிக முக்கியமான படைப்புக் குறிக்கோளான குழந்தைக்கு யோசிக்கக் கற்றுத் தருவதே, பொருள்கள், வஸ்துக்கள், தோற்றங்கள் ஆகியவற்றுக்கு இடையே காணப்படும் பரஸ்பரச் செயலைக் காண்பதே, பொதுமைப் படுத்துவதே, இயற்கையிலிருந்தும், காட்சி உருவங்களிலிருந்தும் மனத்தோற்றங்களிலிருந்தும் சூட்சுமப் படுத்துவதே. இல்லையென்றால் இயற்கையின் அழகையும், வண்ணங்கள் ஒலிகள் ஆகியவற்றின் விளையாட்டையும் குழந்தைகள் அலட்சியப்படுத்துவார்கள்.

முதல் வகுப்பிலேயே குழந்தையின் ஓர் ஆன்மிகத் தேவையாக படித்தல் விளங்க வேண்டும் என்பதற்காகவும், வார்த்தையை வேகமாகக் கிரகித்துக் கொள்ளவும் உச்சரிக்கவும் வேண்டும் என்கிற நோக்கம் கொண்ட பயிற்சிகளாகப் படித்தல் விளங்கக் கூடாது என்பதற்காகவும் நான் பாடுபட்டேன். அறிவாற்றல், உளநெகிழச்சி, அழகியல் ஆகியவற்றின் வளர்ச்சிக்கு இணையான, அதே நேரத்தில் இந்த வளர்ச்சிக்கு மேலும் வழி வகுக்கிற விஷயம் மட்டுமே மாணவனின் ஆன்மிக வாழ்வுக்குள் நுழைய முடியும். எதைப் படிக்க வேண்டும் என்பதைச் சரியானபடி தேர்ந்தெடுப்பதுதான் போதகரின் மிக முக்கியமான பணியாகும். குழந்தைகளுக்கு எட்டுகிற பலப்பல கலைச் செல்வங்கள் படிப்பதற்கான

புத்தகத்தில் துரதிருஷ்டவசமாக இருப்பதில்லை. கல்வி யாண்டு தொடங்கிய மூன்று மாதங்கள் கழித்து, படிப் பதற்கான புத்தகங்களில் இருக்கிற சுவாரஸ்யமான கதை களையும் கற்பனைக் கதைகளையும் நாங்கள் படிக்கத் தொடங்கினோம்.

''உக்ரேனிய, ருஷ்யக் கட்டுக்கதைகள்'' எனும் புத் தகத்தை ஆளுக்கொன்றாகக் குழந்தைகளுக்குக் கொடுக் கிறேன். ''வைக்கோல் காளைக் கன்று'' எனும் உக்ரேனிய நாட்டுப்புறக் கதையைப் படிப்பதற்கு அவர்களைத் தயார் படுத்துகிறேன். கதைக்குச் சித்திரங்கள் வரைந்து காட்டியபடி கதையின் உள்ளடக்கத்தை எடுத்துச் சொல் கிறேன். புத்தகத்தைத் திறக்கிறார்கள் குழந்தைகள். கதை யை ஒரு மாணவன் படிக்கிறான். பின்னர் இரண்டாவது மாணவனும் மூன்றாவது மாணவனும் படிக்கின்றனர். குழந்தைகளுக்குச் சுவாரஸ்யமான விஷயங்களை எத்தனை முறை படித்தாலும் அவர்களுக்கு அது சலித்துப் போவ தில்லை. ஏனெனில், படிப்பது என்பது திரும்பத் திரும்பச் செய்கிற பயிற்சியாக ஒவ்வொரு குழந்தைக்கும் விளங்கு வது இல்லை. பிரகாசமான சித்திரங்களை ஆழமாகவும் சொந்தமாகவும் அக்குழந்தை அனுபவித்து உணர்வதே ஆகும். ஒவ்வொரு குழந்தையும் வார்த்தையில் தனது சொந்தப் புலனறிவைச் செலுத்துகிறது. மிகவும் பதட்டப் படுத்துகிற வார்த்தைகளையும் இராகத்தையும் கொண்ட ஒரே பாடலை எல்லாக் குழந்தைகளும் ஒருவருக்குப் பின்னால் ஒருவராகப் பாடுவதைப் போல படிப்பதை மிகக் கவனமாகக் கேட்கிறார்கள் குழந்தைகள். ஒவ்வொரு வரும் விதவிதமாகப் பாடலாம், அனுபவ உணர்ச்சிகளை யும், புலனறிவுகளையும், மனத்தோற்றங்களையும் அவற் றின் நுண்ணிய வேறுபாட்டுடன் வெளிப்படுத்துகிற தன்மையை ஒவ்வொருவரிடமும் வார்த்தை பெற்றிருக் கலாம். இவ்வாறு படிக்கும் போது ஓர் இசையைப் போல, இராகத்தைப் போல வார்த்தை ஒலிக்கிறது.

உளநெகிழ்ச்சியுடன், தெளிவாகத் தனியாகப் படிப் பதற்குத் தயார் செய்து கொள்வதற்கு வார்த்தையின்

ஊற்றுக்கண்ணுக்குக் குழந்தை பலமுறை விஜயம் செய்ய வேண்டும், வார்த்தையின் அழகை அனுபவிக்க வேண்டும் என்பது குறிப்பாக முக்கியமாகும். இதோ ஒரு வாக்கியத்தை மாணவன் படிக்கிருன்: ''காளைக் கன்று இருண்ட காட்டுக்குப் போயிற்று, கொடிய ஓநாய் அங்கு அதைக் கண்டது'', ''இருண்ட காடு'' என்ற வார்த்தைகள் மறத் தற்கரிய காட்சிகளைக் குழந்தையின் உணர்வில் தொடர்பு படுத்துகிறது: காட்டில் அந்திக் கருக்கல், இனந் தெரி யாத இரவு நேரச் சலசலப்பு, இடிப்புயலுக்கு முன்னுல் இலைகள் எழுப்பும் பீதிக் கூச்சல். இவை எல்லாம் அவன் ஆன்மிக வாழ்வுக்குள் நுழைந்துள்ளன. ''இருண்ட காடு'' என்ற வார்த்தைகள் அவனது செவிக்குள் நுழை யும் போது இவையெல்லாம் பிரகாசமான வண்ணங் களாக விளையாடி, இயற்கையின் இசை நாதமாக வழி கின்றன. உயிருள்ள வார்த்தை, சிந்தனை ஆகியவற்றின் ஊற்றுக் கண்ணுக்குச் செல்கிற வழி மாணவனுக்குத் தெரியவில்லை என்ருல், எப்படிப் படிப்பது, எவ்வாறு உச்சரிப்பது, எந்தத் தொனியில் படிக்க வேண்டும் என் றெல்லாம் ஆசிரியர் எத்தகைய விளக்கங்கள் தந்தா லும், படித்தலில் உளநெகிழ்ச்சிச் செழுமையைக் குழந் தைக்குக் கற்றுத் தர முடியாது.

குழந்தையின் கைகளில் மோசமான புத்தகம் எது வும் சிக்கி விடக் கூடாது என்பதற்காகவும், தேசிய, சமு தாயக் கலாசாரத்தின் தங்கக் களஞ்சியத்தில் இருக் கிற நூல்களின் உலகுக்குள் குழந்தைகள் நுழைய வேண் டும் என்பதற்காகவும், பள்ளி தொடங்கிய முதல் நாளி லிருந்தே நான் பாடுபட்டேன். இது மிக முக்கியமான பணியாகும்: தனது ஆயுள் முழுதிலும் 2000 புத்தகங் களுக்கு மேல் மனிதனுல் படிக்க முடியாது. எனவே, குழந்தைப் பருவத்திலும், ஆரம்ப இளமைக் காலத் திலும் படிப்பதற்கான விஷயங்களை மிகக் கவனமாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். குழந்தை படிப்பது கொஞ்ச மாக இருந்தாலும் பரவாயில்லை. ஒவ்வொரு புத்தக மும் அவன் இதயத்திலும் உணர்விலும் ஆழமான சுவடு

பதித்துச் செல்லட்டும். புதிய புதிய ஆன்மிகச் செல் வங்களைக் கண்டபடி அதனைப் பலமுறை திரும்பத் திரும் பப் படிக்கட்டும். உணர்ச்சியுடன் படிப்பதில் குழந்தை திருப்தியும் ஆனந்தமும் அடைய வேண்டும் என்பது இங்கு மிக முக்கியமாகும். வார்த்தையின் ஒலியிலேயே அதன் சக்தியும் அழகும் வெளிப்படுகிறது. எனவே, கேள்விப் புலனறிவிலிருந்து—உணர்ச்சியுடன் படிப்ப திலிருந்து வார்த்தையின் உளநெகிழ்ச்சி வேறுபாட்டின் அனுபவ உணர்ச்சி ஏற்பட வேண்டும்.

முதல் வகுப்பிலேயே நாங்கள் குழந்தை நூலகம் ஒன்று உருவாக்கினோம். அதில் நான்கு பிரிவுகள் இருந் தன. முதலாவது பிரிவு—கதைகள். ஒழுக்கம், அறிவாற் றல், அழகியல் ஆகியவற்றில் குழந்தைகள் பயிற்சி பெறுவதற்கு இவை மதிப்பு மிக்க செல்வங்களாக விளங்கு கின்றன என்று நான் கருதுகிறேன். (பார்த்துப் படிக் கிற பாடத்தின் போது ஒவ்வொரு சாய்வு மேசைக்கும் ஒரு பிரதி கொடுக்கத் தகுந்த விதத்தில், ஒவ்வொரு புத்தகத்திலும் 15 பிரதிகள் நாங்கள் வாங்கினோம்), இந்தப் பிரிவு தொடக்கப் பள்ளியில் நான்காண்டு காலக் கல்விக்காகத் திட்டமிடப்பட்டது. பிரகாசமான கலைச் சித்திரங்களால் உருவகப் படுத்தப்பட்ட, ஆழமான மனிதநேயக் கருத்துக் கொண்ட கதைகள் இப்பிரிவில் பொறுக்கி வைக்கப்பட்டிருந்தன. இதோ அக்கதைகள்: லேவ் தல்ஸ்தோயின் ''சுறுமீன்'', ''தாண்டல்'', ''காக சஸ் கைதி''; பி. எர்ஷோவின் ''கூனல் குதிரைக் குட்டி''; பி. கத்சுபீன்ஸ்கியின் ''பிர் மரம்''; வி. ஜுக்கோவ்ஸ் கியின் ''உறங்கும் ராணி'', ''சைக்லோப்புகளின் குகை யில் ஒடிசி''; மாமின்-சிபிர்யாக்கின் ''எமேலியா— வேடன்'', ''ஸ்துதோனயாவில் குளிர்காலம்'', ''பணக் காரனும் எரியோம்காவும்'', ''தத்துப் பிள்ளை'', ''சாம் பல் கழுத்து''; ஹா. கி. அன்டெர்சனின் ''ஓரங்குலச் சிறுமி'', ''அவலட்சண வாத்துக் குஞ்சு'', ''ராஜாவின் புத்தாடை''; விக்டர் ஹியூகோவின் ''கோசெட்டா'', ''கவ்ரோஷ்'' (''தாழ்த்தப் பட்டவர்கள்'' எனும் நாவ

லிலிருந்து); கிரிம் சகோதரர்களின் ''கென்செலும் கிரே டெலும்'', ''சோம்பேறி கான்ஸ்'', ''மூன்று அதிருஷ்ட சாலிகள்''; அ. புஷ்கினின் ''சுல்தான் அரசன் பற்றிய கதை'', ''இறந்து போன ராணி பற்றிய கதை'', ''போஸ்ட் மாஸ்டர்'', ''நச்சு மரம்'', ''கைதி'', ''தாதி'', ''பறவைக் குஞ்சு'', ''பனிக்கால மாலை''; யானுஷ் கர்ச்சாக்கின் ''மீண்டும் நான் குழந்தையா னால்...''; வ. கரலென்கோவின் ''நிலவறைக் குழந்தை கள்''; நி. நிக்ராசவின் ''குடியானவக் குழந்தைகள்'', ''யாகவ் மாமா'', ''மசாய் தாத்தாவும் முயல்குட்டி களும்''; இ. துர்கேனவின் ''பெட்டைக் கவுதாரி''; தி. கிரிகரோவிச்சின் ''மரப்பிசின் பையன்''; வா. கார் ஷினின் ''அடையாளம்''; அ. குப்ரினின் ''மைனுக்கள்''; க. ஸ்தன்யூக்கோவிச்சின் ''மக்சீம்கா'', ''தாதி'', ''ஓடிப் போதல்''; அ. செகோவின் ''கஷ்தான்கா'', ''பெலலோ பிய்'', ''வான்கா'', ''ஒடுகாலி'', ''சிறுவர்கள்'', ''பச் சோந்தி''; கெ. சென்கேவிச்சின் ''கலைஞன் யான்கோ''; ஜேக் லண்டனின் ''கீஷ் பற்றிய கதை''; மார்க் ட்வெ யின் ''டாம் சாயரின் துணிகரச் செயல்கள்''; மா. கார்க்கியின் ''பேபே'', ''பார்மா குழந்தைகள்'', ''எவ் செவ்கோவிற்கு நேர்ந்தது'', ''இலீயாவின் குழந்தைப் பருவம்'', ''காலை நேரம்''; அ. கய்தாரின் ''த்சுக்கும் கெக்கும்'', ''தொலைவிலுள்ள நாடுகள்'', ''திமூரும் அவன் குழுவும்''; வ. போன்ச்-புருயேவிச்சின் ''லெனி னும் குழந்தைகளும்''; அ. தெஸ்லேன்கோவின் ''பள் ளிச்சிறுவன்''; பனுஸ் மீர்னியின் ''மரோசென்கோ''; இ. ஃபிரன்கோவின் ''கிரிட்சேவாவும் பள்ளி விஞ்ஞான மும்'', ''பென்சில்''; அ. கொனனேவ் ''லெனின் கதை கள்''; லு. கஸ்மதெம்யான்ஸ்கயாவின் ''ஸோயாவை யும் ஷூராவையும் பற்றிய கதை''; ''பயனீர் வீரர்கள் பற்றிய கதைகள்''; தி. பேத்சிக்கின் ''அலெக் கஷெவோ யின் குழந்தைப் பருவம்''; வ. கதாயெவின் ''படைப் பிரிவின் மகன்''; அ. கலவ்கோவின் ''பிலிப்கோ'', ''சிவப்புத் துண்டு''.

இக்கதைகளைப் படிப்பது உறுதியான பழக்கங்களையும் திறமைகளையும் தருகிற உலகத்தைப் பற்றிய அறிவாகவும், பயிற்சிகளாகவும் மட்டுமின்றி உளநெகிழ்ச்சி—ஒழுக்கத்தை வளர்க்கிற பள்ளிக்கூடமாகவும் விளங்கிற்று. ஒவ்வொரு புத்தகமும் குழந்தைகளின் மனத்தில் ஆழமான சுவடு விட்டுச் சென்றது. மாமின்-சிபிர்யாக்கின் ''ஸ்துதோனயாவில் குளிர்காலம்'' என்னும் அற்புதக் கதை குழந்தைகளிடம் பெரும் மனப்பதிவு ஏற்படுத்தியது. எல்லோரும் மறந்துவிட்ட, ஆளரவமற்ற தாய்கா காட்டில் தமது அந்திமக் காலத்தைக் கடத்திக் கொண்டிருந்த தன்னந்தனிக் கிழவர் ஒருவரைப் பற்றிய கதை இது. இத்தகைய கதைகளைப் படித்த பின், சுற்றியுள்ள உலகத்தைப் பற்றிய நுண்ணுணர்வு குழந்தைகளிடம் மிகவும் கூர்மையடைகிறது என்று நான் கண்டேன்.

பாட நேரத்திலும், வகுப்பிற்கு வெளியிலும் நாங்கள் கதை படித்தோம். கூட்டமாய்க் குழுமிக் கேட்பதற்கு உகந்த இசைப் படைப்பு போல நூலகத்தின் இந்தப் பிரிவு விளங்கியது.

எங்கள் வகுப்பு நூலகத்தின் இரண்டாவது பிரிவு—இன்றைய நமது நாளைப் பற்றி, சோவியத் மக்களின் உழைப்பைப் பற்றி, சமாதானத்துக்காக நடக்கும் போராட்டம் பற்றி, மாபெரும் தேசபக்தப் போரில் வீரர்கள் நிகழ்த்திய துணிகரச் செயல்கள் பற்றி, குழந்தை வீரர்கள் பற்றி ருஷ்ய எழுத்தாளர்களும் உக்ரேனிய எழுத்தாளர்களும் இயற்றிய நவீனக் கதைகள். சோவியத் எழுத்தாளர்களான சி. மிகல்கோவ், ஸ. மர்ஷாக் ஆகியோரின் கவிதைகளையும் அ. கய்தார், லெ. கஸ்ஸில், நி. நோசவ், ம. பிரிலெஷாயெவா, மி. அருப்லயீனி, யூ. யஞேவ்ஸ்கி, யூ. ஸ்பஞத்ஸ்கிய், மி. ளின்கோவ், ஒ. இவானென்கோ, லு. வரன்கோவா, ப. ஷீத்கோவ், ஸி. அலெக்சாந்திரவா ஆகியோரின் கதைகளையும் எனது மாணவர்கள் வெகு சுவாரஸ்யமாகப் படித்தார்கள்.

மூன்றுவது பிரிவு—கட்டுக்கதைகள், கவிதைகள், கற்பனைக் கதைகள் ஆகியவற்றைக் கொண்டது. வகுப்புக்கு வெளியே படிப்பதற்கான புத்தகங்கள் இவை. தனக்கு விருப்பமான புத்தகத்தை ஒவ்வொரு குழந்தையும் தானே தேர்ந்தெடுத்தது (நல்ல படத்தாலோ, ஆசிரியர், நண்பன் படித்துக் காட்டியதாலோ இந்த விருப்பம் வந்தது).

வகுப்பறை நூலகத்தின் நான்காவது பிரிவு—பண்டைய கிரேக்க புராணம். குழந்தைகளுக்குப் புரிகிற வடிவில் எழுதப்பட்டிருந்த கிரீஸ் புராணங்கள் அடங்கிய புத்தகங்களைப் பெரும்பாடு பட்டுக் கண்டுபிடித்தோம். குழந்தைகளின் அறிவாற்றல் பயிற்சியிலும் அழகியல் பயிற்சியிலும் பண்டைய புராணங்கள் மிகப் பெரும் பங்கு வகிக்கின்றன. புராணங்கள் மனித இனக் கலாசாரத்தின் வியத்தகு பக்கங்களை குழந்தைகள் முன்னே விரித்துக் காட்டுவது மட்டுமின்றி, கற்பனையைத் தூண்டி விடுகிறது, அறிவை வளர்க்கிறது, தொலை தூரப் பழங்காலத்தில் ஓர் அக்கறையை ஏற்படுத்துகிறது.

முதலாண்டுக் கல்வியின் நடுப் பகுதியிலிருந்து நாங்கள் சேர்ந்து படிக்கத் தொடங்கினோம். வீட்டில் படித்து வரட்டும் என்பதற்காக, ஒரே புத்தகத்தின் எல்லாப் பிரதிகளையும் குழந்தைகளிடம் நான் வினியோகித்தேன். கூட்டாகப் படிப்பதற்கான தயாரிப்பாகும் இது. உள்ளடக்கம் என்னவென்று நன்றாகத் தெரிந்திருந்த கதையைப் படிப்பதற்காகக் கதை அறைக்குப் போக வேண்டுமா? இந்த விருப்பம் குழந்தைகளுக்கு எங்கிருந்து வருகிறது? ஏன் இவ்வாறு செய்ய வேண்டும்? புதிதாக ஏதாவது படிப்பது நல்லதல்லவா?

புதிய, தெரியாமலிருந்த விஷயங்களையும் படிக்கத் தானே வேண்டும். நாங்கள் புதிய புத்தகங்கள் படித்தோம். தனது இதயத்துக்குப் பதட்டத்தைத் தந்த விஷயத்தை நண்பர்களுக்குப் படித்துக் காட்ட வேண்டும் என்றும், தனது உணர்ச்சிகளையும் அனுபவங்களையும்

வார்த்தைகளில் வெளியிட வேண்டும் என்றும் குழந்தை விரும்புகின்ற போதுதான் ஒரு புத்தகம் அதன் ஆன்மிக வாழ்வுக்குள் நுழையும். எங்கள் நூலகத்தின் முதல் பிரிவிலிருந்த புத்தகம் ஒவ்வொன்றையும் குறைந்த பட்சம் பத்து முறை நாங்கள் வாய்விட்டுப் படித்தோம். திரும்பத் திரும்பப் படிப்பதால் அப்புத்தகத்திலிருந்த சுவாரஸ்யம் எங்களுக்குக் குறையவே இல்லை. இரண்டு, மூன்று வாரங்களுக்கு முன்பு படிக்கப்பட்டது புத்தகம். ஆனால் குழந்தைகள் அதனை மறந்து விடுவதில்லை. மீண்டும் ஒரு முறை படிக்க வேண்டும் என்று நாட்டம் கொண்டு அதற்காகவே விசேஷமாகப் பள்ளிக்கு வருகிறார்கள். 3-4 மாதங்கள் சென்று விடுகின்றன. அவர்கள் நேசித்த புத்தகத்தை மீண்டும் படிக்க விரும்புகிறார்கள். மீண்டும் நாங்கள் சேர்ந்து படிக்கிறோம்.

படிக்கத் தெரிந்து கொள்வதற்கு முன்னதாகவே, வார்த்தையின் நுண்ணிய வேறுபாடுகளைக் குழந்தை உணர்ந்திருந்தால்தான் புத்தகத்தின் அழகும் ஆற்றலும் இதயத்தைத் தொட்டு அறிவுக்குக் கிளர்ச்சியூட்டும். சிந்தனையின் உயிருள்ள ஊற்றுக்கண்ணுக்குப் ''பயணங்கள்'' போனபோது, எவருக்கு முன்னால் மாறி மாறி வரும் வார்த்தையின் அழகு விரிந்து நிற்கவில்லையோ, அவர் இரண்டாவது, மூன்றாவது, பத்தாவது முறை ஏற்கெனவே தெரிந்திருந்த விஷயத்தை கேட்பதற்கு ஒரு போதும் விருப்பப்பட மாட்டார்.

சில பாடங்களை விருப்பமான கதைக்கு என்றே ஒதுக்கினோம். படிப்பதற்கு ஒரு பதட்டத்துடன் தயாரானார்கள் குழந்தைகள். மிகவும் பிடித்தமான, இதயத்துக்குப் பதட்டம் தந்த விஷயத்தையே ஒவ்வொரு குழந்தையும் படித்தது.

கவிதை படிப்பதற்கு நாங்கள் தனி முக்கியத்துவம் தந்தோம். மனித இனக் கலாசாரத்தின் உலகப் பொக்கிஷத்திற்குள் சேர்ந்துள்ள கவிதைப் படைப்புக்களின் சிறந்த மாதிரிகளான அ. புஷ்கின், யூ. லெர்மன்தவ், வா. ஜுக்கோவ்ஸ்கி, நி. நிக்ராசவ், அ. ஃபேட், த.

ஷெவ்ச்சென்கோ, லேசியா உக்ரயின்கா, யோ. ஷில்லர், அ. மித்ஸ்கேவிச், கே. கெய்னே, பி. பெரான்ஜே ஆகியோரின் கவிதைகளையும் மற்ற பல கவிதைகளையும் மனப்பாடமாகக் குழந்தைகளுக்குப் படித்துக் காட்டினேன். குழந்தைகள் நேசித்த கவிதைகளை மனப்பாடம் செய்துவிட வேண்டும் என்னும் விருப்பம் அவர்களிடம் தோன்றியது. நான்காண்டு காலத்தில் பலப்பல கவிதைகளை அவர்கள் மனப்பாடம் செய்து விட்டனர். கவிதைச் சொல்லின் அற்புத ஒலியை அனுபவித்து உணர்கிற வரை அவர்கள் ஒவ்வொரு முறையும் படித்து வரவில்லை.

சொல்லின் அழகு, சித்திரம், இசை இராகம் ஆகியவற்றைத் தன்னுள் இணைக்கிறது நற்கவிதை. அழகியல் வளங்களின் இந்த ஒற்றுமையை இளம் வயதிலேயே குழந்தைகள் உணர வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். உக்ரேனிய ருஷ்யக் கவிஞர்களின் கவிதைகளை நான் மனப்பாடமாக அவர்களுக்குச் சொன்னேன். ''தீர்க்கதரிசி ஒலெக் பற்றிய பாடல்'' எனும் அ. புஷ்கினின் செய்யுளையும் ''கூலிக்காரி'' எனும் த. ஷெவ்ச்சென்கோவின் கவிதையையும் நாங்கள் பன்முறை படித்தோம். அனேகமாக எல்லாக் குழந்தைகளுக்கும் இக்கவிதைகள் நினைவில் பதிந்து விட்டன (மனப்பாடம் செய்வதற்கு என்று விசேஷ முயற்சிகள் எதுவும் மேற்கொள்ளப்படவில்லை). இயற்கை அழகு வர்ணிக்கப் படுகிற சிறுசிறு செய்யுள்கள் பலவற்றையும் குழந்தைகள் கற்றுக் கொண்டனர். விட்டுவிட்டுத் தொடர்ச்சியாகப் படிப்பது குழந்தைகளுக்கு மிகவும் விருப்பமாய் இருந்தது. ''டாம் சாயரின் துணிகரச் செயல்களை'' கனவுப் பகுதியில் பல வாரங்கள் நாங்கள் படித்தோம். புத்தகம் ஏற்படுத்திய மனப்பதிவை சுற்றி நிற்கிற சூழல் வலுப்படுத்தியது. ம. கார்க்கியின் ''குழந்தைப் பருவம்'', வ. கதாயெவின் ''தனிமைப் பாய்மரம் வெண்மை காட்டுகிறது'', ப. பஸோவின் ''பச்சைக்கல் பெட்டி'' ஆகியவற்றையும் நாங்கள் விட்டுவிட்டுத் தொடர்ச்சியாகப் படித்தோம்.

உணர்ச்சி பூர்வமாகப் படிக்கிற முறையை மாலை நேரங்களிலும் காலைப் பொழுதிலும் கையாளத் தொடங்கினோம். இதில் பங்கெடுத்துக் கொள்ள விரும்பிய ஒவ்வொரு குழந்தையும் தனக்கு விருப்பமான கதையையோ கவிதையையோ படிப்பதற்குத் தயார் செய்தது. இத்தகைய மாலைகளிலும் காலைகளிலும் பங்கெடுத்துக் கொள்ள பலப்பல மாணவர்கள் வேறு வகுப்புக்களிலிருந்தும் வந்தனர். சிறுகச்சிறுக இவ்வாறு படிப்பது பள்ளி முழுவதற்கும் பரவியது.

இரண்டு முறை—முதல் அரையாண்டு முடிந்த போதும் கல்வியாண்டு முடிந்த போதும்—நாங்கள் தாய்மொழிப் பண்டிகை கொண்டாடினோம். இந்தப் பண்டிகையில் சில சடங்குகள் வழக்கமாக நடக்கத் தொடங்கின. கிராமத்தில் மிகவும் வயதானவர்களை இப்பண்டிகைக்குக் குழந்தைகள் அழைத்தனர். கதையையோ, கவிதையையோ சிறப்பாக ஒப்பித்தவர் யார் என்று இவர்கள் முடிவு செய்தனர். இது ஒரு விதமான படைப்புப் போட்டியாக விளங்கியது. இதில் வெற்றி பெற்றவர்களுக்குப் புத்தகங்கள் பரிசளிக்கப்பட்டன. தாய்மொழிக்கு மதிப்புக் கொடுத்து மரியாதை காட்டுகிறவர்களான வயதான கூட்டுப்பண்ணையாளர்கள் இந்தப் பரிசுகளை வழங்கினர். அவர்களும் கற்பனைக்கதைகள் சொன்னார்கள், கவிதைகள் ஒப்பித்தார்கள். மாணவனும் வயதான கூட்டுப் பண்ணையாளரும் ஒரு விஷயத்தையே ஒப்பித்ததும் நிகழ்ந்தது. நான்காவது ஆண்டுக் கல்வியின் போது தாய்மொழியின் வசந்தகாலப் பண்டிகை இரண்டு நாட்கள் தொடர்ந்து நடந்தது. கதை, கவிதை, கட்டுக்கதை ஆகியவற்றை ஒப்பிப்பதற்கு நிறையப் பேர் விரும்பினர்.

வயதானவர்களுடன்—தந்தையர், தாய்மார்கள், தாத்தாக்கள், பாட்டிகள் ஆகியோருடன்—விடாது தொடர்பு கொண்டதன் காரணமாக இன்னொரு சுவாரஸ்யமான பழக்கமும் ஏற்பட்டது. எங்களில் சிறப்பாகப் படிப்பவர்கள் தமது பெற்றோர்களுக்கு வீட்டில் படித்துக்

காட்டினர். குழந்தைகள் எப்படிப் படிக்கிறார்கள் என்று பார்ப்பதற்காகப் பெரியவர்கள் பள்ளிக்கு வரத் தொடங்கினர். தாய்மொழியை நேசிப்பவர்கள் மதிப்ப வர்கள் ஆகியோரின் பல வட்டங்கள் தோன்றின (இந்த வட்டங்கள் பெரியவர்கள், மிகவும் மதிப்புக்குரியவர்கள் ஆகியோரைக் கொண்டதாக விளங்கின). இந்த வட்டங் களை ஏற்படுத்தியவர்களாக மாணவர்கள் விளங்கிய தால் படிப்பதிலும், புத்தகத்திலும் அவர்களின் அக் கறை இன்னும் அதிகப்பட்டது.

பள்ளியின் பொதுப் புத்தகப் பண்டிகை வழக்க மாக நடக்கும் பண்டிகையாகி விட்டது. பள்ளிக்கூடம் தொடங்குவதற்கு முதல் நாள், ஆகஸ்டு 31ஆம் நாள் குழந்தைகளும் பெற்றோர்களும் பள்ளிக்கு வந்தனர். அன்று எல்லோரும் பரிசுகள் வழங்கினர்: குழந்தைகள் ஒருவருக்கொருவரும், பெற்றோர்கள் குழந்தைகளுக்கும் பரிசுகளை வழங்கினர். தாய்மொழியை நேசிப்பவர்கள், மதிப்பவர்கள் ஆகியோரின் வட்டங்களின் சிறந்த நிர் வாகிகளுக்குக் கூட்டுப் பண்ணை நிர்வாகம் புத்தகப் பரிசு வழங்க வேண்டும் என்பது விதியாகி விட்டது.

ஒவ்வொரு குழந்தையும் தனது சொந்த நூலகத்தை உருவாக்கிக் கொள்ள வேண்டும், படித்தல் குழந்தை களின் மிக முக்கியமான ஆன்மிகத் தேவையாக விளங்க வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். ஆரம்ப வகுப்புக்களில் குழந்தைகள் முதல் இரண்டாண்டுகள் பயிற்சி பெறும் போதே, ஒவ்வொரு குடும்பத்திலும் ஒரு நூலகம் இருக்குமாறு நான் பார்த்துக் கொண்டேன். சில குடும்பங்களில் இருந்த நூலகத்தில் 500க்கு மேற் பட்ட புத்தகங்கள் இருந்தன. மற்ற குடும்பங்களில் குறைவாக இருந்தன. ஆனால் புத்தகச் செல்வம் ஒவ்வொரு மாதமும் பெருகிக் கொண்டே இருந்தது. குடும்ப நூலகத்தில் ஒரு புத்தகம் கூட ஒரு மாதத்தில் சேரவில்லை என்றால் அது கவலைக்குரிய விஷயம் என்று நான் கருதினேன்.

சுயகல்வியும் சொந்த ஆன்மிக வாழ்வும் புத்தகத்

திலிருந்துதான் தொடங்குகிறது. தனது மாணவனின் கையைப் பிடித்து எந்நேரமும் கூட்டிச் செல்கிற போதகர், அவனது கையை விட்டு விட்டு ''நீயாகப் போ, வாழக் கற்றுக் கொள்'' என்று சொல்ல முடிகிற நேரம் போதனை நிகழ்ச்சிப் போக்கில் உண்டு. இத்தகைய எட்டு எடுத்து வைக்க முடிவு செய்வதற்குப் பெருத்த போதனை ஞானம் வேண்டும். தனிப்பட்ட வாழ்க்கைக்கு ஒருவனை ஆன்மிக ரீதியில் தயார் செய்ய வேண்டுமானால் புத்தக உலகத்திற்கு அவனை அழைத்துச் செல்ல வேண்டும். நண்பனாக, போதகராக, அறிவு சான்ற ஆசிரியராக ஒவ்வொரு மாணவனுக்கும் புத்தகம் விளங்க வேண்டும். ஒவ்வொரு சிறுவனும் ஒவ்வொரு சிறுமியும் தொடக்கப் பள்ளியை முடித்த பின்னே புத்தகத்துடன் தனிமையை நாடி, யோசிக்கவும், சிந்திக்கவும் முயலுமாறு செய்வதே பிரதானமான போதனைப் பணி என்று நான் கண்டேன். தனிமையை நாடுவது என்றால் தனித்து ஒதுங்கி விடுவது அல்ல. சிந்தனைகள், உணர்ச்சிகள், மனவுறுதிகள், கருத்துக்கள் ஆகியவற்றில் சுயபயிற்சி பெறுவதன் தொடக்கம்தான் இது. சிறிய மனிதனின் வாழ்க்கையில் ஓர் ஆன்மிகத் தேவையாக புத்தகம் புகுந்தால்தான் இது சாத்தியமாகும். சிறுவனுக்கோ சிறுமிக்கோ அக்கறை ஊட்டுகிற புத்தகம் எது, எத்தகைய கேள்விகளுக்கு புத்தகத்தில் விடை தேடுகிறான் சின்னஞ் சிறு மனிதன் என்றெல்லாம் தனித்தனி உரையாடல்களில் நான் கண்டு கொண்டேன். பகுத்தறிவு பூர்வ புத்திமதி தருவதற்கும் தனக்கு வேண்டிய புத்தகத்தைக் குழந்தைகள் கண்டு பிடிப்பதற்கு உதவுவதற்கும் இதையெல்லாம் நான் தெரிந்து கொள்ள வேண்டியதாயிற்று.

பள்ளிக்கூடத்தில் நான்கு விதமான வழிபாடுகள் கோலோச்சும் போதுதான் உண்மையான கலாசாரத்தின் பிறப்பிடமாக அது விளங்கும். அவையாவன: தாயக வழிபாடு, மனித வழிபாடு, புத்தக வழிபாடு, தாய்மொழி வழிபாடு.

இளைஞர்களுக்குப் பயிற்சி அளிப்பதில் உள்ள கஷ்டங்

கள் பற்றி, எனது மாணவர்களுடன் பணியாற்றத் தொடங்குவதற்கு முன்பே நான் நிறையக் கேள்விப் பட்டிருந்தேன். ''சிறு குழந்தைகளுடன் வேலை செய்வதுதான் மிகவும் எளிது. சிறு குழந்தை இளைஞனுகி விடும் போது, அடையாளம் தெரியாதபடி மாறி விடுகிருன். அன்பு, மென்மை, கூச்சம் ஆகியவை அவனிடமிருந்து மறைந்து விடுகின்றன. முரட்டுத் தனம், வெடுவெடுப்பு, அலட்சியம் ஆகியவை தோன்றுகின்றன'' என்று என்னிடம் சொன்னுர்கள். இந்த வார்த்தைகள் எவ்வளவு தவறுனவை என்று நான் பின்னர் தெரிந்து கொண்டேன். நல்லது உருவாக்கப் படாவிட்டால், இயற்கையாகவே மாணவனிடம் நல்லது தோன்றி விடும் என்று ஆசிரியர் கருதினுல் இளைஞனிடம் நல்லதெல்லாம் ''மறைந்து விடும்''. குழந்தைப் பருவத்திலேயே புத்தகத்தின் மீது ஒரு நேசத்தைச் சிறுவனிடம் வளர்க்கவில்லை என்ருல், அவனது வாழ்வு முழுதுக்கும் புத்தகம் ஓர் ஆன்மிகத் தேவையாக விளங்கவில்லை என்ருல்— இளமைக் காலத்தில் மாணவனின் இதயம் காலியாகவே இருக்கும், எங்கிருந்து வருகிறது என்று தெரியாமலே அவனுள்ளத்தில் கெட்டது நுழைந்து விடும்.

## தாய்மொழிச் சொல்

உக்ரேனியர்களான எங்களுக்குத் தாய்மொழியாகத் திகழ்வது உக்ரேனிய மொழி. மூன்று கோடியே அறுபது லட்சத்துக்கு மேற்பட்ட மக்கள் இந்த மொழியில் பேசுகிருர்கள். உக்ரேனியர்களான எங்களுக்கு, சகோதர மக்களான ருஷ்ய மக்களின் மொழி, மிக நெருக்க மானதாகவும் மதிப்புக்குரியதாகவும் விளங்குமாறு வரலாறு விதித்திருக்கிறது. இரு சகோதர மொழிகளும் பலப்பல நூலிழைகளால் பின்னப்பட்டிருக்கின்றன. இது விஷயத்தை எளிதாக்குவது மட்டுமின்றி, தாய்மொழியிலும் ருஷ்ய மொழியிலும் தேர்ச்சி பெறுவதில் தொல்லை தரவும் செய்கிறது. இரண்டு மொழிகளிலும் ஒரே மாதிரி ஒலிக்கிற நூற்றுக் கணக்கான வார்த்தைகள் வேறு வேறு அர்த்தம்

கொண்டிருக்கின்றன. ஒரே மாதிரியான நூற்றுக் கணக்கான வார்த்தைகள் உக்ரேனிய மொழியில் ஒரு விதமான உளநெகிழ்ச்சி வேறுபாடு கொண்டிருக்கையில் ருஷ்ய மொழியில் வித்தியாசமான வேறுபாடு கொண்டிருக்கிறது. ஒரு மொழியில் சோக உணர்ச்சியைத் தருகிற வார்த்தை, மற்ற மொழியில் கேலி அர்த்தத்தைத் தருகிறது. இரண்டு மொழிகளிலும் உள்ள வார்த்தைகளின் அர்த்த வேறுபாடுகள், உளநெகிழ்ச்சி—அழகியல் அர்த்தங்களின் நுண்ணிய மாறுபாடான அம்சங்கள் உக்ரேனியப் பள்ளி ஆசிரியர்களான எங்களுக்கு ஆன்மிகச் செல்வத்தின் ஊற்றுக்கண்ணாக விளங்குகின்றன. இளம் தலைமுறைக்கு இந்தச் செல்வத்தை வழங்குவது எங்களது பணியாகும்.

மக்களின் ஆன்மிகச் செல்வமே மொழி. "எத்தனை மொழிகள் எனக்குத் தெரியுமோ அத்தனை அளவுக்கு நான் மனிதனுவேன்" என்று மக்கள் முதுரை கூறுகிறது. சொந்த மொழியில் தேர்ச்சி பெருமலும் அதன் அழகை உணராமலும் ஒருவன் இருந்தால் அவனுக்கு மற்ற மொழிகளின் களஞ்சியங்களில் உருவகம் கொண்டிருக்கிற செல்வம் எட்டாமலே இருந்து விடும். ஒருவன் தாய்மொழியின் மென்மையை எந்த அளவுக்கு அறிகிருனோ அந்த அளவுக்கு மென்மையாகத் தாய்மொழி வார்த்தையின் அர்த்த வேறுபாடுகளை அவன் கிரகித்துக் கொள்வான், மற்ற மக்களின் மொழிகளில் தேர்ச்சி அடைவதற்கு அந்த அளவுக்கு அவன் தயாராய் இருப்பான், வார்த்தையின் அழகை அவ்வளவு தீவிரமாக அவனது இதயம் ஏற்றுக் கொள்ளும்.

உயிரூட்டும் ஊற்றுக்கண்ணாக விளங்கும் தாய்மொழிச் செல்வம், பள்ளி வாழ்க்கைக்குள் எடுத்து வைக்கிற முதல் படியிலிருந்தே குழந்தைகளுக்குக் கிட்ட வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். சிந்தனை, வார்த்தை ஆகியவற்றின் ஊற்றுக்கண்ணுக்குப் "பயணம் போகும் போதே" தாய்மொழி வார்த்தையின், ருஷ்ய மொழி வார்த்தையின் உளநெகிழ்ச்சி, அழகியல், அர்த்த வேறுபாடுகளை எனது மாணவர்கள் அறிந்து கொண்டனர். மாணவர்கள் மொழியின் அழகை உணர்ந்து, வார்த்தையை எச்சரிக்கையுடன்

அணுகி, அதன் பரிசுத்தத்தைக் காத்து வர வேண்டும் என்பதற்கு நான் பாடுபட்டேன்.

மனிதனின் மொழிக் கலாசாரமே அவனது ஆன்மிகக் கலாசாரத்தின் கண்ணுடி ஆகும். தாய்மொழிச் சொல்லின் அழகும் மகத்துவமும் வல்லமையும் உணர்ச்சி பாவமுமே குழந்தையின் மீது செல்வாக்குச் செலுத்துகிற, அவனது உணர்ச்சிகளே, மனத்தை, சிந்தனையை, அனுபவ உணர்ச்சிகளை மென்மைப்படுத்துகிற மிக முக்கியமான சாதனமாக விளங்குகின்றன. சுற்றியுள்ள உலகத்துத் தோற்றம் ஒவ்வொன்றுடனும் நடக்கிற சந்திப்பு 706 குழந்தை இதயங்களில் வியப்புணர்ச்சியை உண்டாக்குகிற தொடக்கப் பள்ளியில், இந்தச் சாதனம் வகிக்கிற பங்கினை மிகைப் படுத்திக் கூற முடியாது.

இயற்கையை நோக்கி, அதாவது காடு, தோட்டம், வயல், புல்வெளி, ஆற்றங் கரை ஆகியவற்றுக்கு நாங்கள் போகிறோம். அப்போது சுற்றியுள்ள உலகத்தின் வளமையைக் குழந்தையின் கண்களுக்குத் திறந்து காட்டுகிற ஒரு கருவியாக வார்த்தை என் கைகளில் விளங்குகிறது. கண்டதின், கேட்டதின் அழகை உணர்ந்த படி; அனுபவித்தபடி வார்த்தையின் மிக நுண்ணிய அர்ந்த வேறுபாடுகளே அறிந்து கொண்டனர் குழந்தைகள். வார்த்தையின் மூலமாக அழகு அவர்களது மனத்துள் சென்றது. இயற்கைக்குள் நாங்கள் போன ''பயணங்கள்'' படைப்புக்கான முதல் தூண்டுதலாக விளங்கின. தமது உணர்ச்சிகளேயும், அனுபவத்தையும் எடுத்துச் சொல்ல வேண்டும் என்றும், அழகைப் பற்றிப் பேச வேண்டும் என்றும் குழந்தைகளுக்கு விருப்பம் ஏற்பட்டது. இயற்கையைப் பற்றிச் சிறு வியாசங்கள் எழுதினர்கள் குழந்தைகள். பேச்சும் சிந்தனையும் வளர்ச்சியடைவதற்காக மேற்கொள்கிற வேலையின் மிக முக்கியமான வடிவம் இந்த வியாசங்கள் ஆகும். ஒவ்வொரு குழந்தையும் தனது வியாசத்தை இயற்றியது. பின்னர் வகுப்பில் அதை எழுதியது. முதலாண்டுப் பயிற்சியின் போது குழந்தைகள் வாய்மூலம் சொல்லி, பின்னர் ''நமது தாய்மொழி'' என்ற நோட்டிலோ தனது சொந்த நோட்

*டிலோ எழுதிய குட்டி வியாசங்களை உதாரணத்திற்குக் கீழே தருகிறேன்.*[1]

**வானம்பாடியின் பாடல்** *(லரீசா)*

*சாம்பல் நிற உயிர் ஒன்று நீலவானில் நடுங்கிக் கொண்டிருக்கிறது. இது வானம்பாடி. அதன் அற்புதப் பாடலை நான் கேட்கிறேன். கேட்கக் கேட்கத் திகட்டவேயில்லை. மிக மெல்லிய வெள்ளிக் கம்பிகளை வாசிப்பது போல இருக்கிறது. தங்கக் கோதுமையிலிருந்து சூரியன் வரை இந்தக் கம்பிகளை இழுக்கிறது வானம்பாடி. தானியக் கதிர்கள் அதன் பாடலைக் கேட்கின்றன.*

**மறைந்து விட்டான் சூரியன்** *(செர்யோஷா)*

*சூரியன் மறைந்து விட்டான். வயல் வெளி இருண்டு போயிற்று. பள்ளத்தாக்கிலிருந்து புல்வெளியையும் வயல் வெளியையும் நோக்கி ஊர்ந்து வருகிறது இருட்டு. ஆறு போல அது ஓடுகிறது. பாப்ளார் மரத்தின் உச்சியில் தங்கத் தீப்பொறிகள் மூண்டெரிகின்றன. இவ்வாறு தனது இறுதி வாழ்த்துக்களைச் சூரியன் தெரிவிக்கிறது. தீப்பொறிகள் எரிந்து போய் அணைந்து விட்டன. சூரியனே, போய்வா!*

**தேனீக்கள் தண்ணீர் குடிக்கின்றன** *(கால்யா)*

*தேனீக்கள் தண்ணீர் குடிப்பதை நான் பார்த்தேன். வில்லோ மரத்தின் அடிக்கட்டைக்கு மெல்லிய குச்சியின் வழியாக தண்ணீர்த் துளிகள் வழிகின்றன. அடிக்கட்டை ஈரமாய் இருக்கிறது. வில்லோ மரத்தின் வாடை தேனீக்களுக்குப் பிடிக்கும். தண்ணீர் குடிக்க அந்த அடிக்கட்டைக்குப் பறந்து போகின்றன. பொன்னிற இறக்கைகளைப் படபடவென்று அடித்துக் கொள்கின்றன. தேனீக்களே கொஞ்சம் ஓய்வெடுங்கள். நீங்கள்தான் நீண்ட தொலைவு பறக்க வேண்டுமே.*

**பக்வீட் செடி பூ விடுகிறது** *(வார்யா)*

*பக்வீட் மலர்ந்து விட்டது. வெண்ணிறக் கம்பளம் போர்த்தியது போலிருக்கிறது வயல்வெளி. இந்தக் கம்*

---

[1] *வியாசங்கள் உக்ரேனிய மொழியிலிருந்து பெயர்க்கப்பட்டுள்ளன.*

பளம் உயிருள்ளது. நல்ல மணம் தருகிறது. ஒவ்வொரு மலரிலும் ஒரு தேனீ உட்கார்ந்திருக்கிறது. கம்பளம் சீக்கி யடிக்கிறது. தேனீக்கள் ரீங்காரம் செய்கின்றன. பறட்டைத் தலை பெருந்தேனீ ஒன்று ஒரு மலரில் அமர்ந்தது. நடுங்கியது தண்டு, அது கீழே குனிந்தது. பெருந்தேனீ யால் அங்கு நிற்க முடியவில்லை. விழுந்து விட்டது. பின்னர் கோபக் கூச்சல் போட்டது.

### கம்பைன் ஓட்டி *(யூரா)*

*எனது மாமா ஒரு கம்பைன் ஓட்டி. அவர் பெரிய இயந் திரத்தை ஓட்டுகிறார். அவர் முன்னே கோதுமைப் பயிர். கூர்மையான கத்திகள் கோதுமைப் பயிரை வெட்டி கதிர டிக்கும் இயந்திரத்திடம் இருக்கின்றன. இந்த இயந்திரம் கோதுமையைப் பிரித்தெடுக்கிறது. சன்னத் தாரையாகக் கொள்கலத்திற்குள் தானியம் ஒழுகுகிறது. லாரி அருகே வந்து தானியத்தைக் களத்து மேட்டுக்கு எடுத்துச் செல்கின்றது. வெள்ளை ரொட்டி நிறையக் கிடைக்கப் போகிறது.*

### எங்கள் கதிரடிக்கும் இயந்திரம் *(வான்யா)*

*எங்கள் பள்ளிக்கூடத்தில் சின்னஞ் சிறிய கதிரடிக்கும் இயந்திரம் இருக்கிறது... பள்ளித் தோட்டத்தில் மாண வர்கள் கோதுமைப் பயிர் அறுவடை செய்தனர். ஐந்து கதிர்க்கட்டுகள் கட்டினர். சிறிய கதிரடிக்கும் இயந்திரம் கூச்சலுடன் வேலை செய்தது. கோதுமையைப் பிரித்து எடுத்தது. மூட்டைக்குள் கொட்டியது. நாங்கள் அதை விதைக்கப் போகிறோம்.*

### ஆப்பிள் மரங்கள் பூ விடுகின்றன *(பாவ்லோ)*

*ஆப்பிள் மரம் பூக்கும்போது தோட்டம் அம்மாடி, எவ்வளவு அழகாய் இருக்கிறது. வெள்ளைப் பூக்கள் சூரிய னுக்கு முன்னால் இதழ்களை விரித்து நிற்கின்றன. பூக்களை அசைத்தாட்டுகிறது காற்று. வெள்ளி மணி போல அவை கலகலக்கின்றன. தோட்டம் பூராவும் கலகலக்கிறது. சூரி யனை நோக்கி தோட்டம் புன்னகை செய்கிறது. காற்று அடங்கிய பின்னே தேனீக்களின் ரீங்காரம் கேட்கிறது. மரங்களுக்கு மேல் அவை பறக்கின்றன. மிக அதிகம் ஒலி யெழுப்பும் மணிகள் எட்டிப் பார்க்கின்றன.ஆயிரம் தந்தி*

களைப் போல பாட்டுப் பாடுகிறது தோட்டம். மணியின் மீது அமர்கிறது தேனீ. பாதங்களை ஆட்டுகிறது, இறக்கை களை அடிக்கிறது. மணிக்கு மேலே தங்க மகரந்தம் மேகம் போல எழும்புகிறது.

### தாஷா அத்தையின் பண்ணையில் *(கோல்யா)*

தாஷா அத்தையின் பண்ணைக்கு நாங்கள் போயிருந் தோம். முப்பது பசுக்களிடம் அவர் பால் கறக்கிறார். பெரிய பெரிய பால் பாத்திரங்கள். வெண்ணெய் ஆலைக்கு பாலைக் கொண்டு போகிறார்கள். அங்கே அதிலிருந்து வெண்ணெய் எடுக்கிறார்கள்.

### மாலையில் நாரைகள் கத்துகின்றன *(தீனு)*

மலைக்குப் பின்னே இறங்கி விட்டான் சூரியன். நீல வானில் நாரைகள் பறக்கின்றன. ''பசும் புல்வெளியே, வணக்கம். வெப்பக் கடலிலிருந்து நாங்கள் பறந்து வந்தி ருக்கிறோம்'' என்று அவை கூறுகின்றன. மரங்களில் கிளை கள் நடுங்கி ஆடின. பசிய புற்கள் அசைந்தன. கலகலத் தது ஏரி: வணக்கம் நாரைகளே! வெப்பக் கடலில் நீங் கள் பார்த்தது என்ன என்று கூறுங்கள்.

### கனிவு கொண்ட மங்கல் தாத்தா *(சான்யா)*

வானத்தில் நட்சத்திரங்கள் மின்னின. பள்ளத்தாக்கி லிருந்து கனிவு மிக்க மங்கல் தாத்தா வெளியே வந்தார். அவர் வயதானவர். அவருக்கு உடல் முழுதும் ரோமம். தடியூன்றி வந்தார் அவர். கிராமத்திற்கு வருகிறார். வீட் டுக்குள் நுழைகிறார். வெது வெதுப்பான மெது மெது வான உள்ளங்கையில் குழந்தைகளைத் தூக்கி வைத்துக் கொள்கிறார். குழந்தைகளுக்குத் தூக்கம் வருகிறது. அவர் களுக்கு நல்ல கனவு வருகிறது.

(இந்த சான்யா ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளியில்'' இருக் கும் போதே மங்கல் தாத்தா பற்றிக் கதை கட்டியவள். இந்தக் கதை மீண்டும் குழந்தையின் நினைவில் உயிர் பெற் றுள்ளது).

### குஸ்மா மாமா *(ஃபேத்யா)*

குஸ்மா மாமாவிடம் நாங்கள் போயிருந்தோம். கட்டு மான வேலை செய்பவர் அவர். செங்கற்களைக் கொண்டு வீடுகளுக்கு அவர் சுவர்கள் கட்டுகிறார். இப்போது அவர்

கடை யொன்று கட்டிக் கொண்டிருக்கிறார். குஸ்மா மாமா ஏற்கெனவே ஐம்பது வீடுகள் கட்டி விட்டார். இந்த வீடுகளில் ரொம்பப் பேர் வசிக்கிறார்கள். ''நான் கட்டும் வீடுகள் இருநூறு வருடம் உயிர் வாழும். 'எத்தகைய கொத்து வேலைக்காரர் குஸ்மா மாமா' என்று நிறையப் பேர் நினைத்துப் பார்ப்பார்கள்'' என்கிறார் அவர்.

### வெண்மலர்கள் *(காத்யா)*

*காட்டினை எழுப்பி விட்டான் சூரியன். பைன் மரத்தின் உச்சியிலிருந்த பனித்துகளை உருக்கி விட்டான். சூடான நீர்த் துளி பனியின் மீது விழுந்தது. அது வெண்பனிக் குவியலையும் காய்ந்த இலைகளையும் துளைத்துக் கொண்டு சென்றது. அது விழுந்த இடத்தில் பசிய நிற அம்பு ஒன்று தோன்றியது அதன் மீது ஓர் ஊதா நிற மணி மலர்ந்தது. அது வெண்பனியைப் பார்த்து வியப்படைந்தது: ''சீக்கிரமே நான் விழித்துக் கொண்டேனு?'' ''இல்லை, இல்லை; சரியான நேரம்''—பறவைகள் பாடத் தொடங்கின. வசந்தகாலம் வந்து விட்டது.*

### சூரியனும் மேகமும் *(தோல்யா)*

*பொன்னிற வயல். ஒவ்வொரு தானியக் கதிரிலும் விளையாடிக் கொண்டிருக்கிறது சூரியன். வயலே, வயலே நீ கொள்ளை அழகு. இதோ, உன்னை நோக்கி மிதந்து வந்திருக்கிறது மேகம். சூரியனை மூடி விட்டது. தானியக் கதிர்களில் இருந்த தங்க நிறத் தீப்பொறிகள் அணைந்து விட்டன. சாம்பல் நிறமாய் மாறிவிட்டது வயல். சாம்பல் நிறப் போர்வையால் பூமியை யாரோ மூடி விட்டது போல இருந்தது. சூரியனே, மேகத்தின் பின்னுலிருந்து நீ சீக்கிரமே வெளியே வா. கதிர்கள் உனக்குக் காத்திருக்கின்றன. நாங்களும் கூட உனக்காகக் காத்துக் கொண்டிருக்கிறோம்.*

### வானத்திலிருந்து நட்சத்திரங்கள் விழுகின்றன *(லியூபா)*

*வானத்திலிருந்து ஆகஸ்டு மாதத்தில் நட்சத்திரங்கள் விழுகின்றன. இருண்ட காட்டில் ஒரு பரந்த வெளி இருக்கிறது. இந்த இடத்தில் வானத்திலிருந்து ஒரு நட்சத்திரம் விழுந்தது. அங்கு ஒரு கருஞ்சிவப்புப் பூ மலர்ந்தது.*

### எங்கள் வகுப்பறை வெதுவெதுப்பாக இருக்கிறது *(சாஷா)*

*எங்கள் வகுப்பறை நன்கு வெதுவெதுப்பாக இருக்கிறது. சூடான நீராவிக் குழாய்களில் தண்ணீர் ஓடுகிறது. நிலவறையில் பெரிய கொதிகலம் இருக்கிறது. பெரிய அடுப்பில் நிலக்கரி எரிகிறது. சுரங்கத் தொழிலாளிகள் அதனைத் தோண்டி எடுத்தார்கள். ரயில் மூலமாக அதனை நமக்கு எடுத்துக் கொண்டு வந்துள்ளனர். அதனை பூமியில் இறக்கினர். பின்னர் லாரியில் ஏற்றி பள்ளிக்கூடத்துக்குக் கொண்டு வந்தனர். சுரங்கத் தொழிலாளர்களும் ரயில் வேத் தொழிலாளர்களும் உழைப்பதால் நமக்கு வெப்பம் கிட்டுகிறது.*

### பனிக்காலத்தில் மைனுக்கள் *(மீஷா)*

*போன வருடப் பனிக்காலத்தில் மைனுக்கள் உஷ்ணப் பிரதேசத்துக்குப் பறந்து போகவில்லை. கடுமையான குளிர் இருக்காது என்று அவற்றுக்கு எப்படித் தெரிந்தது? மாலை நேரத்தில் பறவைகள் பெருங் கூட்டமாகக் கூடி ஒரு மரத்திலிருந்து வேறொரு மரத்திற்குப் பறந்ததை நான் பார்த்தேன். வெதுவெதுப்பாய் இருக்கிற இடத்தை அவை தேடிக் கொண்டிருந்தன. பீதியுடன் கூச்சலிட்டன. பனிப்புயல் வீசிய போது எங்களது கொட்டகைக்குப் பறவைகள் வந்தன. எல்லா இடங்களிலும் உட்கார்ந்து கொண்டன. பசுமாட்டின் முதுகின் மேலே கூட அமர்ந் தன. வெய்யிலடித்த, குளிர் மிகுந்த நாளில் வெண்பனி யில் அவை குளித்தன. மெதுவான வெண்பனியின் மீது ஒரு பந்து போல் வந்து விழுகிறது பறவை. வெண் பனியைப் பறிக்கிறது. பின்னர் வெண்பனிக்குள்ளிருந்து வெளியே வந்து கீச்சிடுகிறது.*

### பிர் மரம் *(தன்கோ)*

*நானும் அம்மாவும் பிர் மரம் ஒன்றை மேசையின் மீது வைத்தோம். பொம்மைகளை அதன் மீது வைத்து அழகு படுத்தினோம். கீழே பனித் தாத்தாவை வைத்தோம். இரவு வந்தது. முற்றத்தில் நிலா பிரகாசமாக ஒளிர்ந்தது. பனித் தாத்தா என்ன செய்கிறார் என்று பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆவல் மேலிட்டது. அவர் கைத்தடியை எடுத்துக் கொண்டு, மரத்திலிருந்து விலகிச் சென்று மேசை யின் மீது நடக்கிறார். நடந்து கொண்டே ஏதோ கீச்சிடு கிறார். வெண்பனிச் சிதல்கள் இலைகளில் இருந்தபடி என்*

னவோ குசுகுசுக்கின்றன. சாம்பல் நிற முயல் குட்டி சிறு கிளை ஒன்றில் ஒளிந்து கொண்டது. பிர் மரத்திலிருந்து பைக்குள் குதித்து பனித்தாத்தாவிடம் போயிற்று அது. புத்தாண்டுப் பரிசு இதோ கிட்டப் போகிறது.

### யுகீம் தாத்தா (லூதா)

எனது யுகீம் தாத்தா காட்டுக் காவலர். கூட்டுப் பண்ணையில் அவர் ஏற்கெனவே இருபத்தைந்து வருடமாக வேலை செய்கிறுர். கிராமத்தை அடுத்து ஓக்மரக் காடு இருக்கிறது. அங்கிருக்கும் ஓக் மரங்கள் அவர் நட்டவை. அவர் நட்ட ஓக் மரங்கள் முன்னூறு ஆண்டுகள் உயிர் வாழும் என்று சொல்கிறுர் தாத்தா. நானும் ஓர் ஓக் மரம் நடுவேன்.

### கொடிய சிலந்தி (கோஸ்த்யா)

கிடங்கின் ஒரு மூலையில் வலை பின்னியது சிலந்தி. அது என்ன செய்யப் போகிறது என்று நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். சுவரில் ஒளிந்து கொண்டு கால்களை அசைத்துக் கொண்டிருக்கிறது. வலைகளை அசைத்தாட்டுவது போல இருக்கிறது. ஈ ஒன்று பறந்து வந்து ரீங்காரம் செய்கிறது. திரும்பிப் பார்த்த சிலந்தி சத்தத்தைக் கவனமாகக் கேட்கிறது. வலையின் மீது மோதிய ஈ அதில் மாட்டிக் கொண்டது. ரீங்காரம் பெரிதாக மாறி பீதி நிறைந்ததாயிற்று. சிலந்தி உடனே ஈயை நோக்கி விரைந்து வருகிறது. கொடிய சிலந்தியே ஈயைக் கொல்ல உன்ஞல் முடியாது. நான் வலையைப் பிய்த்து ஈயை விடுவிக்கிறேன். பறந்து செல். கொடிய சிலந்தியின் வலையில் விழுந்து விடாதே.

### தக்காளிப் பழங்கள் (ஸ்லாவா)

பசும் புதரில் சிவப்புத் தக்காளிகள். காலை நேரத்தில் தக்காளிகளை மூடியிருக்கின்றன பனித்துளிகள். ஒவ்வொரு துளியிலும் தங்கச் சூரியன் விளையாடுகிறது. வெள்ளை நிறப் பட்டாம் பூச்சி சிவப்பு நிறத் தக்காளியில் அமர்ந்தது. தேனீ ஒன்று ரீங்காரம் செய்கிறது, இது ஒரு பெரிய சிவப்புப் பூ என்று நினைத்தது தேனீ. தக்காளியைச் சுற்றி வந்து பின்னர் பறந்து போயிற்று அது.

குழந்தைகளின் வியாசங்கள் அவர்கள் நிறைய வேலை செய்ததன் பயஞகும், சிந்தனை, வார்த்தை ஆகிய

வற்றின் உயிருள்ள ஊற்றுக்கண்ணுக்குக் குழந்தைகளுடன் போய்வர வேண்டும். சுற்றியுள்ள உலகத்துப் பொருள்கள், தோற்றங்கள், ஆகியவற்றைப் பற்றிய மனத்தோற்றம், வார்த்தையின் மூலம் குழந்தையின் உணர்வில் மட்டுமின்றி அதன் மனத்திலும் இதயத்திலும் கூட நுழையுமாறு செய்ய வேண்டும். வார்த்தையின் உளநெகிழ்ச்சியில் தான்—அழகியில் வேறுபாடு, நுண்ணிய அர்த்த மாறுபாடுகள் —குழந்தைப் படைப்பின் உயிருள்ள ஊற்றுக் கண் இருக்கிறது. குழந்தையின் உணர்வில் வார்த்தையானது பிரகாசமான சித்திரமாக வாழ்கிறது. எனவே, வகுப்பறையில் தமது வியாசங்களை எழுதும் போது, கூடவே படங்களும் வரைகிருர்கள்.

சுற்றியுள்ள உலகத்து அழகின் செல்வாக்கில் ஈடுபட்டு குழந்தை உடனே வியாசம் எழுதத் தொடங்கி விடும் என்று எதிர்பார்ப்பது அப்பாவித்தனமாகும். ஏதோ ஓர் உள்ளுணர்வில் படைப்புத் தோன்றி விடாது. படைப்புத் தொழிலுக்குக் கற்றுத் தர வேண்டும். இயற்கையைப் பற்றிய வர்ணனையை ஆசிரியரின் வாயிலிருந்து கேட்கும் போதுதான் குழந்தை வியாசம் இயற்றும். குழந்தைகளுக்கு நான் படித்துக் காட்டிய முதல் வியாசம் குளக் கரையில், அமைதியான மாலைப் பொழுதில் இயற்றப்பட்டதாகும். காட்சிச் சித்திரத்தை வார்த்தைகளில் வெளியிட முடியும் என்பதைக் குழந்தைகள் புரிந்து கொள்ளவும் உணர்ந்து கொள்ளவும் வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். முதலில் எனது சொந்த வியாசங்களைக் குழந்தைகள் திரும்பச் சொன்ஞர்கள். தம்மைப் பதட்டப் படுத்திய இயற்கைச் சித்திரங்களைத் தாமாகவே வர்ணிக்கத் தொடங்கினர். குழந்தைப் படைப்பின் தனி நிகழ்ச்சிப் போக்கு தொடங்கி விட்டது. வார்த்தையின் உள நெகிழ்ச்சி—அழகியல் வேறுபாடுகளை உணர வேண்டியது இதில் முக்கியமாகும். தனக்காக ஒதுக்கப்பட்ட இடத்திற்குத் தயாரான செங்கல் சென்று சேர்வது போல, குழந்தையின் முன்னே ஒவ்வொரு வார்த்தையும் வரும் போதுதான் சொந்த வியாசம் எழுதக் குழந்தை கற்றுக்

கொள்ளும். ஓர் இடத்துக்கு உகந்த ஒரே செங்கல்லைக் குழந்தைகள் தேர்ந்தெடுக்கும். முதலில் கிட்டிய வார்த்தையை அவர்கள் எடுத்துக் கொள்ள மாட்டார்கள். உள நெகிழ்ச்சி-அழகியல் மென்மையைத் தருவதற்கு இது வகை செய்யாது.

வியாசங்கள் இயற்றுவது எனது மாணவர்களுக்கு விருப்பமான வேலையாயிற்று. தாம், கண்ட அனுபவித்த அனைத்தையும் பற்றிச் சொல்ல முனைந்தார்கள் அவர்கள். சுற்றியுள்ள உலகத்தின் அழகுடன் தாம் கொண்டுள்ள உறவை வெளியிடுகின்ற ஒரு சாதனமாகவே அவர்களிடம் வார்த்தை விளங்கியது. 2, 3, 4ஆம் வகுப்புகளில் இருக்கையில் தமது முதிய நண்பர்களைப் பற்றி—கூட்டுப் பண்ணையாளர்கள், தொழிலாளர்கள் ஆகியோர் பற்றி, சோவியத் மக்கள் செய்கிற உழைப்பு பற்றி, மலருகின்ற ஆப்பிள் பூக்களையும் கேந்திப் பூக்களையும் பற்றி, கடுங் கோடை நாளில் காணப்படும் வெள்ளிச் சிலந்திவலை பற்றி, கூட்டுப் பண்ணைத் தோட்டத்தில் ஆப்பிள் பழ அறுவடை பற்றியெல்லாம் குழந்தைகள் வியாசங்கள் எழுதினர். நான்காண்டு காலத்தில் 40—50 குட்டி வியாசங்கள் இயற்றினர் குழந்தைகள். நான்காண்டு காலத்தில் குழந்தைகள் இயற்றிய வியாசங்கள் சிலவற்றைக் கீழே காணலாம்.

அழகைப் படைக்க வேண்டும் என்ற நாட்டத்தைப் போல உழைப்பை நோக்கி உந்தித் தள்ளுகிற இன்னொரு தூண்டலைக் காணுவது கடினம். இந்த நாட்டம் குழு முழுதுக்கும் உத்வேகம் ஊட்டியது. செடிகளைப் பேணுகின்ற வேலையில் ஈடுபடாத குழந்தை ஒன்று கூட இல்லை. முதல் கோடைகாலம் எங்கள் உழைப்பிற்கு ஏற்ற பயன் தரவில்லை. ஆனால் குழந்தைகள் கனவுலகில் வாழ்ந்தனர். இரண்டாவது வசந்தகாலத்தில் புல்வெளி பசிய கம்பளச் சமவெளியாயிற்று. காட்டுப் பூக்கள் மலர்ந்தன. எங்கள் இடத்தில் மூன்றுவது வசந்தகாலத்தில் பசுமையும் பூக்களும் கோலோச்சிக் கொண்டிருந்தன. இங்கு அடிக்கடி கூடினர் குழந்தைகள். புத்தகம் படித்தார்கள். கதைகள் சொன்னார்கள்.

## பனிமலர்கள் கண்ணுடியில் எப்படித் தோன்றுகின்றன

*(தான்யா, நான்காம் வகுப்பு)*

*''சன்னல் கண்ணுடியில் பனி மலர்கள் எப்படித் தோன்றுகின்றன?'' என்று நான் அம்மாவிடம் கேட்டேன். ''பனித் தாத்தாவின் குட்டிப் பேரன் படம் வரைகிருன். தாத்தாவுடன் அவன் இரவு நேரங்களில் நடந்து போகிருன், சன்னல்களில் படம் வரைகிருன்...'' என்ருள் அம்மா, அவன் எப்படிப் படம் போடுகிருன் என்று பார்க்கவேண்டும் எனும் ஆசை தோன்றியது எனக்கு. படுக்கையில் படுத்தேன், ஆனல் கண்ணை மூடவில்லை. எல்லோரும் தூங்கி விட்டார்கள். சன்னலுக்குப் பின்னே கீச்சிட்டது ஒரு மரம். ஒரு சிறு பையன் சன்னலருகே வந்தான். சன்னல் கண்ணுடியின் மீது வெள்ளிப் பென்சிலால் கோடு வரைகிருன், மெதுவாகப் பாட்டுப் பாடுகிருன். அவன் அற்புத மலர் வரைந்து விட்டதைக் கண்டேன். அகன்ற—அகன்ற இலைகள் சிறிய—சிறிய இதழ்கள். காலையில் சூரியன் எழுந்து வந்தான். மலர் உயிருள்ளதாகி விட்டது. இப்படி எனக்குக் கனவு வந்ததா, உண்மையிலே இது நடந்ததா என்று தெரியவில்லை.*

## பனிக்காலத்தின் நடுவில் பூக்களின் உலகம்

*(கால்யா, மூன்ரும் வகுப்பு)*

*இலையுதிர்காலத்தில் மூடுதோட்டத்திற்கு அருகில் கிரிசான்திம மலர்கள் பூத்தன. குளிர் மூட்டத்திற்கு அவை அஞ்சுவதில்லை. வடக்கிலிருந்து பனிக்குளிர் வந்து விட்டது. வாளியிலிருந்த தண்ணீர் உறைந்து போயிற்று. கிரிசான்திம மலர்களைக் குளிரிலிருந்து காப்பாற்ற வேண்டும். பூத்தொட்டிகளில் அவற்றை எடுத்து நட்டு மூடுதோட்டத்திற்குள் வைத்தோம். தண்டுகளை வெட்டி விட்டோம். கிரிசான்திம மலர்கள் மீண்டும் பசுமையாகி, பின்னர் பூ விட்டன. காலையில் நான் துயிலெழுந்தேன். முற்றத்தில் வெண்பனி கிடந்தது. வெண்பனியும் சூரியனும் அங்கு ஒளிர்ந்தன. வேகமாக மூடுதோட்டத்திற்குச் சென்றேன். வெள்ளை, ஊதா, நீல நிறங்களில் கிரிசான்திம மலர்கள் பூத்திருக்கின்றன. கண்ணுடிகளுக்குப் பின்ஞல் வெண்பனி. பிரகாசமான சூரியனைப் பார்த்துக் கிரிசான்திம மலர்கள் சிரிக்கின்றன.*

## நாங்கள் வயலை விட்டுப் போனது எப்படி

*(பாவ்லோ, இரண்டாம் வகுப்பு)*

*கோடைகாலத்தில் நானும் அம்மாவும் உலர்ந்த புல் கொண்டு வருவதற்காக வயலுக்குப் போனோம். ஒரு பெரிய வண்டி நிறைய உலர்ந்த புல்லை அம்மா எடுத்துப் போட்டாள். உலர்ந்த புல்லை கயிற்றால் கட்டினாள். குதிரைகள் மெதுவாகப் போயின. உலர்ந்த புல்லின் மீது நாங்கள் மிக உயரத்தில் உட்கார்ந்திருந்தோம். சூரியன் மறைந்து விட்டது. வானத்தில் நட்சத்திரங்கள் சுடர் விட்டன. நான் உலர்ந்த புல்லின் மீது படுத்துக் கொண்டு வானத்தைப் பார்த்தேன். இப்போது எங்கள் வண்டி ஒரு வண்டியாய் இல்லை. அது ஒரு பெரிய படகு. கடலில் மிதக்கிறோம் நாங்கள். எங்களுக்கு மேலே நட்சத்திரங்கள். அவை வெகு அருகே இருக்கின்றன. கையை நீட்டினால் நட்சத்திரம் கைக்குக் கிட்டும். எங்கோ வெகு தொலைவில் பசுமையான ஆற்றங் கரைகள். காடைகள் அங்கு பாடுகின்றன. வெட்டுக்கிளிகள் வயலின் வாசிக்கின்றன. எங்கள் படகு நின்று விட்டது. நட்சத்திரங்கள் ஊஞ்சலாடுகின்றன. கரைக்கு வந்தது படகு. அம்மா எழுந்து விட்டாள். எனக்கோ இன்னும் படுத்திருக்க வேண்டும் போலிருக்கிறது.*

## இலையுதிர்காலத்து மூட்ட நாள்

*(ஷூரா, மூன்றும் வகுப்பு)*

*பகற் பொழுது குறைந்து இரவு நேரம் நீண்டு வந்தது. காலை நேரத்தில் ஆற்றின் மீது மேக மூட்டம் மிதந்து செல்கிறது. சூரியன் எங்கே? மூட்டத்தை ஏன் அது விரட்டவில்லை? இலையுதிர்காலத்து மழையின் சிறு துளிகள் வானத்திலிருந்து விழுகின்றன. தாழ்ந்திறங்கிய கிளைகளுடன் நின்றிருக்கின்றன மரங்கள். இலைகள் உதிர்கின்றன. பெரிய பெரிய நீர்த் துளிகள் கிளைகளில் தொங்குகின்றன. மூட்டத்தில் எங்கோ நெடிய குரல் கொடுத்தது கடற்பறவை. தென் திசைக்கு அது பறந்து போக முடியாததால் மனிதர்களிடம் புகார் செய்கிறதோ என்னவோ. காட்டில் ஒரே அமைதி. மரங்கொத்தி பலமுறை மரத்தைக் கொத்தி விட்டு பின்னர் மௌனமாகி விட்டது. இலைகளின் மீது ஓக் மர விதைகள் விழுகின்றன. உலகம் முழுதும் வெள்ளை மூட்டத்தில் ஆழ்ந்திருக்கிறது.*

## இலையுதிர்காலம் தொடங்கும் வேளை
*(செர்யோஷா, நான்காம் வகுப்பு)*

காலையில் கிராமத்தின் மீது தூக்கணாங் குருவிகள் ஒரு பீதியுடன் பறந்தன. பின்னர் அவை பெருங் கூட்டமாக ஒன்று சேர்ந்தன. டெலிபோன் கம்பிகளின் மேல் அருகருகே அமர்ந்து எதைப் பற்றியோ கீச்சிட்டுப் பேசிக் கொண்டிருந்தன. வெப்பப் பிரதேசத்துக்கு எப்போது பறந்து செல்லலாம் என்று அவை இவ்வாறு கலந்து பேசின. அடுத்த நாள் தூக்கணாங் குருவிகள் அங்கே இருக்கவில்லை. அவை எங்கே போய் விட்டன? இலையுதிர்காலம் நெருங்குகிறது என்று எப்படி அவற்றுக்குத் தெரியும்? பகல் நேரத்தில் இன்னும் உஷ்ணமாகத்தானே இருக்கிறது. சூரியன் கனிவுடன் சூடு தருகிறதே. ஒளி பொங்கும் இலையுதிர்காலத்து மாலை நேரம் எனக்கு ரொம்பப் பிடிக்கும். அந்திச் சூரியனின் கருஞ்சிவப்புத் தீ நீண்ட நேரம் எரிந்து கொண்டிருக்கிறது. பாப்ளார் மரங்களின் இலைகள் கருஞ்சிவப்பாகி விட்டது போல் தோன்றுகின்றன. அந்தி ஒளியின் பளபளப்புத்தான் இது. உறங்கி விட்ட குளத்துத் தண்ணீர் அந்திப் பொழுது போல இருக்கிறது. குளத்தருகே மாலை நேரத்தில் ஒரே கூச்சல். தென் திசைக்குப் பறந்து செல்லும் பறவைகள் இங்கே இரவைக் கழிக்கின்றன. காலை நேரத்தில் குளத்தை மூடி விடுகிறது மேக மூட்டம். புல்வெளியில் பனித்துளி. பனித்துளி ஏதோ தலை நரைத்துப் போனது போலிருந்தது. கோடை காலத்தில் இருப்பது போல் இல்லை. தொடங்கி விட்டது இலையுதிர் காலம்.

## வாழ்க்கையில் மிக முக்கியமானது என்ன?
*(வார்யா, நான்காம் வகுப்பு)*

வாழ்க்கையில் பிரதானமானது எது? ''பிரதானமானது நிலக்கரியே. அது மட்டும் இல்லையென்றால் இயந்திரம் வந்திருக்காது, உலோகம் கிட்டியிருக்காது, மனிதர்கள் பனியில் உறைந்திருப்பர்...'' என்கிறார் சுரங்கத் தொழிலாளி.

உலோகத் தொழிலாளி சொல்கிறார்: ''மிகப் பிரதானமானது உலோகமே. உலோகம் இல்லையென்றால் இயந்திரமோ, நிலக்கரியோ, உணவோ, உடையோ எதுவுமே இல்லை.''

விவசாயி சொல்கிறார்: ''மிக முக்கியமானது தானியமே. தானியம் இல்லையென்றால் சுரங்கத் தொழிலாளி,

உலோகத் தொழிலாளி, விமானி, எல்லைக் காவல் வீரர் யாருமே, யாருமே உழைக்க முடியாது.''

இதில் யார் சொல்வது சரி? வாழ்க்கையில் பிரதான மானது எது? பிரதானமானது உழைப்பே. உழைப்பு மட்டும் இல்லையென்றால் நிலக்கரி, உலோகம், தானியம் இதில் எதுவுமே இல்லை.

**நெருப்புக் குதிரை** *(சான்யா, நான்காம் வகுப்பு)*

இது அம்மா சொன்ன கதை. கிராமத்தில் முதல் கூட்டுப் பண்ணை உருவாக்கிய போது விவசாயிகள் ஒரு குதிரை வாங்கினார்கள். அதன் பெயர் நெருப்பு. அது யாருக்கும் அடங்காமலிருந்தது. மிகவும் துணிவு கொண்ட மனிதர்கள் கூட நெருப்பை நெருங்குவதற்கு அஞ்சினார் கள். அது பாதங்களால் பூமியைப் பறித்தது, பற்களால் கடித்தது, குறட்டை விட்டது.

இளைஞனை யூர்கா அடங்காத அந்தக் குதிரைக்குச் சேணம் பூட்டி விட்டான். குதிரை உயரே எழும்பியது, பெரிதாய்க் கனைத்தது, சாலையின் மீது பாய்ந்து யூர்கா வைக் கீழே தள்ளியது. சில மைல் தூரம் ஓடி கிராமத்தின் ஓரத்தில் நின்றது. சாலையின் நடுவில் இரண்டு சிறு குழந்தை கள் விளையாடிக் கொண்டிருந்தன. அவை குதிரையிடம் ஓடி வந்து அதன் முன்னங் கால்களைக் கட்டிப் பிடித்துக் கொண்டன. தாயாரின் இதயம் பயத்தால் நின்று போயிற்று. ''இதோ குதிரை குழந்தைகளைக் கொன்று விடப் போகிறது, அல்லது உதைத்துத் தள்ளப் போகிறது'' என்று நினைக்கிறார் தாயார். ஆனால் குதிரை அமைதியாய் நின்றது. கால்களை நகர்த்தி வைத்துக் கொண்டு மீண்டும் நிற்கிறது. குழந்தைகளை உதறித் தள்ளுவோமா என்பது போலக் குழந்தைகளைக் கடைக் கண்ணால் பார்க்கிறது. குழந்தைகளோ விளையாடுகின்றன. பின்னர் நெருப்பு ஜாக்கிரதையாகக் குழந்தைகளை விட்டுச் சென்றது கிரா மத்தின் வழியாக ஓடியது. அதைப் பிடித்து லாயத்தில் அடைத்தனர்.

**முள்ளெலிகள்** *(ஃபேத்யா, நான்காம் வகுப்பு)*

எங்கள் வீட்டு வாசலில் முள்ளெலிகள் வசிக்கின்றன. மாலை நேரத்தில் குடும்பம் முழுதுமாக ஒரு சிறு துவாரம் வழியாக வெளி வந்து குளத்தை நோக்கிப் போகின்றன. முன்னால் போகிறது முதிய முள்ளெலி. அதன் பின்னால் 5 குட்டி முள்ளெலிகள். அதற்கும் பின்னால் வருகிறது

அம்மா முள்ளெலி. அங்கே அவை என்ன செய்கின்றன? நான் கவனமாகப் பார்த்தேன். அவை தண்ணீர் குடிக்கின்றன, குளிக்கின்றன. பின்னர் பூமியைச் சிறு பாதங்களால் பறிக்கின்றன. அங்கிருந்து ஏதோ வேர் எடுத்துத் தின்னுகின்றன. முதிய முள்ளெலியும் அம்மா முள்ளெலியும் அவ்வாறு செய்கின்றன. இந்த நேரத்தில் குட்டி முள்ளெலிகள் விளையாடுகின்றன, கொட்டமடிக்கின்றன. அவை அமைதியான இடத்தைத் தேர்ந்தெடுத்திருக்கின்றன. இங்கு ஒருவரும் வருவதில்லை.

ஒரு நாள் எங்கிருந்தோ திடீரென்று ஒரு நாய் வந்து விட்டது. முதிய முள்ளெலியை நோக்கி வந்தது நாய். இது புரண்டு படுத்துக் கொண்டு அசையாமல் கிடந்தது. எல்லா முள்ளெலிகளும் புரண்டு படுத்துக் கொண்டன. நாய் முதிய முள்ளெலியை பல்லில் கௌவிக் கொண்டு குளத்துக்கு எடுத்துச் சென்றது. தண்ணீருக்குள் அதைப் போட்டது. முள்ளெலி குளக்கரைக்கு நீந்தி வந்தது. நாய் அதைப் பார்க்கிறது. பின்னர் முள்ளெலியுடன் விளையாடத் தொடங்கி விட்டது. நான் நாயைத் துரத்தி விட்டேன்.

அடுத்த வசந்த காலத்தில் முதிய முள்ளெலி ஒன்று மட்டுமே வாசற்படியில் இருந்தது. மற்றவை எல்லாம் எங்கே போய் விட்டன? ஒருவேளை வேறிடத்துக்குக் குடி போய் விட்டனவோ? முதிய முள்ளெலிக்கு வேறிடம் போக விருப்பமில்லை போலிருக்கிறது. வாசற்படியருகே அதற்கு நான் பால் கலந்த சாப்பாடு வைத்தேன். அதைத் தின்றது முள்ளெலி. அது என்னைக் கண்டு இப்போது பயப்படுவது இல்லை. அதை அறைக்குள் கூட்டி வந்தேன். விளக்கு ஏற்றினேன். வைத்த கண் வாங்காது விளக்கையே பார்த்தது முள்ளெலி. நான் தரையின் மீது பழைய பத்திரிகை ஒன்றை வைத்தேன். அதை வைத்துக் கொண்டு விளையாடத் தொடங்கி விட்டது முள்ளெலி. இரவைக் கழிக்க அது வாசலுக்குப் போய் விட்டது.

### அர்தியோம் மிகாய்லவிச்—செஞ்சேனை வீரர்

*(தன்கோ, நான்காம் வகுப்பு)*

எங்கள் பயனீர் கூட்டத்துக்கு வந்து சென்றார் அர்தியோம் மிகாய்லவிச். காய்கறிப் பிரிவில் அவர் வேலை செய்கிறார். அவர் ஒரு தாத்தா மட்டுமே என்று நாங்கள் நினைத்தோம். ஆனால் அவர் ஒரு செஞ்சேனை வீரரும் ஆவர். உள்நாட்டுப் போரில் பங்கெடுத்துக் கொண்ட வீரர். வேவு பார்க்கப் போனது, வெள்ளைப் படையினர் மீது தாக்குதல்

தொடுத்தது பற்றியெல்லாம் அவர் எங்களுக்குச் சொன்ஞர். ஒரு நாள் அவர் காயம் பட்டு தெனீகின்வாதிகளிடம் சிறைப்பட்டார். அவரைச் சுட்டுக் கொல்வதற்காக இழுத்துச் சென்றனர். ஆஞல் அவரைக் கொன்று விடவில்லே. இன்ஞெரு முறை கடுமையாகக் காயப் படுத்தி விட்டனர். இரவில் அவர் ஊர்ந்து வந்து ஒரு விவசாயியிடம் அடைக்கலம் புகுந்தார். அட்டாலியில் அவரை ஒளித்து வைத்து சிகிச்சை செய்து குணப் படுத்தினர். வெள்ளேப் படையினரை அடித்து வீழ்த்துவதற்கு மீண்டும் கிளம்பி விட்டார் அவர். இப்படிப் பட்டவர் அர்தியோம் மிகாய்லவிச். நானும் அவரைப் போலிருக்க விரும்புகிறேன்.

**வெற்றி விழா** *(வலோத்யா, மூன்ரும் வகுப்பு)*

வந்தது வெற்றி விழா. இந்த நாளில் போர் முடிந்தது. பாசிஸ்டுகளே நமது சோவியத் சேனே முறியடித்தது. தோட்டாக்களும் குண்டுகளும் வெடிப்பது நின்ற நாள் இது. இப்போது ஒவ்வொரு ஆண்டும் இந்த நாளில் தமது வெற்றியை மக்கள் கொண்டாடுகிருர்கள், கொல்லப் பட்டவர்களுக்கு அஞ்சலி செலுத்துகிருர்கள். நமது கம்யூனிஸ்டுக் கட்சியை லெனின் நிறுவிஞர். அவர் மக்களிடம் சொன்ஞர்: ''உக்ரேனியர்களே, ருஷ்யர்களே, பெலருஷ்யர்களே, ஜார்ஜியர்களே, மல்தாவியர்களே நீங்களெல்லாம் நட்பு கொண்டு வாழுங்கள். உங்களே வெல்ல ஒருவராலும் முடியாது.''

நாங்கள் கூட்டாகச் சேர்ந்து வியாசம் எழுதிஞேம். இலேயுதிர் காலத்தின் ஒரு மூட்டம் நிறைந்த நாளில் கனவு இடத்தில் வெப்ப அடுப்பிற்கு அருகில் அமர்ந்திருந்தனர் குழந்தைகள். தொலேவிலுள்ள உஷ்ணத் தீவுகளேப் பற்றி நான் சொன்னேன். புழுக்கம் நிறைந்த கோடைகாலம், ஆறு, தர்ப்பூசணித் தோட்டத்தில் ஓய்வெடுத்தது முதலியவை எல்லாம் குழந்தைகளுக்கு நினேவு வந்தது. இந்த நினேவுகளிலிருந்து தோன்றியது வியாசம். ''நமது தாய் மொழி'' எனும் நோட்டில் குழந்தைகள் இதை எழுதினர்.

**தர்ப்பூசணித் தோட்டத்தில் நாங்கள் வசித்தது எப்படி?**

உஷ்ணமான பூமியில் தர்ப்பூசணிப் பழங்கள் கிடக்கின்றன. நீல நிறத்தில், பச்சை நிறத்தில், மங்கிய நீல நிறத்தில் அவை இருந்தன. காலே நேரத்தில் பனித்துளிகள்

அவற்றை மூடி இருந்தன. அவை மிகவும் குளிர்ந்தவை யாய் இருந்தன. புல்லின் மீதும் பனித்துளி. பனித்துளி களிலோ எங்கள் குடிசை தெரிகிறது. ஒரு நாள் தன்கோ அதிகாலையில் எழுந்து ஒரு பெரிய தர்ப்பூசணியைக் குடி சைக்குக் கொண்டு வந்தான். அதனை வெட்டினான். ஒவ் வொருவரும் விழித்தவுடன் குளுமையான தர்ப்பூசணிப் பழம் தந்து உபசரித்தான். ''கடைசியாகத் துயிலெழுகிற வருக்குத் தர்ப்பூசணியின் மிக ருசியான பகுதி கிடைக் கும்'' என்றான் தன்கோ. எல்லோரும் எழுந்து விட்டார் கள். சாஷா மட்டுமே இன்னும் தூங்கிக் கொண்டிருந்தான். அவன் எப்பொழுது விழிப்பான் என்று நாங்கள் காத்துக் கொண்டிருந்தோம். காத்திருந்து காத்திருந்து நாங்கள் சலித்துப் போனோம். ருசியான துண்டையும் நாங்களே தின்று விட்டோம். இன்னொரு தர்ப்பூசணிப் பழம் கொண்டு வந்தார்கள். இதன் ருசியான பகுதி சாஷாவிற்குக் கிடைத் தது.

மூட்டம் நிறைந்த அமைதியான காலைநேரம். பள்ளத் தாக்கிலிருந்து மிதந்து வந்தது மூட்டம். தர்ப்பூசணித் தோட்டம் முழுதையும் மூடி விட்டது. மேகத்திற்குள் ளிருந்து எட்டிப் பார்த்தான் சூரியன். தர்ப்பூசணிப் பழங் களின் மீது வெளிச்சத்தை உமிழ்ந்தான். இப்போது அவை தர்ப்பூசணிப் பழங்கள் அல்ல. நீல நிற, பச்சை நிற, இள நீல நிறக் கண்ணடிப் பந்துகள் வெண்ணிற ஆற்றில் மிதந்து செல்வது போல இருந்தது.

பகல் நேரத்தில் தர்ப்பூசணித் தோட்டத்தின் மீது வெப்பக் காற்று உலா வருகிறது. நீல வானத்தில் வானம் பாடிகள் பாடுகின்றன. தர்ப்பூசணித் தோட்டத்தில் அவை ஏன் அமரவில்லை! கோதுமை, பார்லி, தினை வயல் களில் மட்டும் வானம்பாடிகள் கூடு கட்டிக் குஞ்சு பொறிப் பது ஏன்? வானம்பாடிக் கூடுகளைப் பக்வீட்டில்தான் நிறையப் பார்க்கலாம்.

தர்ப்பூசணித் தோட்டத்துக்கு அருகில், பள்ளத்தாக் குக்குப் பக்கத்தில் எறும்புப் புற்று ஒன்று கண்டோம். எறும்புகள் எங்கோ விரைந்து செல்வதைக் கண்டார் தாத்தா. எங்கோ அருகில் பெரிய எறும்புப் புற்று இருக் கிறது. அது எங்கிருக்கிறது என்று எறும்புகளே சொல்லு கின்றன. எறும்புப் பாதையில் தர்ப்பூசணிப் பழத் துண்டு கள் சிலவற்றைப் போட்டார் தாத்தா. இனிப்பாக இருந்த பழத்தின் மீது எறும்புகள் உடனே மொய்த்தன. அதிலி ருந்து சிறு சர்க்கரைத் துகள்களை எடுத்துக் கொண்டு அதனை ஒரு திசையில் சுமந்து சென்றன. நாங்கள் அவற்றின் பின்

ுல் சென்று எறும்புப் புற்றுக்குப் போய்ச் சேர்ந்தோம். புதருக்கு அடியில் உயிருள்ளது போல ஒரு சிறு குன்று இருந்தது. சர்க்கரைத் துகள்களை எங்கோ துவாரத்துக்குள் எடுத்துச் சென்று பின்னர் மீண்டும் தர்ப்பூசணித் தோட்டத்திற்கு வருகின்றன. காட்டுக்கும் மனிதர்களுக்கும் எவ்வளவு நன்மை செய்கிறது எறும்பு என்று தாத்தா எங்களுக்கு எடுத்துச் சொன்னார். பயிரழிக்கும் ஜந்துக்கள் பலவற்றிலிருந்து பல ஏக்கர் அளவு காட்டை ஒவ்வொரு எறும்புப் புற்றும் பாதுகாக்கிறது. நாங்கள் எறும்புகளை பாதுகாக்கத் தொடங்கினோம். பின்னர், புதிய எறும்புப் புற்றுகள் கட்டுவதற்கு தாத்தா எங்களுக்குச் சொல்லித் தந்தார்.

நாங்கள் வீட்டுக்குத் திரும்பும்போது ஒவ்வொருவருக்கும் ஒரு பெரிய தர்ப்பூசணிப் பழம் தந்தார் தாத்தா. தர்ப்பூசணிப் பழத்தை நாங்கள் சன்னலின் மீது பல நாட்கள் வைத்திருந்தோம். உஷ்ணக் காற்று, பரந்த ஸ்டெப்பி வெளி, வானம்பாடி, தாத்தா, குடிசைக்கருகே குடி வந்துள்ள சில்வண்டின் இன்னிசை பற்றியெல்லாம் எங்களுக்கு இந்தத் தர்ப்பூசணிப் பழங்கள் நினைவு படுத்தின. அந்தச் சில்வண்டு இப்போது எங்கே?

வார்த்தையின் அழகு கவிதையில்தான் மிகப் பிரகாசமாக உருவம் பெறுகிறது, செய்யுளிலோ பாட்டிலோ குழந்தைகள் ஆனந்தம் அடையும் போது அவர்கள் வார்த்தையின் இசையையே கேட்கிறார்கள். சிறந்த செய்யுள்களில் கவிதா வார்த்தை தாய்மொழியின் மிக நுண்ணிய உள நெகிழ்ச்சி வேறுபாடுகளை வெளிப்படுத்துகிறது. இதன் காரணமாகவே செய்யுளை ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டுமென்று விரும்புகிறார்கள் குழந்தைகள். மனதில் உள்ள வார்த்தையைத் திரும்பச் சொல்வதன் மூலம் உண்மையிலேயே களிப்பெய்துகிறது குழந்தை.

கவிதை வார்த்தையின் இசையைக் குழந்தைகள் உணரவும் அனுபவிக்கவும் வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். சுற்றியுள்ள உலகத்தின் அழகில் குழந்தைகள் மயங்கியிருக்கும் போது, இயற்கையைப் பின்னணியாகக் கொண்டு நான் செய்யுள் படித்துக் காட்டினேன். ஒருநாள் நாங்கள் வயலுக்குப் போனோம். குளத்தின் மீது ஓர் அற்புதக் காட்சி தோன்றியது. கண்ணாடி போன்ற அதன்

தெளிந்த ஆழமான நீரில் வில்லோ மரத்தின் பிரதி பலிப்புத் தெரிந்தது. குழந்தைகளுக்கு அப்போது த. ஷெவ்ச்சென்கோவின் செய்யுளைச் சொன்னேன்:

காற்று மெதுவாய் வீசி வர,
வயலும் ஸ்டெப்பியும் கணுக் காண,
பள்ளத் தாக்குகளினிடையில்,
ஏரிகளுக்கு மீதாக,
பசுமை ஆகின்றன வில்லோக்கள்...

இந்த ஐந்து வரிகளைக் குழந்தைகள் திரும்பச் சொன்னார்கள். உயிருள்ள சித்திரத்தைப் படைக்கிற வார்த்தைகளின் கலவையில் பேச்சின் இசையொலி பிறக்கிறது என்று அவர்கள் உணர்ந்தார்கள். இது வார்த்தைக்குப் புதிய உளநெகிழ்ச்சி வேறுபாட்டைத் தருவது மட்டுமின்றி, சுற்றியுள்ள உலகத்தில் புதியதொரு அழகைத் திறந்து காட்டுகிறது. உலகக் கவிதைகளின் சிறந்த மாதிரிகள் ஏற்படுத்திய மனப்பதிவு வார்த்தையின் இசையொலியைப் படைக்குமாறு குழந்தைகளைத் தூண்டியது. வசந்தகாலத்து அழகில் ஆனந்தம் கொண்ட குழந்தைகள் வார்த்தையின் இசை ஒலிக்கும் வண்ணம் அதனை உச்சரிக்க முயன்றனர்—கவிதா உத்வேகம் குழந்தை இதயங்களை ஆட்கொண்டது. சிறுவர்களும் சிறுமிகளும் கவிதை இயற்றினர். வயலை நெடுந் தொலைவிற்கு ஊடுருவிப் பார்க்கிறாள் லரீசா. அவள் வார்த்தையை மெதுவாக உச்சரிக்கிறாள். அதன் ஒலியைக் கூர்ந்து கேட்கிறாள்:

''கோதுமை மஞ்சள் கடலில், ஆடல் செய்யும் அலைகள்.''

''வெப்பக் கானல்நீரில் நீலக் குன்றின் நடுக்கம்'' என்று அவளைத் தொடர்ந்து சொன்னான் செர்யோஷா.

மகிழ்ச்சிப் பதட்டம் அனைவரையும் ஆட்கொண்டது. வார்த்தையின் இசையொலியை ஒவ்வொருவரும் கண்டு பிடிக்க விரும்பினர். கவிதா உத்வேகம் குழந்தையின் உள்ளத்தை ஆட்கொண்டிருக்கிற இந்த நேரத்தில், குருதி நிறைந்து உயிர் ததும்பி நிற்கிறது வார்த்தை. வானவில்

லின் வண்ணங்கள் அனைத்துடனும் விளையாடுகிறது அது. புல்வெளிகள், புல்தரைகள் ஆகியவற்றின் நறுமணத்தை அது அள்ளி வருகிறது. அது குழந்தையின் ஆன்மிக வாழ்வுக்குள்ளேயே நுழைந்து விடுகிறது. தமது உணர்ச்சிகள், சிந்தனைகள், அனுபவங்கள் ஆகியவற்றை வெளியிடுகின்ற சாதனம் ஒன்றைத் தேடி வார்த்தையில் அதனைக் கண்டு பிடிக்கிறார்கள் குழந்தைகள். குழந்தை இதயத்தில் கவிதா உத்வேகத்தைத் தட்டியெழுப்புவது சிந்தனையின் உயிருள்ள இன்னொரு ஊற்றுக்கண்ணைத் திறந்து விடுவதாகும். மனிதப் பேச்சில் வார்த்தைகள் அர்த்தப்படுத்துகிற பொருள்களையும் தோற்றங்களையும் மட்டும் இந்த வார்த்தை குறிப்பதில்லை, உணர்ச்சிகள், அனுபவங்கள் ஆகியவற்றின் ஆழமான சொந்தப் புலனறிவையும் தருகிறது என்பதில்தான் இந்த ஊற்றுக்கண்ணின் ஆற்றல் அடங்கி இருக்கிறது.

கவிதைப் படைப்பைக் கற்றுத் தருவது இளம் கவிஞர்களை உருவாக்குவதற்காக அல்ல. இது ஒவ்வொரு இளம் இதயத்திலும் நல்லுணர்ச்சிகளைத் தோற்றுவிப்பதற்கே ஆகும். குழந்தை இதயங்களில் கவிதா உத்வேகங்களைத் தோற்றுவிப்பதற்கும், ஒவ்வொரு குழந்தையின் உள்ளத்திலும் சொந்தக் கவிதையொலியை வார்த்தை பெற்றிருக்க வேண்டுமென்பதற்காகவும் நான் ஒவ்வொரு வாய்ப்பையும் பயன்படுத்திக் கொண்டேன்.

பனிக்காலத்து அமைதியான காலை நேரம். வெள்ளைப் பனித் துகள்கள் மூடின மரங்கள். ஊசி போலப் பனித் துகள்கள் மூடியுள்ள கிளைகள், வெள்ளிப் பட்டை போடப் பட்டவை போலத் தோன்றுகின்றன. பள்ளித் தோட்டத்திற்கு நாங்கள் போகிறோம். இணையற்றதாய் விளங்கும் அந்த அழகைக் கலைத்துவிடாதிருக்கும் பொருட்டு கிளைகளைத் தொடாமலிருக்க முயல்கிறோம், நிற்கிறோம். பனிக் காலத்தின் அழகு பற்றிய அ. புஷ்கின், கே. கெய்னே ஆகியோரின் கவிதைகளைச் சொல்கிறேன் நான். கவிதையும் அழகும் ஏற்படுத்தும் மனப்பதிவின் காரணமாக, பனித் துகள்கள் மூடியுள்ள மரத்தின் சித்திரத்தை வரையத் தக்க வார்த்தைகளைத் தேர்ந்தெடுக்கிறார்கள் குழந்தைகள்.

கவிதை இயற்றுகிறார்கள், இவ்வாறு கூட்டாகத் துண்டு துண்டாகச் செய்கிறார்கள். பனித்துகள் மூடிய தோட்டத்திற்கு நாங்கள் பன்முறை வருகிறோம். முன்னர் இயற்றிய கட்டுக்கதைகளிலுள்ள கற்பனை உருவங்கள் கவிதையில் உயிர் பெறுகின்றன:

மாயக் கொல்லன் வந்தான்,
பொன்னுலை கொண்டு வந்தான்,
உருக்கினான் வெள்ளி யதனில்,
ஊற்றினான் தோட்ட மரத்தில்.
தங்கச் சுத்தி கொண்டு,
இரவு முழுதும் அடித்தான்...
ஊசியை ஊசி தொட்டிட
வெள்ளி யாச்சு தோட்டம்.
எங்கே அந்தக் கொல்லன் மாயன்?
தங்க இறக்கை கொண்டே அவனும்,
பரிதி நோக்கிப் பறந்தான் மீண்டும்.
வெள்ளி எடுத்துக் கொள்வான்,
பையில் அதனை வைப்பான்,
இங்கே திரும்பி வருவான்,
மீண்டும் உருகும் வெள்ளி,
மீண்டும் தோட்டம் பாடும்...
எங்கே போனான் கொல்லன்?
என்றே இருப்பான் பரிதி.
எனது வெள்ளி உருக்க
இத்தனை காலமா உனக்கு?
மலர் வடம் செய்து தரவும்
மறந்தது ஏனோ கொல்லா?
வெள்ளியமைதித் தோட்டத்தில்
செங்கதிர் எட்டிப் பார்த்தான்.
வியப்புக் கொண்டான் பரிதி,
களிப்புக் கொண்டான் அழகில்...

குழந்தைப் பருவத்தில் ஒவ்வொரு குழந்தையும் ஒரு கவிஞனே. திடுமென்று தோன்றுகிற ஏதோ ஓர் அற்புதத்தால் கவிதா உத்வேகம் வந்துவிடும் என்று எதிர்பார்ப்பது அப்பாவித்தனமே என்பது சொல்லாமலே விளங்கும். குழந்தையிடம் பிறவித் திறமை இருக்கும் என்பதிலும், இயற்கையிலேயே ஒவ்வொரு குழந்தையும் கவிஞனாக

விளங்குகிறது என்பதிலும் எனக்கு நம்பிக்கை இல்லை. அழகு பற்றிய மனித உணர்ச்சியே உள்ளத்தில் கவிஞனைத் தட்டியெழுப்புகிறது. இந்த உணர்ச்சியைப் பயிற்றுவிக்க வில்லையேல் மாணவன் இயற்கையின், வார்த்தையின் அழகு பற்றி அலட்சியமாகவே இருப்பான். இவனுக்கு தண்ணீ ரில் கல்லெறிவதும் பாடுகின்ற வானம்பாடி மீது கல்லெறி வதும் ஒன்றே. படிப்பதற்கும், பயிற்சியை முடிப்பதற்கும் கற்றுத் தருவது போலவே கவிதா உத்வேக மகிழ்ச்சியை மாணவனுக்குத் தருவதும், கவிதைப் படைப்பின் உயிருள்ள ஊற்றுக்கண்ணை அவன் இதயத்தில் திறந்து விடுவதும், முக்கியமானதாகும். சில குழந்தைகளிடம் இந்த ஊற்றுக் கள் பலமாகப் பீறிடுகிறது, மற்றவர்களிடம் பலவீன மாகப் பீறிடுகிறது. இந்தக் கவிதா உத்வேகம் சில விஞடி கள் வேகமாக எழும்பிப் பறப்பதல்ல, பளிச்சிட்டு மறை யும் நெருப்புமல்ல. அது நிரந்தரமான ஓர் ஆன்மிகத் தேவையே என்று நான் கண்டேன்.

பேச்சுக் கலாசாரத்தின் உயர்ந்த படிக்கட்டே கவி தைப் படைப்பு ஆகும். பேச்சுக் கலாச்சாரமோ மனிதக் கலாசாரத்தின் சாரத்தையே வெளியிடுகிறது. கவிதைப் படைப்பு ஒவ்வொருவருக்கும் எட்டக்கூடியதே. தனித் திறமை பெற்றுள்ளவர்களுக்கு மட்டுமே கிட்டக் கூடிய தல்ல. கவிதைப் படைப்பு மனிதனை உயர்வு பெறச் செய் கிறது. படைப்புத் தொழிலின் மிக நுண்ணிய இந்த அம் சம் ஒவ்வொரு குழந்தைக்கும் மிகமிகச் சொந்தமானதாக வும், இதயத்துக்குகந்த பணியாகவும் இருக்க வேண்டும் என்பது மிக முக்கியமானதாகும்.

மூன்றும் வகுப்பில் இருக்கும் போதே லரீசா, சான்யா, செர்யோஷா, காத்யா, வார்யா, கோல்யா, தான்யா,லீதா ஆகியோர் தனிமையில் எழுதிய கவிதைகளை எனக்கு ரகசியமாகப் படித்துக் காட்டத் தொடங்கினர். மற்ற குழந்தைகளும் கவிதை எழுதுகிறார்கள் என்று எனக்குத் தெரியும். அவர்கள் தமது ஈடுபாடு பற்றிப் பேசுவதற்குக் கூச்சப்படுகிறார்கள். இது மிகவும் நல்லது.

குழந்தைகள் கவிதை இயற்றுகிறார்கள் என்பதில் நான்

விசேஷமான எதையும் பார்க்கவில்லை. ஆன்மிக ஆற்றலின் சாதாரண விளையாட்டே இது. குழந்தைப் பருவம் முழுமையானதாய் விங்குவதற்கு மிக முக்கியமாய்த் திகழும் சாதாரணப் படைப்புத் தீயே இது. குழந்தைகளின் ஆன்மிக வாழ்க்கை இவ்வளவு செழுமையானதாய் இருந்தது என்பதும், இவ்வளவு உயிருடன் அது பீறிட்டது என்பதுமே என்னை மகிழ்ச்சியில் ஆழ்த்தியது.

கவிதா உத்வேகம் கோல்யாவிடம் நல்லுணர்ச்சிகளை ஏற்படுத்தியது என்பது குறிப்பாக எனக்குச் சந்தோஷம் தந்தது. அவனுடன் நான் கொண்டிருந்த நட்பு மேலும் மேலும் இறுகியது. நான் தனிமையாக இருக்க விரும்பிய இடம் ஒன்று தோட்டத்தில் இருந்தது. நல்ல காலநிலையில் இங்கு நான் ஓய்வு கொள்வேன். வயலின் வாசிப்பேன். இந்த இடத்தைத் தற்செயலாகக் கோல்யா ''கண்டு பிடித்து'' விட்டான். ஒருவேளை அவனும் தனிமையைத் தேடினானே என்னவோ. என்னைக் கண்டு சிறுவன் கூச்சம் கொண்டான். அங்கிருந்து போய்விட விரும்பினான். நான் அவனை இருக்கும்படி வேண்டினேன். நான் வயலின் வாசித்தேன். கோடைகால மாலைநேரத்தின் அழகு தரும் இன்பத்தை நான் வெளியிட விரும்பினேன். இசையைக் கூர்ந்து கேட்டான் கோல்யா. பின்னர் நான் மிகவும் மூழ்கிப் போனதால்,பையன் என்னருகில் அமர்ந்ததையே; கவனிக்கவில்லை. அவனிடம் வயலினைத் தருகிறேன். நான் வாசித்ததையே திரும்ப வாசிக்க முயன்றான் கோல்யா. ஆனால் அவனால் ஒன்றும் முடியவில்லை. வாசிப்பதை நிறுத்தி விட்டான் பையன்.நாங்கள் சூரியன் மறைவதைப் பார்த்தபடி, மாலைநேர அமைதிக்குச் செவிமடுத்தபடி மௌனமாக உட்கார்ந்திருக்கிறோம். சுற்றியுள்ள உலகத்தின் அழகு பற்றிய அனுபவ உணர்ச்சி எங்களைப் பந்தப் படுத்தியதாலோ என்னவோ என் மீது கோல்யா நம்பிக்கை கொண்டு இயற்கையைப் பற்றிய தனது கவிதையைச் சொன்னான். இதோ அது:

பச்சிலை நடுவே நீலப் பூக்கள்;
பூக்கள் மேலே பறக்கும் தேனீ.

பவளங் குறிச்சிப் புதருக்குள்ளே,
இரவில் வந்து பாடும் குயில்கள்.
காலை நேரம் இடியின் முழக்கம்,
பூக்கள் குளிக்கும் மழையின் தூறல்.
தோட்டத்துயரே மிதக்கும் மேகம்,
மேகம் போன்றன பவளப் பூக்கள்.

அந்த மாலைப் பொழுதில் நானும் கோல்யாவும் நீண்ட நேரம் தோட்டத்தில் அமர்ந்திருந்தோம். பையன் இங்கு அடிக்கடி வரத்தொடங்கினான். ஒவ்வொரு முறையும் சிறிய கவிதை ஒன்று சொல்லுவான். இதோ சிறுவனின் இன்னொரு கவிதை. இது எனது நினைவில் ஆழமாகப் புகுந்து நிறைந்ததால், சிறுவன் சொல்லிய பின் ஓராண்டு கழித்து இதனை நான் எழுதி வைத்தேன்:

மறைந்தது சூரியன் மலைக்குப் பின்னே.
ஒளிர்ந்தது வானம் செஞ்சிவப்பாக,
மிகுந்தது காற்றென நாளை மாறும்.
பறந்தது வானில் காகக் கூட்டம்,
மேற்றிசை கறுத்த காட்டினை நோக்கி.
இசையை எழுப்பின பாப்ளார் இலைகள்.
வந்தது அமைதி. எங்கோ ஓரிடம்,
ஓசைப் பாதையில் வண்டிச் சத்தம்.
இருட்டுக் கட்டும் செஞ்சுடர் வானம்.
வெளிறிய சாம்பல் வெப்பப் போர்வை,
ஒளிரும் மீன்கள் உயரே மின்னும்.
வந்தே விட்டது இரவின் நேரம்.

கோல்யா தனது கவிதைகளை எழுதி வைப்பதில்லை என்று நான் அறிந்தேன்: அவற்றை அவன் நினைவில் வைத்துக் கொள்கிறான். அவனது நினைவிலும் இதயத்திலும் கவிதைகள் வாழ்கின்றன. சுத்தமான காகிதமும் கையு மாக உட்கார்ந்து கவிதை எழுதுவதில்லை எனது மாணவர் கள். எழுதுவதற்காகவென்று கவிதை பிறப்பதில்லை. வரையாமல் குழந்தைகளால் எப்படி இருக்க முடியாதோ, அதேபோல கவிதை இயற்றாமலும் அவர்களால் இருக்க வியலாது.

மனத்தின் நெருக்கத்தினால் ஷூராவும் என்னை நம்பித் தனது ரகசியத்தை வெளியிட்டான். பனிக்கால நாளில்

நாங்கள் காட்டுக்குப் போனோம். பனிப் பட்டைகளில் சறுக்கினோம். செஞ்சூரியன் மறையத் தொடங்கினன். அந்திக் கிரணங்களில் பைன் மரங்களின் அடித்தண்டுகள் இரும்பி செதுக்கப் பட்டது போலிருந்தன. காட்டுச் சரிவில் நின்று நாங்கள் இயற்கையழகைப் பருகினோம். இந்தக் கணத்தில் மரங்கொத்தி பற்றிய தனது பாடலை ஷுரா பாடினன்:

பைன் மரப் பட்டையில் ஆயிரந் தந்தி,
மரத்தின் உச்சியில் மரங்கொத்திப் பறவை.
மேலுள்ள தந்தியை மூக்கில் கொத்திட,
மெல்லிசை நாதம் எழுப்பிடும் தந்தி.
மெல்லிய தந்தி பரிதியை முட்டும்,
பூமியில் கிடந்தால் அதுவென்ன தந்தி.
செம்பட்டைக் கடியில் வெண்கலத் தந்தி,
நிலத்தில் கிடந்து மெதுவாய்க் கத்தும்.
மரங்கொத்தி வந்து தந்தியைத் திறந்து,
எடுத்தது அவனை அடித்தது மூக்கில்...
இன்னிசை நாதம் எழுந்தது காட்டில்,
இன்னொரு தந்தி தேடுது பறவை.

குழந்தைப் பருவத்தில் வார்யா டஜன் கணக்கான கவிதைகள் இயற்றினாள். இந்தச் சிறுமியின் உள்ளம் மென்மையானது, மனப்பதிவுகள் ஏற்படுத்துவது. கோடை கால மாலைப் பொழுதின் அழகில் கவரப்பட்ட வார்யா, குளக்கரையில் நின்று கொண்டு, தண்ணீரை நோக்கித் தாழ்ந்திருந்த வில்லோ மரங்களையும் நீல வானம் பிரதிபலித்த குளத்தின் படிக நீரையும் பார்த்துக் கொண்டிருந்ததை நான் கண்டேன். பின்னர் சில தினங்கள் கழித்து அந்தக் கோடைகால மாலைப்பொழுதைப் பற்றி சிறுமி ஒரு கவிதை சொன்னாள்:

வில்லோவும் வெள்ளை வீடும் நீல
வானமும் தம்மை நீரில் காட்டும்.
நீல ஆடி முன்னால் நின்றால்,
காணும் தொலைவு காணா உலகு.
செக்கர் வானம், வெண்மை மேகம்,
மின்னும் மீன்கள் தூரச்சோலை,

பரிதியிடத்துப் பறந்த பறவை,
போய் நான் வருவேன் என்றே திரும்பும்.
அற்புத உலகம் அதற்கொரு பாடல்,
கெட்டியான தந்தியதைத் தொட்டு விட்டார்யாரோ.
வானவீதி யங்கு நல்ல இசையெழுப்பிப் பாடும்,
குடிசையின்றி மரமும் குரலெழுப்பிப் பாடும்.
பரிதியங்கு நெருப்பெடுத்துப் பற்ற வைக்கும் போது,
கடல் கடந்து இரவைப் புரு கழிக்கச் செல்லும் போது,
பொந்து நுழைந்த வௌவால் பாதஞ் சுத்தம் செய்யும்
போது,
நாள் முழுதும் வீசியதால் களைப்புக் கொண்ட காற்று,
ஓய்வெடுக்க எண்ணி யங்கு கீழ்ப் படுத்த போது,
பள்ளத் தாக்கினுள்ளிருட்டு பதுங்கி வந்த போது,
குளத்தருகே மாலை நேரம் மிதந்து வரும் பாடல்.

ஒவ்வொரு ஆண்டும் இளையுதிர்காலம் நெருங்கும் போது கோடைகாலத்திடம் விடைபெற்றுக் கொள்ள வேண்டுமென்று குழந்தைகள் விரும்பினர். எங்கள் ஓக் மரத்திடம் நாங்கள் போவோம். கடந்து போன கோடையைப் பற்றியும், கொக்குகளைப் பற்றியும், வெப்பம் மிகுந்த இலையுதிர் நாட்களைப் பற்றியும் நாங்கள் கவிதை இயற்றினோம். நாலாவது முறையாகக் கோடைகாலத்திடம் விடைபெறும் போது எங்களுக்கு மிகவும் அருமையான, இனியதான தாய்நாடு பற்றி குழந்தைகள் கூட்டாகக் கவிதை இயற்றினர்.

குழந்தைக் கற்பனை படைத்த பிரகாசமான சித்திரங்கள் கவனத்தைக் கவர்வதாய் புகழ்ச்சிக்கு உரியவையாய் இருந்தன என்பதே பிரதானமானதாகும். கவிதா உத்வேகம் ஆன்மிக வாழ்வில் ஒரு தேவையாகி விட்ட கவிதைகளின் சிறந்த மாதிரிகளைக் குழந்தைகள் இயற்ற வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். சிறிய கவிதை நூலகம் ஒன்றை நாங்கள் உருவாக்கினோம். கவிதைப் படைப்பு ஆன்மிகத் தேவையாக இன்னும் யாருக்கு விளங்கவில்லையோ, கவிதைச் சொல்லுக்கான மெல்லுணர்வை யாரிடம் பயிற்றுவிக்க வேண்டியிருந்ததோ அவர்களுக்கு இந்த நூலகம் குறிப்பாக அவசியமாக இருந்தது. குழந்தையின் கவிதைப் படைப்பை அற்புதத் திறமையின் அறி

குறியாகக் கருதக் கூடாது என்று நான் மீண்டும் சொல்கிறேன். சித்திரம் வரைவதைப் போலவே இதுவும் ஒரு நியதி பூர்வத் தோற்றமே. எல்லோருமே சித்திரம் வரைகிருர்கள், ஒவ்வொரு குழந்தையும் இக்கட்டத்தினூடே செல்கிறது அல்லவா? சுற்றியுள்ள உலகத்தின் அழகையும் வார்த்தையின் அழகையும் குழந்தைகளின் முன்னே ஆசிரியர் திறந்து காட்டும் போதுதான் குழந்தைகளின் ஆன்மிக வாழ்வின் சாதாரணத் தோற்றமாக கவிதைப் படைப்பு விளங்கும். இசை இல்லாமல் இசை விருப்பத்தை எப்படிப் பயிற்றுவிக்க முடியாதோ, அது போல படைப்பு இல்லாமல் கவிதைப் படைப்பில் விருப்பத்தைப் பயிற்றுவிக்க முடியாது.

புஷ்கினையும், கெய்னேயையும், ஷெவ்ச்சென்கோவையும், லேஸ்யா உக்ரயின்காவையும் நேசிக்கிற மனிதன், சுற்றியுள்ள அழகைப் பார்த்து அது அழகாய் இருக்கிறது என்று சொல்ல விரும்புகிற மனிதன், அழகை உணருகின்ற ஒரு தேவையைப் போலவே அவசியமான வார்த்தைக்கான தேட்டத்தையும் ஒரு தேவையாகக் கொண்டிருக்கிற மனிதன், மனிதப் பெருமையை மதிப்பதிலும், மனிதர்களுக்கிடையே இருக்கக் கூடிய மிக நியாயமான உறவுகளை — கம்யூனிச உறவுகளை — நிலைநாட்டுவதில் மனித அழகு பற்றிய கருத்தை வெளியிடுகிற மனிதன் ஒரு முரடனுகவோ, முசுடாகவோ மாறிவிட முடியாது.

## எங்கள் அழகு மைதானம்

வசந்தகாலத்தில் முதல் வகுப்பு முடிவதற்கு முன்னல், அழகு மைதானம் ஒன்றை நாங்கள் உருவாக்கத் தொடங்கினேம். அது பற்றி நெடு நாட்களாகக் குழந்தைகள் கனவு கண்டு வந்தனர். இயற்கை அழகு மனிதக் கைகளால் படைக்கப்பட்ட அழகால் மேலும் செழுமைப் படுத்தப்படுகிற ஓர் அமைதியான, ஒதுக்கமான இடமாக அதனை நாங்கள் கற்பனை செய்து வைத்திருந்தோம். எதிர்காலத்தை நோக்கி நின்றது இக்கனவு. ஒவ்வொரு ஆண்டும்

மேலும் மேலும் அதிகமான அளவில் இந்த இடத்தில் தாவரங்கள் இருக்கும் என்று நாங்கள் நினைத்திருந்தோம். இங்கு நாங்கள் உழைப்போம், ஓய்வெடுப்போம், வசந் தத்தை எதிர்கொள்வோம், கோடைக்கு விடை கொடுப் போம்.

பள்ளித் தோட்டத்திற்கும் அடர்ந்த புதர்களுக்கும் இடையில், பள்ளத்தாக்கின் சரிவில் வளர்ந்திருந்த புற் களுக்கு அருகில் சிறு மைதானம் ஒன்றைக் குழந்தைகள் கண்டனர். மழை பெய்த போது இங்கு நிறைய ஈரம் சேர்ந்திருந்தது. மைதானத்தில் இருந்த களைச்செடிகளை எல்லாம் பிடுங்கி எறிந்தோம். அதனை பசும் புல்வெளியாக மாற்றத் தொடங்கினோம்.

''இந்த இடம் பசுமை ராஜ்யமாக இருக்கும். பசிய ஹாப் கொடிகளால் பள்ளத்தாக்கின் சரிவு போர்த்தப் படும். இங்கிருக்கும் புதர்களில் வானம்பாடிகளும் ஓரியல் பறவைகளும் வாழும்'' என்று நான் குழந்தைகளிடம் சொன்னேன்.

குழந்தைகளுக்கு இந்தக் கனவு உற்சாகமூட்டியது இந்த மைதானத்தைப் பசும் புல்வெளியாக மாற்றுவதற் காக நாங்கள் நிறைய உழைத்தோம். வயலிலிருந்து நிறையப் புற்பத்தைகளை வெட்டியெடுத்து வந்து நட்டு அதற்குத் தண்ணீர் ஊற்றி வளர்க்க வேண்டியதாயிற்று. பசும் புல்லுக்கு மழை தண்ணீர் ஊற்ற வேண்டும் என்பதற் காக ஆவலுடன் காத்திருந்தனர் குழந்தைகள். அவர்கள் ஹாப் கொடிக் கன்றுகள் சிலவற்றைக் காட்டில் கண்டனர். பள்ளத்தாக்கின் சரிவில் அவற்றை நட்டனர். அதிருஷ்டவ சமாக கோடைகாலம் ஈரம் மிகுந்ததாய் இருந்தது. எனவே, எல்லாத் தாவரங்களும் நன்கு உயிர் பிடித்துக் கொண்டன. லாந்திஷ் செடிகள் சிலவற்றைக் காட்டிலிருந்து தோண்டி யெடுத்து வந்து புல்வெளியில் ஓரிடத்தில் நட்டோம். காட்டு ரோஜாச் செடிகளை மூன்று புதர்களாக நட் டோம். அவற்றுக்கு அருகில் ரோஜாச் செடிகளை வளர்த் தோம். மலர்கள் இங்கு கோலோச்சிக் கொண்டிருக்க வேண்டும். காட்டுக் கொட்டைச் செடிகளை புல்வெளி

யெங்கும் நட்டோம். காட்டுப் பூக்கள் இங்கு வளர வேண்டும் என்று குழந்தைகள் விரும்பினர். கேந்திச் செடிகளையும் மற்றவற்றையும் அவர்கள் கொண்டு வந்தார்கள். மூடு தோட்டத்திலிருந்து கிரிசான்திமச் செடிகள் சிலவற்றைக் கொணர்ந்தனர். இலையுதிர்காலத்தின் நடுப்பகுதி வரை அவை மலர்ந்து கொண்டிருக்கட்டும்.

வார்யா சூரியகாந்திச் செடி நட்டாள். புல்வெளியின் ஒரு மூலையில் ஒரு பிடி பக்வீட் விதைகளைத் தூவினர் குழந்தைகள். நீனு, சாஷா ஆகியோரின் தந்தை குட்டையான ஆப்பிள் கன்றுகள் இரண்டை எங்களுக்குப் பரிசளித்தார். தனது பாட்டி டியூலிப் செடிகள் வளர்த்துவதாக வீத்யா சொல்லியிருந்தான். டியூலிப் செடிகளை அவற்றின் வேரோடு கொண்டு வந்து பல பாத்திகளில் நட்டோம். ஒருநாள் காட்டில் பூக்களுடன் நின்ற லைம் மரம் ஒன்றைக் குழந்தைகள் கண்டனர். அதன் கிளைகளில் ஆயிரக்கணக்கான தேனீக்கள் ரீங்காரம் செய்து கொண்டிருந்தன. அது காடு முழுதும் ஹார்ப் கருவியின் இசை ஒலிப்பது போலிருந்தது. இயற்கையின் அழகில் மயங்கி மௌனமாக நின்று கொண்டிருந்தனர் குழந்தைகள். தமது அழகு மைதானத்துக்கு அருகே சில லைம் மரங்களை நட்டு வைக்க வேண்டுமென்று அவர்களுக்கு விருப்பம் தோன்றியது. இலையுதிர்காலத்தில் நாங்கள் காட்டுக்குப் போய் சில லைம் கன்றுகளைத் தோண்டியெடுத்து வந்து இரு வரிசையாக அவற்றை நட்டோம். ''லைம்கள் வளர்ந்த பின்னே அவை அடர்த்தியாக உச்சியில் ஒன்று சேர்ந்து நிழல் தரும் சாலையாக விளங்கும்'' என்று குழந்தைகள் கனவு கண்டனர்.

ஒவ்வொரு வகுப்பும் அழகு மைதானம் ஒன்றை உருவாக்கத் தொடங்கியது. மற்றவர்கள் உருவாக்கிய இடத்தைப் போலில்லாமல் இது வேறு மாதிரி இருக்க வேண்டும் என்று அவர்கள் முயன்றனர். 1955ஆம் ஆண்டு பள்ளிக் குழு தமது பொதுவான அழகு மைதானத்தை உருவாக்கத் தொடங்கியது. பள்ளிக் கட்டிடத்துக்கு அருகே நாங்கள் ரோஜாத் தோட்டம் போட்டோம். காட்டு ரோஜாச் செடிகளிலிருந்து உருவாக்கப்பட்ட பலப்பல வகைச்

செடிகளை இங்கு நட்டோம். ரோஜாவில் பல வகைகளை இவற்றுடன் சேர்த்தோம். ஆண்டுக்கு ஆண்டு வண்ணங்கள் நிரம்பியதாக மாறியது தோட்டம். இயற்கையைக் கண்டு களிப்புக் கொள்ளவும், உழைக்கவும், அழகைப் படைக்கவும் இங்கு அனைவரும் வரத் துவங்கினர்.

ரோஜாத் தோட்டம் பள்ளிக் குழு அனைத்துமே பேணும் குழந்தையாக விளங்கியது. சமுதாயத்துக்குப் பயன் தரும் உழைப்பு நல்குவதில் மிக அதிக வெற்றி காண்பவர்களுக்கு இந்தத் தோட்டத்தைக் கட்டிக்காக்கும் பொறுப்பு வழங்கப் பட்டது. இளைய வகுப்பு, நடுத்தர வகுப்பு மாணவர்களுக்கு இந்த உரிமை அடிக்கடி தரப் பட்டது. பல டஜன் மலர்களைத் தோட்டத்திலிருந்து பறித்துக் கொள்வதற்கு அவர்கள் அனுமதிக்கப்பட்டனர். அவர்கள் ரோஜா மலர்களை வகுப்புக்குக் கொண்டு வருவர். ஆசிரியர்களுக்கு, தாய்மார்களுக்கு, கிராமத்தின் சிறந்த உழைப்பாளிக்குப் பரிசளிப்பர். முதல் அறுவடைப் பண்டிகையின் போது ரோஜா மலர்களைப் பெரும் கொத்தாக ஒன்று சேர்ப்பர். சோஷலிசப் போட்டியில் வெற்றி பெற்றவருக்கு அதனைப் பரிசளிப்பர்.

அழகைப் படைப்பதற்காக நல்கப்படும் உழைப்பு இளம் இதயத்துக்கு நல்லுணர்ச்சிகளை ஊட்டி, அலட்சியத் தன்மை தோன்ருமல் தடுக்கிறது. பூமியில் அழகைப் படைக்கையில் குழந்தைகள் சிறந்தவர்களாகவும், பரிசுத்தமானவர்களாகவும், அழகு மிகுந்தவர்களாகவும் மாறுகிருர்கள்.

## வாழ்க்கைக் குறிக்கோள் பிறக்கிறது

எனது மாணவர்கள் ஒவ்வொருவரையும் வயது வந்த மனிதனுக நான் கற்பனை செய்து கொள்ள முயன்றேன். ''சிறுவனே, நீ எத்தகைய மனிதனுக, குடிமகனுக விளங்கப் போகிருய்? சமுதாயத்துக்கு நீ என்ன தருவாய்? உனது மகிழ்ச்சி எதிலிருந்து வரும், எதைக் கண்டு நீ களிப்புக் கொள்வாய், எது கண்டு ஆத்திரம் அடைவாய், இன்பத்தை எதில் காண்பாய், எத்தகைய தடத்தை பூமியில்

விட்டுச் செல்வாய்?'' இந்தக் கேள்விகள் என்னை அலைக் கழித்தன.

பலப்பல நூற்றாண்டுகளாக மனித இனத்தால் படைக் கப்பட்ட, வென்று பெறப்பட்ட ஒழுக்கப் பெருமைகளான தாய்நாடு, சுதந்திரம் ஆகியவற்றின் மீது பற்று, ஒடுக்கு முறையையும் மனிதனை மனிதன் சுரண்டுவதையும் சகித்துக் கொள்ளாமலிருப்பது, மனிதர்களின் இன்பம், விடு தலை ஆகிய உயர் குறிக்கோள்களுக்காகத் தனது ஆற்றலை வழங்கத் தயாராயிருப்பது முதலியவற்றை இளம் இதயங் களில் ஏற்றி வைப்பதற்காக ஆசிரியர் என்ற முறையிலும் போதகர் என்ற முறையிலும் நான் பாடுபட்டேன். தாய் நாடு பற்றிய உயர்வான வார்த்தைகளும் உயர்ந்த குறிக் கோள்களும் கூச்சல் மிகுந்த வெற்று வார்த்தைகளாக நமது மாணவர்களின் உணர்வில் மாறிவிடாமல் பார்த்துக் கொள்வது மிக அவசியமாகும். அடிக்கடி சொல்லிக் கொண் டிருப்பதால் இவை மங்கிப் போய் சாயம் போனவையாகி விடக்கூடாது. உயர்ந்த லட்சியங்களைப் பற்றிக் குழந்தை கள் அடிக்கடி பேசாமலிருக்கட்டும், இளம் இதயத்தின் வெதுவெதுப்பான துடிப்பிலும், ஆவல்களிலும் நடவடிக் கைகளிலும் நேசத்திலும் வெறுப்பிலும் விசுவாசத்திலும் சகியாமையிலும் இந்த லட்சியங்கள் வாழட்டும்.

சிறு குழந்தைகள் இன்னும் புரிந்து கொள்ளாத வார்த் தைகளை அவர்களின் வாயில் திணிக்காமல் பார்த்துக் கொள்வது குறிப்பாக முக்கியமாகும். மக்களுக்குப் புனிதமாக இருக்கக் கூடிய ஒன்று இதன் காரணமாக வெற்றுரையாக மாறிவிடக்கூடும்.

அப்போதுதான் பூமியில் தோன்றி உயர்ந்து வரும் கன்றை, பல டஜன் வருடங்களுக்கு மரத்தின் வாழ்க் கைக்குக் காரணமாக இருக்கப் போகிற அதன் வேரை பலப்படுத்துவதற்காகத் தோட்டக்காரர் அதனை எப்படி கவனமாகப் பேணுகிறாரோ அது போல, தனது குழந்தை களைப் பயிற்றுவிக்கிற ஆசிரியர் தாய்நாட்டின் மீது எல்லை யற்ற பற்று, உழைக்கும் மக்களிடம் விசுவாசம், மகத் தான கம்யூனிசக் குறிக்கோள்களுக்கு விசுவாசம் ஆகிய

வற்றை அவர்களிடம் பேண வேண்டும். உலகத்தைக் குழந்தை பார்க்கவும், அறியவும், மதிக்கவும் தொடங்கு கின்ற விஞடி முதல் இந்தப் பண்புகளைப் பயிற்றுவிப்பது ஆரம்பிக்கிறது.

முதிய தலைமுறை படைத்த அனைத்தும், தாய்நாட்டின் விடுதலைக்காகவும் சுதந்திரத்துக்காகவும், உழைப்பாளர் களின் மகிழ்ச்சிக்காகவும் நடந்த கடிய போராட்டத்தில் சாதித்த, வெற்றிகள் அனைத்தும் குழந்தைகளின் மதிப்புக் குகந்ததாக விளங்க வேண்டியது மிக அவசியமாகும். ரொட்டித் துண்டிலும், கோதுமை வயலிலும், காட்டுச் சரிவிலும், சிறிய குளத்துக்கு மேலுள்ள நீல வானத்தி லும், குழந்தையின் தலைமாட்டில் தாயார் சொன்ன கதையிலும், பாடிய பாட்டிலும்தான் தாய்நாடு என்பது குழந்தைக்குத் தெரியத் தொடங்குகிறது. குழந்தைப் பருவத்தின் பொற்காலத்தில், வார்த்தைகள், காட்சிகள், மற்றவரின் ஆன்மிக உலகம் ஆகியவற்றை நுண்மையாகக் குழந்தைகள் உணரும் போது முதிய தலைமுறை பெருமைப் படுகின்ற அனைத்தையும் குழந்தைகளின் இதயத்துக்குக் கொண்டு செல்ல வேண்டும், சுதந்திரமான உழைப்பு தரும் இன்பம் எத்தகைய விலைகொடுத்து வாங்கப் பட்டது என்று எடுத்துச் சொல்ல வேண்டும். வாழ்க்கை நலன் களில் அக்கறையின்றி ஆனந்தம் கொள்வதை அனு மதிக்கக் கூடாது என்பதற்காக நான் முயற்சி செய்தேன். சுற்றியுள்ள உலகத்தையும், தன்னைத் தானேயும் குழந்தை அறிவது ஒருதலைப்பட்சமானதாய் இருக்கக் கூடாது. உலகத்தையும் தன்னைத் தானேயும் அறியும் போது, முதிய தலைமுறைகளினுல் படைக்கப்பட்ட பொருள்வகை, ஆன் மிக நலன்களின் மீது பொறுப்பையும் துளிதுளியாக அறியக் கடமைப் பட்டவர்கள் குழந்தைகள்.

வயல், காடு, ஆற்றங் கரை, அண்டைக் கிராமம் ஆகிய வற்றுக்கு நாங்கள் நடந்து சென்றதையும் உலா போன தையும். பிறந்த மண்ணில் கடந்த காலத்தை நோக்கி மேற்கொண்ட ''பயணங்கள்'' என்று அழைத்தோம். நமது மக்களின் ஆன்மிக வாழ்வில் கடந்த காலத்தையும்

நிகழ் காலத்தையும் ஒன்றிணைக்கிற விஷயங்களை நான் குழந்தைகளுக்குக் காட்ட முயன்றேன். சிறுவர்களுக்கு நான் சொல்கிறேன்:

''நம் முன்னே காணப்படுகிறது விளைந்து குலுங்கும் வயல். கோதுமைக் கதிர்கள் இங்கு நிறைந்திருக்கின்றன. உள்நாட்டுப் போரின் போது, இந்த வயலில், காட்டுச் சரிவில் வெள்ளைப் படையினர் கம்யூனிஸ்டுக் கொரில்லா வீரனைச் சுட்டுக் கொன்றனர். மாபெரும் தேசபக்தப் போரின் போது சிறு எண்ணிக்கையினரான நமது வீரர்களுக்கும் பாசிஸ்டுக் கம்பெனிக்கும் இடையில் பெரும் சண்டை நிகழ்ந்தது. நமது வீரர்கள் இங்கு மரணமுற்றனர். பரந்த வயல்களைப் பாருங்கள் குழந்தைகளே. சிறு குன்றுகள்—இவை பெயரற்ற வீரர்களின் கல்லறை; இவர்களின் வீரச் செயல்களை நினைவில் போற்றுகிறது இந்த பூமி. ஆயிரக் கணக்கான குன்றுகள்—இவை பெயரற்ற வீரர்களின் ஆயிரக் கணக்கான கல்லறைகள். வீரர்களின் நற்குருதியை காத்து நிற்கிறது பூமி. மக்களின் இதயமோ அவர்களது வீரச் செயல்களின் நினைவை என்றென்றும் போற்றுகிறது. அவர்கள் தம்முயிர் தந்திருக்கவில்லை என்றால், பிறந்த மண்ணின் அழகில் நீங்கள் இப்போது ஆனந்தம் கொள்ள முடியாது. உங்களை அடிமைகளாக்கி விட்டிருப்பார்கள் பாசிஸ்டுகள்.''

பிறந்த மண்ணின் கடந்த காலம் பற்றி சிறு குழந்தை சிந்திக்கட்டும், அதன் எதிர்காலத்தை உணரட்டும், அதற்காகப் பதட்டப்படட்டும், கவலைப்படட்டும். கடந்த காலச் சம்பவங்கள் நிகழ்காலத்தின் தொடக்கமுனைகளாக அவர்களுக்குத் தெரியட்டும்.

கவலையற்ற மகிழ்ச்சி, விளையாட்டு, கதை ஆகியவற்றைக் கொண்ட பருவம் என்று நாம் கருதுகிற குழந்தைப் பருவம்—இது வாழ்க்கைக் குறிக்கோளின் ஊற்றுக் கண்ணுகும். ஒரு குடிமகனின் வேர்கள் அப்போதுதான் உருவாகின்றன. நமது மாணவன் எத்தகைய குடிமகனுய் விளங்குவான் என்பது சொந்த மனத்தாங்கலால் அன்றி, மற்றவர்களின் தலைவிதி பற்றிய அனுபவ உணர்ச்சியின் காரணமாகவே

நிர்ணயமாகிறது. குழந்தைப் பருவத்தில் குழந்தைக்கு முன்னே சுற்றியுள்ள உலகத்தில் வெளிப்படுவது என்ன, அவனை வியப்புக்கும் ஆனந்தத்துக்கும் ஆட்படுத்தியது எது, அவனை ஆத்திரம் கொள்ளச் செய்து அழ வைத்தது எது என்பதெல்லாம் மற்றவர்களின் தலைவிதி பற்றிய அனுபவ உணர்ச்சியையே பொறுத்திருக்கிறது. பல்வகைப் பட்ட உலகம் தனது முரண்பாடுகளுடனும் சிக்கல்களுட னும் குழந்தையின் முன்னே விரிகிறது. அழகையும் அவலட் சணத்தையும்,இன்பத்தையும் துன்பத்தையும் அதில் பார்க் கிறது குழந்தை. சுற்றியுள்ள உலகத்தில் நடப்பது அனைத் தையும், கடந்த காலத்திலும் தற்காலத்திலும் மனிதர் களுக்கு முக்கியமாய் விளங்கிய அனைத்தையும் நல்லது, கெட்டது என்று இரு பிரிவாய்ப் பிரிக்கிறது அது. மனி தனுக்கான அடிப் படையையும், குடிமகனுக்கான அடித் தளத்தையும் குழந்தைப் பருவத்தில் ஒருவனிடம் உரு வாக்க வேண்டுமானால் **நல்லதையும் கெட்டதையும் சரியான முறையில் பார்க்கக்** கற்றுத் தரவேண்டும்.

இந்த வார்த்தைகளுக்கு நான் பின்கண்ட அர்த்தத் தைத் தருகிறேன்: சுற்றியுள்ள உலகத்தைப் பற்றிக் குழந் தை தெரிந்து கொள்கிற அனைத்தும், கடந்த காலத்து, நிகழ்காலத்துச் சமுதாயத் தோற்றங்கள், மனிதர்களின் நடத்தைகள் எல்லாம் இளம் இதயங்களில் ஆழமான ஒழுக்க உணர்ச்சிகளைத் தூண்டிவிட வேண்டும். நல்ல தையும் கெட்டதையும் சரியாகப் பார்த்தால் அறிந்து கொள்கிற விஷயத்தை இதயத்துக்கு அருகே குழந்தை ஏற்றுக் கொள்கிறது என்று அர்த்தமாகும். மகிழ்ச்சிப் பதட்டம், ஆனந்தம், ஒழுக்கபூர்வ அழகைப் பின்பற்ற வேண்டும் எனும் துடிப்பு ஆகியவற்றை குழந்தைக்கு நல்லது தருகிறது. கோபம், சகியாமை, உண்மைக்கும் நியாயத்துக்கும் நடக்கும் போராட்டத்திற்கு ஆன்மிகச் சக்தியைச் செலவிடுவது ஆகியவற்றைத் தீயது தட்டி யெழுப்புகிறது. குழந்தையுள்ளம் உண்மையைக் காத்து வரும் குளிர்பதனப் பெட்டியாக இருக்கக் கூடாது. அலட் சியமும் உணர்ச்சியின்மையுமே நான் தடுக்க விரும்பிய

மிகப் பெருந் தீங்குகளாகும். குளிர்ந்த இதயம் கொண்ட சிறிய மனிதன் எதிர்காலத்துப் போலிப் பண்பாளனுவான். குடிமகனின் ஆர்வத் தீயையும், தீயதாக இருப்பதை, தீய நுக்கு வழிவகுப்பதை சகியாமையையும் ஒவ்வொரு மனிதனின் இதயத்திலும் குழந்தைப் பருவத்திலேயே மூட்டி விட வேண்டும்.

மனிதனை மனிதன் ஒடுக்குவது மிகப் பெரும் தீங்கு என்னும் உண்மையைக் குழந்தையின் உணர்வில் நிலை நாட்டுவதில் ஒரு கஷ்டமுமில்லை. நேரம் வரும் போது தீமை என்பது என்ன என்னும் கேள்விக்குக் குழந்தைகள் சரியான படி பதில் சொல்லுவார்கள். மனிதனை மனிதன் அடிமைப் படுத்துகிற காட்சியைக் கண்டு குழந்தை குலுக்கப்படவில்லை என்ருல், இந்தத் தீங்கைச் செய்து வருவோரின் மீது அவன் வெறுப்புணர்ச்சி கொள்ளவில்லை என்ருல் அவன் உண்மையான குடிமகனுக, உயர்ந்த குறிக்கோள்களைக் கொண்ட மனிதனுக ஒருபோதும் திகழ மாட்டான்.

மனித அலட்சியம் அபாயமானது, அருவருப்பானது, குழந்தை அலட்சியமோ பயங்கரமானது. மற்ற மனிதர்களின் தலைவிதிக்காக நல்லுணர்ச்சியுடன் ஆழமான சொந்தக் கவலைக்கு எனது மாணவர்கள் ஒவ்வொருவரும் குழந்தைப் பருவத்தில் உள்ளாக வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். அந்த மனிதர்கள் பூமிப் பந்தின் மறு முனையில் எங்கோ இருக்கலாம், அல்லது ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்தவர்களாகவும் இருக்கலாம். இந்த உணர்ச்சி அலட்சியத்துக்கு எதிரான, குளிர்ந்த இதயத்துக்கு எதிரான, அபாயமான போலிப்பண்புக்கு எதிரான உண்மையான மருந்தாகும்.

எனது மாணவர்களுக்கு நான் புத்தகங்கள் படித்துக் காட்டினேன். மனிதப் பெருமைகளுக்கான போராட்டத்திற்கு அறைகூவல் விடுக்கிற, மனிதனை மனிதன் அடிமைப் படுத்துகிறதைச் சகியாத கருத்தைத் தெளிவாக வெளியிடுகிற வாழ்க்கை வரலாறுகளை நான் எடுத்துச் சொன்னேன். போலந்து நாட்டு எழுத்தாளர். கெ. சென்கேவிச்சின் ''இசைக் கலைஞன் யான்கோ'' எனும் விருவிருப்பான

கதையைப் பலமுறை கேட்டார்கள் குழந்தைகள். அதை முதல் முறை படித்தது குழந்தைகளை அப்படியே உலுக்கி விட்டது. பாதுகாப்பாற்ற சிறுவனைக் கொன்றழித்த நிலப் பிரபுவைக் கிராதகன் என்றும், ரத்தக் காட்டேரி என்றும் அழைத்தனர் குழந்தைகள். சீற்றம் கொண்ட குழந்தைகளின் கை முஷ்டிகள் இறுகின, கண்கள் கோபத்தில் கனன்றன. இசைக் கலைஞன் யான்கோ எனது மாணவர்களின் ஆன்மிக வாழ்வுக்குள் என்றென்றைக்குமாக நுழைந்து விட்டான். பின்னர் இந்தக் கதையை நாங்கள் பலமுறை படித்தோம். சில குழந்தைகள் கதையை அப்படியே வார்த்தைக்கு வார்த்தை நினைவில் வைத்துக் கொண்டனர். இசைக் கலைஞன் யான்கோ பற்றி மீண்டும் மீண்டும் குழந்தைகள் கேட்க விரும்பியது ஏன்? கோப உணர்ச்சி ஆன்மிக ஆற்றலைப் பிறப்பிக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. தீமைக்குத் தான் விட்டுக் கொடுக்காத விரோதி என்று உணர்ந்தபடி மேலும் பலசாலியாகிறது குழந்தை. தனது ஒழுக்க பூர்வ ஆற்றலை முழுமையாக அனுபவித்து உணரவும் நியாயத்துக்காகத் தான் போராடத் தயார் என்று மீண்டும் உறுதி கொள்ளவும் விரும்புகிறது குழந்தை. இந்த உணர்ச்சி வளர்ந்துள்ள இதயம் சுற்றியுள்ள உலகத்தில் நல்லதையும் தீயதையும் நுண்மையாக உணர்கிறது.

தலைசிறந்த உக்ரேனிய எழுத்தாளரான அர்ஹிப் தெஸ்லென்கோ எழுதிய, ஏழைக் குடியானவர்களின் மகிழ்ச்சியற்ற குழந்தைப் பருவம், இளமைக் காலம் ஆகியவை பற்றிய கதைகள் குழந்தைகளின் மேல் கடுமையான மனப் பதிவை ஏற்படுத்தின. ஏழ்மையாலும், பணக்காரர்கள், அரச அதிகாரிகள் ஆகியோரின் கேலியாலும் தற்கொலை செய்து கொள்ளுமாறு நிர்பந்திக்கப்பட்ட திறமை மிகுந்த விவசாயப் பெண்ணின் கதையை நாங்கள் படித்த போது குழந்தைகளின் கண்களில் சீற்றம் சுழன்றது.

கி. பிச்செர்-ஸ்டோவின் ''டாம் மாமாவின் குடிசை'' எனும் குறுநாவலை 3, 4ஆம் வகுப்புகளில் இருக்கும்போது இரு முறை படித்தோம். அடிமைகளின் தலைவிதி கண்டு மிகவும் நொந்து போனார்கள் குழந்தைகள். ஆடு மாடு

களைப் போல் மனிதனை வாங்கவும் விற்கவும் செய்கிறார் கள் என்பதை அவர்களால் நினைத்தும் பார்க்க முடிய வில்லை. தற்காலத்தில் நல்லதுக்கும் தீயதுக்கும் இடையில் நடக்கும் போராட்டம் பற்றிய தெளிவான சித்திரம் குழந் தைகளின் உணர்வில் சிறுகச் சிறுக விரிந்தது: முதலாளித் துவ நாடுகளிலுள்ள கோடிக் கணக்கான மக்கள் தமக்காக அன்றி, நிலப்பிரபுக்களுக்காகவும், முதலாளிகளுக்காகவும் உழைக்கிறார்கள். குழந்தைப் பருவம் என்பது என்ன என்றே குழந்தைகளுக்குத் தெரியாது. அந்நாடுகளில் தமது நாட்டின் சுதந்திரத்துக்காகப் போராடுகிற சிறந்த ஆண்களையும் பெண்களையும் சுட்டுக்கொல்கிறார்கள், தூக்கிலிடுகிறார்கள், கடுங்காவல் முகாமுக்கு அனுப்பு கிறார்கள்.

கிரேக்க மக்களின் வீரனான நீகஸ் பெலயான்னிஸின் துக் ககரமான முடிவு குழந்தைகளின் ஞாபகத்தில் என் றென்றைக்குமாகப் பதிந்தது. பாசிச ஆக்கிரமிப்பாளர்கள் கிரீஸை கைப்பற்றிய போது ஆக்கிரமிப்பாளர்களுக்கு எதி ராகப் போராடினான் நீகஸ் பெலயான்னிஸ். அவனது நாடு பாசிஸ்டுகளிடமிருந்து விடுவிக்கப்பட்ட பின்னே, தேசத் துரோகம் புரிந்தான் என்று குற்றம் சாட்டி அந்த தேசபக் தனை முதலாளித்துவ நீதி மன்றம் தூக்கிலிட்டது. சிவப்புக் கார்னேஷன் மலரைத் தாங்கியவாறு சாவை எதிர் கொண் டான் நீகஸ் பெலயான்னிஸ். அதே நாளில், தூக்கு தண் டனை விதிக்கப்பட்ட அவனது மனைவி ஆண் மகவு ஈன் றாள்.சிறையில் வாழ்ந்த சிறுவனின் தலைவிதியால் துயருற்ற குழந்தைகள், நீகஸ் பெலயான்னிஸ் சிறுவனுக்கு எங்ஙனம் உதவி செய்வது என்று கேட்டனர். நற்பண்பு உணர்ச்சி தீவிரச் செயலைத் தூண்டி விடுகிறது. நீகஸ் பெலயான்னிசின் மனைவிக்கு கடிதம் எழுதினார்கள் குழந்தைகள். செஞ்சிலு வைச் சங்கம் மூலம் கடிதத்தை அனுப்பிய குழந்தைகள், வெண் பட்டுத் துணியில் சிவப்புக் காரனேஷன் மலர் தைத்து ஒரு பரிசாக அதனைத் தயார் செய்தனர். பின்னர் வீரனின் மனைவிக்கு ஆண்டு தோறும் கடிதம் வரைந்தனர். சிறுவனின் பிறந்த நாளன்று, வெண்பட்டுத் துணியில்

ரோஜாப் பூ, கசகசாப் பூ, பவளக் குறிஞ்சிப் பூ ஆகியன தைத்து பரிசாக அனுப்பினர். மேம்போக்காகப் பார்க்கையில் மிக எளியதாகத் தோன்றுகின்ற இந்த நடவடிக்கை குழந்தைகளின் இதயங்களில் ஆழமான சுவடுகளை விட்டுச் செல்கிறது. ஏனெனில், இது தீயதுக்குக் கண்டனமும் அநியாயத்துடன் தொடுக்கிற துவந்த யுத்தமும் ஆகும்.

மனித வரலாற்றில் மிகவும் துயரம் தோய்ந்த காலங்களிலும் கூட, கொடிய சக்திகள் கோடிக் கணக்கான மனிதர்களை அடக்கியொடுக்கிய போதும் கூட, அநியாயத்துக்கு எதிராகக் கிளர்ந்தெழுந்த மனிதர்கள் இருக்கத்தான் செய்தார்கள் என்று சமுதாய வாழ்வு எனும் உலகத்துக்குள் குழந்தைகளைக் கூட்டிச் செல்கையில் நான் அவர்களுக்கு உறுதியாகச் சொன்னேன். இந்த மனிதர்களின் பெயர்கள், அவர்களது வாழ்க்கை, வீரச் செயல்கள் ஆகியவை இளம் தலைமுறைக்கு வழிகாட்டும் விண்மீன்களாகும். தமது தாயகத்தின் விடுதலைக்கும் சுதந்திரத்துக்கும், சுரண்டலிலிருந்து மக்களை விடுவிப்பதற்கும், மனிதப் பெருமைகளை நிலைநாட்டுவதற்கும் போராடிய, உயிர் தந்த மனித குலத்து மாமணிகளின் அசையா உறுதி, ஆண்மை, வீரம், நம்பிக்கை ஆகியவற்றைக் கண்டு எனது மாணவர்கள் வியப்புணர்வு கொள்ள வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன்.

கடந்த காலத்தில் மனித இனத்தால் படைக்கப்பட்ட, ஈட்டப்பட்ட, இன்றைய சோஷலிச சமுதாயத்தில் மலர்ச்சி பெற்றுள்ள நற்பண்புகள் யாவும், நமது காலத்தில் ஒவ்வொரு குழந்தைக்கும் ஆன்மிகச் செல்வமாக விளங்க வேண்டும், அவை இதயத்துக்கு பதட்டம் தர வேண்டும். உலகம் முழுவதும் உண்மை உலா வந்து விழா எடுப்பதற்காகத் தீவிரச் செயல் புரியுமாறு ஒவ்வொருவரையும் தூண்ட வேண்டும் என்பதற்காக நான் பணியாற்றினேன். உண்மை எப்போதும் புரட்சிகரமானதாகவே இருக்கும் என்றார் அன்டோனியோ கிராம்ஷி. ஒழுக்க பூர்வ உண்மைகளை அவற்றின் முழு அழகுடனும், கூச்சல் மிகுந்த வார்த்தைகள் இல்லாமலும் வெளிக் கொணர முயன்

றேன் நான். இதயத்தைப் பதட்டப் படுத்தும் வண்ணம் பிரகாசமான உதாரணங்களால் மனித குலத்தினது நற்பண்புகளின் அழகு வெளிப்பட்டால்தான், இந்த அழகு குழந்தையுள்ளத்தின் ஒரு செல்வமாக மாறும். வார்த்தைகள் கற்றுத் தருகின்றன, உதாரணங்கள் கவர்ந்திழுக்கின்றன என்று சொல்கிறது லத்தீன் பழமொழி. பிரகாசமான வாழ்க்கை உதாரணம், மனித இனத்தின் மகிழ்ச்சிக்காகப் புரியப்பட்ட வீரச் செயல்—இது குழந்தை வாழ்க்கைக்கு ஒளியூட்டும் விளக்காகும். மனித நேயம் மிகுந்த, முற்போக்கான, புரட்சிகரக் கொள்கைகளின் உருவகமாகத் திகழ்ந்தால்தான் உதாரணங்கள் கற்றுத் தரும். கொள்கைகளிலிருந்து விலகிச் செல்கிற ஒவ்வொருவரும் இறுதியில் வெறும் புலனுணர்வுகள் மட்டுமே கொண்டிருப்பார் என்று மாபெரும் ஜெர்மன் கவிஞர் இ. கோதே எழுதினர்.

பலப்பல தலைமுறைகளுக்கு வழிகாட்டும் ஒளி விளக்காகத் திகழும் பெயர் கொண்ட மனிதர்களின் பிரகாசமான உருவங்களை சிறுவர்களின் முன்னே அவர்களது குழந்தைப் பருவத்தில் நான் தீட்டினேன். எல்லாவற்றையும் சிறு குழந்தைக்குச் சொல்லிவிட முடியாதுதான். சித்திரங்களையும், காட்சிகளையும் வெள்ளமென அவன் மீது சொரிந்து விடக் கூடாது, அவனது இதயத்தை முடிவின்றி உலுக்கி விடக் கூடாது, உள்ளத்தைப் பதட்டப் படுத்தக் கூடாது. இப்போது ஒரு சிறிதே அறிந்து கொள்ளட்டும் குழந்தை. ஆனல் இந்த ஒரு சிறிதில் அது ஒழுக்கப் பெருமைகளைக் கண்டு கொள்ளட்டும். அவர்களைப் பதட்டப்படுத்துகிற, உலுக்கி விடுகிற விஷயங்கள் பற்றிக் குழந்தைகள் சிந்திக்கட்டும். உருவகமாகச் சொல்வதென்ருல், சிந்தனைகளும். உணர்ச்சிகளும் உருகிக் கலந்து ஒவ்வொரு குழந்தையின் இதயத்திலும் தங்கி விடட்டும். நான்காண்டு காலத்தில் மனித குலத்தின் உயர்ந்த குறிக்கோள்களுக்காகப் போராடியவர்களான ஸ்பார்டகஸ், கம்பெனெல்லா, இவான் சுசானின், ஸ்தெபான் ஹல்தூரின், சோபியா பெரோவ்ஸ்கயா, நிக்கலாய் கிபால்சிச், தராஸ் ஷெவ்ச்

சென்கோ, தாமஸ் முன்சேர், கிரிஸ்டோ போதெவ், யானுஷ் கர்ச்சாக் ஆகியோரின் வீரச்செயல்கள் பற்றி எனது மாணவர்களுக்கு எடுத்துச் சொன்னேன். மாபெரும் வி. இ. லெனின் வாழ்க்கையையும் போராட்டத்தையும் பற்றி, இவான் பாபுஷ்கின், செர்கேய் லாஸோ, காமோ, யாகவ் ஸ்வெர்த்லோவ், ஃபெலிக்ஸ் ஜெர்சீன்ஸ்கி, யூலி யஸ் ஃபூசிக், ஏர்னெஸ்டு தெல்மான் ஆகிய கம்யூனிச வீரர் கள் பற்றி, மாபெரும் தேசபக்தப் போரில் பங்கெடுத்துக் கொண்டவர்களான நிக்கலாய் கஸ்டெல்லோ, அலெக் சாந்தர் மத்ரோசவ் ஆகியோர் பற்றி, விஞ்ஞான உண் மைக்காக பேராண்மையுடன் போராடிய வீரரான ஜோர் தானோ புருனோ பற்றி, மாபெரும் மனிதநேய விஞ்ஞானி யான மிக்லுஹோ-மக்லாய் பற்றி நான் எடுத்துச் சொன் னேன்.

உயிர்ப்புள்ள மனித ஆவல்களில், நடவடிக்கைகளில், வீரச் செயல்களில் உருவகம் பெறுகிற கொள்கைகளின் பிரகாசமான உதாரணம் குழந்தையினது ஆன்மிக வாழ்வின் மீது வெகுவான செல்வாக்குச் செலுத்து கிறது. ஒரு குறிப்பிட்ட நடவடிக்கையின் சாரத்தை எப்படிப் புரிந்து கொள்ள வேண்டும் என்று விவரமாகச் சொல்ல வேண்டியதில்லை. கொள்கையும் காட்சியும் ஒன்றிணைக்கப்பட்டு விட்டால் கொள்கையைக் குழந்தை வெகு நன்ருகப் புரிந்து கொள்கிறது. ஒழுக்க அழகின் சாரமாக விளங்குகிற மிக முக்கியமான பண்பு,— மக்களின் மகிழ்ச்சிக்காகத் தனது ஆற்றலையும் வாழ்வை யும் ஈந்து விடத் தயாராய் இருக்கிற பண்புதான்— எனது மாணவர்களுக்கு நான் சொன்ன கதையின் வீரர் களுக்கே உரிய பண்பாக விளங்கியது. இந்தப் பண்பு வியப் பூட்டுகிறது, மற்றவர்களின் தலைவிதி பற்றிக் குழந்தை யைச் சிந்திக்குமாறு நிர்பந்திக்கிறது. மனித குலத்துக்குச் சேவை செய்வதில் தமது இன்பத்தைக் கண்ட மனிதர் கள் குழந்தைகளின் ஒழுக்கக் குறிக்கோளாகத் திகழ்கிருர் கள்.

ஒழுக்க உயர்வு பற்றிய புத்தகத்தில் நள்ளிரவு வரை

ஒருவன் மூழ்கியிருக்குமாறும், அவனது இதயம் ஆனந்தத் தால் துடிக்காமல் இருக்குமாறும் செய்கிற முழுமையான ஒரு போதனைப் பயிற்சியைக் கற்பனை செய்து பார்ப்பதும் கடினமே. ஒருவன் தன்னைத் தானே பார்த்துக் கொள்ளும் போது, மனவுறுதி, ஆண்மை, அசையாவுறுதி, கஷ்டங் கள் கண்டு கலங்காமை ஆகியவற்றைக் கொண்ட ஒழுக்க அழகுக்கு ஒரு மாதிரியாக விளங்குகிறான் என்று கருதப் படும் ஒருவனுடன் தன்னை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள் ளும் போது அங்கு ஒழுக்கக் குறிக்கோள் பிறக்கிறது.

ஒழுக்கக் குறிக்கோளின் ஊற்றுக்கண்ணுக்குக் குழந் தைகளை இட்டுச் செல்வதற்குக் கதைகளை ஆசிரியர் வெகு கவனத்துடன் தேர்ந்தெடுக்க வேண்டும். கொள்கைப் பொருளைக் கொண்ட உண்மைகளும் சம்பவங்களுமே இங்கு பிரதானமாகும். தனிப்பட்ட ஒருவரின் தலைவிதியும் மனிதகுலத்தின் தலைவிதியும் ஒன்றாக இருப்பதை, இளைய தலைமுறைக்கு லட்சியமாக விளங்குகிற மனிதர்களின் வாழ்க்கையை காட்டுவது மிக முக்கியமானதாகும்.

லெனின் வாழ்க்கையையும் போராட்டத்தையும் பற்றி குழந்தைகட்கு எடுத்துச் சொல்கையில், உழைக்கும் மக் களின் தலைவிதியை ஆழமாக உணர்ந்ததைப் பற்றி நான் விவரமாக எடுத்துக் காட்டினேன். அந்த மாபெரும் தலை வர் மக்களின் மகிழ்ச்சி எனும் தனது குறிக்கோளுக்காகவே எல்லாவற்றையும் செய்தார். உள்நாட்டுப் போரும் பெரு நாசமும் வந்துற்ற அந்தத் துன்பம் மிகுந்த நாட்களில் அனாதையாகிப் போன குழந்தைகளை லெனின் எங்ஙனம் பேணினார் என்பது பற்றிச் சொல்லும் போது மகிழ்ச்சி மிக்க பதட்ட உணர்ச்சி குழந்தைகளை ஆட்கொண்டது. மாபெரும் ஒழுக்கப் பெருமையாக லெனினது மனிதநேயம் குழந்தை இதயத்துக்குள் நுழைந்துவிட வேண்டும் என்றும், ஒழுக்க அழகின், உண்மையின் உச்சியிலிருந்து சுற்றியுள்ள உலகத்தையும் தம்மையும் குழந்தைகள் பார்க்க வேண் டும் என்றும் நான் முயன்றேன்.

போலந்து மக்களின் தேசிய வீரரான யானுஷ் கர்ச் சாக் பற்றிய கதைகள் சிறுவர்களின், சிறுமிகளின் இதயங்

களில் ஆழமான சுவடு பதித்தன. தமது அன்புக்குரிய குழந்தைகளுடன் அவரும் சாவைத் தழுவினர் என்பது குழந்தைகளை அடியோடு உலுக்கிவிட்டது. யானுஷ் கர்ச்சாக் தமது உயிரைக் காப்பாற்றிக் கொண்டிருக்க முடியும். ஆனால், ஆயிரக் கணக்கான அப்பாவிக் குழந்தைகள் பாசிஸ்டுக் காட்டேரிகளின் கைகளால் மடியும் போது தமதுயிரைக் காத்துக் கொள்வது அவமானம் என்று அவர் கருதினர்...குழந்தைகளுக்கு உண்மையான மனித நேயத்தின் அடையாளமாக விளங்குகிறார் யானுஷ் கர்ச்சாக்.

''நரோத்னயா வோல்யா'' (மக்கள் சித்தம்) எனும் இரகசியப் புரட்சி நிறுவனத்தின் வீரர்களான ஸ்தெபான் ஹல்தூரின், சோபியா பெரோவ்ஸ்கயா,நிகலாய் கிபால்சிச் ஆகியோர் பற்றிய கதைகள் குழந்தைகளின் இதயத்தில் வியப்புணர்ச்சியைத் தட்டியெழுப்பின. ஜூலியஸ் ஃபூசிக், காமோ (தேர்-பெத்ரஸ்யான்) ஆகிய கம்யூனிஸ்டு வீரர்களின் அசையா உறுதியையும், ஆண்மையையும், கொள்கை நம்பிக்கையையும் பற்றி நான் படித்துக் காட்டிய போது மனிதனுக்காகப் பெருமை உணர்ச்சி கொண்டார்கள் குழந்தைகள். ''அப்படி நாமும் ஆக வேண்டும். இவரே உண்மையான வீரர்'' என்றார்கள் அவர்கள்.

பயனீர் வீரர்கள் பற்றியும் நான் நிறையச் சொன்னேன். சோவியத் தாயகத்தின் விடுதலைக்காகவும் சுதந்திரத்துக்காகவும் உயிர் தந்த வீரர்களான வால்யா கோதிக், வித்யா கரப்கோவ், லியோனியா கோலிகவ், வலோத்யா துபீனின், வாஸ்யா ஷீஷ்கோவ்ஸ்கி ஆகியோர் பற்றிச் சொன்னேன். இவ்வாறு சொல்லும் போது, கொள்கை உறுதி, ஆண்மை, சோஷலிசம், அமைதி, விடுதலை ஜனநாயகம் ஆகியவற்றின் விரோதிகளுடன் சமரசத்துக்கு இடமில்லாத கம்யூனிச ஒழுக்கத்தின் மிக முக்கிய அம்சம் குழந்தைகளின் முன்னே சிறுகச் சிறுக வெளிப்பட வேண்டும் என்பதற்காகப் பாடுபட்டேன். தனது நம்பிக்கையே ஒரு சொந்த நற்பண்பாகக் காப்பாற்றுகின்ற திறமையினை நிலைநாட்டுவது என்பது மிக முக்கியமான ஒரு

போதனைப் பணியாகும். பிரகாசமாக உருவகம் கொண்டுள்ள, நன்மையையும் தீமையையும் பற்றிய மனத்தோற்றங்கள் ஒருவனிடம் சிறு வயதிலிருந்தே உருவாகி வந்தால்தான் இந்தப் பணியை நிறைவேற்ற முடியும். வெறும் மனத்தோற்றம் மட்டும் போதாது. சொந்த உள நெகிழ்ச்சி மதிப்பீடும் அவசியமாகும். குழந்தைக்கு அருமையானதாகவும், சமரசத்திற்கு இடமற்றதாகவும் ஒழுக்க பூர்வத் தோற்றங்களைக் கரூராகப் பிரிப்பதும் அவசியமாகும். மனிதர்களுக்காக மகிழ்ச்சியைப் படைக்க வேண்டும், மனிதப் பண்புகளைப் பாதுகாக்க வேண்டும், கம்யூனிச ஒழுக்கக் கோட்பாடுகளைப் போற்ற வேண்டும் எனும் நாட்டத்தைத் தூண்டுகிற ஒழுக்க பூர்வ அழகு உயிர் பெறுவதே இளமைப் பருவத்தில் ஒழுக்கப் பயிற்சி தருவது ஆகும்.

இளம் பள்ளிப் பருவக் குழந்தைகள் ஒழுக்கக் குறிக்கோள்களின் ஊற்றுக்கண்களுக்கு அருகே நிற்கிறார்கள். போதகர்களாகிய நாம் ஒழுக்கத் துணிச்சலின் அழகை ஒவ்வொரு குழந்தையின் முன்னும் திறந்து விட்டு, கம்யூனிச நம்பிக்கைகளுக்கு விசுவாசமாய் இருப்பதை உறுதி செய்ய வேண்டும். 1-4ஆம் வகுப்புகளிலேயே மாணவர்கள் உயிருள்ளவர்களாக, நிரந்தரமாகக் கால காலத்துக்கும் நிலைத்திருக்கிற உழைக்கும் மக்களின் ஆக்க பூர்வமான ஒரு துளியே தாம் என்று உணருமாறும் செய்ய வேண்டும்.

## கம்யூனிஸ்டுக் கட்சி பற்றிய சிந்தனை

நமது நாட்டுக் கம்யூனிஸ்டுக் கட்சியின் மீது ஒரு நேச உணர்ச்சியையும், அதன் நோக்கங்களுக்கு விசுவாசத்தையும், கம்யூனிசக் கொள்கைகளுக்காகப் போராடத் தயாராயிருப்பதையும் பயிற்றுவிப்பது பள்ளிப் போதனையின் மிக முக்கியமான ஒரு பணியாகும். "க ம் யூ னி ஸ் டு" என்ற வார்த்தையை மிக அடிக்கடி கேட்கிறார்கள் குழந்தைகள். சுரண்டுபவர்களிடமிருந்து நமது மக்களை விடுவிப்பதற்காக, சோஷலிசத்தைக் கட்டுவதற்காக, பாசிசத்தை முறியடித்து வெற்றி காண்பதற்காக, சமுதாயத்தைக்

கம்யூனிச சமுதாயமாக மாற்றுவதற்காகப் போராடும் வீரர்களின் பிரகாசமான நற்பண்புச் சித்திரங்களுடன் குழந்தைகளின் உணர்வில் இந்த வார்த்தை கலந்துவிட வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். தமது தாத்தாக்களின், தந்தையரின் கம்யூனிசக் குறிக்கோள்களுக்கு வாரிசுகளாக விளங்குகிற நமது குழந்தைகள் அவர்களுக்காகப் பெருமைப்பட்டு, தமது நாட்டின் உண்மையான எஜமானர்களாக விளங்கி, கம்யூனிசத்தைக் கட்டுவதற்கும் நிலைநாட்டுவதற்கும் போராடுகிற வீரர்களாகத் திகழுகின்ற வகையில் பயிற்சிப் பணி செய்வதே லட்சியமாக இருக்க வேண்டும் என்று நான் கருதினேன்.

கம்யூனிஸ்டுகளைப் பற்றிய உரையாடலில் இந்தச் சாதனையை முதன்மையாக ஈட்ட முடியும் என்று நான் கண்டேன். ''ஆர்வம் நிறைந்த இதயம் கொண்ட மனிதர்கள்'' என்று இந்த உரையாடல்கள் பெயர் பெற்றன. நமது நாட்டின் தலைசிறந்த கம்யூனிஸ்டுகளைப் பற்றி நான் சொன்னேன். பிரகாசமான வாழ்க்கையை வீரஞ்செறிந்த போராட்டத்தை நடத்திய கம்யூனிஸ்டுகள்—ஜாரிசத்துக்கு எதிராகவும் சோஷலிசப் புரட்சிக்காகவும் போராடிய வீரர்களின் பிரகாசமான வாழ்வும் வீரஞ்செறிந்த போராட்டமும் மக்களுக்கு விசுவாசமாக இருப்பதும் மக்களின் மகிழ்ச்சிக்காகப் போராடுவதுமே ஒரு கம்யூனிஸ்டின் உயர்ந்த மகிழ்ச்சியாக இருக்கும் என்று எடுத்துக் காட்டினார்கள்.

எங்கள் ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' முதல் நாட்களிலிருந்து, இளைஞர்களும் இளம் பெண்களும் நடுத்தரப் பள்ளி முடித்த சான்றிதழைப் பெற்றுக் கொண்டு சுய உழைப்பு வாழ்க்கைக்கோ, மேற்கொண்டு படிப்பதற்கோ செல்லும் வரை அவர்களுக்கு லெனின் பாடம் நடத்தினேன். ஆரம்பத்தில் விளதீமிர் இலீச் லெனினது குழந்தைப் பருவம், இளமைக் காலம் பற்றிய பிரகாசமான கதைகளைப் படித்துக் காட்டினேன். மாதங்கள் செல்லச் செல்ல வரலாற்றுப் பிரச்சினைகள், கம்யூனிச சித்தாந்தம், மக்களின் சிறந்த எதிர்காலத்துக்காக நமது கட்சி நடத்

தும் போராட்டம் ஆகியவற்றுடன் சம்பந்தம் கொண்டதாயிற்று லெனின் பாடம். மக்களின் மலரே, மக்களின் சிறந்த ஆண்களும் பெண்களுமே கம்யூனிஸ்டுக் கட்சி என்று குழந்தைகள் உறுதி பெற்றனர்.

கம்யூனிஸ்டுகளுடன் சந்திப்பு மேற்கொள்ளத் தொடங்கினர் குழந்தைகள். தமது வாழ்க்கையையும் போராட்டத்தையும் பற்றிக் கம்யூனிஸ்டுகள் சொன்ன கதைகள் கம்யூனிஸ்டுக் கட்சியின் ஒரு வரலாற்றுத் துளியாகவே விளங்கியது. முதிய போல்ஷிவிக்குகளான வ. மொ. பெஸ்கரவாயனிய், அ. மி. ரத்ஸிவில், நி. க. கய்ச்சூக் ஆகியோரைச் சந்தித்ததைக் குழந்தைகள் ஒருபோதும் மறக்கமாட்டார்கள். எங்கள் பகுதியைச் சேர்ந்தவர்கள் சோவியத் ஆட்சியின் தொட்டிலுக்கருகே நின்று கொண்டிருந்தனர் என்பதும், தொழிலாளர்களும் விவசாயிகளும் வெற்றி பெறுவதற்காக ரத்தம் சிந்தினார்கள் என்பதும் குழந்தைகளிடம் பெரிய மனப்பதிவை ஏற்படுத்தின. கம்யூனிஸ்டுகள் என்போர் உறுதியான நம்பிக்கைகள் கொண்ட மனிதர்கள் என்று தெளிவாய்த் தெரிந்து கொண்டனர் குழந்தைகள். அதே நேரத்தில் அவர்கள் அடக்கம் மிகுந்த உழைப்பாளிகள். முதுமைப் பருவத்திலும் கூட தமது ஆற்றலையும் அறிவையும் கம்யூனிசத்தைக் கட்டுவதற்காகப் பயன்படுத்துகிறார்கள். ரத்ஸிவில் ஒரு சிறந்த காய்கறி பயிரிடுபவர் என்றும், பெஸ்கரவாய்னிய் பொறிகைகள் கொண்ட ஒரு சிறந்த, அனுபவம் வாய்ந்த இயந்திரத் தொழிலாளர் என்றும் குழந்தைகளுக்குத் தெரியும். கிராமத்தில் கூட்டுப்பண்ணை எவ்வாறு உருவாக்கப் பட்டது, டிராக்டரை ஆராய்ந்த கம்யூனிஸ்டுகள் அதில் அமர்ந்து கூட்டுப்பண்ணை வயலில் முதன் முதலாக எவ்வாறு உழவோட்டினார்கள் என்று அவர் சொன்னார்.

சோவியத் மக்களின் சிறந்த எதிர்காலத்துக்காகக் கட்சி போராடியது பற்றி பெஸ்கரவாய்னிய் பல உரையாடல்கள் நடத்தினார். கூட்டுப் பண்ணையிலுள்ள கட்சி நிறுவனம் செய்யும் வேலைகள் என்ன என்று அவர் எடுத்துக் கூறினார். அறுவடையின் அளவு உயருவதற்காக

வும், கால்நடைப் பண்ணை மாமிசம், பால், வெண்ணெய் ஆகியவற்றை அதிக அளவில் தொழிலாளர்களுக்குத் தருவதற்காகவும் கம்யூனிஸ்டுகள் பணியாற்றுகிறார்கள் என்று குழந்தைகள் அறிந்து கொண்டனர்.

மாபெரும் தேசபக்தப் போர் சம்பந்தமான லெனின் பாடங்கள் குறிப்பாக விறுவிறுப்பானதாகவும் பதட்டம் நிறைந்ததாகவும் இருந்தன. சி. அ. கவ்பாக் தலைமையில் இயங்கிய கொரில்லாப் படையில் போராடிய சோவியத் யூனியன் வீரர் விருது பெற்ற அ. க. த்சிம்பால், பாசிசத்தின் பிடியிலிருந்து ருமேனியாவையும் ஹங்கேரியையும் விடுவிப்பதற்குப் போராடிய சோவியத் யூனியன் வீரர் விருது பெற்ற நி. சி. ஒஞேபா ஆகியோரையும், பிறந்த மண்ணைப் பாசிஸ்டுகளிடமிருந்து விடுவிப்பதற்காகப் போராடிய எங்கள் கிராமத்தின் மற்ற பல வீரர்களையும் குழந்தைகள் சந்தித்தனர். கம்யூனிஸ்டுக் கட்சியின் செயல்களிலும், போராட்டத்திலும், மக்களின் உழைப்பிலும் லெனின் காரியம், லெனின் உண்மை வாழ்ந்து வருகின்றன என்று குழந்தைகளின் உணர்வில் ஆழமாகப் பதிந்தது.

## மனிதனைப் பற்றிக் கவலைப்படாமல் ஒரு நாளும் வாழக் கூடாது

உழைப்பினாலும், ஆன்மிக ஆற்றலின் அழுத்தத்தாலும் குழந்தை மகிழ்ச்சிகளை ஈட்டாமல் வெறுமே அவற்றைப் ''பயன்படுத்தி'' மட்டும் வந்தால், பாராமுகங் கொண்டவனாய், இரக்கமற்றவனாய், அலட்சியம் நிறைந்தவனாய் அவன் இதயம் மாறிப் போகும்.

மனிதர்களுக்காக நல்லதைப் படைப்பது என்பது நற்பண்பைத் தோற்றுவிக்கிற பிரம்மாண்டமான ஒழுக்கச் சக்தியாகவும் விளங்குகிறது. உதவி, கவனம், கனிவு, இரக்கம், அனுதாபம் ஆகியவை தேவைப்படுகிற மனிதர்கள் சுற்றிலும் இருக்கிறார்கள் என்பதை இதயத்தால் குழந்தை உணரும்படி செய்வது சோவியத் பள்ளியினது பயிற்சிப் பணியின் ஓர் அம்சமாகும். இத்தகைய மனிதர்

களைக் கண்டும் காணாதது போலச் சென்று விடுவதற்குக் குழந்தைகளின் மனச்சாட்சி அனுமதிக்காமல் இருக்க வேண்டும். மற்றவர்களை விட வேறுபட்ட விதத்தில் இருக்க வேண்டும் எனும் விருப்பத்தினாலன்றி, தன்னலமற்ற தூண்டல்களின் பாற்பட்டு மற்றவருக்குக் குழந்தை நல்லது செய்ய வேண்டும்—இதுதான் பிரதானமானது.

குழந்தை மனச்சாட்சியின் ஊற்றுக்கண், மற்றவர்களுக்கு நல்லது செய்யத் தயாராய் இருப்பது—இவை துன்பங்களும் துயரங்களும் இதயத்தில் உள்ளவர்களுடன் அனுதாபம் கொள்வதாகும். மனிதனின் ஆன்மிக உலகத்தை நுண்ணுணர்வுடன் அணுகுவது, மற்றவரின் வேதனைக்கு உதவி செய்ய விழைவது ஆகியவற்றிலிருந்துதான் உயர்ந்த மனித மகிழ்ச்சி தொடங்குகிறது. இதில்லாமல் ஒழுக்க அழகு சாத்தியமில்லை. ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' இருக்கும்போதே மனிதனின் ஒழுக்க அழகின் உச்சியை நோக்கி முதல் எட்டு எடுத்து வைத்தனர் எனது மாணவர்கள். மனிதநேயம் எனும் பெரிய விஞ்ஞானத்தின் அரிச்சுவடியை அறிந்தார்கள் அவர்கள், மேலும் அன்றாட வாழ்க்கையில் எதிர்கொண்ட மனிதர்களின் கண்களில் உள்ள வேதனை, துன்பம், துயரம், கவலை ஆகியவற்றைக் காணக் கற்றுக் கொண்டனர். வயது வந்த காலத்தில் காணப்படும் ஒழுக்க உருவத்தில் இந்தத் திறனும் அடங்கும். குழந்தைப் பருவத்து ஆண்டுகள் அனைத்திலும் மனிதர்களுக்காகக் கவலைப்படாத வாழ்க்கையை ஒருநாள் கூட ஒருவன் வாழாமலிருந்தால்தான் அவனது ஆன்மிக வாழ்வில் ஒரு பிரிக்க முடியாத அம்சமாக இது விளங்கும்.

மற்றவர்களின் உணர்ச்சிகளுக்கு அனுதாபங்கள் காட்டும்படி எனது மாணவர்களுக்கு எப்போதும் நான் போதித்து வந்தேன். அனுதாபம், உதவி, இரக்கம் ஆகியவை தேவைப்படுகிற மனிதனின் இடத்தில் குழந்தை தன்னை வைத்துப் பார்க்க வேண்டும் என்றும் அவனது உணர்ச்சிகளை அனுபவிக்க வேண்டும் என்றும் நான் முயன்றேன். மற்றவரின் வேதனை குழந்தையின் சொந்த வேதனை

யாக வேண்டும், உதவி தேவையாக இருக்கிற ஒருவனுக்கு எப்படி உதவுவது என்று அவனைச் சிந்திக்கச் செய்ய வேண்டும். இரண்டு மனிதர்களின் சொந்தப் பரஸ்பர உறவுகளும், ஆன்மிகத் தொடர்பும் மனிதநேயத்தைப் பயிற்றுவிப்பதில் பெரும்பங்கு வகிக்கிறது. அண்டை வீட்டுக்காரனுக்கு உதவி செய்வதை விட மனித இனத்தை நேசிப்பது எளிது. திட்டவட்டமான தனிப்பட்ட மனிதத் தன்மையை அறிந்து கொள்ளாமல் மனிதர்களை அறிவது சாத்தியமில்லை. வேதனைப் படுகிற, வேண்டுகோள் விடுக்கிற, திண்டாடுகின்ற நண்பனின் கண்களில் ஆழமான துயரத்தைக் குழந்தை காணவில்லை என்றால் மனிதனின் இன்னல் அவனது இதயத்துக்குச் செல்லவே செல்லாது. மனித வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும்—இன்பத்தையும் துன்பத்தையும்—அறிந்து கொள்ளாத குழந்தை நுண்ணுணர்வு கொண்டவனாகவும், உதவும் குணம் உள்ளவனாகவும் ஒரு போதும் மாற முடியாது.

எங்கள் வகுப்பில் வேதனைகளுக்குக் குறைவில்லை. வேதனையைத் தேடி வெகு தொலைவு நாங்கள் போக வேண்டாம். குழந்தைக் குழுவில் சந்தோஷச் சிரிப்பு ஒலித்தது, சுறுசுறுப்பு மனம் கோலோச்சியது, ஆனால் சில குழந்தைகளின் கண்கள் வருத்தம் தோய்ந்ததாய் விளங்கின. வால்யா பள்ளிக்கு வந்த மூன்றாண்டுகளில் அவளது தந்தையின் உடல் நிலை வெகுவாகக் கேடுற்றது. சிறுமி மௌனத்திலும் யோசனையிலும் ஆழ்ந்தவளாகி விட்டாள். நீனா, ஷூரா ஆகியோரின் தாயார் கடுமையாக நோயால் பாதிக்கப்பட்டார். வீட்டு வேலை செய்வதில் தந்தைக்கு உதவுவதற்காகச் சிறுமிகள் வீட்டில் தங்கி விடுவர். ஷூராவின் பாட்டி நோய்வாய்ப்பட்டார். மருத்துவமனையில் அவர் பலமுறை—ஒரு வாரமோ அல்லது ஒரு மாதமோ—படுத்திருந்தார். பையனுக்கு இது பெரும் துயரமாய் இருந்தது. பாட்டி நோய்ப்பட்ட நேரத்தில் அத்தையின் கவனிப்பில் அவன் வாழ்ந்தான். அவர் நல்ல பெண்மணியே, ஷூராவை நன்றாகப் பார்த்துக் கொண்டார். ஆனால் பாட்டியை விட்டுப் பிரிந்திருந்தது சிறுவனுக்குப் பெருத்த

துன்பத்தைத் தந்தது. இலையுதிர் காலத்துக் குளிர்ந்த நாள் ஒன்றில் பாட்டியைப் பார்த்து வருவதென்று அவன் முடிவு செய்தான். அத்தையிடம் ஒரு வார்த்தையும் சொல்லாமல் மருத்துவமனைக்குக் கிளம்பினுன் அவன். வழியில் மழையில் நனைந்து, சளிப்பிடித்து நோய்வாய்ப்பட்டான். சில நாட்கள் கழித்து அவனது பாட்டி படுத்திருந்த மருத்துவமனையிலேயே அவனையும் படுக்க வைத்தனர்.

வலோத்யாவின் குடும்பத்திலும் துக்கச் சம்பவம் நிகழ்ந்தது. அவனது அம்மா காரை கலக்குபவராக வேலை செய்து வந்தார். தினமும் அவர் பஸ்ஸில் வேலைக்குச் சென்று வருவார். வசந்தகால மூட்டத்தின் போது அவர் சென்ற பஸ் ஒரு லாரியுடன் மோதி விட்டது. கடுமையாகக் காயம் உற்றர் அவர். ஆயுள் முழுதும் அவர் அங்கஹீனருகவே இருப்பார் என்று மருத்துவர்கள் சொன்னுர்கள். இந்த நேரத்தில் அவனது தாத்தா கடுமையான நோய் கண்டு இறந்து போனுர். சரியான வாழ்க்கைப் பாதையில் வலோத்யா நடைபோடுவதற்கு மிகவும் பாடுபட்டவர் இவர்.

கோல்யாவின் குடும்பத்துக்கு வேறு விதமான துயரம் நேர்ந்தது. திருடிய சாமான்களை ஒளித்து வைத்திருந்ததற்காகக் கைது செய்யப்பட்டு இரண்டு ஆண்டு சிறை தண்டனை விதிக்கப்பட்டார் அவனது தந்தை. குடும்பத்தின் ஒழுக்கச் சூழல் மேம்பட்டது. ஆனுல் நடந்த நிகழ்ச்சி சிறுவனை உலுக்கி விடாமல் இருக்கவில்லை.

குழந்தைகளைச் சந்திக்கையில் நான் ஒவ்வொரு நாளும் அவர்களின் முகத்தைக் கூர்ந்து நோக்கினேன். போதனு நிகழ்ச்சிப்போக்கில் மிகவும் சிக்கலான விஷயம் குழந்தையின் வருத்தம் தோய்ந்த கண்களே. குழந்தையின் இதயத்தில் வேதனை காணப்பட்டால் அவன் உடல் மட்டுமே வகுப்பில் இருக்கும். இறுக்கமுடன் இழுத்துவிடப்பட்ட இசைத் தந்தி அவன். சற்றே கவனமின்றி அதனைத் தீண்டி விட்டால் அவனுக்கு வலி ஏற்படுத்தி விடுவோம். ஒவ்வொரு குழந்தையும் ஒவ்வொரு விதத்தில் வேதனையை அனுபவிக்கிறது. கனிவான வார்த்தைகள் அவனுக்கு ஆறு

தலாக இருக்கின்றன. இன்னொருவனுக்கோ கனிவுள்ள வார்த்தை புதிய வேதனையைத் தருகிறது. இது போன்ற தருணங்களில், போதனைத் திறன் என்பது முதற்கண் மனித ஞானத்திலேயே அடங்கியிருக்கிறது: வருந்துகின்ற இதயத்தைப் பாதுகாக்கத் தெரிந்திரு. மாணவனுக்குப் புதிய வேதனையை ஏற்படுத்தாதே, அவனது மனத்தின் காயங்களைத் தொடாதே. வேதனையால் உலுக்கப் பட்டுள்ள, தடுமாற்றத்தால் ஆட்கொள்ளப்பட்டுள்ள மாணவன் முன்னர் பயின்று வந்தது போல இப்போது பயில முடியாது என்பது சொல்லாமலே விளங்கும்; அவனது சிந்தனையில் வேதனை தனது சுவட்டை விட்டுச் செல்கிறது. குழந்தையின் வேதனை, வருத்தம், திண்டாட்டம் ஆகியவற்றை முதற்கண் பார்ப்பதே ஆசிரியரின் மிகவும் பிரதான கடமையாகும். குழந்தையுள்ளத்தை உணரவும் பார்க்கவும் வேண்டும். குழந்தையின் வேதனையை ஆசிரியர் எவ்வாறு அணுகுகிறார், குழந்தையுள்ளத்தைப் புரிந்து கொள்ளவும் உணரவும் அவருக்கு எந்த அளவுக்கு முடிகிறது என்பதைப் பொறுத்ததுதான் போதனா வல்லமையின் அடிப்படை.

வேதனைக்கு உட்பட்டுள்ள மாணவனைக் கேள்விக்கு விடையளிக்குமாறு அழைக்கவோ, அவன் சுறுசுறுப்பாகவும் பரபரப்பாகவும் இருக்க வேண்டும் என்று கோரவோ கூடாது. குழந்தைக்கு என்ன நேர்ந்து விட்டது என்று கேட்கக் கூடாது. அதுபற்றிச் சொல்வது அவ்வளவு எளிதல்ல. குழந்தைகள் ஆசிரியரை நம்பினால், அவர்களுக்கு அவர் நண்பனாய் விளங்கினால் எதைப் பற்றிச் சொல்ல முடியுமோ அதனைக் குழந்தை சொல்லும். அவன் மௌனமாக இருந்தால் வேதனை மிகுந்த குழந்தையின் இதயத்தைத் தீண்டாதீர்கள்... போதனைப் பணியிலேயே மிகவும் கடினமான அம்சம் உணருவதற்குக் கற்றுத் தருவதுதான். எந்த அளவுக்குக் குழந்தை மூத்தவனாக இருக்கிறானோ, அந்த அளவுக்கு, நல்லுணர்ச்சிகளாக இசையெழுப்புகிற மனித இதயத்தின் மெல்லிய தந்திகளை மீட்டுவது கஷ்டமாகும்.

உணர்ச்சி கொள்வதற்கும், நெருக்கமானவனின் கண்களில் அவனது ஆன்மிக உலகத்தைக் காண்பதற்கும்

குழந்தைக்குக் கற்றுத் தர வேண்டுமானால், குழந்தைகளின் உணர்ச்சிகளை, முதற்கண் வேதனை உணர்ச்சிகளைப் பாதுகாக்கவும் ஒருவருக்குத் தெரிந்திருக்க வேண்டும். ''பொடியனே, நீ உனது வேதனையை மிகைப் படுத்திக் காட்டுகிறாய்...'' என்று பொறுப்பற்றுச் சொல்வதன் மூலம் வேதனை உணர்ச்சியைப் போக்கிவிட முயல்வதைப் போல உளநெகிழ்ச்சி—ஒழுக்க உறவுகளில் அசிங்கமானது வேறு எதுவும் இல்லை.

குழந்தை இதயத்தின் அசைவைப் புரிந்து கொள்ள வேண்டும். ஏதோ விசேஷமான முறைகளின் மூலம் இதனைக் கற்றுக் கொள்ள முடியாது. போதகரின் உயர்வான உளநெகிழ்ச்சி—ஒழுக்கக் கலாசாரத்தின் மூலமே இது கிட்டும். குழந்தையின் வேதனை எந்த வழியிலிருந்து வந்த போதிலும் அதில் எப்போதும் சில பொதுவான அம்சங்கள் இருக்கின்றன. குழந்தைத்தனமற்ற யோசனை, அக்கறையின்மை, துன்பம், தனிமை ஆகியவை காணப்படும் துயரார்ந்த, வருத்தம் தோய்ந்த கண்களை அப்போது நீங்கள் பார்க்கலாம். வேதனை வயப்பட்ட குழந்தை தனது நண்பர்களின் விளையாட்டுக்களையும் உல்லாசங்களையும் கவனிப்பதில்லை; துயரச் சிந்தனைகளிலிருந்து அவனை எதுவும் திசைதிருப்ப முடியாது.சிறிய மனிதனுக்குச் செய்யக் கூடிய மென்மையான, பரிவு மிக்க உதவியெல்லாம், அவனுக்கு மிகவும் தனிப்பட்டதான, அந்தரங்கமான அம்சங்களைத் தொடாமல் அவனது துயரத்தைப் பகிர்ந்து கொள்வதேயாகும், முரட்டுத்தனமான தலையீடு கோபத்தையே கிளறிவிடும். ''நம்பிக்கை இழக்காதே, சோர்வடையாதே, நிமிர்ந்து நில்'' போன்ற புத்திமதிகள், அவற்றுக்குப் பின்னே உண்மையான மனித நேய உணர்ச்சிகளுடன் வரவில்லை என்றால், வெறும் உளறல்கள் என்றே குழந்தைகளால் ஏற்றுக் கொள்ளப்படும்....

உணர்ச்சி கொள்ளக் குழந்தைகளுக்குக் கற்றுத் தருவது என்பதற்கு, தனது உளநெகிழ்ச்சி—ஒழுக்கக் கலாசாரத்தை அதற்கு வழங்குவது என்றே முதற்கண் பொருள் படும். மனிதனின் மனநிலையை ஆழமாகப் புரிந்து கொள்

ளாமல் உணர்ச்சிக் கலாசாரத்தைப் பெறுவது சாத்திய மில்லை. கவலையையோ வருத்தத்தையோ அனுபவிக்கிற வனின் இடத்தில் சிந்தனை பூர்வமாகக் குழந்தை தன்னை வைத்துப் பார்க்கிற போதுதான் இவ்வாறு புரிந்து கொள்ள முடியும்.

சாஷாவின் பாட்டி நோய்வாய்ப்பட்ட போது சிறுவன் வேதனை நிறைந்தவனும், யோசனை மிகுந்தவனும் அதே நேரத்தில் எச்சரிக்கையுடையவனுகவும் மாறிப் போனுன்: அவனிடம் ஏதாவது சொல்ல வேண்டியதுதான் வலி நிறைந்த இடத்தைத் தொட்டு விட்டது போல அவன் உடல் நடுங்குவான். அவனது பெரிய, கரிய கண்கள் கண் ணீர் உகுத்ததை ஒருநாள் நான் கண்டேன். ''சாஷா அழு கிருன்'' என்ருர்கள் குழந்தைகள். அவன் குழந்தையாக இருப்பதால் மட்டுமே தனது நண்பன் பற்றியோ, வயது வந்தவர் பற்றியோ அனுதாப உணர்ச்சியால் ஊடுருவப் படுவான் என்று எதிர்பார்ப்பது அப்பாவித்தனமாகும். சுயமாக முதல் எட்டுக்கள் எடுத்து வைப்பதற்குக் குழந் தைக்குக் கற்றுத் தருவது போலவே, ஆழ்ந்த யோசனை யோடும், அக்கறையோடும், எச்சரிக்கையுடனும் கூட்டாக அனுபவ உணர்ச்சி கொள்வதற்கு கற்றுத்தர வேண்டும். கூட்டாக அனுபவ உணர்ச்சி கொள்வது என்பது உலக அறிவின் ஒரு மிக நுண்ணிய அம்சமாகும், இதயத்தாலும் சிந்தனையாலும் அறிவு பெறுவதாகும். கூட்டு அனுபவ உணர்ச்சியைப் பயிற்றுவிக்கிற சக்தி வாய்ந்த சாதன மாக, அனுபவம் மிக்க போதகரிடம் விளங்குவது வார்த் தையே.

சாஷா வகுப்பறையில் இல்லாத நேரம் பார்த்து நான் குழந்தைகளிடம் சொன்னேன்: ''ஒருவனுக்குத் துன்பம் நேர்ந்தால் அது பற்றி ஆச்சரியம் வெளியிடக் கூடாது. சாஷாவுக்கு நேர்ந்துள்ளதோ பெருந் துன்பம். அவ னுடைய ஒரேயொரு நெருங்கிய மனிதர்—பாட்டி. அம்மாவைப்பற்றி அவனுக்கு ஞாபகம் இல்லை. பாட்டி இப் போது நோய்ப் பட்டிருக்கிருர். அவரை ஒருவேளை மருத் துவமனைக்குக் கூட்டிச் சென்று விடுவார்கள். அப்போது

சிறுவன் யாருடன் இருப்பான்? அவனது இடத்தில் உங்களை வைத்துப் பாருங்கள், அப்போது தெரியும் துன்பம் என்பது என்னவென்று. சாலையில் நாம் ஒரு வயோதிகரைச் சந்தித்தோமே நினைவிருக்கிறதா? அவரது கண்களில் எத்தகைய வருத்தம் குடிகொண்டிருந்தது என்பது ஞாபகம் இருக்கிறதா? கிழவர் துக்கப் படுகிறார் என்று அப்போது நீங்கள் உணர்ந்தீர்கள். இப்போது உங்களது நண்பனின் கண்கள் வேதனை தோய்ந்திருப்பதை நீங்கள் ஏன் காணவில்லை? பல நாட்களாக சாஷா மௌனமாய், ஆழ்ந்து சிந்தனை வயப்பட்டவனாய் இருக்கிறான் என்று நீங்கள் காண்கிறீர்கள். அவன் வகுப்பறையில் இருக்கிறான். அவனது சிந்தனைகளோ பாட்டியின் படுக்கைக்கு அருகிலேயே இருக்கின்றன. சிறுவன் சில தினங்கள் வீட்டில் தங்கி விட்டானென்றால், ஏன் பள்ளிக்கு வரவில்லை என்று அவனிடம் கேட்காதீர்கள். தனது துன்பத்தைப் பற்றிச் சொல்வது ஒருவனுக்கு எளிதல்ல. பொதுவாகவே ஒருவருக்குத் துன்பம் நேர்ந்துள்ளது அவர் கஷ்டப்படுகிறார் என்றால் அனுவசியமாய் நோண்டிப் பார்க்கும் ஆர்வம் காட்டாதீர்கள், அவருக்கு உதவி செய்யுங்கள். இதயத்தின் காயத்துக்கு எரிச்சலூட்டாதீர்கள். உங்கள் குழுவில் யாருக்காவது கஷ்டம் நேர்ந்துள்ளது என்றால், உங்களுடைய எந்தவொரு வார்த்தையும், எந்தவொரு செயலும் அவரது வருத்தத்தை அதிகப் படுத்தி விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள். சாஷாவுக்கும் அவனுடைய பாட்டிக்கும் எப்படி உதவலாம் என்று இன்னும் யோசனை செய்யுங்கள். 'நண்பனுக்கு உதவி செய்கிற எவ்வளவு நல்லவர்கள் நாங்கள்' என்று பெருமையடித்துக் கொள்கிற ஒன்றாக உங்கள் உதவி இருக்கக் கூடாது. உங்களது நற்பண்பை ஊரறியக் காட்டுவதால் ஒரு புண்ணியமுமில்லை. நண்பனுக்கு உதவ வேண்டும் என்று இதயம் உங்களுக்குச் சொல்லவில்லை என்றால் உங்கள் நற்பண்பை எப்படி வெளிச்சம் போட்டுக் காட்டினாலும் உங்களை அது அன்பு கொண்டவர் ஆக்கி விடாது.''

சாஷா வகுப்பறைக்குள் வந்தான். அவனைப் பற்றி அதற்கப்புறம் நான் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

உடனடியாக வேறு எதையோ பற்றி நான் ஏன் பேசத் தொடங்கினேன் என்று கண்டு கொண்டார்கள் குழந்தை கள். சிறுவனுக்கும் அவன் பாட்டிக்கும் எப்படி உதவி செய்யலாம் என்பது பற்றி இடைவேளையில் அவர்கள் கலந்து பேசினர். ஆப்பிள் பழங்களும் மீனும் சிறுவனுக்குக் கொண்டு வந்து கொடுத்தனர். சுத்தமான உளத் தூண் டல்களாலேயே இது செய்யப்பட்டது. மருத்துவமனையில் பாட்டியைப் படுக்க வைத்த பின்னர், அத்தையின் வீட்டில் சாஷா வாழ்ந்து வந்த போது அவனைப் பார்க்க அடிக்கடி சென்று வந்தனர் குழந்தைகள். மழையில் நனைந்த சிறு வன் நோய்வாய்ப்பட்டு பாட்டி இருக்கும் மருத்துவமனை யிலேயே படுத்திருக்கிறான் என்று கேள்விப்பட்டு மிகவும் வருந்தினர். நாளொன்றில் நாங்கள் அனைவரும் மருத்துவ மனைக்குக் கிளம்பினோம். ஆப்பிள் பழங்களும் பிஸ்கோத் தும் கொண்டு வந்தனர் குழந்தைகள். தனது அப்பா கொண்டு வந்த சாக்லேட் கட்டியை எடுத்து வந்தான் ஷூரா. எல்லாக் குழந்தைகளும் சாஷாவின் படுக்கை அறையருகே சென்று வருவதற்காக நாங்கள் அரை நாள் காத்திருந்தோம்.

எனக்கு இது மகிழ்ச்சியைத் தந்தது கவலையையும் ஏற் படுத்தியது. கூட்டுணர்ச்சியின் விளைவல்லவா இது. தனது நற்செயலை மற்றவர்கள் காண வேண்டும் என்பதற்காகவே முதற்கண் நண்பனுக்கு அன்பு செய்ய விரும்பியிருக் கிறார்கள் சில குழந்தைகள். தனது தந்தை அண்மையில் வாங்கித் தந்த பனிச்சறுக்குக் காலணிகளை சாஷாவிற்குப் பரிசளிக்க எடுத்து வருவதாகச் சொன்னான் வலோத்யா.

''அப்பா அனுமதிப்பாரா?'' நான் கேட்டேன்.

''ஆம், அனுமதிப்பார்.''

''அப்படியானால், அவற்றை மருத்துவமனைக்கு ஏன் எடுத்துச் செல்ல வேண்டும்? சாஷாவால் இப்போது சறுக்கி விளையாட முடியாதே. சாஷாவிற்கு உடல் நல மான பின்னே அவனது வீட்டுக்குச் சென்று அவற்றைக் கொடு.''

சறுக்குக் காலணிகளை வலோத்யா நண்பனுக்குக் கொடுக்கவில்லை. உணர்ச்சிப் பெருக்கு மிகவும் பலவீன

மானதாய் இருந்திருக்கிறது... மனிதன் அன்பு, இரக்கம், அனுதாபம் ஆகியவற்றைப் பயிற்றுவிப்பது பற்றிச் சிந்திக்க வைத்தது இந்த நிகழ்ச்சி. இது மிகவும் மென்மையான, சிக்கலான விஷயம். புகழ்ச்சிக்காகவோ, பரிசுக்காகவோ அன்றி அன்பின் தேவை தரும் உணர்ச்சிக்காக, சிறு மனிதனை நல்லது செய்யுமாறு பயிற்றுவிப்பது எப்படி? அன்புத் தேவை என்பது என்ன, எதிலிருந்து அது தொடங்குகிறது? இரக்க உணர்ச்சியைப் பயிற்றுவிப்பதில் கூட்டு உணர்ச்சிப் பெருக்கு பெருத்த முக்கியத்துவம் வகிக்கிறது. எனினும் அனுதாப உணர்ச்சி, ஒவ்வொரு குழந்தையின் அன்மிக வாழ்வின் தனிப்பட்ட துறையையும் எட்டிப் பிடிக்க வேண்டும்.

எனது மாணவர்கள் மனத்தின் உள் தூண்டல்களால் நற்செயல்கள் புரிய வேண்டும்—நண்பர்களுக்கு, பொதுவாக மற்றவர்களுக்கு உதவ வேண்டும்—ஆழமான மனத் திருப்தி உணர்ச்சியை அனுபவிக்க வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். நல்லது செய்வதற்குப் பயிற்றுவிப்பது, அதே நேரத்தில் 'இப்படிச் செய்' என்று நேரடியாகப் புத்திமதி சொல்லாமல் இருப்பது என்பது ஒழுக்கத்தைப் பயிற்றுவிப்பதில் ஒருவேளை மிகக் கடினமான ஒரு விஷயமாகலாம். நடைமுறை வேலையில் எப்படிப் பணியாற்றுவது? நல்லது செய்யாமல் இருக்க முடியாதவாறு, அதாவது இரக்க உணர்ச்சி கொள்ளும்படி செய்கிற மனத்தின் வல்லமையைக் குழந்தையிடம் வளர்ப்பது தான் மிகவும் பிரதானமானது என்று தோன்றுகிறது. இவ்வாறு செய்வது எப்படி? மற்றவரின் வேதனையைப் பார்க்கிற குழந்தை அவரது இடத்தில் சிந்தனை பூர்வமாக தன்னை வைத்துப் பார்க்குமாறும், பிரகாசமான சிந்தனை, பிரகாசமான உணர்ச்சியைத் தூண்டி விடுமாறும், சிறிய மனிதன் எனும் தனிநபர், வேதனையுள்ள வாழ்க்கை வாழ்கிற தனி நபர் எனும் மனிதனுடன் ஒன்று கலக்குமாறும், வேதனைப் படுகிற மனிதனுக்குள் தன்னைத் தானே குழந்தை பார்க்குமாறும் செய்வது எப்படி?

ஆன்மிக வாழ்வு, குழந்தைகளிடையே பரஸ்பர உறவு

எனும் மிகக் கடினமான, சிக்கலான துறை பற்றிய எங்களது கூட்டங்கள் உளவியல் உரையாடல்களாகவே மாறிப் போயின. இவற்றில் ஆரம்ப வகுப்பாசிரியர்கள் மட்டுமின்றி, நடுத்தர வகுப்பாசிரியர்களும் உயர் வகுப் பாசிரியர்களும் கூடக் கலந்து கொண்டனர். எங்கள் உரை யாடலின் கருப்பொருளாக இருந்தது **மனிதன்**—குழந்தை, சிறுவன், வாலிபன். குறிப்பிட்ட குழந்தையின் ஆன்மிக உலகம் பற்றியும், அவனது அறிவு, ஒழுக்கம், உளநெகிழ்ச்சி, உடலுறுதி, அழகியல் ஆகியவற்றின் வளர்ச்சிக்கான ஊற்றுக் கண்கள் பற்றியும், பகுத்தறிவு, சிந்தனை, உணர்ச்சிகள், விருப்பங்கள், பண்புகள், தனிநபர் நம்பிக்கைகள் ஆகியவை பள்ளிக்கு முந்திய பருவத்தி லும் இப்போதும் உருவான, உருவாகிற சூழ்நிலை பற்றி யும் உளவியல் கூட்டங்களில் தகவல்களும் அறிக்கை களும் தந்தோம். சிறுவன், வாலிபன், இளம்பெண் ஆகியோரின் மீது போதனைச் செல்வாக்குச் செலுத்து வதற்கு நடுத்தர வகுப்பாசிரியர்கள், உயர் வகுப்பாசிரி யர்கள் ஆகியோரைத் தமது அறிக்கைகளின் மூலம் தயார் படுத்தினர் ஆசிரியர்கள். கூட்டுப் போதனு முறை மேலும் மேலும் உறுதி பெற்றது: நாங்கள் பயிற்று விக்கிற மனிதன் போதனைக் குழு முழுதின் செல்வாக்குக் கும் உட்பட்டிருக்க வேண்டுமானுல் ஒவ்வொரு போத கரும் ஒவ்வொரு மாணவனது தனித் தன்மையின் நுண் ணிய வேறுபாட்டையும் நன்கு தெரிந்திருக்க வேண்டும்.

சில குழந்தைகளின் ஆன்மிக உலகத்தினது சிக்கலான பகுதிக்குள் ஆழமாக ஊடுருவுவதற்கு இரண்டு, மூன்று மணி நேரங்கள் கூட எங்களுக்குப் போதவில்லை. உதாரண மாக கோல்யாவைப் பற்றி நான் அறிக்கை கொடுத்த பின் ஆசிரியர்கள் முக்கியமான விவரங்கள் தந்து எனது அறிக் கையை நிறைவு செய்தனர். குழுவில் குழந்தை பார்க்கிற அனைத்தும் அவனது உள நெகிழ்ச்சி உலகுக்குள் எப்படி நுழைகிறது, வேறு மாதிரிச் சொன்னுல், மனிதர்களுக் கிடையே இருக்கிற உறவுகளை அவன் எப்படி உணருகிறுன், மற்ற மனிதர்களுடன் தான் கொண்டுள்ள உறவை எப்படி

கிரகித்துக் கொள்கிறுன் என்பது பற்றியெல்லாம் அவர்கள் விவரம் தந்தனர். நல்லதுக்கான உள்மனத் தூண்டுதல்கள் பற்றி, மனிதர்களுக்கு நல்லது செய்ய வேண்டும் என்று எப்படி குழந்தை தன்னைத் தானே நிர்பந்திக்கிறது என்பது பற்றி மிகச் சுவாரஸ்யமான—குழுவின் கருத்தில்—புதிய முடிவுக்கு நாங்கள் வந்தோம்.

துயரம் தோய்ந்த தமது நண்பனுக்கு எந்த அளவுக்குத் தமது ஆன்மிக ஆற்றல்களைக் குழந்தைகள் நல்கினரோ அந்த அளவுக்கு அவர்களது இதயம் நுண்ணுணர்வு கொண்டதாய் மாறிற்று. குளிர் நிறைந்த பிப்ரவரி மாதத்து நாள் ஒன்றில் (அப்போது குழந்தைகள் மூன்றும் வகுப்பில் படித்து வந்தனர்)மீஷா, கோல்யா, லரீசா ஆகியோர் எனது வீட்டுக்கு ஓடி வந்தனர். அவர்கள் ஏதோ பதட்டத்துக்கு உள்ளாயிருந்தனர்.

''வான்யாவின் அண்ணன் லியோனியா மாண்டு விட்டான். அப்பாவிற்குத் தந்தி வந்திருக்கிறது. அவர் நாளைக்குக் கஸாக்ஸ்தான் செல்கிறுர். நாம் இப்போது என்ன செய்வது?'' என்றுள் காத்யா.

''நண்பனுக்கு உதவுவதற்கு எங்களுக்குக் கற்றுத் தாருங்கள்'' என்று குழந்தைக் கண்கள் கெஞ்சின.

அந்தத் துக்க நிகழ்ச்சி எப்படி நடந்தது என்று அன்றே தெளிவாயிற்று. பதினெட்டு வயது டிராக்டர் ஓட்டியான லியோனியா கால்நடைப் பண்ணைக்கு உலர்ந்த புல் எடுத்துக் கொண்டு சென்றுன். நடுவழியில் பனிப்புயலில் சிக்கிக் கொண்டான். டிராக்டரை விட்டு விட்டு பாதைக்கு அருகே இருந்த கிராமத்திற்கு இளைஞன் சென்றிருக்கலாம். ஆனல் அவன் அவ்வாறு செய்யவில்லை. புயல் விரைவில் நின்று விடும், உலர்ந்த புல்லைப் பண்ணைக்கு நேரத்தில் கொண்டு போய் விடலாம் எறைு நம்பினுன். ஆனுல், பனிப்புயல் மேலும் வலுப்பெற்றது, உனற குளிர் இன்னும் கடுமையாகியது. டிராக்டர் கூட்டுக்குள்ளேயே லியோனியா உறைந்து சவமாகிப் போனுன்... வான்யா சில தினங்கள் பள்ளிக்கு வரவில்லை. குழந்தைகள் வருத்தம் தோய்ந்தவர்கள் ஆனுர்கள். கூச்சலெல்லாம் நின்று விட்டது.

''நண்பனுக்கு எப்படி உதவுவது?'' என்றே எல்லோரும் கேட்டுக் கொண்டிருந்தனர். வான்யாவின் வீட்டுக்குப் போய் வருவோம் என்று யாரோ ஆலோசனை சொன்னார். அவ்வாறு செய்ய வேண்டாம் என்று நான் அறிவுரை சொன்னேன்: ''சிறுவன், அவனது அம்மா, அப்பா, சகோதர சகோதரிகள் எல்லோருக்கும் பெரும் துக்கம் நேர்ந்திருக்கிறது. நாம் வீட்டுக்குப் போக வேண்டியதுதான் லியோனியா எப்படிப் பள்ளி சென்று வருவான் என்று அவன் அம்மா நினைத்துக் கொள்வார். அதனால் துக்கம் அதிகம் தான் ஆகும். சில நாள் கழித்து அவன் வீட்டுக்குப் போவோம். அப்போது தாயாரின் இதயவலி ஒருவாறு ஓய்ந்திருக்கும். சிறுவன் பள்ளிக்கு வந்தவுடன் அண்ணன் எப்படி மாண்டான் என்று அவனிடம் கேட்காதீர்கள். அது பற்றி நினைப்பதும் பேசுவதுமே கஷ்டமாக இருக்கும். வான்யாவிடம் கவனமாகவும் எச்சரிக்கையோடும் நடந்து கொள்ளுங்கள். அவனுக்கு எந்த வழியிலும் இதய வலி ஏற்படுத்தி விடாதீர்கள்.''

கஸாக்ஸ்தானிலிருந்து திரும்பி வந்த வான்யாவின் தந்தை, கன்னி நில அரசுப் பண்ணை இருக்கும் கிராமத்தின் தெருவிற்கு லியோனியாவின் பெயர் சூட்டப் பட்டுள்ளது என்று தெரிவித்தார். அப்பா சொன்னதை நான் குழந்தைகளுக்கு எடுத்துச் சொன்னேன். அப்போது பயனீர் குழுவில் சேருவதற்கு எங்கள் வகுப்பு தயாராய் வந்தது. குழுவுக்கும் அதன் மூன்று பிரிவுகளுக்கும் யாருடைய பெயர் வைப்பது என்று குழந்தைகள் யோசித்து வந்தனர். அவர்கள் சொல்லட்டும் என்று நான் காத்திருந்த வார்த்தைகள், இப்போது அவர்கள் வாயிலிருந்து வந்தன. ''வான்யா இருக்கின்ற பிரிவுக்கு, போராட்டப் பணியில் உயிர் துறந்த அவனது அண்ணன் லியோனியாவின் பெயர் வைப்போம்.'' இந்தச் செய்தியைத் தனது அன்னைக்குச் சொன்னான் சிறுவன். நான் சிறுவர்களுக்குச் சொன்னேன்: ''நமது சித்திர நோட்டை எடுத்து நாம் ஒவ்வொருவரும் அதில் பள்ளிக்கூடம் பற்றி ஏதாவது படம் வரைவோம். லியோனியாவுடன் சம்பந்தப் பட்ட, அவனது பள்ளிப் பருவத்

துடன் சம்பந்தப்பட்ட விஷயங்களை வரைய வேண்டும் என்று குழந்தைகள் விரும்பினர். லியோனியா மூன்றும் வகுப்பில் படிக்கும் போது அவன் நட்டு வைத்த ஆப்பிள் மரத்தை உயர் வகுப்பு மாணவர்கள் எங்களுக்குக் காட்டினர். பௌதிக அறையில் லியோனியாவும் அவனது நண்பர்களும் சேர்ந்து செய்த நீரேற்று குழாயைக் கண்டோம். லியோனியா பறவைகளை நேசித்தான். தனது பிரிவினருடன் சேர்ந்து அவன் ஒரு புறுக்கூடு செய்தது பற்றி பள்ளியில் பலர் பேசினர். இவை பற்றியெல்லாம் சித்திர நோட்டில் வர்ணித்தார்கள் குழந்தைகள், லியோனியாவின் உருவப் படத்தை நான் வரைந்தேன். சித்திர நோட்டை வான்யாவின் தாயாரிடம் எடுத்துச் சென்றார்கள். இந்தப் பரிசு அவருக்கு மதிப்பிற்கரியதாகத் திகழ்ந்தது. பள்ளிக் குழு அவரது மகனின் நினைவைப் போற்றுகிறது என்பதில் மகிழ்ச்சியுற்றார் அவர். லியோனியாவின் பெயர் தாங்கப் போகும் பயனீர்ப் பிரிவுக்கும் இதே போன்றதொரு சித்திர நோட்டுச் செய்து தந்தோம் நாங்கள்.

நல்லுணர்ச்சிகளும் நற்செயல்களும் வெளிச்சம் போடும் ''நடவடிக்கையாகாமல்'' பார்த்துக் கொள்வது மிகவும் அவசியமாகும். செய்யப்பட்ட காரியம் பற்றி முடிந்த அளவுக்குக் குறைவாகப் பேசுவது, நல்ல செயலுக்குப் புகழ்ச்சிகள் ஏதும் இல்லை—என்ற கோரிக்கைகளையே போதனைப் பணியில் கடைப்பிடிக்க வேண்டும். மனித நேயச் செயல்களைத் தான் செய்யும் கைங்கர்யங்கள் என்றும் வீரச்செயல்கள் என்றும் குழந்தை நினைப்பது மிகவும் அபாயகரமானது. இதற்குப் பள்ளிக்கூடமே பெரும்பாலும் காரணமாகும். யாரோ தொலைத்து விட்ட 10கோப்பெக் காசை எடுத்துக் கொண்டு வருகிறான் மாணவன், இந்தக் கண்டுபிடிப்பு பற்றி குழு முழுதும் தெரிந்து கொள்கிறது. பக்கத்திலுள்ள இன்னொரு பள்ளிக்கூடத்தில் நடந்த சம்பவம் நினைவுக்கு வருகிறது. சிறுமி ஒருவள் ஐந்து கோப்பெக் நாணயம் ஒன்றைக் கண்டெடுத்து வகுப்புக்குக் கொண்டு வந்தாள். ஆசிரியை அவளைப் புகழ்ந்தார்... அடுத்த இடைவேளையின் போது மூன்று

சிறுமிகளும் ஒரு மாணவனும் ஆசிரியையிடம் ஓடி வந்தனர். இவர்கள் எல்லோருமே நண்பர்கள் தொலைத்து விட்ட ஒரு கோப்பெக் இரண்டு கோப்பெக் காசுகளைக் கண்டெடுத்திருக்கிறார்களாம். புகழ்ச்சியை எதிர்பார்த்தார்கள் குழந்தைகள். ஏதோ கோளாறு இருக்கிறது என்று கண்ட ஆசிரியை கோபம் கொண்டார்... இவ்வாறு ''நற்செயல் துளிகளை'' வெளியிடுவதற்குக் குழந்தைகள் கற்றுக் கொள்கிறார்கள். நற்செயல்களுக்காக அவர்களைப் புகழவில்லை என்றால் அவர்களுக்கு அதிருப்தி ஏற்படுகிறது.

சிந்தனைத் திறமையைப் போலவே நற்செயலும் சாதாரணமான ஒரு மனித நிலையாக மாறவேண்டும். அது ஒரு பழக்கமாகி விட வேண்டும். நற்பண்புள்ள, கனிவான, மனப்பூர்வமான செயல்கள் குழந்தை இதயத்தில் ஆழமான திருப்தியை விட்டுச் செல்ல வேண்டும் என்பதற்காக எங்களது போதகர் குழு பாடுபட்டது. ஆசிரியரின் வார்த்தை ஏற்படுத்தும் செல்வாக்காலும், குழு கொண்டுள்ள மனநிலையின் செல்வாக்காலும் மற்றவரின் ஆன்மிக உலகுக்குக் கனிவு மிக்க நுண்ணுணர்வு குழந்தைப் பருவத்தில் தூண்டப் படுகிறது. அனுதாபப் பெருக்கையும் நற்செயல் புரியத் தயாராய் இருப்பதையும் எல்லாக் குழந்தைகளிடமும் தட்டியெழுப்புவது மிக முக்கியமானதாகும். தனிப்பட்டவரின் நடவடிக்கையாக இந்தப் பெருக்கு உருவெடுக்கும் போதுதான் அது இதயத்தை நற்பண்பு மிக்கதாக்கும்.

தமது வயோதிக நண்பரான அந்திரேய் தாத்தாவை எனது மாணவர்கள் மறந்துவிடவில்லை. பனிக்கால மாதங்களில் தேனீப்பண்ணையின் குளிர்கால இருப்பிடத்துக்கு அருகிலுள்ள சிறிய வீட்டில் அவர் வசித்து வந்தார். அவரிடம் வந்தனர் குழந்தைகள். ஆப்பிள் பழங்களும் படங்களும் கொண்டு வந்தனர். அன்பு மிகுந்த ஒவ்வொரு வார்த்தை கண்டும் மகிழ்ச்சியுற்றார் தாத்தா. தனிமை என்பது எளிய விஷயமல்ல என்று உணர்ந்த குழந்தைகள் இந்த மனிதருக்கு அன்பு செய்ய முயன்றனர்.

வெதுவெதுப்பான மார்ச்சு மாத நாள் ஒன்றில், சிறு

வர்கள் அந்திரேய் தாத்தாவிடம் ஓடினுர்கள்: தேனீக் கூடு களை அந்தந்த இடத்தில் நிறுத்துவதற்கு அவருக்கு உதவி செய்யப் போகிருர்கள் குழந்தைகள். அனைவருக்கும் இந்த நாள் கொண்டாட்ட நாளாக இருந்தது: பொன்னிற இறக்கை கொண்ட வசந்த காலத் தூதுவர்கள் எப்படிச் சுற்றிச் சுற்றிப் பறக்கின்றனர் என்பது கண்டு ஆனந்தம் கொண்டனர் குழந்தைகள். குளிர்கால இடத்திற்குப் போகிற வழியில், தண்ணீர் குடிப்பதற்காக ஒரு வயதான பெண்மணியின் வீட்டுக்குப் போனேம். அவர் வீட்டில் செய்த பிஸ்கோத்துகள் தந்து எங்களை உபசரித்தார், அடிக்கடி தனது வீட்டுக்கு வந்து செல்லும்படி எங்களிடம் கேட்டுக் கொண்டார்.

ஓல்கா ஃபியோதரவ்ளு போர்க் காலத்தில் பெருந் துயரத்துக்கு ஆளானுர். அவரது இரண்டு மைந்தர்களும் கணவனும் சகோதரனும் போர்முனையில் கொல்லப் பட்டார்கள். பாசிச ஜெர்மனியில் நிலக்கரிச் சுரங்கத் தில் செய்த தாங்க முடியாத வேலைச் சுமையால் அவரது மகன் இறந்து போனுர். இந்தப் பெண்மணியின் கடிய வாழ்க்கை பற்றி நான் குழந்தைகளுக்கு எடுத்துச் சொன் னேன். ஓல்கா பாட்டியுடன் நட்புக் கொள்ள வேண்டும் என்று குழந்தை இதயங்களில் ஆவல் பிறந்தது. சிறு வர்கள் அடிக்கடி பாட்டியைப் பார்த்து வந்தனர். ஓல்கா ஃபியோதரவ்ளு தமது மைந்தர்களும் கணவரும் பெற்ற பதக்கங்களையும் விருதுகளையும் எங்களுக்குக் காட்டினுர். ஓல்காப் பாட்டிக்கு மகிழ்ச்சி ஏற்படுத்த வேண்டும் என்று குழந்தை இதயங்கள் ஆர்வம் கொண்டன. பழ மரங்கள் நடுகின்ற காலம் வந்தவுடனே அவர் வீட்டில் அவரது மகன்மார்கள், மகன், கணவர், சகோதரன் ஆகியோரின் ஞாபகார்த்தமாக ஆப்பிள் கன்றுகள், பேரிக் கன்றுகள், செர்ரிக் கன்றுகள், திராட்சைப் புதர்கள் ஆகிய ஒவ்வொன் றிலும் ஐந்து உருப்படிகள் நட்டு வைத்தோம். அந்தப் பாட்டிக்காகவும் சில மரங்கள் நட்டோம். ஓல்கா ஃபியோ தரவ்ளு அனுபவித்த நன்றியுணர்ச்சியை வார்த்தைகளால் வெளியிட முடியாது. வெப்பம் மிகுந்த கோடைகால

நாட்களில் இம்மரங்களுக்குத் தண்ணீர் ஊற்றுவதற்காக நாங்கள் இங்கு வந்தோம். எங்கள் உதவி இல்லாமலே ஒல்கா ஃபியோதரவ்ளு இதனைச் செய்து வந்தார். கோடை காலத்தில் சில தினங்களில் நாள் முழுதும் குழந்தைகள் அவருடன் தங்கி விடுவர்.

ஒல்கா பாட்டி குழந்தைகளுக்கு நண்பராகி விட்டார். அவர் இல்லாமல் ஒரு பண்டிகையைக் கூடக் குழந்தைகள் கொண்டாடுவதில்லை. செர்ரிகள், ஆப்பிள்கள், பேரிகள், திராட்சைகள் ஆகியவை பழுத்த நாட்கள் ஒற்றைக் கூட நாங்கள் தவற விடாமல் பார்த்துக் கொண்டோம். அப் போது பாட்டியின் தோட்டத்துக்கு வந்து, பழுத்த முதல் பழங்களைப் பறித்து அவருக்குக் கொண்டு போய்த் தருவோம். ஏழாம் வகுப்பில் குழந்தைகள் படித்து வரும் போது பாட்டிக்குக் கடுமையான நோய் கண்டது. கல்வி யாண்டு முடிந்த ஒரு வாரம் கழித்து அவர் இறந்து போனார். குழந்தைகளுக்கு இது பெருத்த துக்கமாக இருந் தது. தனது வீட்டையும் தோட்டத்தையும் குழந்தைகளுக் குத் தந்து விடும்படி அவர் உயில் எழுதி விட்டுச் சென் றிருக்கிறார் என்று சில நாட்கள் கழிந்த பின் நாங்கள் அறிந் தோம். இந்த உயிலைக் கண்டு கூட்டுப் பண்ணை நிர்வாகிகள் திகைப்படைந்தனர். வீட்டுக்கும் தோட்டத்துக்கும் மாண வர்களே எஜமானர்கள் என்பதை எப்படிப் புரிந்து கொள் வது? சட்ட நுணுக்கப் பிரச்சினைகளை இதில் புகுத்தி விடாம லிருப்பதற்காகக் கூட்டுப்பண்ணையாளர்கள் உதவி செய் தனர். ''இந்தச் சிறிய வீட்டுத் தோட்டத்தில்'' குழந்தை கள் தமது நற்காரியத்தைச் செய்யட்டும் என்றார்கள் அவர்கள். அந்திரேய் தாத்தாவை நாங்கள் வீட்டுக்கு அழைத்தோம். அவரும் சந்தோஷத்துடன் இங்கு குடி வந்தார். தேனீப் பண்ணைக்கு அருகில் இக்குடிசை இருந் தது. வார்யாவும் ஸீனாவும் நான்காம் வகுப்பில் படிக்கை யில் அக்டோபர்-சிறுவர்களுடன் நட்புக் கொண்டனர். அவர்களை பயனீர்களாகத் தயார்படுத்தினர். சிறுவர்கள் சில தினங்களில் நாள் முழுதும் தோட்டத்தில் தங்கி விடுவர்.

தாய்நாட்டின் விடுதலைக்காகவும் சுதந்திரத்துக்காகவும் போராடி உயிர் நீத்த மகனின் தாயாருடைய துக்கம் தாங்க முடியாத ஒன்று. இந்தத் துக்கத்தை நமது குழந்தைகள் உணர்ந்து, அனுபவித்து, பகிர்ந்து கொள்ளட்டும். வோல்காக் கரையிலிருந்து எல்பாக் கரை வரை, வட ஆர்க்டிக் சமுத்திரத்திலிருந்து வெப்ப நீர் மத்திய தரைக் கடல் வரை உள்ள பெயரற்றோர் கல்லறைகளில் உறங்கும் மைந்தர்களின் ஆயிரக் கணக்கான தாய்மார்கள் பள்ளி மாணவர்களின் நண்பர்களாகட்டும். இரண்டு கோடியே இருபது லட்சம் உயிர்ப்பலிகள், பயங்கரச் சித்திரவதைகள், எரிநெருப்பு, இடிபாடுகள் ஆகியவற்றைக் கொண்ட நமது தாய்நாட்டின் பிரம்மாண்டமான துக்கத்தை, நமது மக்கள் மறக்க முடியாத அனைத்தையும், மன்னித்தற்கரிய பாசிசம் கொண்டு வந்த பேரழிவுகளை எல்லாம் உணர்ந்து பார்க்காத குழந்தை இதயத்தை நல்லியல்பு கொண்ட தாக்க முடியாது.

தாயாரின் துக்கத்தை எந்த அளவுக்குக் குழந்தை கிரகித்துக் கொண்டு அனுபவிக்கிறதோ, அந்த அளவுக்கு அவனது இதயம் நுண்ணுணர்வு கொண்டதாக இருக்கும், அந்த அளவுக்கு அவன் உறுதியான குடியுரிமை நம்பிக்கை கொண்டவனாகத் திகழுவான், அந்த அளவுக்குத் தாய்நாட்டின் எதிர்காலம் பற்றிய பொறுப்புணர்ச்சி அவனிடம் வலிமையானதாக விளங்கும். எனவே, மாபெரும் தேசபக்தப் போர்க் களத்தில் வீர மரணம் அடைந்த மகனின் தாயாரை பயனீர் கூட்டத்துக்கு (பொதுவாக பள்ளிக் கூடத்துக்கே)அழைப்பது எனும் முக்கியமான நிகழ்ச்சியில் மிகவும் வினயமாக நடந்து கொள்ள வேண்டும். வழக்கமான போதனைப் பயிற்சி நடவடிக்கைகளில் ஒன்றாக இந்தச் சம்பவம் மின்னி மறைந்துவிடக் கூடாது. மக்கள் அனைவரின் துக்கமும் சொந்தத் துக்கமாக வெளிப்படுகிற ஒரு மனிதரைச் சந்திப்பது ஆழமான சுவடை இளம் இதயங்களில் ஏற்படுத்த வேண்டும்.

குடிமகனைப் பயிற்றுவிப்பது தத்துவ பூர்வமாக அன்றி போதனை நிகழ்ச்சிப் போக்கின் நடைமுறையிலும் கூட மிகச்

சிக்கலான ஒரு பிரச்சினையாகும். இதயத்தின் மூலமாக அறிவு செல்ல வேண்டும் என்பதும், மனிதனின் ஆன்மிக உலகத்தில் அது பிரதிபலிக்க வேண்டும் என்பதுமே இந்தத் துறையில் முதல் தர முக்கியத்துவம் வாய்ந்தது சோவியத் மக்களுக்குப் புனிதமானதும் மதிப்பிற்கரியதாகவும் விளங்குகிற தாய்நாடு பற்றிய அறிவு, நினைவில் கொண்டு அன்றாட வாழ்வில் கடைப்பிடிக்கத் தகுந்த வெறும் தகவல் மட்டும் அல்ல. இது மாணவனின் சொந்த வாழ்க்கையையே சுண்டியிழுக்க வேண்டிய உண்மைகளாகும். மனித மகத்துவத்தின் மூலம் தாயகத்தின் மகத்துவம் அறியப் பட்டால்தான் இந்த உண்மைகள் புனிதமானவையாய் குழந்தைக்கு விளங்கும்.

''எல்லா விஷயங்களும் எழுதப்பட்டுள்ள மிகப் பெரிய புத்தகமே மக்களின் நினைவு ஆகும்.''[1] இந்தப் புத்தகத்தைப் படிக்காமல், ஒவ்வொரு வார்த்தையையும், ஒவ்வொரு எழுத்தையும் ஆழமாகப் புரிந்து கொள்ளாமல், உணர்ந்து கொள்ளாமல் குடியுரிமைப் போதனை சாத்தியமில்லை. பள்ளிக்கும் வாழ்க்கைக்கும் இடையிலுள்ள தொடர்பு என்று நாம் வழக்கமாக அழைக்கிற ஒன்று, மக்களின் இதயங்களிலிருந்து குழந்தைகளின் உணர்வுக்கும் இதயத்துக்கும் மாபெரும் புனித விஷயங்களை—தாய்நாட்டுப் பற்று, மக்களை அடிமைப் படுத்திய, மக்களுக்குப் பெரும் துன்பங்களையும் துயரங்களையும் ஏற்படுத்திய அதன் விரோதிகள் மீது வெறுப்பு—வழங்குவதே என்று எனக்குத் தோன்றுகிறது. மக்கள் நினைவு எனும் மாபெரும் புத்தகத்தை ஒவ்வொரு முறை தொடுவதும் தனிநபர் எனும் மனிதனை உருவாக்குகிற மிகச் சிக்கலான, மிகப் பொறுப்பு வாய்ந்த ஒரு செயலாகும்.

---

[1] லி. லியனேவ் **"வீரனுக்கு மலர் வடம்"**. ''காவிய மனிதர்கள்'' எனும் புத்தகத்தில், 2ஆவது பதிப்பு, கோஸ்பலிதிஸ்தாத் பதிப்பகம், 1966, பக். 7.

நமது மாணவர்களின் ஆன்மிக வாழ்வுக்குள் உழைப்பு நுழையும் போது மகிழ்ச்சி, நட்பு, தோழமை ஆகிய வற்றை அது நல்கும் போது, அறிவு வேட்கையையும் ஆர்வத் தீயையும் அது வளர்க்கும் போது, கஷ்டங்களைக் கடக்கிற சந்தோஷத்தைத் தரும் போது, சுற்றியுள்ள உலகத்தில் புதிய புதிய அழகினை விரித்துக் காட்டும் போது, மனிதனின் வாழ்க்கைக்கு மிக அத்தியா வசியமான பொருள்வகை நலன்களை நிர்மாணிக்கிற உணர்ச்சி எனும் முதல் குடிமை உணர்ச்சியைத் தட்டி யெழுப்பும் போது, உழைப்பு ஒரு மாபெரும் போதகனாக விளங்குகிறது.

உழைப்புத் தரும் மகிழ்ச்சி வல்லமை மிக்க போதனா சக்தி ஆகும். இந்த நல்லுணர்ச்சியைக் குழந்தைப் பருவத் தில் ஒவ்வொரு சிறுவனும் அனுபவிக்க வேண்டும்.

பள்ளி வாழ்க்கையின் முதல் இலையுதிர் காலம். பள்ளித் தோட்டத்தில் சில டஜன் சதுர மீட்டர் நிலத்தை எங்களுக் காக ஒதுக்கியிருந்தார்கள் உயர் வகுப்பு மாணவர்கள். நாங்கள் மண்ணைக் கொத்திக் கிளறி விட்டோம். கிராமத்துக் குழந்தைக்கு இந்த வேலை பழக்கமான ஒன்றே. நான் சிறுவர்களிடம் சொல்கிறேன்: ''பனிக் காலக் கோதுமையை இங்கு விதைப்போம். அறுவடை செய்து தானியத்தை சேகரிப்போம், மாவாக்குவோம். இது நமது முதல் தானியமாக இருக்கும்''. தானியம் என்பது என்னவென்று குழந்தைகளுக்கு நன்கு தெரியும். தமது தந்தையரும் தாய்மாரும் உழைத்தது போலவே அவர்களும் உழைக்க முயல்கின்றனர். அதே போதில் நாங்கள் தொடங்கியுள்ள இந்த வேலையில் ஒரு ரோமான் ஸும் விளையாட்டுத் தனமும் இருந்தது.

முதல் தானியம் பற்றிய கனவு உத்வேகமூட்டுகிறது, கஷ்டங்களைச் சமாளிப்பதற்கு உதவுகிறது. கஷ்டங்களோ கொஞ்சமல்ல: சிறு கூடைகளில் சத்து மண்ணை அள்ளி வருகிறார்கள் குழந்தைகள். அதை மண்ணுடன் கலக்கிறார்

கள், கோதுமைப் பயிர் வரிசைகளுக்கு வடிகால்கள் வெட்டுகிறார்கள். விதைத் தானியத்தைப் பொறுக்குகிறார் கள் விதைத்தல் உண்மையான ஒரு விழாவாகவே ஆகி விட்டது. எல்லாக் குழந்தைகளையும் உற்சாகம் பிடித்துக் கொண்டது. வயலில் விதைத்தல் முடிந்து விட்டது, ஆனால் ஒருவரும் வீட்டுக்குப் போகவில்லை. கனவு காணலாம் போல இருக்கிறது. மரத்திற்கடியில் உட்கார்ந்து கொள் கிறோம். தங்கக் கோதுமைத் தானியத்தைப் பற்றி நான் கதை சொல்கிறேன். கதையைப் பற்றி நினைப்பதுடன், எனது மாணவர்களின் குழந்தைப் பருவத்தில் உழைப்பு என்பது வெறும் குழந்தைத் தனமாக மட்டும் இல்லாமல், முதல் குடியுரிமை மகிழ்ச்சியாகவும் விளங்க வேண்டும் என்பது பற்றியும் சிந்திக்கிறேன். பரவலான ஒரு சாலை யில் செல்வது போல உழைப்பின் வழியாக நடந்து சமு தாய வாழ்க்கைக்குள் குழந்தை நுழைய வேண்டும், மனி தர்களையும் தன்னைத் தானேயும் அறிந்து கொள்ள வேண் டும், குடிமகனின் முதல் பெருமையை அவன் அனுபவிக்க வேண்டும். உழைப்பு ஒரு எளிய காரியமாக இருக்கக் கூடாது என்பதை நான் ஒருபோதும் மறந்து விடவில்லை. குழந்தைகளின் உடலுறுதி, ஆன்மிக ஆற்றல்களின் அழுத் தத்தை அளவாகக் கொண்டுதான் முதிர்ச்சி என்று அழைக் கப்படுகிற முக்கியமான நிகழ்ச்சிப்போக்கு நிர்ணயிக்கப் படுகிறது. உழைப்பினால்தான் குழந்தை முதிர்ச்சியுறுகிறது. உழைப்பு குழந்தைத் தன்மையதாக இருந்து, அதே போதில் குழந்தை சிறுகச் சிறுகக் குழந்தையாக இருப்பது மாறும்படியான அளவில் உழைப்புக் கஷ்டத் தின் அளவைக் கண்டு அதை நிர்ணயிக்க வேண்டும். வயது வந்தவர்களின் உற்பத்தி நடவடிக்கையில் மிக முக்கிய மான அம்சத்தைக் குழந்தை உழைப்பு கொண்டிருந்தால் தான் போதனைக் குறிக்கோள் நிறைவேறும் என்று பல் லாண்டு அனுபவம் எடுத்துக்காட்டி இருக்கிறது. பொருள் வகைப் பயனை அடைவது, குழு உறுப்பினர்களின் உறவு களில் இப்பயனை வைப்பது ஆகியவற்றைக் கொண்ட தாகும் இந்த அம்சம்.

கோதுமைத் தானியம் முளை விடுவதற்கு முன்பு குழந்தைகள் பதட்டமடைகிருர்கள். நமது வயல் விரைவில் பசுமை காட்டுமா? முளை விட்ட பின்னே அதனைப் பார்ப்பதற்காகச் சிறுவர்களும் சிறுமிகளும் தினமும் ஓடி ஓடிப் போவார்கள்: பசுமைத் தண்டுகள் சீக்கிரம் வளருமா? கோதுமைப் பயிருக்கு வெதுவெதுப்புத் தருவதற்காகப் பனிக்காலத்தில் வயலின் மீது நாங்கள் வெண்பனி தூவினேம். வசந்தகாலத்தில் முளைகள் நிறைந்து கம்பளம் போல பூமியை மூடி விடுவதையும், தானியக் கதிர் வெளி வருவதையும் கண்டு குழந்தைகட்கு மகிழ்ச்சிப் பதட்டம் தோன்றியது. ஒவ்வொரு கதிரும் அவர்கட்கு களிப்பைத் தந்தது.

விதைப்பதை விட அதிக மகிழ்ச்சி கொண்ட பண்டிகையாக விளங்கியது அறுவடை. பண்டிகை உடையணிந்து பள்ளிக்கு வந்தார்கள் குழந்தைகள். ஒவ்வொரு குழந்தையும் பயிரைக் கவனமாக அறுத்தது, அறுத்ததை சிறு சிறு கட்டாகக் கட்டியது. மீண்டும் உழைப்புப் பண்டிகை-கதிரடித்தல். தானியத்தை ஒரு மணி விடாமல் சேகரித்து சாக்கில் கொட்டினர். அந்திரேய் தாத்தா கோதுமையை அரைத்து வெள்ளை மாவு கொண்டு வந்தார். தீனுவின் அம்மாவிடம் ரொட்டி சுட்டுத் தரும்படி வேண்டினேம். குழந்தைகள் அவருக்கு உதவி செய்தனர்: சிறுவர்கள் தண்ணீர் கொணர்ந்தனர், சிறுமிகள் விறகு கொண்டு வந்தனர். இதோ நான்கு பெரிய வட்ட ரொட்டிகள். எங்கள் உழைப்பு, கவலைகள், பதட்டங்கள் ஆகியவையே இவை. பெருமை உணர்ச்சி குழந்தை இதயங்களை நிரப்புகிறது.

நீண்ட நாட்களாகக் காத்திருந்த முதல் தானியப் பண்டிகை வந்தே விட்டது. பண்டிகைக்கு அந்திரேய் தாத்தாவையும், பெற்ருேர்கள் அனைவரையும் குழந்தைகள் அழைத்திருந்தனர். பூத்தையல் போட்ட மேசை விரிப்புக்களை மேசை மீது விரித்தனர். மணம் மிகுந்த ரொட்டித் துண்டுகளை மேசையின் நாலாபுறமும் சிறுமிகள் வைத்தனர். அந்திரைய் தாத்தா தேன் நிறைத்த தட்டுக்களை வைத்

தார். பெற்றோர்கள் ரொட்டி சாப்பிடுகிறார்கள், குழந்தை களைப் புகழ்கிறார்கள், உழைப்புக்கு நன்றி சொல்கிறார்கள்.

இந்த நாள் குழந்தைகளின் நினைவில் ஆயுள் முழுதுக்கு மாகப் பதிந்தது. இந்தப் பண்டிகை நாளில் உழைப்பு பற்றியும் மனிதப் பெருமை குறித்தும் ஆரவாரச் சொற் கள் பேசப்படவில்லை. பெருமை உணர்ச்சிதான் குழந்தை களை வெகுவாகப் பதட்டப் படுத்தியது: நாங்கள் கோதுமை விளைவித்தோம், பெற்றோருக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தினோம். ஒழுக்கச் சுத்தத்துக்கும் நற்பண்புக் கும் ஊற்றுக் கண்ணாகத் திகழ்வது தனது உழைப்பில் மனிதன் கொள்ளும் பெருமையே.

எங்கள் முதல் தானியப் பண்டிகை மற்ற வகுப்புக் குழந்தைக் குழுக்களையும் கவர்ந்தது. ஒவ்வொரு வகுப்பில் இருந்த மாணவர்களும் கோதுமை விளைவிக்க வேண்டும் என்று விரும்பினர். வகுப்பாசிரியர்களைச் சும்மா இருக்க விடவில்லை மாணவர்கள்: மற்றவர்கள் ரொட்டிப் பண் டிகை கொண்டாடுகிறார்கள், நாம் ஏன் கொண்டாடக் கூடாது?

இந்தச் சம்பவம் போதனைக் குழுவில் பெருமளவுக்குச் சிந்தனையைக் கிளறி விட்டது. மண்ணைப் பதப்படுத்துவது, உரமிடுவது போன்ற மிக எளிய காரியம், காட்டில் உலாவு வது சுவாரஸ்யமான புத்தகத்தைப் படிப்பது போன்ற குழந்தைகள் விரும்பும் வேலையாகக் கூடும் என்பதை எல் லோரும் கண்ணாரக் கண்டார்கள். எந்த ஒரு காரியத்துக் கும் அக்கறையைத் தூண்ட முடியாத சோம்பேறிகள் என்று கருதப்பட்டவர்கள் கூட இந்த உழைப்பில் உருத் தெரி யாது மாறிப் போகிறார்கள் என்று ஆசிரியர்கள் சொன்னார் கள். அவர்களுக்கு வேலை செய்யும் விருப்பம் வந்தது. ''என்ன விஷயம்'' என்று நாங்கள் சிந்தித்தோம். உணர்ச்சிகளும் நல்லதொரு குறிக்கோளுக்கான உத்வே கமுமே இதற்குப் பிரதான காரணம் என்று நாங்கள் ஏகமனதாக முடிவுக்கு வந்தோம். உழைப்பு நேசம் என்பது முதற்கண் குழந்தைகளின் உளநெகிழ்ச்சி வாழ்க் கைத் துறையே ஆகும். உழைப்பு குழந்தைக்கு மகிழ்ச்சி

யைத் தரும் போது உழைக்க வேண்டும் என்ற நாட்டம் அவனுக்கு வருகிறது. உழைப்பு மகிழ்ச்சி எந்த அளவுக்கு ஆழமானதோ, அந்த அளவுக்குத் தனது சொந்த நேர்மை யை மதிக்கிறது குழந்தை. தனது சொந்தச் செயல்களில் தன்னைத் தானேயும், தனது முயற்சிகளேயும், தனது பெய ரையும் அது கண்ணுரக் காண்கிறது. உழைப்பு மகிழ்ச்சி- இது வல்லமை வாய்ந்த போதனைச் சக்தி. உழைப்பின் காரணமாகத்தான் ஒரு குழுவின் உறுப்பினன் என்று அது தன்னை அறிந்து கொள்கிறது. உழைப்பு ஒரு பொழுது போக்காக மாறுகிறது என்று இதற்கு அர்த்தம் அல்ல. அழுத்தமும் விடாமுயற்சியும் அதற்குத் தேவை. நாம் குழந்தைகளுடன் காரியமாற்றுகிறேம் என்பதையும்,அவர் களின் முன்னே இப்போதுதான் உலகம் விரியத் தொடங்கி இருக்கிறது என்பதையும் மறந்து விடக் கூடாது.

முதல் தானியப் பண்டிகையை ஒவ்வொரு ஆண்டும் கொண்டாடுவது என்று குழந்தைகள் முடிவு செய்தனர். பள்ளி வாழ்க்கையின் அடுத்த ஆண்டு இலையுதிர்காலத்தில் தோட்டத்திலுள்ள ஒரு புதிய இடத்தைத் தேர்ந்தெடுத் துக் கொண்டனர் குழந்தைகள். பனிக்காலம் கோதுமை விளைவித்து தமது பெற்றேர்களையும் பள்ளிப் பருவத்துக்கு முந்திய குழந்தை நண்பர்களையும் மீண்டும் விருந்தினராக அழைத்தனர். எனது மாணவர்கள் வாலிபர்களாகவும் இளம் பெண்களாகவும் ஆகி விட்ட பின்னும் கூட பெரும் பதட்டத்துடன், பள்ளியின் சிறு தோட்டத்திலிருந்து அவர்கள் கோதுமை அறுவடை செய்தனர், கதிரடித்தனர், ரொட்டி சுட்டனர். இதிலெல்லாம் ஒரு ரோமான்ஸ் விளை யாட்டும் இருந்தது. உழைப்பு தரும் மகிழ்ச்சியை வேறு எந்த மகிழ்ச்சியுடனும் ஒப்பிட முடியாது. அழகை உணர்ந்து கொள்வது இல்லாமல் இந்த மகிழ்ச்சியை நினைத்தும் பார்க்க முடியாது. இங்கு அழகு என்பது குழந்தைக்குக் கிட்டுவது மட்டுமல்ல, முதற்கண் அது படைப்புத் தொழில் புரிவதே ஆகும். உழைப்பு தரும் மகிழ்ச்சி ஒரு உயிர் வாழ்க் கையின் அழகு. இந்த அழகை அறிந்து கொள்கிற குழந்தை

சொந்தப் பெருமையை, கஷ்டங்கள் சமாளிக்கப்பட்டு விட்டன என்ற பெருமையை அனுபவிக்கிறது.

தனது சக்திகளை ஒருமைப் படுத்துகிறவனுக்கு, வேர்வையும் களைப்பும் என்பது என்ன என்று தெரிந்தவனுக்குத் தான் சந்தோஷ உணர்ச்சி கிட்டும். குழந்தைப் பருவம் நிரந்தரமான ஒரு பண்டிகையாக இருந்துவிடக் கூடாது. குழந்தைகளுக்குத் தகுந்த உழைப்பில் இறுக்கம் இருக்க வில்லை என்றால் உழைப்பு தரும் மகிழ்ச்சி குழந்தைக்கு எட்டாது. உழைப்புடன் மக்கள் கொண்டுள்ள உறவை குழந்தை இதயத்தில் நிலைநாட்டுவதே உழைப்புக்குப் பயிற்றுவிக்கிற உயர்ந்த போதனு ஞானமாகும். மக்களுக்கு உழைப்பு என்பது ஒரு வாழ்க்கை அவசியம் மட்டுமல்ல, உழைப்பு இன்றி மனித வாழ்க்கை நினைத்தும் பார்க்க முடியாத ஒன்று என்பது மட்டுமல்ல, ஆன்மிக வாழ்வின், சொந்த வாழ்வின் ஆன்மிக வளத்தின் பல்வகைப்பட்ட வெளிப்பாடுகளைக் கொண்ட ஒரு துறையுமாகும். மனித உறவுகளின் செழுமை உழைப்பில்தான் வெளிப்படுகிறது. இந்த உறவுகளின் அழகைக் குழந்தை உணரவில்லை என்றால் உழைப்பின் மீது நேசம் கொள்ளும்படி குழந்தையைப் பயிற்றுவிக்க முடியாது. ஒரு நபரின் சுய வெளிப்பாடாக வும், சுய உறுதிப்பாடாகவும் உழைப்பு நடவடிக்கையே விளங்குகிறது. ''உழைப்பு இல்லையேல் மனிதன் வெற்றிட மாக மாறி விடுகிறான்'' என்று பேச்சு வழக்கு இருக்கிறது. ஒவ்வொரு மாணவனின் சுய தகுதியும், சுய பெருமையும் உழைப்பு தரும் வெற்றியின் அடிப்படையிலேயே விளங்கு மாறு செய்வதுதான் முக்கியமான ஒரு போதனைப் பணி யாகும்.

தமது பள்ளி வாழ்வின் முதல் வசந்தத்தின் போது ''தாயின் தோட்டத்தைக்'' குழந்தைகள் உருவாக்கினர். இதில் 31 ஆப்பிள் மரங்களும், முப்பத்தி ஒரு திராட்சைப் புதர்களும் நட்டனர். எனது மாணவர்களுக்கு நான் சொல் கிறேன் ''குழந்தைகளே, இந்தத் தோட்டம் நமது தாய் மார்களுக்கு உரியது. உங்களுக்கு மிகவும் அன்புக்குரியவர், நெருக்கமானவர் அம்மாதான். மூன்றாண்டு காலத்தில்

ஆப்பிள் மரங்களும் திராட்சைக் கொடிகளும் பலன் தரத் தொடங்கும். முதல் ஆப்பிள் பழமும், முதல் திராட்சைக் கொத்தும் தாயாருக்கு நாம் கொடுக்கும் பரிசாகும். அவர்களுக்கு மகிழ்ச்சியைக் கொண்டு தருவோம். உங்கள் அன்னையருக்கு எத்தனையோ பொறுப்புக்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவர்கள் ஏற்றுள்ள பொறுப்புக்களுக்கு நாம் பரிசளிப்போம்.''

''தாயின் தோட்டத்தில்'' நல்கிய உழைப்பு முதியவர்களுக்கு, பெற்றோர்களுக்கு மகிழ்ச்சி தருவோம் எனும் கனவுகளால் உயிர் பெற்றது. சொந்தத் தாயாரை நேசிப்பது என்கிற நல்லுணர்ச்சியின் ஆழம் முழுவதையும் சில குழந்தைகள் இன்னும் அறியவில்லை. இந்த உணர்ச்சியை ஒவ்வொரு குழந்தையிடமும் தட்டியெழுப்புவதற்கு நான் முயன்றேன். கால்யா தனது மாற்றாந் தாய்க்காகவும், சாஷ்கோ தனது பாட்டிக்காகவும், வித்யா தனது அத்தைக்காகவும் மரம் நட்டார்கள். உழைப்பை ஒருவரும் அலட்சியமாக அணுகவில்லை. வசந்தத்திலும், கோடைகாலத்திலும் குழந்தைகள் தாவரங்களுக்குத் தண்ணீர் ஊற்றினர் தீங்கு செய்யும் பூச்சிகளை ஒழித்தனர். ஆப்பிள் மரங்களும் திராட்சைப் புதர்களும் பசுமை கட்டின. மூன்றும் வருடம் முதல் பூக்கள் மலர்ந்தன, முதல் பிஞ்சுகள் தோன்றின. தனது மரத்திலுள்ள காய்கள் சீக்கிரம் பழுத்து விட வேண்டும் என்று ஒவ்வொருவருக்கும் விருப்பமாக இருந்தது.

தோல்யா, நீனா, கோல்யா, ஆகியோர் மகிழ்ச்சியுற்றார்கள் என்பதில் நான் சந்தோஷம் கொண்டேன். அவர்களது மரங்களில் சாறு நிறைந்த பழங்கள் பழுத்துக் கொண்டிருந்தன. திராட்சைக் கொடிகளில் அம்பர் நிறப் பழக் கொத்துக்கள் முதிர்ச்சியுற்றன. பழுத்த பழங்களைப் பறித்த குழந்தைகள் அவற்றைத் தமது தாய்மார்களுக்கு எடுத்துச் சென்றனர். இது குழந்தைகளின் வாழ்வில் மறத்தற்கரிய ஒரு நாளாகும். தனது தாய்க்குக் கொண்டு செல்வதற்காக மரத்திலிருந்து ஆப்பிள் பழத்தைக் கோல்யா பறிக்கையில் அவன் கண்கள் எங்ஙனம் கனிவுச் சுடர்விட்டன என்பது எனக்கு நினைவிருக்கிறது.

பள்ளி வாழ்வின் இரண்டாவது ஆண்டில் குழந்தை களின் உழைப்பு நல்லுணர்ச்சிகளால் நிரம்பி இருந்தது. பெற்றோர்களின் வீட்டுத் தோட்டத்தில் தாய், தந்தை, தாத்தா, பாட்டி ஆகியோருக்காக ஒவ்வொரு குழந்தை யும் பழ மரங்கள் நட்டது. ''இதோ அம்மாவின், அப்பா வின், பாட்டியின் தாத்தாவின் ஆப்பிள் மரம்'' என்று பெருமையுடன் பேசினர் குழந்தைகள். தாய், தந்தையின் நினைவாக சாஷா ஆப்பிள் மரங்கள் நட்டான். கால்யாவும் கோஸ்த்யாவும் தமது தாய்மார்களின் நினைவாகப் பழ மரங்கள் வளர்த்தனர். மாற்றாந் தாய்களையும் அவர்கள் மறந்து விடவில்லை, அவர்களுக்காகவும் ஆப்பிள் மரங்கள் நட்டனர்.

இந்த மரங்களைப் பராமரிப்பது போல உள்ளந் தொடும் பொறுப்புடன் வேறெந்த வேலையையும் குழந்தைகள் அணுகவில்லை. ஆப்பிள் மரங்கள் எப்போது பூ விடும் என்று அனைவரும் ஆவலுடன் காத்திருந்தார்கள். ஆப்பிள் மரம் முதல் பழங்கள் விடுவதற்காகக் காத்திருந்து, அவற்றைப் பறித்து, அன்னையருக்கு எடுத்துச் செல்வது— இது ஒன்றுக்குப் பின் ஒன்றாகக் குழந்தைகள் செய்யும் நிகழ்ச்சிப்போக்குகள் மட்டுமல்ல. இது ஒழுக்க வளர்ச்சி யின் படிக்கட்டுகளுமாகும். இவற்றில் ஏறும் போது அவர்கள் செய்கிற காரியத்தின் அழகை அனுபவித்து உணர்கிறார்கள் குழந்தைகள்.

மனிதனின் வாழ்வில் மிகவும் புனிதமானதும், அழகு மிக்கதும் தாயாரே ஆவார். தாயாருக்கு மகிழ்ச்சியைத் தரு கிற உழைப்பின் ஒழுக்க பூர்வ அழகை குழந்தைகள் உணர வேண்டியது அவசியமாகும். எங்கள் குழுவில் சிறந்த தொரு மரபு சிறுகச் சிறுக தோன்றி உருப்பெற்றது. மனி தனுக்குத் தாராளமாகப் பரிசுகளை பூமி வழங்கும் போது, இலையுதிர்காலத்தில் அன்னையர் பண்டிகை கொண்டாடி னோம். ஒவ்வொரு குழந்தையும் தனது உழைப்பின் மூலம் படைத்தவற்றை, அவன் கோடை காலம் முழுதும் அல் லது பல வருடங்களாகக் கற்பனை செய்து கொண்டிருந்த வற்றை அன்று அவன் தனது அன்னைக்குக் கொண்டு செல்

வான்: ஒரு சிறு இடத்தில் (பெற்றோர்களின் வீட்டுத் தோட்டத்தில் ஒவ்வொரு குழந்தைக்கும் அவனது இனிய உழைப்புக்கான சிறு இடம் இருந்தது) விளைவிக்கப்பட்ட ஆப்பிள் பழங்கள், பூக்கள், கோதுமைக் கதிர்கள் ஆகியவற்றை அவன் கொண்டு செல்வான். ''உங்கள் அன்னையரைப் பாதுகாத்து வாருங்கள்'' — இலையுதிர்கால அன்னையர் பண்டிகைக்காகத் தயார் செய்தபடி இந்தச் சிந்தனையை ஒவ்வொரு சிறுவனது, சிறுமியினது உணர்விலும் ஊட்டுவித்தோம். தாயின் மகிழ்ச்சிக்காக எந்த அளவுக்குத் தனது ஆன்மிகச் சக்தியைக் குழந்தை செலவிடுகிறதோ அந்த அளவுக்கு அவனது இதயத்தில் மனிதத் தன்மை இருக்கும்.

வசந்த காலத்திலும் அன்னையர் பண்டிகை கொண்டாடத் தொடங்கினோம் நாங்கள். காட்டில் ஆளரவமற்ற ஒரு இடத்தைக் கண்டு பிடித்தோம். இந்த இடத்தை ஸ்ட்ரா பெர்ரி தோட்டம் என்று குழந்தைகள் அழைத்தனர். கோடைகாலத்தில் இங்கு நிறைய பெர்ரிப் பழங்கள் கிடைக்கும். இந்த அற்புத இடத்தில் இருந்த போது பெரு மகிழ்ச்சியுற்றார்கள் குழந்தைகள். இந்த மகிழ்ச்சியைத் தமது அன்னையருடன் பகிர்ந்து கொள்ள விரும்பினர். குழந்தைகளுக்கு ஒரு எண்ணம் உதித்தது: பூமிக்கு அழகு கூட்டும் முதல் மலர் அம்மாவுக்கு. இவ்வாறுதான் வசந்தகால அன்னையர் பண்டிகை தோன்றியது. வெண்மலர்களின் மென் மணிகளை மட்டுமின்றி மூடுதோட்டத்தில் வளர்த்த பூக்களையும் அன்னையருக்கு அவர்கள் எடுத்துச் சென்றனர். அன்னையர் பண்டிகையைக் கொண்டாடும் போது கூச்சல்களையும் ''ஒழுங்கமைக்கப்பட்ட நடவடிக்கைகளையும்'' தவிர்க்க வேண்டும். அன்னையர் விழா குடும்ப சம்பந்தமானதாகவும், நெருங்கிய உறவு கொண்டதாகவும் இருக்க வேண்டுமென்று நாங்கள் முயன்றோம். இங்கு பிரதானமானது கூச்சல் மிகுந்த வார்த்தைகள் அல்ல, ஆழமான உணர்ச்சிகளே ஆகும்.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த தத்துவஞானி கிரிகோரி ஸ்கவரதாவின் கூற்று என்று சொல்லப்படும்

பண்டைய உக்ரேனிய முதுரை ''சொந்த அன்னைக்கு அன்பு செய்வதை விட மனித குலத்தை நேசிப்பது எளிது'' என்று கூறுகிறது. மக்கள் போதனுமுறையின் பெரிய ஞானம் இந்த முதுரையில் அடங்கியுள்ளது. நெருக்கமான, அன்புக்குகந்த மனிதனுடன் பாச உணர்வு இதயத்தில் நிலைபெறவில்லை என்றால் மனிதநேயத்தைப் பயிற்றுவிப்பது சாத்தியமில்லை. மனிதர்களுடன் நேசம் பற்றிய வார்த்தை மட்டுமே நேசமாகி விடாது. இரக்கம், கனிவு, அனுதாபம் ஆகியவற்றைப் பயிற்றுவிக்கிற உண்மையான பள்ளி குடும்பமேயாகும்; தந்தை, தாய், தாத்தா, பாட்டி, சகோதரர்கள், சகோதரிகள் ஆகியோருடன் கொள்கிற உறவு மனித நேயத்துக்கான பரிசோதனையே.

குழந்தைகளின் உழைப்பு அழகைப் படைப்பதாக இருக்க வேண்டும். அழகியல் பயிற்சி, ஒழுக்கப் பயிற்சி ஆகியவற்றின் ஒற்றுமைக்கான தேவை இதுவே. பள்ளி வாழ்க்கையின் முதல் இலையுதிர்காலத்தில் காட்டு ரோஜாவின் விதைகளை நாங்கள் சேகரித்தோம். பள்ளித் தோட்டத்தில் எங்களுக்காக ஒதுக்கப்பட்ட இடத்தில் நாங்கள் இவற்றை விதைத்தோம். வெள்ளை, சிவப்பு, வயலட், மஞ்சள் நிறங்களிலுள்ள ரோஜாக்களின் குச்சிகளை காட்டு ரோஜாவுடன் ஒட்டுப் போட்டோம். எங்கள் ''ரோஜாத் தோட்டத்தை'' நாங்கள் உருவாக்கினோம். முதல் பூக்கள் மலர்ந்த போது குழந்தைகள் அடைந்த மகிழ்ச்சியை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. செடிகள் கேடுறுமோ என்று அஞ்சி ரோஜாப் புதர்களைத் தொடுவதற்குக் கூட சிறுவர்களும் சிறுமிகளும் பயந்தனர். பூக்களைச் சரியானபடி வெட்டியெடுத்தால் கோடை முழுதும் ரோஜாப் பூக்கள் மலரும் என்று நான் சொன்ன போது அவர்கள் பேரானந்தம் கொண்டனர். தாயாருக்குப் பூ கொண்டு போய்த் தர வேண்டும் என்று ஒவ்வொரு குழந்தையும் விரும்பியது. இலையுதிர்காலத்து அன்னையர் பண்டிகையின் போது, ஆப்பிள் பழங்களுடன் ரோஜா மலர்க் கொத்தையும் அம்மாவுக்குப் பரிசளிக்கலாம் என்பதில் அவர்கள் பெருங் களிப்பு எய்தினர்.

பள்ளிக் கல்வியின் முதல் வசந்த காலத்தில் நாங்கள் நிறையப் பூச்செடிகளை நட்டிருந்தோம். தாவரங்களை எப்போதும் பராமரித்து வர வேண்டியிருந்தது. தண்ணீர் விடுவதுதான் குறிப்பாகக் கஷ்டமான வேலையாய் இருந்தது. இந்த நேரத்தில் உயர் வகுப்பு மாணவர்கள் நீரேற்று குழாயுடன் சிறு தண்ணீர்த் தொட்டி ஒன்று கட்டியிருந்தனர். இதன் மூலம் பூங்காவிற்குத் தண்ணீர் கொண்டு செல்லப்பட்டது. குழந்தைகளின் உழைப்பை இது எளிதாக்கியதால் எல்லோரும் விரும்பும் வேலையாயிற்று இது. மிகவும் சிறியவனான தன்கோ கூட எல்லாச் செடிகளுக்கும் இப்போது அரை மணி நேரம் தண்ணீர் ஊற்றினான்.

பூச்செடி வளர்ப்பதில் ஒவ்வொரு குழந்தைக்கும் சொந்த ஈடுபாடு வளர வேண்டும் என்று விரும்பினேன். ரோஜாச் செடிகளைப் பராமரிப்பது போன்று இதயத்தை மென்மைப் படுத்தி, அழகையும் படைப்புத் தொழிலையும் உண்டாக்கி மனித நேயத்தை ஒன்றிணைக்கிற உழைப்பு வேறொன்றும் இல்லை எனலாம். ஒவ்வொரு குழந்தையும் தனது வீட்டுப் பூங்கா ஒன்று தொடங்க வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். எனது மாணவர்கள் 3,4ஆம் வகுப்புக்களில் படிக்கும் போதே அவர்கள் வீட்டுத் தோட்டத்தில் விளைவிக்கப்பட்ட ரோஜாப் பூக்கள் கண்டு ஆனந்தம் கொண்டனர்.

அழகைக் கண்டு ஆனந்தம் கொள்வதற்காகவே குழந்தை ரோஜாச் செடி வளர்ப்பானானால், உழைப்புக்காக அவனுக்குக் கிடைக்கிற ஒரேயொரு பரிசு அழகில் ஆனந்தம் கொள்வதும் மற்றவரின் மகிழ்ச்சிக்கும் சந்தோஷத்துக்குமே இந்த அழகு படைக்கப் படுகிறது என்றும், ஆனால் கொடுமை, இழிமை, சிடுசிடுப்பு, இரக்கமின்மை ஆகியவற்றைப் புரிய அந்தக் குழந்தை லாயக் கற்றது என்றும் வாழ்க்கை எனக்கு எடுத்துக் காட்டியது. ஒழுக்கப் பயிற்சியிலேயே மிகவும் சிக்கலானதொரு கேள்வி இது. ஆன்மிக நற்பண்பை மனிதனிடம் தோற்றுவிக்கிற, மந்திர சக்தியை அழகு தன்னுள் கொண்டிருப்ப

தில்லே. அழகைப் படைக்கிற உழைப்பு உயர்ந்த ஒழுக்கத் தூண்டுதல்களால், முதற்கண் மனிதனுக்குத் தரும் மரியாதையால் ஊடுருவப்பட்டு மனிதத் தன்மையைத் தரும் போதுதான் ஒழுக்கச் சுத்தத்தையும் மனிதநேயத் தையும் அழகு பயிற்றுவிக்கும். மனிதர்களுக்காக அழகைப் படைக்கிற உழைப்பில் மனிதநேயம் எவ்வளவு ஆழமாய் இருக்கிறதோ அந்த அளவுக்கு மனிதன் தன்னேத் தானே மதிப்பான், அந்த அளவுக்கு சராசரி ஒழுக்கத் திலிருந்து விலகிச் செல்வதை அவன் சகிக்க மாட்டான்.

ஒழுக்கத்தைப் பயிற்றுவிப்பதில் அழகு வகிக்கும் பாத்திரம் எங்கள் போதனேக் குழுவில் விவாதத்திற் குரிய ஒரு பிரச்சினேயாயிற்று. பள்ளிமாணவனின் ஆன்மிக வாழ்வின் மீது, குறிப்பாக உளநெகிழ்ச்சியின் மீது செல் வாக்குச் செலுத்துகின்ற விஷயங்களில் அழகுக்கு பெரிய முக்கியத்துவம் தந்த நாங்கள், அதே நேரத்தில் இதன் முக்கியத்துவத்தை மிகைப்படுத்துவதும் தீங்கானது என்று கருதினேம். போதனுச் செல்வாக்குச் செலுத்து கிற ஒன்ருக அழகு எப்போது மாறுகிறது? உளவியல் கூட்டத்தில் இந்தக் கேள்வியை நாங்கள் முன்வைத் தோம். போதன நிகழ்ச்சிப் போக்கின் நியதியைப் பொதுவாகப் பகுத்து ஆய்வு செய்ததிலிருந்து இதற்குப் பதில் கிடைத்தது. அனுபவத்தைப் பகிர்ந்து கொண்ட போது, இள வயது, நடுத்தர வயது, முதிய வயது மாணவர்களின் ஆன்மிக வாழ்வின் மீது செல்வாக்குச் செலுத்துகின்ற முறைகளேயும் வழிகளேயும் பகுத்து ஆய்ந்த போது, போதனுமுறையில் வெற்றியையும், அதே நேரத்தில் பயிற்சி முறைச் செல்வாக்கின் மற்ற துறைகளில் இருக்கிற குறைகளேயும் பலவீனங்களேயும் களேகிற ஒன்றேயான, எல்லாம் வல்ல முறை ஏதோ ஒன்று இருக்க முடியாது என்னும் முடிவுக்கு நாங்கள் வந்தோம்.

அழகியல் போதனுமுறை மிக நன்ருகக் கடைப் பிடிக்கப் படலாம், ஆனுல் கம்யூனிசப் போதனுமுறையின் மற்ற அடிப்படைப் பிரிவுகளும் அம்சங்களும் கடுமை

யான குறைபாடுகள் கொண்டதாய் இருப்பின் அழகினது போதனைச் செல்வாக்கும் பலவீனமானதாகவே இருக்கும், அல்லது ஒன்றுமே இல்லாமலும் போய் விடலாம். குழந்தையின் ஆன்மிக உலகத்தின் மீது செலுத்தப் படுகிற ஒவ்வொரு செல்வாக்கும், போதனு வல்லமை பெற வேண்டுமானுல் அதே போன்று முக்கியத்துவமுள்ள மற்ற செல்வர்க்குகளும் அருகில் இருக்க வேண்டும். குறிப்பிட்ட சூழல்களில் ஒருவன் மிக அக்கறையுடன் பூச் செடிகளை வளர்த்து வரலாம், பூக்களின் அழகில் ஆனந்தம் கொள்ளலாம், அதே நேரத்தில் அவன் ஒரு முசுடாகவும், அலட்சியம் நிறைந்தவனுகவும் இரக்கமற்றவனுகவும் இருக்கலாம். போதகர்களாகிய நாம் குறிப்பிட்ட நம்பிக்கைகளை வைத்திருக்கிற செல்வாக்கு ஆன்மிக உலகத்தின் மீது செலுத்தப்படும் வேறு எந்தச் செல்வாக்குகளுடன் தொடர்பு கொண்டிருக்கிறது என்பதையே இதெல்லாம் பொறுத்திருக்கிறது.

எங்கள் போதனைக் குழுவின் நம்பிக்கைகளாக இந்த உண்மைகள் ஆயின. திட்டவட்டமான சில வாழ்க்கை நிகழ்ச்சிகளை விவாதித்ததன் காரணமாக **போதனுச் செல்வாக்குகளின் இசைவு** பற்றிய பிரச்சினைக்கு நாங்கள் வந்தோம். இது அடிப்படையான, அஸ்திவாரம் நிறுவுகிற ஒரு போதனை நியதி என்று நான் கருதுகிறேன். எங்கள் பள்ளியினது போதனைப் பணியின் நடைமுறையில் இந்தப் பிரச்சினை தீர்க்கப்பட்டு விட்டது என்று நான் எண்ணவே இல்லை. ஆயினும் இதன் தீர்வுக்கும், ஆய்வுக்கும் தேவையானது நிறையச் செய்யப் பட்டிருக்கிறது. போதனை நியதியின் மிக முக்கியமான பிரச்சினைகளில் ஒன்றைத் தன்னுள் கொண்ட இந்தப் பிரச்சினையின் சாரம் பின்கண்ட விஷயத்தில் அடங்கியுள்ளது: மனிதனின் மீது செலுத்துகிற செல்வாக்கின் மற்ற வழிகள் எந்த அளவுக்கு ஆழ்ந்து சிந்திக்கப் பட்டவை, குறிக்கோளை நோக்கி நிற்பவை, பயன் தருபவை என்பதைப் பொறுத்தே மனிதனின் மீது செல்வாக்குச் செலுத்துகிற ஒவ்வொரு வழியிலும் கிட்டுகிற போதனைப் பயனும்

இருக்கும். ஒரு போதனை வழியாக உழைப்புச் சக்தி எந்த அளவுக்குத் திறமையுடன் விரிகிறது, என் பதையும் பகுத்தறிவு, உணர்ச்சிகள் ஆகியவற்றுக்குத் தருகிற பயிற்சி எந்த அளவுக்கு ஆழ்ந்து சிந்திக்கப் பட்டது என்பதையுமே அழகு ஒரு போதனை முறையாக விளங்குவது பொறுத்ததாக இருக்கும். மூத்தவர்களின் சொந்த உதாரணத்தின் சக்தி செல்வாக்குச் செலுத்தும் போதும், மற்ற போதனை வழிகள் எல்லாம் ஒழுக்கச் சுத்தத்தாலும் நல்லியல்புகளாலும் ஊடுருவப் பட்டிருக்கும் போதும்தான் ஆசிரியரின் வார்த்தைக்குப் போதனைச் சக்தி கிட்டுகிறது.

போதனைச் செல்வாக்குகளுக்கு இடையில் பதிற்றுக் கணக்கான, நூற்றுக் கணக்கான, ஆயிரக் கணக்கான சார்புத் தன்மைகளும், காரணங்களும் கிடக்கின்றன. இந்தச் சார்புத் தன்மைகளும் காரணங்களும் எவ்வாறு கணக்கிலெடுத்துக் கொள்ளப் படுகின்றன, இன்னும் சரியாகச் சொன்னால், எவ்வாறு நடைமுறை உண்மை யாக்கப் படுகின்றன என்பதையே இறுதியில் போதனைப் பயிற்சியின் பயன் பொறுத்திருக்கும். வாழ்க்கையிலி ருந்து பின்தங்கி நிற்கிறது போதனை விஞ்ஞானம் எனும் எல்லோருக்கும் சலித்துப் போன குற்றச்சாட்டு, நூற்றுக் கணக்கான மற்ற செல்வாக்குகளுடன் செலுத்தப் படவில்லை என்றால் மனித நபரின் மீது செலுத்தப் படு கிற எந்தவொரு செல்வாக்கும் பலமிழந்து போகிறது என்றும், நூற்றுக் கணக்கான மற்ற நியதிகள் நிறை வேறவில்லை என்றால் எந்தவொரு நியதியும் வெற்றுக் கூச்சலாக மாறிப் போகிறது என்றும் நான் கருதுகிறேன். மனித நபரின் மீது செலுத்தப் படுகிற செல்வாக்கு களின் பதிற்றுக் கணக்கான, நூற்றுக் கணக்கான சார்புத் தன்மைகளையும் பரஸ்பரக் காரணங்களையும் எந்த அள வுக்குப் போதனை விஞ்ஞானம் ஆராய்ச்சி செய்ய வில்லையோ அந்த அளவுக்கு அது பின்தங்கி விடுகிறது. போதனைத் தோற்றங்களின் மிக நுண்ணிய, மிகச் சிக்க லான சார்புத் தன்மைகளையும் பரஸ்பரக் காரணங்

களையும் ஆராய்ச்சி செய்து, விளக்குகிற போதுதான் அது துல்லிய விஞ்ஞானமாகத் திகழும்.

...மலர்ப் பண்டிகைகள் பிறந்தன. அவை ஒருசில. வசந்தகால மலர்ப் பண்டிகை என்பது லாந்திஷ், டியூலிப் பவளக்குறிஞ்சி மலர்களின் பண்டிகையாகும். அன்று நாங்கள் காட்டுக்குப் போவோம், பள்ளி வாழ்க்கையின் முதல் இலையுதிர் காலத்தில் நாங்கள் உருவாக்கிய பவளங் குறிச்சித் தோட்டத்திற்குப் போவோம்; ஒவ்வொரு மாணவனும் ஒரு சிறு கொத்து மலர் சேகரிப்பான். மலர்கள் பலப்பல திரும்பி வராத நிறவேறுபாடுகள் கொண்டிருக்க வேண்டுமென்று விரும்புவான். நாங்கள் தொகுத்த மலர்க் கொத்துகளைக் கண்டு மகிழச்சி கொள் வதற்காகப் புல்வெளிக்குப் போவோம். அன்னையருக்கும், நண்பர்களுக்கும் அந்திரேய் தாத்தாவிற்கும், ஒல்காப் பாட்டிக்கும் அவற்றைக் கொண்டு சென்றோம். பண்டிகை கொண்டாட பள்ளி வயதுக்கு முந்திய குழந்தைகளை அழைத்தோம். அவர்களுக்காகவும் மலர்க் கொத்துகள் சேகரித்தோம்.

இரண்டாவது பண்டிகை-ரோஜாக்களின் பண்டிகை. பள்ளிக் கூடத்தின் ''ரோஜாத் தோட்டத்திலும்'' வீட்டுத் தோட்டத்திலும் மலர்கள் சேகரித்து கொத்துக் களாக்கினோம். இரண்டாம் ஆண்டுக் கல்வியின் போதே அனேகமாக எல்லாக் குழந்தைகளின் வீடுகளிலும் ரோஜாப் புதர்கள் இருந்தன. அந்திரேய் தாத்தாவுக்கும் ஒல்காப் பாட்டிக்கும் மிக மிக அழகான பூச்செண்டுகளைக் கொண்டு போய்க் கொடுத்தோம்.

மூன்றாவது பண்டிகை—காட்டுப்பூக்களின் பண்டிகை ஆகும். இப்பண்டிகை மிகப் பெரிய மகிழ்ச்சியைக் குழந் தைகளுக்கு நல்கியது. நாங்கள் காலையில் வயல்வெளி களுக்குப் போனோம். இந்த நேரத்தில் பூக்கள் குறிப்பாக அழகாக இருக்கும். காட்டுப் பூக்களின் அழகான செண்டு ஒன்று தொகுப்பது—உண்மையானதொரு படைப்புத் தொழில். மலர்க் கொத்துக்களைப் பள்ளிக்குக் கொண்டு வந்தோம், ஓய்வெடுத்துக் கொண்டோம், வீட்டுத் தோட்

டத்திலும் காட்டுப் பூக்கள் மலருவது போலக் கற்பனை செய்தோம். மிக அழகான பூச்செடிகள் எங்கே வளருகின்றன என்று நினைவு கூர்ந்தோம். இலையுதிர் காலத்தில் விதைகள் சேகரித்தோம், வேர்களைத் தோண்டி எடுத்து வந்தோம். பின்னர் வீட்டுத் தோட்டத்திலும் நீல மலர்ச் செடிகளும் கேந்திச் செடிகளும் மலர்ந்தன.

இலையுதிர்காலத்து மலர்ப் பண்டிகை, அல்லது கிரிசான்திம மலர்ப் பண்டிகை கோடை காலத்திடம் வருத்தத்துடன் விடைபெறுவதாக இருந்தது. முடிந்த அளவுக்குக் காலந் தாழ்ந்து இந்தப் பண்டிகையைக் கொண்டாடுவதற்காக எவ்வளவு உழைக்க வேண்டியிருந்தது... குளிர் காற்றிலிருந்தும் முதல் பனிக்குளிரிலிருந்தும் கொத்துமலர்ச் செடிப் புதர்களைப் பாதுகாத்தோம், காகிதத் தொப்பிகளால் அவற்றை மூடி வைத்தோம். இலையுதிர்காலத்துப் பண்டிகைக்குப் பின்னே தாவரங்களை நாங்கள் மூடு தோட்டத்திற்குக் கொண்டு சென்றோம்.

பள்ளி வாழ்க்கையின் மூன்றாவது ஆண்டில் குழந்தைகள் வெண்மலர்ப் பண்டிகையை முதன் முதல் கொண்டாடினார்கள். காட்டில் வெண்பனி இன்னும் கிடக்கிறது. ஆனால் பனிக்காலத் தூக்கத்திலிருந்து பூமி ஏற்கெனவே விழித்துக் கொண்டிருந்தது. வயல்வெளிகளில் நீல நிற, வெண்ணிற மணிமலர்கள் தோன்றத் தொடங்கின. அன்னையருக்குச் சிறு மலர்க் கொத்துகளை குழந்தைகள் கொண்டு வந்து தந்தனர்.

குழந்தைகள் ஆன்மிக மகிழ்ச்சியின் ஊற்றுக்கண்ணை உழைப்பில் காண வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் ஆகியவற்றுக்காக மட்டும் மனிதன் உழைக்காமல், அவனது வீட்டிற்கு அருகில், அவனுக்கும் அடுத்தவர்களுக்கும் மகிழ்ச்சியைத் தரும் பூக்கள் எப்போதும் மலர்ந்திருக்க வேண்டும் என்பதற்காகவும் அவன் உழைக்கட்டும். குழந்தைப் பருவத்திலேயே மகிழ்ச்சிக்காகவென்று மனிதன் உழைக்கட்டும்.

பள்ளிக் கல்வி தொடங்கிய ஓராண்டிலேயே பெற்

ளோர்களின் வீட்டுத் தோட்டத்தில் சிறிய அழகுக்கான இடம் ஒன்று தோன்றியது. அனேகமாக எல்லாக் குழந் தைகளின் வீடுகளிலும் ரோஜாப் பூக்கள் மலர்ந்தன. இதைத் தவிர ஒவ்வொரு குழந்தைக்கும் விருப்பமான மலர்களும் அங்கு இருந்தன. வார்யா, லீதா, பாவெல், செர்யோஷா, காத்யா, லரீசா, கோஸ்த்யா ஆகியோர் கிரிசான்திமம் மலர்களை நேசித்தனர். சான்யா, ஸீனு, லியூபா, லியூதா, சாஷா, ஆகியோர் கார்னேஷன் மலர்ச்செடிகளையும் டியூலிப் மலர்ச் செடிகளையும் வளர்த் தனர். வான்யா, வீத்யா, பெத்ரிக் ஆகியோர் பவளங் குறிஞ்சிப் புதர்களை நட்டனர். பூச்செடிகளை எப்படிப் பராமரிப்பது என்று நான் குழந்தைகளுக்குக் காட்டி னேன். நாற்றுக்களை எப்படி உருவாக்குவது, செடிகளுக்கு மிக ஏற்ற இடத்தை எவ்வாறு தேர்ந்தெடுப்பது என்று அவர்களுக்குச் சொன்னேன்.

பூக்களை நேசிப்பதே கோல்யாவுக்கும் அவனது அம் மாவுக்கும் இடையில் தகராறைக் கிளப்பி விட்டது. மூடுதோட்டத்தில் வேலை செய்வதற்குச் சிறுவன் விரும் பினுன். கிரிசான்திம மலர்ச் செடிகள் மூன்றைச் சிறு வனிடம் கொடுத்து அவற்றை எவ்வாறு நடுவது என்று எடுத்துச் சொன்னேன். இந்த நேரத்தில் குழந்தைகளிடம் நல்ல வகைத் தக்காளி நாற்றுக்களை வினியோகித்து வந்தோம். கிரிசான்திம மலர்ச் செடிகளுடன் டஜன் கணக்கான தக்காளி நாற்றுக்களையும் சிறுவன் கொண்டு போனுன். தக்காளி நாற்றுக்களை அம்மா நட்டார், கிரி சான்திம மலர்ச் செடிகளை கோல்யா நட்டான். இரு வார காலத்தில் கிரிசான்திம மலர்ச் செடிகள் நன்ருக வேரூன்றி இருப்பதை அவன் அம்மா கண்டார், அவற்றைப் பிடுங்கி எறிந்து விட்டார். வேலிக்குப் பின் ஞல் வீசப்பட்டிருந்த கிரிசான்திம மலர்ச் செடிகளைக் கண்டான் சிறுவன், அழுது புலம்பினுன், அம்மாவிடம் ஓடி வந்தான். அம்மா விழுந்து விழுந்து சிரித்தாள்: ''இந்தச் செடிகள் ஒரு வேதனை. அவை நமக்கு எதற்கு? பூக்கள் இல்லாமலே நாம் வாழ்ந்து விட்டோம், இனியும் வாழ்

வோம்''. கோல்யா செடிகளை அமைதியாக எடுத்துக் கொண்டு கொட்டகைக்குப் பின்னல் எடுத்துச் சென்று நட்டான்.

சில தினங்கள் கழித்து நீல நிறப்பூக்கள் சில வற்றைக் கொண்டு வந்த சிறுவன் சொன்னான்: ''பார் அம்மா, எவ்வளவு அழகு.'' இந்த வார்த்தைகளில் சிக்கலான பல உணர்ச்சிகளை வெளியிட்டான் சிறுவன். ''இந்த மலர்கள் எவ்வளவு அழகாக இருக்கின்றனவோ அவ்வளவு அழகாக நமது குடும்பத்தின் வாழ்க்கையும் இருக்க வேண்டும்'' என்று அவனுக்குச் சொல்லத் தோன்றியது போலும்.

''பறவை மருத்துவமனையில்'' மிகவும் அன்புணர்வுடன் குழந்தைகள் வேலை செய்தனர்.

சூறுவளியும் இடிப்புயலும் முடிந்த பின்னே நாங்கள் காட்டுக்குப் போனோம், கூடுகளிலிருந்து விழுந்து விட்ட பறவைக் குஞ்சுகளை நாங்கள் அடிக்கடி கண்டெடுத்தோம். ''பறவை மருத்துவமனையில்'' குழந்தைக் குரல்கள் நீண்ட நேரம் அடங்கவில்லை... பனிக்காலத்தில், காலுக்கடியில் பனி மொறுமொறுக்கும் குளிரில் தீனிக் கூடுகளை முலாம் பழ விதைகளுடன் மருத்துவமனைச் சன்னலின் மீது வைத்தார்கள் குழந்தைகள். தீனி எடுப்பதற்காகப் பல சிட்டுக்குருவிகள் பறந்து வந்தன. தீனி போதவில்லை என்றுல் அவை தீனி கேட்டுக் குரல் கொடுத்தன. மேசையின் மீது குழந்தைகள் தானியம் தூவி விட்டால் சிட்டுக் குருவிகள் அறைக்குள் பறந்து வந்து தீனியைக் கொத்தித் தின்னும். சிறுகச் சிறுக குழந்தைகளிடம் பழகி விட்டன பறவைகள். மேலும் மேலும் அதிக நேரம் அறையில் தங்கின. பனிக் குளிர் மிகுந்த இரவுகளில் அவை பறந்து போவதுகூட இல்லை. அவை சந்தோஷத்துடன் கீச்சிட்டன, குழந்தைகளின் தோள்கள், கைகள், தலைகள் மீது உட்கார்ந்தன. வெய்யில் மிகுந்த நாட்களில் அவை தீனிக்காகப் பறந்து வந்து பின் உடனே போய்விடும். இறக்கைகள் கொண்ட நண்பர்களை விட்டுப் பிரிவதற்குக் குழந்தைகளுக்கு மனமே

இல்லை. பறவைகளும் இதை உணர்ந்தன போலிருந்தது: அவற்றின் கிசுகிசுப்பில் வேண்டுகோள் தொனிப்பதைக் கண்டார்கள் குழந்தைகள்: ''நாங்கள் நீண்டகாலம் இங்கு தங்க முடியாது, எங்களை மன்னித்து விடுங்கள்.''

கோல்யா, யூரா, சாஷா, கோஸ்த்யா, பாவெல் ஆகியோர் ''பறவை மருத்துவ மனையில்'' பலமணி நேரம் உட்கார்ந்திருப்பர். அவரவர் வீட்டிலும் சிறு சிறு தீனிக் கூடுகளுக்கு ஏற்பாடு செய்யுமாறு நான் குழந்தைகளுக்கு ஆலோசனை சொன்னேன். வீட்டின் சிறு சன்னல்களுக்கு அருகில் முலாம் பழ விதைகளுடன் தீனிக் கூடுகள் தோன்றின. பாவெல் ஒரு சிறு பறவை வீடே செய்து வைத்தான்.

மேம்போக்காகப் பார்க்கையில் இதெல்லாம், போதனைப் பயிற்சியுடன் சம்பந்தமில்லாத, அவ்வளவு முக்கியமில்லாத விஷயமாகத் தோன்றலாம். உண்மையிலோ உயிருள்ள ஜீவனைப் பராமரிப்பதுதான் உள்ளத்தின் மென்மையையும், இரக்கத்தையும், அனுதாப உணர்ச்சியையும் தோற்றுவிப்பது ஆகும்.

மூன்றும் வகுப்பு முதல், மேலே சொல்லப்பட்ட வானம்பாடிப் பண்டிகையானது உழைப்பு, கலைப் படைப்பு ஆகியவை சம்பந்தமான ஒரு விசேஷப் பண்டிகையாயிற்று. கோதுமை மாவில் சிறிய வானம்பாடிகள் செய்தனர் சிறுமிகள். கபடமற்ற தனது படைப்பில் பறவை வேகமாகப் பறப்பதை ஒவ்வொரு சிறுமியும் சித்திரிக்க முயன்றது. இது ஒரு வகையான கலைப் படைப்பே. சிறுமிகள் தமது வானம்பாடிகளை ஒருவருக்கொருவர் காட்டிக் கொண்டனர். அவற்றில் இயக்கத்தை மட்டுமின்றி பாடலையும் கண்டனர். ''உனது வானம்பாடி மௌனமாய் இருக்கிறது. எனது பறவை பாட்டுப் பாடுகிறது'' போன்ற பேச்சுக்களை இந்த நாட்களில் கேட்க முடிந்தது.

குழந்தைகள் பெரியவர்களாகும்போது வயல் வெளிகளிலும் கால்நடைப் பண்ணைகளிலும் பணியாற்றப் போவார்கள். உழவர்களாகவும், பால் கறப்பவர்களாகவும், விவசாய வல்லுனர்களாகவும், தோட்ட நிபுணர்

களாகவும் பணியாற்றுவர். நிலத்திலும் பண்ணையிலும் மேற்கொள்ளப்படுகிற எளிய உழைப்பின் அழகை இள வயதிலேயே குழந்தைகள் உணர வேண்டும். சாதாரண மான உழவுத் தொழில் உழைப்பு குழந்தைகளுக்கு மகிழ்ச்சியைத் தருவது மிகவும் அவசியம். விளையாட்டு இல்லாமல், உழைப்பு நடவடிக்கையால் குழு முழுதும் உற்சாகம் அடையாமல், குழுவில் நிலவும் பரஸ்பர உறவுகளின் அழகு, நட்பு, பரஸ்பரத் தோழமை உதவி ஆகியவை இல்லாமல் இது சாத்தியமில்லை. பொது வேலையை இதயபூர்வமாக எப்போதும் ஏற்றுக் கொண் டார்கள் எனது மாணவர்கள். அவ்வேலை தரப் போகும் பலன்களைப் பற்றிச் சிந்தித்தனர். வகுப்பு எப்போதும் ஒரு உழைப்பாளர் குழுவாகவே இருந்தது.

வசந்தகாலத் தொடக்கத்தில் கால்நடைப் பண் ணைக்கு, தான்யாவின் அப்பாவிடம் நாங்கள் போனோம். கொட்டகையின் வெதுவெதுப்பான இடத்தை எங்க ளுக்கு ஒதுக்கி எங்களிடம் நான்கு ஆட்டுக்குட்டிகளைக் கூட்டி வந்தனர். தான்யாவின் அப்பா மிகவும் பலவீன மான குட்டியைத் தேர்ந்தெடுத்தார். சிறிய வெது வெதுப்பான இந்தக் குட்டிகளை நாம் பராமரிப்போம். இவற்றைப் பார்க்க தினமும் இங்கு வருவோம். ஆட்டுக் குட்டிகள் நன்கு உடல் தேறும் வரை அவற்றுக்கு உலர்ந்த புல் கஷாயமும் பாலும் தீனியாகத் தருவோம் என்று நான் குழந்தைகளிடம் சொல்கிறேன்.

''எதிலும் அக்கறை கொள்ளாத சோம்பேறிகளும் இருக்கிறார்கள், எதைக் கொண்டும் ஈரப்படுத்த முடி யாத வரண்டு போன இதயங்களும் இருக்கின்றன'' என்று சிலர் அடிக்கடி சொல்லுகிறார்கள். இது உண்மை அல்ல. கால்நடைப் பண்ணையில் சிறிய ஆட்டுக்குட்டி களைப் பராமரிக்கும்படி செய்து ஒன்றிரண்டு மாதம் குழந் தைகளுடன் உழைத்து குழந்தைகளுக்கு (சிறுவர்களுக்கு அல்ல; 10, 12 வயதில் இது சாத்தியமில்லை) உற்சாக மூட்டுங்கள். பனிக் கட்டியாக இருக்கிற இதயமும் எப் படி உருகுகிறது என்று அப்போது நீங்கள் காண்பீர்

கள். உழைப்பினது அழகு மூலம் குழந்தைக் குழு முழு துக்கும் உற்சாகமூட்டுவது உழைப்பின் மீது நேசம் கொள்ளச் செய்கிற சக்தி வாய்ந்த ஊற்றுக்கண்ணுகும். எங்கள் வகுப்பில் ஒரு சோம்பேறி கூட இல்லே, அலட்சிய சுபாவமுள்ளவர் எவருமில்லே. எளிய உழைப்பின் மூலம் குழந்தைகட்கு உற்சாகமூட்டியதன் விளேவே இது.

எங்களுக்கு உலர்ந்த புல் கிடைத்தது. அதைப் பொடியாகச் செய்து ஆட்டுக் குட்டிகளுக்குக் ''கஞ்சி காய்ச்சிக்'' கொடுத்தோம். அவற்றுக்குப் பாலூட்டினேம். ஆட்டுக் குட்டிகள் பச்சைப் புல் தின்னத் தொடங்கிய போது மூடு தோட்டத்திலிருந்து பார்லி, ஓட்ஸ் புற்களே அவற்றுக்குக் கொண்டு வந்து தந்தனர். புற்கள் பசுமையான போது ஆட்டுக் குட்டிகளுக்கு சாறு மிகுந்த தீனி நிறையக் கிட்டியது. தான்யாவின் அப்பா கொட்டகைக்கருகே பட்டி ஒன்று கட்டினுர். நாள் முழுதுக்கும் அவற்றைப் பட்டியில் விட்டோம். இது எங்கள் ''ஆட்டுப் பண்ணே''.

பள்ளி வாழ்க்கையின் மூன்ருண்டுகளில் புதிய, மேலும் முக்கியமான பொறுப்புக்கள் வந்தன. சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் கன்றுக் குட்டிகளேப் பராமரிக்க வேண்டும் என்னும் ஆவல் வந்தது. எங்களுக்குப் பால் பண்ணேயில் இன்னெரு இடம் ஒதுக்கினர். பனிக்காலம் முழுதும் மூடு தோட்டத்தில் பார்லிப் புற்களேயும் ஓட்ஸ் புற்களேயும் வளர்த்தனர் குழந்தைகள். கோடை காலத்தில் கன்றுக் குட்டிகளுக்காகப் புற்களே உலர வைத்தனர். பலப்பல சிறுவர்களும் சிறுமிகளும் பண்ணேக்கு அனேகமாக ஒவ்வொரு நாளும் வந்தனர்.

வசந்தகாலம் வந்த போது, ஆடுகளேயும் ஆட்டுக் குட்டிகளேயும் வயல்களுக்கு ஓட்டிச் சென்ற போது குழந்தைகள் வருத்தம் அடைந்தனர். வயலில், இயற்கையின் நடுவே ஒரு நாளாவது இருந்து வர வேண்டும் என்று அவர்கள் விரும்பினர். ஞாயிற்றுக்கிழமை நாங்கள் வயலுக்குப் போனேம். ஆடுகளேயும் ஆட்டுக் குட்டிகளேயும் மேய்ச்சலுக்கு விட்டோம். இடையர்கள்

அறுத்துப் போட்ட உலர்ந்த புற்களைச் சேகரித்தோம். வசந்த காலத்தின் முதல் புற்கள் ஆட்டுக் குட்டிகளுக்கு சிகிச்சைத் தீனியாகும். பாடங்கள் முடிந்த பின்னே, கோடைகாலத்தில் அனேகமாக ஒவ்வொரு நாளும் வயல் வெளிக்கு வந்தார்கள் குழந்தைகள். அன்றாட வேலை யின் அழகில் குழந்தைப் பருவத்தில் ஒருவன் உற்சாகப் படுத்தப்படவில்லை என்றால், எளிமையான விவசாய உழைப்பை அவன் ஒருபோதும் நேசிக்க மாட்டான் என்று வாழ்க்கை எடுத்துக்காட்டியிருக்கிறது.

பள்ளிக் கூடத்தின் கல்வி-அனுபவத் தோட்டத்தில் ரோமான்ஸ் தீ குழந்தைகளின் உழைப்புக்கு ஒளி கூட் டியது. முதல் வகுப்பிலே படிக்கும் போதே எங்களுக்கு 0.1 ஹெக்டர் நிலம் ஒதுக்கி இருந்தனர். குழந்தைகள் உயர் வகுப்பு மாணவர்களுடன் சேர்ந்து சிறு வீடொன்று கட்டினர்—செங்கற் சுவர்கள், ஓட்டுக் கூரை, மரத்தா லான தரை, சிறு அடுப்பு, தண்ணீர்க் குழாய், மின் விளக்கு ஆகியவை இங்கிருந்தன. உண்மையான ஒரு வீட்டில் இருப்பது போலவே எல்லாம் இருந்தன. ஆனால் அவை சிறியதாக இருந்தன. ''பசுமை வீடு'' என்று இந்தச் சிறு வீட்டைக் குழந்தைகள் அழைத்தனர். இயற்கையைப் பற்றிய கதைகளைக் கேட்கவும் படிக்க வும் இன்னொரு வசதியான இடமாக இது விளங்கியது. பின்னர், குழந்தைகள் மூன்றாம் வகுப்பில் படிக்கும் போது விதைகளைக் கொண்டு இங்கு சோதனைகள் நடத் தினோம்.

இந்தச் சிறு வீடு கட்டுவது உழைப்பாகவும், ஒரு விளையாட்டாகவும், இருந்தது. கட்டி முடித்த பின் தமது கைவண்ணத்தால் தோன்றிய அந்த வீட்டை அவர்கள் மிகவும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டனர். இந்த வீடு தமது உழைப்பின் பயனே என்று அவர்களுக்கு நன்கு தெரிந்தது. இந்த வாழ்க்கை அனுபவத்தை வேறு எத்தகைய விளக்கமும் பிடித்துக் கொள்ள முடியாது.

சமுதாய உழைப்பை ஒரு குழந்தை காப்பாற்ற வேண் டுமானால் சமுதாயக் கட்டுமானத்தின் முதல் சொந்த

அனுபவத்தை (இது எவ்வளவு சிறியதாய் இருந்தாலும் பரவாயில்லை) அவன் பெற்றிருக்க வேண்டும். சமுதாயச் சொத்து மதிப்பிற்கரியதாக ஒருவனுக்கு விளங்கும் போதுதான் பொருள்வகை மதிப்பின் சாரம் அவனுக்கு எட்டும். இந்தப் பண்பைக் குழந்தைப் பருவத்திலேயே ஒருவன் பெற வேண்டும். சமுதாயச் சொத்துக்களை ஊதாரித் தனமாகச் சில சிறுவர்கள் கையாளுவது ஏன்— இச்சிறுவர்கள் ஏன் உணர்ச்சியற்றவர்களாய் இருக்கின்றனர்? என்று சில ஆசிரியர்கள் கேட்கிறார்கள். இளமைப் பருவத்திலும், வாலிபப் பருவத்தின் தொடக்கத்திலும் சிக்கனம் மிகுந்தவனாகவும் கட்டுப்பாடு நிறைந்தவனாகவும் ஒருவன் இருக்க வேண்டுமென்றும், சமுதாய நலன்களை அவன் பராமரிப்பது வெறும் வெளிச்சம் போடும் தன்மையாய் இல்லாமல் தனது சொந்தச் சொத்தாக இல்லாத ஒன்றைப் பற்றிய இதயபூர்வக் கவலையாக வெளிப்பட வேண்டும் என்றும் நீங்கள் விரும்பினால், அவனது குழந்தைப் பருவத்தில் ஏதாவது ஒரு சமுதாயச் சொத்து அவனுடைய மதிப்புக்குகந்த, சொந்த மகிழ்ச்சிகளிலிருந்து, சொந்தக் களிப்பிலிருந்துப் பிரிக்க முடியாததாகவும் விளங்கட்டும்.

''பசுமை வீட்டுக்கு'' அருகில் ஒரு துண்டு நிலத்தில் கோதுமை, பார்லி, தினை, பக்வீட், மக்காச் சோளம், சூரிய காந்தி ஆகிய பயிர்களை வளர்த்தோம். வீட்டில் தானியத்தைப் பறித்தோம், அறுவடை செய்து தானியத்தைப் பாதுகாத்து வைத்தோம், உரங்கள் தயாரித்தோம். ரோமான்ஸ் பூர்வ உலக அறிவினால் உழைப்பு உயிர் பெற்றது. குழந்தைகள் சிந்தித்தபடி வேலை செய்தனர், வேலை செய்தபடி சிந்தித்தனர். இயற்கை இரகசியங்களும் நியதிகளும் அவர்கள் முன்னே விரிந்தன. இயற்கைச் சக்திகளைப் பயன் படுத்துவதற்கு அறிவு உதவுகிறது என்றும், இந்த அறிவோ உழைப்பில்தான் கிட்டுகிறது என்றும் குழந்தைப் பருவத்திலேயே, தமது சொந்த அனுபவத்தில் குழந்தைகள் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். கோது

மைத் தானியத்தைப் பற்றியும், உயிருள்ள உழைப்பு எப்படி அதனை நிர்வகிக்கிறது என்பது பற்றியும் நான் எடுத்துச் சொன்னேன். மண்ணினது வாழ்வு எனும் வியத் தகு உலகம் குழந்தைகளின் முன்னே விரிந்தது. இந்த நிலத்தில் நாங்கள் கரிமப் பொருட்களைக் கலந்தோம். மண் விளைநிலமாயிற்று. குழந்தைகள் ஒரு நூறு தானி யத்தை நிலத்தில் விதைத்து தாவரங்கள் எவ்வாறு வளர்கின்றன என்று அக்கறையுடன் கவனித்து வந்தார் கள். பெரிய, கனமான தானியங்கள் கதிர்களில் தோன்றத் தக்க வகையில் மண்ணுக்கு ஊட்டம் தர வேண்டும் என்று குழந்தைகளுக்கு ஏற்பட்ட ஆவல் அவர்களுக்கு உற்சாகம் தந்தது. ஊட்டம் நிறைந்த திரவத்தால் முடிந்த அளவுக்குத் தனது பயிர்களுக்கு உணவூட்ட வேண்டும் என்று ஒவ்வொருவருக்கும் விருப்பமாய் இருந் தது. மிக எளிய உழைப்பு நடவடிக்கையைச் செய்து முடிக்கத் தூண்டிய, உற்சாகப் படுத்திய உண்மையான படைப்புப் பணியாகும் இது. கதிர்களை மிகவும் கவன மாக அறுத்து, ஆயிரம் ஆயிரம் தானியங்களாகப் பிரித்து அவற்றை எடைபோட்டுப் பார்த்தனர்: மிக அதிகமாக அறுவடை செய்த மாணவன் பதட்டம் தரும் பெருமை உணர்ச்சியை அனுபவித்தான். மற்ற குழந் தைகள் மேலும் சிறப்பாக வேலை செய்ய வேண்டும் என்னும் ஆவல் கொண்டனர்.

தாவரங்களை நேசிக்கிறார்கள் குழந்தைகள் என்றும், மண்ணின் உயிர்வாழ்க்கையை அவர்கள் உணருகிறார்கள் என்றும் நான் மகிழ்ச்சி மிக்க மனவுறுதி கொண்டேன். மூன்றும் வகுப்பிலும் நான்காம் வகுப்பிலும் அவர்கள் படிக்கும்போது, சாதாரணமாக வயலில் விளைவிப்பதை விட இரண்டு மடங்கு அதிகப் பருமனுள்ளதாகத் தானி யத்தை விளைவித்தனர்.

''பசுமை வீட்டிலும்'' மூடுதோட்டத்திலும் ஊட்டத் திரவங்களில் வெள்ளரிக்காய்களையும் தக்காளிப் பழங் களையும் நாங்கள் விளைவித்தோம். பனிக்காலத்திலிருந்து சத்து மண்ணையும் கரிசல் மண்ணையும் கொண்டு

ஊட்டம் நிறைந்த கலவை தயார் செய்தனர். வசந்த காலத்தில் அதனை விளை நிலத்துக்குக் கொண்டு சென்றனர். இலையுதிர்காலத்தில் உருளைக் கிழங்கும் தக்காளிப் பழமும் நன்கு அறுவடை செய்தனர்.

''பசுமை ஆய்வகத்திலும்'' சில குழந்தைகள் உழைத்தனர். இது ஒரு வீடு — நடுத்தர வயதுள்ள குழந்தைகளுக்காகக் கட்டப்பட்டது. இங்கே உயர் வகுப்பு மாணவர்களின் வழிகாட்டுதலில், எனது மாணவர்கள் தோட்ட இயல், தாவர வளர்ப்பு ஆகியவற்றில் சுவாரஸ்யமான சோதனைகள் நடத்தினர். பழம் தரும் மரவகைகளை காட்டு மரங்களுடன் எப்படி ஒட்டுப் போடுவது என்று இங்கு மாணவர்களுக்கு நான் காட்டினேன். இந்த நுண்ணிய வேலையை இரண்டாம் வகுப்பில் இருக்கும் போதே மாணவர்கள் கற்றுக் கொண்டனர். இயற்கையின் மீது அறிவு ஆதிக்கம் செலுத்துவதையும் தத்துவம் நடைமுறை ஆகியவற்றுக்கு இடையே இருக்கும் ஒற்றுமையையும் உணர்ந்தனர்.

ஒட்டுக்களின் விளைவை அறிவதற்காக வசந்தம் வர வேண்டும் என்று ஆவலுடன் சிறுவர்களும் சிறுமிகளும் காத்திருந்தனர். ஒட்டுக் குச்சிகளிலிருந்து சிறு தளிர்கள் தோன்றிய போது குழந்தைகள் அடைந்த சந்தோஷத்துக்கு அளவே இல்லை. கூட்டுச் செடிப் பண்ணை ஒன்றை நாங்கள் உருவாக்கினோம். ஒவ்வொரு ஆண்டும் இங்கு நாற்றுக்கள் தோற்றுவிப்பது என்று முடிவு செய்தோம். இந்தச் செடிப் பண்ணை நேச உழைப்பின் இன்னொரு இடமாயிற்று.மூன்றும் வகுப்பு முடிந்த பின்பு வந்த கோடைகாலத்தில், ஆளரவமற்ற புதர்களில் காட்டுப் பிளம் மரத்தைப் பார்த்தோம். எங்களில் ஒவ்வொருவரும் அத்துடன் வழக்கமான உணவுப் பழ மரங்களின் குச்சிகளை ஒட்டுப் போட்டோம். சிலர் பிளம் மரக் குச்சிகளையும், சிலர் பீச் மரக் குச்சிகளையும், சிலர் ஏப்ரிக் காட்டு மரக் குச்சிகளையும் ஒட்டுப் போட்டனர். எல்லா ஒட்டுக்களும் நன்கு பிடித்துக் கொண்டன. வேறுவேறு வகைப் பழச் செடிகள் ஒரே மரத்தில் எப்படி வளரு

கின்றன என்று குழந்தைகள் வியப்புடன் பார்த்து வந்தனர். இரண்டு ஆண்டுகள் கழித்து அவற்றில் பழங்கள் பழுத்தன.

சிந்தனை, படைப்பாற்றல், அறிவுத் தாகம் ஆகியவற்றின் வளமான ஊற்றுக்கண் இயற்கையே என்று ஏற்கெனவே சொல்லப்பட்டது. இதன் நியமங்களை அறிந்து கொள்ளுகையில் குழந்தை மனிதனாகிறது. ஏனெனில் இயற்கை வளர்ச்சி எனும் பெரிய ஏணியில் மிகவுயர்ந்த படிக்கட்டு என்று தன்னைத்தானே அவன் அறிந்து கொள்கிறான். குழந்தையின் இயல்பான ஆற்றல்களை வளர்ப்பது அவனது பகுத்தறிவைப் பயிற்றுவிப்பது, சிந்தனையை வளமைப் படுத்துவது எனும் அற்புதத்தை இயற்கை தானாகவே படைக்கும் திறனற்றது. தீவிர முயற்சிகளும் உழைப்பும் இன்றி இயற்கையின் ரகசியங்களைக் கண்டுபிடிக்கவோ அறிந்து கொள்ளவோ முடியாது. இயற்கைச் சக்திகளை உணர்வு பூர்வமாகப் பயன்படுத்துவதற்காக முதல் எட்டு எடுத்து வைக்கும் போது தான் அது அவனுக்குப் பரிசளிக்கிறது. இந்தப் பரிசு ஆரம்பத்தில் கஞ்சத்தனமானதாய் இருக்கும். பின்னர் அறிந்து கொண்டும், படைப்புப் பணி மேற்கொண்டும் மனிதன் எந்த அளவுக்குப் புதிய முயற்சிகளை மேற்கொள்கிறானோ, அந்த அளவுக்குத் தாராளமாக அது பரிசுகளை வழங்குகிறது. எந்த அளவுக்குக் குழந்தைகள் உழைக்கிறார்களோ அந்த அளவிற்கு அவர்களின் உணர்விற்கு முன்னே இயற்கை ரகசியங்கள் வெளிப்படுகின்றன, அந்த அளவிற்குப் புதியவற்றை, புரியாதவற்றை அவர்கள் தம் முன்னே காண்கிறார்கள். எந்த அளவுக்குப் புரியாதவை அதிகமாக இருக்கின்றனவோ, அந்த அளவுக்கு சிந்தனை தீவிரமானதாக இருக்கிறது. திகைப்புதான் சிந்தனைக்கு முதல் ''தூண்டுதல்'' ஆகும். கிளரப்பட்ட மண்ணில் தானியம் போடப்பட்ட வினாடியிலிருந்து அறுவடை செய்கிற கணம் வரை குழந்தைகளிடம் எப்படி? ஏன்? என்று இருநூறுக்கு மேற்பட்ட கேள்விகள் தோன்றின. மரங்களையும் தானியப் பயிர்

களையும், தொழிற்பயிர்களையும் வளர்ப்பதற்காக நிலத்தில் உழைப்பது போல சிந்தனையைத் தட்டிவிட்டு, யோசிக்கும்படி நிர்ப்பந்திக்கிற, இயற்கையின் மீது செல்வாக்குச் செலுத்துகிற வேறு எதுவும் கிடையாது.

பன்முகப் பட்டதாகவும், மனப்போக்குகளையும் விருப்பங்களையும் வெளிப்படுத்துவதற்கு உதவுகின்ற ஒன்றுகவும் குழந்தைகளின் உழைப்பு விளங்க வேண்டும் என்பதற்காக நான் பாடுபட்டேன். பள்ளிப் பட்டறைக்கு அருகில் குழந்தைகளுக்குத் தேவையான கருவிகளை எல்லாம் ஒரு அறையில் வைத்தோம். இங்கு மேசைகளைப் போட்டு அவற்றில் நிலையிடுக்கிகளை வைத்திருக்கிறோம். எங்களது நீண்டகாலக் கனவு நனவாயிற்று. உயர் வகுப்பு மாணவர்கள் குழந்தைகளுக்கு இரண்டு குட்டிக் கடைசல் இயந்திரங்களும் ஒரு துளையிடும் இயந்திரமும் செய்து கொடுத்தனர். அலமாரியிலும், பலகை அடுக்குகளிலும் சிறு இழைப்புளிகள், ரம்பங்கள் இருந்தன. கொல்லுப் பெட்டியில் உலோகத்தில் வேலை செய்வதற்கான கருவிகளும், உலோகத் தகடுகளும், கம்பிகளும் வைக்கப்பட்டிருந்தன. இவையெல்லாம் கட்டுமான வேலைக்கும் மாதிரி அமைப்புக்கும் அவசியமானவை. பலப்பல சிறுமிகளுக்கும் சிறுவர்களுக்கும் வேலையறையின் உழைப்பு சுவாரஸ்யமாய் இருந்ததால் இளம் நிபுணர்களின் குழு ஒன்று படிப்படியாக உருவாயிற்று. சிற்றிழை வாள் கொண்டு அறுப்பதற்கும், கட்டுமான வேலைக்கும் மாதிரி அமைப்புக்கும் குறிப்பாக விரும்பினர் குழந்தைகள்.

மதிய உணவுக்குப் பின் வேலை அறையில் கூடிய நாங்கள், உடனடியாக பல மாதிரிகளைச் செய்தோம்- காற்று மின் நிலையம், தானியம் சுத்தம் செய்யும் இயந்திரம், தானியம் தூற்றும் இயந்திரம், உண்மையான ஒன்று போலவே இருந்த சிறு வீடு, எழுதுமேசை, சிறு கொல்லுக் கருவிகளுக்கான அலமாரி ஆகியவை இவை. உலோகத்திலும், மரத்திலும் பொருள்களைச் செய்தபடி

கூட்டாக உழைத்தார்கள் குழந்தைகள். மாதிரி எவ்வளவு சிறியதாகவும் நுண்ணியதாகவும் இருக்கிறதோ அந்த அளவுக்கு அதனைச் செய்வது (அதனுடைய ''பெரியவனைப்'' போலவே செய்வது என்று இதனை குழந்தைகள் அழைத்தனர்) கஷ்டமாக இருந்தது, அந்த அளவுக்கு அதிக அக்கறையுடனும் அவர்கள் வேலை செய்தனர்.

இயற்கை விருப்பங்களையும் மனப்போக்குகளையும் தூண்டி விடுவது, படைப்பில் மகிழ்ச்சியைத் தருவது, எதிர்காலத்துக்குத் தேவையான திறமைகளையும் பழக்கங்களையும் உருவாக்குவது ஆகியவையே, குழந்தைகளை உழைப்பில் ஈடுபடுத்தும் போது என் முன் இருந்த பிரதான குறிக்கோள். உதாரணம் மூலம் குழந்தைகளை நான் கவர முயன்றேன். உலோகத்திலும் மரத்திலும் எவ்வாறு வேலை செய்வது, கருவிகளை எப்படிக் கையாளுவது என்று அவர்களுக்குக் கண்ணெதிரே காட்டினேன். கற்றுத் தருகிறவரின் திறமை உற்சாகத்தைத் தோற்றுவிக்கிற மனப்போக்கு, தீயை மூட்டி விடுகிற தீப்பொறி ஆகும். குழந்தைகளின் கண்களுக்கு முன்னே நான் மரத்தால் பொம்மைக்காக ஒரு விளையாட்டுக் கட்டில் செய்ததிலிருந்து வேலையறையில் எங்கள் பாடம் தொடங்கியது. இச்சிறு கட்டில் எந்த அளவுக்கு உண்மையான கட்டிலைப் போலவே இருந்ததோ, அந்த அளவுக்குக் குழந்தைக் கண்கள் பிரகாசமாகச் சுடர் விட்டன: இந்த வேலையில் பங்கெடுத்துக் கொள்ள சிறுவர்கள் விரும்பினர். அவர்களில் பலர் உடனடியாக எனக்கு உதவி செய்யத் தொடங்கினர். கட்டிலின் சில பகுதிகளை இழைத்தார்கள், பின்னர் அவற்றுக்கு மெருகிட்டார்கள். காற்று மின்நிலையத்தின் மாதிரியை நாங்கள் செய்யத் தொடங்கிய போது, எனக்கு நம்பகமான உதவியாளர்கள் மட்டுமின்றி, உண்மையான உழைப்புச் சகாக்களும் இருந்தனர். யூரா, வீத்யா, மீஷா ஆகியோர் கருவிகளைக் கையாள விரைவில் கற்றுக் கொண்டனர். உழைப்பதற்கு எல்லோருமே விரும்பினர். எனவே ஒரே நேரத்

தில் நாங்கள் பல மாதிரிப் பொருள்களைச் செய்யத் தொடங்கினோம்.

இங்கு ஒரு விஷயத்தை நினைவு படுத்த வேண்டும். குழந்தைகளின் திறமைகளுக்கும் வல்லமைக்கும் ஊற்றுக்கண்கள் அவர்களது விரல்முனைகளிலேயே இருக்கின்றன. உருவகமாகச் சொன்னால், விரல்களிலிருந்துதான் மெல்லிய சிற்றாறுகள் ஓடுகின்றன. இந்தச் சிற்றாறுகளுக்கு ஊட்டம் தரும் ஊற்றுக்கண் படைப்புச் சிந்தனையே. குழந்தைக் கையின் இயக்கத்தில் எந்த அளவுக்கு உறுதியும் புதுமையும் இருக்கின்றனவோ, எந்த அளவுக்கு உழைப்புக் கருவியும் கையும் பரஸ்பரம் நுண்ணிய செல்வாக்குச் செலுத்துகின்றனவோ, அந்த அளவுக்கு பரஸ்பரச் செல்வாக்குக்கான சிக்கலான இயக்கங்கள் இருக்கும், குழந்தையறிவின் படைப்புத் தன்மை அந்த அளவுக்குப் பிரகாசமாக இருக்கும்.இந்தப் பரஸ்பரச் செயல்களுக்குத் தேவையான இயக்கங்கள் அந்த அளவுக்கு துல்லியமாயும், நுண்ணியதாயும், சிக்கலானதாயும் விளங்கும். இயற்கையுடனும், சமுதாய உழைப்புடனும் எந்த அளவுக்கு கை செலுத்தும் பரஸ்பரச் செல்வாக்கு ஆழமாக ஆன்மிக வாழ்வுக்குள் நுழைகிறதோ, அந்த அளவுக்கு ஆய்வு செய்வதில் கூர்ந்து பார்ப்பதும், அறிவுத் தாகமும், பார்வைக் கூர்மையும், கவனமும், ஆராயும் திறனும் குழந்தை நடவடிக்கையில் காணப்படும்.

வேறுமாதிரியாகச் சொன்னால், குழந்தைக் கையில் எந்த அளவுக்குத் திறமை இருக்கிறதோ அந்த அளவுக்குக் குழந்தை புத்திசாலியாகத் திகழும். திறமை என்பது ஏதோ ஒரு உள்ளுணர்வால் வருவதல்ல. குழந்தையின் அறிவாற்றல் உடலுறுதிச் சக்திகளைப் பொறுத்தது அது. திறமை எந்த அளவுக்குச் செம்மையுறுகிறதோ, அந்த அளவுக்கு அறிவின் ஆற்றல் உறுதிப்படுகிறது. திறமையோ தனது ஆற்றலை அறிவிலிருந்து பெறுகிறது. சுற்றியுள்ள உலகத்தை அறிவது, சுற்றியுள்ள சூழலுடன் குழந்தைக் கைகள் புரிகிற தீவிரமான பரஸ்பரச் செயலாக இருக்க வேண்டும் என்றும், கண்களால்

கூர்ந்து பார்ப்பதுடன் மட்டுமின்றி கைகளாலும் காண வேண்டும் என்றும், தனது அறிவுத் தாகத்தைக் கேள்வி களால் மட்டுமின்றி உழைப்பினுலும் வெளிப்படுத்த வேண்டும் என்றும் நான் விரும்பினேன்.

''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தின்'' முதல் நாட் களிலிருந்தே தாவரத் தொகுப்புகளையும் விதைத் தொகுப்புகளையும், பலவகை மரத்துண்டுகளையும் குழந்தை கள் சேகரித்தனர். கண்ணுல் பார்க்கிற நிகழ்ச்சிப் போக் கால் மட்டுமின்றி, மிக எளிய கருவிகளை—சுத்தி, கத்தி, கத்திரி, உளி—கொண்டு கைகளால் செயல் புரிந்தும் பொருள்களின் தன்மையைக் கற்றறிந்தனர். ஒன்று, இரண்டு, மூன்ரும் வகுப்புக்களில் இருக்கும்போதே சிறு கத்தி கொண்டு வேலை செய்யக் கற்றுக் கொண்டனர் குழந்தைகள். வில்லோ மரம், அசோக மரம், பாப்ளார், ஓக் மரம், பைன் மரம், பேரி மரம், செர்ரி மரம் ஆகிய வற்றின் மெல்லிய பலகைகளை குழந்தைகள் அறுத் தனர். அவற்றுக்கு மெருகிட்டனர், காகிதத்துடன் ஒட்ட வைத்தனர் அல்லது தைத்து வைத்தனர். அவற்றின் உறுதியையும் மற்ற தன்மைகளையும் ஒப்பிட்டுப் பார்த் தனர். அசோக மரத்தின் அடித்தண்டின் முருடுகளிலி ருந்து (இவை மிகவும் குழைவுத் தன்மை கொண்டவை) எழுத்துக்களையும், மிருகங்கள், பறவைகள் ஆகியவற்றின் உருவங்களையும் செய்தனர். ''மர எழுத்துக்களை'' (அசோக மரத்து முருடுகளில் செய்த எழுத்துக்களைக் குழந்தைகள் இப்படி அழைத்தனர்) எல்லாச் சிறுவர் களும் சிறுமிகளும் செய்தனர். எங்கள் கிராமத்துக்கு அருகே கருங்கற் குகை ஒன்று இருக்கிறது. பாறை வகை களின் மாதிரிகளைச் சேகரிப்பதற்காக நாங்கள் அடிக் கடி இங்கு வருவோம். சிறு சுத்தியல்களால் காக்காய்ப் பொன் துண்டுகளை விருப்பமுடன் வெட்டியெடுத்தனர் குழந்தைகள், பல நிறக் கற்களைச் சேகரித்தனர், களி மண் கொண்டு விளையாட்டுச் செங்கற்கள் செய்தனர், அவற்றை வெய்யிலில் உலர்த்தினர், பின்னர் சிறு வீடு கள் கட்டினர். கோடைகாலத்தில், அறுவடையின் போது

ரை, கோதுமை ஆகியவற்றின் வைக்கோல்களிலிருந்து ஒரே சீரான தண்டுகளை—''அம்புகளை'' வெட்டினோம், பின்னர் வைக்கோல் நாடாக்கள் பின்னி, தொப்பி செய்தோம்.

இவையெல்லாம் தொழில்நுட்பப் படைப்புக்கான தயாரிப்பாக மட்டும் இருக்கவில்லை. கைகளின் திறனை வளர்த்தபடி பகுத்தறிவையும் நான் வளர்த்து வந்தேன். காற்று மின்நிலையத்தை நாங்கள் உருவாக்கும் போது உலோகத் தகடுகளுக்குப் பதிலாக மரத்துடுப்புகளை உபயோகிக்கலாம் என்று ஆலோசனை சொன்னார்கள் குழந்தைகள். ''மிகவும் உறுதியான, இலேசான மரப்பலகைகள் நம்மிடம் இருக்கின்றனவே. அவற்றைக் கொண்டு, சிறு காற்றில்கூட சுழலக் கூடிய துடுப்புக்களை செய்யலாமே...'' என்றான் செர்யோஷா.

தொடக்கப்பள்ளியில், நான்காண்டு காலக் கல்வியின் போது, வேலை செய்கிற முப்பதுக்கும் மேற்பட்ட மாதிரிகளைக் குழந்தைகள் உருவாக்கினர். இவற்றின் சிக்கல் தன்மையோ, சிறு மோட்டாரின் உதவியால் இயக்கப்படும் காற்று மின்நிலையத்தைப் போன்றதாக இருந்தது. குழந்தைகளின் தனித்தனி மனப் போக்குகள் மேலும் மேலும் தெளிவாக வெளியாயின. ஷூரா, வீத்யா, மீஷா, செர்யோஷா, யூரா ஆகியோர் உலோகங்களிலும் இயந்திரவியலிலும் ஆர்வம் கொண்டனர். பல மணி நேரங்கள் நிலையிடுக்கிகளின் அருகில் அவர்களால் வேலை செய்ய முடிந்தது. சிறுவர்களுக்கு நேரம் போனதே தெரியவில்லை. சில சமயங்களில் வீட்டுக்குப் போகும்படி அவர்களை வற்புறுத்துவது மிகக் கஷ்டமாக இருந்தது. நிலையிடுக்கிகளுக்கு அருகே, மரத்திலிருந்தோ இலேசான உலோகத்திலிருந்தோ கடைசல் இயந்திரங்களின் எளிய பகுதிகளைச் சிறுவர்கள் செய்வது கண்டு, ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' இருக்கும் போதே மர எழுத்துக்களைச் செதுக்குவதற்குக் குழந்தைகள் கற்றிருந்ததை நினைவு கூர்ந்தேன். சிறுவர்களின் இத்தகைய ஈடுபாடுகளில் அவர்களின் எதிர்காலத் தொழிலைக்

காணுவது அப்பாவித்தனமாகும். சிக்கலான பல உருவ மாறுபாடுகளைக் கொண்டிருக்கிறது திறமை என்று வாழ்க்கை அனுபவம் எடுத்துக் காட்டுகிறது. எத்தகைய வன் ஆக வேண்டும் என்று குழந்தைப் பருவத்தில் ஒரு வன் கனவு காண்கிருனே அதுபோல மிக அரிதாகவே ஒருவன் ஆகிருன்.

உடலுழைப்பு அறிவுப் பயிற்சியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டதாகும். ஆராய்கிற அறிவு, சாதுர் யம், படைப்புக் கற்பனை ஆகியவற்றின் பொருள்வகை உருவகமே கைகளின் திறமை ஆகும். குழந்தைப் பருவத் தில் தனது எண்ணத்தை ஒவ்வொரு சிறுவனும் கை களால் நனவாக்க வேண்டியது மிகவும் முக்கியமாகும்.

நான்காம் வகுப்பில் படிக்கும் போது குழந்தைகள் சிறு இழைப்புளிகள், அரங்கள் ஆகியவற்றைச் செய் தனர். மிக எளிய கருவியையும் அவர்கள் மறந்து விட வில்லை. பொம்மை அரங்குகளுக்கும் நிழல் அரங்குகளுக் கும் தேவையான மிருகங்கள், பிராணிகள் ஆகியவற்றின் வேடிக்கையான உருவங்களையும், கட்டுக்கதைகளில் வரும் பாபா—யாகா, சிரஞ்சீவி காஷெய் ஆகிய உருவங்களையும் கத்தியால் அவர்கள் செதுக்கினர். செர்யோஷாவும் மீஷாவும் கட்டுக்கதை அறைக்கு ஒன்றும், வகுப்பறைக்கு ஒன்றும் ஆக இரண்டு மீன் தொட்டிகள் செய்தனர்.

இன்னெரு சுவாரஸ்யமான வேலை குழந்தைகட்குப் பெருத்த மகிழ்ச்சியைத் தந்தது: ஒரு சிறிய மின்நிலை யத்தை நாங்கள் அமைத்தோம். ஒரு சிறு உள்ளெரி எஞ்சின் வேலை செய்வதால் இது இயக்கப்பட்டது. குழந்தைகளுக்கு ஆபத்தில்லாத குறைவான அழுத்த முள்ள மின்சக்தியை இந்த நிலையம் தந்தது.

மூன்ரும், நான்காம் வகுப்புக்களில் தமக்கு மிகவும் பிடித்த வேலை செய்தனர் குழந்தைகள். சில குழந்தை கள் ''பசுமை வீட்டுக்குப்'' போனுர்கள். மற்றவர்கள் வேலை அறைக்குச் சென்ருர்கள், வேறுசிலர் மூடு தோட்டத்திற்கும், மற்றும் சிலர் பயிற்சிப் பரிசோதனை நிலத்துக்கும் தோட்டத்துக்கும் சென்றனர். கால்நடைப்

பண்ணை வேலையில் ஈடுபாடு கொண்டவர்கள் ஆட்டுக் குட்டிகள், கன்றுக் குட்டிகள் ஆகியவற்றைக் கவனித்துக் கொள்ளச் சென்றூர்கள். ஒவ்வொரு மாணவனும் இந்த நேரத்தில் தனது மனதுக்குகந்த வேலையைச் செய்தான். குழந்தைகளுடன் இன்று எனக்கு மிகவும் பிடித்த ஒரு உழைப்புப் பகுதிக்குச் சென்றேனென்றுல், நாளைக்கு வேறொரு பகுதிக்குச் சென்றேன். ஒரு குறிப்பிட்ட வகைச் செயலுக்கேற்ற மனப்போக்குகள் குழந்தை களிடம் தெளிவாக வெளியாயின. அவர்கள் சிறிய உழைப்புக் குழுக்களை நிறுவி, தமது உழைப்பினுல் தோழர்களைக் கவர்ந்திழுத்தார்கள். உழைப்பு அறையில் இருந்த குழுவிற்குத் தலைவனுக யூரா இருந்தான், இளம் தாவரவியலாளர்கள் பிரிவிற்கு வான்யாவும், தோட்டப் பிரிவுக்கு வார்யாவும் கால்நடைப் பிரிவுக்கு சாஷாவும் தலைவர்களாக இருந்தனர். தம்மையொத்த வயதுடைய வர்களை விட இந்தக் குழந்தைகளுக்குக் கணிசமான அளவு நிறையத் தெரிந்திருக்கிறது, இவர்கள் நிறைய வேலை செய்ய வல்லவர்கள் என்பது எனக்கு மகிழ்ச்சி யைத் தந்தது. அவர்களின் உதாரணத்தை மற்ற குழந் தைகள் பின்பற்றினர். உழைப்பு நடவடிக்கை படைப் பாற்றலில் போட்டி எனும் தன்மையைப் பெற்றது.

அறிவாற்றல், உடலுறுதிச் சக்திகளைப் போல, சுய மரியாதையை நிலைநாட்டுவது போல எனது மாணவர் களின் ஆன்மிக உலகுக்குள் உழைப்பு நுழைந்தது. தனக்கு மிகவும் பிடித்த உழைப்பில் ஒவ்வொரு மனிதனும் குழந்தைப் பருவத்தில் கணிசமான வெற்றி பெறு வதும், தனது படைப்புத் திறன்கள் உயிர் பெறுவதைக் கண்ணூரக் காண்பதும், ஒரு குழந்தைக்கு எட்டக் கூடிய அளவுக்கு விருப்பமான உழைப்பில் அவன் நிபுணத்துவம் பெற்றிருப்பதும் மிகவும் முக்கியமானதாகும். பள்ளிப் பருவத்திலேயே ஏதோ ஒன்றை நன்றுகவும் அழகாக வும் செய்வதற்கு அவன் கற்றிருக்க வேண்டும். மிகவும் பிடித்தமான காரியத்தில் பெற்ற வெற்றியில் பெருமை உணர்ச்சி கொள்வது சுய அறிவின் முதல் ஊற்றுக்கண்

ளுகும். அது படைப்பு உத்வேகம் எனும் நெருப்பை மூட்டி விடுகின்ற முதல் தீப்பொறியாகும். உத்வேகமோ, மகிழ்ச்சிக் கிளர்ச்சியோ இல்லாமல், தனது சக்திகள் முழுதையும் உணராமல் மனிதன் இல்லை, வாழ்க்கையில் உகந்த ஒரு இடத்தை அவன் பெறுவான் என்பதில் எந்த உறுதியும் இல்லை. தனது தனித் தன்மையையும், சுயவாழ்க்கையையும் உழைப்பில் திறந்து காட்டாத ஒரு குழந்தை கூடப் பள்ளிக்கூடத்தில் இருக்கக் கூடாது என்பதற்காக நான் பாடுபட்டேன்.

எனது மாணவர்கள் ஒவ்வொருவரின் குழந்தைப் பருவத்தையும் நினைத்துப் பார்க்கும் போது உழைப்பில் பெற்ற வெற்றிக்காக மகிழ்ச்சிச் சுடர் விடும் ஆனந்தக் கண்களை நான் காண்கிறேன். இதோ சிறிய வானொலிப் பெட்டியுடன் செர்யோஷா நிற்கிறான். நான்காம் வகுப்பில் சிறுவன் இதைச் செய்தான்: விடாமுயற்சியுடன் மேற்கொண்ட 3 மாத உழைப்பு பெரு மகிழ்ச்சியைப் பரிசாகத் தந்தது. மலர் நிறைந்த பீச் மரத்தருகே நிற்கிறான் ஃபேத்யா. காட்டு ஆல்பகோடா மரத்துடன் பீச் குச்சியை அவன் ஒட்டுப் போட்டிருக்கிறான். அது மலர் விடுவதற்காகவும் பழம் பழுப்பதற்காகவும் காத்திருந்தான். கால்நடைப் பண்ணையிலிருந்து சிறிய ஆட்டுக்குட்டி ஒன்றைத் தூக்கிச் சென்ற வால்யாவின் தோற்றம் என் நினைவில் பதிந்துள்ளது. பலவீனமான, மெலிந்த அக்குட்டியை அவள் பேணி வளர்த்தாள். நீலவானையும் சூரியனையும் பார்த்து வாய்நிறையச் சிரிக்கிறாள் தீனா. அவள் செந்நிற ரோஜா மலர்களைப் பார்க்கிறாள். மூன்று ரோஜாக் குச்சிகளை காட்டு ரோஜாவுடன் அவள் ஒட்டுப் போட்டதுதான் இது. அற்புத அழகுப் புதர் ஒன்றே இப்போது வளர்ந்திருந்தது. சாஷாவின் பெயரைக் கூப்பிடும் போது, சிறு கோதுமைக் கதிர்க்கட்டு தூக்கி நிற்கிற கருநிறக் கண்கள் கொண்ட சிறுவன் என் கண் முன்னே வருகிறான்; மூன்று சதுர மீட்டர்களில் அவன் விளைவித்த தானியத்தை நிறுத்துப் பார்த்த போது, ஒரு ஹெக்டர் நிலத்தில் இது போன்ற

பெரிய பெரிய தானியங்களை ஏமு டன் விளைவிக்க முடியும் என்று உறுதி கொண்டோம்... பள்ளிக் கிணற்றுக்கு அருகில் கிளைகள் அடர்ந்த ஆப்பிள் மரம் வளர்கிறது. ஒவ்வொரு ஆண்டும் இந்த மரம் மலரும் போது இளஞ் சிவப்பு வண்ணப் பூக்களின் காணற்கரிய அற்புதத்தில் மயங்குகிறேன்; வெள்ளைச் சடைப் பின்னல் கொண்ட சிறுமி இப்போது ஓடி வந்து சொல்லப் போகிறாள்: ''இது எனது ஆப்பிள் மரம்.'' ஆப்பிள் மரம் முதன் முதலில் பூ விட்ட போது இப்படித்தான் சொன்னாள் காத்யா. கோஸ்த்யா வருத்தந் தோய்ந்தவனாகவே நினைவுக்கு வருகிறான். சிறு கன்றுக் குட்டியைத் தன்னுடன் அணைத்துக் கொண்டான், கன்றுக்குட்டியோ கொஞ்சல்களுக்கு பதிலிறுக்கவில்லை-அது நோய்வாய்ப்பட்டு விட்டது.

இவ்வாறு எல்லாக் குழந்தைகளும் நினைவிற்கு வந்தனர். உழைப்பை நேசிப்பவர்களாக நான் குழந்தையைப் பார்த்தேன். இந்த நேசம் ஏதோ ஒரு அளவில் எதிர்கால வாழ்க்கைப் பாதையை முன்னதாகத் தீர்மானிக்கிறது என்று நான் ஒருசிறிதும் நினைக்கவில்லை. உயிருள்ள இயற்கை மீது மாணவன் அன்பு கொண்டு விட்டால் பழத்தோட்டத்திலோ கோதுமை பயிரிலோ செய்கிற உழைப்பு அவனுக்கு மகிழ்ச்சியைத் தந்தால் அவன் கண்டிப்பாகத் தோட்ட வல்லுனராகவோ, விவசாய நிபுணராகவோ ஆகி விடுவான் என்று அர்த்தமில்லை. மனப்பாங்குகள், திறமைகள், உளப்போக்குகள் ஆகியவை, மலருகின்ற ரோஜாப் புதர் போன்றவை. சில செடிகள் மலர் தருவது நின்று விடுகிறது, மற்றவை இப்போது இதழ் விரிக்கின்றன. ஒவ்வொரு குழந்தையிடமும் பலப்பல ஈடுபாடுகள் எப்போதும் இருக்கும். இல்லையேல் குழந்தைகளின் வளமையான ஆன்மிக வாழ்க்கையை நினைத்தும் பார்க்க முடியாது. ஆனால் ஏதோ ஒரு விஷயத்தில் ஒவ்வொரு குழந்தையும் மிகப் பிரகாசமாகத் தன்னை வெளிப்படுத்துகிறது. ஏதாவது ஒரு வகை உழைப்பில் கணிசமான அளவு குழந்தை வெற்றி ஈட்ட

வில்லை என்றால், அவன் ஒரு தனிநபராக நினைவில் நிற்ப தில்லை. ஆழமான சொந்த மகிழ்ச்சியைக் குழந்தைக்கு உழைப்பு கொடுக்கும் போது மனிதத் தனிநபர் வெளிப் படுகிறது.

எந்த உழைப்பில் மனிதன் முழுத் தேர்ச்சி பெறு கிறானே அந்த உழைப்பு தனிநபரை நிலை நாட்டுகிறது, பயிற்சியின் வல்லமை வாய்ந்த ஊற்றுக்கண்ணாக விளங்கு கிறது. தன்னை ஒரு படைப்பாளியாக உணருகிற மனி தன் இப்போது இருப்பதை விட இன்னும் சிறந்தவனாக விளங்க வேண்டும் என்பதற்காக முயற்சி செய்ய விரும்பு கிறான். குழந்தைப் பருவத்திலும், இளமைப் பருவத் தின் வாயிலில் நிற்கும் போதும் ஒருவன் தனது படைப் பாற்றலையும், படைப்புத் திறனையும் அறிந்து உணர் கிறான் என்பதை மிகைப்படுத்திக் கூற முடியாது. இவ் வாறு அறிந்து உணருவதில்தான் தனிநபர் உருவாவதின் சாரமே அடங்கியுள்ளது.

மேலே சொல்லப்பட்ட பயிற்சிச் செல்வாக்குகளின் இசைவு எனும் பிரச்சினை பற்றி ஒரு விளக்கம் தர வேண் டும். தனிநபரின் மீது செலுத்தப்படும் குறிக்கோள் கொண்ட செல்வாக்கு பலப்பல சார்புத் தன்மைகளுட னும், காரணங்களுடனும், மற்ற போதனைச் செல்வாக்கு களுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறது. இந்தச் சார்புத் தன்மைகளும் காரணங்களும் நிறை வேற்றப்படவில்லை என்றால் வெறுக்கத்தக்க ஒரு கடமை யாக உழைப்பு மாறிவிடும், மனத்துக்காகட்டும் அறிவுக் காகட்டும் அது எதையும் தராது. தனிநபரைப் பயிற்று விக்கிற பிரச்சினைகளால் ஒவ்வொரு ஆண்டும் செழு மைப் படுத்தப்பட்ட எங்கள் உளவியல் கூட்டம் மற்ற செல்வாக்குகளுடன் உழைப்பு கொண்டிருக்க வேண்டிய இசைவு பற்றி நிறையக் கவனம் செலுத்தியது. அறிவுப் பயிற்சியில் கைகள் வகிக்கும் பாத்திரம் குறித்த அறிக்கை மீது நடந்த விவாதம் குறிப்பாகச் சுவாரஸ்யம் மிகுந்த தாக இருந்தது. உழைப்புக்கும் மற்ற போதனைச் செல் வாக்குக்களுக்கும் இடையிலுள்ள பரஸ்பரச் சார்புத்

தன்மைகள், பரஸ்பரக் காரணங்கள் பற்றிய பிரச்சினை எங்கள் போதனைக் குழுவால் இன்றுவரை பயிலப்பட்டு வருகிறது.

## இளைய லெனின்வாதிகளே, நீங்களே உங்கள் நாட்டின் எதிர்கால எஜமானர்கள்

ஆரம்ப வகுப்பிலேயே எனக்கு ஒரு முதல் உதவியாளப் பெண் தோன்றினாள்—அவள்தான் 6ஆம் வகுப்பில் பயின்று வந்த மாணவியான 12வயதுப் பயனீர்ப் பெண். அக்டோபர்வாதிகளான சிறுவர்களை பயனீர்களாகத் தயார் படுத்துகின்ற பணியைத் தனக்கு அளிக்கும்படி பயனீர் குழுக் கவுன்சிலை அவள் கேட்டுக் கொண்டாள். ஒல்யா குழந்தைகளை நேசித்தாள்-இதுதான் பிரதானமானது. (அக்டோபர்வாதிகளின் குழுக்களுக்கும் பயனீர் குழுக்களுக்கும் தலைவர்களை எங்கள் பள்ளியில் நியமிப்பதில்லை; விருப்பம் இருக்கிறவர்களும், குழந்தைகளை நேசிக்கிறவர்களும் குழந்தைகளுடன் வேலை செய்யப் போவார்கள்). ஒல்யா பல காரியங்களில் எனக்கு உதவினாள்; குழந்தைகளுடன் விளையாடினாள், அவர்களுடன் காட்டுக்கும் வயல் வெளிக்கும் சென்று வந்தாள், பயனீர் வீரர்களைப் பற்றிக் கதை சொன்னாள், மாபெரும் தேசபக்தப் போரில் மக்கள் புரிந்த வீரச் செயல்கள் பற்றிச் சொன்னாள்.

இப்போது 15 வருடங்களாகத் தொடர்ந்து நடந்து வருகிற, இளம் லெனின் வாதிகளைச் சித்தாந்த ரீதியில் பயிற்றுவிப்பதில் பெருத்த பங்கு வகிக்கிற வேலையை ஒல்யா தொடங்கி வைத்தாள். எனது ஆலோசனையின் படி மாபெரும் தேசபக்தப் போரில் பங்கெடுத்துக் கொண்டவர்களைக் குழந்தைகள் முதல் முறை சந்திக்கச் செய்தாள். வீரர்கள் சொன்ன கதைகள் மிகவும் சுவையானதாய் இருந்ததால் சிறுமி அவற்றை எழுதி வைத்துக் கொண்டாள். ''மாபெரும் தேசபக்தப் போரில் நமது வட்டாரத்து வீரர்கள்'' எனும் கையெழுத்துப்

பத்திரிகையே அவள் எழுதி வைத்திருந்தவற்றிலிருந்து உருவாயிற்று. குழந்தைகளுடன் பணியாற்றும் போது ஒல்யாவும், பின்னர் பயனீர்களும் 100க்கு மேற்பட்ட கதைகளை எழுதி வைத்திருந்தனர். பத்திரிகையில் வீரர் களின் படங்கள் அச்சிடப்பட்டன. இப்போது கையெழுத்துப் பத்திரிகையில் 600 கதைகள். தாய்நாட்டின் மீது நேச உணர்ச்சியைப் பயிற்றுவிப்பதற்கு இது தெளிவான, மதிப்பிற்கரிய ஊற்றுக்கண்ணுகும்.

குழந்தைகளுடன் நிரந்தரமாகத் தொடர்பு கொண்டிருப்பது ஒல்யாவுக்கு ஒரு கடமையாக இருக்கவில்லை, அது ஒரு ஆன்மிகத் தேவையாக விளங்கியது. இந்தத் தேவையை ஒரு தலைசிறந்த திறமை என்று-மனித நேயத் திறமை என்று நான் கருதுகிறேன். இதைப் பெற்றுள்ள ஒருவர் சிறந்த போதகராக விளங்குவார், தனது உழைப்பில் அவர் பெரு மகிழ்ச்சியைக் காண்பார். பள்ளிக் குழுவில் குழந்தைகளைக் கவனமாகக் கண்காணித்து வாருங்கள், அப்போது தமது சிறிய நண்பர்களுக்கு ஏதாவது செய்து தராமல் வாழ முடியாத சிறுவர்களையும் சிறுமிகளையும் காண்பீர்கள். குறும்புகளாகவும், வம்புகளாகவும், தந்திரம் மிக்க சேட்டைகளாகவும் இந்தத் தேவை வெளிப்படும். வழிகாட்டியாக விளங்க வேண்டுமென்றும், தன் பின்னே நண்பர்களைக் கூட்டிச் செல்ல வேண்டும் என்றும் சிறுவன் விரும்புகிறுன். ஆனுல் தனது சக்தியை எவ்வாறு செலுத்துவது என்று அவனுக்குத் தெரிவதில்லை. ''கொந்தளிக்கும் இந்த ஆற்றலை அடக்கி விடாதீர்கள்'' என்று ஆசிரியர்களுக்கு ஆலோசனை சொல்லத் தோன்றுகிறது. சேட்டை செய்கிற, குறும்பு பண்ணுகிற சிறுவர்கள் உங்களுக்கு உதவியாளர்களாக விளங்கத் தகுந்தவர்கள். குழந்தைகளை உங்களிடம் நெருங்கி வரச் செய்யுங்கள், அவர்களது ஆற்றலைத் தேவையான பகுதிக்குத் திருப்பி விடுங்கள்.

இளைய லெனின்வாதிகளின் நிறுவனத்தில் சேருவதற்குத் தயார் செய்யவும், பயனீர்க் குழுவின் வாழ்க்கை முழுதும், எந்த பூமியின் விடுதலைக்காகவும் சுதந்திரத்

துக்காகவும் வீரர்கள் ஏராளமாய் ரத்தம் சிந்தினரோ அந்தப் புனித பூமியின் மீது ஆழமான நேச உணர்ச்சியை ஊட்டி வளர்க்க வேண்டும் என்பதற்காக நான் உழைத்தேன். தன் முன்னே குழந்தை எதைப் பார்க்கிறதோ, எதைக் கண்டு ஆனந்தம் கொள்கிறதோ, தனது மனத்தின் ஒரு துளியை எதில் பதிக்கிறதோ அதன் அழகில் களிப்புக் கொள்வதிலிருந்துதான் தாயகப் பற்று தொடங்குகிறது. பிறந்த மண்ணின் இயற்கை அழகுக்கும், சோவியத் மனிதனின் கைகள் படைத்தவற்றின் அழகுக்கும் நானும் ஒல்யாவும் குழந்தைகளின் கண்களைத் திறந்து விட்டோம்.

நாங்கள் ஸ்டெப்பிக்குப் போனோம். அங்கொரு குன்றின் மீது உட்கார்ந்தோம். விரிந்த கோதுமை விதைக்கப் பட்டிருந்த நிலப்பரப்பைப் பார்த்தோம். மலர்ந்திருந்த தோட்டங்களையும் ஒய்யாரப் பாப்ளார் மரங்களையும் நீலவானத்தையும் வானம்பாடியின் இசையையும் கண்டும் கேட்டும் மகிழ்ந்தோம். தாத்தாக்களும் கொள்ளுத் தாத்தாக்களும் வாழ்ந்து வந்து, நமது வாழ்க்கையை வாழ்ந்து கழிக்குமாறு விதிக்கப்பட்ட, குழந்தைகளில் நம்மை மீண்டும் வெளிப்படுத்துகிற, நம்மை ஈன்ற, கிழடுதட்டிப் போய் நாம் கலந்து விடப் போகிற அந்த பூமியின் அழகில் ஆனந்திப்பது—இது தாய்நாட்டுப் பற்றின் மிக முக்கியமான உளநெகிழ்ச்சி ஊற்றுக் கண்ணாகும். நமது வயல்வெளிகளையும் புல்வெளிகளையும் விட பிரகாசமாக இயற்கையைக் கொண்ட நாடுகள் உலகில் இருக்கின்றன. ஆயினும் பிறந்த மண்ணின் அழகு நமது குழந்தைகளுக்கு மிக அருமையானதாய் இருக்க வேண்டும். வசந்த காலத்தில் மரங்கள் வெள்ளைப் போர்வையால் போர்த்தப்படுவதையும், ஹாப் கொடிகளின் தங்க மணிப் பூக்களின் மீது தேனீக்கள் பறப்பதையும், ஆப்பிள்கள் நிறைவதையும் தக்காளிகள் சிவப்பதையும் குழந்தைகள் வெறுமே காண்பதோடு நின்று விடக் கூடாது, இவற்றையெல்லாம் ஒரு மகிழ்ச்சியாக அவர்கள் அனுபவிக்க வேண்டும், தமது ஆன்மிக

வாழ்வின் நிறைவாகக் காண வேண்டும். குழந்தைப் பருவம் பிரகாசமான, சூரிய உருவங்களாக அவர்கள் நினைவில் நிற்கட்டும். மலர்ச்சியின் வெள்ளாடை பூண்ட தோட்டம், பக்வீட் வயலின் மீது தேனீக்களின் அற்புத ரீங்காரம், தொடுவானத்தின் மீது கொக்குக் கூட்டம் பறந்து வருகின்ற கடுமையான, குளிர் நிறைந்த, இலையுதிர் காலத்து ஆகாயம், அசைந்து நடுங்கும் கானல் நீரில் நீல நிறக் குன்றுகள், செவ்வண்ணச் சூரிய மறைவு, குளத்துக் கண்ணுடியின் மீது சாய்ந்து நிற்கும் வில்லோ மரம், சாலைக்கருகே ஒய்யாரப் பாப்ளார் மரங்கள்—இவை யாவும் குழந்தைப் பருவத்து வாழ்க்கை அழகாக, மிக அருமையான விஷயங்களின் நினைவாக மறையாத முத்திரையை இதயத்தில் பதிக்கட்டும்.

பனிக்காலக் குளிர்க் காலையில் 19வயது வாலிபனை அலெக்சாந்தர் மத்ரோசவ் போராடும் வீரர்களுக்கு வழி விடுவதற்காக எதிரியின் சுழல் துப்பாக்கி மீது தனது நெஞ்சை வைத்து அடைத்திருக்கவில்லை என்றால், கொழுந்து விட்டெரியும் தனது விமானத்தை எதிரியின் டாங்கிகள் மீது நிக்கலாய் கஸ்டெல்லோ மோதியிருக்கவில்லை என்றால், வோல்கா நதியிலிருந்து எல்பா நதி வரை ஆயிரமாயிரம் வீரர்கள் தமது குருதியை வடித்திருக்கவில்லை என்றால், மலர்ந்திருக்கும் தோட்டமோ, தேனீக்களின் ரீங்காரமோ, கனிவு நிறைந்த தாயாரின் பாடலோ, உனது பாதங்களை அன்னை போர்வையால் மூடும் போது வருகின்ற விடியற்காலையின் இனிய கனவுகளோ—இவற்றில் எதுவுமே இருந்திருக்காது என்னும் சிந்தனையுடன் இந்த அழகெல்லாம் குழந்தை இதயத்துக்குள் நுழையட்டும். வாழ்க்கையின் மகிழ்ச்சியைக் குழந்தைகள் அனுபவிக்கும் போது அவர்களது உணர்வுக்கு இந்தச் சிந்தனையைத் தான் எடுத்துச் சென்றோம். இதோ இந்த இடத்தில், நாம் பிறந்த கிராமத்தில், இந்த வயல் வெளியில், இம்மரங்களுக்குக் கீழே விடுதலைக்காகவும் சுதந்திரத்துக்காகவும் நமது சோவியத் வீரர்கள் எவ்

வாறு போராடினார்கள் என்று நான் எனது மாணவர்களுக்கு எடுத்துச் சொல்கிறேன்.

வாழ்க்கையின் மகிழ்ச்சி என்பது தன்னைப் பற்றிய சுயஉணர்வின் மிகப் பிரகாசமான வெளிப்பாடு மட்டுமல்ல, சுற்றியுள்ள உலகத்தைப் பற்றிய மதிப்பீடும், தன்னைச் சுற்றிக் குழந்தை காண்கிற விஷயத்துடன் அது கொண்டுள்ள தீவிர உறவும் ஆகும் இது. சுற்றியுள்ள உலகத்தின் அழகு நமது மாணவர்களுக்குக் குழந்தைப் பருவத்தின் ஒரு மகிழ்ச்சியின்—வாழ்க்கை மகிழ்ச்சியின் ஊற்றுக்கண்ணாக இருக்குமாறு செய்வதுதான் சோஷலிசச் சமுதாயத்தில் வாழ்க்கையின் தர்க்கப் பொருத்தமாகும். எனவே ஒவ்வொரு மலரும், ஒவ்வொரு புல் தண்டும் குழந்தைக்குக் களிப்பேற்படுத்துமாறு போதகர் பார்த்துக் கொள்ள வேண்டும். அழகாய் இருக்கிறது என்பதால் மட்டுமே சுற்றியுள்ள உலகம் குழந்தைகளுக்கு அருமையானவை ஆகிவிடுமா? முதிய தலைமுறைகளிடமிருந்து குழந்தை பெறுகிற இன்பங்களின் தொகுப்பு தானே வாழ்க்கை மகிழ்ச்சி என்பது. தாயகத்தின் விடுதலைக்காகவும் சுதந்திரத்துக்காகவும் தாத்தாக்களும் கொள்ளுத் தாத்தாக்களும் சிந்திய வேர்வையையும் ரத்தத்தையும் கண்ணீரையும் பார்க்கும் போதும் உணரும் போதும்தான் சிறிய மனிதனுக்கு சுற்றியுள்ள உலகம் அருமையானதாக ஆகும். வாழ்க்கை மகிழ்ச்சியும் குடிமை உணர்ச்சிகளும் ஒன்று கலப்பதை லித்வேனியக் கவிஞர் மார்ட்சின் கியாவிசுஸ் ''குருதியும் சாம்பலும்'' என்னும் கவிதையில் கச்சிதமாக வெளியிட்டார்:

> தாய்நாட்டு நேசம் எனும் பற்றுணர்ச்சியாலே,
> துணிவு கொண்டு மிக்க புனிதமாகும் வண்ணம்,
> குழந்தை இதயத் துள்ளதனைப் புகுத்திவிடு தாயே.
> நள்ளிரவின் ஒளியிலங்கு மின்னும் மீன்கள் கூட்டம்,
> நிறைந்த நமது வானதற்கு ஊக்க மூட்ட வேண்டும்.
> அழகு மிக்கதில்லை வானம் உயர்ந்ததாயுமில்லை ஆயின்,
> அடுத்தவர்கள் வானம் போல அப்படியே இல்லை,
> உணர்ச்சியோடு குழந்தையோடு ஒன்றி விட்ட ஒருவன்,
> நெருக்கமாயவர்களோடு நெருங்கி நிற்பராமே.

வாழ்க்கை மகிழ்ச்சி அழகைக் காப்பாற்றிய மனிதர்கள் பற்றிய கடமை உணர்ச்சியுடன் ஒன்று கலக்கும் போதுதான் பிறந்த பூமி ஒருவனுக்கு எல்லையற்று இனிய தாய் விளங்கும். இவ்வாறு ஒன்று கலப்பதில்தான் இளந் தலைமுறையின் ஒழுக்க, அழகியல் பயிற்சியின் ஒற்றுமை வெளிப்படுகிறது. வாழ்க்கை மகிழ்ச்சி என்பது கலக்கம் செய்யாத ஒன்றாக இருக்கக் கூடாது. சோஷலிச சமுதாயத்தின் சுதந்திரக் குடிமகனின் மகிழ்ச்சிக்காக அனுபவித்த வேதனை, துன்பங்கள், தியாகங்கள் ஆகியவை பற்றிய கதைகளைச் சொல்லி குழந்தைப் பருவத்து மகிழ்ச்சியில் வருத்தத்தைத் தோய்க்கக் கூடாது என்று கருதுகிற போதகர்கள் கடுமையான தவறு புரிகிறார்கள்.

இலையுதிர்காலத் தொடக்கத்தின் வெய்யில் மிகுந்த நாட்கள். கனிகளின் பாரத்தால் வளைகின்றன ஆப்பிள் மரக் கிளைகள். திராட்சைக் கொடிகளில் பழுத்திருக்கின்றன கொத்துக்கள். கூட்டுப்பண்ணைக் களத்து மேட்டில் கோதுமைக் குவியல்கள் மஞ்சளாகிக் கொண்டிருக்கின்றன. நிர்மலமான. காற்றில் வெள்ளிச் சிலந்திக்கூடுகள் மிதந்து கொண்டிருக்கின்றன. நானும் ஒல்யாவும் குழந்தைகளை கிராமத்தின் ஓரத்துக்குக் கூட்டிச் செல்கிறோம். ஒரு உயர்ந்த குன்று இங்கு நின்று கொண்டிருக்கிறது. பசுமையான தர்ப்பூசணிப் பழங்களால் மூடிய பள்ளத்தாக்கு குன்றிலிருந்து பார்க்கையில் ஒரு காட்சியாகத் தெரிகிறது. அப்புறம் தோட்டம், தோட்டத்திற்குப் பின்னே ஒய்யாரப் பாப்ளார் மரங்கள், அவற்றையடுத்து ஸ்டெப்பி வெளி, பனிக்காலக் கோதுமையின் பசிய வயல்கள், தொடுவானத்தின் நீல மூட்டத்தில் தொலைதூரத்துக் குன்றுகள். மறத்தற்கரிய விநாடிகளை சிறுவர்களும் சிறுமிகளும் அனுபவிக்கின்றனர். தம் முன்னே விரிகின்ற அழகில் களிப்பு மிக்க குழந்தைப் பருவத்தின் ஒரு துளியை அவர்கள் அனுபவிக்கிறார்கள். வெகு தொலைவிலுள்ள இந்த வயல்வெளிகளிலிருந்து தந்தையும் தாயும் வருகிறார்கள். கனிவு மிகுந்த கண்களில் சூரியத் தீப்பொறியைக் கொண்டு வருகிறார்கள். நாங்கள் குன்றுகளின் மீது உட்காருகிறோம். நல்ல

தையும் தீயதையும் பற்றி நான் கதை சொல்கிறேன். நல்லது வெற்றி பெறுவது கண்டு குழந்தைகள் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

ஒரு வாரம் கழித்து நாங்கள் மீண்டும் குன்றுக்கு வருகிறோம். அற்புத இயற்கைக் காட்சியில் குழந்தைகளின் முன்னே புதிய சித்திரம் விரிகிறது: இலையுதிர்காலம் தனது முதல் வண்ணங்களைத் தூவியது. ஆப்பிள் மரங்களையும் பாப்ளார் மரங்களையும் தங்க நிறத்தால் மூடியது. குளிர் கால மரகத வயல்கள் இன்னும் பிரகாசமாயின, வானம் இன்னும் ஆழம் மிகுந்ததாக ஆயிற்று. இவ்வாறு ஒவ்வொரு வாரமும் ஒரே நேரத்தில் எங்களது இடத்துக்கு நாங்கள் வருகிறோம், அழகைக் கண்டு ஆனந்திக்கிறோம், வியத்தகு மக்கள் கதைகளில் நல்லதுக்கும் தீயதுக்கும் இடையே நடக்கிற போராட்டம் கண்டு உணர்ச்சி வசப்படுகிறோம், இலையுதிர்கால ஸ்டெப்பி வெளியின் இசைக்குச் செவி மடுக்கிறோம், சுத்தமான காற்றைச் சுவாசிக்கிறோம், வசந்த காலத்தில் இங்கு வந்து வானம்பாடியைச் சந்திக்கப் போவது பற்றிக் கனவு காண்கிறோம். இந்த ஸ்டெப்பி வெளி குழந்தைகளின் ஆன்மிக வாழ்வுக்குள் நுழைகிறது, அருமையான ஒன்றாக மாறுகிறது. இதுதான் குழந்தையின் இதயத்தில் என்றென்றைக்கும் பதிந்துவிட்ட தாய்நாட்டின் பிரகாசமான சித்திரம்.

சுற்றியுள்ள உலகத்தின் அழகைப் பற்றிய புலனறிவும் அனுபவமும் இல்லாமல் தாய்நாடு எனும் உணர்ச்சியைத் தட்டியெழுப்ப முடியாது. குழந்தைப் பருவத்து மகிழ்ச்சியை மூத்த தலைமுறையினர் எத்தகைய அரிய விலை கொடுத்து வாங்கியிருக்கிறார்கள் என்பது பற்றிச் சொல்வதற்கு முன்னால், தாய்நாட்டு இயற்கை அழகுக்குக் குழந்தைகளின் கண்களைத் திறந்து விட வேண்டும். வெகு காலத்துக்கு முந்திய குழந்தைப் பருவத்தில் மனதில் நிறைந்த ஒரு சிறு இடம் பற்றிய நினைவுகள் குழந்தையின் இதயத்தில் என்றென்றைக்குமாகத் தங்கிவிடட்டும். இந்த இடத்துடன் மாபெரும் தாய்நாட்டின் சித்திரம் தொடர்பு கொண்டிருக்கட்டும்.

இலையுதிர்காலத்து அமைதியான நாள் ஒன்றில், குன்றின் மீதிருந்த பார்வைக்கு உடனடியாகத் தெரியாத ஒரு குழியைக் குழந்தைகளுக்குக் காட்டியபடி நான் சொல்கிறேன்:

''இந்தக் குழியைப் பாருங்கள். காலம் அதனைத் தூர்த்து விட்டிருக்கிறது. புற்களாக அது வளர்ந்திருக்கிறது... அன்றொரு நாள் இன்று போலவே வெய்யில் நிறைந்த இலையுதிர்கால நாளாக இருந்தது. இந்தப் பாதையின் வழியாக தினேப்பர் நதிக்கு அப்பால் நமது ராணுவம் பின்வாங்கியது. இந்தக் குன்றுக்கு இளைஞனை இயந்திரத் துப்பாக்கி வீரன் ஒருவன் வந்தான். தினேப்பருக்குச் செல்ல விடாமல் எதிரியை இங்கேயே தடுத்து நிறுத்துவதற்காக இங்கு அவன் இயந்திரத் துப்பாக்கியை நிறுவினான். பாதையில் திடீரென்று எதிரிகளின் மோட்டார் சைக்கிள்கள் தோன்றின. அவர்களை இளைஞன் கொன்றொழித்தான். பாசிஸ்டுகள் குன்றின் மீது பீரங்கிகளால் குண்டு மழை பொழிந்தனர். அதோ தென் திசையில் தோண்டப் பட்டிருக்கிறது. பூமியின் இந்த இடத்தில் உயிர் பறிக்கும் உலோகங்கள் தூவப்பட்டிருக்கின்றன. வெடிச் சத்தம் நின்று போயிற்று. பாதையில் மீண்டும் மோட்டார் சைக்கிள்கள் தோன்றின. குன்று மீண்டும் உயிர் பெற்றது. சோவியத் வீரனின் தோட்டாக்களால் எதிரிகள் வீழ்ந்தனர். குன்றின் மீது டாங்கியை ஏவினார்கள் பாசிஸ்டுகள். இந்த மரங்களுக்கு அருகே வந்து அது தனது பீரங்கிக் குழாயிலிருந்து தீயைக் கக்கியது. வெடிச் சத்தம் நின்று விட்டது. பாதையில் மீண்டும் மோட்டார் சைக்கிள்கள் தோன்றின, குன்று மீண்டும் உயிர் பெற்றது. கையிலும், தலையிலும், மார்பிலும் வீரன் பலத்த காயம் பட்டான். ஆனால் தொடர்ந்து அவன் சமர் செய்தான். கண்களின் மீது குருதி கொட்டிற்று. பிறந்த மண்ணின் நீல வானை கடைசி முறையாகப் பார்க்கிறோம் என்று அவனுக்குத் தெரிந்தது. வெடிகுண்டு ஒன்று இயந்திரத் துப்பாக்கிக்கு அருகே விழுந்து வெடித்த பின்தான் இளைஞனின் இதயம் துடிப்பதை நிறுத்தியது. மாலையில்

கூட்டுப் பண்ணைப் பணியாளர்கள் இங்கு வந்தார்கள். குழி ஒன்று வெட்டி, குருதி வடித்த உடலை அடக்கம் செய்தனர். எதிரியின் கையிலிருந்து கிராமத்தைச் சோவியத் சேனை விடுவிக்கும் வரை இங்கு கிடந்தது இளைஞனின் சாம்பல். வீரனின் போராட்டத் தோழர்கள் குன்றுக்கு வந்தார்கள். சாம்பலைத் தோண்டி எடுத்து கிராமத்திற்குக் கொண்டு சென்றார்கள். வீரர்களின் கல்லறையில் எல்லா மரியாதைகளுடனும் அடக்கம் செய்தனர். இந்த வீரனின் பெயர் நமக்குத் தெரியாது. தனது மகன் எங்கே அடக்கம் செய்யப் பட்டிருக்கிறான் என்று அவனது அன்னைக்கும் தெரியாது.

குழந்தைகளின் இதயம் வேதனையுறுகிறது. வாழ்க்கையின் அழகும் இந்தப் பிறந்த மண்ணின் அழகும் குழந்தைகட்கு இன்னும் இனியதாகி விடுகின்றன. அந்த வீரனின் கண்களைக் கொண்டே உலகத்தைப் பார்க்கிறார்கள் குழந்தைகள். களிப்புடன் குழந்தைகள் வாழ வேண்டும் என்பதற்காகவும், வானத்தில் நட்சத்திரங்கள் மின்னிக் கொண்டிருக்க வேண்டும், புற்களும் ஆப்பிள் பழங்களும் மணம் வீச வேண்டும் என்பதற்காகவும், ஸ்டெப்பி வெளியில் வெட்டுக்கிளியின் மெல்லிய இன்னிசை மிதந்து வர வேண்டும் என்பதற்காகவும், புத்தாண்டு தின இரவில் பனித்தாத்தாவின் பரிசை தலையணைக்கடியில் அம்மா வைக்க வேண்டும் என்பதற்காகவும் அந்த வீரன் தனது உயிரை ஈந்தான்... குழந்தைகள் மௌனமாயினர். ஏராளமாக இரத்தம் சிந்தப்பட்ட அந்தப் பூமியைப் பார்க்கின்றனர். ஒவ்வொரு கல் துண்டையும், ஓட்டையும் புல் தண்டையும் தடவிக் கொடுக்க வேண்டுமென்று அவர்கள் விரும்புகிறார்கள்.

அன்றைய இரவு நேரத்தில் எனது மாணவர்களில் பலரால், அனேகமாக உறங்கியிருக்க முடியாது. வெய்யிலால் ஒளியேற்றப் பட்டதாகவோ, சண்டையில் எழுந்த புகையால் நிரம்பியதாகவோ சொந்த ஸ்டெப்பிவெளி அவர்கள் கண் முன்னே தோன்றியிருக்கும். இதயம் வேதனையுறுகிறது: இன்று அவர்கள் பார்த்துக் கொண்டிருப்

பதை, நாளையும் ஓராண்டு கழித்தும் பார்க்கப் போவதை அந்த வீரன் ஒருபோதும் பார்க்க மாட்டான். இந்தச் சிந்தனையால் அவர்கள் கண்களில் நீர் துளிர்க்கிறது, வெதுவெதுப்பான கனிவுமிக்க அன்னையின் கையைக் கனவில் காண்கிறார்கள்.

அடுத்த நாள் காலையில் பாடம் தொடங்குவதற்கு முன்னரே பள்ளிக்கு வருகிறாள் வார்யா. அவள் நேற்று எழுதிய செய்யுளைப் படித்துக் காட்டுகிறாள்:

ஓங்கி வளர்ந்தொரு குன்று ஸ்டெப்பி வெளியில்
நிற்கும்,
காலகாலம் முன்பு கூச்சலிட்டது காற்று,
ஒளிர்ந்து மகிழ்ந்தது பரிதி,
இலையுதிர் கால மூட்டம் நீந்தி மிதந்தது இங்கு.
கொடிய எதிரி ஒருவன் நம்மை நோக்கி வந்தான்.
உயர்ந்த குன்றின் மீது இளைய வீரன் நின்றான்,
எதிரி வழியை மறித்து நிமிர்ந்து நின்றான் அவனும்,
பண்டைக் குன்றின் மீது மடிந்து போனான் வீரன்.
அவன் நெஞ்சம் பிளந்தது குண்டு,
உதிரம் கொட்டிய இதயம் நடுங்கி வீழ்ந்தது நிலத்தில்
இருண்டது நீல வானம்,
இருண்ட மேகம் பின்னே ஒளிந்து கொண்டான் பரிதி
நாங்கள் வாழ நீதான் மடிந்து போனாய் ஆனால்,
உன்னை நாங்கள் என்றும் மறந்து விட மாட்டோம்,
உன் இதயம்
வீழ்ந்த இடத்தில்,
ஓக் மரத்தை நட்டு வைப்போம்.

ஒரு வாரம் கழித்து நாங்கள் அந்தக் குன்றுக்கு மீண்டும் செல்கிறோம். அந்த வீரன் யார் என்று தெரிந்த கொள்ள விரும்புகிறார்கள் குழந்தைகள். எங்கே பிறந்தவன் அவன்? எங்கே படித்தான்? அவன் அம்மா உயிருடன் இருக்கிறாரா? தாம் கேட்கின்ற, பார்க்கின்ற அனைத்தையும் தாய்நாட்டுக்காக உயிர் ஈந்த அந்த வீரனின் கண்களாலேயே அவர்கள் பார்க்கின்றனர். தமது உணர்ச்சிகளை வெளியிடுவதற்காக ஏதாவது செய்ய வேண்டும் என்று விரும்புகிறார்கள் குழந்தைகள். மரங்களிலிருந்து இலைகள் உதிர்ந்த போது, குன்றின் உச்சிக்கு நாங்கள்

ஓக் மரக் கன்று ஒன்றைக் கொண்டு வந்து நட்டோம். நல்லுணர்ச்சிகளின் மெல்லிய அலைகள் குழந்தை இதயங்களில் நடுங்கிக் கொண்டிருக்கும் போது வார்த்தைகள் எதுவும் தேவையில்லை. தாம் செய்கின்ற காரியத்தை மிகவும் ஆழமாக அனுபவிக்கிறார்கள் குழந்தைகள். குன்றின் உச்சி பசுமையடையட்டும் என்பதற்காக இந்த மரத்தை நாங்கள் நடவில்லை. அந்த வீரனுக்காக உயிருள்ள நினைவுச் சின்னம் ஒன்று எழுப்புகிறோம் நாங்கள்.

குன்றின் மீது ஓக் மரம் வளர்ப்பது கஷ்டம். இது குழந்தைகட்குத் தெரியும். ஆனால் எந்தக் கஷ்டத்திற்கும் அவர்கள் அஞ்சவில்லை. பனிக்காலத்தில் குளிர் காற்றிலிருந்து மரத்தை நாங்கள் பாதுகாக்கிறோம், வெண்பனியை அதன் மீது தூவுகிறோம். வசந்த காலத்தில் மெல்லிய புற்கள் குன்றினை மூடிவிடும் போது, மரம் தளிர் விடுகிறதா என்று பார்ப்பதற்காக தினமும் ஓடி வருவார்கள் குழந்தைகள். இது மரத்தைப் பராமரிப்பது மட்டுமல்ல— இது வீரனையே சந்திப்பது ஆகும். ஓக் மரம் பசுமையடைந்தது. அதன் ஒவ்வொரு இலையிலும் அந்தக் கடிய நாளின் மூச்சுக்காற்றை உணர்கிறார்கள் குழந்தைகள். அந்த வீரனை அடக்கம் செய்த வயோதிகர்கள் அவன் வீரச்செயல் புரிந்த நாள் எது என்று அறிய உதவுகிறார்கள். அந்த நாளை ஒளி மிகுந்த புகழ், நினைவு, துக்கம் ஆகியவற்றின் தினமாக ஒவ்வொரு ஆண்டும் நாங்கள் கொண்டாடுகிறோம். குழந்தைகள் பள்ளிக்கு அதிகாலையில் வருகிறார்கள். ஒவ்வொருவர் கையிலும் பூக்கள் இருக்கின்றன. அவற்றை உயிருள்ள மலர் வடமாக அவர்கள் பின்னுகிறார்கள், வீரன் இங்கு வீழ்ந்தான் என்று பார்த்தவர்கள் சொன்ன இடத்தில் அதனை அணிவிக்கிறார்கள்.

குன்றின் மீதுள்ள ஒரு துண்டு நிலம், தாய்நாட்டின் சுதந்திரத்தையும், விடுதலையையும் பாதுகாத்த முதிய தலைமுறைகள் புரிந்த வீரச் செயல்களின் சின்னமாகக் குழந்தைகளுக்குத் திகழ்கிறது. ''முதிய தலைமுறையினர் குருதி கொட்டிக் காத்த பூமியின் எஜமானர்கள் நீங்கள். நமது தாயகம் வளமை வாய்ந்ததாகவும் வல்லமை மிக்க

தாகவும் விளங்குமாறு நீங்கள் பார்த்துக் கொள்ள வேண்டும்''—இந்தக் கருத்தைக் குழந்தைகளுக்கு நான் ஊட்டுகிறேன்.

வெப்ப நாள் ஒன்றில் நானும் ஓல்யாவும் குழந்தைகளை ''வீரர்களின் தோட்டத்திற்கு'' அழைத்துச் சென்றோம். பாசிச ஆக்கிரமிப்புக் காலத்தில், 1941ஆம் ஆண்டு இலையுதிர்காலத்தின் இறுதியில், வீரமும் தியாகமும் நிறைந்து, பின்னர் பேரழிவாகப் போன சம்பவம் நடந்த இடத்தில் பள்ளியின் மாணவர் குழுவால் எழுப்பப்பட்ட வீரப் புகழின் நினைவுச் சின்னம் இது. கூட்டுப் பண்ணைத் தோட்டத்தை அழித்துவிட்டு போர்க்கைதிகளுக்கான முகாம் ஒன்றை பாசிஸ்டுகள் உருவாக்கினர். திறந்த வெளியில் முட்கம்பி வேலியால் அடைக்கப்பட்டு, காயம்பட்ட, பசியற்ற, ஆடையற்ற சோவியத் ராணுவத்தின் வீரர்களும் அதிகாரிகளும் 6000 பேர் மரணவாயிலில் நின்றனர். அவர்களுக்குக் குடிக்கத் தண்ணீர் கூடக் கொடுக்கப்படவில்லை. இலையுதிர்காலத்துக் குளிர் இரவுகளில் உறைந்து போயிருந்த பூமியிலிருந்த பனித்துளிகளைச் சேகரித்துப் பருகினர், புல்லைத் தின்றனர். டஜன் கணக்கான போர்க்கைதிகள் தினமும் இறந்து கொண்டிருந்தனர். இவ்வாறு எல்லோரும் சாகட்டும் என்று கொடூர குணத்தினராய்க் காத்திருந்தனர் பாசிஸ்டுகள். பின்னர் அருகே இருந்த விமான வெடிகுண்டுகளின் கிடங்கைத் தகர்த்துவிட்டு, ''அவர்கள் தமது மக்களின் மீதே விமானத்திலிருந்து குண்டு பொழிந்தனர்'' என்று சோவியத் ராணுவத்தின் மீது குற்றம் சாட்டலாம் என்று நினைத்திருந்தனர்.

எல்லோரும் ஓடி விடுவதற்காக ஏற்பாடு செய்வதற்கென சோவியத் தேசபக்தர்கள் ஒரு ரகசிய நிறுவனத்தை அந்த முகாமில் ஏற்படுத்தி இருந்தனர். காற்றிலும் மழையிலும் ஆயிரக் கணக்கானோர் நடுங்கிக் கொண்டிருந்த குளிர் மிகுந்த ஒரு இரவு நேரத்தில் முட்கம்பி வேலியை நோக்கி 20 இடங்களின் வீரர்களும் அதிகாரிகளும் ஊர்ந்து வந்தனர். அவர்கள் சாவை நோக்கிச் சென்றனர். கம்பியின் மீது அவர்கள் படுத்துக் கொண்டனர். அவர்களின்

உடல் வழியாக ஏறி பலப்பல கைதிகள் ஸ்டெப்பிக்குத் தப்பி ஓடினர். நாலாயிரத்துக்கு மேற்பட்டோர் கூட்டுப் பண்ணை விவசாயிகளிடம் தஞ்சம் புகுந்தனர். ஹிட்லர் வாதிகளாலோ, போலீஸ் துரோகிகளாலோ அவர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மரண வாயிலில் நின்ற 4000 பேர் மீண்டும் கைகளில் ஆயுதந் தாங்கி தாய்நாட்டுக் காவல்படையில் சேர்வதற்காக இங்ஙனம் 400 பேர் தமது உயிரை ஈந்தனர்.

''இந்த இடம் ஒரு மலர்ப் பூங்காவாக, வீரர்களுக்கு ஓர் உயிருள்ள நினைவுச் சின்னமாக இருக்கட்டும்'' என்று கிராமத்தை விடுவித்த பின் பள்ளி மாணவர்கள் முடிவு செய்தனர். பொட்டல் வெளிகளைச் சுத்தம் செய்தனர், பள்ளங்களைத் தூர்த்தனர். அங்கு தமது நண்பர்களைக் காப்பாற்றுவதற்காக உயிர் தந்த வீரர்களுக்கு 400 உயிருள்ள நினைவுச் சின்னங்களாக, 400 ஓக் மரங்களை நட்டனர். ஓக் மரங்கள் ஓங்கி வளர்ந்தன. வீரச் செயல்கள் பற்றிய கதை வாழையடி வாழையாக வந்தது. ஓக் மரச் சோலை உருவாக்கப்பட்ட சில ஆண்டுகள் கழித்து பயனீர் கழகத்தில் சேருகின்ற மாணவர்கள் ஒவ்வொருவரும் ஓர் ஓக் கன்றை சோலையருகே நட்டனர். முட்கம்பியின் மீது குருதி கொட்டி உறைந்த இடத்தில், இதயச் சாம்பல் பூமியில் கலந்த இடத்தில் மிக நீண்ட காலம் உயிர் வாழும் மரங்கள் உயர்ந்து வளரட்டும். ஒவ்வொரு பயனீர் மாணவனும் ஒரு மரம் நட்டான். இது ஒரு மரபு ஆகிவிட்டது: பயனீர் கழகத்தில் சேரும் போது ''வீரர்களின் தோட்டத்தில்'' மாணவன் ஓர் ஓக் மரக் கன்று நடுகிறுன்.

இங்கு நாங்கள் குழந்தைகளுடன் வந்தோம். வீரர்களின் துணிவுச் செயல்களைப் பற்றி ஒல்யா சொன்ஞள். தான் நட்டுவைத்த ஓக் மரக் கன்றை அவர்களுக்குக் காட்டிஞள். தாம் பயனீர் கழகத்தில் சேருகின்ற நாளுக்காக ஆவலுடன் காத்திருந்தனர் குழந்தைகள்.

வந்தது வசந்தம். லெனின் நினைவுநாளுக்கு[1] இன்னும்

---

[1] 1870 ஏப்ரல் 22ஆம் நாள் லெனின் பிறந்தார். இந்த நாள் ஒவ்வொரு ஆண்டும் லெனின் நினைவு நாளாகக் கொண்டாடப்படுகிறது.

சில வாரங்களே இருந்தன. அன்று இளம் லெனின்வாதி களைப் பயனீர்க் கழகத்தில் சேர்ப்பதற்கான பயனீர்க் குழுவின் கூட்டம் நடக்கும். நாங்கள் மீண்டும் ''வீரர் களின் பூங்காவிற்கு'' வந்தோம். ஒவ்வொரு குழந்தையும் ஓர் ஓக் மர நாற்று, மண்வெட்டி, சத்து மண் நிறைந்த கூடை ஆகியவற்றைக் கொண்டு வந்தது. நாற்றுகளை நட்டுத் தண்ணீர் ஊற்றினர். இங்கு, வீரச் செயல்கள் நடந்த புனித இடத்தில் ஏப்ரல் 22ஆம் நாள் புதிய தோழர்கள் பயனீர்க் கழுத்துப் பட்டைகளை அணி வித்தனர். சோஷலிசத் தாய்நாட்டின் விசுவாசமான தேச பக்தர்களாய் இருப்பதாக இளைய லெனின்வாதிகள் உறுதி மொழி எடுத்துக் கொண்டனர்.

வருடத்தில் சில தடவை ''வீரர்களின் தோட்டத் திற்கு'' நாங்கள் சென்று வந்தோம். இளையுதிர் காலத் தின் தொடக்கத்தில் மரங்களிலிருந்து காய்ந்த குச்சிகளை யும் பழுப்புக்களையும் அகற்றினோம். கடுங்குளிர் தாக்கிய தால் காய்ந்து போன மரங்களுக்குப் பதிலாக வேறு கன்று கள் நட்டோம். இலையுதிர் காலத்தின் இறுதியில், வீரர் கள் துணிகரச் செயல்களை நிகழ்த்திய நாளில் பயனீர்க் குழுக்களை இங்கு கூட்டினோம். முட்கம்பி வேலி இடப் பட்டிருந்த இடத்தில் ஒய்யாரமான ஓக் மரங்கள் வளரு கின்றன. கடுமையான மௌனத்துடன் நடக்கிறார்கள் குழந்தைகள். ஒவ்வொரு குழந்தையும் மரத்துக்கடியில் பூக்களை வைக்கிறது. அன்று ரத்தத்தால் சிவந்த பூமியில் இன்று செஞ்சாமந்திகளும், கிரிசாந்திம மலர்களும் தீச்சுடர் விடுகின்றன.

மிகவும் மகிழ்ச்சிகரமான நாட்களிலும் ''வீரர்களின் தோட்டத்திற்கு'' நாங்கள் சென்று வந்தோம். தொலை தூரத்துக்கு உல்லாசப் பயணம் போகிற போது, கோடை விடுமுறைக்கு முந்தி இங்கு வருவோம். இந்தப் புனித பூமியில் எப்போதும் மௌனம் குடியிருக்கும். இங்கு ஓட வோ, விளையாடவோ, கூச்சலிடவோ கூடாது. இவ்விடம் இயற்கையின் அழகு கண்டு ஆனந்திக்கலாம், ஒய்வு கொள் ளலாம், படிக்கலாம். மாபெரும் தேசபக்தப் போரில்

உயிர் நீத்த தந்தையர் பெற்ற சிறுவர்களும் சிறுமிகளும் இங்கு வந்து செல்கிருர்கள். எங்கோ வடமுனைச் சமுத்திரத்தின் கரையிலோ, அல்லது கர்பாத்திய மலைகளிலோ இருக்கிற கல்லறையில் அடக்கம் செய்யப்பட்ட தந்தையின் சமாதிக்காக இங்கு பையன் தலை தாழ்த்துகிருன். சோவியத் மக்களுக்காக சூரியனையும், மலர்களையும், விடுதலை உழைப்பையும் தமது உயிர் தந்து காத்துத் தந்த வீரர்களின் கதைகள் பரம்பரை பரம்பரையாகச் சொல்லித் தரப்படுகின்றன.

குன்றின் மீது மேலும் மேலும் உயர்ந்து வளர்கிறது ஓக்கன்று. நீல வானத்தை நோக்கித் தனது கிளைகளைப் பெருமிதத்துடன் கொண்டிருக்கிற மரத்தை வயது வந்த மனிதன் பார்ப்பான். அவனது இதயம் இன்னும் வேகமாகத் துடிக்கும் தாய்நாடு அவனுக்கு இன்னும் நெருக்கமான உறவினனுகவும், மதிப்பிற்கரியதாகவும் ஆகும்.

பதிற்றுக் கணக்கான வருடங்கள் கடந்து போகும். வரலாறு காணுச் சமரில் பங்கெடுத்துக் கொண்டவர்கள் மறைந்து போவார்கள். பாசிச அடிமைத்தனத்தின் பயமுறுத்தலிலிருந்து மனித குலத்தைக் காப்பாற்றியவர்களை வியப்புடனும் நன்றியுணர்ச்சியுடனும் புதிய தலைமுறைகள் நினைவு கூறும்.

நெருப்புக்களின் தகதகப்பு, வெடிகுண்டுகளின் சிதறலால் உயிர் துறப்பவர்களின் முனகல்கள், பாசிச ஜெர்மனியின் கடுங்காவல் முகாமிற்கு ஓட்டிச் செல்லப்படுகிறவர்களின் அழுகைகள், போர்முனைக்குச் செல்கிற தந்தையரின் இறுக்கமான அரவணைப்புகள், வீரமரணம் அடைந்த கணவன், தந்தையின் சவ அடக்கம் பற்றிய செய்தி வந்து பெண்கள் கதறுவது ஆகிய,போர் கொண்டு வந்த எண்ணற்கரிய துன்பங்களையும் கொடுமைகளையும் நாம் ஒருபோதும் மறக்கக் கூடாது... வீழ்ந்து விட்ட வீரர்களின் நினைவுச்சின்னத்துக்கு இளைய தலைமுறையினர் அடித்தளம் நிறுவ வேண்டும். நாங்கள் இப்போது கல்வி கற்று வருகிற பள்ளி இருக்கிற இடத்தில், ஆக்கிரமிப்புக் காலத்தில்,ஜெர்மனியின் கடுங்காவல் முகாமுக்கு ஓட்டிச்

செல்லப் படுகிற சோவியத் வாலிபர்களுக்கும் இளம் பெண்களுக்கும் சிறை முகாம் கட்டப்பட்டிருந்தது. குழந்தைகளே நீங்கள் இதை ஒருபோதும் மறந்து விடக் கூடாது. நீங்கள் பெரியவர்களாவீர்கள். உங்களுக்குக் குழந்தைகள் பிறக்கும். எதிரிகளின் மீது வெறுப்புணர்ச் சியை, தொடர் ஓட்டத்தில் ஓடுவது போல அவர்களிடம் தாருங்கள்.

போருக்கு முன்னல் எங்கள் கிராமத்தில் 5100 பேர் வசித்தனர். எங்கள் கிராமத்தவர்கள் 837 பேர்—785 ஆண்கள், 52 பெண்கள்—மாபெரும் தேசபக்தப் போரில் வீர மரணம் எய்தினர். போர்முனையிலிருந்து திரும்பி வராத இந்த 837 பேரைத் தவிர,69 பேர் பாசிசக் கொலை முகாம்களில் கொல்லப்பட்டனர். பசியாலும், கொடுமை யான சித்திரவதைகளாலும் அவர்களைக் கொன்று சுடு காடுகளில் தகனம் செய்தனர். பாசிசக் கொலைகாரர்கள் இவ்வாறு சாம்பலை விலை கூறினர். இது உங்கள் சகோதர சகோதரிகளின், தாய் தந்தையரின் சாம்பல். புச்சென் வால்டுக் கொலை முகாமிற்கு அருகில் உள்ள வெய்மர் கிராமச் சுற்றுவட்டார நிலத்திற்கு விவசாயிகள் இச்சாம் பலை உரமாக இட்டனர். குழந்தைகளே, உங்கள் சகோதர சகோதரிகள், தந்தையர், தாத்தாக்களின் சாம்பல் உங் கள் நெஞ்சத்தைத் தீண்டட்டும். உங்களது குழந்தை களின், பேரன்மாரின் நெஞ்சங்களையும் இது தீண்டட்டும். நமது கிராமத்திலிருந்து 276 சிறுவர்களும் இளைஞர்களும் இளம் பெண்களும் ஜெர்மானிய பாசிசக் கடுங்காவல் முகாமுக்கு ஓட்டிச் செல்லப்பட்டனர் என்பதை ஒருக் காலும் மறக்காதீர்கள். இவர்களில் 194 பேர் கொலை முகாம்களில் கொல்லப்பட்டனர். பசியாலும் சக்திக்கு மீறிய வேலையாலும் அவர்கள் மாண்டு போனார்கள். இவர் களில் சிலர் சுடுகாடுகளில் உயிருடன் கொளுத்தப் பட் டனர். போகூம் நகரத்திற்குக் கொண்டு செல்லப்பட்டு சீர் குலைவு வேலை செய்தான் என்பதற்காக பாவெலின் அண் ணனது கண்களை, தகிக்கும் நெருப்புக் கம்பியால் சுட்டுப் பொசுக்கினார்கள். பின்னர், அவனை மரக் கம்பத்தின் மீது சேர்த்து வைத்து ஆணி அறைந்து கொன்றார்கள். பாசிசக்

காட்டேரிகள். கம்யூனிசப் பிரச்சாரம் செய்தாள் என் பதற்காக தான்யாவின் அக்காவை உயிரோடு புதைத் தார்கள். கோஸ்த்யாவின் மாமாவை இரும்புக் கூட்டுக் குள் போட்டு அடைத்தனர். அங்கே அவர் நிர்வாணமாகப் பலநாள் துடித்துக் கொண்டிருந்து, சித்திரவதைகளால் பின்னர் மாண்டார். ஓடிப் போக முயன்றதற்காக யூரா வின் ஒன்று விட்ட சகோதரனை காவல் நாய்கள் கிழித் தெறிய விட்டனர் வால்யாவின் ஒன்று விட்ட சகோதரி யிடமிருந்து கைக்குழந்தையைப் படுங்கிய பாசிஸ்டு அதி காரி, தாயாரின் கண்களுக்கு முன்னுலேயே அக்குழந்தை யின் தலையை பாறையில் மோதி நொறுக்கினுன். இருபத்தி ஆறு வயதுப் பெண்மணியான லூஸ்யாவின் அத்தையை அவரது இரு குழந்தைகளுடன் அஸ்வென்சிம் எனும் பாசிச முகாமுக்கு அனுப்பினர். பெண் குழந்தைக்கு நான்கு வயது, ஆண் குழந்தைக்கு மூன்று வயது. முகாமில் குழந் தைகளைத் தாயாரிடமிருந்து பிடுங்கிக் கொண்டனர். பாசிஸ்டு அதிகாரியிடம் பெண்மணி சொன்னுர். ''அவற் றுக்கு உடல்நலமில்லை. அவை என்னிடமே இருக்கட்டும். உங்களை வேண்டிக் கேட்கிறேன்''. பாசிஸ்டு கத்தினுன்: ''அவற்றுக்கு நோயா, நாங்கள் சிகிச்சை செய்கிருேம்...''. பித்துப் பிடித்த தாயாரின் கண்களுக்கு முன்னே, ஆடை யற்ற குழந்தைகளைப் பாறையின் மீது ஓங்கி மோதினுன். பின்னர் குழந்தையுடல்களைத் தனது லாடம் பூண்ட பூட்ஸ் கால்களால் மிதித்துக் துவைத்தான்...

''இதனை நாம் ஒருபோதும் மறந்து விடக் கூடாது என்பது மட்டுமின்றி மனித குலத்தின் மனச் சாட்சியை வருகின்ற தலைமுறைகள் அனைத்துக்கும் ஒரு தொடர் ஓட் டம் போல இதனை வழங்கி விட வேண்டும்'' என்று நான் குழந்தைகளிடம் சொன்னேன். சோவியத் தாயகத்தின் விடுதலைக்காகவும் சுதந்திரத்துக்காகவும் போராடி வீழ்ந்து விட்டவர்களின் உருவப்பட காலரி ஒன்றை எங்கள் கிரா மத்தின் வீரர்கள் நினைவகத்தில் அமைப்பது என்று நாங் கள் கூட்டாக முடிவு செய்தோம். மூன்றும் கல்வியாண் டின் இறுதியிலும் நான்காம் ஆண்டின் தொடக்கத்திலும்

கிராமத்தில் வாழ்கிறவர்களின் குடும்பங்கள் அனைத்துக்கும் குழந்தைகள் விஜயம் செய்தனர்.

பாசிசக் கொலை முகாம்களில் போராடியும் சித்திரவதைப் பட்டும் உயிர் நீத்த வீரர்களின் புகைப்படங்களை அவர்களது அன்னையர் வழங்கினர். சிறு புகைப்படங்களிலிருந்து பெரியதாக வரையப் பட்ட உருவப்படங்களை "புகழ், துக்க அறையில்" நாங்கள் மாட்டினோம். இது வீரர்களது நினைவகத்தின் ஒரு தொடக்கமே. மாணவர்களின் புதிய தலைமுறைகள் இதனை படிப்படியாக முழுமைப் படுத்தும்—இத்தகைய குறிக்கோளை நாங்கள் முன்வைத்துக் கொண்டோம். இது எங்கள் கடமை. பூமியில் ஒருபோதும் இனி போர் வரக் கூடாது என்றும், மக்களினங்கள் சகோதரர்களாக விளங்க வேண்டும் என்றும், சமாதானத்திற்காகவும் சந்தோஷத்திற்காகவும் குழந்தைகள் பிறக்க வேண்டுமே தவிர போருக்காகவும் அழிவுக்காகவும் அல்ல என்றும், பாடுபட்டு இக்குறிக்கோளை நிறைவேற்ற வேண்டும். உலகம் முழுதும் உள்ள மக்களினங்களுக்காக நாம் செய்ய வேண்டிய கடமை இது: பாசிசக் கொடுமைகள் ஒருபோதும் மீண்டும் தலையெடுக்கக் கூடாது என்பதற்காக நாம் நடந்த எதையும் மறக்கவோ மன்னிக்கவோ கூடாது.

ஓர் உல்லாசப் பயணத்தின் போது தினேப்பர் நதியின் உயர்ந்த கரையில் இரவைக் கழித்தோம். அப்போது பள்ளத்தில் உள்ள நீரூற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வருவதற்காகப் பல முறை குழந்தைகள் இறங்கிச் சென்றனர். வழியில் கிடந்த பாறைத் துண்டு ஒன்றை கடப்பதற்காக அவர்கள் வட்டமாகச் சுற்றி நடந்து செல்ல வேண்டியிருந்தது.

"இந்தப் பாறை இங்கே ஏன் கிடக்கிறது?" என்று குழந்தைகள் ஆச்சரியப்பட்டனர். "அதை ஏன் மனிதர்கள் சுற்றிச் செல்கிறார்கள்? புதர்களுக்குள் தள்ளி விட்டால் என்ன?" நல்லுணர்ச்சி தந்த உளத் தூண்டுதல்களால் பாறையை உருட்டி விட்டு வழியைத் திறந்து விட்டார்கள் குழந்தைகள். காலையில் ஒரு முதிய செம்படவர் எங்களிடம் வந்தார். அந்தப் பாறை எங்கே என்று கேட்டார்.

அவர் தங்களைப் புகழப் போகிறார் என்று குழந்தைகள் நினைத்தனர். ஆனால் தலையை ஆட்டி விட்டுத் தாத்தா சொன்னார்: ''இந்தக் கல் இங்கு பல்லாண்டுகளாகக் கிடந்து வருகிறது. இந்த இடந்தான் இதற்கு ஏற்றது...''— பின்னர் சோவியத் ஒற்றர்கள் மூவரின் வீரச் செயல்கள் பற்றிச் சொன்னார். தினேப்பருக்காக நடந்த மாபெரும் சண்டையின் போது ஆற்றைக் கடந்து வந்த அவர்கள் பாறைக்குப் பின்னால் இயந்திரத் துப்பாக்கிகளுடன் படுத்து, அதிக பலம் வாய்ந்த ஆக்கிரமிப்பாளர்களான எதிரிகளுடன் ஒரு நாள் முழுதும் சமர் புரிந்தனர். பாசிஸ்டு கள் பீரங்கிகளையும் கனரகப் பீரங்கிகளையும் சண்டை யில் ஈடுபடுத்தினர். சில மணி நேரம் வெடிகுண்டுகள் வெடித்துச் சிதறின. ஆனால் எட்டமுடியாத கோட்டை யாகப் பாறை நின்றது. இரவு நேரத்தில் நமது ராணு வம் ஆற்றைக் கடந்து வந்து ஒற்றர் வீரர்களைக் காப்பாற்றி யது. தோட்டாக்களாலும் இரும்புத் துண்டுகளாலும் காயம் பட்டு ரத்தம் தோய்ந்தவர்களாக, ஆனால் வெல்லப்படாதவர்களாக கல்லுக்கடியில் கிடந்தார்கள் வீரர்கள். தினேப்பருக்கு அப்பால் உள்ள மருத்துவ மனைக்கு ஒற்றர்களை அனுப்பிவைத்தனர். அவர்கள் பெயர் யாருக்கும் தெரியாது. இந்தப் பாறைத்துண்டு தான் அவர்களின் வீரச் செயலுக்கு நினைவுச் சின்ன மாகத் திகழ்கிறது. பாறையிடம் நெருங்கிச் சென்றார்கள் குழந்தைகள். நீண்ட நேரம் அதன் முன் நின்றனர். புதர் களிலிருந்து பாறையை மீண்டும் உருட்டி வந்து, முன்னர் இருந்த இடத்திலேயே அதனை அமர்த்தினர். இப்போது தான் பாறைத் துண்டு தோட்டாக்களாலும் இரும்புத் துண்டுகளாலும் துளைக்கப் பட்டிருந்ததைக் கண்டார் கள். சுற்றியுள்ள நிலத்தில் பாறையின் பல துண்டு களைக் கண்டெடுத்தனர். ஒவ்வொரு குழந்தையும் நினைவுக் காக ஒரு துண்டை எடுத்துக் கொண்டது.

அந்த வினாடி முதல் இளைய பயனீர்கள், போற்றற்குரிய அந்தக் கல்லை, சுற்றிக் கடந்தே சென்று வரலாயினர். குன் றின் உச்சியில் இருந்த ஓக் மரத்தையும், ''வீரர்களின் தோட்டத்தையும்'' போல இந்த சாம்பல் நிறப் பாறைத்

துண்டும் இளம் இதயங்களில் உயர்ந்த நாட்டுப் பற்று உணர்ச்சிகளைத் தூண்டி விடுகிற வீரச் செயலின் அழகுச் சின்னமாக விளங்கலாயிற்று.

தனது தந்தையர், தாத்தாக்களின் வீரச் செயல்களைக் குழந்தைப் பருவத்தில் ஒருவன் எப்படி அணுகுகிறான் என்பதைப் பொறுத்தே அவனது ஒழுக்க உருவமும், சமுதாய நலன்கள், தாய் நாட்டின் நன்மைக்காக நல்கும் உழைப்பு ஆகியவற்றுடன் அவன் கொண்டுள்ள உறவும் இருக்கும். இன்று நாம் உழைக்கிற இந்த மலையின் மீது ஒரு வீரன் தனது குருதியைக் கொட்டினான் என்ற சிந்தனை குழந்தையின் இதயத்தை வேகமாகத் துடிக்கச் செய்ய வேண்டும் என்பதற்காக நான் முயன்றேன். தாய்நாட்டின் நன்மைக்காகப் பிறந்த மண்ணில் உழைப்பு நல்குவது தான், எந்த மகத்தான இன்பத்துக்காக மரணச் சமருக்கு மனிதர்கள் சென்றார்களோ அந்த இன்பமாகும் என்னும் மனவுறுதியை உணர்ச்சிகள் நிலைநாட்டுகின்றன. குழந்தை இதயத்தின் அந்தரங்கப் பகுதியில் மனச்சாட்சியின் தூண்டு தல் தட்டியெழுப்பப் படுகிறது: ''ஒளிரும் சூரியனுக்கும் கீழே நீ செல்கிறாய், நீல வானத்தை நிமிர்ந்து பார்க்கிறாய். இதற்குக் காரணம், பிர்ச் மரங்களுக்கும் பாப்ளார் மரங்களுக்கும் கீழே, ஓக் மரங்களுக்கும் ஆப்பிள் மரங் களுக்கும் கீழே உனக்கு உயிரையும் ஒளியையும் காத்துத் தந்தவர்கள் படுத்திருக்கிறார்கள் என்பதே ஆகும்.

இந்தக் குரல், ''பிறந்த மண்ணின் எதிர்கால எஜமா னர்கள் நீங்களே'' என்று இளைய லெனின்வாதிகளுக்கு நினைவு படுத்துகிறது. முதிய தலைமுறையினர் உருவாக்கிய பொருள்வகை ஆன்மிகச் செல்வங்களுக்குத் தாமே எஜ மானர் என்ற உணர்ச்சிதான் குடிமகனின் முதிர்ச்சிக்கு ஆணிவேர் ஆகும். ஒளி மிகு சூரியனையும், நீல நிற வானத் தையும் குழந்தைகளுக்காகக் காத்துத் தந்த மனிதர் களுக்குச் செலுத்த வேண்டிய கடமை என்பதன் பேரால் குழந்தைகளுக்கு உழைப்பின் உற்சாகத்தைத் தருவது எப்படி என்று நானும் ஓல்யாவும் யோசனை செய்தோம். ஒருநாள் குழந்தைகள் தமது வயல்வெளிக்கு வந்தனர்.

சில நூறு கிலோகிராம் சத்து மண்ணை, சத்தற்ற ஒரு சிறு நிலத் துண்டுக்குக் கொண்டு செல்ல வேண்டியிருந்தது. ஒருபோதும் ஒன்றுமே வளர்ந்திராத அந்த நிலத்தில் கோதுமைப் பயிர் கதிர் விடச் செய்ய வேண்டியிருந்தது. உழைப்பு எளிதாக இருக்கவில்லை. வேலை தொடங்குவதற்கு முன்னுல், 1943ஆம் ஆண்டு வோல்கா நதிக்கரையில் நடந்த மாபெரும் சமரில் உக்ரேனியக் கம்சமோல் இளைஞன் மிகயீல் பானிகாகோ புரிந்த வீரச் செயல் பற்றி ஓல்யா எடுத்துச் சொன்னுள்.

பாசிச டாங்கிகளுக்கு வழி மறித்து நின்ற காப்பகழில் 19 வயது வாலிபன் நின்று கொண்டிருந்தான். எதிரியின் டாங்கி காப்பகழை நோக்கி வந்தது. எரிபொருள் கலவை நிறைந்த சீசாவை டாங்கியின் மீது வீசுவதற்காகக் கை ஓங்கினுன் இளைஞன். அந்த விஞடி தோட்டா ஒன்று,உயர்ந் திருந்த சீசாவை உடைந்து சிதறச் செய்தது. திரவம் தீப் பிடித்துக் கொண்டது. ஆடையின் வழியாக முகத்திற்கு வந்தது நெருப்பு. எரிந்து கொண்டிருந்த அந்த மனிதத் தீப்பந்தம் நெருப்பையும் புகையையும் தன் பின்னே பறக்க விட்டபடி எழுந்து நின்று டாங்கியை நோக்கி நெருங்கி வந்தது. மிகயீலின் கை கடைசி வரை சீசாவைப் பிடித் திருந்தது. இதோ எதிரி இயந்திரத்தின் விளிம்புக்கு வந்து விட்டான் அவன். டாங்கியின் உச்சியை நோக்கி ஓங்கி அடித்தான் சீசாவை. டாங்கி பற்றி எரிந்தது, சுழன்று நின்றது. டாங்கி வெடித்துச் சிதறுவதற்கு ஒரு கணம் முந்தி உயர்ந்து நின்ற மிகயீல், பற்றியெரிந்த நெருப்புக் கையை உயர்த்தி ஓங்கிக் குரல் எழுப்பினுன்.சண்டையைத் தொடங்குமாறு விடுத்த அந்த அழைப்பை வீரர்கள் கேட் டனர். காப்பகழ்களிலிருந்து வெளியேறி, எதிரிகளை வீழ்த்தி, வீதியைக் கைப்பற்றினர்.

இந்தக் கதை குழந்தைகளை அடியோடு உலுக்கி விட் டது. அந்த வீரன் குழந்தைகளின் அருகே இக்கணம் நிற் கிறுன். உயிருள்ளவஞய்ச், சிரஞ்சீவியாய் நிற்கிற அவன் சொல்கிறுன்: ''இது போன்ற நமது ஒரு துண்டுப் புனித பூமிக்காகத்தான் நான் உயிர் துறந்தேன். இதில் விளைகிற

கோதுமையையோ. முட்செடியையோ ஒருவன் அலட்சியப் படுத்தலாமா?'' இந்த வினுடியில் ஒவ்வொரு இதயத்திலும் மனச்சாட்சியின் குரல் பேசத் தொடங்கிற்று: ''அலட்சிய மாக இருக்கக் கூடாது''.

ஒவ்வொரு முறையும் குழந்தைகள் வேலே செய்யத் தொடங்கும் போது வீரச் செயல்கள் பற்றி அவர்களுக்குச் சொல்ல வேண்டும் என்று நான் எண்ணவே இல்லே. ''நீ சோம்பேறித்தனப் பட்டால், செய்ய வேண்டிய வண்ணம் ஒரு காரியத்தைச் செய்யவில்லே என்ருல் தாய் நாடு பற்றிய கடமையை நீ சரிவரச் செய்யவில்லே'' என்னும் எண்ணத் தைக் குழந்தையிடம் ஊட்டக் கூடாது. கடமை உணர்ச்சி என்பது ஒரு புனித உணர்ச்சி. இதனைக் குழந்தை தனது இதயத்தில் கவனமாகக் காத்து வர வேண்டும். அதே நேரத்தில் வீரச் செயலானது வாழ்வதற்குக் கற்றுத் தர வும், குடியுரிமையின் ஆரம்ப நம்பிக்கைகளேக் குழந்தை உணர்வில் தட்டியெழுப்பவும் வேண்டும். செய்யப் போகிற வேலேயுடன் தொடர்போ,அறிவுறுத்தலோ இன்றி மிகயீல் பானிகாகோவின் வீரச் செயல் பற்றி எடுத்துச் சொல்லுமாறு ஒல்யாவிற்கு நான் ஆலோசனே சொன் னேன். பிறந்த மண்ணின் சிறு துண்டு நிலத்தை ஒரு குடி மகனைப் போலக் குழந்தை பார்க்கட்டும்.

## இளேய லெனின்வாதிகள் நிறுவனத்தில் குழந்தைகள் சேர்கின்றனர்

*1955*ஆம் ஆண்டு, மூன்ரும் வகுப்பு முடிவதற்குச் சில நாட்கள் முன்பு, லெனின் பெயர் கொண்ட பயனீர் நிறுவனத்தில் சேர்ந்தார்கள் குழந்தைகள். கம்சமோல் கமிட்டி ஒல்யாவை பயனீர் பிரிவின் தலேவியாக நிய மித்தது. அவள் எட்டாம் வகுப்பில் அப்போது பயின்று வந்தாள்.

ஏப்ரல் 22ல் ஸோயா கஸ்மதெமியான்ஸ்கயாவின்[1]

---

[1] ஸோயா கஸ்மதெமியான்ஸ்கயா — மாபெரும் தேசபக்தப் போரில் பங்கு கொண்ட வீரப் பெண்மணி. சோவியத் கொரில்லா வீரர். பாசிஸ்டுகளால் சித்திர வதை செய்து கொல்லப் பட்டார்.

பெயர் கொண்ட பயனீர்க் குழுவின் விழாக் கூட்டம் லெனின் நினைவு நாளை வழக்கம் போல் கொண்டாடியது. இதற்கு வெகு நாட்களுக்கு முன்னதாகவே, ஓல்யாவும் அவளது நண்பர்களும் பயனீர்க் குழுவில் சேர்வதற்காகக் குழந்தைகளைத் தயார்படுத்தி வந்தனர். லெனின் நிறுவிய கட்சியின், கம்சமோல், பயனீர் குழுக்களின் வீரஞ் செறிந்த வரலாறு பற்றிக் குழந்தைகளுக்கு எடுத்துச் சொல்லி வந்தனர்.

''எவருடைய வீரச் செயல்கள் உங்களுக்கு மிக அதிகமாக உத்வேகமூட்டுகின்றனவோ அவரது பெயரை உங்கள் பயனீர்ப் பிரிவு தாங்கி நிற்கட்டும்'' என்று ஓல்யா குழந்தைகளிடம் சொன்னாள். குழந்தைகள் ஒரே குரலில் சொன்னார்கள்: எங்கள் பிரிவு ஸ்டாலின்கிராடு போர் வீரனை மிகயீல் பானிகாகோவின் பெயரைத் தாங்கி நிற்கும்.'' எங்கள் பிரிவின் முழக்கம் ''லெனினைப் போலப் போராடுவது, வெற்றி பெறுவது.'' எங்கள் சின்னம் ஓக் இலைகளும், ஓக் விதைகளும். தாய்நாட்டின் இயற்கை செழிப்புற வேண்டும் என்பதற்காக நாங்கள் போராடுவதை இது குறிக்கும்.

மாணவர்களைத் தவிர, பெற்றோர்களும், மாபெரும் அக்டோபர் புரட்சியில் பங்கெடுத்துக் கொண்டவர்களும், கொரில்லா இயக்கம், உள்நாட்டுப் போர் ஆகியவற்றில் பங்கு கொண்ட முதிய வீரர்களும், இளம் கம்யூனிஸ்டுகளின் நிறுவனத்தை 1919ல் கிராமத்தில் நிறுவிய முதல் கம்சமோல்களும் பயனீர்க் கூட்டத்துக்கு வந்திருந்தனர்.

பெரியதொரு பசிய புல்வெளிப் பரப்பில் இக்கூட்டம் நடந்தது. எட்டாம் வகுப்பு மாணவர்களின் பயனீர்ப் பிரிவும், எதிர்கால இளைய லெனின்வாதிகளான மூன்றாம் வகுப்பு மாணவர்களும் எதிரெதிராக நின்றனர். தனது படைப் பிரிவு தன் வேலையை முடித்து அஞ்சல் ஓட்டத்தை மூன்றாம் வகுப்பு இளைய லெனின்வாதிகளிடம் வழங்குகிறது என்று எட்டாம் வகுப்புக் கவுன்சிலின் மாணவத் தலைவன் சொன்னான்.

சிவப்புக் கழுத்துப் பட்டைகள் அணிவிக்கிற வைபவ நேரம் வந்தது. பள்ளியில் ஏற்பட்டுள்ள வழக்கத்தின்படி தனது பணியை முடிக்கிற பயனீர்ப் பிரிவு, பயனீர்கள் ஆகிற அக்டோபர்வாதிகளுக்குக் கழுத்துப் பட்டைகளை அணிவிக்கும். சிறுவர்களும் சிறுமிகளும் தமது பயனீர்க் கழுத்துப் பட்டைகளைக் கழற்றி இளைய நண்பர்களுக்கு அணிவிக்கிறார்கள். ஒவ்வொரு மாணவனும் தனது நண் பனுக்குக் கழுத்துப் பட்டையை அணிவித்தான். எட்டாம் வகுப்பிலும் மூன்றாம் வகுப்பிலும் படித்த மாணவர்களில் சகோதர சகோதரிகள் இருந்தனர். மூத்தவர்கள், அருமை யான ஒரு குடும்பப் பொக்கிஷம் போல, இளையவர் களுக்குக் கழுத்துப் பட்டைகளை வழங்கினர். சிவப்புக் கழுத்துப் பட்டைகளைப் பெற்றுக் கொண்ட குழந்தைகள், இளைய லெனின்வாதியின் உறுதிமொழி தந்தனர். மிகயீல் பானிகாகோ போல உறுதிவாய்ந்த துணிவு மிக்க தேச பக்தர்களாக இருப்போம் என்றும் ''லெனினைப் போலப் போராடுவது வெற்றி பெறுவது'' எனும் முழக்கத்தை நிறைவேற்றுவோம் என்றும் சபதம் செய்தனர். பயனீர் பிரிவில் சேர்ந்ததன் நினைவாக ஒவ்வொரு குழந்தைக் கும், தலைசிறந்த மனிதர் ஒருவரின் வாழ்க்கையையும் போராட்டத்தையும் பற்றிய புத்தகம் பரிசளிக்கப் பட்டது.

இந்தக் கூட்டம் எனது மாணவர்களின் இதயத்தில் என்றென்றும் நினைவில் தங்கி விட்டது. தலைமுறை தலை முறையாக இளைய லெனின் வாதிகளுக்கு சிவப்புக் கழுத்துப் பட்டை வழங்கப் படுகிறது என்பதே பயனீர்ப் படையில் குழந்தைகள் சேர்வதில் முக்கியமான அம்சம் ஆகும். புரட்சிகரப் போராட்டத்தின் சின்னமான சிவப்புக் கழுத்துப் பட்டையைக் குழந்தைகள் கவனமாகப் பாது காத்து வருகின்றனர். அதனைக் குழந்தைகள் அன்றாடம் அணிந்து கொள்வதில்லை. பண்டிகைகள், வைபவங்கள், விழாக்கள், பயனீர்க் கூட்டங்கள் நடக்கிற நாட்களில் மட்டுமே அதனை அணிவர். எங்கள் பயனீர்க் குழுவில் இது ஒரு மரபு.

## லெனினைப் போலப் போராடுவது, வெற்றி பெறுவது

ஒவ்வொரு நாளும், அன்றாடச் சாதாரண உழைப்பில் கம்யூனிசத்துக்கான போராட்டம் இருக்கிறது என்று லெனின் போதித்தார். தம்மைச் சுற்றி நிகழ்கின்ற அனைத்தையும் குழந்தைகள் தமது இதயத்துக்கருகே ஏற்றுக் கொள்வதற்காகவும், மக்களுக்குச் சொந்தமான பொருள்வகைச் செல்வங்கள் குழந்தையைப் பதட்டப் படுத்த வேண்டும் என்பதற்காகவும் என்ன செய்வது என்று நானும் ஓல்யாவும் யோசித்தோம். இயற்கையைக் காப்பதற்கு இளம் காவலர்களின் குழு ஒன்றை ஓல்யா பயனீர்க் குழுவில் நிறுவினாள். பள்ளிக்கு அருகே வயல்களைக் காப்பாற்றுகிற காட்டைத் தமது கவனத்தில் எடுத்துக் கொண்டனர் பயனீர்க் குழுவினர். காட்டுக்கருகே அவர்கள் நடந்து செல்லும் போது, மரங்கள் காய்ந்து போகட்டும் என்பதற்காக அதன் அடித்தண்டின் மரப்பட்டையை யாரோ வெட்டி விட்டிருந்ததைக் கண்டார்கள். பின்னர் மரத்தையே வெட்டி யெடுத்துக் கொள்வதற்குக் காரணம் கிடைக்குமல்லவா?'' மரங்கள்தான் காய்ந்து விட்டனவே, எதற்காக அவை அங்கு நிற்பது?'' என்று கேட்கலாமே. குழந்தைகளுக்குக் கோபம் பொங்கியது: ''நாம் மரங்களை நட்டு வளர்க்கிறோம், அவற்றை யாரோ அழித்து விடுகிறார்களே? இது எப்படி? இவ்வாறு செய்வது யார் என்று கண்டு பிடிக்க வேண்டும்.''

அன்று முதல் இயற்கையின் இளைய பாதுகாவலர்களான பயனீர்களின் படையெடுப்பு தொடங்கியது. வயலைப் பாதுகாக்கும் காட்டுக்கு, மாலை நேரத்தில் பயனீர்கள் கிளம்பிப் போவார்கள். அங்கு அழையா விருந்தாளிகளுக்காகக் காத்திருப்பர். சில தினங்களுக்குப்பின் குற்றவாளிகள் கையுங் களவுமாகப் பிடிக்கப் பட்டார்கள்—இரண்டு கூட்டுப்பண்ணை விவசாயிகள் மரங்களை அறுப்பதற்காக ரம்பத்துடன் வந்தனர். மரங்களை அழிக்கிற இந்த மனிதர்களைப் பற்றி கூட்டுப்பண்ணை நிர்வாகத்துக்குக் குழந்தை

கள் தகவல் தந்தனர். அறுக்கப்பட்ட ஒவ்வொரு மரத்துக்கும் பதிலாக 10 மரங்களை நடுமாறு குற்றவாளிகள் நிர்ப்பந்திக்கப்பட்டனர். குழந்தைகள் மகிழ்ச்சி கொண்டனர்: உண்மைக்கு வெற்றி கிட்டியது. முழுமையான ஒழுக்கப் பயிற்சிக்கு இது மிக அவசியமான தேவையாகும். நியாயம் வெற்றி பெறுவதை இளைய லெனின்வாதி பார்க்கும் போது, கம்யூனிச லட்சியங்களுக்காக நடக்கிற போராட்டம் நல்லுணர்ச்சியின் ஊற்றுக்கண்ணுக விளங்கும். உற்சாகத்தைத் தருகிறது வெற்றி, புதிய கஷ்டங்களைச் சமாளிப்பதற்குத் தேவையான புதிய சக்திகளை அது பிறப்பிக்கிறது.

அழகுக்காகவும் உழைப்பின் மீது நேசத்துக்காகவும் நடக்கிற போராட்டத்தை அடிப்படையாகக் கொண்ட சுவாரஸ்யமான விளையாட்டு ஒன்று இயற்கையின் இளைய பாதுகாவலர்களைக் கவர்ந்தது. பயனீர்களது ஒரு படையெடுப்பின் போது சில கூட்டுப்பண்ணை விவசாயிகளின் வீட்டு முற்றங்களில் களைச்செடிகள் வளருவதைக் கண்டனர். இவர்களுக்கு ஆப்பிள் கன்றுகளைக் கொண்டு வந்து தந்தார்கள் குழந்தைகள். களைகளைப் பிடுங்கியெறிந்து பழ மரங்களை நட்டுக் கொள்ளுமாறு ஆலோசனை சொன்ஞர்கள். இவ்வாறு செய்வதற்குச் சோம்பேறித்தனப்பட்ட மூன்று பேர் இருந்தார்கள். ''இயற்கையின் இளைய பாதுகாவலர்களின் அடையாளச் சீட்டுக்கள்'' எழுதிஞர்கள் பயனீர்கள். கவனமற்ற அந்த மனிதர்களுக்கு விடுக்கப்பட்ட அறைகூவலாக இவை இருந்தன: ''இயற்கையின் இளைய பாதுகாவலர்களான எங்களுக்கு, உங்கள் வீட்டு முற்றத்தில் களைச் செடிகள் வளருவதைச் காணக் கஷ்டமாய் இருக்கிறது. இந்த முட்செடிப் புதர்களில் அனேகமாக ஓநாய்கள் விரைவில் தோன்றி விடும். இந்தக் 'காட்டில்' நீங்கள் எப்படி வாழ்கிறீர்கள்? 'களைகளைப் பிடுங்கியெறியுங்கள், ஆப்பிள், திராட்சைக் கன்றுகளை நடுங்கள், பூச்செடிகளை வளருங்கள்' என்று உங்களைக் கேட்டுக் கொள்கிருேம். இதோ உங்கள் வீட்டுக்கு அருகில் ஐந்து ஆப்பிள் கன்றுகளையும், மூன்று திராட்சைக் கன்றுகளையும்

கொண்டு வந்து வைத்திருக்கிறோம். நாளைக்குக் கன்றுகளை நட்டுவிட வேண்டும். நட்டு வைத்து நன்றாகத் தண்ணீர் ஊற்ற வேண்டும். இதனைச் செய்வதற்கு உங்களுக்குச் சோம்பேறித் தனமாய் இருந்தால், நாங்கள் வருகிறோம். வந்து களைகளை அழிக்கிறோம், குழி வெட்டுகிறோம், கன்றுகளை நடுகிறோம். தோன்றி விடும் தோட்டம். ஆனால் அது உங்களுடையதாக இருக்காது, எங்களுடையதாக, பயனீர்களுடையதாக இருக்கும்.''

''அடையாளச் சீட்டுக்களை'' ஒரு விசேஷமுறையில் வழங்கினர். திறந்திருந்த சிறு சாளரத்தின் வழியாக மேசையின் மீது அவற்றை வைத்தனர். யாரும் பார்க்காத வண்ணம் மாலை நேரத்தில் கன்றுகளைக் கொண்டு வந்து வைத்தனர். இதிலெல்லாம் குழந்தைகளை உற்சாகப் படுத்துகிற ஒரு விளையாட்டு இருந்தது. அவர்கள் அடுத்த தினங்களுக்காக ஆவலுடன் காத்திருந்தனர்: கவனமற்ற மனிதர்கள் என்ன செய்யப் போகிறார்கள்? பாடம் முடிந்த பின்னர் தெரு வழியாக அவர்கள் சென்று வந்தனர். பொட்டல் வெளிகளைக் காணவில்லை: களைகள் வளர்ந்திருந்த இடத்தில் கன்றுகள் நடப்பட்டிருந்தன... இயற்கையின் இளைய பாதுகாவலர்களான பயனீர்களின் குழு பற்றிய செய்தி விரைவில் பள்ளி முழுதும் பரவியது. பயனீர்க் குழுவில் இயற்கையின் இளைய பாதுகாவலர்களது குழுக்களை நிறுவுவது எங்கள் பிரிவின் வேலையாயிற்று. கூட்டுப் பண்ணை நிர்வாகம், முசுக்கொட்டைச் செடிகளை பாதுகாக்கும்படி முதிய பயனீர்களை வேண்டிக் கொண்டது: சில கூட்டுப்பண்ணை விவசாயிகள் இவற்றின் கிளைகளைக் கவலையின்றி ஒடித்துக் கொண்டிருந்தனர். சில படையெடுப்புக்களை நடத்தினர் பயனீர்கள். கிளைகளை ஒடிப்பது நின்று விட்டது.

புதிய வகைப் பரிசோதனைப் பயிர் நிலத்தில் விதைப்பதற்காகக் கோதுமைத் தானியம் 20 கிலோகிராம் தயார் செய்து தருவதாக பயனீர்ப் பிரிவு வாக்குத் தந்தது. மிகச் சிறந்த கதிர்களை தேர்ந்தெடுத்தார்கள் குழந்தைகள். பனிக்காலத்தில் பாதுகாப்பதற்காக பள்ளியில் ஒரு பகுதி

யில் ஈரமற்ற இடத்தைக் கண்டனர். வசந்தகாலத்தில் தானியத்தைப் பிரித்தெடுத்து விவசாய நிபுணருக்கு வழங்கினர். இந்த வேலையில் பெரிய பதட்டமும் கவலையும் இருந்தது. கோதுமை விதைப்புத் தொடங்கியவுடனே குழந்தைகள் (அவர்கள் அப்போது நான்காம் வகுப்பில் படித்து வந்தனர்), எப்படி விதைக்கிறார்கள் என்பதைக் கண்ணாரக் காண்பதற்காக வயலுக்குச் சென்றார்கள். முளைகள் தோன்றிய போது மீண்டும் வயலுக்குச் சென்றார்கள் குழந்தைகள். அறுவடைக் காலத்தில் உயர் வகுப்பு மாணவர்களுக்கு அறுவடை சேகரிப்பதில் பயனீர்கள் உதவி செய்தனர். மனிதர்களுக்காகத் தமது ஆற்றலின் ஒரு துளியைச் செலவிடுகின்ற குழந்தைகள், சுற்றியுள்ள உலகத்தில் நடக்கிற அனைத்தையும் மேலும் சிறப்பாகக் கிரகித்துக் கொள்கிறார்கள் என்று கண்டு நான் மகிழ்ச்சியுற்றேன். நாங்கள் வயலிலிருந்து போகிறோம். குழந்தைகள் மகிழ்ச்சிப் பதட்டம் கொள்கின்றனர்: ''நமது விதைகள் நன்கு பிடித்துக் கொண்டன.'' கூட்டுப்பண்ணைத் தோட்டத்தருகே செல்கிறோம். ஓர் ஆப்பிள் மரத்தில் கம்பளிப் பூச்சி ஒன்றைக் காண்கிறார்கள். குழந்தைகளின் இதயம் பீதியுறுகிறது. சமுதாயத்துக்குத் தாம் செய்ய வேண்டிய கடமை பற்றிக் குழந்தைகள் அப்போது நினைக்கவில்லை. உயிருள்ள மரத்துக்கு அழிவு நெருங்குவது கண்டு அவர்களால் சும்மா இருக்க முடியவில்லை. குழந்தைகள் தோட்டத்திற்குள் சென்று கம்பளிப் பூச்சியை அழித்து விடுகிறார்கள். ஆப்பிள் மரத்தைக் காப்பாற்றுகிறார்கள். அருகில் உள்ள மரத்தில் ஏதாவது தீமை பயக்கும் பூச்சிகள் இருக்கின்றனவா என்று பார்க்கிறார்கள்.

பிறந்த மண்ணின் எஜமானன் என்ற உணர்வு மிக முக்கியமான தேசபக்தி உணர்ச்சியாகும். இளம் இதயங்களில் இதனை நாம் நிலைநாட்ட வேண்டும். குழந்தைப் பருவத்தில், சிறுவனாகவும் வாலிபனாகவும் இருக்கும் போது, சமுதாய வயலில் இருக்கிற ஒவ்வொரு தானியக் கதிரும், சமுதாயத் தோட்டத்தில் இருக்கிற ஒவ்வொரு மரமும், கூட்டுப் பண்ணைக் களத்துமேட்டில் இருக்கிற ஒவ்வொரு பிடி

தானியமும், தந்தையோ தாயோ பரிசளித்த விளையாட்டுப் பொம்மை, விருப்பமான சித்திரப் புத்தகம், பனிச் சறுக்குச் செருப்பு, சறுக்கு மட்டை ஆகிய மகிழ்ச்சி தருகிற சொந்தப் பொருள்களைப் போலவே கருதுகிறவன் தான் உண்மையான தேசபக்தனாக வளர முடியும்... மனிதர்களுக்காக எதையாவது படைக்கிற உழைப்பில் தனது மனத்தின் ஒரு துளியைப் புகுத்தும் போது, தனது கைகளால் படைக்கப்பட்ட பொருள்வகைச் செல்வம் மிகவும் ஆழ்ந்த மகிழ்ச்சியைக் கொடுக்கும் போது, இந்த மகிழ்ச்சிக்குச் செல்கிற வழி கவலைகள், பதட்டங்கள், தோல்விகள் ஆகியவற்றின் மூலம் செல்லும் போதுதான் சமுதாயச் செல்வம் ஒருவனுக்கு மிகவும் நெருங்கிய சொந்தச் சொத்தாக விளங்கும். குழந்தைகள் வேதனைகள், வருத்தங்கள் ஆகியவற்றின், ஊற்றுக்கண்ணைப் பற்றி நான் எப்போதும் சிந்தித்து வந்தேன். குழந்தை எதனைத் தனது இதயத்துக்கருகே ஏற்றுக் கொள்கிறது? ஒருவனது சொந்த நன்மையுடன் தொடர்பு கொண்ட விஷயங்களை மட்டும்தானா? அல்லது மற்றவர்களின் நலன்களைத் தொடுகிற விஷயங்களையுமா? இந்தக் கேள்விக்குத் தருகிற பதில் குழந்தைகளது ஒழுக்கத் தகுதியின் அளவு கோலாக எனக்கு எப்போதும் விளங்கியது. பாட—பரிசோதனைப் பகுதியில் மழையடித்ததால் கோதுமைப் பயிரின் தண்டுகள் வளைந்து கிடப்பது கண்டு கோல்யாவும் வால்யாவும் வருத்தப் பட்டதைப் பார்த்து நான் சந்தோஷம் கொண்டேன். இத்தகைய கேடு கண்டு குழந்தை வருத்த உணர்ச்சி கொள்ளாத வரை, அதிகமாக வேதனையும், துக்கமும் அடையாதவரை, ஆசிரியர் அமைதியாக இருக்கக் கூடாது. ஏனெனில் அவரது மாணவன் பின்னர் அலட்சியமான வெறும் கண்காணிப்பாளனாக மாறிவிடக் கூடும்.

மனிதர்களைப் பற்றிக் கவலைப் படாமல், மகிழ்ச்சியை வெறுமே அனுபவித்து வந்தவர்களாக மட்டுமே குழந்தைப் பருவத்தில் இருந்தவர்கள் தான் சுயநலமிகளாகவும், ஆணவம் மிகுந்தவர்களாகவும் மாறுகிறார்கள். எனது மாணவர்களான வலோத்யாவும் ஸ்லாவாவும் இத்தகைய

ஆபத்துக்கு உள்ளாகக் கூடும் என்று கண்டு நான் கவலைப் பட்டேன். மகிழ்ச்சிகளாலேயே இந்தச் சிறுவர்களை ''ஊட்டி வளர்ப்பதற்காகக்'' குடும்பத்தில் எல்லாம் செய்யப் பட்டது. ஏதாவது புதிய, நல்ல பொருளைப் பெற்றோர்கள் வாங்கித் தரவில்லை என்றால் மட்டுமே குழந்தைகள் வருத்த முற்றனர். இந்தச் சுயநலக் கவலைக்கு எதிராக, மனிதர் களுக்கான பொருள்வகை, ஆன்மிகச் செல்வங்கள் பற்றிய கவலையை நிறுத்த வேண்டும்.

வெப்பம் மிகுந்த கோடை நாட்களில், ''மகிழ்ச்சி துள்ளும் பள்ளிக்கூடத்தில்'' இருக்கும் போதே நாங்கள் நட்டு வைத்த லைம் மரம் வாடத் தொடங்குவதைக் கண் டோம். ''நமது நண்பனுக்கு ஈரம் போதவில்லை'' என்று வலோத்யாவிடமும் ஸ்லாவாவிடமும் நான் சொன்னேன். சுவாரஸ்யமான விஷயம் ஒன்றைக் காட்டுகிறேன் என்று உறுதி சொல்லிக் குழந்தைகளைத் தோட்டத்திற்கு அழைத் துச் சென்றேன். வெய்யிலில் காய்ந்து கொண்டிருக்கிற மரத்தைக் காட்டினேன். ''லைம் மரம் நம்மிடமிருந்து உத வியை எதிர்பார்க்கிறது. நாம் விரும்பினால் அதற்கு உதவ முடியும். இவ்வகை மரங்களுக்கு, குறிப்பாக இளைய மரத்திற்கு ஈரக் காற்றும் தண்ணீரும் குளிர் நிழலும் வேண்டும். நமது நண்பனுக்கு உதவி செய்ய வாருங்கள் குழந்தைகளே. நீர்க் குழாயிலிருந்து (அது அருகே தான் இருக்கிறது) ஒரு மெல்லிய குழாயைக் கொண்டு வருவோம். லைம் மரத்தை நோக்கித் திருப்பி மழைத் தூரலாகத் தண்ணீர் பொழிவோம். மரம் குளிர்ச்சியை எப்போதும் உணரும்'' என்று நான் சொல்கிறேன். எனது வார்த்தைகளைக் குழந்தைகள் அலட்சியமாகவே கேட்ட னர். நான் செயற்கை மழையைப் பற்றிச் சொன்னவுடன் அவர்கள் கண்கள் ஆர்வச் சுடர் விட்டன. உழைப்பு ஒரு சுவாரஸ்யமான விளையாட்டாக அவர்களுக்குத் தோன்றி யது. விளையாட விரும்பாத குழந்தை கூடவா இருக்கிறது? சிறுவர்கள் விளையாடத் தொடங்கினர். மரத்திற்கு ஒரு மெல்லிய குழாயைக் கொண்டு வந்தோம். அதில் தண்ணீர் தெளிக்கிற சிறு கருவியை இணைத்தோம். லேசாகத் தெரி

கிற மேகம் சிறு தண்ணீர்த் துளிகளாகத் தோன்றியது. வெப்பம் மிகுந்த நாளின் நடுப் பகலில் மழையைத் ''திறந்து'' விடுவார்கள் குழந்தைகள், மாலையில் ''மூடி'' விடுவார்கள். சிறுகச் சிறுக மரத்தின் வளர்ச்சிக்காகக் கவலைப்படத் தொடங்கினர்கள் அவர்கள்: மழையின் கீழே அதற்கு எப்படி இருக்கிறது? மரத்தின் கிளைகள் நிமிர்ந்து அவற்றில் புதிய தளிர்கள் தோன்றுவது கண்டு குழந்தைகள் மகிழ்ச்சியுற்றனர். இவ்வாறு சிறுவர்களின் வாழ்க்கையில், அவர்களது சொந்த நலன்களுடன் சம்பந்தமில்லாத அக்கறை தோன்றியது.

அது ஒரு தொடக்கமே. நகாசு வேலை செய்பவர் விலையுயர்ந்த கல்லில், தொட்டு வேலை செய்ய வேண்டிய வைரத்தின் ஒவ்வொரு கோட்டையும், கூர்ந்து பார்த்துப் பட்டை தீட்டுவது போல,குழந்தை இதயத்தின் அந்தரங்க மூலையை எப்படித் தொடுவது என்று போதகர் யோசிக்க வேண்டும். காட்டு ரோஜாக்களின் கொட்டை விதைகளைத் தேடிச் சேகரிப்பதற்காக நானும் வலோத்யாவும் சில முறை காட்டுக்குச் சென்றோம். பின்னர் அவற்றை விதைத்து, செடி முளைத்த பின் தண்ணீர் ஊற்றினோம். ஒட்டுப் போடத் தகுந்தபடி செடி வளர்ந்த பின் வெள்ளை ரோஜாவை அதனுடன் ஒட்டுப் போட்டோம். இது ஓர் உழைப்பு மட்டுமல்ல, குழந்தை இதயத்தை எச்சரிக்கையுடன் தீண்டுவதுமாகும். சிறுவனின் மகிழ்ச்சிகளுக்கும் வருத்தங்களுக்கும் ஊற்றுக்கண்ணாக, சொந்த நலன் மட்டுமின்றி சுற்றியுள்ள உலகமே விளங்க வேண்டும் என்பதற்காக நான் சிறுகச் சிறுகப் பாடுபட்டேன்.

ஸ்லாவாவைப் பற்றி அதிகம் கவனம் செலுத்த வேண்டியிருந்தது. கால்நடைப் பண்ணையிலுள்ள நோய்ப்பட்ட ஆட்டுக்குட்டியை கவனித்துக் கொள்வதற்காக அவன் ஒல்யாவுடன் போய் வந்தான். உயிருள்ள ஜீவனைப் பராமரிப்பது, ஒரு குழந்தை விளையாட்டை முதலில் நினைவுபடுத்தியது. பின்னர் அது உழைப்பின் மீதான ஈடுபாடாக வளர்ந்தது. பின்னர் படிப்படியாக உழைப்பை நாடும் இளைய கால்நடை வளர்ப்பாளனாக அவன் மாறினான். சில்

லென்றிருந்த ஒரு பனிக்குளிர் நாளில் நீர் நிறைந்த கண்களுடன் அவன் என்னிடம் வந்ததை ஒரு போதும் மறக்க மாட்டேன். அவனது அன்புக்குரிய கன்றுக் குட்டி பசிய ஓட்ஸ் தண்டுகளையே விரும்புகிறது என்றும் மூடுதோட்டத்திலோ பார்லியைத்தான் விளைவிக்கிறார்கள் என்றும் சிறுவன் புகார் கூறினான். அப்படியானால் அவன் பண்ணைக்கு எப்படிப் போவான்? எனவே அங்கு ஓட்ஸையும் பயிர் செய்யத் தொடங்கினார்கள்...

குழந்தையின் சொந்தத் தேவையுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டிராத விஷயத்தைப் பராமரித்தல் குழந்தைச் சுயநலத்திற்குச் சிறந்த மருந்ததாகும். சமுதாய நலன் பற்றிய கவலையாக வெளிப்படுகிற சொந்த அக்கறை குழந்தையிடம் தோன்றுமானால், சுயவிருப்பம் என்று அழைக்கப்படுகிற தீய பண்பு ஒருபோதும் அவனிடம் தோன்றாது. சுயநல உணர்ச்சி குழந்தைகளின் மனத்தை ஆட்கொண்டால் மகிழ்ச்சியும் வேதனையும் அவர்களது சொந்த நலனைச் சுற்றியே சுழலும்.

## ''துணிவு மிக்கோர், அச்சமற்றோர்''

குழந்தை ஆற்றல் கட்டுப்படுத்த முடியாத ஒன்றாக வெளியே மீறி வந்து, மேம்போக்காகப் பார்க்கையில் எவ்விதமான விளக்கத்திற்கும் உட்படாத விசித்திர நடவடிக்கைகளாகக் கொட்டுகின்ற, உடல் வளர்ச்சியும் உள்ள வளர்ச்சியும் பெற்றவர்களாக எனது மாணவர்கள் மாறிய காலம் வந்தது. எனது கண்களுக்கு முன்னாலேயே ஏதோ ஒரு பாய்ச்சல் நிகழ்ந்தது: கூச்சம் கொண்டவர்கள் துணிவு மிக்கவர்களாகவும், நாணம் கொண்டவர்கள் அச்சமற்றவர்களாகவும், உறுதி வாய்ந்தவர்களாகவும் மாறினர்.

கூட்டுப்பண்ணை விவசாயிகளும் உயர் வகுப்பு மாணவர்களும் வைக்கோலை எப்படிப் போர் போடுகிறார்கள் என்று பார்ப்பதற்காக நாங்கள் வயலுக்குப் போனோம். வைக்கோற் பிரிகளைத் தனது இயந்திரத்தில் இணைத்துக் கொண்டு ஒரு பெரிய வைக்கோற் போருக்கே அவற்றை

டிராக்டர் ஓட்டி இழுத்து வருவது சிறுவர்கள், சிறுமிகளின் கவனத்தைக் கவர்ந்தது.இந்தப் பிரிகள் 15 மீட்டர் உயரத் துக்கு இழுத்துச் செல்லப்படுகின்றன. வைக்கோல் போரி லிருந்து நாங்கள் கம்பைனை நோக்கிச் செல்கிறோம். சிறு வர்களில் யாரோ ஒருவன் பிரியைப் பிடித்துக் கொண்டு மேலே மேலே ஏறுவதைத் தொலைவிலிருந்து நான் கவனித் தேன். சுற்றிலும் பார்த்தேன். ஷுராவைக் காணவில்லை. அவன்தான் 15 மீட்டர் உயரத்தில் தொங்கிக் கொண்டி ருக்கிறான். ஷுராவைக் காண்கிறார்கள் குழந்தைகள்.வைக் கோல் போருக்கு ஓடுகிறார்கள். மகிழ்ச்சியில் கூச்சலிடு கிறார்கள். தலைசுற்றும் உயரத்துக்கு ஏறி ஆனந்தம் கொள்ள வேண்டும் என்று ஒவ்வொருவருக்கும் விருப்பம் தோன்றி யதோ என்னவோ. வைக்கோல் போரிலிருந்து ஷுரா கீழே இறங்கி வருவதற்காகக் காத்திருந்தேன். அசாதாரண மான ஷுராவின் பயணம் நல்லபடி முடிந்ததற்காகச் சந்தோஷப்படுவதா, அல்லது குழந்தைகளை அங்கிருந்து சீக்கிரம் அழைத்துச் சென்று விடுவதா என்று எனக்குத் தெரியவில்லை.

இதே போன்று ஒவ்வொருவரும் தனிப் பயணம் போவ திலிருந்து குழந்தைகளைத் தடுத்து நிறுத்துவதற்குள் போதும் போதுமென்று ஆகிவிட்டது. எனது எச்சரிக்கை உணர்ச்சியால் அவர்கள் அதிருப்தியுற்றார்கள் என்று நான் கண்டேன்.இத்தகைய பயணத்தைப் பாதுகாப்பாக நடத்த வேண்டுமே தவிர, அவற்றுக்குத் தடை விதிக்கக் கூடாது என்று அனுபவம் எடுத்துக் காட்டியிருக்கிறது. வைக் கோல் போருக்குக் கீழே வைக்கோலை படி போல் அடுக் கினோம். இதோ ஒருவருக்குப்பின் ஒருவராக பயணத்தை மேற்கொள்கிறார்கள் சிறுவர்களும் சிறுமிகளும்.

அப்போது நிரந்தரமாக மின்சக்தி தருகிற எதுவும் எங்களிடம் இருக்கவில்லை. சேமக்கலங்களில் மின்சக்தி ஏற்றி வைப்பதற்காக உயர் வகுப்பு மாணவர்கள் காற்று மின்நிலையம் ஒன்றைக் கட்டித் தந்தனர். காற்று மோட் டார் 12 மீட்டர் உயரக் கோபுரத்தில் வைக்கப்பட்டது. கோபுரத்தின் உச்சியில் மரத்திலான வேலியுடன் சிறு தளம்

ஒன்று போடப்பட்டிருந்தது. இதன் வழியாக மின் பணி யாளர் மோட்டாரை அணுகுவார். ஒருநாள் பலத்த காற்று வீசும் போது குழந்தைகள் பட்டம் விட்டனர். ஒவ்வொரு குழந்தையும் எவ்வளவு முடியுமோ அவ்வளவு உயரத்திற்குப் பட்டத்தைப் பறக்க விட முயன்றது. ''என் னுடைய பட்டம் எல்லோர் பட்டத்தையும் விட உயரே பறக்கப் போகிறது'' என்றான் வான்யா. அவன் கோபுரத் தின் மீது ஏறினான். மேலிருந்த தளத்து வேலியின் மீது சாய்ந்தபடி கூரையின் மீது நின்று கயிற்றை விடத் தொடங் கினான். வான்யாவினால் தள்ளப்பட்ட கூரையின் திறப்பு, ஓரத்திற்குச் சென்று பூமியின் மீது விழுந்ததை நான் பிரமிப் புடன் பார்த்துக் கொண்டிருந்தேன். காலுக்குக் கீழே எதையும் கவனிக்காமல் சுற்றிச் சுற்றி ஓடிக் கொண் டிருந்தான் வான்யா. அவன் கண்கள் பட்டத்தையே பார்த்துக் கொண்டிருந்தன. ஏதோ தற்செயலால்தான் அன்று விபத்து எதுவும் நடக்கவில்லை.

கட்டுப்படுத்த முடியாத ஆர்வத்துடன் உயரத்திற்குப் போக முனைகிறார்கள் குழந்தைகள். உயரம் தரும் இனிய உணர்ச்சி குழந்தைகளுக்கு ஏராளமான மகிழ்ச்சி யைத் தருகிறது. போதகர்களாகிய எங்களுக்கோ குழந்தைகளின் இந்த உணர்ச்சிப் பெருக்கு பீதியைத் தோற்றுவிக்கிறது. பதட்டத்தைத் தந்த குழந்தைகளின் நடவடிக்கைகள் அனேகமாக அனைத்தும் உயரத்தின் கவர்ச்சி மிக்க சக்தியுடன் சம்பந்தப் பட்டவையே...

பள்ளிக்கூடத்துக்கு அருகில் பழைய மாதாகோயில் இருந்தது. அங்கு 20 மீட்டர் உயரத்தில் மணிக் கூண்டுக் கோபுரம் இருந்தது. வெய்யில் நிறைந்த வசந்த கால நாளொன்றில் கோபுரத்தை நோக்குகையில் சிலுவைக் கருகே 3 குழந்தை உருவங்களைக் கண்டேன். செர்யோஷா வும் கோல்யாவும் ஷுராவுமே அங்கிருந்தனர் என்று தெரிந்து கொண்டேன். எனக்கு இதயமே நின்று விட்டது. குழந்தைகள் என்னைப் பார்த்து விட்டதால் கோபுரத்தின் ஒரு விளிம்பிலிருந்து மறு விளிம்புக்கு ஓடிப்போய் மறைந்து கொள்ள முயன்றனர். குழந்தைகளுக்குக் குரல் கொடுப்

பதோ அர்த்தமற்றது. இதனுல் வெறும் தீமையே விளையும். நான் பள்ளிக்குப் போனேன். குழந்தைகள் அனைவரையும் வெளியே அனுப்பி விடும்படி மெதுவாகக் கேட்டுக் கொண்டேன். காட்டுக்குப் பயணம் போகுமாறு சிலரையும், வயல்வெளியில் உலாவுவதற்குச் சிலரையும், உயர் வகுப்பு மாணவர்களை வீட்டுக்கும் அனுப்பினேம். அதாவது கோபுரத்தின் மீதுஇருக்கும் குழந்தைகளை யாருமே பார்க்காதபடியும், பீதி கிளப்பாமல் இருக்குமாறும் பார்த்துக் கொண்டோம். நான் பட்டறைக்குச் சென்றேன். அங்கிருந்து பார்த்தால் மணிக்கூண்டு நன்ருகத் தெரியும். சன்னலுக்கு அருகே தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டேன். ஒருவேளை வைக்கோல் போருக்கு அருகே விளையாட்டைத் தொடங்கி வைத்து உயரத்தில் கிடைக்கும் ஆனந்தத்தைக் குழந்தைகளிடம் நான் தூண்டி விட்டேன் போலும். பின்னர் கோயில் கோபுரத்திலிருந்து, ஆங்காங்கே மிகவும் பலவீனமாகத் தொங்கிக் கொண்டிருந்த துருப்பிடித்த குழாய்களின் வழியாகக் குழந்தைகள் இறங்கி வந்ததைப் பார்த்தேன்....

கோடைகாலப் பெருமழைக்குப் பின், பாலத்துக்குக் கீழே குளத்தின் வழியாக ஒரு நீர்வீழ்ச்சி உருவாகியிருந்தது. கூட்டுப்பண்ணையின் விவசாயப் பெண்மணி பள்ளிக்கு வந்து சொன்னுர்: ''உங்கள் குழந்தைகள் என்ன செய்கின்றன என்று போய்ப் பாருங்கள்.'' நான் குளத்துக்குப் போனேன். அணையில் நான் ஒருவரையும் காணவில்லை. பாலத்துக்குக் கீழிருந்து குழந்தைகள் கீச்சிடுவது கேட்டது. தோல்யாவும் வீத்யாவும் பாலத்துக் கிராதிக் கம்பிகளுக்கு இடையில் நீண்ட கயிறுகளைக் கட்டி, கூச்சலுடன் கொட்டும் நீர்வீழ்ச்சிக்கு மேலே ஊஞ்சலாடிக் கொண்டிருந்தார்கள், மகிழ்ச்சியில் கீச்சிட்டார்கள்...

பெத்ரிக்கும் வீத்யாவும் கோல்யாவும் அடிப்பாகத்தில் பாதி உடைந்திருந்த சிறு மரப் பீப்பாய் ஒன்றை எங்கிருந்தோ குளத்தின் உயர்ந்த கரைக்கு உருட்டி வந்தனர். சிறுவர்களில் ஒருவன்—கருரான வரிசைப்படி இது நடந்தது,

தனது முறையை நண்பனுக்கு விட்டுக் கொடுக்க யாருக்கும் விருப்பமில்லை—பீப்பாய்க்குள் இறங்கினான். மற்ற சிறுவர்கள் மெதுவாக அதனைத் தள்ளி விட்டு இறக்கத்தில் சரிய விட்டனர். குளத்திற்குள் சரிந்து சென்றது பீப்பாய், தண்ணீரிலிருந்து சில மீட்டர் தொலைவில் நின்றது. இத்தகைய உற்சாக விளையாட்டு விபத்து ஏதுமின்றி எப்படி முடிந்தது என்று எனக்கு இன்றுவரை விளங்கவில்லை. இது போன்ற சமயங்களில், அதிருஷ்டவசமான முடிவு குழந்தைகளிடம் மட்டுமே ஏற்படும் போலும்.

காட்டுக்குள் உலா வரும் போது மரம் வெட்டுபவர்களின் உழைப்பைக் கண்டோம். அவர்கள் கூட்டுப் பண்ணைக்கான கட்டுமானப் பொருள்கள் தயார் செய்து கொண்டிருந்தனர். வெட்டப்பட்ட மரம் பூமியின் மீது விழுவதை வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தனர் குழந்தைகள். வீட்டுக்குத் திரும்பும் போது, ஷூராவும் தான்கோவும் பின்தங்கி விட்டதை ஒருவரும் கவனிக்கவில்லை. வயல்வெளியில் நாங்கள் ஓய்வுக்காக உட்கார்ந்திருந்தோம். அப்போது மரம் வெட்டுகிற வயதான ஒருவர் சிறுவர்களைக் கூட்டி வந்தார். மரம் வெட்டப்பட்டு விழும் போது அதன் கிளைகளில் தொங்கியபடி ஊஞ்சலாடியவாறு கீழே இறங்குவதற்காக ஷூராவும் தான்கோவும் மரத்தின் மேல் ஏற முயன்றார்கள் என்று பெரியவர் சொன்னார்.

இந்தச் சம்பவங்கள் எல்லாம் 3, 4ஆம் வகுப்புகளில் படிக்கும்போது ஓர் ஆறு மாத இடைவெளியில் நடந்தன. இத்தகைய வேலைகளிலிருந்து குழந்தைகளை இழுத்துப் பிடிப்பது என்பதோ, துரதிருஷ்டமாக எதுவும் நடந்து விடாமல் பார்த்துக் கொள்வதோ பிரச்சினைக்குத் தீர்வு அல்ல என்று நான் உணர்ந்தேன். குழந்தை ஆற்றலின் வெள்ளப் பெருக்கு தீவிரச் செயல்களை மட்டும் எதிர்பார்க்கவில்லை. அபாயத்திற்கு முன்னால் தனது அச்சமின்மையைக் குழந்தை நிலைநாட்ட விரும்புகிறது. எனது மாணவர்களின் வாழ்வை ஆண்மைப் பரவசம் தட்டியெழுப்புகிறது என்பதற்கு அவர்களது துணிகரச் செயல்களுக்கான தாகமே

சான்ருகும். குழந்தைகளின் ஆற்றலைச் சரியான திசையில் திருப்பிவிட வேண்டும்.

மேம்போக்காகப் பார்க்கையில் அசட்டுத் துணிச்சல் காரியங்களாகத் தெரிகின்றவற்றைப் பிரதானமாகச் சிறுவர்களே செய்தனர் என்பதை வாசகர் கவனித்திருக்கலாம். என்னைச் சிந்திக்கும்படி தூண்டாத ஒரு சிறுவன் கூட இல்லை. தீர்மானமற்றவன், பயந்த சுபாவம் கொண்டவன் என்று என்னுல் கருதப்பட்ட தான்கோகூட 1955 ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தின் இறுதியில் என்னை வியப்புக்கு உள்ளாக்கினுன். குளத்து நீரின் மீது உறைந்துள்ள மெல்லிய பனிக்கட்டிப் படலத்தின் மீது நடந்து குளத்தைக் கடந்து சென்ருன் அவன். பனிப் படலம் உடைந்து விடும் ஆபத்தைக் குறைப்பதற்காக ஒரு பையில் புத்தகங்களை வைத்து அதனைத் தனக்கு முன்னுல் தள்ளிச் சென்ருன். பனிப்படலத்தில் விரிசல் ஏற்பட்டது, அது தொய்வு கண்டது. மிகவும் ஆழமான இடத்தில் தண்ணீர் பனிப் படலத்தை மூடியது. ஏதோ அற்புதத்தால்தான் அது உடைந்து விடவில்லை. பையன் நல்லபடியாகப் பள்ளி வந்து சேர்ந்தான். இதைத் தொடர்ந்து அவனைப் போலவே பனிப்படலத்தின் மீது நடந்து செல்வதற்கு மூன்ரும் வகுப்பு மாணவர்கள் இருவர் முயன்ருர்கள். அவர்கள் காலுக்குக் கீழே பனிப்படலம் நொறுங்கி விட்டது. அதிருஷ்டவசமாக அவர்கள் அப்போது கரைக்கு அருகே நெருங்கி விட்டார்கள்.

விபத்து ஏதும் நடந்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டுமா? ஆமாம், இது மிகவும் முக்கியமானதே. ஆனுல், இதுமட்டுமல்ல விஷயம். அபாயத்தை எதிர்கொள்ளவும் வேண்டும், அதனைச் சமாளிக்கவும் வேண்டும்.

''துணிவு மிக்கோர், அச்சமற்ருேரின்'' பிரிவு ஒன்று எங்களிடையே தோன்றியது. இதில் எல்லா மாணவர்களும் சேர்ந்தனர். சில காலம் சென்று இப்பிரிவில் சிறுமிகள் சிலரும் சேர்ந்து கொண்டனர். சித்தத்தின் உறுதி, துணிவு, அச்சமின்மை ஆகியவை தேவைப்படுகிற பொழுதுபோக்குகளை நான் கண்டு பிடித்தேன். குளத்தங் கரையில்

உயர்ந்த செங்குத்துச் சரிவு ஒன்றை நாங்கள் கண்டோம். கீழே தண்ணீரின் ஆழத்தைச் சோதித்துப் பார்த்தோம். அது ஆபத்தற்றதாக இருந்தது. வெப்பம் மிகுந்த ஜூன் மாத நாளில் குழந்தைகள் இங்கு குளிக்க வருவார்கள். சரிவின் உச்சியிலிருந்து எப்படிக் குதிப்பது, குதித்து விழும் போது தன்னைத் தானே எப்படிக் கட்டுப்படுத்திக் கொள்வது என்று நான் காட்டினேன். ஷூரா, செர்யோஷா, கோல்யா, வீத்யா, ஃபேத்யா ஆகியோர் எனக்குப் பின்னாலேயே குதித்தார்கள். அடுத்த நாள் யூரா, கோஸ்த்யா, பெத்ரிக் ஆகியோர் முதலாவதாகக் குதித்தனர். மூன்றும் நாள் தோல்யா, மீஷா, சாஷா, வான்யா ஆகியோர் குதித்தனர். உறுதியற்றவர்களாக நான்கு சிறுவர்கள் விளங்கினர்—பாவ்லோ, வலோத்யா, தான்கோ, ஸ்லாவா.

நண்பர்கள் அவர்களைக் கேலி செய்தனர். கீழே சிறுமிகள் குளித்துக் கொண்டிருந்தனர். அவர்களும் சிறுவர்களைக் கிண்டல் செய்தனர். சரிவின் உச்சிக்குத் தீனா வந்தாள். அவளுக்கும் குதிக்க வேண்டும் எனும் விருப்பம் வந்தது. அவள் குதித்தாள். அவள் குதித்தது அழகாக இருந்தது.அவளைப் பின்பற்றி லரீசாவும் வார்யாவும் குதித்தார்கள். சிறுவர்களுக்கு வெட்கமாகப் போயிற்று. பாவ்லோவுக்கும், தான்கோவுக்கும், ஸ்லாவாவுக்கும் கடைசியில் பயம் தெளிந்தது.

வலோத்யா மட்டும்தான் இன்னும் குதிப்பதற்குத் துணியவில்லை. சிறுவன் வெட்கப் படுகிறான். அதே போதில், ஆண்மை நிறைந்த செயலுக்காக மனிதன் பெருமைப்படுகிற செயலை அவனால் செய்ய முடியவில்லை. வலோத்யாவுக்காகச் சற்றே சிறியதான செங்குத்துச் சரிவு ஒன்று தேட வேண்டியதாயிற்று. அங்கு சிறுமிகளுடன் சேர்ந்து அவன் குதித்தான். அப்படியும் உயர்ந்த சரிவின் உச்சியிலிருந்து குதிப்பதற்கு அவன் துணியவில்லை. துணிவு மிக்க நடத்தைக்கு அவனைத் தூண்டுவதற்காக நீண்ட நாட்கள் அவனுடன் வேலை செய்ய வேண்டியதாயிற்று. வசந்தகாலத்தில் குழந்தைகள் மைனாவுக்காகக் கூடுகள் செய்து மரங்களில் தொங்க விட்டு வந்த போது, உயர்ந்த மரத்தின்

மீது ஏறுமாறு வலோத்யாவை நான் வற்புறுத்த முடிந் தது. இதுதான் சிறுவன் முதன் முதலாக அச்சத்தை வெற்றி கொண்டதாகும். உயர்ந்த சரிவிற்கு வலோத்யா தனியாகச் சென்று ஆடையைக் கழட்டிவிட்டு நீண்ட நேரம் அங்கே உட்கார்ந்திருந்தான் என்றும், பல தடவை சுற்றிச் சுற்றி ஓடினுன், ஆனுல் தண்ணீரில் குதிப்பதற்கு மட்டும் பயப்பட்டான் என்றும் குழந்தைகள் என்னிடம் ரகசியமாகச் சொன்னுர்கள்.

முதல் மூவரை அடுத்து, உயர்ந்த சரிவிலிருந்து மிக வும் துணிவுடன் குதித்தாள் வால்யா. இவள் இவ்வாறு செய்வாள் என்று யாருமே எதிர்பார்க்கவில்லே. வால்யா வின் செயலால் கூச்சமடைந்தான் வலோத்யா. கண்ணே மூடிக்கொண்டு தண்ணீரில் குதித்தான் அவன். வால்யா வை அடுத்து நீனு, கால்யா, லூரஸ்யா, ஸீனு, காத்யா, சாஷா ஆகியோர் துணிவுடன் தண்ணீரில் குதித்தனர். அதற்குப் பின்னர் எல்லாச் சிறுமிகளும் குதிக்கத் தொடங் கினர்.சிறுவர்களே விடச் சிறுமிகளிடம் அதிகமான சித்த வுறுதி இருக்கிறது என்று நான் கண்டேன். அச்சத்தையும், உறுதியின்மையையும் அதிகமான ஆண்மையுடன் அவர் கள் சமாளிக்கிறுர்கள். துணிவு நிறைந்த செயலேச் செய் வதற்குத் தன்னே நிர்ப்பந்தித்துக் கொண்ட பின் தமது மகிழ்ச்சியை, சிறுவர்களேப் போல வெகு கும்மாளமாக அவர்கள் வெளியிடுவதில்லே.

மூன்ரும் வகுப்பு முடிந்த, பின் இயற்கைச் சூழலில் நாங்கள் ஓய்வெடுத்துக் கொண்ட போது அப்போது துருவ விஞ்ஞானிகள் விளேயாட்டு ஒன்றைக் கற்பனே செய்து கொண்டனர் குழந்தைகள். விளேயாட்டு விதிகளில் ஆளர வமற்ற, அடர்ந்து வளர்ந்திருந்த புதர்களேக் கொண்ட தீவில்—நாற்றிசையும் தண்ணீரால் சூழப்பட்டிருந்த பனிக் கட்டிக்குள்—விபத்துக்குள்ளான கப்பலில் வந்த துருவ மனிதர்கள் இருந்தார்கள். நமது பூமி மிகப் பெரிது'' ''விபத்துக்குள்ளானவர்களுக்கு'' ரொட்டி, உருளேக் கிழங்கு போன்ற உணவுப் பொருள்களே தண்ணீரில் நீந் தியபடி எடுத்துச் செல்ல வேண்டும். ''பனிக்கட்டிக்கும்''

''பெரிய பூமிக்கும்'' இடையில் ஒரு சிறு ஏரி இருக்கிறது. விளையாட்டு விதியின்படி, உணவுப் பொருள்களைக் கடுமை யான துருவகால இரவு நேரத்தில் அனுப்ப வேண்டியிருந் தது.

''துணிவு மிக்கோர், அச்சமற்றோர்'' பிரிவிலிருந்து விருப்பமுள்ளவர்கள் முன்வர வேண்டும். குழந்தைகட்கு அச்சமாக இருந்தது: ''ஓநாய்ப் பொந்து ஒன்று தீவில் இருப்பதாகப் பேசப்படுகிறது'' என்கிறார்கள். ஷுராவும், செர்யோஷாவும் இரவு நேரத்தில் நீந்திச் செல்வதற்குத் துணிகிறார்கள். தடித்த பைன் மரப் பலகை ஒன்றில் ரொட்டி, உருளைக் கிழங்கு, தீப்பெட்டிகள், கொழுப்பு ஆகியவற்றை வைத்துக் கட்டுகிறோம். காற்று நிறைக்கப் பட்ட ரப்பர் பலூன்கள்இரண்டைத் தண்ணீருக்குள்இறக்கு கிறோம். விளையாட்டில் இதுதான் சிறு கப்பல். சூரியன் மறைகிறது. ஏரியும் தீவும் பனி மூட்டத்தால் போர்த்தப் படுகின்றன. நட்சத்திரங்கள் தோன்றுகின்றன. சிறுவர் கள் ஆடையைக் கழட்டி பலகையில் கட்டுகிறார்கள், மெது வாக நீந்துகிறார்கள். ஒரு நிமிட நேரத்தில் அவர்களைக் காணவில்லை. லேசாகத் தண்ணீர் சிதறுவது சில நிமிட நேரம் கேட்கிறது. பின்னர் அது நின்று விடுகிறது.''துணிவு மிக்கோர், அச்சமற்றோர்'' பிரிவு முழுதும் கரையில் உட் கார்ந்திருக்கிறது. எங்களுடன் டிராவ்கா என்ற நாய்க் குட்டியும் இருக்கிறது... ஒரு மணி நேரம் செல்கிறது. மையிருட்டில் தீவும் தெரியவில்லை ஏரியும் தெரியவில்லை. திடீரென்று இருட்டினூடே மெல்லிய தீ எரியத் தொடங்கு கிறது: ''விபத்துக்குள்ளானவர்களிடம்'' சென்ற இளம் துருவ மனிதர்கள் அங்கு சென்று சேர்ந்து, அடுத்த கப்பல் புறப்படலாம் என்பதற்காகச் சைகை செய்வதுதான் அது.

ரொட்டி, உருளைக் கிழங்கு, கொழுப்பு, வெங்காயம் ஆகியவற்றை மீண்டும் பலகையில் வைத்துக் கட்டுகிறோம். இரண்டு ரப்பர் பலூன்களை இறக்குகிறோம். வீத்யாவும் யூராவும் ஆடையைக் கழட்டுகிறார்கள். முன்னர் பைக் மீன்கள் இந்த ஏரியில் வாழ்ந்து வந்தன என்றும் இன்னும் கூட அவை இங்கு இருக்கக் கூடும் என்றும் ஒரு சிறுமி

சொல்கிறுள்... வீத்யாவும் யூராவும் பயப்படுவார்கள் என்பதற்காக இவ்வாறு சொன்ஞள். இருண்ட தண்ணீ ருக்குள் பாய்வதற்குச் சிறுவர்களுக்கு பயமாகத்தான் இருந்தது. ஆனுல் இப்போது எது வரினும் அவர்கள் நீந்திச் செல்வதிலிருந்து பின்வாங்கப் போவதில்லே. வெது வெதுப்பான தண்ணீரில் யூராவும் வீத்யாவும் காலே விட்ட நேரம் பார்த்து அவர்களுக்கு முன்ஞல் தண்ணீர் சிதறு கின்ற சத்தம் கேட்டது. மீன்கள் விளேயாடுவதுதான் இது. ஆனுல் பைக் மீன்கள் பற்றிய கதையையும் அவர்கள் மறந்து விடவில்லே. இன்னும் ஒரு மணி நேரம் செல்கிறது. தீவில் இரண்டாவது தீ இப்போது எரிந்தது. பின்னர் இரண்டு தீயும் அணேந்து விட்டன. இளம் துருவ மனிதர்களின் இரண்டு பிரிவும் ஒன்று சேர்ந்து விட்டதற்கான சைகை இது. நாங்கள் படுத்துக் கொள்கிறேம். ஆனுல் ஒருவருக் கும் தூக்கம் வரவில்லே.

அந்தத் தீவில் முகாம் அடுப்பு எரிகிறது. சிறுவர்கள் அங்கே இரவைக் கழிக்கப் போகிறுர்கள். விடியும் வரை அவர்களும் கண்களே மூடவில்லே. ஒரு கும்பலாக ஒட்டி உட்கார்ந்து கொண்டு கிழக்குத் திசையை நோக்கிப் பார்த்துக் கொண்டிருக்கிறுர்கள்: விரைவில் வானம் வெளுக்குமா? மரத்தின் உச்சியில் சூரியனின் முதல் பொன் னிறக் கதிர்கள் காலேயில் தோன்றும்போது அவர்கள் திரும்பி நீந்தி வருவார்கள். அச்ச உணர்வைக் கடந்து சமாளிக்கிற மகிழ்ச்சியை இன்னும் அனுபவிக்காத சிறு வர்கள் அவர்களேக் கண்டு பொருமை கொள்வார்கள். அச்சத்தை வெற்றி கொண்டு அவர்கள், ஆண்களுக்கே உரிய அடக்கத்துடன், ''அது ஒன்றும் பயமாகவே இல்லே'' என்று சொல்வார்கள்.

இரவு நேரத்தில் இரகசியமாக ஏரியை நீந்திக் கடப் பதற்கு எல்லாச் சிறுவர்களேயும் வரிசைக் கிரமமாக அனுப் புகிறேம். வலோத்யாவும் கூடப் போகிறுன். விளேயாட்டு உச்ச கட்டத்தில் இருக்கும்போது தாமும் போக வேண்டு மென்று சிறுமிகளும் வேண்டுகின்றனர்: ''சிறுவர்கள் மட் டும் போகலாம் நாங்கள் போகக் கூடாதோ?'' இந்த வேண்டு

கோள் வரும் என்று நான் எதிர்பார்த்தேன். கோல்யா வுடன் தீனுவும், தோல்யாவுடன் வார்யாவும் ஏரியை நீந்திக் கடக்கிருர்கள். காய்ந்த புற்களைத் தீவில் கண்டுபிடித்தனர் சிறுவர்கள். அவற்ருல் சிறுமிகளுக்குப் படுக்கை தயாரித்துக் கொடுத்தனர்.

இரவு, அமைதி, தனிமை—இவையெல்லாம் குழந் தைகளைக் கவருகின்றன. இவற்றிலெல்லாம் கஷ்டத்தைச் சமாளிக்கிற ஒரு ரோமான்சைக் காண்கிருர்கள் அவர் கள். பூகர்ப்ப நிபுணர்கள் விளையாட்டு ஒன்றையும் அவர் கள் கற்பனை செய்து கொண்டனர். காட்டின் அடர்ந்த பகுதியில், கடக்க முடியாத இடத்தில், சரிவிலிருந்து சுமார் 5 கிலோமீட்டர் தூரத்தில் சிறுமிகள் ஒரு குடிசை கட்டி அங்கு பகலிலேயே தங்கிக் கொண்டனர். கனிவளம் தேடும் நிபுணர் குழு தங்குகின்ற தலைமையகம் இது. விளை யாட்டு விதியின்படி நள்ளிரவில் தய்காவின் வழியாகத் தலைமையகத்துக்குச் சிறுவர்கள் சென்று சேர வேண்டும்... கனிப்பொருள்களின் மாதிரிகளைக் கொண்ட பையை அவர் கள் முதுகில் சுமந்து கொண்டிருக்கிருர்கள். முற்றத்தில் இருட்டுக் கட்டிய போது, சிறுவர்கள் பள்ளியிலிருந்து வெளியேறுகின்றனர். ஒரு மணி நேரத்தில் காட்டுச் சரி விற்கு வந்து விடுகிருர்கள். செல்லுகின்ற திசையை இருட் டில் துல்லியமாக நிர்ணயிக்க வேண்டும். மேலும் விரை வான தய்கா ஆற்றையும், மலைத்தொடரையும் கடந்து செல்ல வேண்டும். சிறுமிகள் எந்த விதமான சைகையும் காட்டக் கூடாது என்று தடை விதிக்கப்பட்டிருந்தனர். காட்டின் வழியாக இரண்டு மணி நேரம் செல்ல வேண்டி யிருந்தது. நள்ளிரவுக்குப் பின்னே தலைமையகத்துக்குக் களைத்துப் போனவர்களாய், ஆனுல் மகிழ்ச்சியும் மனக் கிளர்ச்சியும் கொண்டவர்களாய் வந்து சேர்கின்றனர் சிறு வர்கள்.

ஆகஸ்டு மாதத்தில் பெருமழை பெய்த போது 14 கன்றுக் குட்டிகள் காணுமல் போய்விட்டன. எங்கோ தண் ணீர் மூடியிருந்த புல்வெளிக்கு அவை ஓடிப் போயிருக்க வேண்டும். பெரியவர்கள் நீண்ட நேரம் கன்றுகளைத் தேடி

னர், ஆனால் அவற்றைக் கண்டுபிடிக்க முடியவில்லை. ''நாம் போய்த் தேடிப் பார்ப்போம்'' என்று ஷூராவும் வீத்யாவும் ஆலோசனை சொல்கிறார்கள். ''துணிவு மிக்கோர், அச்சமற்றோர்'' பிரிவிலிருந்து ஒன்பது பேர்—ஆறு சிறுவர்கள், மூன்று சிறுமிகள்—என்னோடு தேடத் துவங்கினர். உணவுப் பொருள்கள், கூடாரம், திசைமானி, ரப்பர் பலூன்கள் ஆகியவற்றை எடுத்துக் கொண்டோம்.

குழந்தைகள் உற்சாக மனநிலை கொண்டிருந்தனர். தண்ணீர் மூடியிருந்த புல்வெளியை எல்லா இடங்களிலும் ஆராய்ந்தோம். சில இடங்களில் 2—3 பேராகப் பிரிந்து போய்த் தேடினோம். நான்கு நாட்களில் பதினொரு கன்றுக் குட்டிகளைக் கண்டுபிடித்தோம். காட்டின் நடுவே அவை மேய்ந்து கொண்டிருந்தன. மற்ற கன்றுகள் பெருமழையில் பெருகிய வெள்ளத்தில் மரித்துப் போயிருக்க வேண்டும். கன்றுகளைத் தேடிய நாட்கள் குழந்தைகளின் நினைவில் என்றென்றும் பசுமையாய் இருக்கும். கால்யாவும், லூஸ்யாவும், சான்யாவும் குறிப்பாக இந்நாட்களை நன்கு நினைவில் கொண்டனர். இருட்டையும், தவளைகளையும், பச்சைப் பாம்புகளையும் கண்டு இவர்கள் மிகவும் பயந்தார்கள். இங்கேயோ நரியையும் கோட்டானையும் அவர்கள் சந்திக்க நேர்ந்தது.

நான்காம் வகுப்பு முடிந்தவுடன் நாங்கள் மலையேறுவோர் விளையாட்டு விளையாடினோம். செங்குத்துச் சரிவிலிருந்து ஆழமான பள்ளத்தாக்குக்குள் நூலேணி வழியாக இறங்கினோம். ஏணியை முன்னரே இறுக்கிக் கட்டியிருந்தோம். மலையின் மீதிருந்த முகாம் கீழே இருந்தது, மலையேறுவோரான நாங்கள் கீழேதான் இருந்தோம். அனேகமாகச் செங்குத்தாக இருக்கிற சரிவின் மீது நூலேணி வழியே கஷ்டப்பட்டு ஏற வேண்டியது, பின்னர் மீண்டும் பள்ளத்தாக்குக்குள் இறங்க வேண்டியது—இதுவே எங்கள் வேலையாகும். உயரத்தைக் கண்டு பல சிறுவர்கள் ஏற்கெனவே பயப்படுவதில்லை. ஆயினும் ஆரம்பத்தில் அவர்களுக்கும் அச்சமாகத்தான் இருந்தது. முதல் முதலாக உச்சிக்கு ஏறிப் பின்னே கீழே இறங்கியவன் வீத்யா.

திரத்தை புரிந்து கொண்டார்கள் மாணவர்கள். அவர்கள் தாய்மொழியில் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார்கள். கூர்ந்து பார்ப்பது, யோசிப்பது, படிப்பது, எழுதுவது, சிந்தனையை வார்த்தையால் வெளியிடுவது ஆகிய ஐந்து விஷயங்களை அவர்கள் கற்றுக் கொண்டனர். ஏழு வயதுக்கு முன்பே, அதாவது முதல்வகுப்பில் கல்வி தொடங்குவதற்கு முன்பே எழுதவும் படிக்கவும் குழந்தைகளுக்குக் கற்றுத் தர முடியும் என்று நான் உறுதி கொண்டேன். இந்தக் குறிக்கோள் எட்டப்பட்டு விடுமேயானால் குழந்தையின் ஆன்மிக ஆற்றல் விடுபட்டு சிந்தனை செய்வதற்கும் படைப்புத் தொழில் புரியவும் அது முனைகிறது.

உழைக்கிற வயதுக்குள், அதாவது வாலிப வயதுக்குள் அடியெடுத்து வைப்பதற்கு ஒழுக்க ரீதியாகவும் ஆன்மிக பூர்வமாகவும் ஒருவன் தயார் செய்யப்பட வேண்டியதும் அதே போல முக்கியமானதே என்று நான் கருதினேன். கண்ணுக்குத் தெரியாத பருவத்தை, குழந்தைப் பருவத்திற்கும் வாலிப வயதுக்கும் இடைப்பட்ட பருவத்தைக் குழந்தைகள் நெருங்குகின்ற காலம் பற்றி, தொடக்கப் பள்ளியில் இருக்கும்போது நான் சிந்தித்து வந்தேன். ஒரு சிலர் இந்தக் காலத்திற்குள் அடியெடுத்து வைத்து விட்டனர். வாலிபப் பருவம் உண்மையில் நான்காம் வகுப்பிலேயே தொடங்கி விட்டது.

...அமைதியான ஆகஸ்டு மாதத்து மாலை நேரத்தில் கோடைகாலத்திடம் விடைபெறுவதற்காக அழகுப் பகுதிக்கு நாங்கள் வந்தோம்.

மரங்களின் உச்சியில் கதிரவனின் கடைசிக் கிரணங்கள் விளையாடிக் கொண்டிருக்கின்றன. நாங்கள் நான்காண்டுகளுக்கு முன்பு நட்ட ஆப்பிள் மரத்தில் ஆப்பிள் பழங்கள் பழுத்து வருகின்றன. திராட்சைச் கொத்துகளுக்கு மேலே குளவி பறக்கிறது. வயலிலிருந்து டிராக்டரின் முழக்கம் கேட்கிறது. சிறுமிகள் கோதுமைக் கதிர்க்கட்டு கொண்டு வந்தனர். கில்டர் ரோஸ் கொத்துகளினூடே அவர்கள் கதிர்களை வைத்துப் பின்னினர். அமைதியான கோடைகால மாலைநேரம் பற்றி நாங்கள் பாட்டுப் பாடு

கிறேம். பாட்டு நின்று விட்டது. மாலை நேர வானத்தைப் பார்க்கிருர்கள் குழந்தைகள். இயற்கையின் இசை, நாங் கள் இப்போது விடை பெறுகிற கோடையைப் பற்றிய நினைவுகள்—இவை யாவும் குழந்தைகளிடமிருந்து பதில் குரலை வரவழைக்கின்றன. சுற்றியுள்ள உலகம்—மாலைநேர வானம், செந்நிற சூரிய உதயம், அம்பர் வண்ண ஆப் பிள்கள், திராட்சைக் கொத்துக்கள், ஹாப் கொடிகளின் பசிய சுவர், வெண்மைக் கிரிசான்திமப் பூக்கள், குளவியின் ரீங்காரம்—உலகம் அனைத்தும் ஓர் அற்புத இன்னிசை போல நம் முன்னே தெரிகிறது. இசைக் கருவியின் ஒரு தந்தியைக் குழந்தைகள் தொட வேண்டியதுதான் மந்திர இன்னிசை—வார்த்தையின் இன்னிசை உடனே ஒலிக் கிறது. இது மகிழ்ச்சியின் இசையாகும், வருத்தத்தின் இசை யாகும். நானும் மகிழ்சியுற்றேன், வருத்தமுற்றேன். குழந் தைகளே இன்று நீங்கள் வாலிபர்கள். உங்கள் முன்னே இருப்பது என்ன? ஒவ்வொரு நாளும் உங்களுடன் இருப் பேன் நான். வாலிப காலத்தின் தொடக்கத்துக்கும், வயது வந்த பருவத்துக்கும் உங்களை நான் அழைத்துச் செல்வேன். உங்களை ஐந்தாண்டுகள் நான் கைபிடித்துக் கூட்டிச் சென் றேன். எனது இதயத்தை உங்களுக்குக் கொடுத்தேன். அந்த இதயம் களைத்துப் போன நேரமும் இருந்தது. அதன் சக்தியெல்லாம் தீர்ந்து போனபோது குழந்தைகளே, நான் உங்களிடம் ஓடி வந்தேன். களிப்பு மிக்க கிசுகிசுப்பு எனது இதயத்தில் புதிய சக்தியை ஊற்றியது. புன்னகைகள் புதிய ஆற்றலைப் பிறப்பித்தன. ஆர்வம் நிறைந்த உங்கள் பார்வை எனது சிந்தனையைத் தட்டியெழுப்பியது... இனிய என் குழந்தைகளே, வயது வந்த மனிதர்களாகவே உங்களை எனது கனவில் நான் காண்கிறேன். ஆண்மை மிகுந்த சோவியத் தேசபக்தராக, நேர்மையும் கனிவும் கொண்ட இதயமும் தெளிவான அறிவும், தங்கக் கைகளும் படைத்தவராக உங்கள் ஒவ்வொருவரையும் நான் பார்க் கிறேன்.

**வாசக நேயர்களுக்கு**

*இந்த மொழிபெயர்ப்பைப் பற்றியும் இந்தப் புத்தகத்தின் தயாரிப்பைப் பற்றியும் வாசக நேயர்களின் கருத்தை* **முன்னேற்றப் பதிப்பகம்** *மகிழ்வுடன் வரவேற்கும்.*

*கடிதங்களைத் தயை செய்து* "Progress Publishers, 17, Zubovsky Boulevard, Moscow, USSR" *என்ற முகவரிக்கு அனுப்புங்கள்.*

*இப்புத்தகத்தின் ஆசிரியர் வசீலி அலெக்சாந் திரவிச் சுகம்லீன்ஸ்கி (1918—1970) தலைசிறந்த சோவியத் போதகர், உக்ரேனிய சோவியத் சோஷலிசக் குடியரசின் தகைமை மிக்க ஆசிரியர் என்னும் பட்டம் பெற்றவர், சோவியத் யூனியன் போதனா முறை விஞ்ஞான பேரவையின் உறுப் பினர். சோஷலிச உழைப்பு வீரர் என்னும் பட்டம் பெற்றவர்.*

*கிராமப் பள்ளியின் தலைவராக வேலை செய்த வாறு, தமது போதனைப் பணிக்காலம் முழுவதி லும் பள்ளி மாணவர்களின் போதனை, பயிற்சி பற்றிய பிரச்சினைகளை ஆராய்ந்தார்.*

*பள்ளிக்குள் அடியெடுத்து வைத்த முதல் நாளிலிருந்தே கல்வி கற்பதில் அக்கறையையும் உழைப்பின் மீது நேசத்தையும் குழந்தைகளிடம் தட்டியெழுப்பியபடி சுற்றியுள்ள எதார்த்தத்தை அறிந்து கொள்ளும் உலகத்துக்கு அவர்களை எப் படி அழைத்துச் சென்றார் இந்நூலாசிரியர் என் பதை வாசகருக்கு எடுத்துச் சொல்கிறார். நல்ல தொடக்கங்கள், தோழமை உணர்வு, குடிமகன் தகுதி, தேசபக்தி ஆகியவற்றை மனிதனுக்குப் பயிற்றுவிப்பதில் வ. அ. சுகம்லீன்ஸ்கி தனிக் கவனம் செலுத்துகிறார்.*

*சோவியத் யூனியனிலும் வெளிநாடுகளிலும் உள்ள போதகர்களாலும் பெற்றோர்களாலும் இப்புத்தகம் அங்கீகரிக்கப் பட்டுள்ளது.*

விற்பனையாளர்கள்

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்

சென்னை

தலைமை அலுவலகம்

41-B, Sidco Industrial Estate, Ambattur Madras-600 098

ஷோ-ரூம்

136, Mount Road, Madras-600 002

கிளைகள்

80, West Tower St., Madurai-625 001

87/89, Oppanakara st., Coimbatore-641 001

Singarathope, Tiruchirappalli-620 008

Cherry Road, Salem-636 001